# தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும்

(இரண்டாம் தொகுதி)



# தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும்

## (இரண்டாம் தொகுதி)

பதிப்பாசிரியர்
முனைவர் பா. சுப்ரமணியன்
பேராசிரியர் & துறைத்தலைவர்
அரியகையெழுத்துச் சுவடித்துறை

குறிப்புரை
பேரா. கே. எம். வேங்கடராமையா

மோடி வல்லுநர்
இராக. விவேகானந்தகோபால்



தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005

ISBN : 81 - 7090 - 141 - 3

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு எண் : 116 - 2

திருவள்ளுவர் ஆண்டு 2019 - சித்திரைத் திங்கள் - ஏப்ரல் 1989

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : முனைவர் பா.சுப்ரமணியன் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| விலை | : உரூ. 120 |
| அச்சு | : சர்மாஸ் ஸானடோரியம் கணிப்பொறி அச்சகம் புதுக்கோட்டை. |

இந்நூல் மைய அரசின் தில்லி தேசிய ஆவணக்காப்பகம் வழங்கிய நல்கையின் வழி வெளியிடப் பெறுகிறது.

Published with the financial assistance of National Archieves, Govt. of India, New Delhi.

# பொருளடக்கம்

முனைவர் ச. அகத்தியலிங்கம்,
துணைவேந்தர்.

தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்-613 001.

# அணிந்துரை

தமிழக வரலாறு, நாகரிகம், பண்பாடு ஆகியனவற்றைப் பற்றி ஆய்வு செய்ய அருந்துணையாகவிருப்பன கல்வெட்டுக்கள், செப்பேடுகள், அரிய சுவடிகள் போன்ற மூலச் சான்றுகளாகும். சுவடிகள் முன்னர் பனையோலைகளிலும், பின்னர் காகிதத்திலும் எழுதி வைக்கப் பெற்றன. காகிதக் கையெழுத்துச் சுவடிகளைச் சேகரித்துப் பாதுகாத்து, அவை கூறும் செய்திகளை ஆய்வு செய்து வெளியிடுவதற்கெனத் தனியொரு துறையாக அரிய கையெழுத்துச் சுவடித்துறை இயங்கி வருவது தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தனிச் சிறப்பாகும். இந்தியாவில் வேறெந்தப் பல்கலைக்கழகத்திலும் இதற்கெனத் தனித்துறை இல்லாதது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

தமிழக வரலாற்று மூலச் சான்றுகளாகக் கிடைப்பனவற்றில் பன்மொழிக் காகிதச் சுவடிகளும் அடங்கும். தமிழகத்தைப் பல்வேறு கால கட்டங்களில் தங்களின் ஆளுகைக்குட்படுத்திய பல்லவர், இசுலாமியர், நாயக்கர், மராட்டியர், பிரெஞ்சுக்காரர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோர் தத்தம் மொழி ஆவணங்களை விட்டுச் சென்றிருக்கின்றனர். இதனால் வடமொழி, பார்சி, அராபி, உருது, தெலுங்கு, மராட்டி, பிரெஞ்சு, டேனிசு மற்றும் ஆங்கில ஆவணங்களைத் தமிழில் பெயர்த்தால அவ்வாவணங்களில் சொல்லப்பட்டுள்ள தமிழக வரலாற்றுச் செய்திகள் இலைமறை காயாகவே இருந்துவிடக்கூடும். இவ்வரிசையில், கி.பி. 1676 முதல் கி.பி. 1855 வரை தமிழகத்தின் தஞ்சைப் பகுதியை ஆண்ட மராட்டியர்கள் தமது அன்றாட அலுவல்கள், வரவு செலவுக் கணக்குகள், கடிதப் போக்குவரத்து ஆகியவற்றைத் தனிச் சிறப்பு மிக்க மராட்டிய மோடி எழுத்துக்களில் எழுதி வைத்துள்ளனர். இந்த மோடி ஆவணங்களிலுள்ள செய்திகளை வெளிக்கொணர்ந்தால், அதுவே தஞ்சை மராட்டியர்களின் அரசியல், சமுதாய வரலாற்றினை அறிவதற்கான அகச் சான்றாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சை சரசுவதி மகாவில் வைக்கப்பட்டுள்ள மோடி ஆவணங்களின் தமிழ் மொழிபெயர்ப்பினைக் கொண்டு உருவாக்கப்பட்ட 'தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்' என்ற நூல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வெளியீடே. அந்நூலுக்குப் பயன்பட்ட மூலச் சான்றுகளை அப்படியே வெளியிட்டு வரலாற்று ஆய்வறிஞர்களுக்குப் பயன்படச் செய்வது இந்த நூலின் நோக்கமாகும். இதில் சுமார் 190 மோடி ஆவண மூட்டைகளிலுள்ள செய்திகள் பரவலாகக் கிடைக்கின்றன. இதனை அச்சுருவில் வெளிக் கொணர தேசிய ஆவணக் காப்பகம் உருபாய் ஒரு இலட்சம் நல்கை வழங்கியுள்ளது. தமிழ் மொழிபெயர்ப்பினைச் சீர்படுத்தி நூலாக்க, சரசுவதி மகால் நூலகத்தினர் மகிழ்வுடன் இசைவளித்தனர். அன்னாருக்குப் பல்கலைக்கழகம் நன்றி பாராட்டுவது கடமையாகும்.

இத்திட்டப் பணியினைத் தொடங்கி வைத்துக் குறிப்புரைகள் எழுதிவைத்துச் சென்ற முன்னாள் பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா அவர்களுக்கும், பதிப்பாசிரியராக இருந்து இதனை வெளிக்கொணர்ந்த பேராசிரியர் முனைவர் பா.சுப்ரமணியன் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டுக்கள். குறிப்பாக, மோடி வல்லுநராகப் பணியாற்றிய திரு இராக. விவேகானந்த கோபால் அவர்களுக்கும், இத்திட்டம் நிறைவேற ஒத்துழைத்த அலுவலர் அனைவருக்கும் என்னுடைய பாராட்டுக்களும் வாழ்த்துக்களும் உரியன.

தஞ்சாவூர்-1
சனவரி-1989.

# பதிப்புரை

## மோடி எழுத்து

'மோடணே' என்றால் மராட்டி மொழியில் 'உடைதல்' என்று பொருள். அஃதினின்று 'மோடி' என்ற சொல் வந்திருக்கக்கூடும். மோடி எழுத்து என்பது தேவநாகரி எழுத்தை உடைத்துச் சிதைத்து உருவாக்கியது எனக் கொள்ளலாம். தொடக்க காலத்தில், மராட்டிமொழி பேச்சு வடிவினின்று எழுத்துருக் கொண்டபோது, அதற்கெனத் தனி வரி வடிவம் இல்லையாதலால், முன்னரே வழக்கிலிருந்த சமஸ்கிருத மொழிக்குரிய 'தேவநாகரி' எழுத்தைக் கைக்கொண்டனர். இசுலாமியர் இந்தியாவைக் கைப்பற்றி ஆளத்தொடங் கியவிடத்து, அவர்கள் இருவகை வரிவடிவங்களைத் தங்களுடைய பார்சி மொழிக்குப் பயன்படுத்தினர். 'நாஸ்தலிக்' என்னும் எழுத்துமுறை தெளிவாகவும் மெதுவாகவும் எழுதுவதற்கும், 'சிகஸ்த' எழுத்துமுறை விரைவாக எழுதுவதற்கும் பயன்படுத்தப்பட்டது. இதனைக் கண்ட ஹேமாட்பந்த் என்ற தேவகிரி யாதவ அரசர்களின் அமைச்சர் மராட்டி மொழிக்கும் ஒருவகைச் சுருக்கெழுத்துமுறையை உருவாக்கினார். அவ்வாறு, தேவநாகரி எழுத்தை உடைத்துச் சிதைத்து மாற்று வடிவம் உண்டாக்கிய எழுத்து முறையே 'மோடி' எழுத்தாயிற்று, 'சிகஸ்த' என்ற சொல்லுக்குரிய 'உடைந்த' என்ற பொருளே 'மோடி' என்பதற்கும் உரியதாதலின் இதுவே பொருந்துமெனல் தகும்.

இதைத் தவிர்த்து, இலங்கையினின்று வந்த எழுத்துமுறை என்பதும், 'மௌர்யீ' என்ற அசோகனின் எழுத்தினின்று உருவானது என்பதும், 'குடிலலிபி'யினின்று தோன்றியது என்பதும், சிவாஜியின் காலத்து பாலாஜி ஆவஜி என்பவர் உருவாக்கியது என்பதும் ஆதாரங்களற்ற ஒவ்வாத கருத்துக்களாகும்.

## மோடி ஆவணம்

மோடி எழுத்துக்கள் தேவநாகரி வரிவடிவத்தை அடியொற்றியவையாயினும், தேவநாகரியிலுள்ள பல எழுத்துக்கள் குறைக்கப்பட்டுள்ளதோடு குறில், நெடில் வேறுபாடுகளும் இல்லை. இடத்திற்குத் தக்கவாறு அமைத்துப் படித்துக் கொள்வதே முறையாயிற்று. மேலும், எழுதுகோலைக் காகிதத்திலிருந்து எடுக்காமல் தொடர்ச்சியாக வேகமாக எழுத மோடி எழுத்து பயன்படுகிறது. இதனால் சத்திரபதி சிவாஜியின் காலத்திற்கு முன்பிருந்தே வரலாற்றுக் குறிப்புகள், கடிதப் போக்குவரத்து, நாட்குறிப்பு, வரவு செலவுக் கணக்குகள் முதலியன மராட்டி மொழியில் மோடி எழுத்தில் எழுதப்பட்டன. மோடி எழுத்தினைப் படிக்க வல்லோர் மட்டுமே இதனைப் புரிந்து கொள்ளக் கூடுமாகையால் அரசியல் இரகசியங்கள் பிறர் அறியாமல் காப்பதற்கும் பயன்பட்டது. ஆயின், இலக்கியம், தத்துவம் ஆகியன தொடர்ந்து 'பாலபோத்' எனப்படும் நாகரி எழுத்திலேயே எழுதப்பட்டன. மோடி ஆவணங்களை, எழுதும் முறைபற்றி நான்கு கால கட்டத்திற்குள் அடக்கலாம்.

சத்திரபதி சிவாஜியின் காலத்திற்கு முந்தைய வடிவம்; சத்திரபதி சிவாஜி காலத்திய வடிவம்; பேசுவாக்கள் காலத்திய வடிவம்; ஆங்கிலேயர் கால வடிவம் என மகாராட்டிரர்

கூறும் இவ்வகைக்குள் தஞ்சை மராட்டியரின் மோடி ஆவணம் அடங்கா. ஏனெனில், சத்திரபதி சிவாஜியின் காலத்தில் மகாராட்டிரத்தினின்று தஞ்சை வந்த மராட்டியர் தம் காலத்தில் வழக்கிலிருந்த மோடி எழுத்தையும் உடன் கொணர்ந்து தஞ்சையில் பயன்படுத்தினர். எனினும், காலப்போக்கில் சிற்சில மாறுதல்களையடைந்து நிலைபெற்ற தஞ்சை மோடி எழுத்தினைப் 'பழைய மோடி' என்பார் டி.வி. போட்தார். இவ்வாறாக, கி.பி. 1676இல் ஏகோஜி அல்லது வெங்கோஜி தஞ்சையைக் கைப்பற்றி ஆளத் தொடங்கியது முதல் கி.பி.1855இல் இரண்டாம் சிவாஜியின் ஆட்சி முடிவுற்றது வரையிலான எண்ணிறந்த மோடி ஆவணங்கள் மூட்டைகளாகக் கட்டி வைக்கபபட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. எனினும், தற்போது கி.பி. 1746க்கு முந்தைய ஆவணங்கள் தஞ்சையிலிருந்து சென்னைக்கும் டெல்லிக்கும் எடுத்துச் செல்லப்பட்டுவிட்டன.

## தஞ்சை மராட்டியரின் மோடி ஆவணங்கள்

கி.பி. 1855ஆம் ஆண்டு மறைந்த இரண்டாம் சிவாஜிக்கு வாரிசு இல்லையாதலால், தஞ்சை அரசு முழுமையாக ஆங்கிலேயரின் கைக்கு மாறியது. அதை எதிர்த்து சிவாஜியின் பட்டத்தரசி காமாட்சியம்மா பாயிசாகேப் தனக்கு வாரிசுரிமை கேட்டு உயர்நீதிமன்றத்தில் முறையிட்ட போழ்து அரசு ஆவணங்கள் அனைத்தும் ஆங்கிலக் குடியிருப்பு ஆட்சியரின் *(Resident)* கைக்கீழ் வந்தன. இந்திய விடுதலைக்குப் பின்னரும் அவை மாவட்ட ஆட்சியாளரின் பொறுப்பிலேயே சீரழிந்த நிலையில் இருந்தன. அதனைப் பேணிக்காத்துப் பயன்படுத்த எடுக்கப்பட்ட பல்வேறு முயற்சிகள் வீணாயின. இறுதியாக கி.பி. 1950இல் ஓய்வு பெற்ற மேஜர் நாராயண பாலகிருஷ்ண கத்ரே என்பவர் தஞ்சை மோடி ஆவணங்களை ஆராய்ந்து அரசுக்கு ஓர் அறிக்கை அளித்தார். அவ்வறிக்கையினை ஏற்றுக்கொண்ட மாநில அரசு, அவருக்கு உதவியாக மோடிப் பண்டிதர் இருவரை நியமித்து ஆவணங்களை வகைப்படுத்திப் பட்டியல் தயாரிக்க உத்தரவிட்டது. அவ்வகையில், அவர் மோடி ஆவணங்களை எ,பி,சி என மூன்று பிரிவுகளாகப் பிரித்து, சி-வகைப் பிரிவில் சுமார் 960 மூட்டைகளைச் சரசுவதி மகால் நூலகத்திற்கு ஒதுக்கிவிட்டு எ,பி, வகை ஆவணங்களைச் சென்னை ஆவணக் காப்பகத்திற்கு அனுப்பிவைத்தார். சென்னை ஆவணக் காப்பக ஆவணங்கள் 'தஞ்சாவூர் அரச ஆவணங்கள்'*(Tanjore Raj Records)* என்ற பெயரில் வைக்கப்பட்டுள்ளன. தஞ்சையிலுள்ள சுமார் 960 மூட்டைகள் உபயோகமற்றவை என மேஜர் கத்ரே அவர்களால் ஒதுக்கப்பட்டன. ஆனால், அவற்றிலும் பல தகவல்கள் இருக்கக்கூடும் என எண்ணிய தஞ்சை மக்கள் அவற்றை அழிக்க வேண்டாமென அரசைக் கேட்டுக் கொண்டு, சரசுவதி மகால் நூலகத்தில் வைத்துப் பாதுகாக்க வேண்டினர். அவ்வாறே அவை இன்றளவும் சரசுவதி மகால் நூலகத்தில் வைத்துப் பாதுகாக்கப்படுகின்றன.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில், மாநில அரசிடமிருந்து மோடி ஆவண மொழிபெயர்ப்புத் திட்டமொன்றினைப் பெற்ற சரசுவதி மகால் நூல்நிலையத்தினர், திரு நாகராஜாராவ், திரு இராமாராவ் என்ற இரு மோடிப் பண்டிதர்களை நியமித்துச் சுமார் 160 மூட்டைகளிலுள்ள மோடி ஆவணங்களைத் தேர்ந்தெடுத்து மொழி பெயர்த்தனர். அவை 11 கையெழுத்துச் சுவடித் தொகுதிகளாக உள்ளன. இப்பணி நடைபெறுங்கால் மேலே கூறிய மோடிப் பண்டிதர்கள் ஓய்வு பெற்றுவிட்டமையால், மீண்டும் 1-9-1970 முதல்

30-5-1978 வரை திரு தேவாஜிராவ், திரு இராமபாவுசுவாமி ஆகியோரை மோடிப் பண்டிதர்களாக நியமித்துச் சுமார் 48 சிறு கையெழுத்துத் தொகுதிகளில் 91 மூட்டைகளிலுள்ள செய்திகளைப் பட்டியல் தயாரித்து வைத்துள்ளனர். அத்துடன் இப்பணி நின்றுபோனது. இந்த 59 தொகுதிகளிலுள்ள செய்திகளைக் கொண்டு ஏதேனும் முழுமையாக ஓர் ஆய்வைச் செய்ய இயலுமா என முன்னாள் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியம் அவர்கள் வினவியபோழ்து, அரிய கையெழுத்துச் சுவடித்துறை முன்னாள் பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்கள் 'தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்' என்ற ஆய்வினைச் செய்து நூலாகத் தந்தார்கள். எனவே, 'அழித்துவிடலாம்' என்று ஒதுக்கப்பட்ட மூட்டைகளிலும் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் பல்வேறு தகவல்கள் நிரம்பிக்கிடக்கின்றன என்பதை அறிந்தபோழ்து, அவற்றினை அப்படியே 'மூலச் சான்றுகளாக' வெளியிடத் தமிழ்ப் பல்கலைக்கழகம் முடிவு செய்தது. அந்த வகையில், ஏற்கெனவே சரசுவதி மகால் நூலக மோடிப் பண்டிதர்களால் மொழி பெயர்த்து வைக்கப்பட்டுள்ள 11 பகுதிகளை முதல் தொகுதியாகவும், சரசுவதி மகால் தொகுப்பான இரு மோடிப் பலகணிப் பகுதிகளும் தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதிகள் ஆறும் சேர்த்து அடுத்த இரு தொகுதிகளாகவும் வெளியிடப்படுகின்றன. இவை மூல மோடி ஆவணத்தோடு ஒத்துப் பார்க்கப்பட்டு, மொழி பெயர்ப்பினைச் சரிபார்த்து, விளங்காத இடங்களுக்குச் குறிப்புரை எழுதிப் பதிப்பிக்கப்படுகின்றன.

## மோடி ஆவணங்களால் அறியப்படும் செய்திகள்

இவ்வாறாக, மூன்று தொகுதிகளாக வெளிவரவுள்ள மோடி ஆவணத் தமிழாக்கத்தில் தமிழக வரலாறு, பண்பாடு குறித்த செய்திகள் விரவி நிற்றலைக் காணலாம். தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியல், பொருளாதாரம், சமயம், சமூக வாழ்க்கை, கலை இலக்கியம் ஆகியன பற்றி அறிதற்கும் ஆய்தற்கும் இவை பெரிதும் துணைநிற்கும். மேலும் அக்காலத்திய மராட்டி மொழி வழக்கினையும், மோடி ஆவணங்களுக்கிடையே கிடைத்த தமிழ் ஆவணங்களின்-தமிழ் மொழி நடையினையும் இத் தொகுதிகள் பாங்குற விளக்கும்.

அரசியல் செய்திகள் :- இத் தமிழாக்கத் தொகுதிகளில் அக்கால அரசியல் பற்றிய செய்திகள் விரவிக் கிடத்தலைக் காணலாம். சுமார் 180 ஆண்டுக்காலம் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்கள் பதின்மூவர் பற்றிய குறிப்புகள் வரலாற்றாய்வுக்கு அணி சேர்ப்பன. தஞ்சை மராட்டிய அரசின் எல்லைகள் பற்றியும், அது பல சுபாக்களாகப் பிரிக்கப் பட்டிருந்ததையும், அவை டிவிஷன்களாகவும், தாலுக்காகளாகவும் பிரிக்கப்பட் டிருந்ததையும் இவை செப்பும். மேலும், தஞ்சை அரண்மனையைச் சார்ந்த 12 மகால்களும், 18 கானாக்களும் அரசுத்துறைகளாகப் பணியாற்றியது பற்றியும் அரசருக்கு ஆட்சிப்பணியில் உதவிபுரிய சர்க்கேல், சுபேதார், பதக்தார், அமல்தார், சிரஸ்தேதார், தாசில்தார், ஹவிலதார், கொத்தவால், கார்பாரி, கில்லேதார், திம்மதி, ஹர்காரா, கமாவிசிதார், நிஷபதி, பதக்னீஸ், காஸ்நீஸ், சிட்னீஸ், பாக்குவான் முதலிய அலுவலர்கள் இருந்தமை பற்றியும் இவை கூறாநிற்கும். தஞ்சைக் கோட்டையைச் சார்ந்து, 7 இடங்களில் கோட்டைகள் இருந்ததையும், அவற்றைக் கில்லேதார் பாதுகாத்து வந்ததையும் இச் சான்றுகள் தெற்றெனப் புலப்படுத்தும். ஆங்கிலேய அலுவலர்களாக ரெஸிடெண்ட், கலெக்டர், கவர்னர் ஆகியோர் இருந்தனராகப் பல்வேறிடங்களில் சுட்டப்பட்டுள்ளன.

கி.பி. 1738ஆம் ஆண்டிற்குள்ளேயே ஆட்சியுரிமை பெற்று அதனை இழந்த மூவர் சுஜான்பாயி, சையாஜி மற்றும் காட்டுராஜா ஆகியோராவர். இவர்களைப் பற்றிய ஆவணங்கள் இல. ஆயின், முதலாம் ஏகோஜி 8 ஆண்டுகளும், ஸாஹஜி 28 ஆண்டுகளும், முதலாம் சரபோஜி 16 ஆண்டுகளும், முதலாம் துளஜா 8 ஆண்டுகளும், பாபா சாகேப் ஓராண்டும், பிரதாப சிங்கு 24 ஆண்டுகளும், இரண்டாம் துளஜா 24 ஆண்டுகளும், அமரசிங்கு 11 ஆண்டுகளும், இரண்டாம் சரபோஜி 34 ஆண்டுகளும் இரண்டாம் சிவாஜி 23 ஆண்டுகளும் அரசாண்ட செய்தியினை இவ்வாவணங்கள் கூறுகின்றன. தனி வாழ்க்கையில் எல்லா மன்னர்களும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மனைவியரைப் பெற்றிருந்த செய்தியினையும், இரண்டாம் சரபோஜி 'கல்யாண மகால் மகளிர்' எனப் பல பெண்டிரை உடைமையாக்கிக் கொண்ட செய்தியினையும், இரண்டாம் சிவாஜி 'மங்கள விலாச சத்மத்தார்' என 42 பெண்டிரை உடைமையாக்கிக் கொண்ட செய்தியினையும் மோடி ஆவணங்கள் உறுதிப்படுத்துகின்றன.

மராட்டிய அரச குலத்தில் வாரிசுக்கான ஆண்மகவு இல்லையெனில், இளவல்களுக்கு அரசுரிமை வழங்கப்பட்ட செய்தியும், முறையாகப் பிறந்த மகன் இல்லையெனில் பட்டத்தரசியே அரசுரிமை பெற்று ஆட்சி செய்த நிகழ்வும் காணக்கிடைக்கின்றன. மேலும், கத்திக் கல்யாணம் செய்து கொண்ட மராட்டியப் பெண்ணின் மகனான பிரதாபசிம்மன் அரசுரிமை பெறும் சூழலும் பெறப்படுகிறது.

முதலாம் ஏகோஜியின் காலத்தில் மகாராட்டிரச் சத்திரபதியான சிவாஜியோடு அவருக்குத் தொடர்பிருந்தமையை மோடிக் கடிதங்களே உறுதிப்படுத்துகின்றன. அதைப் போலவே, டச்சுக்காரர் தொடர்பையும், சேதுபதிகள் தொடர்பையும், நவாபுடனுள்ள தொடர்பையும் சிவகங்கை, எட்டயபுரம் ஜமீனுடனுள்ள தொடர்பையும் இலங்கையோடு இருந்த தொடர்பையும் மோடிக் கடிதங்கள் கூறாநிற்கின்றன.

பொருளாதாரச் செய்திகள்:மராட்டிய மன்னர் காலத் தஞ்சை அரசின் பொருளாதார நிலை குறித்து ஆய்தற்கும் இம்மோடி ஆவணச் சான்றுகள் பெரிதும் துணைநிற்கும். இவற்றைப் பல்வேறு நிலைகளில் நின்று ஆராயலாம். முக்கிய வருமானமாக, உழவரின் நிலத்தினின்று கிடைக்கும் நெல், மேல் வாரமாகவும் மிராசுதார்கள் மூலமாக வசூலிக்கும் பணமுமாகவே இருந்ததைக் காணலாம். சத்திரத்திற்கு நிலங்கள் ஒதுக்கப்பட்டிருந்ததையும், அவற்றினின்று கிடைக்கும் வருமானமும் அரசால் பயன்படுத்தப்பட்டது என்பதையும் இவ்வாவணங்கள் வாயிலாகவே அறியமுடிகின்றது.

மேலும், தோட்ட வருமானம், அகழிக் குத்தகை, குளம் குட்டைகளில் மீன் பிடித்துக் கொள்ளப் பாசிக் குத்தகை, சாராயக் குத்தகை, முத்துக்குளித்தல், முத்திரைப் பத்திரம் விற்றல் போன்ற வழிகளிலும் வருவாய் பெறப்பட்டதாக அறியமுடிகின்றது.

இவை தவிர, பல்வகைத் தீர்வைகள், வரிகள் போன்றவற்றைப் பற்றியும் இவ்வாவணங்கள் பேசுகின்றன. சுங்கச் சாவடிகளில் பொருள்களின் எடைக்கேற்பவும், அவற்றை எடுத்துச் செல்லும் தொலைவிற்கேற்பவும் வரி வசூலித்த முறை, ஐரோப்பியர்களிடம் கடுமையான சுங்கவரி வசூல் செய்தது போன்ற செய்திகளும் இவைகளில் விரவிக் கிடக்கின்றன. உப்புவரி, பருத்தியாடை பட்டாடை நெய்வதற்கான வரி

(தனிவரி), எள், கரும்பு பயிரிடுவதற்கான வரி, எண்ணெய் ஆட்டும் செக்குவரி, சில உணவுப் பொருட்கள், அன்றாட உபயோகப் பொருட்கள், கட்டிடச் சாமான்கள், வீட்டு விலங்குகள், ஊர்திகள் ஆகியவற்றின் மேல் வரி எனப் பல நிலைகளில் வரி வசூலிக்கப்பட்ட செய்திகளையும் இவை எடுத்தியம்புகின்றன. குற்றம் செய்தவர்களுக்குத் தண்டம் விதிப்பதையும் ஒருவகை வருவாயாகக் கொண்ட செய்தியும் உளது.

வரவு செலவுக் கணக்குகளை எழுதி வைத்துள்ள குறிப்புகளிலிருந்து நாணயமுறை, விலைவாசி, அளவைகள் ஆகியவற்றையும் அறியமுடிகின்றது. நாணய முறையில் மிகச்சிறிய அளவான காசு முதல் , பணம், சக்கரம், புலிவராகன் வரையிலான பயன்பாடே தஞ்சை அரசில் இருந்தது என்பதையும், புலிவராகனுக்கும் பிற வராகன்களுக்குமுள்ள மதிப்பு மாறுபாட்டைப் புலப்படுத்துவனவாகவும் இக்காகிதச் சுவடிகள் அமைந்துள்ளன. தஞ்சை அரசுக் கருவூலத்திலிருந்த பல்வேறு வகையான நாணயங்களைப் பற்றிப் பேசும் ஆவணங்களைக் கொண்டு பிற நாட்டாரோடு தஞ்சை அரசுக்குத் தொடர்பிருந்தமையை அறியலாம். ஏறத்தாழ 120 வகையான நாணயங்களின் பெயர்கள் கிடைத்த போதிலும் அவற்றைத் தரம் பிரித்து ஆராய வேண்டுவது ஆய்வாளரின் பணியாம்.

சி-பிரிவு மோடி ஆவணங்கள் அக்காலத்திய 'விலைவாசி'யினை எளிதில் அறிந்து கொள்ள உறுதுணையாயுள்ளன. இவைகளில் நெல், அரிசி, உப்பு, மளிகைச் சாமான்கள், எண்ணெய் வகைகள், தேங்காய், ரொட்டி, பழங்கள், மண்பாண்டம், செங்கல், சுண்ணாம்பு, பட்டாசு, கால்நடைகள், தங்கம், வெள்ளி ஆகியவற்றின் விலை விபரங்களும், நிலக்கிரய விலையும் அறியக்கிடக்கின்றன.

அளவைகள் பற்றிய செய்திகளும் இவற்றில் பொதிந்துள்ளன. முகத்தலளவைக்குப் படி, மரக்கால், கலம் என்பவையும், எடுத்தலளவைக்குத் தோலா, பலம், சேர், வீசை, மணங்கு, தூக்கு என்ற முறையிலும், கழஞ்சு, மணு, கண்டி, பாரம் ஆகியவையும் சுட்டப்பட்டுள்ளன. நீட்டலளவை முழம், சாண் என்றவாறு பயன்பாட்டிலிருந்தது. நில அளவைக் குறிக்க 14 அடிக்கோல் மற்றும் வேலி, மா, குழி என்பன போன்ற அளவுகள் பயன்பாட்டில் இருந்ததைக் காகிதச் சுவடிகள் தெற்றென விளக்குகின்றன.

சமயச் செய்திகள்:- பல்வேறு சமயம் சார்ந்த மன்னர்களின் ஆட்சி தஞ்சையில் பல்வேறு காலகட்டங்களில் அமைந்ததால், மராட்டியர் காலத்தில் சைவ, வைணவ, இசுலாமிய, கிறித்துவ சமயங்களும் போற்றப்பட்டு, சமயப் பொறை மிக்கிருந்த நிலை மோடி ஆவணங்களின் வழி உணரப்படுகிறது. மராட்டிய மன்னர்களின் நேர்பார்வையில் இருந்த திருக்கோயில்கள் 64 என்று ஒராவணம் குறிப்பிடுகின்றது. இதைத்தவிர, தஞ்சைப் பெரிய கோயில், கும்பகோணம், திருவிடைமருதூர், திருபுவனம், திருவாரூர் முதலிய பல ஊர்களிலுமுள்ள கோயில்களுக்குச் சர்வமான்யம் வழங்கிய செய்திகளும் திருப்பணி, திருவிழா, பூசை போன்றவற்றை நடத்திய குறிப்புகளும் மிகுதியும் கிடைக்கின்றன. மேலும் தஞ்சை மன்னர்கள் இந்து சமயத்தினராயிருந்தும், தர்க்காக்களைக் கட்டுவதற்கும், மசூதியை நடத்துவதற்கும், துணை நின்றதை இவ்வாவணங்கள் உறுதி செய்கின்றன. சமய வேறுபாட்டை விஞ்சி, சரபோஜிக்கும், சுவார்ஸ் பாதிரிக்குமிடையே நிலவிய நட்பினையும் தரங்கம்பாடியில் ஆங்கிலப் பள்ளி நடத்திய ஜான்பாதரிக்கு அவர் உதவியதையும் இச் சான்றுகள் சுட்டிக் காட்டுகின்றன.

அரசர்களின் உதவியால் அந்தணர்கள் அக்னிஸ்டோமம், பசுபந்தம், வாஜபேயம், சோடசி, வைசுவவேதம், தர்சபூர்ணமாஸா, ஆபஸ்தம்ப சோம பூர்வக அதானம், குண்டல இஷ்டி முதலிய யாகங்களைச் செய்தனர் என்பதையும் ஆவணங்கள் வழி அறியமுடிகிறது.

மராத்திய மன்னர்களின் சமயப் பொறையுடைமைக்கு இவ்வாவணங்கள் தக்க சான்றாய் அமைந்துள்ளன. அரச குடும்பத்தினர், தீபாவளி, பாவுபீஜ், கௌரிபூசை, குலதர்ம பூசை, நவராத்திரி, மகரசங்கராந்தி, பிள்ளையார் சதுர்த்தி, மகாசிவராத்திரி, இராமநவமி, காமன் பண்டிகை ஆகிய பண்டிகைகளோடு அல்லாப் பண்டிகை, கிறித்துமஸ், புத்தாண்டு முதலியவற்றையும் கொண்டாடினர் என்பது பெரிதும் பாராட்டற்பாலது. இது அன்றைய சமூக வாழ்வின் சிறப்பியல்பெனில் மிகையன்று.

மேலும், திருப்பனந்தாள் காசிமடம், கும்பகோணம் காஞ்சி காமகோடி மடம், பெரிய மடம், நரசிம்மபுரம் அகோபில மடம், திருவண்ணாமலை சர்க்கார் மடம், மன்னார்குடி மேருசுவாமியார் மடம், தஞ்சாவூர் சிவபூசை மடம், கோசாமி மடம் முதலியவற்றோடு மன்னர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமை இவ்வாவணங்கள்வழி நனி விளங்கும்.

இரண்டாம் சரபோஜியின் காசி, இராமேசுவரத் திருப்பயணக் குறிப்புகள் சமயத்தில் அவருக்கிருந்த நாட்டத்தினையும் அக்காலச் சமய மரபுகளையும் பாங்குற விளக்குகின்றன.

சமூக வாழ்க்கைச் செய்திகள்:- மக்களின் வாழ்க்கை முறையினைப் பற்றி அறிதற்கும் இச் சான்றுகள் பெரிதும் துணைநிற்கும். சாதிப் பாகுபாடு, சாதியை விட்டு நீக்குதல், கீழ் சாதியினரைத் தொட நேர்ந்தால் பரிகாரம் செய்தல், போன்ற பல செய்திகளை இவை தன்னகத்தே கொண்டு திகழ்கின்றன. வலங்கை, இடங்கை என இருவகைச் சாதிப்பிரிவு புதுக்கோட்டைப் பகுதியில் இருந்தமையையும் அவர்களில் வலங்கையினர் 22 சாதியினர் என்பதையும், இடங்கையினர் 6சாதியினர் என்பதையும் இச் சான்றுகள் வழி அறியமுடிகிறது. பிறிதொரு ஆவணம் வலங்கையினர் 24 சாதிகள் எனவும் இடங்கையினர் 9 சாதிகள் எனவும் கூறுகிறது. திருமணக் காலத்தில் பந்தல் போடுதல், வாத்தியங்கள் வாசித்தல், ஊர்வலம் வருதல், ஆடையணி பூணுதல், வாகனங்களைத் தேர்ந்தெடுத்தல் ஆகியன பற்றிய மனவேறுபாடே இவர்களது பூசலுக்குக் காரணம் என இவ்வாவணங்கள் புலப்படுத்துகின்றன. இத்தகைய பாடுகளை அவர்கள் கூடி முடிவு செய்து அரசனுக்கு அறிவித்த செய்தியினையும் இவ்வாவணங்களில் காணலாம்.

அரண்மனையில் நாடொறும் பல்வகை வேலைகளைச் செய்வோரையும் இவை குறிக்கின்றன. தண்ணீர் நிரப்புதல், சமையல் செய்தல், துணி வெளுத்தல், தீவட்டி பிடித்தல், காவல் காத்தல் முதலிய பல வேலைகளைச் செய்வோர் இறந்துபடின், அவரது பிள்ளைக்குப் பணி உரிமை அளிக்கப் பெற்றது எனவும், ஓய்வு பெற்றோர் ஓய்வூதியம் கிடைக்கப் பெற்றனர் எனவும் இதன்வழி அறியமுடிகிறது. மேலும், கைம்பெண் மணத்தையும், பலதார மணத்தையும் ஆதரித்த நிலை காணப்படுகிறது. பிள்ளையின்றேல் சுவீகாரம் எடுத்துக் கொள்ள உரிமை வழங்கிய செய்தியும் ஆங்காங்குக் காணப்பெறுகிறது. பெண்கள் விற்கப்பட்டமை, உடன்கட்டை யேறியமை ஆகியவை பற்றியும் சில ஆவணங்கள் கூறும்.

மக்கள் தங்களது வாழ்விற்காகப் பல தொழில்களை மேற்கொண்டிருந்தனர். படகு, கப்பல் கட்டுதல், பட்டுப்பூச்சி வளர்த்தல், முலாம் பூசுதல், கட்டிடம் கட்டுதல், காகிதம் செய்தல், சங்கெடுத்தல், நெட்டி வேலை செய்தல், மர, உலோக, தந்த வேலைகள் செய்தல், இசைக் கருவிகளைத் தயாரித்தல், அச்சுத்தொழில் செய்தல் ஆகியவற்றைப் பெருந்தனக்காரர்களும், வண்டியோட்டுதல், காவல் வேலை, பயிரிடுதல், மரம் வெட்டுதல் ஆகிய தொழில்களைப் பிறரும் செய்து வந்த செய்திகளும் ஆங்காங்குக் குறிப்பிடப் பெற்றுள்ளன.

கலை இலக்கியச் செய்திகள்:- நுண்கலைகளான சிற்பம், ஓவியம், இசை, நாடகம், நாட்டியம், ஆகியன மராட்டியர் காலத்துச் செழித்தோங்கி வளர்ந்தமைக்குப் பல்வேறு மோடி ஆவணங்கள் சான்று பகர்கின்றன. குறிப்பாக மராட்டிய ஓவியங்கள் புகழ் மிக்கவை. மறைந்த அரச, அரசமாதேவியரின் ஓவியங்கள் வரையப்பட்டுச் சட்டமிடப்பட்டு அரண்மனையில் மாட்டப்பட்டிருந்தன எனக் குறிப்புகள் உள்ளன. ஓவியம் வரைவதில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாய்த் திகழ்ந்தனர் என்பதும் இக்குறிப்புகள்வழி அறியக்கிடக்கின்றது. சரபோஜியின் காசி யாத்திரைக் குறிப்புகளிலிருந்து, ஓவியன் தாமஸ் என்பான் பல்வேறு வகையான தாவரம், விலங்கு, பறவைகளை வரைந்து தந்தனன் என்பது பெறப்படும்.

ப்ளாக்ஸ்மன் என்ற அமெரிக்கர் இலண்டனிலிருந்தபோழ்து அவரிடம் செய்து பெறப்பட்ட 'சுவார்ஸ் பாதிரியின் மரணப் படுக்கைக் காட்சியின்' சலவைக்கல் சிற்பம் சரபோஜியை வெகுவாகக் கவர்ந்ததால், தம்முடைய முழு உருவச்சிலையைச் செய்யவும் விரும்பினார். அவருடைய காலத்திலேயே அவரது சலவைக்கல் சிற்பம் நிறுவப் பெற்றதாதால்கூடும் என்ற செய்தியினை 1823ஆம் ஆண்டின் ஆவணமொன்றினால் அறியமுடிகிறது. கட்டிட, சிற்ப வேலைப்பாடுகள் பல மராட்டிய மன்னர்களின் காலத்தில் நடைபெற்று வந்தபோதிலும் அவற்றைத் தெளிவுபடுத்திக் கொள்ளப் போதிய மோடி ஆவணச் சான்றுகள் இல்லை. அரசருக்கும், அரசமா தேவியருக்கும் உருவம் அமைத்துப் பூசை செய்தலும், பொம்மைகள் செய்தலும் இருந்தன என அறியமுடிகிறது.

மராட்டிய நாடக முன்னோடியாகத் திகழ்ந்தவர்கள் தஞ்சை மராட்டிய மன்னர்களே. இசை, நாடகம், நாட்டியம் முதலியன பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தன எனின் மிகையன்று. ஸாஹஜி, முதலாம் சரபோஜி, முதலாம் துளஜா, இரண்டாம் ஏகோஜி, பிரதாபசிங்கர், இரண்டாம் சரபோஜி, இரண்டாம் சிவாஜி, ஆகியோரது காலத்தில் இலக்கியங்கள் பல தோன்றியமைக்கு மோடி ஆவணச் சான்றுகள் கிடைக்கின்றன. சேஷாசலபதி, முத்துக்கவிராயர், கிரிராஜகவி, துண்டிராஜர், ராமபத்திர தீட்சிதர், நல்லாபூதகவி, ஜகந்நாத கவி, வேங்கடேசகவி, திரியம்பகபட், பகவந்தகவி முதலிய புலவர்கள் ஆதரிக்கப்பட்ட செய்திகளும் கிடைக்கின்றன.

'சங்கீத வித்யாதிக' என்ற பிரிவு அரண்மனையில் இருந்ததாகவும், அதில் இசைவல்லுநர்கள் பலர் கூடி இசை நூல்கள் பலவற்றைப் படைத்ததாகவும் அறியமுடிகின்றது.

சரசுவதி மகால்: தஞ்சைத் தரணிக்கு மிக்க புகழ் சேர்ப்பது சரசுவதி மகால் நூலகம் எனில் மிகையாகாது.

இலக்கியம், இலக்கணம், மெய்விளக்கம் முதலிய 24 தலைப்புகளில் நூல்களும், ஓலைச்சுவடிகளும் அங்குச் சேகரித்து வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருவது அதன் சிறப்பாம். வெளிநாட்டிலிருந்து நூல்களைச் சேகரித்த செய்திகள் அதன் பெருமையினை நனிவிளக்கும். பனையோலைகளை நறுக்கி, நூல்களைப் படியெடுத்துக் கட்டி அடுக்கி வைக்கவும், நூல்களுக்குப் பூசை செய்யவும், அறநூல்களைப் படித்துப் பொருள் சொல்லவும் ஆட்கள் இருந்ததாக அறிகிறோம். மேலும் தஞ்சை அரண்மனையிலிருந்ததாகச் சொல்லப்படும் 'நவவித்யா கலாநிதி சாலா'வும் 'சரஸ்வதி பாண்டாரத்திலேயே' இருந்ததாக ஓர் ஆவணம் குறிப்பிடும்.

மொழி ஆய்வு :- கி. பி. 18, 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மோடி ஆவணங்களான இவற்றில், அதற்கு முந்தைய கால மொழி வழக்கும் சொற்பயன்பாடும் அமையப்பெற்றிருக்கின்றன. இம் மொழியைப்பற்றி ஆராய்ந்து வரும் புணே தக்காணக் கல்லூரி மொழியியல் துறையினர், சில கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். கி.பி. 1767இல் தென் மகாராட்டிரத்தை விட்டு நகர்ந்து தஞ்சையில் குடியேறிய இவர்களது பேச்சு வழக்கில் இன்றளவும் பழைய மராட்டிச் சொற்கள் கலந்துள்ளன; மேலும் தமிழின் தாக்கத்தால் மொழி நடையில் மாறுபாடும் ஏற்பட்டுள்ளது. இங்குள்ள மராட்டியர்களுக்கும் மகாராட்டிரத்து உறையும் மராட்டியர்களுக்கும் தொடர்பு விட்டுப் போனமையின் இவர்களது மொழி, வளர்ச்சி பெறாமலேயே தங்கிவிட்டது.

கி.பி. 1815-இல் உருவான மராட்டி-மோடி அகராதியானது மோடி ஆவணத்தில் பயின்று வரும் சொற்களின் தொகுப்பாக விளங்குகிறது. இவ்வகராதியைக் கொண்டும் மொழி ஆய்வைத் தொடரலாம்.

மோடி ஆவணங்களுக்கு இடையே கிடைத்த தமிழ் ஆவணங்களில், மராட்டிய மொழியின் தாக்கம், நடை மாற்றம் ஆகியவை பற்றியும் ஆய்வுகள் வெளிவந்துள்ளன. எனவே, தமிழ், மராட்டி மொழி ஆய்வுகளுக்கு மோடி ஆவணம் சிறந்ததொரு கருவூலமாகத் திகழுமென்பதில் ஐயமில்லை.

## இரண்டாம் தொகுதி:

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திலுள்ள மோடி ஆவணக் கட்டுகளின் இடையிடையே கிடைத்த தமிழ் ஆவணங்களைப் பிரித்துத் தனியே கட்டி வைத்துள்ளனர். இத்தமிழ் ஆவணங்களில் மோடி ஆவணச் செய்திகள் பலவும் இடம் பெற்றுள்ளன. சரசுவதி மகால் நூலக முன்னாள் தமிழ்ப் புலவர் திரு வீ. சொக்கலிங்கம் அவர்கள் இதனைப் பற்றிக் கூறுமிடத்து, "பெரியதொரு மாளிகையினுள் பலகணி வழியாகப் பார்த்தால் எவ்வளவு தெரியுமோ, அவ்வளவு சொல்வது போல, மோடி மாளிகையில் தமிழ்ப் பலகணி வழியாக நோக்கிய சில முக்கிய செய்திகளை ஈண்டு கூறுவான் வேண்டி இதற்குத் 'தஞ்சை அரசு ஆவணங்கள்' (*The Tanjore Raj Records*) என்றிருந்த போதிலும், 'மோடிப் பலகணி' என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது," என்பார். (*The Journal of the Tanjore Saraswati Mahal Library, vol. 16. No. 1. 1962*).

மோடிப் பலகணி இரு பகுதிகளாகப் படியெடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது. அஃதினின்று சில பகுதிகளை சில தலைப்புகளின் கீழ் சரசுவதி மகால் நூலகத்தினர் தங்களுடைய காலாண்டு இதழில் வெளியிட்டுள்ளனர். அவை பற்றிய விவரம் வருமாறு.

| தொகுதி | பகுதி | தலைப்பு | ஆவணங்கள் |
|---|---|---|---|
| 16 | 2 | நாணயங்கள் | 1, 2, 3, 4, 5 |
| 16 | 3 | கப்பல் செய்திகள் | 6, 7, 8, 9 |
| 17 | 1 | கப்பல் செய்திகள் | 10, 11, 12 |
| 19 | 3 | கோயில்கள் | 13, 14, 15, 16 |
| 20 | 1 | கோயில்கள் | 17, 18, 19, 20 |
| | 2&3 | கோயில்கள் | 21, 22, 23 |
| 21 | 1 | கோயில்கள் | 24, 25, 26, 27, 28, 29 |
| 33 | 1, 2&3 | உத்தரவுகளும் பொதுச் செய்திகளும் | 30, 31, 32, 33 |
| 34 | 1,2 &3 | அணிகலன்கள் | 34, 35, 36, 37, 38, 39, 40, 41, 42, 43 |
| 35 | 1, 2 & 3 | மரச் சாமான்கள் முதலிய சாமான்கள் | 44, 45 |
| 36 | 1, 2 & 3 | போர்ச் செய்திகளும் அல்லா பண்டிகையின் வரலாறும் | 46, 47, 48, 49 50, 51, 52 |

இவ்வாறு, சரசுவதி மகால் நூலகக் காலாண்டு இதழில் வெளியான 52 ஆவணங்களும், இன்னும் வெளியிடப்படாத 128 ஆவணங்களும், இரண்டாம் தொகுதியில் மோடிப் பலகணி பகுதி-1, மோடிப் பலகணி பகுதி-2 என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. இதனை அடுத்துள்ள தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதி-1 என்பதும், மோடி ஆவண மூட்டை எண் 2சி, 4சி, 5சி ஆகியவற்றின் இடையே கிடைத்த தமிழ் ஆவணங்களின் தொகுப்பேயாகும். இவை தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித்துறை முன்னாள் பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்களாலும், முனைவர் ம.சா. அறிவுடைநம்பி அவர்களாலும் படியெடுக்கப்பட்டன.

12-5-1982 முதல் 12-6-1982 வரையிலான காலத்தில் திருமதி. எஸ். பத்மாவதிபாய் என்பவர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மோடி ஆவண மொழிபெயர்ப்பாளராக இருந்து மொழிபெயர்த்துத் தந்த ஆவணங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதி-2, பகுதி-3, என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றில், மோடி ஆவண மூட்டை எண் 2சி, 3சி ஆகியவற்றிலுள்ள தெரிந்தெடுக்கப்பட்ட ஆவணங்களின் மொழிபெயர்ப்பு உள்ளது. ஆக, இரண்டாம் தொகுதி ஐந்து பகுதிகளைக் கொண்டிலங்குகிறது.

## சிறப்புச் செய்திகள்:

வலங்கை இடங்கைப் பூசல், நீதிமன்றங்களும் தண்டனை முறைகளும், தேவதாசியரும் பெண்களை வாங்குதலும், மன்னர்களின் பாயி சாயேப்புகள் காமக்கிழத்தியர், பணிப்பெண்டிரான அக்காமார், தட்டுமுட்டுச் சாமான்கள், ஆபரணங்கள் முதலிய பல்வேறு சிறப்புச் செய்திகள் இரண்டாம் தொகுதியில் இடம் பெற்றுள்ளன. அவற்றை இவண் காண்போம்.

## வலங்கை இடங்கைப் பூசல்:-

நால்வகைப் பிரிவுகளுள் மக்களைப் பகுத்துக் கண்ட பண்டைய முயற்சிக்குப் பின்னர், பிராமணரல்லாத மக்களை வலங்கை, இடங்கை எனும் இருபெரும் பிரிவுகளுள் உட்படுத்தி, அவர்தம் வாழ்க்கை முறைகளை வகுத்துக்கொண்ட தன்மை இடைக்காலத்தில் ஏற்பட்டது. இத்தகைய பிரிவுகளின் துவக்கம் பற்றி கருத்து வேறுபாடுகள் உள. அவ்விரு பிரிவினருக்குள் அவ்வப்போது நிகழ்ந்த பூசல்கள் குறித்து சான்றுகள் பல கூறி நிற்கும். காலப் போக்கில் ஆட்சியாளர்களின் துணையொடு தங்களுக்குள் ஒரு நெறி வகுத்து அதன்மூலம் பூசல்களை விலக்கிக் கொண்டனர். இவை பற்றிய செய்திகள் இற்றைய சமுதாயத்திற்கு ஒரு படிப்பினையாதல் தெளிவு.

புதுக்கோட்டை ஆட்சிக்குட்பட்ட வலங்கை, இடங்கைச் சாதியினர் தங்களுக்குள் ஏற்பட்ட பூசல்களைப் போக்கும் முகத்தான் தஞ்சை மராட்டிய மன்னர்களான இரண்டாம் சரபோஜி, இரண்டாம் சிவாஜி ஆகியோரின் துணையை நாடினர். இதற்காக புதுக்கோட்டை குடியிருப்பு ஆட்சியரின் (*Resident*) பரிந்துரைக் கடிதத்துடன் தஞ்சைக்கு வந்தனர் (*2சி-23-8*).

தஞ்சைஅரண்மனையார் கூறும் "தீர்மானப்படி" நடந்துகொண்டு வருவதாகவும், அதை மீறி நடந்தால், அரசர் விதிக்கும் தண்டனைக்கு உட்படுவதாகவும் இசைவு தெரிவித்து அவர்கள் இருசாரரும் தத்தம் வாக்குமூலத்தில் கூறியுள்ளனர். (*2சி-23-3, 6*). மேலும் 120 சக்கரம் தண்டத்தொகை செலுத்தி 'சர்க்காரின்' உத்தரவுக்குக் கீழ்ப்படிவோம் எனப் பிறிதோர் ஆவணத்தில் உரைத்துள்ளனர். (*190சி-40-2*)

வலங்கை, இடங்கை எனும் இப்பிரிவுகளைச் சார்ந்த சாதியினர் யார் யார் என்பதில் மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. வலங்கையைச் சார்ந்த சாதியினர் 22 என்றும், இடங்கையைச் சார்ந்த சாதியினர் 6 என்றும் ஓராவணம் (*2சி-23-1*) கூற, பிறிதோர் ஆவணம் (*2சி-23-2*) வலங்கையைச் சார்ந்தோர் 24 என்றும், இடங்கையைச் சார்ந்தோர் 9 என்றும் இயம்பும். அதிகப்படியான வலங்கையினராக, கவரைச் செட்டி, பறையன் ஆகியோரும், அதிகப்படியான இடங்கையினராக பஞ்சாளத்தார், பள்ளன், சக்கிலியன் ஆகியோரும் குறிப்பிடப்படுகின்றனர். இவர் புதுக்கோட்டைப் பகுதியில் மட்டும் வசித்த வலங்கை, இடங்கைப் பிரிவினர் எனல் தகும். ஏனெனில் 'இடங்கை வலங்கைச் சாதியார் வரலாறு' என்ற மெக்கன்சி சுவடியில் (*R 1572; D 2751*) ஒவ்வொரு பிரிவிலும் 98 சாதியினர் இருந்ததாகக் கூறப்பெறுகிறது.

'எங்களுடையவும், எங்களைச் சேர்ந்த கட்சிக்காரர்களுடையவும் சுப சோபன முதலான காரியங்கள் நடப்பிவிக்கிறதில் கட்சிக்காரர்களிலொருவருக்கொருவர் சச்சரவு பட்டுக்கொண்டு (*2சி-23-3*)' என்ற தொடராலும், 'சுபா சோபனாதி முதலான காரியங்கள் நடப்பிவிக்க வேண்டியதில் ஷெ இருகட்சிக் காரங்களுக்கு முண்டாயிருக்குற தகராறை

(2சி-23-8)' என்ற தொடராலும் அவர் தமக்குள் விரோதமுண்டானது எதனால் என்பது தெரியவருகிறது. இதில், பெரும்பாலும் அவ்வச் சாதியினர் மணம் செய்யும்பொழுது ஊர்வலம் செல்லுவதற்குரிய வீதி, ஊர்வலத்திற்கான வாகனம், இசைக்கருவிகள், பந்தலுக்குப் போடவேண்டிய துணியின் தன்மை, மாப்பிள்ளை பெண்ணுக்கான ஆடையணிவகை, கலைநிகழ்ச்சி ஆகியனபற்றி வரையறை செய்யப்பட்டுள்ளது.

இவ்வாறே தஞ்சை மேலவீதி பச்சண்ணா சந்திலிருந்த வலங்கை, இடங்கைச் சாதியினரும் தங்களுடைய திருமணத்தில் புழங்க வேண்டிய முறையை வரையறை செய்து அரசருக்கு எழுதிக் கொடுத்திருந்தனர் (144சி-8). இத்தகு செய்திகள் அன்றைய வரலாற்றையும் மக்களையும் பற்றி அறிய பெரிதும் வேண்டப்படுவன.

## நீதி மன்றங்கள்

இரண்டாம் சரபோஜியின் காலத்திற்கு முந்தைய நீதிமன்றங்கள் பற்றிய செய்திகள் மொழிபெயர்க்கப்பட்ட மோடி ஆவணங்களிலிருந்து மிகுதியும் கிடைக்கப் பெறவில்லை. எனினும், இரண்டாம் சரபோஜியின் காலத்தில் நால்வகை நீதிமன்றங்கள் இருந்ததை அவை தெளிவுபடுத்தும் (2சி-16-32). அவை முத்திரித சபை, தரும சபை, நியாய சபை, நியாயாதீச சபை என்பனவாம்.

முத்திரித சபையில் சிறிய வழக்குள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. (34சி-139). 100 ரூபாய்க்குள் அமையும் வழக்குகளை இச்சபை முடிவு செய்ததென்பதை இவ்வாணங்கள் புலப்படுத்துகின்றன. (142சி-17-1).

தர்ம சபையில் பெரிய வழக்குகள் இடம் பெற்றன. (34சி-139) 100 ரூபாய்க்கு மேற்பட்டு அமையும் வழக்குகள் இச்சபையின் தீர்வுக்கு வந்தன என்பதும் இவை வழி பெறப்படுகின்றன. (142சி-17-1, மோ. ப. ஆ. எ. 81)

நியாயசபையில் தீர்க்கப்பட்ட குற்றவியல் வழக்கு ஒன்று மேல்முறையீட்டிற்காக தருமசபையிலும், மீண்டும் மேல்முறையீட்டிற்காக நியாயாதீச சபையிலும் கொடுக்கப்பட்டதாக ஓர் ஆவணம் கூறுகிறது (34சி-209). அதைப்போலவே, தருமசபையில் மேல்முறையீடு செய்யாமல் நியாயாதீச சபையில் முறையீடு செய்யக் கூடாது என்றும் காணப்படுகிறது (ஆ. எ. 117). எனவே, குற்றவியல் வழக்குகளைத் தீர்க்க நியாயசபையும், தருமசபை வழியாக நியாயாதீச சபையும் இருந்தன எனக் கொள்ளலாம். நியாயாதீச சபையார் சரசுவதி மகாலிலுள்ளவர்கள் கூறும் தர்ம சாத்திரவிதிப்படி தீர்ப்புச் செய்யலாம்.

பிரதிஷ்டிதசபை என்பது கோட்டைக்கு வெளியே உள்ள வழக்குகளைத் தீர்ப்பதற்கானதாகும். இஃதினின்று, மேல்முறையீடு செய்ய வேண்டுமாயின், கார்பார் பிரசங்கத்தில் செய்யலாம். (34சி-139). இவை தவிர, நியாயநிசி மகால் என்பது முன்னர் இருந்ததாகத் தெரிகிறது. நியாயநிசி மகாலில் அரசரே நேரில் இருந்து வழக்குகளைத் தீர்ப்பர். பின்னர், நால்வகைச் சபைகளில் வழக்குகள் தீர்க்கப்பட்டதால், நியாயநிசி மகால் கலைக்கப்பட்டதாதல் வேண்டும் (34சி-139).

ஒவ்வொரு நீதிமன்றத்திலும் ஒன்றுக்கு மேற்பட்ட நீதிபதிகள் இருந்தனர் (31சி-4-222, 229). நீதிபதிகளுக்குச் சம்பளத் தொகை உயர்த்தப்பட்டது போல சில நேரங்களில் குறைக்கப்பட்டதும் உண்டு (181சி-37). மேலும் வேதம் ஓதக்கூடாத நாட்களில்

(முழுமதி, மறைமதி, பிரதமை, அட்டமி) தீர்ப்புச் சொல்லக்கூடாதென்ற மரபு இருந்தது. ஏனெனில் இதைப்பற்றி ஸ்மிருதி சந்திரிகையில் தர்சன விதியில் சுலோகங்களிருந்தன *(181சி-25-3)*.

**தண்டனை முறைகள்:**

சிறைத்தண்டனை கொடுக்கப்படின், தண்டனைக் காலம் முடியும்வரை காலில் விலங்கிட்டு, மராமத்து வேலைகளைச் செய்யப்பணிக்கப்பட்டனர். தண்டனைக் காலம் முடிந்தும் தண்டோரோ போட்டு, நான்கு வீதிகளையும் சுற்றிவந்து, முழங்காலுக்குக் கீழே பிரம்படி கொடுத்து விடுவித்தனர். பிரம்படியின் எண்ணிக்கை அவர் செய்த குற்றத்தைப் பொறுத்து அமையும் *(115சி-46-1; 179சி-21-4)*.

தவிர, அபராதம் விதித்தல், பிரம்படி கொடுத்தல், எச்சில் இலை சுமத்தல், முதலிய தண்டனைகளும் இருந்தன. தண்டம் பணமாகவும், தேங்காயாகவும் வசூலிக்கப்பட்டது.

## தேவதாசியரும் பெண்களை வாங்குதலும்:-

சோழர் காலத்தில் கோவில் பணிகளைச் செய்ய 'தளிச்சேரிப் பெண்டிர்' நியமிக்கப்பட்டனர். இவர் கோயில் விழா நாட்களில் ஆடலும், பாடலும் புரிவதுண்டு. இவ்வாடலும், பாடலும் இறைப்பூசனையில் ஒன்றாகவே இருந்தது. இம்மகளிரின் கலைத்திறனால் இசை, நாடகம், நாட்டியம் வளர்ந்தோங்கியது எனலாம். ஆயின், காலப்போக்கில் பெண்டிரை விலைக்கு வாங்கி கோயிலுக்குப் பொட்டுக் கட்டிவைக்கும் வழக்கம் நின்று நிலைத்துவிட்டது.

இரண்டாம் சரபோஜியின் காலத்தில் சரபேந்திர ராஜ பட்டணத்திலுள்ள சிதம்பர ஈஸ்வரர் கோயிலுக்கு தாசி வீரலெட்சுமி, அவள் மகள் ரமாமணி மற்றும் மூவரைக் கிரயத்திற்கு வாங்கிப் பொட்டு கட்டி வைத்து மாதமொன்றிற்கு 5 பணமும், 2 கலம் நெல்லும் சம்பளமாகக் கொடுக்க ஆணை வழங்கப்பட்டது. (ஆ. எ. 82, 99) இவர்களுள் சீத்தா என்பவள் சித்தப்பிரமையால் திசைதப்பிப் போய்விட்டதால், அவளுடைய பெண் மகவுக்கு பால்கொடுக்கும் தாய்க்குப் பணம் கொடுக்க வேண்டும் எனக்கூறும் செய்தியினின்று தாசியர் திருமணம் செய்துகொள்ளாவிடினும், தாய்மை எய்துவரென்பது புலனாகிறது. (ஆ. எ. 82)

தேவதாசியர் பெரும்பாலும் பொதுமகளிராகவே திகழ்ந்தனர். அவ்வாறு நடந்துகொள்ளத் தகுதியற்ற அரூபிகளுக்கே திருமணம் நிகழ்ந்தது என்பதை இவ்வாவணங்கள் கூறும். இவர் பொதுமகளிரானதால், இவருள் சிலர் சில இடர்ப்பாடுகளுக்குட்பட்டனர் என்பதும் தெளிவு. இவ்விடர்ப்பாடுகளினின்றும் இவரைக் காக்க அரசு அலுவலர்களான கொத்தவால், அமீனா ஆகியோர் உதவினர் (ஆ. எ. 80).

கோயிலுக்குப் பொட்டுக் கட்டி வைப்பதற்காகத் தாசிப் பெண்டிரைக் கிரயத்திற்கு வாங்கியதைப் போல, அரண்மனையில் வேலை செய்யவும் பெண்களை விலைக்குப் பெற்றனர். இவ்வாறு விலைக்குப் பெற்ற பெண்களின் பெயர்களை மாற்றி அழைத்தனர். இதனை ஆங்கில அரசும் அனுமதித்தது என்பதனை ஆவணங்கள் உறுதிப்படுத்துகின்றன. மேஸ்தர் கிண்டர்ஸ்லி குடியிருப்பு ஆட்சியராக இருந்தபோழ்து, அரண்மனைக்கு விற்கப்பட்ட பெண்களை விட்டுவிடக் கோரிய விண்ணப்பங்களை அவர் நிராகரித்தார். புதுக்கோட்டையைச் சேர்ந்த சிலம்பாயி என்பவளின் 9 வயதுப் பெண் ரெங்கம்மாவை, முத்தோஜி அப்பா வீட்டுச் சந்திலிருக்கும் தாசி விசாலாட்சி என்பவள் 3 1/2 ரூபாய்க்கு வாங்கி,

பின்னர் உரூ. 400க்கு அரண்மனைக்கு விற்றுவிட்டாள். ஆகவே விற்கப்பட்ட தன் மகளைத் தன்னிடம் ஒப்படைக்கக்கோரி சிலம்பாயி ரெசிடெண்டிற்கு எழுதினாள் (ஆ. எ. 72). கெண்டறக்கோட்டை அக்கச்சிப்பட்டி மிராசு சிதம்பரம் பிள்ளையின் பெண்களான பெரியநாயகம், மங்களம் ஆகிய இருவரையும் சர்க்காரில் பலவந்தமாய்ப் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். சிதம்பரம் பிள்ளை ரெஸிடெண்டுக்கு விண்ணப்பிக்க அவர் அதை நிராகரித்துவிட்டார். எனவே, அவர் சென்னைக் கவர்னருக்கு எழுதினார் (ஆ. எ. 74). அதைப் போலவே, ராயவேலூர் கோட்டை சபாபதியா பிள்ளை என்பவன் திருவையாற்றில் மீனாட்சி என்ற கள்ளர் பெண்ணை மணமுடித்து , பிழைப்பிற்காக ராயவேலூருக்குச் சென்றுவிட்டான். பின்னர் திரும்பிவந்து விசாரித்த போழ்து அவள் மைனர் பெண்ணாதலால், அவளுடைய தந்தை அவளை அரண்மனைக்கு விற்றுவிட்டான். அவளைத் தன்னிடம் மீள அளிக்குமாறு விடுத்த வேண்டுகோளை கிண்டர்ஸ்லி நிராகரித்துவிட்டதால், அவனும் சென்னை கவர்னருக்கு விண்ணப்பித்தான். எனினும் ஆங்கில அரசு அவ்விசயத்தில் தலையிடுவதற்கில்லை எனப் பதிலனுப்பியது (ஆ. எ. 75).

இவை தவிர, புதிதாகக் கல்யாண மகாலைக் கட்டியவிடத்து ஆங்கு வேலை செய்வதற்காக 25 பெண்களை விலைக்கு வாங்கினர். பின்னர், அவர்கள் ரெஸிடெண்டால் விடுவிக்கப்பட்டனர் (119சி-47-12).

கோட்டைக்கு வெளியே, வெள்ளான சாதி நல்லத்தாயின் 9 மாதத்திய பெண்குழந்தையை கீழவாசல் பலசரக்குக்கடை ஜாதி வெள்ளாளன் வேலாயுதம் 27 பணத்திற்கு வாங்கிய செய்தியினின்று, பெண்குழந்தைகளையே விலைக்கு விற்றனர் எனத் தெரிய வருகிறது (19சி-1) இத்தகைய சான்றுகள் அற்றைய மகளிர் நிலையைப்பற்றி நாம் அறிந்துகொள்ளப் பெரிதும் துணையாயமையும்.

## பாயிசாயேப்புகள் - காமக்கிழத்தியர் - அக்காமார்

மோடி ஆவணங்கள் மராட்டிய மன்னர்களின் தனிவாழ்க்கை பற்றிய செய்திகளை மிகுதியும் கூறுகின்றன. தஞ்சை மராட்டிய மன்னர் வழிமுறையில் முதலாம் ஏகோசி முதல் இரண்டாம் துளஜா வரையில் ஒவ்வொரு மன்னருக்கும் மனைவியரும், காமக்கிழத்தியரும் இருந்தனர் எனினும் இரண்டாம் சரபோஜி கல்யாண மகாலையும், இரண்டாம் சிவாஜி மங்கள விலாசத்தையும் ஏற்படுத்தித் தம் காமக்கிழத்தியரின் எண்ணிக்கையை மிகுதிப்படுத்திக் கொண்ட செய்தி இவ்வாவணங்கள் வழி அறியக் கிடக்கிறது.

### இரண்டாம் சரபோஜி

இரண்டாம் சரபோஜியின் பட்டராணிகளாக யமுனாபாய், அகல்யாபாய் எனும் இருவர் குறிக்கப்படுகின்றனர். ஆயின், இவர்களது திருமணத்திற்கு முன்பே சரபோஜி முக்தாம்பா என்னும் நாயுடு பெண் மீது மையல் கொண்டிருந்தார். அவரைப் பற்றிய செய்திகள் மோடி ஆவணங்களில் அதிகமில. எனினும் ஒரத்தநாடு சத்திரத்தைச் செப்பனிட்டு முக்தாம்பாள் சத்திரம் என மாற்றியமைத்த செய்தி இதனை வலியுறுத்தும். ஆவணத்தில் குறிக்கப்பட்டுள்ள நாளும் (16-1-1802 சனிக்கிழமை) (923சி-9-58), முக்தாம்பாபுரச் சத்திரத்தின் கல்வெட்டில் காணப்படும் நாளும் ஒன்றாக இருப்பது (கல்வெட்டு எண்: 86. புலவர் செ. இராசு) இதனை மேலும் உறுதிப்படுத்தும்.

இவர்களைத் தவிர, கல்யாண மகால் ஒன்றினை நிறுவி அதில் தமது காமக்கிழத்தியரை வைத்திருந்த செய்தினை 'கல்யாண மகால் லாடுபாய், பாய்ம்மா பாய், என்றிருவர் குறிப்பிடப்படுவதினின்று உய்த்துணரலாம் (59சி-6). இவரோடு மேலும் 22 பேர் கல்யாண மகாலில் வதிந்திருந்ததாகச் சான்றுகள் கூறும். பலவகையான நாணயங்களும் கல்யாண மகாலில் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன (ஆ.எ. 152) என்பதும் இச்சான்றுகள் வழி அறியப் பெறும் உண்மைகளாகும்.

இனி 'அக்கா கூட்டம்' என்போரும் அரண்மனையில் வதிந்தனர். இவர்கள் பாயிசாயேபுகளின் பணிப்பெண்டிராவர். இவர்கள் சர்க்காரின் பரம்பரைக் குழந்தைகள் போலவே பேணப்பட்டனர். இவர்களுக்குச் சம்பளம் ரூ. 7 அல்லது ரூ. 8 வரையில் வழங்கப்பெற்றது. இவர்களில் கிறித்தவர்களும். இருந்தனர் (155சி-13-6) என்பது குறிப்பிடற்பாலது.

இரண்டாம் சிவாஜி

இரண்டாம் சிவாஜியின் பட்டராணிகளாக மூவர் இருந்தனர். கி.பி. 1818 இல் அவரது பத்தாவது வயதில், சரபோஜியின் மூத்த பெண் சுலட்சணாபாயியின் மகளான சைதம்பாபாயுடன் முதல் திருமணம் நடைபெற்றது. (ஆ. எ. 6) இதன் பின்னர் 1829இல் இராஜஸ்ரீ யசுவந்தராவ் இராமச்சந்திரராவ் சுர்வே (மாப்பிள்ளை)யின் பெண் காமாட்சியம்பாபாயியை இரண்டாவதாக மணந்தார். மூன்றாவது மனைவியான பத்மாம்பா பாயியைப் பற்றிய குறிப்பு மொழிபெயர்க்கப்பட்ட மோடி ஆவணங்களில் இடம் பெறவில்லை.

சிவாஜி மன்னருக்கு ஆண் மகவின்மையால், 1852 ஆம் ஆண்டு கோலாப்பூர், சாதாரா, கோங்கணம் ஆகிய பகுதிகளிலிருந்து பதினேழு பெண்களைத் தெரிந்தெடுத்துக் கொணர்ந்து மணந்துகொண்ட (107சி-37-1) செய்தி இச்சான்றுகள் மூலம் பெறப்படுகின்றது. இப்பதினெழுவரில் அரசர் இறப்பதற்கு முன்பே சோயிராம்பாவும் துக்காம்பாவும் இறந்துவிட்டபடியால் எஞ்சிய பதினைவர் பெயர்களும் நமக்குக் கிடைக்கின்றன. (45சி-55-சி). 1863ஆம் ஆண்டில் சிவாஜி மகாராஜாவின் பாயிசாயேப்புக்களுக்குச் சேரவேண்டிய தொகை பற்றிய பட்டியிலிலும் அருணாம்பா தவிர்த்த பிற பெயர்கள் காணப்படுகின்றன. அருணாம்பா சிவாஜியின் மரணத்திற்குப் பின்னர் இறந்திருக்கலாம் (ஆ. எ. 87). இப்பதினைவரையும் எண்மராகவும், எழுவராகவும், பிரித்து ராம் மாடியிலும், சதர் மாடியிலும், வைத்தனர். இதற்கான காரணமாவது பாயிசாயேபுகளுக்குத் தெரியாமல் அவர்கள் பெயரால் ஆங்கில அரசுக்குப் பிராது 'ஒன்று' கொடுக்கப்பட்டது. அது தொடர்பாக அவர்களுக்குள் மனத்தாங்கல் ஏற்பட்டுப் பிரிந்தனர் என்பது இவை வழி பெறப்படும்.

இவர்களைத் தவிர, மங்கள விலாசத்தைச் சேர்ந்தவர்களாக 42 பெண்கள் பற்றியும் இவை கூறும். அவர்கள் ஹுஜூர் மகாலிலும், ஐன் மகாலிலுமாக வாழ்ந்தனர் என்பதை இவை புலப்படுத்தும். "இப்பெண்களெல்லாம் தாசிகளினின்று வேறுபட்டவர். அவர்கள் மானத்துடனும், கௌரவத்துடனும் ஒரே புருஷனிடத்தில் இருப்பவர். 'புருஷனுக்குப்' பின்னர் பிழைத்திருக்கும் வரையில், வெளியில் போகாமல், 'புருஷன்' இறந்த பின்பு பெண்கள் இருக்கவேண்டிய முறைப்படி இருப்பவர்கள்" (155சி-13-6). இவர்களது பெயர்களைத் தெரிவிக்கும் இரு ஆவணங்கள் இவர்களை 'அம்மாமார்' எனக் குறிப்பிடுகின்றன. மங்களவாசப் பெண்டிருக்கு உதவிபுரியக் காரியஸ்தர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களில் பதினால்வர் பெயர்கள் கிடைக்கின்றன. (ஆ. எ. 79, 87). இரண்டாம் சிவாஜி

இறந்தபொழுது மங்களவாசக் குழந்தைகள் மூவருக்குத் தாயில்லை. அவர்கள் மூத்த பாயிசாயேப்பின் பொறுப்பிலிருந்தனர். (155சி-13-6) இத்தகைய செய்திகளை இவ்வாவணங்களில் பரக்கக் காணலாம்.

## தட்டு முட்டுச் சாமான்கள் (அ) அறையணி பொருட்கள்:-

மாந்தர் பற்றி மட்டுமின்றி, அறையணி பொருட்கள் பற்றியும் குறிப்புகள் பல உள.

இரண்டாம் சரபோஜி எல்லா வகையிலும் ஆங்கிலேயருக்கு உதவியாகவே இருக்க முனைந்தார். தம்முடைய வாழ்க்கை முறைகளையும், பயன்பாட்டுப் பொருட்களையும் ஆங்கில முறைப்படி மாற்றியமைத்துக் கொண்டார். அவர்தம் அரண்மனையிலுள்ள பொருட்களின் பட்டியல் இதனைத் தெளிவுபடுத்துவதாக உள்ளது (ஆ. எ. 44, 45, 142).

தட்டுமுட்டுச் சாமான்கள் (அ) அறையணி பொருட்கள் எனப்படும் மேசை, நாற்காலி, கட்டில், மெத்தை, நிலைப்பேழை முதலியவை பல்வேறு வகையனவாக இருந்தன. மேசை நாற்காலியின் வண்ணம், அமைப்பு, பயன்படுத்தும் சூழல் ஆகியவற்றின் அடிப்படையின் அவற்றிற்கு வெவ்வேறு பெயர்கள் இருந்தன. அதைப் போலவே, பல்வேறு வகையான தாங்கிகள், எழுதுமேசைகள், முதலியனவும் ஆங்கில நாகரிகத்தின் போக்கிலேயே அமைந்திருந்தன.

பீங்கான் பொருட்களில் மட்டும் ஏராளமான வகைகளை மன்னர் பயன்படுத்தியதாக அறிய முடிகின்றது. தண்ணீர், பீர், ஒயின், சாம்பெயின், சாலட், ஊறுகாய், தயிர், காபி ஆகியனவற்றை வைத்துக்கொள்ள சிறுசிறு பீங்கான் கலங்களும் அப்பட்டியலில் இடம்பெற்றுள்ளன. துணைக்கறி, மீன், இனிப்புப் பொருட்களை வைத்துக் கொள்வதற்கா பல்வகைத் தட்டுகளும் (Dish) இருந்தன.

உணவுண்ணப் பயன்படுத்திய கரண்டி, கத்திவகைகளும், முள்ளு வகைகளும், சூரிகத்தி, ரொட்டி சுடுகிற சலாகு முதலியனவும் கூறப்பட்டுள்ளன. இப் பொருட்களனைத்தும் ஆங்கிலேயப் பழக்கவழக்கத்தின்மூலம் வந்தனவாகும் என்பது தெளிவு.

## அணிகலன்கள்

இரண்டாம் சிவாஜிக்குப் பின்னர், மங்கள விலாச மாதருடைய நகைகளை முறையாய்ப் பங்கிட்டுக் கொடுக்கப் போவதாகவும் இடையே வேறு யாருடைய தலையீடும் இதில் இருக்கக்கூடாதென்றும் சர்க்கில் வீராசாமிப்பிள்ளை ஓர் அறிக்கையினை வெளியிட்டார். (ஆ. எ. 40) இதன்பின்னர் 1906 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 11ஆம் நாள் அரண்மனையில் இறந்துபோன கவராயி பாயிசாயேப் அவர்களால் சுவீகரிக்கப்பட்ட குமாரர்களாகிய சிவாஜிராஜே, பிரதாபசிம்மராஜே ஆகியோர்களுக்காக வைக்கப்பட்ட நகைகளை விலை மதிப்பிட்டு செய்தனர். இது போழ்து அரண்மனையிலிருந்த நகைகளின் விபரம் கொடுக்கப்பட்டது. (ஆ.எ. 41, 42). அது அற்றைய அணிகலன்களைப் பற்றிய ஆய்விற்குப் பெரிதும் துணை நிற்கும்.

மணிக்கட்டில் அணியக்கூடிய வளையல் வகை, மேற்கையில் அணியக்கூடிய புஜபந்து, பொன்வங்கி, கழுத்தில் அணியக்கூடிய அட்டிகை, பதக்கம் கண்டசரம், ருத்ராட்சம், கண்டா, மார்பிலணியக்கூடிய பஞ்சசரம், முத்துஹாரம், சந்திரஹாரம், மூக்கில் அணியக்கூடிய

பொட்டு, வைரப் புல்லாக்கு, நத்து, பேஸரி, தலையில் அணியக்கூடிய கிருஷ்ண கொண்டை, உச்சிப்பூ, பின்னலில் அணியக்கூடிய ஜடகுச்சு, மயிர்மாட்டி, முத்துக்குஞ்சம், கைவிரலிலும் கால்விரலிலும் அணியக்கூடிய மோதிரங்கள், காதில் அணியக்கூடிய ஜிமிக்கி, கடுக்கன், லோலக்கு, இடுப்பிலணியக்கூடிய அரைநாண், கணைக்காலில் அணியக்கூடிய கால் சங்கிலி, தண்டை, காற்சலங்கை முதலிய பலவகை அணிகளைப் பற்றிய விவரப் பட்டியலினின்று அக்கால மகளிரின் "நகை மோகம்" எத்தகையது என்பதனை அறிய இயலும்.

## பதிப்புமுறை

தஞ்சை சரசுவதி மகாலிலுள்ள மூல மராட்டிய மோடி ஆவணங்கள் 1960 ஆம் ஆண்டிற்குப் பின்னரே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. எனவே, தமிழிலுள்ள இக் காகிதக் கையெழுத்துச் சுவடிகளை மூல ஆவணங்களாகக் கொள்ள வேண்டுவதில்லை. எனினும், மொழி பெயர்ப்புச் சுவடிகளாகக் கொண்டு கீழ்க்கண்ட முறைகள் பின்பற்றப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

1. தமிழ் நடை திருத்தப்படவில்லை. ஆனால் ஆங்காங்கே ஏற்பட்டிருந்த எழுத்து, சொற்பிழைகள் மட்டும் சரி செய்யப்பட்டுள்ளன. சான்றாக, தேவநாகரியில் (वगैरा) 'வகைரா' எனவும் (पेटी ')பேடி' எனவும் உள்ள சொற்களை மொழி பெயர்ப்பில் அப்படியே எழுதியுள்ளனர். இவை'வகையறா என்றும் 'பேட்டி' என்றும் தமிழ் வழக்கில் மாற்றப்பட்டுள்ளன.
2. மொழி பெயர்ப்புப் பிழை இருந்தவிடத்து அது திருத்தப்பட்டு அடிக்குறிப்பில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது.
3. பிறமொழிச் சொற்களுக்கு (மராட்டி, சமஸ்கிருதம், உருது, பார்சி முதலியன) இயன்றவரை அடிக்குறிப்பில் விளக்கம் தரப்பட்டுள்ளது. இயலாதவிடத்து அச்சொல் அப்படியே கொடுக் கப்பட்டுப் பிறைவளைவிற்குள் கேள்விக்குறி இடப்பட்டுள்ளது.
4. பயிரினங்கள், விலங்கினங்களின் பெயர்கள் மராட்டிய மொழியில் கூறப்படுமிடத்து அவற்றிற்கு இணையான தமிழ்ப் பெயரோ அல்லது உலக அறிவியல் முறைப் பெயரோ (Biological nomenclature) கொடுக்கப்பட்டுள்ளது. இயலாதவிடத்து அப்படியே கொடுக்கப்பட்டுள்ளது.
5. மூல மோடி ஆவணத்திலுள்ள காலம் ஹிஜிரி அல்லது சாலிவாகன ஆண்டாக இருக்குமிடத்தில், அவற்றிற்கு இணையான ஆங்கில ஆண்டு பிறை வளைவிற்குள்ளோ, அல்லது அடிக்குறிப்பிலோ கொடுக்கப்பட்டுள்ளது.
6. ஆவணங்களின் எண்கள் சிலவிடங்களில் தேவநாகரி எழுத்தைப் பயன்படுத்திக் குறிப் பிடப்பட்டுள்ளன. அவற்றிற்கு நேரான எழுத்துக்கள் தமிழில் இல்லையாதலால் கீழே கண்டவாறு அவை குறிக்கப்பட்டுள்ளன.

क = (க); ख = (க∴); ग = (ங்க); घ = (ங்க∴)
च = (ச); छ = (ச∴); ज = (ஞ்ச); झ = (ஞ்ச∴)
ट = (ட); ठ = (ட∴); ड = (ண்ட); ढ = (ண்ட∴)
त = (த); थ = (த∴); द = (ந்த); घ = (ந்த∴)

7. அடிக்குறிப்பு எண் வரிசை மூவகையில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆவண எண் அடிப்படையிலும், மூட்டை எண் அடிப்படையிலும் பகுதி எண் அடிப்படையிலுமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

# நன்றியுரை

வரலாற்றுச் சிறப்புவாய்ந்த மராட்டிய மோடி ஆவணங்களின் தமிழ் மொழிபெயர்ப்பினைத் தொகுதிகளாக வெளியிடுவதற்குப் பலர் பல நிலைகளில் ஒத்துழைப்பு நல்கியுள்ளார். அவர்கள் அனைவருக்கும் நன்றி பாராட்டுவது கடப்பாகும்.

-மூல மோடி ஆவணங்களின் மொழிபெயர்ப்பினை அப்படியே வெளியிட்டு ஆய்வுலகிற்கு அரிய கருவூலத்தை வழங்க முன்வந்த தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர், முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள்,

-இப்பணியின் சிறப்பறிந்து இதனை நிறைவு செய்யப் பல்லாற்றானும் உறுதுணையாயிருந்து, ஊக்க உரை வழங்கிய இந்நாள் துணைவேந்தர், முனைவர் ச. அகத்தியலிங்கம், அவர்கள்,

-ஆவணங்களை அச்சேற்ற உரூ. 1,00,000 நிதியுதவி வழங்கிய புதுதில்லி தேசிய ஆவணக் காப்பகம்,

-நூல்வடிவாக்க ஒத்துழைத்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் முனைவர் பெ.சின்னையன் மற்றும் பதிப்புத்துறை உதவி இயக்குநர் திரு செ.இ. ரெ. செயச்சந்திரன் அவர்கள்,

-மொழிபெயர்ப்புச் சுவடிகளைப் படியெடுத்து வெளியிட இசைவளித்த சரசுவதி மகால் நூலகத்தினர் மற்றும் படியெடுத்துத் தந்த திருமதி க. இலவிதாம்பிகா அவர்கள்,

-தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மோடி ஆவண மொழிபெயர்ப்பினைச் செய்து தந்த திருமதி எஸ். பத்மாவதிபாய் மற்றும் மோடி வல்லுநர் திரு இராக. விவேகானந்த கோபால் அவர்கள்,

-தமது முதிர்ந்த அனுபவத்தால் தேவையான இடங்களில் குறிப்புரை எழுதி வைத்த அரிய கையெழுத்துச் சுவடித்துறை முன்னாள் பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்கள்,

-பதிப்புப் பணியின்போது கருத்துரைகள் நல்கி, உடனிருந்து உதவிய அரியகையெழுத்துச் சுவடித்துறை விரிவுரையாளர்கள் முனைவர் ம. சா. அறிவுடைநம்பி மற்றும் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்,

-அச்சுப் பணியினைச் செவ்வனே செய்துதந்த புதுக்கோட்டை சர்மா சானடோரியம் கணிப்பொறி அச்சகத்தினர்,

ஆகிய இவ்வனைவரது கூட்டு முயற்சிக்கும் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

பா. சுப்ரமணியன்.

# தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும்

## தொகுதி-II

## மோடிப் பலகணி-பகுதி - I*

### ஆவணம் எண்-1

இந்தப் பத்திரத்தினால் எல்லா மக்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால், முக்தம்பாபுரம் சத்திரத்தின்[1] தர்மத்திற்காக மகா. ரா. ரா. ஸ்ரீ. தஞ்சாவூர் சரபோஜி மகாராஜா சத்ரபதி அவர்களிடமிருந்து தஞ்சாவூரில் பெருந்தனக்காரர்[2]களாகிய நாம் ஆதியப்ப முதலி, இராமமுதலி ஆகிய இருவரும் கடன் வாங்கியதற்கு இரட்டிப்புத் தொகை தஞ்சாவூர் (20000) இருபதாயிரம் சக்கரம், ஷெ தஞ்சாவூரில் சரபோஜி மகாராஜா சத்ரபதி அவர்கள் அவர்களுடைய பாத்தியஸ்தர்[3], வக்கில், காரியஸ்தர் இவர்களால் நியமிக்கப்பட்டவர்களுக்கு நாமும் நம்முடைய பாத்தியஸ்தரும், வக்கிலும், காரியஸ்தரும்[4] நம்மால் நியமிக்கப்பட்டவர்களும் தொகையைச் செலுத்த வேண்டி உண்மையான கடன்பத்திரம் ஏற்பட்டு பாத்தியம் இருக்கிறது. இதில் உள்ள சாட்சியும் கையொப்பமும் தஞ்சாவூரில் இங்கலீஷ் 1808 ஆம் ஆண்டு மே மாதம் 29ஆம் தேதியில் போட்டுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஷெ தஞ்சாவூரில் சரபோஜி மகாராஜா சத்ரபதி[5] அவர்களிடமிருந்து ஷெ கடனுக்குரிய ஆதியப்ப முதலியும், இராமமுதலியும் கடன் வாங்கியது உண்மையான துகை 10000 (பத்தாயிரம்) சக்கரம். இதற்கு வட்டி ஆண்டு 1க்கு 100க்கு 12 வீதம் இன்றைய தேதி முதல் 6 மாதத்துக்குச் செலுத்துவோம். கடன் பத்திரத்தில்

---

* தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகக் காப்பீடு வால்யூம் எண் : 1633 -

1. முக்தம்பாபுரம் சத்திரம் - ஒரத்தநாடு சத்திரம். முக்தாம்பாள்-இரண்டாம் சரபோஜி தம் திருமணத்திற்கு முன்னரே சேர்த்துக் கொண்ட காமக்கிழத்தியாவர். இவர் இறக்கும்பொழுது தம் பெயரால் ஓர் அன்னசத்திரம் ஏற்படுத்த வேண்டும் என்று சரபோஜியை வேண்டிக் கொண்டார். (பக். 273-274) (போ.வ.ச.பக்.136)

2. பெருந்தனக்காரர் - பெரிய மனிதர்கள்

3. பாத்தியஸ்தர் - உரிமையாளர்

4. காரியஸ்தர் - அலுவலர்

5. சத்ரபதி - அரசர்

சொல்லப்பட்டது என்னவென்றால், இன்றைய தேதிக்குத் தஞ்சாவூர் போரே பணம்[6] ஒன்றுக்கு சென்னைப்பட்டணம் வெள்ளி இரண்டு பணம் சரியாக இருக்குமாகையால் வருகிற கெடுவுக்குள் தொகையைச் செலுத்தும்போது ஷெ தஞ்சாவூர் மகாராஜா சத்ரபதியும் அவர்களின் பாத்தியஸ்தரும் வக்கீலும் காரியஸ்தரும் இவர்களால் நியமிக்கப்பட்டவர்களும் ஆகிய இவர்கள் தஞ்சாவூர் போரேபணம் தொகையே வேண்டுமென்றால் உண்மையான தொகை 10,000 (பத்தாயிரம்) சக்ரம் அல்லது சென்னைப்பட்டணம் வெள்ளிப்பணம் வேண்டுமென்றால் 200000 (இரண்டு லக்ஷம்) பணம் அல்லது இதற்குச் சரியான மதிப்புள்ள புதிய அரபு நாணயங்கள் செலாவாணியாகிப் பின்பு மேலே எழுதின இரண்டு நாணயங்களும் கிடைக்காவிட்டால் அப்போது செலவாணியாயிருக்கிற நாணயம் வேண்டுமென்று விரும்பினால் அதே நாணயமும் அதனுடைய வட்டியையும் சேர்த்து நாம் ஆதியப்ப முதலியும் இராம முதலியும் நம்முடைய பாத்தியஸ்தரும் வக்கீலும் காரியஸ்தரும் நம்மால்நியமிக்கப்பட்டவர்களும் உண்மையாய்ச் செலுத்துவோம். அல்லது செலுத்தும்படியாய்ச் செய்வோம். அதன்படி செலுத்தின பின்பு இந்தப் பத்திரத்திற்கு மதிப்பற்றுப்போய் உபயோகமின்மை ஏற்படும். இல்லாவிடில் இதற்குப் பலமும் யோக்கியதையும் இருக்கும். அரசாங்க ஊழியன் பாபுஜி குண்டோ கையெழுத்து.

*1808ஆம் ஆண்டு ரபிலாக்கர்[7] மாதம் 3ஆம் தேதி விபவ ஆண்டு வைகாசி மாதம் 18ஆம் தேதி எண்ணில் 10000 தஞ்சாவூர் போரே[8] சக்கரம்.*

## ஆவணம் எண் 2

*அமரசிங்கு ராஜா[9] அர்ப்பா திசைன் மய்யா அல்லப்[10] சபர்[11] மாதம் 24*
பரவாநகி[12] மாயூரம் சுபையைச்[13] சேர்ந்த திருமருகல் கிராமத்திலிருக்கிற தங்கசாலை[14]

6. "போரே பணம் - சென்னைப் பட்டணம் வெள்ளி இரண்டு பணம்" என்பது இதனால் அறியப்படும்.

7. ரபிலாக்கர் - ரபிஉல் ஆஹிர் - அரபு நான்காவது மாதம்

8. "போரே" என்பதை நீக்கிப் படித்தல் வேண்டும்.

9. அமர்சிங்குராஜா - துளஜாவுக்கு அடுத்து ஆட்சியைக் கைப்பற்றி 1788 முதல் 1798 வரை ஆட்சி செலுத்தியவர்.

10. அர்ப்பா திசைன் மய்யா அலப் (அர்ப்பா-4; திசைன்-90; மய்யா-100; அலப்-1000)

11. சபர் - அரபு இரண்டாவது மாதம்

12. பரவாநகி - அரசன் இடும் ஆணை; இதில் அரசனது கையொப்பம் இருக்காது (பக்கம் 365)

13. சுபை - நாட்டுப்பிரிவு (Subha)

14. தங்கசாலை - நாணயம் அச்சடிக்கும் இடம்

காசி[15] அடிக்கப்பட்ட காசி 1000க்குப் பணம்[16] மூன்று வீதமும் பலாம் 1க்கு காசி 24 வீதமும் கொடுக்கிறதாயும் அதற்காக வர்த்தகாளிடமிருந்து சரக்குகள் அழைப்பிவித்துக் கொண்டு ஆடி மீ 7உ முதல் நடவடிக்கை நடத்தும்படி-1

## ஆவணம் எண் 3

மொத்தமாயி ஜன்னறல்[17] உத்திரவின் விவரம் 1777 ஞு ஜம்மாதிலவல்[18] மீ 14உ பட்டுக்கோட்டை

கோட்டை வகையறா 6 கோட்டைக்கி கில்லேதார்களும்[19] சேர்ந்ததற்கு உத்திரவுகளின் விவரம்

15 சாஹாக் கோட்டை[20] சேர்ந்த ஜிஹாணம் தொ அண்டு வாலஸ்
15 பந்தநல்லூர் சேறபஜி விசுவாசராவ்
15 பட்டுக்கோட்டை பூவாஜி போஸலே தம்பி சஹாஜி போசலே ஷெி
15 மகாதேவ பட்டணம்[21] சிவாஜி காடிகே ஷெி
15 பரம்பந்திதர்[22] எகோஜி ஜகத்தாப் ஷெி
15 அறந்தாங்கி யாதவறாவ் தேவாறறாவ் ஷெி

90 பொன்னு குடுக்கும்படி ... ... .... .... ... ...

... ... .... ... (இது முதல் சிதைந்துள்ளது. இறுதியில்) ஜமாஜிலாகர்[23] மீ 8உ முதல் திருக்காட்டுப்பள்ளி கோட்டைக்கு விளக்கு வைக்க நாள் 1க்கு சேர் 2 வீதம் .... .... (மேலும் சிதைந்துள்ளது).

---

15. காசி - காசு

16. 32 காசு 1 பணம் (பக்கம் 150)

17. ஜன்னறல் - ஜெனரல் - சேனைத்தலைவர் (General)

18. ஜம்மாதிலவல் - ஜமாஉல் அவ்வல் - அரபு ஐந்தாவது மாதம்

19. கில்லேதார் - கோட்டைத்தலைமையாளர்

20. சாஹக்கோட்டை - இந்நாளில் கும்பகோணத்துக்கருகிலுள்ள சாக்கோட்டை என்னுமூர்

21. மகாதேவபட்டணம் - மன்னார்குடிக்கு அருகில் உள்ள ஊர் (போ.வ.ச.பக்.83)

22. பெரம்பந்திதர் (?)

23. ஜமாஜிலாகர் - ஜமாஉல் ஆஹிர் - அரபு ஆறாவது மாதம்

## ஆவணம் எண் 4

சூ அ ள உ ய சு ஞூ[24] ஏப்பிரல்மீ ௴ உ ௳மேஸ்தர் சான் சத்திவியர் துரையவர்களுக்குச் சக்காசாயேபு யெழுதிக் கொடுத்த கடன் உடன்படிக்கைச் சீட்டாவது நான் தங்களிடத்தில் கடன் சீட்டை எழுதிக்கொடுத்து வாங்கின ரூ ரு ள பணமும்[25] அதுக்குள்ள வட்டியும் எனக்கு அரண்மனையில் வரவேணடிய சம்பள நிலைவை[26] வந்தவுடனே யாதொரு தடங்கல் சொல்லாமல் தங்கள் கடனுக்குள்ள வட்டியையும், மேலெழுதிய முதல் அஞ்னூறு பொன்னும்[27] றொக்கத்தில் செலுத்திவிப்பேனாகவும்.

இந்தப்படி சம்மதிச்சு கடனுடன்படிக்கைச் சீட்டெழுதிக் கொடுத்தேன்.

## ஆவணம் எண் 5

ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீமகாறாசா சாயேப்பு[28] அவர்கள் திவானத்துக்கு[29] ஜாசுதமால்[30] நிஷபத்தி[31] பிறத்தி அசாமி [32] சாமினாதன் ஷெயான் பாட்டியாகிய சுப்பம்மாள் நாங்களிருவரும் யெழுதிக் கொடுத்த றாசினாமா[33] யென்ன வென்றால் யென்னுடைய சம்பளத்தில் மீ 1க்கு பணம் ௲ வீதம் யென் பாட்டியாகிய ஷெ சுப்பம்மாளுக்கு ஜீவனாம்சம்[34] குடுத்து வந்ததை நாளது மீ சம்பளம் குடுக்கு முன்னுக்கு யெனக்கு நிருவாக[35] மில்லாததினால் ஷெயவருக்கு குறைத்துக் கொடுக்க வேணுமென்கிற அபிப்பிராயத்தைப் பத்தி மாலாரிடத்தில்[36] ஷெயானுக்குக்

---

24. 1824 ஆம் வருஷம்

25. ரூபாய் 500/-

26. நிலைவை - நிலுவை - பாக்கி

27. "பொன்" என்பது ரூபாயைக் குறிக்கும்

28. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜி ஆகலாம்

29. திவானத்துக்கு - முன்னிலைக்கு

30. ஜாசுத மால் - தூதுவர் இருக்குமிடம் (பக்.453)

31. நிஷபத்தி - உதவியாளன்

32. பிரத்தி ஆசாமி - பதில் ஆள்

33. றாசினாமா - இராசி நாமா - உடன்படிக்கைப் பத்திரம்

34. ஜீவனாம்சம் - விதவை முதலியவர்கட்கு உயிர் வாழ்வதற்கென்று கொடுக்கும் பொருள்

35. நிறுவாகம் - கொடுக்கும் சக்தி

36. மாலாரிடத்தில் - மகாலார் இடத்தில் - மகால் அலுவலரிடத்தில்

கொடுக்க வேண்டிய தில்லையென்று சொனனதின் பேரில் மாலார் தடங்கல் செய்திருந்தாள். ஷெ சுப்பம்மாள் யென்பேரில் சர்காரில் பிறாது சொல்லிக்கொண்டபடியாய் காற்பாற் பிசங்கத்து[37] உத்திரவுப்படி நான் கொடுத்து வந்த பணத்துக்கு மேல் மூணு துக்காணி[38] சேர்த்து ரூ.ரு (அரை) யாயி கொடுத்து றாசிசெய்து கொள்ளும்படி உத்திரவு ஆன பிரகாரம் ஷெயாள் ஆயிசு[39] உள்ளவரையில் யென் சம்பளத்தில் அரைரூபாய் கொடுத்துக் கொண்டு வருகிறது. மேல் கண்டபடி யென்பேரனாகிய சாமினாதன் சம்பளத்தில் அரமணையார்[40] (அரை) கொடுத்துக் கொண்டு வருகிறதை நான் வாங்கிக் கொணடு வருவேனாகவும்.

இந்தப்படி சம்மதிச்சு னாங்களிவரும் யெழுதிக் குடுத்த ராசினாமா...... அரிக்காற சாமினாதன். இந்தக் கிறல் ஷெ சுப்பம்மாள் சுபகிறுது ஹூ மார்கழிமீ ட௨ யிதுக்கு சாட்சி ஞ கிருஷ்ணய்யன் அறிவேன். அசலைக்குச் சரியான நகல் யிது யெழுதினது அரிக்காற வெங்கடாசலம்.

## ஆவணம் எண் 6

லண்டன் முத்திரை

ஸ்ரீ வையாபுரி மேஸ்திரியார் அவர்களுக்கு மேஸ்த்தர் ஜேம்ஸ்றோஸ் துரையவர்கள் சலாம். இப்பவும் நாமும் அப்பாவு பிள்ளையும் சரவேந்திர பட்ட... ... ... ... ... ... ... ... ஷெ பட்டணத்து காரியஸ்தர் மரியாதை செய்து நமக்காக வேண்டிய சன்மானங்கள் சேகரஞ் செய்து கொடுத்து கப்பல் முதலான சாமான்களைக் காண்பித்து ஜாக்கிரதை செய்தார். ஷெ கப்பல் ரொம்ப பலமானது. லக்ஷணமுள்ளதுமாயிருக்கிறது மல்லாமல் அதில் யதிகமாய[41] ரிப்பேர் செய்ய[42] வேண்டியதில்லை. சிலவிடங்களில் செம்புத்தான் போயிருக்கிறது. அதுவுமல்லாமல் கலமத்துபண்ணி[43] தார்பூசிக் கொள்ளுகிறதுக்கு உத்தேசம் ரூ. ள-ம்[44] கோழி வெட்டி கடலில் தள்ளுகிறதுக்கு ரூ.ள-ம் ஆக இருநூறு ரூபாய் சிலவு செய்தால் கப்பல் திவாந்திரங்களுக்குப்[45]

---

37. கார்பார் பிரசங்கம் - கார்பார் என்ற அலுவலர் இருக்கும் அலுவலகம்

38. துக்காணி - இரண்டு அல்லது நான்கு தம்படி (pies) கொண்ட செப்பு நாணயம்

39. ஆயிசு - உயிர்

40. அரமணையார் - அரண்மனையார்

41. யதிகமாய் - அதிகமாய்

42. ரிப்பேர் செய்ய - பழுதுபார்க்க

43. கலமத்துபண்ணி - பழுதுபார்த்து

44. ரூ.100/-ம்

45. திவாந்திரங்கள் - தொலைவிலுள்ள தீவுகள்

போகலாம். ஆனால் கப்பலைப் பார்த்ததின் பேரில் நமக்குச் சந்தோஷமா யிருக்கிறது. ஷெ கப்பலுக்கு கப்பிதான்[46] முதலானவர்களுடைய சிலவுகளை அரண்மனையாரவர்கள் கொடுத்துக் கொண்டால் வருஷம் 1க்கு ரூ. ய அரூ[47] கொடுக்கிறோம். அல்லது ஷெ சிலவுகள் நாமே செய்து கொண்டால் வருஷம் 1க்கு ரூ.சுரூ[48] கொடுத்து வருகிறோம். ஆகையால் நமக்கு ஸ்ரீ.ஸ்ரீ ஐயினிசு[49] மகாராசா சாயேப்புயவர்களைக் காணவேணு மென்கிற மனதுமாயிருப்பதால் அந்தப்படிக்கி பேட்டி செய்து வைப்பீர் என்கிறதாக நினைக்கிறோம். நம்முடைய கப்பல் இருபது நேரத்தில்[50] நாகப்பட்டணத்துக்கு வந்து சேரும். இந்தக் காரியத்தில் நீரெடுத்துக் கொண்ட பிரயாசத்துக்காக ரொம்ப நன்றி யறிந்தவராக யிருக்கிறோம். ஸ்ரீ. ஸ்ரீ. அயனிசு மகாராஜா சாயேபு அவர்களுக்கு நம்முடைய பேரால் ரொம்பவுஞ் சலாஞ் சொல்லவும். மத்த காரியங்களெல்லாம் அப்பாவுபிள்ளை யிடத்தில் சொல்லி யிருக்கிறோம். அவர் முகதாவில்[51] பேச சகலகாரியமும் தெரியலாம். ஆகையால் நாம் யவடத்துக்கு[52] சீக்கிரத்தில் வறண்டு கொள்ளும்படி......[53] செய்ய வேண்டியது. வேணும் சலாம்.

ரூ அ ள ௲ ய அ ஷூ[54]
ஜனவரிமீ உ ம ருஉ
இவை தஞ்சாவூரில் வையாபுரி மேஸ்த்திரியாரவர்களுக்குக் கொடுப்பது.

## ஆவணம் எண்: 7

சிந்தா யாத்திரை[55] ரூ அ ள ௲ ய அ-ம் ஷூ[56] சூலை மீ உ யரூ உ.

---

46. கப்பிதான் Captain . கப்பலோட்டி

47. 18 ஆயிரம்

48. 6 ஆயிரம்

49. ஐயினிசு - Highness - என்றது இரண்டாம் சிவாஜியை

50. நேரம் - (?)

51. முகதா - முன்னிலையில்

52. யவடத்துக்கு - அவ்விடத்துக்கு

53. வறண்டு கொள்ளும்படி - வந்து போகுமாறு

54. 1838 ஆம் வருஷம்

55. சிந்தாயாத்திரை - நல்ல பயணம் (?)

56. 1838

விளம்பி ஸு ஆடி மீ ய ௩ உ தஞ்சை நகரம் கோட்டைக்குள் இருக்கும் சரவேந்திர ராசபட்டணம் மத்தியஸ்த்தம்[57] கனக சபையாபிள்ளையவர்களுக்கு நாகப்பட்டணத்திலிருக்கும் மேஸ்தர் சேமிஸ்சுறாஸ்[58] துரை எழுதிக் கொடுத்த கப்பல் பத்தா[59] கூலி ஒடம்படிக்கை[60] யென்னவென்றால், தங்களதாகிய பிரகதிசுபர பரிசாத்து[61]யென்கிற இரண்டு பாய்மரக் கப்பலை நான்பத்தா கூலியாக ஒப்புக்கொண்ட விவரமாவது ஷெ கப்பல் சுய அ(46) கரிசு[62] யேற்றுமதி செய்யப்பட்ட உருவும் அதின் ஒடும் போற தளவாட சாமானும் வருஷம் கஂக்கு (1க்கு) நான் பத்தா கூலி தீத்துக் கொண்டது ரூ சூ சு (6000)க்கு ஷெ கப்பல் பழுது பார்க்கிறதற்காக வருஷம் 1க்கு

ரூ. சுள (400) தள்ளி மத்த ரூ ரு சுள (5600)க்கு நான் ஒப்புக்கொண்டு ஷெ கப்பலை சாலமொன்று அயிலன்[63] யென்கிற திவுக்கும் மற்றும் திவு திவாந்திர முதலான துறைமுகங்களுக்கும் பாயிவிரித்து ஓடித்திரிந்து சிந்தா யாத்திரையா யிந்தக் கரையாகிய சென்னப்பட்டணம் நாகூர் நாகப்பட்டணம் இந்தத் துறைமுகங்கள் ஓடிவந்தபின் அந்தந்த வருஷம் ஆனி மீ த்திக்கி ஜூன்மீ ய எ யயில் (17ந் தேதியில்) மெலெழுதிய பத்தா கூலித்துகையை நான் செலுத்தி வருகிறது. யிந்தப் பிரகாரம் யேழு வருஷத்திற்கு ஷெ கப்பலை நான் பத்தா கூலியாகத் தங்களிடத்தில் ஒப்புக் கொண்டிருப்பதால் அந்தந்த வருஷத்தில் மேலெழுதியபடி பத்தா கூலித் துகையைச் செலுத்தி வருகிறது. ஷெ கப்பலுக்கு சூ உ ள (1200) ரூபாய்க்கு மேல் அதிக பழுதுகள் பழுதுபார்த்து சிலவு செய்தால் அந்தந்த யிடத்தில்யிருக்கப்பட்ட வர்த்தகாள் கையெழுத்தாவது, உத்தியோகஸ்தாள் கையெழுத்தாவது கணக்கில் வைத்து, அதில் என் கையெழுத்தும் வைத்து நான் குடுக்கிற கணக்குப் பிரகாரம் தங்கள் தங்கள் பத்தா கூலியில் யெனக்குத் தள்ளிக் கொடுக்கிறது ஷெ கப்பலுக்கு உருப்பாசு[64] சென்னப்பட்டண கவுர்ண்மெண்டாறிடத்தில் பெற்று வருகிற பாசை நான் உரு[65]வில் வைத்துக் கொண்டுஅதற்கு நகல் தங்களுக்கு நான் கொடுக்கிறது.

---

57. மத்தியஸ்த்தம் - ஒரலுவலர்

58. சேமிஸ்றாஸ் - James Rose

59. பத்தா - மக்தா - வரி

60. ஒடம்படிக்கை - உடன்படிக்கை

61. பரிசாத்து - பிரசாத்

62. கரிசு - கரிசை - 400 மரக்கால் அளவு; 48 படி கொண்ட மூட்டை 64 கொண்டது

63. சாலமொன்று அயிலன் - Solomon Island சாலமன் தீவு

64. உருப்பாசு - அனுமதிச்சீட்டு

65. உரு (?)

ஷெ பாசு சிலவு நானே யேற்றுக் கொள்ளுகிறது. ஷெ கப்பலில் வருகிற சாமானில் தங்களுக்குத் தேவையாயிருந்தால் அதுகள் தங்களுக்குக் கொடுத்து. அதின் கிறையம்[66] பத்தாகூலியில் தள்ளிக் கொண்டு அதிகம் பிறிதி நான் தங்களிடத்தில் பெற்றுக் கொள்ளுகிறது.

ஷெ கப்பலை நான் பத்தாகூலிக்கு ஒப்புக்கொண்டு யென்புறமாயி ஒடித்திரியறதில் றாசிகம்[67] தெய்வீகம்[68] நேரிட்டால் அது தங்கள் புறமேயல்லாமல் யெனக்குச் சம்பந்தம் யில்லை. மேலெழுதிய கெடுயேழு வருஷம் சென்ற உடனே ஒடும்போற தளவாட சாமானுடனே உரு ஒப்பிப்பேனாகவும் இந்தப்படி சம்மதிச்சு கனகசபையா பிள்ளையவர்களுக்கு மேஸ்தர் சேமிஸ்சுறாஸ் துரை கப்பல் பத்தா கூலி உடன்படிக்கை யெழுதிக் கொடுத்தேன்.

(ஒப்பம்) *James Rose*

இதற்காறியும் சாக்ஷி (சாட்சி)
நாகப்பட்டணத்திலிருக்கும் ஆடாத்து செயிலாமு சாயபு அறிவேன்
நாகப்பட்டணத்தி விருக்கும் முத்தையஞ் செட்டியார் அறிவேன்.
நாகப்பட்டணம் நாராயணப்பிள்ளை அறிவேன்.
திருவேங்கிடம் நெட்டெழுத்து.[69]

(இவ்வாவணத்தின் பின் பக்கம்)

(நம்பர்–க)

௲அ௱௩௰அ (1838)[70] ஷூ சுலாயி[71] மீ உ௰ சூஉ நாகப்பட்டணம் அசூர் கச்சேரியில்[72] நாகப்பட்டணத்திலிருக்கும் மேஸ்தர் ஜேமிசுறாசு துரையவர்கள் தஞ்சை நகரம் கோட்டைக்குள்ளிருக்கும் சரவேந்திறறாச பட்டணம் மத்திஸ்த்தம் கனகசபையா பிள்ளையவர்களுடைய பிரதி சுபற[73] பிரசாதென்கிற கப்பலை வருஷம் க-க்கு (1க்கு) ரூ

66. கிரயம் - விலை

67. றாசிகம் - இராசிகம் - அரசனால் வருவது

68. தெய்வீகம் - தெய்வத்தால் வருவது

69. நெட்டெழுத்து - பெயர் முழுவதும் அடங்கிய கையெழுத்து

70. 1838 ஆம் வருஷம்

71. சுலாயி - (July) ஜூலை மாதம் 26 ஆம் தேதி

72. அசூர்கச்சேரி - அரசாங்க அலுவலகம்

73. பிரதிசுபற - பிரகதீசுவர

ரூஞ கூள (5600)வீதம் பத்தாக் கூவிக்கி யேழு வருஷத்துக்கு ஒப்புக்கொண்டதற்காக உடன்படிக்கை யெழுதிக் குடுக்க வேண்டியதுக்காக ஷெ மிஸ்தர் சேமிசுறாச துரையவர்கள் காரியம் ... ... ... ... வெங்கிட்டறாவு வசம் விறகப்பட்டது.

(ஒப்பம்) குலாம் தஸ்த்தகிர்

தா ... ... ... ... ஷாயபு

## ஆவணம் எண் 8

ரா. ரா. துரை[74] யவர்கள் சமூகத்துக்குச் சேது பாவா சத்திரம் பங்களா நேமணக்கு[75] சேவகன் கோவிந்தப்ப நாயக்கன் மிகுந்த வணக்கத்துடனே சலாம் செய்து யெழுதிக் கொண்டது யென்னவென்றால்-

யெனக்குச் சமூகத்தில் வுத்திரவு கொடுத்த பிரகாரம் நான் உத்திரவு பெற்றுக் கொண்டு திருச்சிதம்பரத்தில் வரவேண்டிய பணத்துக்காக சாளவ நாய்க்கன் பட்டணம் வுமறசாவிடத்தில் காயிதம் கொண்டு வந்து கொடுத்து, வுமறசாய்ப்பும், ராமசாமி நான் யிந்த மூணு பேருமாய் பாப்பானிடத்தில் காகிதம் கொடுத்து,பணம் கேட்டதற்கு ஷெ பாப்பான்[76] சொல்லுகிறது. குடுத்துயிருக்கப்பட்ட தானியங்களுக்குத் தானிய விபரங்கண்டு யின்ன யின்ன விலையென்று விபரமாய்க் கணக்கும் கோளி[77] யாடு பணம் ரூ (ம) யிதுவெல்லாம் கண்டு விவரமாய்க் கணக்கு வந்தால் தன் கணக்கும் ஒத்துப் பார்த்துக் கொண்டு பாக்கிப் பணம் கையில் குடுத்து விடுகிறேனென்று சொல்லுகிறான். ஆகையால் அவனை பணம் கேட்கப்படவில்லை. அதற்காக ஆவடை[78] வசமாயி விபரமாயி கணக்கு வந்தால் கண்டித்து வாங்கிப் போடுகிறேன். கார்பாரியிடத்தில் நானும் வுமற்சாயபு ரெண்டுபேரும் போய்க் கப்பல் தண்ணி கொண்டுபோயி நிற்குதேயென்று கேட்ட காரியத்துக்கு நீ கப்பலண்டை வரக்கூடாதென்று சொல்லுகிறார்.

அரண்மனையில் போகப்பட்ட சாமானுக்கு நீ பாத்தியப்படுகிறோமென்று சொன்னால் நீ அந்த இடத்துக்குப் போகலாமென்று சொல்லுகிறார். கொல்லுப் பட்டரைபோட்டிருந்த கொட்டகை விழுந்து போயிருப்பதினாலே அந்தக் கொட்டகையைப் பிரித்துக்

74. துரை - ஜேம்ஸ் ராஸ்

75. நேமணக்கு - நியமனம் செய்யப்பட்ட

76. பாப்பான் - பார்ப்பனன் (பெயர் தெரியவில்லை)

77. கோளி - கோழி

78. ஆவடை - ஒருவர் பெயர் போலும்

கட்டுகிறோமென்று சொன்னயிடத்தில் நீ கட்ட வேண்டியதில்லை நான் ஆள் விட்டுக் கட்டிக் கொள்ளுகிறெனென்று சொல்லுகிறார். கப்பலும் தண்ணி கொண்டு போயிருக்குது. அந்தத் தண்ணியை இரைக்கிறோமென்று சொன்னதற்கு நீ யெறைக்கக் கூடாதென்றும், வுமற் சாயப்புக்கு வுத்திரவு பண்ணி யிருக்கிறார். இதையல்லாமல் கப்பல் சாமான் நாற்காலி- க மேசெ-க ஒத்தை பூட்டு-க இந்தச் சாமானைத் தோட்டக்கார பரிமணம் வசம் குடுத்துவிடச் சொல்லி சுப்பிரமணியபிள்ளை காகிதம் யெழுதி யிருக்கிறார். நான் துரையவர்களுடைய வுத்திரவு-வந்தால் குடுப்பேனென்று பரிமணத்துக்குச் சொல்லி இருக்கிறேன். சமூகத்தில் உத்திரவானபடி நான் ஒருவருக்கும் குடுக்கவில்லை. யிப்பவும் சமூகத்தில் உத்திரவு எப்படி வருகுதோ அப்படி நடந்து கொள்கிறேன். இப்பவும் உத்திரவுப்படி ஆவடை வசமாயி காகிதம் யெழுதி யனுப்பி வைத்திருக்கிறேன். எப்படி வுத்திரவு வருகுதோ அப்படி நடந்து கொள்கிறேன். இப்பவு மெனக்கும் ஆவடைக்கும் சாப்பாட்டுக் கில்லாததினாலே ரெண்டு மாச சம்பளம் ஆவடை வசமாயனுப்பி விக்கும் படியாயி சமூகத்தில் வுத்திரவாக வேண்டியது. வேணும் சலாம்.

ஒப்பம் இந்தக் கிறல் பங்களா நேமணக்கு
கோவிந்தப்ப நாய்க்கன்

௲அ௱௩௰௯ கூஸ்[79]
நவம்பர் மீ௨௧௨

உண்மை நகல்

James Rose(ஒப்பம்)

## ஆவணம் எண்: 9

நாகப்பட்டினம், செப். 2, 1841.

ஐயா,

போன மீ ௨௧௨ போடப்பட்ட தங்களுடைய கடுதாசியை வரப்பத்திக்கொண்டோம். அதில் தாங்களெழுதிய அவையடக்கங்களினால் நமது இங்கிலிசுக் கடிதங்தள் தங்களுக்குச் சரியான பாகமாகவில்லை[80] யென்று அறிந்து மிகுந்த விசனப்பட்டு, நான் தமிழ் அறியாதிருந்தும் யெப்படியாகிலும் நமது நியாயங்கள் தங்களுக்கு நன்றாய்த் தெரியும் படியாய் இந்தக் கடுதாசியைத் தமிழில் தானே தங்களுக்கு எழுதுகிற வருத்தத்தை எடுத்துக் கொண்டோம்.

நாம் பத்தா கூலிக்கு ஷெ அரண்மணையாரிடத்தில் ஒப்புக்கொண்ட கப்பலுக்கு பழுதுபார்த்த சிலவு அரண்மனையார் திரும்பக் கொடுக்கிறதற்கு நமக்குண்டாயிருக்கிற நியாயங்களை

79. 1839

80. பாகமாகவில்லை - விளங்கவில்லை

அவ்விடத்து மனிதர்களுடைய கேள்விக்குச் செவி (சாய்க்கா)மல் நியாயமாய் ஆராய்ந்து பார்த்திர்களானால் ஒழுங்குப்படிக்கு அது நமக்கு(க் கொடு)க்க வேண்டுமென்று தாங்கள் நியாயஞ் செய்வீர்களென்பதற்கு நாம் எள்ளள வேணுஞ் சந்தேகப்படவில்லை.
தாங்கள் நமக்கு எழுதின கடுதாசிகளில் நாம் மாத்திரம் ஷெ அரண்மனைக்கு உடன்படிக்கை எழுதிக்கொடுத்திருக்கிறோம் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... உத்திரவும் பெற்றுக் கொள்ளவில்லையென்று சொல்லிவந்திர்கள் சரிதான். அரண்மனையாருக்கு முந்த[81] உடன்படிக்கை நாம் யெழுதிக் கொடுக்க வேண்டியது. அப்பால் அவர்கள் நமக்கு எழுதிக் கொடுக்க வேண்டிய நியாயமாயிருக்கிறது[82]

இது இப்படியிருக்க வையாபுரி மேஸ்த்திரி நமக்கு எழுதின கடுதாசியில் ... ... ...ஷெ அரண்மனையார் பின்னாக நமக்குக் கவுலாத[83] யெழுதி யனுப்புகிற தாய் யெழுதினபடியாய் அதை நம்பி நாம் வேலையைத் தொடங்கினோம். ஆனால் அரண்மனையார் கவுலாத கொடுக்கவில்லை. கொடா விட்டாலும் அரண்மனையார் கொடுக்கிறோமென்று அரண்மனை உத்தியோகஸ்த்தர் மூலியமாய் நமக்குக் கடுதாசி யெழுதினதை நாம் நம்பி ஒப்புக்கொள்ள வேண்டியதாயில்லையா ... ... ... .. இது சங்கதி தங்களுக்குத் தெரிந்தபடியாய் வையாபுரி மேஸ்திரி நமக்கு எழுதிய கடுதாசிக்குச் சரியான நகல் தங்கள் பார்வைக்கு இத்துடன் மறுபடியும் உள்ளடக்கம் பண்ணி அனுப்பி யிருக்கிறோம். மேலும் நான் கப்பலை முந்த பழுதுபார்த்து வெளியே விட்டபிறகு தண்ணீர் கொண்டதினால் மறுபடியுங் கரைக்குக் கொண்டு வந்து பின்பு வையாபுரி மேஸ்த்திரிக்குக் கப்பலுக்கு அதிகமான பழுதிருக்கிறதென்று பழுதுபார்க்கப் படுவதற்கு ரூ. ந. து.[84] சொச்சஞ் செல்லுமென்றும் அது அரண்மனையார் தானே கொடுக்க வேண்டுமென்றும் ஷெ யாருக்கு உடனே நான் கடுதாசி யெழுதித் தெரியப்படுத்தச் சொன்னதற்கு ஷெயார் நமக்கெழுதி ... ... ... ... ... ...ல் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் நம்மை சமூகத்தில் வரச்செய்து ஒன்று நாம் புறப்பட்டாலும் வேலை நிறுத்தாமல் நடக்கும்படியாய் உத்திரவானதாயும் யெழுதினார். இந்தக் கடுதாசியை வரப்படுத்திக் கொண்டவுடன் அப்பாவு பிள்ளை யென்பவரிடத்திலிருந்து நமக்கு வந்த கடுதாசியில் ஷெ மகாராஜா சாயேபு[85] அவர்கள் நம்மை அழைப்பிக்கும்படி உத்திரவானதா யெழுதி இந்த யிவர்களுட இரண்டு கடுதாசிகளுக்குஞ் சரியான நகல் பண்ணி இத்துடன் மறுபடியும் உள்ளடக்கம் பண்ணி அனுப்பியிருக்கிறோம். ஷெ யார்களுடைய கடுதாசிகள்

81. முந்த - முந்தி - முன்னதாக

82. 6-11 ,14 பார்க்க

83. கவுலாத் - கவுல் - உடன்படிக்கை

84. ரூ.3000/-

85. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

நமக்குப் போதுமான தஸ்தவேஜியல்லவோ[86]; நியாயத்தலத்தில் இதுகள் யேத்துக் கொள்ளப்படத்தக்கதல்ல வென்று நியாயக்காரர் சொல்லுவார்களாக.

ஷெி மகாராஜா சாயேபு அவர்கள் நாம் வரும்படி உத்திரவனுப்பினவுடனே வேலைகள் சருவ ஜாக்கிரதையாய் நடக்கும்படித் திட்டஞ் செய்து போட .....உடனே புறப்பட்டு வந்து ஷெி மகாராஜாசாயேபு அவர்கள் பேட்டியும் முந்தின விசைகண்டு மறுநாள் நாம்வந்த காரியத்தைக் குறித்துப பேச யிருக்கையில் ஷெி மகாராஜா சாயேபு அவர்களுக்குச் சாவகாச[87] மில்லாமல் வேறே முக்கியமான காரியம் விருக்கிறதாயும் நாம் மறுபடியுஞ் சாமி நாயக்கன் பட்டணத்துக்குத் திரும்பிப்போய் கப்பல் வேலை கூடிய சீக்கிரத்தில் முடியும்படியாய் ஜாக்கிரதை செய்கிற(து என்றும்) இருபது நாளைக்குள்ளாக கவுலாத்தும் பணமும் அனுப்புவிக்கிறதாய் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் சொன்னாதாக வையாபுரி மேஸ்திரி சொன்னார். அப்படி ... ... ... ... ... அழைப்பிவித்து, வர்த்தகாளிடத்தில் கடனாகப் பணங்களும் வாங்கி வேலை து.......பாய் நடப்புவித்துக் கொண்டு பணத்துக்காகவும் கவுலாத்துக்காகவும் இரண்டு மாதங்காத்திருந்தும் வராமலிருந்த பொழுது யிந்த இரண்டு மாதத்திற்கு மத்தியில் கவுலாத்து அனுப்பும் படியாய்த் தெரியப்படுத்தும்படி வையாபுரி மேஸ்திரிக்குக் காகிதமெழுதி யனுப்பியுங்கடிதம் வராமலிருந்தது. இப்படி யிருக்கும் பொழுது நான் கப்பல் வேலையைக் கண்காணிக்கும்படியாய் தண்ணீரில் நிற்க அடிக்கடி உபாத்தியப்பட்டதில்[88] நமக்கு திரேக[89] அசவுகரியமுண்டானதினால் சவுக்கியத்துக்காக துளசா பட்டணம் போகத் திர்மானித்துக் கொண்டு நாம் ஊரைவிட்டுப் புறப்படுகிறதற்கு முதல் நாளாகிய ௲ அ ள ௩ ௰ ௵[90] மார்ச்சுமீ ௬௳ ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்களுக்குத் தெரியபடுத்தும்படியாய் வையாபுரி மேஸ்த்திரிக்குக் காகிதமெழுதி அந்தக் காகிதத்துக்குள் சென்னைப் பட்டணம் யேசன்று[91] (Agent) துரை நமக்கு அனுப்புவித்த கடுதாசியையும் அடக்கம்பண்ணி, அனுப்பிப்போட்டு, பின்பு கப்பல் வேலை நடக்கிறதற்குக் குலாப்க்கான் சுப்பர் கார்கோ மத்த காரியக்காரரையும் நியமித்து வேலை ஜரூராய் நடக்கும்படியாய் உத்திரவு கொடுத்துப் புறப்பட்டோம். காரியங்கள் இவ்விதமாய் இருக்கும்பொழுது நாம் யாதொரு செய்தியும் ஸ்ரீ அரண்மனையாருக்குத் தெரியப்படுத்த வில்லையென்று சொல்லுகிறது. நியாயக்காரர்களால் அங்கிகரிக்கப்படுமா? ௲ அ ள ௩ ௰ ௯ ௵[92] செப்டம்பர்

86. தஸ்தாவேஜி - ஆவணம் (Record)

87. சாவகாசம் - நேரம்

88. பாத்தியப்பட்டதில் - பங்குகொண்டதால்

89. திரேகம் - தேகம் - உடம்பு

90. 1830 ஆம் வருஷம் (ஆண்டு தவறு.1839 ஆகலாம்)

91. யேசன்று - Agent

92. 1839 ஆம் வருஷம்

மீ வரைக்கும் நாங் கவுலாத்துக்காகக் காத்திருந்தும் வராமல் போனதினாலே கப்பல் வேலையை நிறுத்தி அடுத்த நவம்பர் மீ ரெசிடெண்ட்[93] காப்டன் கலிசு துரையிடத்தில் வந்து அவரைக்கொண்டு ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்களிடத்திலிருந்து கவுலாத்து அழைப்பிவித்துக் கொடுக்கும் படியாய்க் கேட்டுக் கொண்டோம். அவர்கள் அப்படியே ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்களுக்கு எழுதி யனுப்பினார்கள். அதற்கு ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் உடனே பதில் பிரத்தியுத்தார[94]மெழுதி நமக்குச் சொல்லச் சொன்ன தென்னவென்றால் கப்பலை ஒப்புக்கொண்ட துரை கப்பல் விஷயத்தில் மிகுந்த சிரமத்தை அடைந்தார்களென்பதை நாங்களறிந்திருக்கிறதாயும் நாளையதினம் நம்முடகேட்டுக் கொள்ளுதவின்படியே (கவு) லாத் மாத்திரமல்ல. பணமும் அனுப்புகிறதா யெழுதி யனுப்பினார்கள். அனுப்பப்பட்ட இந்தக் கடுதாசியை காப்டன் டக்லிசு துரை நமக்குக் கா(ட்டினால்) (நாம் மறுநாள்) .................(துரையவ)ர்களுக்கு அன்று தினத்தில் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்களிடத்திலிருந்து வந்த கடுதாசியில் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் நாம் அந்தக் கப்பலை விட்டுவிடவும். உடன்படிக்கையைத் தள்ளிப் போடவும் கப்பல் தளவாடங்களை நாமே யெடுத்துக் கொள்ளவுங் கப்பலை வேலை துவங்கினது முதல் யிதுவரையில் அது விஷயத்தில் சிலவிட்ட சிலவைக கணக்கிட்டு இவ்வளவுயென்று துகை சொன்னால் அதைக் கொடுத்து விடுகிறோமென்று நம்மைக் கேட்டுக் கொள்ளுகிறதாய் ஷை காப்டன் டக்லிசு துரை நமக்கறிவித்தார். ஆனால் யிந்தக் கப்பலை நாம் ஒப்புக்கொண்டயிந்தப் பதினேழுமாத காலத்தில் நமக்கு யாதொரு குதாவடைகள்[95]நேரிடாமல் திவுக்குச் சபர்[96] போயிருக்குமாகில் மூன்று நாள் விசைக்கதிகமாய் ஒட்டியிருக்கலாம். ஒவ்வொரு சபரில் சிலலெட்ச ரூபாய்கள் சம்பாதித்திருக்கலாம் என்கிறதைக் குறித்து நாம் விசனப்பட்டாலும் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்களுட விருப்பப்படி செய்வோமென்று தீர்மானித்து காப்டன் டக்லிசு துரைக்கு இப்படியாகட்டுமென்று சம்மதித்துக் கப்பல் கப்பித்தான் சிராங்கு மத்த காரியஸ்தர் யாவரையுந்தள்ளிப்போட்டு, வேலையையும் நிறுத்தி நம்முட கார்க்கானா[97] வையு மெடுத்துப் போட்டு, நம்முட சாமான் தளவாடங்கள் வைத்திருந்த கொட்டடியை[98]இதுகளோடே பூட்டி முத்திரை வைத்து நின்ற சிலவுக் கணக்குப்

---

93. இந்தக் காலகட்டத்தில் ரெஸிடெண்டாக இருந்தவர் கிண்டர்சிலி என்பவர் ஆவர் (கலிசு-டக்லிசு 6-36, 37)

94. பிரத்தியுத்தாரம் - பதில்

95. குதாவடை - தடை (Dislocation)

96. சபர் - கப்பல் பயணம்

97. கார்கானா - தொழில் செய்யுமிடம்

98. கொட்டடி - கொட்டகை

பார்த்ததிலான துகை ரூ. ௰௪௲௰௪[99] அணா ௧ ௪ செம்புத்தகடுவித்ததில் கூடுதலான ரூ ௪௱௯௰௩[100] அணா ௧ தள்ளி (பாக்கி) ரூ. ௰௩௲௫௱௨௰௧[101] அணா ௫ ௵ கணக்குத் கொடுத்தோம். இது சங்கதிகள் யாவற்றுக்கும் போதுமான தஸ்தாவேஜிகளும் நடந்த காரியங்களும் வெளியரங்க[102] -மாயிருக்கக் கொள்ள நமது இஷ்டப் பிரகாரங் கணக்குசோடித்து[103] அனுப்பினதாகச் சொல்லுகிறது நியாயமா யிருக்குமா? நாம் இப்படி செய்கிறதற்கு நம்மை ஒரு சின்ன மனிதராகத் தங்கள் புத்தியில் நினைக்கிறீர்களா? நம்மைக் குறித்து இப்படிச் சொல்லுகிறது தங்களுக்கு ரொம்பவும் தூரமா யிருக்கட்டும். இது நமக்கு அளவற்ற விசனத்தை உண்டாக்கிற்றென்று துக்கத்தோடு சொல்லுகிறோம்.

மேலுந் தாங்கள் ஆக்ட்டிங் ரெசிடெண்டென்று[104] மேஸ்தர் பேலிதுரை யவர்களுக்கு யெழுதின கடுதாசியில் ௲அ௱௩௰அ ௵[105] ஜனவரி ௴ கப்பலைப் பார்க்கிறது. இத்தனைக்கு அதிகப் பழுதில்லையென்று சொல்லி அப்பால் அதிகப் பழுதா யிருக்கிறதென்று சொன்னதாயு மெழுதினீர்கள்.

நான் கப்பலில் யாதொன்றையும் பிடுங்கிப் பாராமல் அந்த உருவு[106] யிருந்தபடியே மாத்திரம் பார்வையிட்டுச் சொன்னதொழிய மற்றபடி... ... ... ... ... ... ... ... ... யென்றால் மத்த கப்பலின் உள்புறத்தில் அடைத்திருக்கிற பூதாரிப்[107] பல்கைகள் ஒருசாண் இடைவழி விட்டுப் பலகை தைத்திருக்கும், ஆனால் இதுவோ யேகத்துக்கும்[108] ஒரே அடைப்பாய் பூதாரிப் பலகை போட்டிருந்த படியினாலே பலகையை யெடுத்துப் பார்த்தா லொழிய சரியாய்ச் சொல்லக் கூடாது. அப்படியும் நாம் அங்கங்கே பூதாரிப் பலகைகளை உடைத்துப் பார்த்திருப்போம். அவ்விடத்திலிருந்து அந்தக் கப்பலைச் செய்தவர்களும் அதைப் பார்த்தவர்களுமான மனிதர் அது அத்தனைக்குப் பழசு அல்லவென்று சொன்னதினாலும் நாமும் அதை உடைத்துப் பார்க்கிறது அத்தனை அவகாசம் இல்லையென்று யெண்ணி அப்படிக்குச் சொன்னோம்.

---

99. பதினான்காயிரத்துப் பதினான்கு (ரூ.14014)

100. ரூ.493/-

101 ரூ.13521/-

102. வெளியாங்கம் - பகிரங்கம் - வெளிப்படையாக

103. சோடித்து - உண்டாக்கி

104. Acting Resident

105. 1838 ஆம் வருஷம்

106. உருவு - உருவம்

107. பூதாரி - வாகை; ஆல்

108. ஏகத்துக்கும் - முழுமைக்கும்

பழுது பார்க்க வேண்டியதுகளா யிருந்ததுகளைப் பழுதுபார்த்து நான் கப்பலைத் தண்ணீரில் விட்டபோது கப்பல் தண்ணீர் கொண்டது. அப்பொழுது தான் அது முற்றிலும் பழுதென்று அறிந்து அந்தப் பழுதைப் பரிசோதிக்கும்படியாய் வெளியே கொண்டு வந்து பூதாரிப் பலகைகளை உடைத்துப் பார்க்கும்பொழுது பலகைகளும், பங்கு கால்களும் மக்கியும் மடித்தும்[109] போயிருந்தது என்னத்தினாலென்றால் கப்பல் வெளியே யிருந்த காலத்தில் கொட்டாகை மேலே போட்டு பதனப்படுத்தாமல்[110] மழையிலுங் கிடந்தபடியினாலே மேலேயிருக்கிற ரூரல்[111] வழியாய் மழையினால் தண்ணீர் கொண்டு பலகைகளும், பங்குக் கால்களும் மடித்ததென்று அறிந்தேன். அப்பொழுதே அரண்மனையார்............(சாஸ்)திரி பார்க்கும் படிக்குச் சிலதை அனுப்புவித்தேன். இது மிகுந்த பழுதா யிருக்கிறதை அறிந்து முழுதுஞ் செவ்வைப்படுத்தாமல் விட்டு விட்டால் ஸ்ரீ அரண்மனையாருக்கு நாம் பத்தா கூலிக்கு வருஷம் ஒன்றுக்கு ஒப்புக்கொண்ட ரூ. சுரு[112] படிக்கு அதுவரையில் சென்ற பதினேழு மாதத்துக்கு மாத்திரமல்ல. நாம் உடன்படிக்கையில் ஒப்புக்கொண்ட யேழு வருஷத்துக்குங் கணக்காயுள்ள அனேகமாயிர ரூபாய்கள் கொடுக்கப் பாத்தியப்பட வேண்டுமே இதற்காகவே நாம் அதை வேலை செய்யாமல் விட்டு விடாமல் உடனே காரியமிப்படி யிருக்கிறதென்று தெரியப்படுத்தினோம். மேலும் உடன்படிக்கையில் ரூ சூஉ[113]க்கு மேற்படச் சொல்லுகிற துகை அரண்மனையார்தானே செய்து கொடுக்கிறதென்று கண்டிருக்க அப்படிக்கும் நாம் அரண்மனையாரைக் கேளாமல் அதை நாம் ஒப்புக்கொண்டபடியால் அதுகளைச் சீக்கிரம் பழுது பார்த்துகப்பல் ஓடச் செய்கிறது நமது பொறுப்பென்றும், அது ஓடவில்லையானால் அரண்மனை யாருக்கல்ல; நமக்கு பெரிய நஷ்டமென்று நாம் அறிந்தபடியால் ஒருவேளை பணம் கொடுக்கிறதற்கு ஸ்ரீ அரண்மனையார் யோசித்தால் சீக்கிரம் பழுது பார்க்கச் செய்து அப்பால் ஞாயப்படி பேசிக் கொள்ளலாமென்று தீர்மானித்து அரண்மனையாரைப் பணமல்ல; கவுலாத்துக்காக மாத்திரங் கேட்டு துடருமிடத்.......................................................அரண்மனை யார் தானே கவுலாத்தும் அத்துடனே பணமுங் கொடுக்கிறதாய்ச் சொன்னார்கள். அப்பொழுது அரண்மனையார் நியாயஸ்தலத்தாரானபடியால், ..................வேண்டியது தங்கள் கடமையென்று நினைத்து உடன்படிக்கைப்படி போகிறார்களென்று அறிந்து, கவுலாத்துக்காகவும், பணத்துக்காகவும் காத்திருக்கும் பொழுது கவுலாத்தும் அத்துடன் பணமுங் கொடுக்கிறோமென்று சொன்ன ஸ்ரீ அரண்மனையார்.................அப்பால் கப்பல் பத்தா கூலிக்கு விட மனதில்லையென்றும், அதற்காகச் செய்கிற சிலவுகளையும் அதின்

---

109. மக்கியும்மடித்தும் - கெட்டும் அழிந்தும்

110. பதனப்படுத்தாமல் - பாதுகாக்காமல்

111. ரூரல் - உடைப்பு (?)

112. ரூபாய் ஆறாயிரம்

113. ரூ.1200/-

தளவாடங்களையும் கொடுத்து விடுகிறதென்றுஞ் சொன்னார்.........நாம் ஒருவிசை பத்தாகூவிக்கு யேழு வருஷத்துக்கென்று ஒப்புக்கொண்ட..................ததியில் அரண்மனையார் மனது பிரகாரம் விடுகிறதற்கு நமக்கு ஒருபோதும் ஞாய................திருந்தும் அரண்மனையார் மனதுப்படி போகிறது நன்மையென்று நாம் நல..........கையால் நினைத்து அவர்கள் மனதுப்படி செய்யச் சம்மதித்தும் நாம் அதற்க(ாகப்ப)ட்ட சரீரபிறையாசங்கள் யாவற்றுக்கும் அரண்மனையார் நிமித்தம் வீணாய்ப்போ யிருக்க நாம் நமது சொந்தத்திலுங் கடன் வாங்கியுஞ் சிலவிட்ட சிலவு பணத்தை அரண்மனையார் சரிவரக் கொடாமலிருப்பது மிகுந்த அநியாயமென்கிற (விஷயம்) அரண்மனையாருக்கும் மற்ற நியாயக்காரருக்குந் தெரியாததல்ல. மேலும் நாங்கப்ப......விட்ட சிலவு ரூ. ௰ ௩ ந [114] சொச்சமென்று கணக்கிட...............கப்பலில்தானே சிலவின் வகை தாங்களெண் ணிக்கொண்டதாய்த் தங்களுட..................லத் தெரிய வருகிறது................பல்ல நாம் இந்தக் கப்ப.............ப்புக் கொள்ள. ......ம்பி................ ............................... ..................................சிராங்கு மற்றுங் கப்பல் வேலைக்க...இதன்றி கப்பல் வேலை (செய்த)தற்கு வைக்கப்பட்டிருந்த ரையிட்டர்[115] கணக்கப்பிள்ளை வேலையாட்கள் மாட்டுவண்டிக்காரர் படச்சிலவு நம்முட குதிரைச் சவாரி பல்லக்குச் சவாரி ஒவ்வொரு சிலவையும், கணக்கிட்டு யேகத்துகை[116] போட்டிருக்கிறதை அறி....இவ்வளவு நியாயமாய்ச் சென்றது யென்கிறதை நம்புகிறதில் தாங்கள் அனுப........ யிராமவிருக்கிறதல்ல உடன்படிக்கைக்கு விரோதமாய்க் கப்பலை நீங்கள் யெடுத்துக் கொள்ளும்போது இந்தச் சிலவுகளெல்லாம் நீங்கள் கொடுக்க வேண்டியிருக்க...........................அநியாயமென்று சொல்லாமா இந்தச் சிலவுகளுக்கெல்லாம் விவரமான கணக்குக் கொடுத்திருக்கிறோம்.

மேலும் செப்புத்தகடுகளை நாம் ரூ. ௪௱ ௯௰ ௩ [117] க்கு வித்து யெடுத்துக் கொண்டதாயும் அந்தத் தகடுகளும் ஈயக்குண்டுகள் மற்ற சாமான்களும், ரூ. ௩ ௲ [118] பெறுமானதுகளாய் தங்கள் காரியஸ்தன் சொல்லுகிறதா யெழுதினீர்கள். நல்லது. அந்தச் செப்புத்தகடுகள் புதிதாய்ச் செய்யப்பட்ட பொழுது இவ்வளவு துகை பெறுமானதா யிருந்ததென்று வைத்துக் கொள்ளுவோம். ஆனால் ஷெ கப்பல் செய்து, பழசாய்ப் போனபோது, அந்தச் செப்புத் தகடுகள் செய்த பணத்துகைக்குச் சரி(யா)யிருக்குமா. அதுகளை நாம் வித்து யெடுத்துக் கொண்டதாய்ச் சொல்லுகிறதை ஒப்புக்கொள்ளப் படத் தக்கதல்ல ரூ. ௨ ௲ [119] பெறுமான

114. ரூ.13000/-

115. ரையிட்டர் - (Writer)எழுத்தர்

116. யேகத்துகை - அதிகத்தொகை

117. ரூ. 493/-

118. ரூ.3,000/-

119. ரூ.2000/-

செப்புத் தகடு பலமுள்ளதாய் செய்யப்படுகிறதற்கு அது அச்சாரங்[120] கொடுக்கட் பட்டிருக்கிறதே தவிர வேறல்ல. இந்தப்பணத்தைக் கேட்குமிடத்தில் அவன் ஒப்பந்தப்படிக்கு ...ஒப்புக்கொண்டாலொழிய அச்சாரங் கொடுத்தது கொடுக்க முடியாதென்று.... வியாட்சியஞ்[121] செய்கிறான். இது நமக்கு யெவ்வளவு பெரிய நஷ்டம் கணக்கில் தாக்கல் பண்ணாமல் தள்ள வேண்டியிருக்க அதையும் ஒப்புக்கொண்டோம். ஈயக்குண்டுகளும் இப்படி மலவாதி[122] யிடத்து வைக்க .... இ....கூடு செய்ய அச்சாரங் கொடுத்திருக்கிறது.

சாலவனாயக்கன் பட்டணம் காரியஸ்தர் நான் கப்பல் விஷயத்தில் மெய்க்காடு[123] கூலிக்கு சிலவிட்டது ரூ. ௩௱[124] சொச்சமென்று சொல்லுகிறதாய் யெழுதினீர்கள். மகடூல் இராமசாமி கார்பாரி முன்னுக்கு அவர்பார்வையிட்டு, தானே கோழி வெட்டுக்காறருக்கு மாத்திரம் ரூ. ௩௱ சிலவானங்[125] கொடுத்திருக்க இப்பொழுதெழுதின காரியஸ்தன் சொன்னது எத்தனைப் பெரிய பிறட்டு[126] யென்றும், மேலும் இந்த ஒரு காரியத்திற்கு யிவ்வளவு கொடுத்தது நிசமானால் மத்த தொழிலாளிகளுடைய கூலிகளெவ்வளவென்று பார்த்துக் கொள்ளுங்கள். அன்றியும் பலகை முதலான சாமான்கள் செய்கிறதற்கு அச்சாரங் கொடுத்தது மாத்திரம் யேறக் குறைய ரூ. ௲[127] சிலவானமாகயிருக்கிறதற்குக் கணக்கினாலும், வேலை ஒப்புக்கொண்ட தொழிலாளிக ளொவ்வொருத்தராலும் போதுமானபடி ரூபகாரிப் படுத்துவோம்.[128]

மேலும் ஸ்ரீஅரண்மனையார் நமக்குக் கப்பல் வேலை செய்கிற தளவாடங்களும், சாமான்களும் வைத்துக் கொள்ளும் படிக்குக் கொடுத்த கொட்டடியில் ஷெ கப்பல் சாமான்கள் மாத்திரம் வைத்ததல்ல நம்முடையவுங் கப்பல்..................கப்பித்தானுடையவும், பொருள்களாகிய ரூ. ௩ ௲ சிலவானம்[129] பெறத்தக்க பொருள்கள் அந்த அறையிலே வைக்கப்பட்டிருந்த படியால் நாம் அதைப்பூட்டி முத்திரை வைத்தோம்.

---

120. அச்சாரம் - முன்பணம்

121. வியாட்சியம் - வியாச்சியம் - வழக்கு

122. மலவாதி (?)

123. மெய்க்காடு - குத்தகைக்குவிடாமல் நேரில் நடத்தும் வேலை

124. ரூ.300/-

125. சிலவானம் - செலவானம் - செலவு

126. பிறட்டு - புரட்டு

127. ரூ. 1000/-

128. ரூப காரிப்படுத்துதல் - மெய்ப்பித்தல்

129. செலவானம் - மதிப்பு

அதிலிருந்த கப்பல் சாமான்கள் தவிர சாட்டுடிருபின் கிரானாமிட்டர் என்னப்பட்ட கப்பல் கெடியாரம் இன்னமுஞ் சாஸ்த்திரப் புத்தகங்களு மிருந்தது. பூட்டி முத்திரை வைத்திருந்ததாகிய அறையை உடைத்திருக்கிறதாயும், அதிலிருந்து சாமான்களெல்லாம் இல்லாமலிருக்கிறதாயும் சமாச்சாரம் வந்தது. அனேகருக்குக் காரியஞ் செய்கிறவர்களுந் தருமமாய் இராஜ்ஜிய பரிபாலனம் செய்கிறவர்களுமான ஸ்ரீ அரண்மனையார், நாம் முத்திரை போட்டு, பூட்டி வைத்த கொட்டடியை நமது அனுமதியுஞ் சம்மதமுமில்லாமல் திறக்கிறதற்கும் நம்முட பொருள்களை யெடுத்துக் கொள்ளுகிறதற்கும்........................ ................................... அவநியாயத்தைப்[130] பார்க்கிலும் இது எத்தனைப பெரிய அவநியாயம். மற்ற அவநியாயங்களிருக்கட்டும். இந்தக் காரியமொன்றை மாத்திரம் பேசுகிறதானால் பிரிட்டிஸ்லாவில்[131] நமக்கு நீதி கிடைக்க மாட்டாதோ.

காரியங்கள் இவ்விதமாயிருக்க யிதுகளையெல்லாம் நாம் நம்முட இங்கிலிசு பாஷையில் தங்களுக்குச் சரியா யெழுதியிருக்க நமது சரியான அபிப்பிராயத்தைத் தங்களுக்கு மனுஷாள் தங்களுக்குத் தெரியப்படுத்த வில்லையென்கிறதைத் தாங்கள் நாம் இரட்டித்து எழுதினோமென்று சொன்னதினா லறிந்து தமிழ் அறிந்த ஒருவரைக் கொண்டே.......(வற்றை) யெழுதுகிற மிகுந்த வருத்தத்துக்குள்ளானோம். ஆகையால் தாங்கள் மற்ற மனிதர்களுடைய கேள்விகளை வாங்காமல் இனிமேல் யி..................சிறித்து நாம் யாதொரு வருத்தத்தையுமடையாமலும் நியாயம் பெற்றுக் கொள்ளுகிறதற்காக இனிநாம் உழைக்காமலுமிருக்..................க்கு தாங்கள் தயவுசெய்து யிது காரியங்கள் யாவற்றையுஞ் சீர்தூக்கிப் பார்த்துத் தாங்கள் அரண்மனையை..........டுத்தும் படியாய்......................கிறபடியால் த.............................பேர் பிரஸ்தாபங்...................... த்தியாய் எல்லா......................டும் படிக்கும் இனி யிந்தக் காரியத்தைக் குறித்து நாம்..............நியாய முதலானதுகளுக்குப் போகிறதினால் நமக்குண்டாயிருக்குஞ் சிரமத்தையும் வெருவாக்கும் படிக்குத் தங்களை அனேக வந்தனங்களோடே கேட்டுக் கொள்ளுகிறோம்.

*I am*

*sir.*

*Your most obedient servant*

*James Rose*

*Bavajee Ramajee pandit*[132]

*Sirkell of His Highness the Rajah of Tanjore.*

---

130. அவநியாயம் - அந்நியாயம்

131. பிரிட்டிஸ்லா - British Law

132. பாவாஜி ராமாஜி பண்டிட் - (பக்கம் 86)

## ஆவணம் எண் 10

*Tanjore 2nd March 1842*

*To*

*R. Bavajee Ramajee pandit*

*Sirkell of His Highness the*

*Rajah of Tanjore*

*Sir,*

௲ அ ள ௬ ௰ ௨ ௵[133] ஜனவரி மீ ௨௨ போடப்பட்ட தங்களுடைய மறாஷ்ட்ட கடுதாசியை வரப்படுத்திக் கொண்டோம். அதனுடைய அவையடகத்தில் நம்மிடமாக யுக்த்தமான தஸ்தாவேஜீகளில்லாமலும், சாளுவ னாயக்கன் பட்டணத்திலிருக்கப்பட்ட அனுபோகந் தெரிந்தவர்களைக் கொண்டு நாம் ருசு[134] கொடுக்காமலும் வீணான தொந்தரவைக் கொடுக்கிறோ மென்றும், வையாபுரிமேஸ்திரி அப்பாவு பிள்ளைக்கு யெழுதின பத்திரத்தினுடையவும் அப்பாவு பிள்ளை நமக்கெழுதின பத்திரத்தினுடையவும் நகலைத் தாங்கள் பார்வையிட்டபோது, வியாட்சியப்படுகிற துகைக்கி[135], தகுமான ஆதரவாக யிருக்கவில்லை யென்றும் ௩ ௰ அ௵[136] செப்டம்பர் மீ ௰ ௬[137] வுயில் நாமெழுதிய காகிதத்தில் நாம் பழுதுபார்க்க வேண்டியதற்காக ஷை கப்பலுக்கு ரூ ௩௲அள[138] மதிப்புக்கண்டு யெழுதியிருக்கிறோ மென்றும், அந்தப் படிக்கிப் பூர்த்தியாய்[139] வேலை செய்யப்பட வில்லையென்றும், ஷை கப்பலில் நடந்திருக்கிற வேலை தேதி வாரியாய் அவ்விடத்தி லிருக்கப்பட்ட காரியஸ்தாளுடைய ருசு வார்த்தையின் பேரில் செய்யவில்லை யென்றும், கட்சியில் நாமந்த யிடத்தை விட்டுப் போகும்போது ஷை. சிலவான துகைக்கி ஜாப்த்தா யெழுதி அவாளிடத்தில் கொடுக்கவில்லை யென்றும், நாம் திருவாதியில்[140] பேட்டிக்காக நாம் வந்திருக்கும் போது தேவாஜி றாயர் மூலியமாய் ஜாமீன் கொடுக்க வேணுமென்று

---

133. 1842 ஆம் வருஷம்

134. ருசு - அத்தாட்சி ; கையெழுத்து

135. வழக்குக்கு உரிய தொகைக்கு

136. 38ஆம் வருஷம் (அதாவது 1838)

137. 16

138. ரூ. 3800/-

139. பூர்த்தியாய் - முழுமையாய்

140. திருவாதி - திருவையாறு

கேட்டதற்கு னாம் பின்னுக்கு வாங்கிப் போய்விட்ட நிமித்தியம் அனுமானப்பட்டு[141] கவுலாத்துக் கொடாமல் அடிப்பட்டுப் போச்சுதென்றும், மாஜிஸ்டிரேட் என்று காப்டன் குலசு துரையவர்களுக்கும் ,அரண்மனையாரவர்களுக்கும் யிது சங்கதியைக் குறித்து நடந்திருக்கிற காகித பத்திரங்களின் ரிக்கார்டுகளைப் பரிசோதனை பண்ணிப்பார்த்த விடத்தில் நமக்குச் சம்பவித்திருக்கிற நஷ்டத்தைக் கொடுத்து விடுகிறதற்கு அரண்மனையார் ஒப்புக்கொண்டதாக யாதொரு தஸ்தாவேசுகளும் காணப்படவில்லையென்றும்-பின்னும் சாளுவ நாயக்கன் பட்டணத்தில் ஒரு கொட்டடியில் ரூ௲ ௩[142] பெறுமான கெடியார முதலான சாமான்களை வைத்துப் பூட்டி முத்திரை வைத்திருந்ததை முத்திரை உடைத்து சாமான்களை யெடுத்துப் போட்டதாக நாமிப்போது புதுசாகச் சொல்லுகிறோமென்றும், ஷெ சாமான்கள் இன்னது இன்னது யென்றும் இன்னானுடையதென்றும், இன்னானுடைய ருசு வார்த்தயின் பேறில் முத்திரைப் போட்டு கொட்டடியை யின்னான்வசமாக ஒப்பிவித்திருக்கு தென்று, யெழுதப் படவில்லையென்றும், ஷெ சங்கதிகளைக் குறித்து சாளுவனாயக்கன் பட்டணத்துக் காரியஸ்த்தாளைத் தாங்கள் வரவழைத்து விசாரணை செய்தபோது, நமக்குக் கொட்டடி கொடுத்ததில்லை யென்கிறதாகவும், அதில் நம்முடைய சாமான்கள் வைத்ததில்லை யென்கிறதாகவும், நம்முடைய சாமான்களெல்லாம் ஒரு கொட்டகையில் நாம் வைத்துக் கொண்டிருந்ததாகவும் நாம் போறபோது நம்முடைய சாமான்களோடே அரண்மனை, சாமான்களில் சிலதை நாம் யெடுத்துக் கொண்டு போய் விட்டதாகவும் ஷெயார்கள் சொல்லுகிறார்களென்றும், இது தவிர ஷெ கப்பலில் பேத்து[143] யெடுத்திருக்கிற தகடு முதலானதுகளின் நஷ்ட்டம் நம்முடைய பேரில் வரவேண்டியதிருக்கிறதாக முன்னமே நமக்குத் தெரியப்படுத்தி யிருக்குதென்றும், பின்னும் சரியான துகைப்படிக்கி நாம் கருதி செய்திருக்கிற தளவாடங்களை இப்பவாகிலும் அரண்மனை மனுஷாளிடத்தில் ஒப்பிவித்தால் அவ்விதம் கருதி செய்து,[144] கொள்வார்களென்றும் மற்ற கூலித் துகையின் நிலவரத்தை நாம் தெரியப்படுத்தினால் ஷெ காரியஸ்த்தாளை ருசு கேட்டுக் கொண்டு ருசுவான துகையில் செப்புத்தகடுகள் முதலானதுக்கு நம்முடைய பேரில் வரவேண்டியதிருக்கிற துகை போக அதிகம் பிருதி[145] யிருக்கிறதைக் கொடுத்து விடுகிறோமென்று தாங்கள் யெழுதுகிறீர்கள்.

---

141. நிமித்தியம் - காரணத்தால்; அனுமானப்பட்டு - சந்தேகப்பட்டு

142. ரூ. 3000/-

143. பேத்து - பெயர்த்து

144. கருதிசெய்து - கரீது செய்து - விலைக்கு வாங்கி

145. பிருதி - ப்ரீதி - விருப்பம்

க. வது யுக்தமான தஸ்த்தா வேசுகளின் மூலியமாகவே அரண்மனையாரிடத்தில் நம்முடைய கவுண்டுக்கறெண்டில்[146] யெழுதப்பட்டிருக்கிற துகை நமக்கு வரவேணுமென்று கேட்கிறோமே தவிர வேறில்லை. நம்மிடத்தில் கப்பலை ஒப்பவித்த முன்னுக்கு அதில் பழுதுபார்க்கிற அன்றாடக சிலவுகள் அரண்மனை மனுஷாள் ருசுவார்த்தியின்[147] பேரில் செய்யவேணு மென்றும், அவாளிடத்தில் கணக்குக் கொடுக்க வேணுமென்றும் நமக்குச் சொல்லவுமில்லை. தஸ்தாவேஜிகளின் மூலியமாக நமக்குத் தெரியப்படுத்தினதுமில்லை. அப்படியிருக்கும் போது, இப்போ ஒருவருடைய ருசுவார்த்தினாம் செய்து வைக்க வேணுமென்கிறது அவசரமில்லை யென்றும், நாம் கப்பல் வர்த்தகாளுடைய வழக்கப் பிரகாரம் செய்திருக்கிறோ மென்றும் தாங்கள்தெரிந்து கொள்ளலாம்.

உ வது வையாபுரி மேஸ்திரி அப்பாவு பிள்ளைக்கி யெழுதிய தஸ்தாவேஜீ நகலும் அப்பாவுபிள்ளை நமக்குகெழுதிய தஸ்த்தாவேஜீ நகலும்[148] தங்களுடைய பார்வைக்கு அனுப்பி வித்தது. ஷெ கப்பலைப் பழுது பார்க்கிறதற்காக னாம் பிரவேசித்த முகாந்திரத்தை[149] மாத்திரம் தாங்கள் தெரிந்து கொள்ள வேண்டியதற்காக னாம் அனுப்பிவித்தோமே தவிர ஷெ துகையினுலடைய விபரத்துக்காக அனுப்பிவித்ததல்ல.

நவது ந ய அ ஞ செப்டம்பர்மீ ய் கூ நாமெழுதிய காகிதத்தில் கப்பல் பழுது பார்க்கிறதற்கு ரூ. ந ௲ அ ள[150] மதிப்புப்போட்டு அனுப்பிவித்த காரியஞ் சரிதான். ஷெ கப்பலை ஒப்புக்கொண்ட முன்னுக்கு கப்பல் கரையிலிருக்கும் போது ரிப்பேர் பார்த்துக் கோழிவெட்டி தண்ணியில் விட்டபின்பு கம்மத்துக் கண்டதினால் மறுபடியுங் கரையிலேத்தி ஒருயிடத்தில் பிரித்துப் பார்த்துத் தண்ணீரில் நின்றவறைக்கு மடித்துப் போயிருக்குமென்கிறதால் உத்தேசமாக மதிப்பு போட்டு அனுப்பிவித்தோம். பிற்பாடு கப்பலைக் கட்டிப் பிரித்து, அடிபங்குகளுக்குப் பதில்க்கண் கொண்டு போய்ச் செலுத்தி ஆணிகள் வைத்து அறையும் போது மேல்பங்களும் உள்ளே மடித்திருந்து துண்டு துண்டாய் விழுந்து போச்சுது. அதுகளைத் தங்களுடைய கண்ணினாலே பார்த்திருந்தால் மிகுந்த விசனப்பட்டிருப்பீர்கள். அப்படிக்கி விழுந்து போனதினால் அதிகத் துகை சிலவழிக்க வேண்டியதாக நேரிட்டது. அப்படி முழுவதும் வேலை முடிகிறதற்கு முன்னமே கவுலாத்துக் கொடுக்கக் கூடாதென்றும், கப்பலை விட்டு விட்டால் அந்த விஷயத்தில் நமக்கு நேரிட்ட சிலவுதுகை முழுவதையும் கொடுத்துவிடுகிறோமென்றும் அரண்மனையார் சொல்லுகிறதாகக் காப்டன் குலசு

---

146. கவுண் டுக்கறெண்டு - Current Account நடைமுறையிலுள்ள கணக்கு

147. ருசுவார்த்தை - அத்தாட்சி, மெய்ப்பித்தல்

148. தஸ்த்தாவேஜீ நகல் - ஆவண உண்மை நகல்

149. பிரவேசித்தமுகாந்திரம் - புகுந்த காரணம்

150. ரூ. 3800/-

துரையவர்கள் முகமுகமாய்ச் சொன்ன நிமித்தம் முழுவதும் வேலை நிறைவேற்றப்படாமல் நிறுத்தப்பட்டு போய் விட்டது.

சுவது நாம் பேட்டிக்காகத் திருவையாறுக்கு வந்திருந்தபோது தேவாஜி றாயர் மூலமாக ஜாமீன் கொடுக்க வேணுமென்று கேட்ட காரியஞ்சரிதான். இந்த வார்த்தை யிதற்குமுன் நடந்திருக்கிற உடன்படிக்கைகளில் அடங்கியிருந்ததும் கப்பல் வர்த்தகாளுடைய வழக்கத்திலில்லாததும் நூதன வார்த்தையாயும் யிருப்பதுனாலே நாம் ஜாமீன் ஒருபோதுங் கொடுக்கக் கூடாதென்று சொல்லிப் போட்டது மல்லாமல் ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் பேட்டியான பின்பு வையாபுரி மேஸ்திரியிடத்தில் தீர்மானமான உத்திரவு யென்னவென்று கேட்டதற்கு ஜாமீன்கொடுக்க வேண்டியதில்லை யென்றும்ஷை ந ஆ ளயும் கபுலாத்தும் உ வி னாளைக்குள்ளாக நமக்குக் கொடுக்கும்படி ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுடைய உத்திரவாகி யிருக்குதென்றும் வேலை தவக்கமில்லாமல் நடப்பிவிய்யுங்களென்றும் ஷை யார் சொன்னதின் பேரில் னாம் ஷை வேலை முதலானதுகளை நடப்பிவித்து வந்திருக்க நாம் ஜாமீன் கொடுக்கப் பின் வாங்கின நிமித்தம் கபுலாத்துக் கொடுக்கத் தவக்கப்பட்டுப் போச்சுதென்று சொல்லுவது சரியான முகாந்திர[151] மல்லவென்று தங்களுக்குத் தெரியவரலாம்.

ரு - வது மாசி (ஜி)[152] ரெசிடெண்டென்று காப்டன் குலசு துரையவர் களுக்கும் அரண்மனையாரவர்களுக்கும் இது சங்கதியைப் பத்தி நடந்திருக்கிற காகித பத்திரங்களில் னாம் கப்பலை விட்டு விடுகிறதற்கும் நமக்கு நேரிட்டிருக்கிற நஷ்டத்தை அரண்மனையார் கொடுத்து விடுகிறோமென்று ஒப்புக் கொண்டிருக்கிறதற்கும் ரிக்கார்டில்[153] யாதொரு ஆதரவுகளும்[154] காணப்படவில்லை யென்பது மெத்த ஆச்சரியமாக யிருக்கிறது. அரண்மனையாருக்கும் ரெசிடெண்டுக்கும் அந்தப்படி காகித பத்திரங்கள் நடந்திருக்கா விட்டால் நமக்கு ரெஸிடென்று முகதாவில் சொல்ல வேண்டியதுமில்லை. அதைக் குறித்து இதிலடக்கமாக நகலின் காகிதம் நமக்கவர் யெழுத வேண்டியதுமில்லை. மிகுந்த பிரயாசைப்பட்டு வேலை நடப்பிவித்து வந்த கப்பலை நாம் தானே விட்டுவிட வேண்டியதுமில்லை. அதனால் நேரிட்ட சிலவு துகைக்கி கவுண்டுகறென்று னாம்[155] அனுப்பிவிக்க வேண்டியதுமில்லை. நாம் வையாபுரி மேஸ்திரி மூலமாய் கவுலாத்துக்காக

---

151. முகாந்திரம் - காரணம்

152. மாசி - மாஜி-முன்னாளில் இருந்த

153. ரிகார்டு - Record

154. ஆதரவு - சான்று

155. னாம் - நாம்

அனேகம் னாள்[156] காத்திருந்து போட்டு, காப்டன் ஊகாரட்டு துரைக்கி யெழுதினதிலும் பிரதியுத்தாரம் வராத நிமித்தம் காப்டன் குலசு துரையிடத்தில் னாம் முகதாவில்[157] வந்திருந்த போது, சுபுலாத்து வாங்கிக் கொடுக்க வேணுமென்று கேட்டோமே தவிர கப்பலைவிட்டு விடுகிறதற்காக நாம் வந்து சொல்லிக்கொள்ள வரவில்லை.

சூ — வது வையாபுரி மேஸ்திரி நமக்கெழுதிய காகிதத்தில் நாம் உடன்படிக்கை செய்து கொடுத்துப்போட்டு, சாளுவநாயக்கன் பட்டணத்துக்குக் கப்பல் முதலான சாமான்களை நாம் ஒப்புக்கொள்ள வந்த முன்னுக்கு அவ்விடத்திலிருந்த மகடோல் ராமசாமி சுபையதார்[158] அப்பாவு பிள்ளையை வைத்துக் கொண்டு ஷெ கப்பல் முதலான சாமான்களை ஒப்புவித்தபோது கோட்டைக்குள் ஒரு கொட்டடி ஒழித்து நமக்குக் கொடுத்தார்.அதில் ஷெ கப்பல் சாமான்களும் இதிலடக்கஞ் செய்து வருகிற ஜாப்தாவில் கண்ட நம்முடைய சொந்த சாமான் வகையறாக்களும் வைத்துப் பூட்டிக்கொண்டு ஷெ கொட்டடி நம்முடைய வசமாக வேண்டியிருக்கையில் நமக்குத் திரேக[159] அசவிக்கியமான நிமித்தம் ஷெ கொட்டடி முதலான சாமான்களை நம்முடைய காரியஸ்த்தாள் வசமாய் ஒப்புவித்து துளசாபட்டணத்துக்கு நாம் போய விட்டதின் பிறகு நம்முடைய காரியஸ்த்தாள் ஷெ கொட்டடியைப் பூட்டி முத்திரை வைத்து ஜாக்கிரதை செய்து கொண்டு வரும் போது அவ்விடத்திலிருந்த காருபாரி[160] முதலானவர்கள்ஷெ கொட்டடி முதலானதுகளை நம்முடைய மனுஷாள் துறக்கக்[161] கூடாதென்றும், அந்த யிடத்தில் முதலாயி வரக்கூடாதென்றும், தடைப்படுத்திப் போட்டார்கள். அது சங்கதியைக் குறித்து ௩ ௰ ௯ ஜூன் மீ ௰ உதேதி.[162] வையாபுரி மேஸ்திரிக்கு இதிலடக்கஞ் செய்து வருகிற நகலின் காகிதம் யெழுதி அனுப்பிவித்திருக்கிறோம். இதுவுமன்னியில் அந்த யிடத்தில் நேமணக்கு[163] செய்திருந்த சேவுகன் கோவிந்தப்ப னாயக்கனென்பவனை முதலாய் ஷெகப்பலண்டை வரக்கூடாதென்று ஷெயார்கள் தடங்கல் செய்திருக்கிறதைக் குறித்து ஷெ சேவுகனும் நமக்கு ௩ ௰ ௯ ஞு நவம்பர் மீ ௰ கவயில் யெழுதிய காகிதத்துக்கும் யித்துடன் நகல் அனுப்பிவித்திருக்கிறோம்.

---

156. னாள் - நாள்

157. முகதா - முன்னிலை

158. சுபையதார் - சுபேதார் - சுபை என்ற நாட்டுப்பகுதிக்குத் தலைமை அலுவலர்

159. திரேகம் - உடல்; அசவிக்கியம் - நலமின்மை; நிமித்தம் - காரணமாக

160. காருபாரி - அரசனது மெய்காப்பாளர்களின் தலைவன்

161. துறக்க - திறக்க

162. 39ஆம் வருஷம் (1839); 12 ஆம் தேதி

163. நேமணக்கு - நியமனம்

இப்படிக்கெல்லாம் நடந்திருக்க கொட்டடி நமக்கு கொடுக்க வில்லையென்று சொல்வது மிகவும் பெரிய ஆச்சரியமாக யிருக்கிறது. பின்னும் ஷெ கொட்டடிக்குள் வைத்திருந்த சாமான்களில் அரண்மனைச் சாமான் நீங்கலாக ஷெ ஜாபிதாவில் கண்டிருக்கிற சாமான்களில் கப்பவில் பொழுது அளக்கிறது ரூபின்-2-ம் கப்பல் கப்பித்தான்[164] மாயில்-யென்பவருடையது. மற்றது நம்முடைய சொந்தம். இப்படிப்பட்ட நம்முடைய சொந்தச் சாமான்களை ஷெ கொட்டடிக்குள் நாம் வைக்கும் போதாவது யெடுக்கும் போதாவது நம்முடைய சொந்த மனுஷாளைத் தவிர வேறு ஒருவருக்குந் தெரியப்படுத்த வேண்டியது மில்லை. அதை ஒருவருக்கு ருசுக் கொடுக்க வேண்டியதுமில்லை; ஒருவனை வைத்துக் கொண்டு ஷெ கொட்டடியை முத்திரை வைத்து ஒருவனுடைய வசப்படுத்த வேண்டிய அவசரமுமில்லை. இது தவிர வேலைக்காக வேண்டிய திருந்த ஆயுதங்களை அன்றாடம் வாங்கி கொடுபட்டது போக, கொடுபடாமலிருந்து விட்ட சாமானுக்கு விவரம்; மரம் வெட்டப்போன வேப்பெண்ணைய்க் காட்டிலிருக்கிற கோடாவி-ங-யிது தவிர கப்பல் சாமானுடனே ஒப்புக்கொண்டதில் ஷெ யிடத்திலிருக்கிற கப்பி ங-சேதுபாவா சத்திரத்தில் சேவுகன் வசமாக யிருந்த கம்பாசு பழகூ...க்கு குளாயி செய்ய வேண்டியதற்காக வேலைக்காரனிடத்தில் கொடுக்கப்பட்டிருக்கிற ஈயக்குழாய்-உ-யிது நீங்கலாக யாதொரு சாமான்களும் நாமெடுத்துக் கொண்டு போனதில்லை.

எ-ஆவதுஷெ கப்பலில் மக்கிப் போயிருந்த செப்புத்தகடுகளைப் பேத்து யெடுத்து முன்னுக்கு ஷெ தகடுகளிலும் மடிச்சுப் போயிருந்த பங்கு கால் தூள்களையும் அவ்விதமாகவே போயிருந்த இரும்பு ஆணிகளிலும் சிலதை ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுடைய பார்வைக்காக வையாபுரிமேஸ்திரி மூலமாக அனுப்பிவித்ததுந் தவிர மற்ற தகடுகளை வித்து முதல் செய்திருக்கிற விவரத்தையும் ஷெ வையாபுரி மேஸ்திரிக்கு உடனே தெரியபடுத்தியிருக்கிறது மல்லாமல் நாம் முன்னமே அனுப்பிவித்திருக்கிற கவுண்டு கறென்றிலும் யெழுதி யிருக்கிறதுனாலே இப்போ அதைக் குறித்து மதிகமான முகாந்திர மிப்போது சொல்ல வேண்டிய அவசரமில்லை, யென்று தங்களுக்கே நன்றாய் தெரியவரலாம். பின்னும் ஷெ கப்பல் வேலைக்காக நாம்கருதிசெய்த தளவாட சாமான்கள் கப்பலண்டைக்கி வந்தது போக மற்றதுகள் ஏறக்குறைய ரெண்டரை வருஷத்துக்கு முன் கருதிசெய்த அந்தந்த யிடங்களிலே தானே கிடந்து அழிஞ்சு போயிருக்க யிப்போது அதுகளைக் கருதி செய்து கொள்ளும் படிக்கி அரண்மனை மனுஷாளிடத்தில் ஒப்புவிக்கும்படியாகச் சொல்வது யுக்தமாக யிருக்கலாமா. மேலும் மெய்க்காட்டு வேலை[165] முதலானதுகள் நடந்திருக்கிறதற்கு முன்னமே நம்முடைய அகவுண்ட் கரண்டில் யெழுதியிருக்க யிப்போது நூதனமாய் சரியான

164. கப்பித்தான் - Captain

165. மெய்க்காட்டு வேலை - குத்தகைக்கு விடாமல் நேரேநடத்தும் வேலை

கணக்கு கொடுக்க வேணுமென்று சொல்வது ஞாயமாயிருக்கலாமா ஆகிலும், ஷெ அகவுண்ட் கறண்டில் கண்டிருக்கிற துகையைப் பிரித்து அறிந்து கொள்ள வேணுமென்கிற கருத்து தங்களுக்குள்ளிருக்கிறதாய் நமக்குத் தோணுகிறதினாலே இதனடியில் யெழுதியிருக்கிற விவரத்தைக் கொண்டு தாங்கள் தெரிந்து கொள்ளலாம்.

| விவரம் | ரூ | அணா | பை |
|---|---|---|---|
| ஷெ அகவுண்ட் கறண்டில் கண்டிருக்கிற கூடுதல் துகை | ௰௪௲௰௪ | ௰௪ | 0[166] |
| ஷெ கூடுதல் துகையில் முதல் தடவை கப்பலை பழுது பார்க்க நேரிட்ட சிலவு | ௲௨௱௫௰௩ | ௪ | 0[167] |
| ரெண்டாவது தடவை கப்பலைப் பிரித்து வேலை செய்து கொண்டு வந்ததற்காக தளவாடம், தச்சு கொல்லை,[168] ஆள், கணக்கப்பிள்ளை, ரையிட்டர், காரியஸ்த்தன் முதலான சிலவு | ௨௲௩௱௯௰௩ | 0 | 0[169] |
| நம்முடைய சாப்பாட்டுச் சிலவு பல்லக்கு குதிரை சிலவு சொந்த வேலைக்காரர் சம்பளம் உள்பட மீ ௰௪க்கு | ௨௲௱௪௰௪ | ௰ | 0[170] |

166. ரூ. 14014-14-0

167. ரூ. 1253-4-0

168. ரூ.2393-0-0

169. கொல்லை - கொல்லன் - கருமான்

170. ரூ. 2144-10-0

| | | | |
|---|---|---|---|
| கப்பல் கப்பித்தான் சிப் ஆபிஸர்[171] சிறாங்கு[172] தண்டல்[173] கசாப்பு[174] கிலாசு[175] முதலானவர்களுடைய சம்பளம் | ௭ ௲ ௨ ௱ ௬௰ ௪ | 0 | 0[176] |
| ஷெ சிலவுகளானதற்கு நம்முடைய கைவசமாகயிருந்த பணம் போக வர்த்தகாளிடத்தில் நாம் வாங்கின பணங்களுக்கு நாம் கொடுக்க வேண்டியதாக வந்து சம்பவித்த வட்டி சொச்சம் | ௯ ௱ ௬௰ | 0 | 0[177] |

ஆகக்கூடிய துகை ரூ ௰ ௪ ௲ ௰ ௪ அணா- ௰ ௪[178] செப்புத்தகடு வித்து முதலானதில் வரவு ரூ ௪ ௱ ௯௰ ௩ அணா ௯[179]

போக பாக்கி வரவேண்டியதிருக்கிறது ரூ ௰ ௩ ௲ ௫ ௱ ௨ ௰ ௧ அணா ௫[180]

அ-வது கப்பல் வேலை முடியிறதற்கு[181] முன்னதாக கப்பித்தான் சிறாங்கு முதலானவர்களை அமர்த்தி வைத்துக்கொண்டு அவர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டிய அவசரமில்லையென்று சொல்லுகிறீர்கள். அப்படிக்கி முன்னாடி அமர்த்தி வைத்துக்கொள்ள வேண்டிய காரணமென்னவென்றால் ௩௰ ௬ வருஷத்தில்[182] கோராங்கியிலிருக்கிற மேஷ்ட்டர்பீட்டன்

171. சீப் ஆபீஸர் - Chief Officer, முதன்மை அதிகாரி

172. சிறாங்கு - கப்பற் கண்காணி

173. தண்டல் - படகுத்தலைவன்

174. கசாப்பு - மாமிசம் விற்போன்

175. கிலாசு - (கலாசு) - கப்பல் தொழிலாளி

176. ரூ. 7264-0-0

177. ரூ. 960-0-0

178. ரூ. 14014-14-0

179. ரூ. 493-9-0

180. ரூ. 13521-5-0

181. முடியிறதற்கு - முடிவதற்கு

182. 36 ஆம் வருஷம் (1836 இல்)

துரையினுடைய வெங்கிட்ட ரெட்டியென்று பெயருள்ள கப்பலையும் நட ம் எழுத்தில்[183] பவானகர்[184] ராஜாவினுடைய தவுலாத்து பிரசாத்து யென்று பெயருள்ள கப்பலையும் நாம் பத்தாகூவிக்கிப்[185] பிடித்து அனுப்பிவித்த போது அந்தத் தருணங்களில் கெட்டிக்காரர்களும் சமுத்திரத்தில் அனுபோக பட்டவர்களும் அகப்படாமல் போன நிமித்தியம் அத்தருணத்தில் அகப்பட்டவர்களை அனுப்பி வித்தினாலே நம்முடைய திவு போய்ச் சேராமல் அனேகம் நஷ்டம் நமக்கு நேரிட்டிருக்கிறதினாலே அரண்மனைக் கப்பலை னாம் ஒப்புக்கொண்டவுடனே அந்தந்த வேலைகளுக்குத் தகுமான கப்பித்தான் முதலானவர்களை அமர்த்தி வைத்துக்கொண்டு, ஷெ கப்பலுக்கடுத்த மேல்வேலைக் காரியங்களை அவாளிடமாய் வாங்கி வநதோம், ஆனால் கவுலானபடிக்கி அரண்மனையார் சரிவர நடப்பிவித்திருந்தால் ஷெ கப்பித்தான் முதலானவர்களுடைய சம்பளத்துகையைப் பத்தி னாம்[186] கேட்க வேண்டிய நிமித்தமில்லை.

ஆகையால் இவ்விதமாக நடந்திருக்கிற ஷெ சிலவு துகைகளை அஞ்சுபாபத்தாகப் பிரித்து ஷெ எ-ஆவது யேககடாவில் யெழுதி யிருக்கிறோம். இந்தக் காரியங்கள் துவக்கத்தில் தங்கள் மூலமாக நடந்திருக்குமேயாகில் இப்பேரப்பட்ட நஷ்டங்கள் நேரிட்டிருக்க மாட்டாது. இதனால் நம்முடைய பொருள் சிலவானது மல்லாமல் நம்முடைய சரீரத்திலும் உபாதி[187] கண்டு மெத்தவும் வருத்தப் பட்டோம். முன்னிருந்த அரண்மனைக் காரியஸ்த்தாள் நம்மை முழுவதும் மோசஞ் செய்திருக்கிறார்களென்கிறது தங்களுக்குத் தெரியாமவிருக்கவில்லை. இப்படிக்கெல்லாம் அஞ்ஞாயப்பட்டிருக்கிற நாம் கர்நாடகத்தாருடையவும் இங்கிலிசுக் காரர் களுடையவும் ஒழுங்குரீதி[188] முதலானதுகளை நன்றாயறிந்திருக்கிற தங்களுடைய சமுட்சேபத்தில்[189] இந்தக் கேசை[190] ஒப்புக்கொடுத்திருக்கிறோம். இதுகளைத் தாங்கள் தயவுசெய்து நன்றாய்க் கவனித்துப் பார்த்து, மேலெழுதிய சிலவு துகைகளில் நமக்கு யெவ்வளவுதுகை கிடைக்கமாட்டா தென்கிறதையும் ஒரே தடவையாகத் தீர்மானமான வொரு முடிவைச் செய்ய வேணுமென்றும் அப்படிக்கி முடிவு செய்கிறதற்கு முன்னதாக

183. 37ஆம் வருஷம் (1837 இல்)

184. பவாநகர் - வட இந்தியாவிலுள்ள ஓரிடம்

185. பத்தாகூலிக்கு - வாடகைக்கு (குத்தகைக்கு)

186. பத்தி - பற்றி: னாம் - நாம்

187. உபாதி - நோய்

188. ரீதி - முறை

189. சமுட்சேபம் - முன்னிலையில்

190. கேசை - வழக்கை (Case - வழக்கு)

நம்மை யிவ்வளவு துக்கமான செய்கைக்குள் உள்படுத்தி வைத்த காரியங்களொவ்வொன்றையும் னாம் சரிவர அறி......வித்திருக்கிற படியால் அதுகளை யெல்லாம் தாங்கள் மனசுக்கு வாங்கி முடிவான....(தீர்மா)னத்தைத் தாங்கள் செய்வீர்களென்றும், நம்பி யிருக்கிறோம். மேலும் ஷெ அகவுண்டுகறண்டு முடிவான தேதி வரைக்கும் நேரிட்ட சிலவன்னியில் அதற்குப் பின்பு நாளதுவரைக்கும் நாம் காத்துக் கொண்டிருக்கிற யிதுகாரியத்தினிமித்தம் நமக்கு யெவ்வளவு படிச்சிலவு நடந்திருக்கலா மென்கிறதையும் தாங்களே சிந்தித்துப் பார்க்கலாம். இந்தக் காரியத்தைத்தவிர நமக்கு யிந்தப் பிராந்தியத்தில் வேறு காரியமில்லை. இதைப்பார்க்க இந்த விஷயத்தில் நாம் ஒன்றுந் தங்களுக்கு அதிகமாகயெழுத வேண்டியதில்லை யென்று சிந்தித்து இதனடியில் நாம் நம்முடைய கையொப்பம் வைக்கிற உத்திரவைத் தங்களிடத்தில் கேட்டுக்கொள்ளுகிறோம்.

*I am*
*Sir,*
*Your most obedient servant*
*James Rose*

## ஆவணம் எண் 11

மிகவும் பிரியமுள்ள ஸ்ரீ மேஸ்தர் ஜேம்ஸ் றோஸ் துரையவர்களுக்கு வையாபுரிமேஸ்திரி சலாம்.

இப்பவும் யிவ்விடத்தில் க்ஷேமம் அவ்விடத்தில் தங்களுடைய க்ஷேமாதி க்ஷேமங்களுக்கு யெழுதியனுப்புக் கோருகிறேன். மேலும் தங்களுடைய கேட்டுக் கொள்ளுதலின்படிக்கு யேழு வருஷத்துக்குப் பத்தா கூலிக்காகக் கொடுக்கும் படிக்குக் கேட்டிருக்கிறபடியால் அதற்காக முத்திரைக் காகிதத்தில் உடம்படிக்கை யெழுதிக் கொடுத்துப்போட்டு ஷெ கப்பலை ஒப்புக்கொண்டு ரிப்பேர்[191] முதலான வேலைகள் செய்து வந்தாலதற்குள்ளாக ஷெ கப்பலை யேழு வருஷத்துக்குத் தங்களுக்கு கெழவுக்கு[192] கொடுத்ததறகாக கபலாத்து[193] வாங்கி கொடுத்தனுப்பிவிக்கும்படிக்கி ஜாக்கிரதை செய்கிறோம். ஷெ கப்பலை வேலை செய்யும்படிக்கு தங்கள் வசப்படுத்த சரபேந்திரபட்டணம் காரியஸ்த்தானுக்கு உத்திரவும் அனுப்பிவித்து யிருக்கிறோம்.

---

191. ரிப்பேர் - பழுதுபார்த்தல்

192. கெழவுக்கு - கெடுவுதல்

193. கபலாத்து - கவுல் - உடன்படிக்கை

ஆகையால் அப்பாவுபிள்ளை அவ்விடத்துக்கு வருகிற படியினாலே ஷ யார்களை வைத்துக்கொண்டு சகல காரியமும் தீர்மானஞ் செய்து கொள்ள வேண்டியதுந் தவிர மத்தபடி சேதிக்கும், வேண்டிய காரியங்களுக்கும் யெழுதி யனுப்பக் கோருகிறேன்.

வேணும் சலாம் இப்படிக்கு

(ஒப்பம்) வையாபுரி மேஸ்திரி.

தஞ்ச நகரம்

ரூஅ ள ௩ ௰ அ ஸெகுலாயிமீ அ உ

*True copy*

*James Rose*

## ஆவணம் எண் 12

ஸ்ரீராமஜெயம்

திருவையாறு தோட்டம் விசாரணை சுப்பிரமணிய பிள்ளைக்கி யெழுதுகிறது. யென்னவென்றால்.

திருமானூருக்கு சாமான்கள் சேரச் செய்கிறதுக்கு ஷெயூர் துறையில் இருக்கிற ஓடம் போறாதென்று திருமலவாடி[194] துறையின் ஓடத்தையும் வயித்தினாதன் பேட்டைத்துறை ஓடத்தையும் வாடகைக்கு அழைப்பித்துக் கொள்ளவேணுமென்று நீர் கேட்டுக் கொண்ட காரியத்துக்குமேலெழுதிய ரெண்டு துறையிலிருக்கிற ஓடத்தையும் வாடகைக்கு அழைப்பித்துக் கொண்டு சாமான்கள் அக்கரைக்கிச் சேரச்செய்கிற காரியத்தில் அதிஜாக்கிரதை செய்து சாமான்களை ஓடத்தில் யேத்தி திருமானூர் போய்ச் சேரும்படி செலுத்திச் செய்ய வேண்டியது.

மேலும் ௰ உ சனிக்கிழமை தினம்(திருவையாற்றில்) ஆயிரம் பேருக்குச் சாப்பாடு ஆகவேண்டியிருக்கிறபடியினாலே அதற்குச் செல்லுமென்கிற யெறிதுரும்பு[195] ஆசீர்[196] செய்து வயிக்க[197] வேண்டிது.

விக்ரம்ஸு

புரட்டாசி மீ ௩ உ

---

194. திருமலவாடி - திருமழபாடி

195. யெறிதுரும்பு - விறகு

196. ஆசீர் - ஆஜர் - நேரில்

197. வயிக்க - வைக்க

## ஆவணம் எண் 13

நெ. 11 ஸ்ரீபிரகதேசுவர சுவாமி கோயிலில்[198] அஷ்டோத்திர[199] சிவலிங்கப் பிரதிஷ்டே[200] செய்ததற்கும் மண்டாலபிஷேகம்[201] உள்பட ஜாபிதா.

## ஆவணம் எண் 14

கல்யாணமகால்[202] சம்மந்தம் சருவமான்யம்[203] நிலங்கள் மனைக்கட்டு[204] வகையறா சுத்திக்கிரயத்[205] துக்கு வாங்கின பேரீஸ்த்து[206]

1897 ஸு மே மீ 27 உ

அரண்மனை பென்ஷனர்[207] சுந்தராபாயி அம்மாள்[208] இறந்து போனதைப்பத்தி பாக்கி பென்ஷனுக்காகத் தஞ்சாவூர் தாசில்தார் அந்த அம்மாளுடைய வாரிசு இன்னாரென்று விசாரித்து தஸ்த்தாவேஜுகளுடன் சர்கிலவர்களுக்கு யாதாஸ்த்து[209] அனுப்பப்பட்டிருக்கிறது.

---

198. பிரகதேசுவரசுவாமி கோயில் - தஞ்சைப் பெரிய கோவில்

199. அஷ்டோத்தரம் - 108

200. பிரதிஷ்டே - பிரதிஷ்டை - நிறுவுதல்; எழுந்தருளுவித்தல்

201. மண்டலாபிஷேகம் - கும்பாபிஷேகத்தைத் தொடர்ந்து 40, 41 அல்லது 45 நாள் நாடோறும் நடத்தப்படும் திருமஞ்சனம்

202. கல்யாண மகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் வாழ்ந்த இடம் (பக்கம் 329)

203. சருவமான்யம் - எந்தவிதமான வரியும் செலுத்தாமல் அனுபவிக்கும் நிலம்

204. மனைக்கட்டு - வீடுகட்டுதற்குரிய இடம்

205. சுத்தக்கிரயம் - எல்லா உரிமையையும் விலைக்குக்கொடுத்து விடுதல்

206. பேரீஸ்த்து - பேரீஜ் - கணக்கின் மொத்தத் தொகை

207. பென்ஷனர் - ஓய்வூதியம் பெறுபவர்

208. சுந்தராபாயி அம்மாள் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர்களாகிய மங்களா விலாஸ் மாதராருள் ஒருவர் (6-401 இல் எண் 18)

209. யாதாஸ்து - பெரிய அலுவலர்கள் தமக்குள் ஒருவர்க்கொருவர் எழுதியனுப்பும் நினைவுக்குறிப்பு

உமையாள்புரம் பெறாவி[210] நிலத்தைப் பத்தி குடி ஊர் மகாஜனங்கள் யெழுதிக் கொடுத்த வாக்குமூலம்[211] தறஜமாவின்[212] நகல் (2) மா. யமுனாபாய்[213] சாயபு இறந்துபோனதற்குச் சிலவான ஜாபிதா.

(3) மா. மோகனாபாய்[214] சாயபு இறந்துபோனதற்குச் சிலவான ஜாபிதா. சல்லாஸ் சபைன் மய்யா அல்லப் ஞு[215]

(4) தோட்டங்களில் செய்யப்பட்ட மராமத்துகளுக்குக் கூலி ரவேசு[216] கணக்கு

(5) 1805 வருஷம் மார்ச்சு மீ 23 உ யில் மரவகையைப்பத்தித் திர்வை யேற்பாடு செய்த ஜாபிதா. பின்னும் சில வாய்த்துகளின்[217] யேற்பாடு

(9) மங்கள வாசத்தைச்[218] சேர்ந்த ஸ்ரீகளுக்கு ஸ்ரீமகாராஜா இருக்கும் போது நடப்பிவித்து வந்த மோகினி[219] விபரம் கண்ட ஜாபிதா.

(10) றாமசுவாமி பேட்டைக்கி வரப்பட்ட நெய் யெண்ணெய் பொதிகளுக்கு அரண்மனையார் வாங்கப்பட்ட திர்வை றவேசு.

(11) ஸ்ரீபிரகதீசுவர சுவாமி கோவிலில்[220] 108 லிங்கம்சிவப் பிரதிஷ்டை[221] செய்ததற்கு மண்டலாபிஷேகம் சிலவான ஜாபிதா.

---

210. பெறாவிநிலம் - இறையிலி நிலம்

211. வாக்குமூலம் - உறுதிமொழி

212. தற்ஜமா - மொழிபெயர்ப்பு

213. யமுனா பாய் - இரண்டாம் சரபோஜியின் முதன்மனைவி

214. மோகனாபாயி - இரண்டாம் துளஜாவின் மனைவியருள் மூன்றாவது மனைவி (போ.வ.ச.பக். 109, 124)

215. சல்லாஸ் சபைன் மய்யா அல்லப்
- ஸிஹூர்ஸன் 1173 + 599 = கி.பி. 1772 (பக்கம்.367)

216. ரவேசு - சரியான; மிக நல்ல

217. வாய்த்துகளின் - ரயத்துக்களின் என்று இருக்கலாம்

218. மங்களவாசம் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் இருந்த இடம் (பக்கம். 330)

219. மோகினி - உதவித்தொகை

220. தஞ்சைப் பெரிய கோவில்

221. பிரதிஷ்டை - (பக்கம். 196)

(13) மகாராஜா இலாகா போலீஸ் கச்சேரியிலிருந்த நகை வகையறா ரொக்கம் கஜானாவில் சீலுடன் வைத்திருந்ததை ஷை போலீஸ் கச்சேரி யேவிடத்தில் ஒப்புவித்து வாங்கின அசல் ரசீது

(15) றாமறாவ்ஜாதவ் தேசத்துக்குப் போய்வரச் சிலவான ஜாபிதா.

(18) மஹாமஹம்[222] சவாரி சிலவு ஜாபிதா.

(27) அரண்மனை தோட்டங்கள் இனாம் கொடுக்கப்பட்டதற்கு ஏற்பட்ட ஜாபிதா

(29) அணக்குடி கிராமத்தில் தோட்டமானிய சங்கதியைப்பத்தி கும்பகோணம் ஜில்லா ஜட்ஜ் துரையவர்கள் லெட்டரின் பேரில் கொண்டுக்கப்பட்ட கைபியத்து[223]

(30) தேவஸ்தானம் இலாகாவில் சருவமான்யம் நிலம் வகையறா அனுபோகத்திலிருக்கப்பட்டதுகளின் ஜாபிதா.

(32) மகாராஜா அவர்களால் நெல்லை இனாம் கொடுத்து வந்த ஜாபிதா.

(36) போஸ்லகுலம் ராஜாங்கம் துவக்க முதல் சிவாஜி மகாராஜா வரைக்கும் பட்டம் ஆண்ட வருஷங்கள் கண்ட ஜாபிதா.

(37) சரபோஜி மகாராஜாவுக்குப் பட்டம் ஆன தொடர்பு 1799[224] வருஷ முதல் 5 வருஷத்திய ஆதாயம்[225] சிலவு கணக்கு

(38) அரண்மனையைச் சேர்ந்த முகாஸா[226] தோட்டம் வகையறாக்களுக்குக் காவல் வருமானம் கவுன்மெண்ட்டாருக்கு[227]

---

222. மகாமகம் - பன்னிரண்டு ஆண்டுகட்கொருமுறை வருவதும், மாசிமாதத்தில் குரு சிங்கராசியில் இருக்க முழுமதியோடு மகம் சேரப்பெறுவதுமான நன்னாளில் கும்பகோணத்தில் நடைபெறும் விழா

223. கையியத்து - கைபீது - விவரக்குறிப்பு

224. 1779 என்பதை 1798 என்று திருத்திப் படிக்க

225. ஆதாயம் - வரவு

226. முகாஸா - வரி செலுத்தாமல் இரண்டாம் சரபோஜி காலத்திலிருந்து அரசகுடும்பத்தவர் அனுபவித்து வந்து நிலங்கள் தோட்டங்கள் முதலியன

227. கவுன்மெண்ட்டார் - அரசாங்கத்தார்.

செலுத்தி வந்ததற்கு ஏற்பட்ட கணக்கு 1226 பசலி[228] முதல் 44 பசலி வரைக்கும்.

(39) ஸ்ரீமகாராஜா[229] சாயேபு அவர்கள் சருவமான்யம்[230] கொடுத்து சிகாசனத்து[231] செய்து கொடுப்பதில் உத்தியோகஸ்தர்கள் கையெழுத்து வைக்கப்பட்ட விவரங்களும் சிகா இன்னார் செய்தார்களென்பதும்.

(42) 1832 வருஷத்தில் சரபோஜி ராஜா இறந்து போவதற்குக் கவுண்ட் மெண்டாரால் போடப்பட்ட பெபற் தர்ஜமா[232]

(45) மகாராஜா[233] பந்துக்கள்[234] கண்ட ஜாபிதா சம்பளத் துகையுடன்

(48) சிவில் மேஜிஸ்திரேட் கோர்ட்டிலிருந்து நகை வகையறாக்கள் ரொக்கம் ஜாபிதா.

(49) பா. பாயிசாயு[235] வகையறா பேர்வழிகளிடம் அரண்மனை சம்பளக்காரர்கள் சேவுகத்துக்கு ஒப்புவிக்கப்பட்ட பேர்வழி ஜாபிதா.

(57) ச.ஶி.விஜயமோகன முக்தாபாயி[236] அம்மணி ராஜ இலாகா[237] மோகினி ஆதாயம்[238] சிலவு கணக்கு

(75) கல்லாக்கோட்டை பாளையக்காரருக்கும்[239] கண்டறக் கோட்டைப் பாளையக் காரருக்கும் இருந்த விவாதம் திர்மானம் செய்தரிப்போர்ட்

---

228. பசலி - கி.பி. 591 முதல் தொடங்குவதும், கி.பி.1555ஆம் ஆண்டில் அக்பரால் ஏற்படுத்தப்பட்டதுமான காலமுறை; பசலி 1226 + 591 கி.பி.1817

229. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜி ஆகலாம்

230. சர்வமான்யம் - வரியில்லாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்பட்ட நிலங்கள்

231. சிகாசனத்து - முத்திரையோடு கூடிய அறக்கட்டளை

232. பேர் தர்ஜமா - அறிவிப்பின் மொழிபெயர்ப்பு

233. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியாகலாம்

234. பந்துக்கள் - உறவினர்கள்

235. பாயிசாயு என்றது இரண்டாம் சிவாஜியின் மனைவியரை

236. இவர் இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள்

237. இலாகா - (பார்சிச் சொல்) துறை

238. மோகினி ஆதாயம் - உதவித் தொகை வரவு

239. கல்லாக் கோட்டை பாளையக்காரர் (?)

(85) அமர்சிங்கு[240] ராஜாவினால் மிராசுதார்களுக்கு நாற்பதுவாரம்[241] வுசத்தி செய்து[242] கொடுத்ததற்கு அரண்மனைக்கு மேல்வாரம் நஷ்டம் துகையின் விபரம்.

(89) தேவஸ்தானம் இலாகா தொப்பாரங்கட்டி பிள்ளையார் கோவில்[243] அபிவேஜியில்[244] சதாசிவ றாயர்கடன் வாங்கின சங்கதிக்காக திருவாதி[245] முன்சீப்பு கோர்ட்டில் பிராது செய்து நடவடிக்கைகள்.

(90) நாகூர் தர்க்கா[246] விசாரணை அரண்மனை உத்தியோகஸ்தர் செய்து வருகிற..........அறியும் தஸ்தாவேஜுகள்.

79 (91) இறந்துபோன ஸ்ரீசரபோஜி மகாராஜா தமக்கை மகனாகிய சிவாஜி கோவிந்த றாவு மொயிதே றாவிடத்தில் அரண்மனை சர்கில் உத்தியோகம்கொடுக்கும் போது ஷெட்டியாரிடம் வாங்கின நடவடிக்கைப் பத்திரம்.

யெனவாரி

1) கட்டுமாவடி பட்டணம் அரண்மனையைச் சேர்ந்தது யென்று நிருபிக்க ஆதரவுகள்.

2) அரண்மனை இலாகாவில் இருந்த உப்பளம் கவுண்ட்மெண்ட்டார் ஒப்புக்கொண்டு பதில் கிராமங்கள் விட்ட கைபியத்து[247]

3) சத்திரம் வகையறா ஆதாயம் சிலவு கணக்கு அனுப்பும்படி ரிசிடெண்ட் துரையவர்கள் கேட்டதற்குத் தயார் ஆன கணக்கு.

---

240. அமர்சிங்கு - கி.பி. 1788 முதல் 98 வரை ஆட்சி செய்தவர்

241. மிராசுதார்களுக்கு 40 வாரம்: குடிவாரம் 2 மேல் வாரம் 3 ஆக இருந்தது. அதாவது 100இல் மேல் வாரம் 60 ஆகிறது. மிராசுதார்க்கு 60 இல் 40 என்று கொண்டால் முன்னே அவர்கட்கு 60ல் 40 இல்லை என்றும், இப்பொழுது அவர்க்கு 40 அளித்தமையின் சர்காருக்கு நஷ்டம் ஏற்பட்டது என்றும் தெரிகிறது (பக்கம் 27)

242. உசத்தி செய்து - உயர்த்தி

243. இக்கோயில் தஞ்சை நாணயக்காரச் செட்டித் தெருவின் கிழக்கே உயர்ந்த இடத்தில் இருக்கிறது. தொப்பைக்கு ஆரம் கேட்ட பிள்ளையார் என்பது தொப்பாரங்கட்டி பிள்ளையார் என்றாயிற்று என்பர்

244. அபிவேஜி - சொத்து இருப்பு

245. திருவாதி - திருவையாறு

246. தர்கா - பள்ளிவாசல்

247. கைபியத்து - கைபீது - விவரக்குறிப்பு

4) திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி கோயில் ஸர்வமானிய சிகா நகல்கள்.

34) சிவாஜி மகாராஜா இறந்து போன பின்பு யானை, குதிரை விற்று முதல் ஜாபிதா.

11) பழனி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு நிலம் அளந்துவிட்ட ஆதரவு.

26) தஞ்சாவூர் கோட்டை அலங்கம்[248] புருசுகள்[249] இவ்வளவு அதன்பேரில் யேற்றப்பட்ட பீரங்கிகள் இவ்வளவு ஷை பீரங்கிகளுக்குக் குண்டு இவ்வளவு யென்று 'நிஷ்கரிகைஷ[250] செய்யப்பட்ட விபரமான ஜாபிதா ஏடு 19

32) ஸ்ரீகாமாட்சியம்மாள் கோவில்[251] பூஜை நைவேத்தியம் ஆள்மாகாண வரவு சிலவு கணக்கும் வரும்படிகளும் கணக்கு 10 மாதத்தில் சிலவு ஆன கணக்கும்.

41) ஸ்ரீசரபோஜி மகாராஜா அவர்கள் பரதேசி ஜனங்களுடைய சாப்பாட்டுச் சிலவுக்காக சென்னைப்பட்டணம் பாதிரியார் அவர்களிடம் துகை அனுப்பின ஆதாயம் சிலவு கணக்கு.

43) மதுரை ஸ்ரீமீனாக்ஷி அம்மனுக்குத் திருவாசலுக்குத் தங்கமுலாம் செய்து கொடுத்த ஆதாயம் சிலவு கணக்கு.

59) திருவையாறு சப்தஸ்தானம்[252] சுவாமி கண்டு ஊரில்[253] வரும்போது பானக பூஜை சிலவு ஜாபிதா.

சென்னப்பட்டணம் கவர்னர் அவர்கள் வந்ததற்குச் சிலவான ஜாபிதா:

வருண ஜெபம்[254] ரத்திராபிஷேகம்[255] ஜாபிதாக்கள்

---

248. அலங்கம் - கொத்தளம் - மதிலுறுப்புக்களுள் ஒன்று; (Defensive erection on the top of a rampart)

249. புருசுகள் - ஏவுகணைகள்

250. நிஷ்கர்ஷை - உறுதி

251. இக்கோயில் மேல வீதியிலுள்ளது (பக்கம் 213 இல் 7)

252. திருவையாறு சப்தஸ்தானம் - சுவாமி எழுந்தருளும் ஏழூர்கள்: திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், திருவையாறு.

253. கண்டு ஊர் - கண்டியூர்

254. வருணஜெபம் - மழை வேண்டி வருணனை நோக்கி வேதமந்திரங்களை ஜபித்தல்

255. ருத்திராபிஷேகம் - திருவுருத்திர மந்திரத்தை ஒதிக்கொண்டே தூய நீரால் அபிஷேகம் செய்வது திருவுருத்திரம் (ஸ்ரீருத்ரம்) வேதத்தின் நடுநாயகமாக இருக்கும் மந்திரமாகும். த்ரயீ என்பது இருக்கு யசுர் சாம வேதங்களைக் குறிக்கும்; இவற்றுள் நடுவனது யசுர்; யசுர் வேதத்தின் நடுவண் இருப்பது திருவுருத்திரம். இத்திருவுருத்திரத்தின் நடுவில் விளங்குவது "சிவ" என்ற மந்திரமாகும் (பக்கம் 379)

ஸ்ரீரெங்கம் ரெங்கனாத சுவாமிக்கு அரண்மனையிலிருந்து நடப்பிவித்து வருகிற அகண்ட தீபம் துளசி அர்ச்சனை நைவேத்தியம் இவைகளுக்குச் சர்கில் பாபாஜி ராமாஜி பண்டிதர் செய்த ஏற்பாடு.

53) ஸ்ரீசரபோஜி மகாராஜா அவர்களுக்கு 1798 ஆம் பட்டாபிஷேகமான முதற்கொண்டு 1831 ஆம் வரைக்கும் அரண்மனையில் கல்யாணம் சுபகாரியம் ஆனதற்கு ஜாபிதா.

## ஆவணம் எண் 15

கிழவாசல் ஸ்ரீகோதண்ட ராமசுவாமி கோவிலுக்கு[256] நிலம் வாங்கிவிட்டு இருந்ததில் 1876 ஆம் டிசம்பர்மீ வரைக்கும் சறாப்பு[257] சேஷப்பய்யரிடத்திலிருந்து தீர்த்து வாங்கிக் கொண்ட கணக்கில் வரவு சிலவு போக பாக்கி ரூ. 261-6 (முகப்பில் ஸ்ரீராம் சுவாமி கோவில் தேவஸ்தானம் என்றுளது)

## ஆவணம் எண் 16

ஸ்ரீமகாராஜா[258] சாயேபு அவர்கள் தீவானத்துக்குத்[259] திருவாதி தாலுகா வல்லத்திலிருக்கும் இஞ்சனீயர் சிதம்பரம் பிள்ளை குமாரன் சிவசுப்பிரமணியன் மிகுந்த வணக்கத்துடன் தெண்டனிட்டெழுதிக் கொண்ட மனுயென்னவென்றால்.

யென் தகப்பனார் சூஎளஎயிரு ஆம்[260] முதல் கும்பனியில் சவுதறன் டிவிஷன்[261] இஞ்சனீயர் டிபார்ட்மெண்டில்[262] கணக்கு உத்தியோகமா யிருக்கும்போது இந்தக் கோட்டை வெளியில் நந்தவனம் தண்ணீர்ப்பந்தல் கொள்ளுக்கஞ்சிச் சாவடி கெணர்கள்[263] பசுக்கள் தண்ணீர் குடிக்கிற பெரியதாய் ௲ தொட்டியும் கட்டி கோட்டைக்குள் அய்யங்குளம்[264] வடகரையில் ஒரு கோவிலும் கட்டிப் பின்னும் சிலதர்மங்களும் வெகுபணங்களைச்

---

256. (பக்கம் 213இல் 25)

257. சறாப்பு - சரா:ப் - பணம் வரவு செலவு செய்பவன்

258. மகாராசா என்றது இரண்டாம் சிவாஜியை

259. தீவானத்துக்கு - முன்னிலைக்கு

260. 1775 ஆம் வருஷம்

261. Southern Division - தெற்குப் பகுதி

262. Engineering Department - பொறியியல் துறை

263. கெணர்கள் - கிணறுகள்

264. அய்யங்குளம் - (பக்கம் 213இல் 10)

சிலவழித்து யென்தகப்பனார் தர்மம் செய்து வந்ததும் ஷெ காரிஷன்[265] யெந்த இடத்திலிருந்தாலும் அவ்விடங்களிலிருந்தும் சிலவுகளுக்கு கொடுத்துனுப்பியும் யிந்த அரமனையிலாகா மகமை[266] அயிவேசியில்[267] குடுத்து வந்து திருவிளக்கெண்ணெயையும் வாங்கி ஷெ கோவிலுக்குத் திருவிளக்கும் வைத்து பூசை நெய்வேத்தியமும்[268] நடந்து வருகையில் என் தகப்பனார் இறந்துபோனார். பிறகு நான் யிந்த இலாகா விளாரு வகையறா அவாள் உத்தியோகத்தி லிருக்கையில் அரண்மனைக்கி ரொம்பவும் கூடுதல்களும், பழ முதல் பாக்கிகளும் வசூல் செய்து, யெனக்கு வந்த சம்பளத்தைக் கொண்டும் என் தம்பி யேகனாயகம் சபையில் ஜவாபுநவிஷ்[269] அலுவலிலிருக்கும் போது அவனுக்கு வந்த சம்பளத்தைக்கொண்டும், நாங்களும் காலக்ஷேபம் பண்ணிக்கொண்டு ஷெ கோயில் பூசைக்குக் கொடுத்து வரும்போது மேலெழுதியபடி யென் தகப்பனாராலுண்டு பண்ணின ஷெ கோட்டை வெளி தர்மங்களை இப்போ அரண்மனையாரவர்கள் நீலகிரிப் பேட்டை யென்று உண்டுபண்ணி இருக்கிறதில் பலவந்தமாய் சேத்துக் கொண்டது மல்லாமல் முத்திரை சபையில்[270] வெகுவாளாய் என் தம்பி ஜவாப்புக்காரன்[271] அலுவலிலிருந்து பாத்துவரையில் அவன் காயலாயிருக்கையில் மத்திஸ்தர் உத்திரவுப்படி னான் ஒருவருஷம் வரையில் ஜவாபு நவிஷ்[272] அலுவல் பார்த்து வந்தும் யென் தம்பி இறந்துபோன பிறகும் நானிருந்து அலுவல் பாத்து வந்த உண்மையையும் யென்பேராலந்த அலுவலாக வேணுமென்றுஷெ. மத்தியஸ்தர் சமூகத்துக்குப் பத்திரம் எழுதியிருந்தும் இதுவரையில் யெனது பேறாலந்த அலுவலாகாதது னாலும் கோட்டைக்குள்ளிருந்த ஷெ கோவில் சிரணிச்சுப்[273] போனதை அரண்மனை கிறுபையினாலே னான்பல உபாயங்களாய் சிரண உத்தாரணம்[274] பண்ணி வச்சுவெகு குடும்பங்களுடனே னான் கஷ்டப்படுகிறது மல்லாமல் முன்யென் தகப்பனார் கும்பணி உத்தியோகத்தில் வெகுநாளிருந்து வெகு பிரயாசைப்பட்டு வெகு பணம் சிலவழித்து செய்த ஷெ தர்மங்களை னான் செய்ய

265. ஷை காரிஷன் - ஷயார் என்று படிக்கவும்

266. மகமை - கோயிலுக்குக் கொடுக்கும் உதவித் தொகை

267. அயிவேசி - பொருள்

268. நெய்வேத்தியம் - நைவேத்தியம் - நிவேதனம் - கடவுளுக்குப் படைக்கும் உணவு

269. ஜவாபு நவிஷ் - சவாபுகாரன் பொறுப்பாளி

270. முத்திரைசபை - முத்திரித சபை; 1800 முதல் தஞ்சையில் இருந்த நான்கு வழக்குமன்றங்களில் ஒன்று

271. ஜவாப்புக்காரன் - ஜவாப்நவிஷ் - நீதிபதியின் துபாஷி அல்லது செயலர்

272. ஜவாபுநவிஷ் - ஜவாப்நவிஸ்

273. சிரணச்சு - பழுதாகி

274. சிரணத்தாரணம் பண்ணி - பழுதுபார்த்த

வேணுமென்கிற விசுவாசம் யெனுக்கு ரொம்பவும் யிருப்பதால் யிதுகளையெல்லாம் வைத்துத் தாங்கும்படியாயும் ஷெ கோவில் பூசை நடந்துவரும் படியாயும் அனேகம் தேவாலயம்[275] பிறமாலையங்களையும்[276] சவரக்ஷனை[277] செய்துஅனேகம் குடும்பங்களை ரட்சித்து[278] வருகிற அரண்மனையாரவர்கள் யெனக்குத் தகுந்த அலுவல் செய்து கொடுத்து, ரட்சிக்க வேணுமென்றும், னானந்துஸு[279] ஏப்ரல் மீ சு உ யில் சமூகத்தில் யாதி[280] குடுத்திருக்கிறேன். அதுக்கு யிதுவரையில் யாதொரு உத்திரவுமாகாததுனாலும், இப்படிக்கி அரண்மனையாரவர்கள் ஏழையாகிய னான் கொடுத்த யாதிக்கி யாதொரு உத்திரவு கொடாமலிருந்தால் ஷெ தர்மங்களும் ஷெ கோவில் பூசை முதலானதும் யென்குடும்ப சவறக்ஷணையும் யெப்படி நிர்வாகிக்கலாம் ஆகையால், அரண்மனையாரவர்கள் கிறுபை செய்து ஏப்ரல் மீ சு உ யில் னான் சமூகத்தில் கொடுத்திருக்கிற யாதியையும் யிந்த மனுவையும் பாத்து ஷெ தர்மங்கள் நடக்கும்படியாயும் யென் தம்பியினுடைய சம்சாரங்களுடனே நான் கஷ்டப்படாமலிருக்கும்படிக்கும் யெனக்குத் தகுந்த சீவனம் செய்து கொடுத்து ரெட்சிக்க வேணுமென்றுமிகவும் மன்றாடி கேட்டுக் கொள்கிறேன். வேணும் விண்ணப்பம்.

சூஅ ள சுயி சுஆம் ஸு[281] சிவசுப்பிரமணியன்
மே மீ உ உ கையெழுத்து

# ஆவணம் எண் : 17

ஸ்ரீமகாராஜா[282] சாயேபு அவர்கள் திவானத்துக்கு[283] கோட்டைக்குள் கிழவாசல் சிங்கப்பெருமாள் கோவில்[284] ஸ்தானீகம்[285]. இறந்து போன கோபாலய்யங்கார் பெண்சாதி செங்கமலம்மாள் யெழுதிக் கொடுத்த மனுயென்ன வென்றால்.

---

275. தேவாலயம் - கோயில்
276. பிரமாலயம் - அந்தணர் வீடு
277. சம்ரக்ஷணை - காப்பாற்றுதல்
278. ரட்சித்து - காப்பாற்றி
279. ஆனந்த வருஷம்
280. யாதி - விண்ணப்பம்
281. 1846 ஆம் வருஷம்
282. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை
283. திவானத்துக்கு - திருமுன்பு
284. இக்கோவில் (பக்கம் 213 இல் 24)
285. ஸ்தானிகம் - கோயிலுக்குப் பரம்பரை உரிமையுடையவர்

யென் புருஷனுக்குச் சிறியதாயார் பிள்ளையான சீர்காழி தாலுக்கா வேதறாசபுரம் கிறாமத்திலிருந்துஇந்த ஊருக்கு வந்திருக்கிற முத்துசாமி அய்யங்கார் யென்பவன் தனக்கு என் புருஷன் காயலாவாயிருக்கும் போது ஷெ சிங்கப்பெருமாள் கோவில் ஸ்தானீகத்தை இனாஞ்சாசனம் பண்ணிக் கொடுத்தது போல் ஒரு ஆதரவு[286] கல்ப்பனை[287] செய்து, வைத்துக் கொண்டு, அந்தப்படி ஷெ ஸ்தானீகம் தன்பேராலாக வேணுமென்று ஷெ யான் அரண்மனையில் யாதி[288] கொடுத்து அந்த யாதி தேவஸ்தானங்கச்சேரிக்கு விசாரணைக்குப் போனவிடத்தில் ஷெ கச்சேரி பதக்கனீசு[289] அய்யறவர்கள்ஷெ யாதியைப் பத்தி விசாரணை செய்து ஷெ ஸ்தானீகம் உனக்குக் கிடைக்கக் காரணமில்லையென்று ஷெ முத்துச்சாமி அய்யங்காருக்கு தாக்கிதை பண்ணி[290] ஷெயாதியைத் தள்ளுபடி செய்து போட்டார்கள். அப்பால் என்புருஷன் ரு - மாதத்தைக்கு முன் இறந்து போய்விட்டார். அவர் பேராலிருந்த ஸ்தானீகம் இன்னம் யென்பேறாலாக வில்லை. ஷெ முத்துசாமி அய்யங்கார் யென்பவன் எனக்கு மாமியாரும்[291] ஷெயானுக்குப் பெரிய தாயாருமான தாயம்மா ளென்பவளை உள்க்கைச் சேர்த்துக் கொண்டு என்புருஷன் யேதோ இனாஞ் சாசனம் பண்ணி கொடுத்தது போல கற்பனை செய்திருக்கிற பெறட்டாதிரவைப்பத்தி[292] ஸ்தானீகம் தன் பேராலாக வேணுமென்று தேவஸ்தானம் கச்சேரியைச் சேர்ந்த விஷயத்தை ஷெ யான் சுனாசமாய்[293] சீவலில்[294] பிராது செய்து நியாயம் பெத்துக் கொள்ளலாமென்கிறதா யென்னனி என்பேரிலும் என் மாமியாளான தாயம்மாள் பேரிலும் சீவல்[295] பிராதாய் பாப்பர்[296] பிராது கொடுத்து, அது முத்திரித சபைக்கு[297] விசாரணைக்கு வந்திருக்கிறது. ஆகையால் அரண்மனையாரவர்கள் ஏழையின் பேரில் கிருபை செய்து ஷெ வியாட்சியம்[298]

---

286. ஆதரவு - பத்திரம்

287. கல்ப்பனை செய்து கொண்டு - உண்டாக்கி

288. யாதி - விண்ணப்பம்

289. பதக்கனீசு - பதக்தார் (பதகம் என்ற கிராமப் பகுதியின் தலைவன்)

290. தாக்கீதை பண்ணி - உத்தரவிட்டு

291. மாமியா - மாமியார்

292. பெறட்டாதரவைப்பத்தி - புரட்டான ஆதாரத்தைப் பற்றி

293. சுனாசமாய் - சுனாயாசமாய் - வருத்தமின்றி; தொல்லையின்றி

294. சீவலில் - சிவிலில்(Civil) - குற்றவியல் சாராத வழக்கு

295. சீவல் - Civil

296. பாப்பர் - பொருளில்லாதவன்

297. முத்திரிதசபை - கி.பி. 1800 முதல் தஞ்சையில் இருந்த நான்கு வழக்கு மன்றங்களில் ஒன்று

298. வியாட்சியம் - வழக்கு

தேவஸ்தானத்தைச் சேர்ந்த விஷையமானதால் ஷெ பிராதைத் தள்ளும்படி செய்து போட்டு அதைப் பத்தி தேவஸ்தானங் கச்சேரியில் வேறு பிராது செய்து கொள்ளும்படியாவது அல்லது அந்தப் பிராதைத் தானே தேவஸ்தானம் கச்சேரி விசாரணைக்கு அனுப்பிவிக்கும் படியாவது முத்திரத சபையாரவர்களுக்கு உத்திரவாக வேணு மென்று, மிகவும் மன்றாடி கேட்டுக் கொள்ளுகிறேன். வேணும்.

து அ ள சமீ எ ஞு[299]
சூலாயி மீ ங ய க ஒ

இந்தக்கிரல்
செங்கமலத்தம்மாள்

ஸ்ரீமகாராஜா சாயபு
அவர்களுடைய தீவானத்துக்கு[300]

கோட்டைக்குள் கிழவாசல் ஸ்ரீசிங்கப்பெருமாள் கோவில்[301] ஸ்தானீகம் இறந்துபோன கோபாலய்யங்கார் தாயார் தாயம்மாள் மிகவும் வணக்கமா யெழுதிக் கொடுத்த யாதி

யென்னவென்றால் என்பிள்ளையாகிய ஷெ கோபாலய்யங்கார் நாளது மீ[302] உ ய வயில் இறந்து போனான். ஷெயான் கர்மம் பண்ண வேண்டியதுக்கு நான் கிழவி யென்னாட்டுப் பெண் சிறுவயதுள்ளவள். யெங்களுக்குச் சொந்த பாத்தியஸ்தாள்[303] யாருமில்லை. யிந்த முகாந்திரத்தினாலும்[304] ஷெ என் மகன் நானூறு ரூபாய் சொச்சம் வரையில் கடன் செய்து போட்டு போனபடியாலும் நான் பாலியத்தில்த்தானே[305] கொண்டு வந்து வளர்த்து, யெனுக்கும் என்னாட்டு பெண்ணுக்கும் யிப்போ சமுறக்ஷணை[306] செய்து வருகிறவனுமாகியஎன் தங்கை மகனான முத்துசாமி என்பவனுக்குத் தானேஷெ கடனுக்கும் ஆஸ்த்திக்கும் பாத்தியப்பட்டு ஷெ பெண்[307] கையில் தற்பை[308] வாங்கி கொண்டு ஷெ

299. 1847 ஆம் வருஷம்

300. தீவானத்துக்கு - திருமுன்னிலைக்கு

301. பார்க்க (பக்.215 இல் 24)

302. நாளது மீ - அதே மாதத்தில்

303. பாத்தியஸ்தான் - உறவினர்

304. முகாந்திரம் - காரணம்

305. பாலியத்தில் - இளமைப்பருவத்தில்

306. சமுறட்சணை - காப்பாற்றுதல்

307. பெண் என்றது தன் மருமகள் ஆகிய செங்கமலத்தம்மாளை

308. தற்பை - தருப்பை - பூசைப்புல்
பெண், நீத்தார்க்குச் செய்ய வேண்டிய கடமைகளைத் தானே செய்யத் தகுதியில்லாதவள் ஆகலின், அவளிடத்திலிருந்து தருப்பையைப் பெற்றுப் பிறன் ஒருவன் அக்கடன்களைச் செய்யலாம் என்பது விதி.

கர்மத்தை செய்து யெங்களிருவருக்கும் சமுறக்ஷணை செய்யும்படி என் பந்துக்களும், தெருவாரும் நாங்களும் சொன்னோம். ஷெ முத்துசாமி யெங்களுடைய தயினனியத்தைப்[309] பாராமல் சர்காரிலிருந்து வந்த பணத்துடன் இன்னும் கடனும் வாங்கி அந்தப்படி கர்மம் செய்து வந்தான். ஆனால் இன்றைத்தினம்ஷெ பெண[310] தகப்பனாகிய கோபாலய்யங்கார்[311] யென்பவன் ஷெ முத்துசாமிக்குக்[312] கர்மம் செய்ய விடாமல் மரிச்சியிருக்கிறான். அவனை நீ அப்படிச் செய்யப்படா தென்றும் கடனுக்கும் ஆஸ்திக்கும் பாத்தியப்படுகுறதாயிருந்தால் அதற்குப் பாத்தியப்பட்டும் கிறயது செயது, யெங்களுக்குச் சமுறக்ஷணை செய்யச் சொல்லிச் சொன்னதற்கும் அதையும் கேளாமல் அடாத்து[313] செய்கிறான். அவன்[314] மரிச்சபடியால் ஷெ முத்துசாமி[315] நான் கற்மம் செய்ய மாட்டேனென்றும் நானே கடன் ஆஸ்தி வகையறாவுக்குப் பாத்தியப்பட வேண்டியதா யிருந்தால் அந்தப்பெண்[316] வாய்மொழியாயிப்போ சொல்லுகிறபடிக்கி அவளும், அவள் தகப்பனும்[317] ஓ.ஸா.[318] தனக்குச் செய்து கொடுக்க வேணுமென்றும் சொல்லுகிறான். இந்த யிரண்டு தகராறினாலே இன்றைய தினம் நடக்க வேண்டிய கர்மம் நின்று போகிறதா யிருக்கிறது.

ஆகையால் ஏழையாகிய எங்கள் பேரில் அரண்மனையார் தயவுசெய்து, யிது சங்கதியை விசாரணை செய்து , ஷெ பெண்ணுடைய தகப்பன்[319] ஷெ கடனையும் ஆஸ்தியையும் ஒப்புக்கொண்டு தர்மமும் நடப்பிவித்து யெங்களுக்குச் சமுறக்ஷணை செய்யும்படிக்காவது அல்லது அந்தப்படி செய்ய அவனுக்கு மனமில்லா விட்டால் ஷெ முத்துசாமி கேட்கிறபடி அவனுக்கு ஒரு ஆதரவு யெழுதிக் கொடுத்து யெங்களுக்கு யாதொரு தொந்திரவு செய்யாமலிருக்கும்படிக்கு ஷெ கோபா லய்யங்காருக்குக் கர்மம் நடக்கும்படி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தக்கிறல்

உ ௰ ரு உ தாயம்மாள்[320]

309. தயினனியம் - தயினியம் - ஏழ்மை

310. பெண் என்றது மருமகள் ஆகிய செங்கமலத்தம்மாளை

311. பெண் தகப்பனாகிய கோபாலய்யங்கார் என்றது இறந்துபட்ட கோபாலய்யங்காரின் மாமனாரை

312. முத்துசாமிக்கு - முத்துசாமியை

313. அடாத்து - பலாத்காரம்

314. அவன் என்றது கோபாலய்யங்காரை

315. முத்துசாமி என்றது தாயம்மாளின் தங்கை மகன்

316. அந்தப்பெண் என்றது செங்கமலத்தம்மாளை

317. அவள் தகப்பன் என்றது கோபாலய்யங்காரை

318. ஓ.ஸா - ஒரு சாசனம்

319. ஷெ பெண் என்றது செங்கமலத்தம்மாளை. ஷெ பெண்ணின் தகப்பன் என்றது கோபாலய்யங்காரை

320. தாயம்மாள் என்றது இறந்து போன கோபாலய்யங்காரின் தாயை

## ஆவணம் எண் 18

தஞ்சாவூர் சிமையின் ரெசிடெண்ட் அலுவல் பார்க்கிற ஜே. எப்பிஷப் துரை அவர்கள் சமுஷ்ஷேபத்துக்கு[321]

ரூ அ ள சுய ந ஞு[322] த்திய தர்ம சபையின் அப்பீல் யி வது நம்பரின் வாதி அருணகிரி விருப்பாக்ஷி[323] தேவர் சலாஞ் செய்து யெழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்-

முதலாவது ஷெ நம்பரின் பிரதிவாதி மல்லிகார்ச்சின் விருப்பாக்ஷி தேவர் என்கிற அப்பு விருப்பாக்ஷி தேவர்-க -சுப்பிரமணியன்-உ-யிவர்கள் பேரில் கோட்டைக்குள் கீழ் அலங்கத் தெருவிலிருக்கும் வாதியின் ஆதீனத்தைச் சேர்ந்தசிவபூஜை மடத்தை பாகஸ்தனை[324] அறியாமல் முதல் பிரதிவாதி உ ஆவது பிரதிவாதி யிடத்தில் ஷெ ஆதீனச் சொத்துகளுக்கு ரூஅ ள உ யி ச[325] ஞுத்திய அப்பீல்[326] உ யி உ ஆவது நம்பரில் கோர்ட்டிலான[327] தீர்ப்பு நிபந்தனைக்கு விரோதமாய் ஷெமடத்தை ஒத்திவைத்து[328] அட.......னதை யெங்கள் வமுஷபாரம்பரையாகப்[329] பாகஸ்தாளுக்குப் பிரிவினையாகாமல் நாங்களனுபவித்து வருகிற ஷெ ஆதீனத்தில் மடம் சேர்த்துத் தரவேணுமென்று பிலபவ[330] ஞுத்திய சுள சுயி க வது[331] நம்பரில் கொடுத்த அசல் பிராதின் விசராணை முடிவாகித் தீர்மானித்து இருக்கிற தீர்ப்பில் ஷெ ஆதீன செசத்துக்களுனான் பாத்தியஸ்த்தமாயிருக்கிறபடி தீர்மானித்தவர் ஷெ மடத்தை ஆதின கர்த்தன் சுவாதினத்தில் உ-வது பிரதிவாதி ஒப்புவிக்கிறது போலும் ஏதோ வானும்

---

321. சமுஷ்ஷேபம் - சமுகம் (திருமுன்னிலைக்கு)

322. 1843

323. விருப்பாக்ஷி - விரூபாட்சி (விரூபாட்சன் என்பது சிவபெருமானைக் குறிக்கும் பெயர்)

324. பாகஸ்தன் - பங்குக்கு உரியவன்

325. 1824

326. அப்பீல் - மேல் முறையீடு

327. கோர்ட்டு - வழக்கு மன்றம் (Court)

328. ஒத்திவைத்து - அடைமானம் வைத்து

329. வமுஷபாரம்பரை - குலமுறை; வழிவழி

330. பிலபவ - பிலவ - அறுபது ஆண்டுகளில் 35 ஆவது ஆண்டு

331. 661 ஆவது

கொடுக்க வேண்டியது போலும் ரெண்டு பிரதிவாதிகளும் சிலவு துகை கொடாதிருக்கும்படி கண்டு எழுதி ௲ அ ள சுழு ந[332] ஷூட த்திய ஜனவரி மீ ழு கூவயில் முத்திரை சபையில்[333] திர்மானித்து யிருக்கிறார்கள்.

உ - ஆவது ஷெ அசல் திர்ப்பு சம்மதமில்லாததுனால்.......ஷூத்திய பிப்ரவரி மீ ய அ வயில் கொடுத்த அப்பீல் பிராதைத் தரவித்து[334] தற்மம் சபையாற்கு[335] லாங்கிஷமாய்[336] விசாரணை செய்து திர்மானித்திருக்கிற ஷெ அப்பீல் திர்ப்பில் ஷெ ஆதீன ஸ்திதிகளை[337] தானாதி[338] கிரையம் வகையறாக்கள்[339] ஆதீன கர்த்தனா ஏற்படுகிறவன் செய்யக்கூடாதென்றும் அதை ஒருவரும் வாங்கக் கூடாதென்றும், ஒரு வேளை வாங்கினதாய் நியாயஸ்தலத்தில் அறிவித்தால் ஷெ ஆதீன சொத்துக்கள் அப்புறப்படுத்தாமல் ..........கொடுத்து ஷெ தர்மத்தைப் பரிபாலனம் செய்து வரவேணுமென்று வாதியின் பிராதில் கண்ட நாங்கெல்லை[340]க்குட் பட்ட மடம் தான்ரெண்டு அதை ஷெ ஆதீனத்தில் சேர்த்து விடுகிறதென்று பிரதிவாதி பத்திரம் வாங்கி யிருக்கிற படிக்கி உ - வது பிரதிவாதிக்கு அயிவேஜீ பண்ண வேணுமென்று ஷெ மடத்தின் பேரில் சாசனத்துக்கு கெடுயிருந்த போதிலும் அந்தக் கெடு தேவையில்லாமல் ஷெ மடத்தை ஆதீனத்தில் சேர்த்து விடுகிறதென்றும் ரெண்டு பிரதிவாதிகளும் அசல்சபை யுள்பட வாதியின் சிலவுதுகை ரூ. ய[341] கொடுக்க வேணுமென்று சிவில் முகாந்திரங்களைக் கண்டு யெழுதி அசல் திர்ப்பைத் தள்ளுபடி செய்து ௲ அ ள சுய ந ஷூத்திய ஜூன் மீ உ ய சுஉ[342] யில் தர்ம சபையில் ஷெ அப்பீலில் திர்மானித்து யிருக்கிறார்கள்.

ந - வது ஷெ அப்பீல் திர்ப்பின் கெடு முடிவான பிற்பாடு திர்ப்பு நிறைவேற்றும்படி சுழு ந[343] ஷெத்திய டிசம்பர் மீ உ உ யிலும் சுழு சு[344] ஷூத்திய ஜனவரி மீ ய க உ யிலுமாய் கொடுத்த

332. 1843

333. முத்திரை சபை - முத்திரித சபை (நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று)

334. தரவித்து - தருவித்து

335. தர்மம் சபையாற்கு - தருமசபையார்க்கு (தருமசபை ஒன்றும் நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று)

336. லாங்கிஷமாய் (?)

337. ஸ்திதிகள் - சொத்துக்கள்

338. தானாதி - தானம் முதலிய

339. கிரையம் வகையறாக்கள் - விற்றல் முதலியவை

340. நாங்கெல்லை - நான்கெல்லை

341. ரூய - ரூபாபத்து

342. 24-6-1843

343. 43 (1843)

344. 44 (1844)

மனுவுக்கு மடம் ஒழிக்கும்படி முகதாவில்[345] பிரதிவாதிகளுக்கு, தாக்கிதை செய்தும் தனித்தனியே ரெண்டு தடவையில் நோட்டீசு[346] உத்திரவு பிறந்தும் அந்தக்கிரமப்படி பிரதிவாதிகள் நடந்து கொள்ளாததினால் சண்டித்தனமாகிய பிறட்டாய் தீர்ப்புக்கு விரோதஞ் செய்கிறானென்று ஷை சபையார் யெழுதின பத்திரத்தின் பேரில் ஸ்ரீ அரண்மனையாரவர்கள் வாதிபக்கமான தீர்ப்பை நிறைவேத்தும்படி ஷை சபையாளுக்கு உத்திரவாக யெழுதின பத்திரத்தின் பேரில் நியாய சபைக்கு[347] தாக்கீதை[348] நடந்து மடம் ஒளித்து வாதியின் ஆதினத்தில் சேர்த்துவிடும்படியா கொத்தவாலுக்கு[349] தாக்கிதையாகக் கட்டளை புறந்து[350] மடம் ஒளித்துவிடும்படி பிரதிவாதிக்கி தாக்கிதை நடந்ததில் அது அடிக்கிறதா யெதிரிகள் ஒப்புக்கொண்டு குரோதி[351] ஸூ ம் ஆடி மீ எ உ யில் கொத்தவால் சாவடியில் யிருக்கிற அத்தாட்சி ஆகிறவினனால்[352] ஷை தீர்ப்பு முடிவாயிருக்க முதல் பிரதிவாதியின் துர்ப்போதனையினால் உ-வது பிரதிவாதி ஷை தீர்ப்பின் தாபணத்தை[353] நிறுத்த வேண்டுமென்று யிசுபிஜால்[354] அப்பீல்படி செய்து யிருக்கிற டயரி[355] உத்திரவான திர்ப்பினால் ஷை அப்பீல் திர்ப்பை முடிவானதென்று நிறை வேத்தும்படி நியாயாதி சற்சபையில்[356] முடிவாகப் பிறந்த திர்ப்பை யெனக்கு யெழுதிக்கொடாமல் ரெண்டு வருஷமான பிறகு உ -ஆவது பிரதிவாதி............ஷை அப்பீல் திர்ப்பின் பேரில் கொடுத்த யிசுபிசால் அப்பீல் பிராதைத் தள்ளுபடி செய்யாததினால் மங்குமாரி[357] துரை அவர்களிடத்தில் சும் ருஜுத்திய பிப்ரவரிமீ உ ம் சு வயில்[358] கொடுத்த மனுவுக்கு உத்திரவு

345. முகதாவில் - முன்னிலையில்

346. நோட்டீசு - அறிவிப்பு (Notice)

347. நியாயசபை - தஞ்சையிலிருந்த நான்கு வழக்குமன்றங்களில் ஒன்று

348. தாக்கீது - உத்திரவு, ஆணை

349. கொத்தவால் - கோட்டைக்காவலன்

350. புறந்து - பிறந்த

351. குரோதி - பிரபவாதி ஆண்டுகளில் 38ஆவது

352. ஆகிறவினனால் - ஆதரவினால் என்று படிக்க

353. தாபணம் - தாபனம் - நிலைநிறுத்தல்

354. யிசுபிஜால் - இசுபசால்; "கார்பார் பிரசங்கத்தார்" வழக்குக்குரிய ஆவணங்களை வருவித்து ஆய்ந்து "இசுபசால்" என்று அவைக்கு மேல்முறை யீட்டுக்கு அனுப்புவர் என்று தெரிகிறது (பக்கம் 168)

355. டயரி - குறிப்பேடு (Diary)

356. நியாயாதி சற்சபை - நியாயாதீச சபை (பக்கம் 167-168) நான்கு வழக்கு மன்றங்களில் ஒன்று

357. மங்குமாரி - ரிஸிடெண்டு

358. 26-2-1845

பிறந்து அனுப்பின பிற்பாடுஷெயெதிரி கொடுத்த யிசுபிஜால் அப்பீல் பிராது தள்ளும்படி ஆனது. பிறகு திர்ப்பை நிறைவேத்தாமல் துவக்கப்படுத்தி[359] வருவதால் ஷெ துரையவர்களிடத்தில் ஷெ ஷும் ஜூன் மீ ய க உயிலும் அக்டோபர் மீ சுு வயிலும் கொடுத்த மனுவுக்கு முகாந்திரம்[360] யெழுதி அனுப்பும்படி உத்திரவாயிருக்கிறது. பிற்பாடு திர்ப்பு முதலான அடுக்குகளைக் காறுபாற் பிரசங்கத்தில்[361] வரவழைத்துப் பார்த்து ஷெ அப்பீல் திர்ப்பை யுறுதிப்படுத்தி முதல் பிரதிவாதிக்கும் உ ஆவது பிரதிவாதிக்கும் கொடுக்கல் வாங்கல் நடந்து யிருக்கிறதைத் திர்த்துவிட்டு ஸ்ரீசரிலெக்கல்[362] பண்டிதரவர்களும் மறுபடியும் யென் பக்கமான ஷெ திர்ப்பில் திர்ப்பை நிறைவேற்றும்படி உத்திரவாகப் பத்திரம் யெழுதி அனுப்பியிருக்கிறார்கள்.

சு-ஆவது உத்திரவின் பேரில் கொத்தவால் சேவுகர் முதலானவர்கள் ஷெ மடத்தை ஒழித்து வாதியின் வசம் விட வந்தபோது ஷெ மடத்தில் யிருந்த கதவு பூட்டு திறவாமல் முதல் பிரதிவாதி அற.....சொன்னதில் அக்கம் பக்கம் வீட்டுக்காரன், செட்டி வர்த்தகாளை வைத்துக் கொல்லனைக் கொண்டு பூட்டு திறந்து அதிலிருந்த சாமான் வகையாறாக்கள் கண்டுயெழுதி சபுத்தியாகச் செய்து[363] தூஅ ள சுய[364] ஷுடத்திய ஆனி மீ ய க உயில் சபுத்தியாகப் பிறந்த ஆதரவில் கண்ட சாமான் வகையறாக்களைக் காலி பண்ணிவிட்டு ஷெ திர்ப்பை நிறைவேற்றிக் கொடாமல் சு ஷுடத்தியகாலமாயி சபையாதரவுக்குப் படுத்தி வருகிறதால் துரையவர்களிடத்தில் சுய எ[365] ஷுடத்திய மாசி மீத்திலும் செப்டம்பர் மீ அ உயிலும் ய உயிலும் அக்டோபர் உ ய ரு உயிலுமாய் நான் தபால் மார்க்கமாய் கொடுத்த மனுவுக்கு உத்திரவாகி அனுப்பியிருக்கிறதைக் குறித்து முகாந்திரம் யெழுதினதும் யெழுதாதும் எனக்குத் தெரியாதபடியால் இப்படிக்குத் தயக்கமாய் உத்திரவு பிறக்காமல் இருக்கிறதை யெதிரி அறிந்து கொண்டு திர்ப்புக்கு விரோதமாய்க் கிறமமதபாயி[366] முதல்பிரதிவாதிஷெ ஆதினத்தைச் சேர்ந்த யெந்தவித சொத்துக்களையாவது அப்புறப்படுத்திவர அபாத்திஸ்தா[367]ரென்று கோர்ட்டுத் திர்ப்பினால் திர்மானித்து யிருக்கையில் அதற்குநேரே

359. துவக்கப்படுத்தி - தவக்கப்படுத்தி - தடைசெய்து

360. முகாந்திரம் - காரணம்

361. காறுபாற் பிரசங்கம் - கார்பார் பிரசங்கம்; பணி செய்யும் அலுவலகம்

362. ஸ்ரீசரிலெக்கல் - ஸ்ரீசர்க்கேல்

363. சபுத்தியாகச் செய்து - சப்தி செய்து (சப்தி - சொத்துக்களை அதிகாரிகள் சார்க்கார் வசப்படுத்துதல்)

364. 1840

365. 47 (1847)

366. கிறமமதபாயி - கிரமம் தப்பி என்று திருத்திப்படிக்கலாம்

367. அபாத்திஸ்தார் - பாத்தியமில்லாதவர்

விரோதமான பிறட்டாயி ஷை மடத்தின் பேரில் ஒத்தி சாஸனம் பிறப்பிவித்து முதல் பிரதிவாதி கையெழுத்துப் போட்டுக் கொடுத்து அப்புறப்படுத்தியிருந்த ஷை ஆதரவு செல்லாதென்று ஷை சபையார் தள்ளுபடி செய்து தீர்மானித்திருக்கிற ஷை அப்பீல் திர்ப்பினால் தெரியவரும்படியாயும் ருசுவாயிருக்கையில் ஷை திர்ப்புகளைக் கவனித்துப் பார்த்து நடவாமல் மறுபடியும் பிறட்டாயி[368] நாங்கள்குடியிருந்துபுழங்கி வருகிற யெங்கள் ஆதினத்தைச் சேர்ந்த மடத்தை முதல் பிரதிவாதி ஒத்தி[369] வைத்து அப்புறப்படுத்த யெத்தனப்படுகிறார். அதைக் குறித்து நான் மனு கொடுத்து இருக்க ஷை. யானுக்குத் தகுமான ஏற்பாடு செய்து ஷை ஆதின சொத்துக்களை ஒருவரும் வாங்காமல் யிருக்கும்படியாய் விளம்பரப்படுத்தி ஷை திர்ப்பை நிறைவேற்றிக் கொடுக்கும்படியா யிருக்கிற நியாயங்களை விட்டு ஸ்ரீ துளஜா[370] மகாராஜா சாயபு அவர்கள் நாளையில் இனாமாய் யென் தகப்பன் பேரால் கொடுக்கப்பட்டிருக்கிற பிரமாணிக்கை ஆதரவு[371] என்னிடத்திலிருக்க அந்தப்படியே ஷை ஆதினத்தைச் சேர்ந்த மடத்தாரென்று ஷை ........ திர்ப்பினால் தெரியவரும்படி திர்மானித்திருக்கையில் அதைக்கோயில் விசாரணையில் சேர்க்கிறதாய் அடாத்தாய்[372] ஒருவர் சொத்தை அபபாத்திரமாய்[373] மோகூப்படுகிறது போல தர்மத்துக்கு விரோதமாய் ஷை திர்ப்பில் கண்டுயெழுதி திர்மானிக்காத விஷயங்களைக் குறித்து ஷை சபையார் ஆட்சேபிக்கிறது சட்டத்துக்கும் ஷை திர்ப்புக்களுக்கும் விரோதமாயிருக்கிறது.

ஆகையால் தர்மதுரையவர்கள் ஏழையாகிய பரதேசிகளின் பேரில் கிருபை செய்து ௯௰௯ சு ஷூத்திய ஏப்ரல் மீ ௨ம் உயில் ஷை திர்ப்பை நிறைவேற்றும்படி புறந்துயிருக்கிற நோட்டிசு உத்திரவுபடிக்கும் குரோதி ஷூ ஆடி மீ எ வயில் புறந்து யிருக்கிற அத்தாட்சி ஆதரவினால் யெதிரி ஒப்புக்கொண்டிருக்கிற படிக்கு யிசுபிஜால அப்பீல் சபையில் எதிரி கொடுத்த முத்திரை மனுவைத் தள்ளி புறந்து யிருக்கிற டயரி உத்திரவான திர்ப்புப் படிக்கும் ஸ்ரீ சரிலெக்கல்[374] பண்டிதர் அவர்கள் ரெண்டு தடவையில் கொடுத்திருக்கிற உத்திரவுப்படிக்கு ஷை சுய கூ[375] ஷூத்திய ஆனி மீ ய க வயில் புறந்த யாதி நாமாவில்[376] கண்ட சாமான் வகையறாக்களைக் காலி பண்ணிவிட்டு ஷை திர்ப்பை நிறைவேற்றிக் கொடாமல் ஷை

---

368. பிறட்டாயி - புரட்டாய் - தவறான முறையில்

369. ஒத்தி - அடைமானம்

370. துளஜா: 1765-1787 இல் ஆட்சி செய்த அரசர்

371. பிரமாணிக்கை ஆதரவு - சிகாசன்னது

372. அடாத்தாய் - அகாரணமாய்; பலாத்காரமாய்

373. அபாத்திரம் - தகுதியற்றவர்

374. சரிலெக்கல் - சர்க்கேல்

375. 49 (1849)

376. பிறந்த விண்ணப்பம்

சபையார் விஷயிகால் தாமதப்படுத்தி வருகிறதால் என்னிடத்திலிருக்கிற ஆதரவு முதலான தீர்ப்புகளை துரையவர்களைக் கவனித்து பார்த்து ஷெ மடத்தை ஒழித்து வாதியின் ஷெ ஆதீனத்தில் சேர்த்து விட்டு ரெண்டு பிரதிவாதிகளும் கொடுக்க வேண்டிய சிலவு துகையை வசூல் செய்து வாதிக்குக் கொடுத்து ஷெ அப்பீலில் ம்-வது நம்பரிலான தீர்ப்பை ஷெ சபையார் நிறைவேற்றிக் கொடுக்கும்படி உத்திரவாக வேணுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரு அ ள சுயி அ ஷூ[377] — அருணகிரி விருப்பாக்ஷிதேவர்

நவம்பர் மீ உ ம் சுஉ — கையெழுத்து

## ஆவணம் எண் 19

ஸ்ரீராமசெயம்

ஸ்ரீமது சகல குண சம்பன்னரான[378] அகண்டித[379] லக்ஷிமி பிரசன்னரான[380] பிதற்[381] வாக்கியப் பிறமாணிக்கியரான[382] பந்துசென போஷகரான[383] சிவபூசா துறந்தகறான[384] சுவாமிகார்ய[385] துறந்தறீகரான மகாமேரு சமானதிறரான[386] சாமுதாறானா மத்தியவரும்[387] ராம பாவா சுவாமி பண்டிதர்[388] அவர்களுக்கு அண்ணாசாமி செட்டி சாஷ்டாங்கமாயி[389] தெண்டநிட்ட விண்ணப்பம்.

---

377. 1848 ஆம் வருஷம்

378. சகலகுண சம்பன்னர் - எல்லா நற்பண்புகளும் நிறைந்தவர்

379. அகண்டித - குறைவுபடாத; நிறைவுடைய

380. லக்ஷிமி பிரசன்னம் - செல்வம் (அ) பொருள் தோன்றுதல்

381. பிதிர் - முன்னோர்

382. வாக்கிய பிரமாணிக்கியர் - முன்னோர் சொற்படி நடப்பதில் உண்மையானவர்

383. பந்து செனபோஷகர் - உறவினர்களைக் காப்பவர்

384. சிவபூசா துரந்தகர் - சிவபூசையில் முயன்று நிற்போர்.

385. சுவாமி காரியம் - அரசரது காரியம்

386 தீறரான - தீரர் ஆன

387. சாமுதாறானாமத்தியவர் - சாமுதார் - சமேதார் - இராணுவ தளபதி, ஆனமத்தியவர்

388. பாபா சுவாமி பண்டிதர் - பாபாஜி ராமாஜி பண்டிதர் (பக்.86)

389. சாஷ்டாங்கம் - இருகை, இருமுழங்கால், இருதோள், மார்பு, நெற்றி ஆகிய எட்டுறுப்புகள் நிலம் தீண்டச் செய்யும் நமஸ்காரம்

தங்களுடைய ஆசிர்வாதத்தினாலே நானும் அல்லாரும்[390] சுகமா யிருக்கிறோம். இப்போதும் அரண்மனைக்கு நவராத்திரிப் பண்டிகைக்காக ரொக்கப்பணம் வர்த்தகாளுக்குக் கொடுத்து அவாள் கறிதி பண்ணி[391] என்னிடம் கொடுக்கிறது. நான் வாங்கி தபாலிலே அனுப்புவிக்கும்படியாய் போன வருஷம் அரண்மனை உத்திரவு வாங்கி அனுப்பிவிட்டீர்கள். நான் வந்த புதிது யென்றும், அரண்மனைக்குக் குடிவராமல் போனாலும் அரண்மனை உத்திரவுப்படிக்கு நடக்க வேண்டுமென்றும் அவாள் கோள் முதல்[392] படிக்கு கணக்கு யெழுதி வைத்தாலும், நூத்துக்கு ய அரூ வீதம் லாபம் கொடுத்தால் அரண்மனைக்குக் குடிவருமா. அதுக்குப் பிறகு தாபித்தர்கள் வாங்கி அனுப்பி, வைக்கச் சொல்வி உத்திரவு வந்தபடிக்கு வாங்கி அனுப்பி வைத்தேன்.

அந்தப்படிக்கி இந்த வருஷமும் அரண்மனைக்குத் தேவையான சாமான் கரீதி பண்ணி அனுப்பிவைக்கச் சொல்லி உத்திரவு வருமென்று பார்த்துக்கொண்டு இருந்தேன். அப்படி உத்திரவு வராமல் வர்த்தகாளுக்கு ரொக்க விராகன் கொடுத்து. சரக்கு கரீதி பண்ணி கரீதான சரக்குயெண்ணை வாங்கி அனுப்பிவைக்கச் சொல்லி அரண்மனை காகிதம் எழுதி அனுப்பிவைக்கிறோம் என்றும், தாங்கள் சொன்னதாகவும் வர்த்தகாள் யென்னிடத்தில் வந்து சொன்னார்கள். நல்லதென்று காகிதம் வருமென்றும் கேடேவிதாவிதம் ஆன மூணு னாலுனாள் வரைக்கும் அரண்மனை உத்திரவு வருமென்று பார்த்தேன். உத்திரவு வரவில்லை அதற்கு மேல் நான் வர்த்தகாளைக் கேட்டது என்னவென்றால்:- அரண்மனைக்கு விஜயதசமி பண்டிகை ஐந்தாறுநாள் இருக்கிறபடியினாலேயும் எனக்கு உத்திரவு வராதபடியினாலேயும் நான் நீங்கள் கொடுக்கிற சரக்கு வாங்கி அனுப்பி வைக்கின்றேன். அரண்மனை உத்திரவு இல்லாமல் நான் வாங்கி அனுப்பி வைத்தால் உத்திரவு இல்லாமல் எப்படி வாங்கி அனுப்பி வைத்தீர்கன்று என்னைக் கேட்டால் கொண்டபடி கொடுக்கிறோமென்று உடன்படிக்கை ரசிது கொடுத்தால் நீங்கள் கொடுக்கிற சரக்குகள் வாங்கி அனுப்பி வைக்கிறேனென்று, வர்த்தகாளுக்குச் சொன்னேன். அவாள் அப்படி எழுதிக் கொடுக்கமாட்டோமென்று சொன்னார்கள். ஆகையாலே பண்டிகைக்குச் சரக்குபோய் சேராது போனால் நல்லது அல்லவென்று, வர்த்த காள் முன்பின் வாங்குகிற இடத்திலே சரக்கு வாங்காமல் பக்கத்திலே வர்த்தகாள் சரக்கு வாங்கினார்கள். அந்த வர்த்தகன் இந்தச் சேதி கேட்டு என்கிட்டே வந்து வெகுநாளாய் நாம் அரண்மனைக்கு விலை சகாயமாய்ச் சரக்கு கொடுத்துகொண்டு வந்தேன். உன்னுடைய னாளையிலே வர்த்தகாள் வந்து வாங்கிக் கொண்டு போனார்கள். அவாளுக்குச் சரக்குக் கொடுத்துக் கொண்டு வந்தேன். அந்த வர்த்தகாளும் ஒருத்தர் கரிப்பேச்சு கேட்டுக்கொண்டு என்னிடத்தில் வாங்காமல் பக்கத்தில் வாங்கினார்களென்று

---

390. அலலாரும் - எல்லோரும்

391. கறிதிபண்ணி - விலைக்கு வாங்கி

392. கோள்முதல் - கொள்முதல் - வாங்குபவர்

நிஷ்ட்டூரமாய்[393] என்னிடத்தில் வந்து சொல்லிக்கொண்டார்கள். ஆனால் பக்கத்திலே வர்த்தகாள் வாங்கின விலைக்குஉடமை நல்லதாயும் விலைச் சகாயமாயும் 15 நாள் வாய்தாவுக்கும் கொடுத்தால் வாங்கி அனுப்பி வைக்கிறேன் என்று கேட்டேன். நீங்கள் சொன்னபடி கேட்கிறேன். தேவையானது சரக்கும் கொடுக்கிறேன். விலையும் கால் விராகன் 1/8 விராகன் , உருப்படிக்கு தள்ளிக் கொடுக்கிறேனென்று வந்து பேசினார். அரண்மனைக்கு குடிவருகிற காரியம் சொன்னால் பின் என்ன வேண்டும் என்றும், தங்களுடைய தயவினாலே எனக்குப் பரிட்சை தெரிந்த மட்டுக்கும், நான் பார்த்து வாங்கி அனுப்பி வைத்திருக்க நூத்துக்கு ஐந்து வீதம் தரகு கொடுக்கும்படியாயும் பேசி வாங்கி அனுப்பிவைத்தேன். அப்படிப்பட்ட உடமை நூத்துக்கு 30 விநயமாய் வாங்கி அனுப்பிவைத்த உடைமையே விலைகோரப் பார்த்தார்கள் என்று, உடமையை அனுப்பி வைத்து விட்டு வர்த்தகாளுக்கு நூத்துக்கு ய அளு விராகன் லாபம் கொடுத்து வாங்கிக் கொண்ட உடைமை நயமென்றும், நான் அனுப்பி வைத்த உடைமை வார்த்தகாள் விலைக்கோரப்பார்த்தார்களென்றும், எழுதி வந்ததேபார்த்து யெனக்கு ரொம்ப ஆச்சரியமும் ஆயிற்று. ஆனால் தாங்கள் கண்ணாலே பார்த்தீர்களோ பார்க்கவில்லையோ? பிறகு என்ன பித்தலாட்டங்கள் பண்ணினார்களோ? அது எனக்கு தெரியாது. தங்களுக்கு எழுதினால் தாங்கள் நன்றாக விசாரணை செய்து எனக்கு மறு உத்திரவு எழுதுவீர்களென்று தங்களுக்கு எழுதிக்கொண்டேன். தங்களுடைய கடாக்ஷத்தினாலே அரண்மனை உப்புத் தின்று கொண்டு யெனக்குத் தெரிந்த பரிட்சை மட்டுக்கும் அரண்மனை உத்திரவு படிக்கி வாங்கி அனுப்பி வைத்துக்கொண்டு அரண்மனை சேவுகம் பண்ணிக்கொண்டு இருக்கிறேன். திரும்ப வந்த வுடமையே அந்த வர்த்தகாளிடத்தில் கொடுத்து விட்டேன். வர்த்தகாள் என்னைப் பரியாசம் பண்ணி நல்ல வுடைமையையும் விலை சகாயமாய் போட்டி மேலே ரொக்கபணம் வாங்காமல் வாய்தாவுக்குக் கொடுத்து யிருந்தும் அப்படிப்பட்ட வுடைமையை விலைகோரப் பார்த்தார்களென்றும், பக்கத்து உடைமைக்கு நூத்துக்கு ய அளு லாபமும் கொடுத்ததற்கு னூத்துக்கு-ரு வீதம் யில்லாமலும் விலையிலே கால் விராகன் அரைக்கால் விராகன் தள்ளிக் கொடுத்ததும் -எ- நூத்துக்கு ௩ய வீதம் அதிகம் கொடுத்து வாங்குகிறது. நயமும் நூத்துக்கு ௩ய தள்ளிக் கொடுத்தால் விலை கோரப்பார்த்தார்கள் யென்று சொல்லுகிறதும் சாமூதாறா கானாவிலே நல்ல விசாரணை ஆகுதென்று யென்னைப்பரியாசம் பண்ணிப்போட்டுப் போய்விட்டார்கள். யிந்த சங்கதி தங்களுக்குத் தெரிய வேண்டியதாய் யெழுதிக்கொண்டேன். யிந்த சரக்கு விலை கோரப்பார்த்தார்கள் யென்று யெழுதி வந்தது வர்த்தகாள் கொண்டுவந்து சரக்கு விலையும் நெறையும் கொள்முதலும் அதுக்கு லாபமும் நான்வாங்கி அனுப்பி வைத்து சரக்கு நிறையும் விலையும், வர்த்தகாள் பார்த்த விலையும் விவரமும் யெனக்குத் தெரியவேண்டுமென்று

393. நிஷ்ட்டூரம் - கொடுமை; கடுமை

யெழுதிக்கொண்டேன். வர்த்தகாள் பின்னும் வந்து சேரு.. ங்கே அனுப்பிவிக்க வேணுமென்று யென்னிடத்தில் வந்து சொன்னார்கள். நான் வாங்கி அனுப்பிவிக்கமாட்டே னென்று சொன்னேன். பத்துக்கு ரெண்டு விராகன் மூணு விராகன் அதிகம் கொடுத்து, அவாளிடத்தில் நான் வாங்க வேண்டியது என்னயென்றும், தீபவாளிப் பண்டிகைக்கு உத்திரவு வராதபடியினாலே நான்வாங்கி அனுப்பிவிக்க இல்லை. உத்தரவு வந்தால் அனுப்பி வைக்கிறேனென்று சொன்னேன். யிந்த சங்கதி தெரிய வேண்டியதா யெழுதிக் கொண்டேன். வேணும் சாஷ்ட்டாங்கமாய் தெண்டனிட்ட விண்ணப்பம்.

சுவபானு ஹு[394]
ஐப்பசி மீ ய அ உ

## ஆவணம் எண் 20

தஞ்சாவூர் ஆகட்டியின்[395] ரிசிடெண்ட்ராகிய பறட்டு[396] துரையவர்கள் சமுகத்திற்கு

அரண்மனையில் சேவுகம் பண்ணிவந்த சுப்பறாம சாஸ்த்திரியள் எழுதிக் கொடுத்தவாக்கு மூலம் என்னவென்றால்:-

கோட்டைக்குள் வடக்கு வீதியிலிருக்கும் றாமறாவுஜாதோ யென்பவன் வடக்கே யிருந்து ஒரு பயிறாகு[397] பட்டு யென்பவனை வரவழைத்து மேலவீதியில் சோமனாத பண்டிதர்.[398] வீட்டில் குடிவைத்துக் கொண்டு அவன் சொல்லுகிறபடி ஷெ றாமறாவு முகாந்திரமாயி றாஜசன்னா தானத்தில் தெரியப்படுத்திஷெ பயிறாகி சொன்னபடி ஜெபசாலையென்று ஒண்ணு வைத்து, அதில் வெகுபணம் சிலவாகியும் ஜெப ஓமங்கள் செய்கிற பிறாமணர்களுக்கு வெகு இடைஞ்சலுண்டாகி அதனால் சில பிறாமணர்கள் இறந்து போவார்கள் போலயிருந்து கோட்டைக்குள்ளிருக்கும் சிலர்கள் அப்போயிருந்த ரிசிடெண்ட்ராகிய யெ புபிஷட் துரையவர்கள் சமுகத்துக்கு வாக்குமூலம் எழுதியனுப்பிவித்ததின் பேரில் அந்தத் தர்ம துரையவர்கள் செம்மையாய் விசாரணை செய்து, மேலெழுதியபடி சரியன்று நினைத்து ஷெ பையிராகியைத் துரத்தியும் ஷெ செபசாலைக்கு பாத்தியஸ்த்தனாகிய கோட்டைக்குள் மேலவீதி டபீர் றாமாசுவாமி கோவிலுக்குக் கிழ்கண்டச் சந்திலிருக்கும் வாசுதேவகல் என்பவனையும், ஷெ பைராகியைக் கொண்டு வந்து, சேர்த்து, றாமறாவு என்பவனையுப்

---

394. சுவபானுஹு- சுபானு ஹு - ஆண்டறுபதனுள் 17 ஆவது வருஷம்

395. ஆகட்டியின் - தற்காலிக (Acting)

396. பரட்டு (பக்கம் 67)

397. பயிறாகு - பயிராகி - வடநாட்டுத்துறவி

398. சோமநாத பண்டிதர் (பக்கம் 360)

விசாரணை செய்து, இனி செபசாலையில் பிறாமணர்களை வைத்துத் தொந்திரவு செய்யாமலும் அந்தப் பிராமணர்களை யெடுத்துப்போட வேணுமென்று இனிமேல் அதிகமாய் நடக்கும்படி ஷெ ரெண்டு பேருக்கும் தாக்கிதை செய்து ஷெ அரண்மனை சிரஸ்தேராகிய வெங்கிட்ட றாவு என்பவர் ஜாமீன் பேரில் துரையவர்கள் விட்டு விடும்படியாய் உத்திரவு செய்தார்கள். நான் கொஞ்ச சம்பளக்காரனாகிய என்னை ஷெ வாசுதேவ கவி என்பவன் தான் பரிசுத்தனென்று தப்பிவித்துக் கொள்ளுகிறதற்காக நான் செபசாலை பாத்தியஸ்த்தனென்று பொய்யான முகாந்திரமாய்த் தெரியபடுத்தி என் சேவுகத்துக்குப் பதில் வைத்தும், என்னை அரண்மனைக்குச் சேவுகத்துக்கு வராமலிருக்கும்படியாய் தாக்கிதை செய்திருக்கிறார்கள், அப்படிக்கி யிருக்கத் தான் பரிசுத்த னென்று தெரியப்படுத்தின ஷெ வாசுதேவகவி என்பவன் முன் விவஸ்தை செய்த துரையவர்கள் நீலகிரிக்குச் சவாரி போயிருக்கிறார்கள் யென்கிற தைரியத்தினாலே ராஜ சன்னிதானத்தில் முன்போல துர்நடத்தையான காரியங்களைச் செம்மையாய் ஷெ வாசுதேவ கவியென்பவன் சொல்லி, அவன் துர்போதனை யினால் முன் ஒப்பந்தம் செபசாலையில் பிறாமணர்களை உத்தேசம் த ஜெனவரைக்கும் நூதனமாய் வைத்து, அதற்குப் பாத்தியஸ்த்தனாயி ஷெ வாசுதேவகவியென்பவன் யிருந்து கொண்டு ராப்பகலாய் ஜெபம்பண்ண சொல்லிப் பாராப் போட்டு, பிறாமணர்களைத் தொந்தரவு செய்கிறதினாலும் ராஜகோபால சுவாமி கோவிலில் ஷெ வாசுதேவ கவி நிஷ்ப்பத்தியாய் அவன் யுக்திப்படி பத்திரகாளியென்று ஒரு சிலை பண்ணி வைத்து, அந்தக் காளிக்கு நரமனுஷனை பலி கொடுத்தால் ஷெ காளியென்கிற தேவதை நேரில் வருவாளென்று ஷெவாசுதேவகவி ராஜ சன்னிதானத்தில் சொன்னதினால் ஒரு பெண்ணை, பணம் கொடுத்து அரண்மனைக்கு வேலைக்குத் தேவையென்று சொல்லிக்கருதி பண்ணி வைத்திருக் கிறார்கள். வருகிற பிரதமை அன்றைக்கு வெகு அந்தரங்கமாய் ஷெ கோவிலில் பூசை போட்டு ஷெ காளி சன்னிதானத்தில் பலி கொடுப்பார்கள் போலே யிருக்கிறது. அது ஒரு வேளை வெளிக்கு வந்தால் அந்தப் பெண்ணுக்குப் பாத்தியஸ்த்தி கவுண்ட்மெண்ட் வரைக்கும் போவாள் போலே யிருக்கிறது. இப்படிக்கு ஷெ வாசுதேவ கவி புத்தியினால் மகாறாசா சாயபு அவர்கள் வெகுகடன்காரனாகி அபகீர்த்திக்கு இடமும் உண்டாகி வெகு பிரஜைகளுக்குச் சம்பளமுமில்லாமலும் பொய், கொலை முதலான காரியத்தினால் கும்பணியார் அவர்களுக்கு அபகீர்த்திக்கு இடமுண்டாகுமாகையால் தர்ம துரையவர்கள் ஏழையாகிய என்பேரில் கிருபைசெய்து, என் சேவுகத்துக்கு உத்திரவு கொடுக்கிறதுமல்லாமல், ஷெ வாசுதேவ கவிக்கு ராஜாவினுடைய மாப்பிள்ளை அவர்களுக்கு வெகு அந்தரங்கமானதை பத்தி இந்த வாக்குமூலம் இண்டார்சு செய்துயனுப்பிவித்தால் ஏதாவது பொய்யான தப்பு முகாந்திரம் எழுதுவார்கள். அப்படிக்கி அனுப்பாமல் ஷெ வாசுதேவ கவியை சமூகத்தில் வரவழைத்து, விசாரணை செய்து ஷெயாளை அரண்மனை வழி போகாமலிருக்கும் படியாயும் செபசாலையில் வந்திருக்கும் பிறாமாணர்களை யெடுத்துப் போடும்படியாயும் இனி கிரமப்படிக்கு நடக்கும் படியாயும் ஸ்ரீமகாராஜாசாயபு அவர்கள் கடன்காரனாகி

வெகுபிரஜைகளுக்கு அசவுக்கியமில்லாம விருக்கும்படியாயும் இப்போ வாங்கியிருக்கிற பெண் சிலர்களை விட்டுவிடும்படியாயும் உத்திரவாக வேணும் ஷை வாசுதேவ கவி செய்கிற துர்நடத்தையைக் குறித்து கவுண்ட்மெண்ட்டாரவர்களுக்குத் தெரியபடுத்தியிருக்கிறோம். இந்த வாக்கு மூலத்துக்குத் தர்ம துரையவர்கள் விவஸ்தை செய்யாவிட்டால் கவுண்ட்மெண்டார் அவர்களிடத்தில் ரூபுகாவில்[399] போய் தெரியப்படுத்தி, வாக்குமூலம் கொடுத்து, விவஸ்தை செய்து கொள்ளுகிறதுக்குச் சுத்தமாய்க் காத்திருக்கிறேன்.

வேணும் சலாம்.

ஆ அ ள சுஹூஸு
சூன்மீ க உ

சுப்பராம
சாஸ்த்திரியள்

## ஆவணம் எண் 21

தஞ்சை நகரம் கோட்டையில் றாசமான்னிய[400] ராஜஸ்ரீ பண்டிதர் அவர்கள் பாவா சுவாமி[401] பண்டிதரவர்கள் சமுஷ்சேபத்துக்கு[402] வருவது றாசமான்னிய றாஜஸ்ரீ பண்டிதரவர்கள் பாவா சுவாமி பண்டிதரவர்கள் சமுஷ்ஷேபத்துக்கு.

திருவாதி[403]யிலிருக்கும் வக்கீல் கனகசபைபிள்ளை தெண்டனிட்ட விண்ணப்பம். இப்பவும் மாதோ ஸ்ரீஆவுசாயேபு[404] அவர்கள் மத்தியஸ்த்தர[405] முகாந்தரமாய்[406] தாங்கள் அனுப்பிவிச்ச ரெண்டு ஆதரவும் வந்து சேர்ந்தது. கருந்தட்டாங்குடி பேட்டைக் கடைத்தெருவி விருக்கும் மீனாக்ஷி அம்மன் கோவில் அரண்மனையைச் சேர்ந்த கோவில் யென்று ஷை கோவிலுக்கு ஷு க-க்கு மொயின் யித்தனை பொன்[407] யென்று ஷை கோவில் குருக்களும் மீ சுக்கு சம்பளம் இத்தனை யென்று ஒரு காகிதத்தில் கண்டெழுதி அதில்

---

399. ரூபுகாலில் - நேரில்

400. றாசமான்னிய - இராசமானிய - அரசனால் மதிக்கத்தக்க

401. பாவாசுவாமி - சர்க்கேல் பாவாஜி ராமாஜி பண்டிதர் (பக். 86)

402. சமுஷ்சேபம் - முன்னிலை

403. திருவாதி - திருவையாறு

404. ஆவுசாயேபு என்றது அஹில்யாபாயியை

405. மத்தியஸ்தர் - அலுவலர்

406. முகாந்தரம் - வழி

407. பொன் - பத்துப்பணம் - 1 1/4 ரூபா மதிப்புள்ள பொன் நாணயம்

ஸ்ரீசர்க்கில்[408] சாயேபு அவர்கள் கையொப்பத்துடனே இவ்விடத்துக்கு அனுப்பிவிக்கும்படி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆனால் மேலெழுதிய ஆதரவு அனுப்பிவிக்கிறதினால் மேலெழுதிய கோயில் சர்க்காரைச் சேர்ந்த கோயில் யென்று ஷெ குருக்கள் திர்ப்பு பெற்றுக் கொண்டு யிருக்கிறது பெறட்டு யென்கிறது கோர்ட்டாருக்குத் தெரியலாவதா யிருக்கிறதினாலே கோவில் கடை யெல வேண்டு சர்க்காரைச் சேர்ந்த கடையென்று திர்ப்புப் பண்ணுவார்களாகையால் மேலெழுதிய ஆதரவுகளை அதிதுரிதமாய்[409] அனுப்பிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்

வேணும் விண்ணப்பம்

சூ அ ள உ ம ரு ஷு[410] — வக்கில்
மார்ச்சுமீ ரு உ — கனகசபை.
திருவாதி

## ஆவணம் எண் 22

அசலுக்குச் சரியான நகல் ஸ்ரீ மகாராஜா[411] சாயேப் அவர்கள் திவானத்துக்கு வெண்ணாற்றங்கரையிலிருக்கும் ஏழை வர்த்தகர்களாகிய இதனடியில் கையெழுத்து வைக்கப்பட்ட னாங்களனைவரு மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு யெழுதிக்கொடுத்த யாதி[412] யென்னவென்றால்:-

தஞ்சபுரீஸ்வர சுவாமி கோவிலும்[413] ஸ்ரீமேல சிங்கப் பெருமாள் கோயிலும்[414] வெண்ணாற்றங்கரையில் உண்டான னாள் முதல் விண்ணாற்றங்கரை கடையென்று பிரசித்தியோடும் கூட னாங்கள் வியாபாரம் செய்து வந்தோம். கும்பகோணம் திருவாதிற ஸ்தானம்

---

408. சர்க்கில் - சர்க்கேல்

409. அதிதுரிதமாய் - மிகவிரைவாய்

410. 1825 ஆம் வருஷம்

411. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

412. யாதி - மனு; விண்ணப்பம்

413. சுவாமி பெயர் தஞ்சபுரீசுவரர் - சுந்தரேசுவரர்; அம்மன் பெயர் ஆனந்தவல்லி (பக்கம் 213இல் 35)

414. இக்கோயில் தஞ்சை மேல வெளித் தோட்டத்தில் சிங்கப் பெருமாள்குளத்தின் மேல் கரையில் இருந்தது; பின்ன வெண்ணாற்றங்கரைக்கு மாற்றப்பெற்றது (பக்கம் 190இல் 38) (பக்கம் 213இல் 36)

யெங்கள் கடைத்தெரு நடுவிலிருந்தது. துர்முகி[415] ஷுடத்தில் யெங்கள் கடைத்தெருவுக்கு மேற்கே விண்ணாற்றுக்குப் பாலமும் கட்டிக்[416] கோட்டை வடக்கு வாசலுக்கும் ஷெ பாலத்துக்கும் புது ரஸ்த்தா[417] போட்டு, அந்த ரஸ்த்தா மார்க்கமாகவே ஜனங்கள் நடப்பு இருந்ததும் தவிர இப்பவும் விசேஷமாய் ஷெ. புது ரஸ்த்தா மார்க்கமாகவே நடந்து வருகிறார்கள். இதை அலலாமலும் கீழைக்கோட்டை வாசல் ரஸ்த்தாவில் வடவாற்றுக்குப் பாலமும் கட்டி தனகு தாரீபாவா மடத்துக்கும் தென்புறம் வடபுறமும் ரஸ்த்தாவுக்குக் கிழ்புறமும் இரு சாரியாய்ப் புதியதாய் கடைகள் ஏற்பாடு ஆனது முதலும் யெங்கள் கடைத் தெருவின் வியாபாரமும் சுத்தமாய் நின்றுபோய் விட்டது. அதுமுதல் நாங்கள் வேறு இடங்களில் போயாதொரு வியாபாரத்தை நடத்த யெங்களுக்கு முதலில்லாமல் அண்ணாடகம்[418] காலட்சேபத்துக்குக்[419] கூட வருத்தம் நேரிட்டுப் போனதினால் முன்னிருந்த பழைய கடைகளில் தானே சில குடிகள் இருந்து கொண்டு அங்காடிக்[420] கடைகள் ஒப்பந்தம் அறுப்புக்களம்[421] அறுப்புவயல் இதுகளில் போய் உபாயமான[422] வியாபாரங்கள் செய்து கொண்டு, அந்தக், கடைகளில் தானே குடியிருந்து கொண்டு வருகிறோம். அதுகளைப்[423] பழுது பார்க்கக் கூட நிர்வாகமில்லாமல்[424] னாங்கள் சிரமப்படுகிறதைப் பரிசோதித்துப் பார்த்தாலும், அரண்மனையாறவர்களுடைய சித்தத்துக்கு செம்மையாய்த் தெரியவரும். உத்தேசம் ௰ ரு[425] வருஷமிருக்கும். மேலே கண்டபடி எங்கள் வியாபாரம் நின்றுபோய் ஷெ எங்களுடைய கடைகளுக்கு அரண்மனையார் ஏற்படுத்தியிருக்கிற வாடகைப் பணத்தைச் செலுத்தி வைக்கச் சொல்லி செய்த தொந்திரவை நாங்கள் சகிக்காமல் நாங்கள் வோடிப்போக எத்தினப்பட்டதை[426] அரண்மனையார் எங்களுடைய

---

415. துர்முகி-துன்முகி-வருஷம் அறுபதனுள் முப்பதாவது.

416. வெண்ணாற்றங்கரைப் பாலம் கி.பி. 1836 இல் கட்டி முடிந்தது (பக். 470)

417. ரஸ்த்தா-பெரும்பாதை (Road)

418. அண்ணாடகம்- அன்றாடம்- அன்றன்று

419. காலட்சேபம்-உயிர்வாழ்தல்

420. அங்காடி-கடை

421. அறுப்புக்களம்-வயலில் கதிர் அறுத்துக்கொண்டு வந்து போடும் களம்.

422. உபாயம்-சிறிதளவு

423. அதுகளை - அவற்றை

424. நிர்வாகம்-சக்தி

425. - 15

426. எத்தினப்பட்டதை-முயன்றதை

வர்த்தனத்தை[427] யறிந்து எங்களை வரவழைத்து அதுவரையில் பாக்கி இருப்பதைக் குறித்துச் சன்னிதானத்தில் சுலாமணி செய்து தள்ளுபடி செய்து கொடுப்பதாகவும் இனிநடமுதலுக்காக[428] கடைக்கு பணம்-க[429] வீதம் செலுத்தி வரச்சொல்லியும், சொன்ன

பிரகாரம் நாங்கள் சம்மதப்பட்டு அந்தப்படி நடந்து கொள்ளுவதாய் அத்தாட்சி யெழுதிக் கொடுத்து மிருக்கிறோம். அந்த ஏற்பாட்டுப்படி ஷெ க-க்கு பணம்-க வீதம் செலுத்தியும் வந்திருக்கிறோம். இப்பவும் ஷெ கடைத்தெருவில் யாதொரு வியாபாரமும் நடக்கவில்லை. இப்படியிருக்க ஷெ அத்தாட்சிக்கு விரோதமாய் முன்ஏற்பாட்டின்படி பாக்கி யிருக்கிற துகையைச் செலுத்தச் சொல்வி இப்பொழுது அரண்மனையார் தொந்திரவு செய்கிறார்கள். எங்களுடைய நிர்வாக தப்பையும் எங்களுடைய யேழத்தனத்தையும் கலங்கிஷமாயி பரிசோதனை செய்து கொண்டு, அதன் பேரில் அரண்மனையார் இன்னபடி நடக்கவேணுமென்று விதிக்க வேண்டியதும் அந்தப்படி நடத்த வேண்டியதும் நியாயமா யிருக்கிறது. அப்படி இல்லாமல் வினாவும் முன் யெங்களுக்கு கொடுத்திருக்கிற கவுலாத்துக்கு[430] விறோதமாயும் எங்களைச் செய்கிற தொந்திரவு சகிக்கக் கூடாமல் இருக்கிறது. ஆகையால் சகல ஜீவதயாபரரான[431] மகாராஜா சாயேபு அவர்கள் ஏழைகளும் மானஸ்தர்[432] களுமான யெங்கள் பேரில் பூரணகிருபை[433] செய்து எங்களுடைய நிர்வாகத் தாழ்வை[434] மனசுக்கு வாங்கி முன் எங்களுக்குக் கொடுத்திருக்கிற கவுலாத்துப்படி பாக்கித் துகையைத் தள்ளிக் கொடுத்து, நடமுதலுக்கும் நியாயமான வாடகை வசூல் செய்து கொள்ளும்படி மிகவும் வணக்கமாய்த் தெண்டனிட்டுக் கொள்ளுகிறோம்.

ரூ அ ள ரு ழ சு வரு[435]
நவம்பர்மீ உ ம ங வ
தேதி இருபத்துமூணு
வீறன்ன செட்டி
நல்லுப் பிள்ளை

இது யெழுதினது கருந்தட்டாங்குடி
ராமப்பய்யன் பிள்ளை
வெங்கிட்டராயன்
பழனிசாமிபிள்ளை
வீராசாமி னாயக்கன்

427. வர்த்தனம்-செல்வநிலைமை; வருமானம்

428. நடமுதல்-நடைமுதல்-நடப்பிலுள்ள ஆண்டு முதற்கொண்டு

429. பணம் 1

430. கவுலாத்து-உடன்படிக்கை; ஒப்பந்தம்

431. சகல ஜீவதயாபரர்-எல்லாவுயிர்களிடத்தும் கருணைகாட்டுபவர்

432. மானஸ்தர்-மானமுடையவர்

433. பூரணகிருபை-முழு அருள்

434. நிர்வாகத் தாழ்வை-சக்தியின்மையை

435. 1854 ஆம் வருஷம்

அண்ணாபிள்ளை
கொழுந்தவேலு பிள்ளை
ஏழுமலையான்
வரதன் செட்டி
கந்தசாமி பிள்ளை
இந்த-கீறல் அருணாசலனாயக்கர்

பஞ்சனதம் செட்டி
கோவிந்தப்ப னாயக்கன்

வீருனாயககர்
இந்த-கீறல்[436] றாமசாமி
னாயக்கர்
மருதை
னாறாயண செட்டி
ரெங்கன்
மாரி
இந்த-கீறல் வயித்தி

இந்தயாதி நகல் யெழுதினது ஸ்ரீஸித்தி வினாயக ஸ்வாமி கோவில் கர்ணம் சேஷப்பய்யன் ஒத்துப்பார்த்தது உள்பட

## ஆவணம் எண் 23

யென்னவென்றால் ரா. ஸ்ரீ. ஸ்ரீ மகாராஜா[437] சாயேபு அவர்களைச் சேர்ந்த இலாக்கா விண்ணாற்றாங்கரை மேலச்சிறகில் நம்முட மனுஷன் செல்லப்ப னாயக்கனுக்கு அன்பது வருஷமாய் கடைகட்டி வியாபாரம் பண்ணிக் கொண்டு கோவிலுக்கு தஸ்த்தூரி வரி[438] கடைக்கு வரிப்பணம் மீக்கு 2 பணம் வீதங் கொடுத்துக் கொண்டு நாளது வரைக்கும் அண்பது வருஷமாய் மாமூல் வழக்கமாய் நடந்து வந்திருக்க இப்போ நம்முடைய மனுஷன் செல்லப்ப னாயக்கன் பேரில் அந்தச்சிங்கப் பெருமாள் மேல்ப்படி கோவிலான ஆச்சரியம் பண்ணி அவன் கடையை யிடிச்சிப் போடுகிறோமென்று மனு சுபா கோர்ட்டில் பெட்டிஷன்[439] போட்டு தொந்திரவு செய்கிறானாம். மேலும் இன்னுமொரு கடை நூறுபொன் வரைக்கும் செயனத்தி[440] பண்ணி பிறகாலே வீடுங்கட்டி தென்னம்பிள்ளை முதலானதும் வைத்து அதுக்கு முன்னாலே கடைகட்டி யிருந்தும்போன வருஷம் வரைக்குங் கடைகட்டியிருந்தது. போன வருஷம் வெள்ளத்தில் சேதப்பட்டுப் போய் அதை மரித்து நாளது வருஷம் கடைகட்டப் போனதை மேல்ப்படி கோவிலான் அந்தக்கடையைக் கட்ட வேண்டாமென்று மரித்து தொந்திரவு செய்கிறானாம். ஆகச்சே யந்த அழைப்பித்து, மாமூல் வழக்கப்படிக்கு தஸ்தூரி வரி உள்ளதை வாங்கிக் கொண்டு செல்லப்பனாயக்கன் வழிக்குப் போகாதபடிக்கு உத்தரவு பண்ணவும்.

---

436. கீறல்-கையெழுத்திடத் தெரியாதவன் இடும் கோடு

437. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

438. தஸ்த்தூரிவரி-வழக்கமாகக் கொடுக்கும் வரி (தஸ்தூர்-வழக்கம்) (பக்கம் 208)

439. பெட்டிஷன்-Petition

440. செயனத்தி பண்ணி-செய்நேர்த்தி பண்ணி-நன்கு செய்து; வருமானம் பெற்று.

அல்லாமல் ஒரு கடையை இடித்துப் போடுகிறோமென்றும் ஒரு கடையை இன்னொருத்தனுக்குப் பிடுங்கி கொடுக்கிறோமென்றும் வீண் தொந்தரவு செய்கிறதினாலே நியாயமான ஒத்தாசை செய்விக்க வேண்டியது.

## ஆவண எண் 24

அசலுக்கு சரியான நகல்

௲அ௱௪௰௬ [441] ஷு செப்டம்பர் மீ ௰௫ உ யிதனடியில் கையெழுத்து வைத்த நாங்கள் அனைவரும் யெழுதிக் கொடுத்த மாதறனாமா [442] என்னவென்றால்:-

மாஹோ ஸ்ரீ அகல்யாம்பா [443] சத்திரம் கோயில் வகையறா தோட்டம் காவல் சங்கதியான நாளது வருஷம் [444] ஆகஸ்டு மீ ௯ உ பகல் ௭-நாழிகை வேளையில் ஷி தோட்டம் கச்சேரிவாசலிலிருக்கும் பொது பள்ளி அக்கிறகாறம் பட்டாமணியம் [445] முத்துவய்யனும் ஷி யானோடே கூடயிருந்த திருவாதி [446] தாலுக்கா உ௰ நம்பர் விசாரிப்பு [447] விறாகு னாயக்கன் யிவர்கள் ரெண்டுபேரும் கச்சேரிக்கு எதிர்த்த பலசரக்குக்கடை பழனியாண்டி பிள்ளை வீட்டுத்திண்ணை மேலிருந்து கொண்டு ஷி காவல்காறனை ஷி முத்துவய்யன் கூப்பிட்டு உன் தோட்டத்துக் காரியஸ்த்தாளைக் [448] கொண்டு வாயென்று சொன்னதற்கு ஷி காவல்காறன் அதிகாரஸ்த்தாள்கள் [449] னான் கொண்டு வரப்படாது. நீங்கள் தானே வரவழைத்துக் கொள்ளுங்கோளென்று சொல்லி ஷி காவல்க்காரன் கச்சேரிக்கு முன்பாகத் திரும்பி வந்தவுடன் பின்தொடர்ந்து இலாகா கச்சேரிக்குள் வந்து ஷி கச்சேரிக்குள்ளிருந்த சாணிக்கூடையினால் ஷி காவல்க்காறன் [450] பேரில் ஷி முத்து வய்யன் ஓங்கி யெறிந்தது மல்லாமல் ஷி விசாரிப்புக்காரனை யும் விட்டு அடிக்கச் சொன்னதின் பேரில் ஷி

---

441. 1846 ஆம் வருஷம்

442. மாதறனா-மகசர்நாமா-பலர் கையெழுத்திட்ட பொது விண்ணப்பம்

443. அகல்யாம்பா என்றது இரண்டாம் சிவாஜியின் தாய் ஆகிய அகல்யாபாயியை

444. நாளது வருஷம்-கி.பி. 1846

445. பட்டாமணியம்-கிராம முன்சீப்

446. திருவாதி-திருவையாறு

447. எண் 26; விசாரிப்பு-கிராம ஊழியர்களில் ஒருவர்

448. காரியஸ்த்தான்-அலுவலர்கள்

449. அதிகாரஸ்தார்கள்-அதிகாரம் உடையவர்கள்

450. காவல்க்காரன்-காவல்செய்பவன்

காவல்க்காரனே ஷெ விசாரிப்புக்காரன் சாட்டையினால் ள-[451] அடிவரையில் அடித்ததாயும், அதற்காகப் பெரிய தம்பி பிள்ளை-க. யிபறாம்சா-க. யேசிப்பு யேழுமலையான் செட்டி-க. ஷெ தோட்டம் பாராக்கார[452] மருதன்-க. இந்த னாலு பேர்களும் சாட்சி இருக்கிறார்களென்றும் ஷெ காவல்காரன் சொல்லிக்கொண்டதின் பேரில் ஷெ னாலு பேர்களையும் வரவழைத்து வாய்மொழி கேட்டதற்கு ஷெ யார்கள் வாய்மொழியாய் சொன்ன விபரம் பெரியதம்பி பிள்ளை வாய்மொழி நாளது ஷ ஆகஸ்ட்டு மீ க ௨ பகல் எ நாழிகை வேளையில் ஷெ காவல்காரன் இலாகா கச்சேரியில் இருந்தவனே ஷெ பட்டாமணியம் முத்து வய்யனும் ஷெ விசாரித்து[453] விறாகுனாயக்கனும், பழனியாண்டிப்பிள்ளை வீட்டுத் திண்ணைமேலிருந்து கொண்டு ஷெ முத்து வய்யன் கச்சேரியிலிருந்த காவல்காரனைக் கூப்பிட்டு, உன் தோட்டம் காரியஸ்த்தனை கொண்டுவாயென்று சொன்னதற்கு ஷெ காவல்க்காரன் அதிகாரஸ்த் தாள்கள் நான் கொண்டு வரப்படாதென்று சொன்னான். நீங்கள் தானே வரவழைத்துக் கொள்ளுங்கோன்று சொல்லிக் கச்சேரிக்கு முன்பாக வரும்போது ஷெ முத்துவைய்யன் நான் கொண்டு வரச்சொல்லுகிறது நீ கொண்டு வராமல் போறதா வென்று ஷெ காவல்க்கார னை ஏகதேசமாய்[454] துர்ப்பாசைகளாய்த்[455] திட்டிக்கொண்டு, கச்சேரிக்குள் தொடர்ந்து வந்து ஷெ கச்சேரியிலிருந்து சாணிக்கூடையெடுத்து ஷெ காவல்க்காரன் பேரில் ஓங்கி யெறிந்ததுமல்லாமல் ஷெ விசாரிப்புக் காறனை விட்டு அடிக்கச் சொன்னதின் பேரில் ஷெ காவல்காரனை ஷெவிசாரிப்புக்காரன் உத்தேசம் ரு ய[456] அடிவரையில் அடித்தது எனக்குத் தெரியும். யிபிறாம்சா வாய்மொழி நாளது ஷ ஆகஸ்ட் மாதம் கூ ௨ பகல் எ-நாழிகை வேளையில் மேற்படி தோட்டம் காவல்க்காரன் கச்சேரியில் வரும்போது ஷெ பட்டாமணியம் முத்துவைய்யன் துர்ப்பாசைகளால் திட்டிக்கொண்டு பின்தொடர்ந்து வந்து கச்சேரியிலிருந்து சாணிக்கூடையை எடுத்து, மேற்படி காவல்க்காரன் பேரில் ஓங்கி யெறிந்ததுமல்லாமல் ஷெ விசாரிப்புக்காரன் விறகுனாயக்கனை விட்டு அடிக்கச் சொன்னதின் பேரில் ஷெ காவல்க்காரனை ஷெ விசாரிப்புக்காரன் உத்தேசம் ரு ய, சுாய அடிவரையில் அடித்தது யெனக்குத் தெரியும்.

ஏழுமலையான் செட்டி வாய்மொழி நாளது ஷ ஆகஸ்ட் மாதம் க ௨ பகல் 7 நாழிகை வேளையில் நான் என்னுடைய கடையிலிருக்கும் போதுஷெ தோட்டம் கச்சேரி வாசலில் அடி சத்தம் கேட்டு, அவ்விடத்துக்கு நான் வந்தேன். அப்போது ஷெ விசாரிப்பு விறகுனாயக்கன்

451. ள-100

452. பாராக்காரன்-காவலாள்

453. விசாரித்து-விசாரணை செய்பவன்

454. ஏகதேசமாய்-நிந்தை செய்து

455. துர்ப்பாசைகளாய்-சொல்லத்தகாதசொற்கள் கூறி

456. 50

ஷெ தோட்டம் காவல்காரனை சாட்டை[457]யினால் அடித்துக் கொண்டிருந்ததும் எனக்குத் தெரியும். ஷெ கோயில் தோட்டம் பாராக்காரர் மருதன் வாய்மொழி நாளது ஷூ ஆகஸ்ட் மீ க உ பகல் எ நாழிகை வேளையில் நான் மேற்படி கோயிலில் இருக்கும்போது, மேற்படி கச்சேரியில் அடிசத்தம் கேட்டு, அவ்விடத்துக்கு வந்தேன். அப்பொழுதுஷெ விசாரிப்பு விறகு னாயக்கன் ஷெ தோட்டம் காவல்காரனை சாட்டையினால் உத்தேசம் ரு ௰, சூ ௰ அடிவரையில் அடித்தது எனக்குத் தெரியும். இந்தப்படி மேல்க்கண்ட நான்கு பேர்களும், மேலெழுதியிருக்கிறபடி வாய்மொழியாய்ச் சொன்னது எங்கள் அனைவருக்கும் தெரியும். இந்தப்படி சம்மதித்து எங்கள் மனோராசி[458]யில் எழுதி கொடுத்த மாதறனாமா[459].

பெரிய தம்பி கையெழுத்து
யிப்றாம்சா கையெழுத்து
யேசிப்பு ஏழுமலையான் செட்டி கையெழுத்து
மருதன் கையெழுத்து
பழனியாண்டி கையெழுத்து
சேழாசலம் கையெழுத்து
அண்ணா முதலியார் மகன் அப்பாவு முதலியார் கையெழுத்து
அண்ணாமலை கையெழுத்து
வரதன் செட்டி கையெழுத்து

## ஆவணம் எண் 25

ரா. ஸ்ரீ. மகாராஜா[460] சாயேபு அவர்கள் தீவானத்துக்கு,

கும்பகோணம், பெரியமடம்[461] விசாரணை சுப்பைய்யன் எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்,

ஷெ ஆதின கர்த்தராகிய[462] ஸ்ரீசாரங்கதேவருக்கு நெரியான[463] சமீபத்தில் வேறு ஒருவரை அவர் நியமித்த போதிலும் இந்த சர்க்காரின் யாதி கொடுத்த உத்தரவும்

457. சாட்டை-கசை; அடிக்கும் சவுக்கு

458. மனோராசியில்-சம்மதத்தில்

459. மாதறனாமா-மகசர்நாமா-பலர்கையொப்பம் இட்ட பொது விண்ணப்பம்

460. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

461. கும்பகோணம் பெரியமடம்-இது வீரசைவர்களுக்குரிய மடம். மிகப் பழமையான மடங்களுள் ஒன்று (பக்438)

462. ஆதீனகர்த்தர்-மடத்து அதிபர்

463. நெரியான-நிரியாணம்-மரணம்

வஸ்த்திரமும் பெற்றுக்கொண்டு போய், அவருக்குப் பட்டம் நியமிக்கிறது. ஆதினம் பரம்பரை[464] வர்கம்[465] அந்தப்படிக்கி பில[466] வருஷம் ஐப்பசி மீ ம ங வயில் பட்டாபிஷேகமாயிருக்கிற ஷெ ஆதின கர்த்தர் எனக்கு இந்த ஜில்லா ரிசிஸ்ட்டர் ஜட்ஜ் துரையவர்கள் சயனுடன் எனக்கு சற்வாதிகாரமொக்கத்தியாறனுமா[467] கொடுத்து, அதுவயனங்களை சப்கலேகட்டற்[468] துரையவர்களுக்கும் இவ்விடத்தில் சிஸ்யாளுக்கும்[469] தெரியப்படுத்தி மடாதிபதி யாத்திரை போயிருக்கிறார். அப்படியிருக்க சம்மந்தமில்லாத முத்தண்ணா என்பவன் ஒருவனுக்கு இளவரசைப் போல பிரட்டு செய்தசங்கதிக்கு சர்க்காரில் யாதி[470] கொடுத்ததின் போரில் மாஜி சர்கீல்[471] அவன் இளவரசை அல்லவென்று அதுவயனங்களைக் கண்டு ஷெ என் மொக்கதியாறனாமாவை? ஸ்தாபித்து சூ அ ள சு ம ச ஷு[472] பிப்ரவரி மீ த்தின் மாஜி ஆக்டிங் கலெக்டராகிய பீஷப் துரையவர்களுக்கு மிம்மோரண்டம்[473] எழுதியிருக்கிறார்கள். அதற்குச் சரியான நகல் எனக்குத் தேவையாயிருக்கிறது.

ஆகையால் தயவு செய்து ஷெ மிம்மோரண்டத்திற்கு சரியான நகல் முத்திரை கடுதாசியில் கொடுக்கும்படி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சூ அ ள சு ம சூ ஷு[474] கு. சுப்பய்யன்
ஜனவரி மீ ம சூஉ கையெழுத்து.

---

464. பரம்பரை-வழிவழி

465. வர்கம்-வழக்கம் என்று திருத்துக

466. பில-பிலவ-ஆண்டு அறுபதில் முப்பத்தைந்தாவது

467. சற்வாதிகார மொக்கத்தியாறனுமா (?) (சர்வாதிகாரம்-முழு அதிகாரம்)

468. சபகலேகட்டற்-சப்கலெக்டர் (Sub Collector)

469. சிஸ்யாள்-சீடர்

470. யாதி-மனு

471. மாஜிசர்கீல்-முன்னாள் சர்க்கேல்

472 1844 ஆம் வருஷம்

473. மிம்மோரண்டம்-Memorandum-நினைவுக்குறிப்பு

474. 1846 ஆம் வருஷம்

## ஆவணம் எண் 26

இஹீந்தே ஸ்ம்மானை மையா அல்லப்[475] சவ்வால்[476] மீ 5உ

1. ஹைதர் நாயக்கற் கலாபத்துனாலே[477] ஸ்ரீமுஷ்ட்டம், விருத்தாசலம் இந்த ரெண்டு ஸ்தலங்களிலிருந்த சுவாமிகள் யாவும் ஸ்ரீ மாயூரநாத சுவாமி கோயில் வந்து இருப்பதால் பூசை நெய்வேத்திய[478] நடத்திவர விருத்தாசலேசுவர சுவாமிக்கு ஷ 1. நித்தியேசுவர ஸ்வாமிக்கு பணம் 5 (ஆக பதினைந்து) 15. நாள் 1க்குப் பதினைஞ்சு பணம் வீதம் சுவாமி அவ்விடம் இருக்கிற வரைக்கும் கொடுக்கும்படி உத்திரவு. யாதி 1.

காட்டுமன்னார் கோவில்[479] ஸ்ரீராஜகோபால சுவாமி வ. பந்த நல்லூரில் வந்திருப்பதால் பூஜைக்காக நாளொன்றுக்குப் பணம் 5 வீதம் அவ்விடத்திலிருக்கிற வரையிலும் கொடுக்கும்படி உத்திரவு-யாதி-1 ஆக இரண்டு.

## ஆவணம் எண் 27

ரா. மகாராஜா[480] சாயேபு அகள் (அவர்கள்) அரண்மனை சர்கில் மகாராஜா ஸ்ரீபந்துஸ்வாமி[481] அவர்கள் சமூகத்துக்கு

அசரபுஷா சாயேபு அவர்கள் மக்கன்தார்[482] காதறவிஷா காதரி மிகவும் துவா[483] செய்து எழுதிக்கொண்டது என்னவென்றால்

---

475. இஹிந்தே-இஹிதே-1; ஸமமானை-சமாசைன்-80; மயா-100; அலப்-1000 அதாவது ஸுஹர்ஸன் 1181 + 599 = கி.பி 1780

476. சவ்வால்-ஷவ்வால்- அரபு மாதங்களில் பத்தாவது

477. ஹைதர் நாயகர் கலாபம் - ஹைதர் படையெடுப்பால் எற்பட்ட கலகம்

478. நெய்வேத்தியம்-நைவேத்தியம்-கடவுளுக்கு உணவு படைத்தல்

479. காட்டுமன்னார்கோவில்-காட்டுமன்னார்குடி

480. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

481. பந்துஸ்வாமி என்றது பாபாஜி ராமாஜி பண்டிதரை (பக்கம் 86)

482. மக்கன்தார்-மேற்பார்வையாளர்

483. துவா-தொழுகை

முதலாவது - யென் குருமுறை நட-ம் பாட்டனாகிய ஷெ அசர்புஷா சாயபு இந்த சமஸ்தானத்துக்கு வந்து மக்கான்[484] முதலானது சம்பாரித்து சில பக்கீரியள்[485] தரிக்குட்டி செய்து[486] இறந்துபோன பிறகு, அந்த பக்கிரியள் தர்மம் நடப்பிவித்து வந்து எனக்கு உ-வது குருமுறை பாட்டனாயிருந்த குலாமே உ-கன்ஷர்யென் சனகதகப்பன்[487] உள்பட பக்கரியள் செய்து தங்கள் பேரில் வைத்த தயவை எங்கள் ௬- பேர் பேரில் வைக்கிறதென்று கண்டு மகாராஜா சாயேபு அவர்கள் அரண்மனயில் யாதியுங் கொடுத்து றிஜிரெண்டு[488] ஆபீஸ் சிரேஸ்த்தேதாரர்[489]ராகிய மகாராஜா ஸ்ரீ வெங்கிட்டறாயர் அவர்களையும் வரவழைத்து ஷெ பிதாய உசன் முதலாவதென்றும் நாம் உ-வது என்றும் சொல்லி ஷெ. ராயர் அவர்களிடத்தில எங்களையும் ஷெ மக்கான் தர்மத்தையும் ஒப்புவித்து இறந்து போனபிறகு ஷெ பிதாயஉசன் சாவும் இறந்து போனார். அதுமுதல் நாம் மக்கான் தாரா யிருந்து சகலதர்ம முதலான உருசுகள்[490] நடப்பவித்துக்கொண்டு வருகிறதை ஷெ தஞ்சாவூர் வகைபறா மக்கான் தார்கள் சர்குரு[491] வையும் விசாரித்தால் விசித[492] மாகும்.

உ-வது ஷெ மக்கானில் ஷெ அசர்புஸா சாயேபு கந்தூரிக்கு[493] அவர்கள் கோரி[494] மேல் போர்த்த சாதிறா[495] மயத்த[496] தருகா[497] ஒப்பந்தம் கொடுக்கிற வழக்கப்படி சாதிறாவுக்கு உத்திரவாக வேணுமென்று நாம் அரண்மனையில் யாதி[498] கொடுத்த போது ஷெ பிதாயஉசன்ஷா பக்கிரி செய்ததாக மாறுபாடாய் சொல்லிக்கொண்டிருந்த காஜி அல்லிசாயபு

---

484. மக்கான்-மசூதி

485. பக்கிரியள்-பக்கீர்கள்-முகமதியப்பரதேசிகள்

486. தரிக்குட்டி செய்து-உண்டாக்கி; பயிற்சி கொடுத்து

487. சனகதகப்பன்-பெற்றெடுத்த தந்தை

488. றிஜிரெண்டு-ரெஜிடெண்டு

489. சிரஸ்தேத்தாரர்-சிரஸ்தேதார்

490. உருசுகள் - உர்ஸ் - விழாக்கொண்டாட்டங்கள்

491. சர்குரு-சற்குரு-ஞானகுரு

492. விசிதமாகும்-நன்கு விளங்கும்

493. கந்தூரி-கந்திரி-முகமதியப் பண்டிகை

494. கோரி-முகம்மதியர் கல்லறை

495. சாதிறா-சாதரா-உயர்ந்த சால்வை

496. மயத்த-மற்ற

497. தருகா-தர்க்கா-மசூதி

498. யாதி-மனு

தம்பி ரஜாஆன் ஷெ யான் வீட்டிலிருந்தவன் தனக்கு சாதிறா கொடுக்க வேணுமென்று அரண்மனையில் மாறுபாடாய் ஒருயாதி கொடுத்திருந்ததாகவும் இப்போ ஷெ ரசாஉசனை உரியான பக்கிரியாகாமலிருந்த நிமித்தியம்[499] அவனை மயித்த[500] மக்கான்தார்கள் சற்குரு முதலானவர்கள் அவனைப் பக்கிரியல்லவென்று தள்ளிப் போட்ட நிமித்தியம் அவன்ஷெ அல்லி சாயபு வீட்டுடன் இருந்து இறந்து போயிருக்கிறான். அதுவும் ஷெ மக்கான்தார்களை விசாரித்தால் விசிதமாகும்.

௩-வது இப்போது ஷெ சயிதலிதுணியாதாறா[501]யிருக்கிறவன் பக்கிரி மார்க்கமுள்ள மக்கானைதன் மார்க்கம் வரவேணுமென்று ஷெ மக்கான் தர்மத்[502]துக்கு விவாதஞ் செய்து வருகிறவர்கள்[503] போதினையினால் நம்முடைய பேரில் கோர்ட்டில் பிராது செய்ததில்ஷெ அரண்மனையில் சாதிறாவுக்கு யாதி கொடுத்து போலவும் அது உத்திரவாயிருக்கிறது போலவும் யெழுதி அது கொண்டு வந்து தாக்கல் செய்கிறதாய்ச்சொல்லி அது தனக்குக் கொடுக்க வேணுமென்று யாதி கொடுத்திருக்கிறதாய் கேள்விப்படுகிறபடியினாலே அரண்மனையா ரவர்கள் தர்மத்தின் பேரில் தயவுசெய்து முன்னடந்த நடவடிக்கைகளை விசாரித்துக் கொண்டு அபாத்தியஸ்த்த[504]னாகிய ஷெ சய்யதலி துணியாதாரறு றஜா உசன் பேரால் கொடுத்த யாதிக்கு நகல் கேட்கின்றதைக் கொடாமலிருக்கும்படி உத்திரவாக வேணும்.

௪-வது என்குரு என்னை பக்கிரி செய்து அரண்மனைக்குத் தெரியப்படுத்தியிருக்கிறபடி பிதாய உசன்ஷா ஷெ ஜாயஉசனைப் பக்கிரி செய்திருந்தால் அவனைப் பக்கிரி செய்திருக்கிறேனென்றும் இன்னப்படி செய்திருக்கிறேனென்றும் ஷெ அரண்மனைக்கி ஷெ பிதாயஉசன் தெரியப்படுத்தி யிருக்கலாமே. அப்படிக்கி இல்லாதவரையில் அவசுபிதாய உசன் பக்கிரி செய்ததும், நேமித்ததும், அரண்மனையாரவர்களுக்கு எப்படி விசிதமாகலாம். அப்படி யாதி கொடுத்திருந்தால் அதன்பேரிலும் அந்த றஜாஉசன் இருந்தால் அப்போ அரண்மனையாரவர்கள் ஷெயாதி கொடுக்கலாமா கொடுக்கக் கூடாதாவென்று யோசிக்க வேணும். அவனும் இறந்து போய் அரண்மனையில் ஒரு தஸ்த்தாவேசும் இல்லாமலிருக்க அப்போது ஷெ துணியாதாறாகிய ஷெயானுக்கு றஜாய் உசன் பேறால் கொடுத்திருப்பது போல சொல்லுகிற யாதிக்கு நகல் கொடுக்கும்படியாய் உத்திரவானால் அது நியாயமும்

---

499. நிமித்தியம்-காரணத்தால்

500. மயித்த-மற்ற

501. துணியாதார-சமயப்பற்றில்லாதவர் (துனியா-உலகம்; எனவே உலகப்பற்றுடையவர்)

502. மக்கான்தருமம்-முகமதியச் சமயநெறி

503. மாறுபட்டுப் பேசுகிறவர்கள்

504. அபாத்தியஸ்தன்-உரிமையில்லாதவன்

தர்மமும் அல்லவே இறந்துபோன றஜாய் உசன் பக்கிரியானது போல சொல்லுகிறதைக்குறித்து, பிதாய் உசன் ஷாவினால் அரண்மனையில் யாதி கொடுத்தும் அல்லது ஷெ றஜாய் உசனும் னாமும் சச்சரவு பட்டாவது அரண்மனையில் வந்து சொல்லிக் கொண்டு அது ஒரு முடிவாய் இருந்தாலும், ஷெ றஜாய் உசன் இறந்து போனவுடன் சரியாய்ப் போய்விட்டதே அப்படிக்கி யாதொன்றும் நடக்கவே யில்லையே. அப்படியிருக்க சம்மந்தமில்லாத துணியாதார் நகல் வேணுமென்று கேட்கிறதை அரண்மனையாரவர்களே யோசிக்க வேணும்.

ரு-வது ஷெ சாதிறாவானது அசர்புஷா சாயபு அவர்கள் கந்தூரி தினம் அவர்கள் கோரியின் பேரில் போத்த வேண்டியதற்க்கு கொடுக்கிறதே தவிர ஒருவனுக்கு யென்று கொடுக்கிறதல்லவே. அதுயார் மக்கானிலிருந்து கந்தூரி முதலானது நடப்பிவிக்கிறாரோ அவரவர் வாங்கி சந்தனத்துடன் மற்ற மக்கான் தார்கள் மற்ற துணியாதார்களும் கூடி ஷெ கோரியின் பேரில் பாத்தியா செய்து[505] அந்தச் சாதிறாவை போத்தி, மகாராஜா சாயபு அவர்கள் க்ஷேமத்துக்கு துவா[506] செய்கிறது வழக்கம். அப்படி ஷெ றஜாஉசன் ஒருனாளாவது மக்கானிலிருந்து கந்தூரி செய்து சாதிறாவை வாங்கி கோரியின் மேல் போத்தியிருக்கிறானா. அப்படி நடக்கவே இல்லையே. அப்படியிருக்க அவனுக்குச் சாதிறாவுக்கு உத்திரவான பரவாணிக்கைக்கு[507] நகல் இப்போது அவன் தமையனிடத்தில் கொடுக்க வேண்டிய விஷையத்தில் அரண்மனையாரவர்கள் முக்கியமா யோசிக்கவேணும்.

சூ-வது என்னை அசனுசா சாயபு பிதாய் உசனுசாவுடன் பக்கிரிசெய்து நேமித்ததை ஷெ றஜாஉசன் தரிக்குட்டி பக்கிரியே ஆகயில்லை யென்கிறத்தையும் ஷெ பிதாய் உசன்ஷா யிறந்து போன பிறகு னான் மக்கான் தாராயிருந்து கும்பனி சர்க்காரில் மாசமோகினி, கந்தூரிமோகினி முதலானதும் எனக்குக் கொடுத்து வந்ததுக்கு இருக்கிற தஸ்த்தா வேசுகளையும் பார்வையிட்டு விசாரணைசெய்து, அபாத்தியஸ்த்தனும், துணியாதாரும் அவனால் கொடுக்கப்பட்ட தஸ்த்தாவேசுகள் ஷெ சய்யது அலி கேட்க்கிறதைக் கொடாமலிருக்கும்படியாயும் என்குரு அசனுஷாவினாலும் நம்மாலும் கொடுத்திருக்கிற யாதிகளுக்கு நகல் முத்திரை கடுதாசிகளில் கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.

அடியில்க் கண்ட தஸ்த்தாவேஜிகளுக்கு நகல்களை நம்முடைய காரியஸ்த்தன் வசமாய்த் தங்கள் பார்வைக்கு அனுப்பி யிருக்கிறோம்.

505. பாத்தியா செய்து-குரான் ஓதி

506. துவா-தொழுகை

507. பரவாணிக்கை-பரவானகி-அரசனிடும் ஆணை (பக். 365)

நஸ்த்தா வேஜிகளின் விபரம். கந்தூரி மோகினி மாசமோகினி கொடுக்கும்படி அசூரிலிருந்து[508] பாபனாசந்தாலுக்கா தாசில்தாருக்கு ௪௩ ௵[509] ஜூலை மீ ௩ உ வந்த உத்திரவுக்கு நகல் ௧.

ஷை மகான்[510] முதலானதைக் கோர்ட்டில் சபுத்தி[511] செய்து யிருந்ததை என்வசம் விடும்படியாய் அசூரிலிருந்து ஷை தாசில்தாருக்கு ஷை ஆகஸ்ட் மீ உ ய ரு உ வந்த உத்திரவுக்கு நகல் ௧.

அந்தப்படி ஆஸ்திகளைக் கோர்ட்டுத்[512] தீர்ப்புப்படிக்கு நம்முடைய வசப்படுத்தி ஷை ௵ செப்டம்பர் மீ உ உ யில் ஷை தாசில்தார் அசூருக்கு எழுதின அர்ஜி[513] நகல் ௧.

ஷை ௵ ஷை மீ உ ௰ உ ஆள் மாகாணங்களுக்காக ஷை தாசில்தார் அசூருக்கு எழுதிய அர்ஜி நகல் ௧.

அந்தப்படி சம்பளம் கொடுக்கும்படி ஷை ௵ அக்டோபர் மீ எ உ அசூரிலிருந்து ஷை தாசில்தாருக்கு வந்த உத்திரவு நகல் ௧.

நிலவை[514] சம்பளம் கொடுக்கும்படி ஷை ௵ டிசம்பர் மீ ரு உ அசூரிலிருந்து ஷை தாசில்தாருக்கு வந்த உத்திரவு நகல் ௧.

ஷை மக்கான் ஆஸ்தி என் வசமிருந்தே சப்தியானதைக் கண்டு ஷை தாசில்தார் ஷை ௵ ஏப்ரல் மீ உ ௰ ௪ உ அசூருக்கு எழுதிக் கொண்ட அர்ஜி நகல் ௧.

௪ய ௩ ௵[515] செப்டம்பர் மீ எ உ அப்பீல் கோர்ட்டில்[516] சய்யது அலியும், அவன் மகனும் என் பேரில் கொடுத்த மனுவுக்காக என் பேரில் பிராது செய்து கொள்ளும்படி கொடுத்த டயரியேகிஸ்த்திறாக்கட்டு[517] ௧.

---

508. அசூர்-ஹுசூர்-சமுகம்

509. 43ம் வருஷம் (1843)

510. மகான்-மக்கான்

511. சபுத்தி-சப்தி-ஜப்தி-சொத்தைக் கைப்பற்றுதல்

512. கோர்ட்டு-வழக்குமன்றம் (Court)

513. அர்ஜி-விண்ணப்பம்

514. நிலவை-நிலுவை-கொடுக்கப்படாமலிருந்த

515. 43 ஆம் வருஷம் (1843)

516. அப்பீல் கோர்ட்டு-மேல் முறையீட்டு மன்றம்

517. டயரி யேகிஸ்த்திராக்கட்டு - Diary Extract - குறிப்பேட்டிலிருந்து எடுக்கப்பட்டது.

விக்ருதி[518] ஹு கார்த்திகை மீ அல்லது மார்கழி மீ என்குரு அசலு ஷாவினால் என்னை பக்கரி செய்த சங்கதிக்காக எழுதிய அரண்மனையிலிருக்கிற யாதி க. ஆகையால் வேணும் அனேகம் துவா.[519] தூ அ ள சம் சூ ஹு மே மீ ய க உ[520] இவை தஞ்சை நகரம் கோட்டைக்குள் சர்க்கில் மகாராஜா ஸ்ரீ பந்துசாமி[521] சர்க்கில் அவர்கள் சமூகத்துக்கு வருவது.

## ஆவணம் எண் 28

மிமோறாண்டம்[522]

கமிஷனர்[523] துரையவர்களுடைய நாளது மீ 20உ யுள்ள 1215 நீர். லெட்டரையும் சேக்கு இபறாமுடைய பெட்டிஷ[524]னையும் பெற்றுக்கொண்டோம்.

அது காரியத்துக்கு யேகோஜீ[525] மகாராஜா நாள் முதல் படேஉசேனி அல்லா கோவிலுக்குப்[526] பூசை முதலான ஆராதனை தஞ்சாவூர் மகாராஜாக்கள் செய்து கொண்டு வருகிறார்கள். ஷெ கோவிலுக்கு நீண்ட காலமாய் தவுலத்து பாவலோகு[527] ...விலிருந்து நடந்து வந்த மோயினி[528] மீ 1க்கு ரூ.9:1859 ஹு பிப்ரவரி மீ 28உல் ஷெ அவாலாரத்[529] தான (மேடோவர்) உடனே நிறுத்தப்பட்டது. ஷெ அல்லா கோவிலுக்குச் தஞ்சாவூர் மகா ராஜாக்கள் தங்கள் குல தெய்வத்தைப் போலெண்ணி மிகவும் பக்தியுடனே மொயினி(பணம்) கொடுத்து, பூஜைகளை நடத்திக் கொண்டிருந்ததினால் அதின் மொயினி நிறுத்தக் கூடாதென்கிற அபிப்பிராயத்தினால் மாஜி சர்க்கில் ஸ்ரீநீலகண்ட றாவு ஆனந்தறாவு ஜாதவ்[530] அவர்கள் அவாலாரத்தான காலத்தில் மால்வாரிகளில் சிலர்களை நேமித்துக்

518. விக்ருதி-விகிருதி-ஆண்டு அறுபதில் இருபத்து நான்காவது

519. துவா-தொழுகை

520. 11-05-1846

521. ஸ்ரீ பந்துஸ்வாமி - பாபாஜி ராமாஜி பண்டிதர்

522. மிமோறாண்டம் - நினைவுக்குறிப்பு (Memorandum)

523. ரெஸிடென்டு பதவியில் இருந்தவரே கமிஷனர் என்ற பதவியையும் வகித்தனர்; 1855க்குப் பிறகு கமிஷனர் பதவி மட்டும் இருந்தது.

524. பெட்டிஷன் - மனு (Petition)

525. யேகோஜி ராஜா - தஞ்சையில் 1676இல் அரசு ஏற்படுத்தியவர்

526. படே உசேன் அல்லா கோவில் - (பக்கம் 213இல் 15)

527. தவுலத்து-ஆட்சி; பாவ்லோக் -(?)

528. மோயினி - மொயின் தொகை - உதவித்தொகை

529. அவாலாரத்து - அவாலத்து - மாறுதல்(Transfer of obligation to another)

530. நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவ் (பக்.37)

கொண்டு சேவுகர்களுடைய ஜாப்தாக்கள் கொடுத்தபோது, ஷெ அல்லா கோவிலின் மொயினி ரூ. 9 சரஸ்வதி மகாலில் தாகல் செய்து 57ஆம் ஸு ஜுன்மீ 22உ[531] ரெசிடெண்ட்[532] துரையவர்களிடத்தில் ஒரு ஜாப்தா கொடுத்திருக்கிறதாக இன்டெண்டில்[533] தாக்கலாகி மீ மீ பணம் வந்து ஷெ கோவிலுக்குக் கொடுபட்டிருக்கிறது. அரண்மனை சேவுக்கக்காரர் களுடைய ஜாப்தா 58ஆம் ஸு மார்ச்சு மீ 9உ யுள்ள நம்முடைய 70 நீர் லெட்டருடன் துரையவர்களிடத்தில் நம்மாலனுப்பப்பட்ட போது ஷெ அல்லாகோவில் மொயினி ரூ 9 முன்நடந்த அனுஷ்டானப்படி சரஸ்வதி மகாலில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறதும் தவிர இப்பால் 59 ஆம் ஸு டிசம்பர் மீ 31 உல் கமிஷனர் துரையவர்களிடத்தில் கொடுபட்ட அரண்மனை ஆள் மாகாணங்களுடைய ஜாப்தாக்களிலும் ஷெ 9ரூ, சரஸ்வதி மகாலில் தாக்கலாயிருக்கிறது.ஷெ அல்லா கோயில் மொயினி ரூ 9 மீ மீ இன்டெண்டில் தாக்கலாகி, பணம் வந்து நாளது ஸுபிப்ரவரி மீ வரையில் பட்டுவாடா[534] செய்யப்பட்டிருக்கிறது ஷெ மொயினி 57 ஆம் ஸுத்திய ஜுன் மீ 22 உ யில் மாஜி சர்க்கல் ஸ்ரீ நீலகண்டறாவு, ஆனந்தறாவு ஜாதவ் அவர்களால் கொடுக்கப்பட்ட சேவுகக்காரர்களான பேர்களுடைய ஜாப்தாவில் தாக்கலாயிருப்பதை அப்போது ரிசிடெண்டு துரையவர்கள் ஒப்புக்கொண்டு மீ மீ அந்த மொயினி அயிவேஜியையும் அனுப்பவித்திருப்பதால் அதுவே ஷெ மொயினியை நடத்த ஒரு உத்திரவாக நினைக்க வேண்டியதா யிருக்கிறதினால் பெட்டிஷன் திருப்பியனுப் பபட்டிருக்கிறதென்று சர்க்கில் தெரிவிக்கிறார்.

விக்கிரமஸு[535]
ஜுன் மீ உ உ உ

## ஆவணம் எண் 29

தஞ்சாவூர் கவர்ண்மெண்டு ஏஜண்டு துரை அவர்கள் ஆபீஸ் சர்கில் கோவிந்தறாவு அவர்களுக்குக் கண்டி[536] கிர்த்தி சிம்மராஜா[537] எழுதிக்கொண்டது. என்னுடைய பெரியதாயார் கண்டி உ: ஆவது ராணி அவர்கள் குமாரத்தி ராஜரத்தின சிம்மளகமுசலாதேவி

531. 22-6-1857

532. ரெசிடெண்டு - Forbes

533. இன்டென்டு - Indent - (வேட்புக்)குறிப்பு

534. பட்டுவாடா செய்யப்பட்டிருக்கிறது - கொடுக்கப்பட்டிருக்கிறது.

535. விக்கிரம் - ஆண்டறுபதில் பதினான்காவது

536. கண்டி - இலங்கையிலுள்ள நகரம்

537. கீர்த்திசிம்மராஜா - கண்டி அரசர் விக்கிரம சிங்கரின் தம்பி (பக்.96)

௲௮௱௩௰௯ஆம் ௵[538] த்தில் சிவதெசை செய்தார்கள்.[539] தகப்பனார் அப்பா னுறனேந்திற சுவாமி றாஜர் ௲௮௱௫௰௯[540]ம் ௵த்தில் சிவதெசை செய்தார்.[541] இவர்களுக்குக் கோரிகட்ட வேண்டியது.

௲௮௱௭௰௮ ௵ மே மீ ௩௰௧ ௳[542]

(தெலுங்கில் கையொப்பம்)

கிர்த்தி சிம்மராஜு

## ஆவணம் எண் 30

றாஜசாம்பாள் சத்திரத்துக்காக[543]

1. 1777 ஆம் ௵ம் றாஜசபாயி சாயேப்பவர்கள் தர்மம் செய்ய வேண்டியதற்காக கும்பகோணம் பதகம்[544] கஸ்பா[545] கிறாமம் முழுவதும் கொடுத்ததாக ஏற்பட்ட பரவானகி[546].

2. 1777 ஆம் ௵த்தில் பாயிசாயேப்பவர்களுக்கு[547] ஏற்கனவே சத்திரம் வகையறா நடந்து வந்து நவாப்[548] நாளையில் ஜப்தியானதை நாளது ௵த்தில் முன்பு வழக்கப்படி கொடுத்து விடும்படி ஏற்பட்ட பரவானகியில் றாஜசாம்பாள்புரம் சத்திரத்துக்காக தாராசுரம் கிராமம் முழுவதும் தாராசுரத்தைச் சேர்ந்த தோட்டமும் கொடுத்திருப்பதாய்க் கண்டிருப்பதற்குப் பரவானகி.

---

538. 1839

539. சிவதெசை செய்தார்கள் - இறந்தார்

540. 1859

541. செய்தால் என்பது மூல மொழிபெயர்ப்பிலுள்ள சொல்

542. 31-5-1878

543. இராஜசாம்பாள் சத்திரம் - இது தாராசுரம் சத்திரமாகும். இராச சாம்பாள் என்பவர் இரண்டாம் துளஜாவின் முதன்மனைவியாவர் (பக்.273) இச்சத்திரம் 1771இல் அமைக்கப்பெற்றது.

544. பதகம் - பதக் (பதக்கம்) என்பது சில கிராமங்களின் ஒன்றியம்

545. கஸ்பா - தலைமையூர்

546. பரவானகி - அரசனது ஆணை; இவ்வாணையில் அரசனது கையொப்பம் இருக்காது (பக்கம் 365)

547. பாயி சாயேப் என்றது இராஜசா பாயியை.

548. நவாப் என்றது முகம்மது அலிகானை; 17-9-1773 முதல் ஏறத்தாழ மூன்றாண்டுகள் தஞ்சைத்தரணி முழுவதும் நவாபின் ஆட்சியில் இருந்தது (பக்கம் 48; (90-91)

3 1827 ஆம் ஷூத்தில் தாராசுரம் கிராமத்துக்காக ஏற்ப்பட்ட ஜமாபந்தி[549] கணக்கு

4. 1854ஆம் ஷூத்தில் தாராசுரம் கிராமத்தார் பேரில் இருக்கும் வசக்கட்டுக்[550]காக ஏற்ப்பட்ட கணக்கு தாராசுரம் கோவில் ஸ்தானீகன் காப்பி[551] ஷெ ஷூத்தில் (ஸ்டாம்பில்) வாங்கியிருக்கிறான்.

ஷெ கிராமத்தார் பேரில் வசக்கட்டுயிருப்பதற்கு ஆயக்கட்டு[552] மேல்வார மான்யம் மகமை[553] பிச்சைக்கட்டளை[554] தோட்டம் குத்தகை மடப்புறம்[555] குத்தகை வகையறாவுக்காக ஏற்பட்ட கணக்கு

5. 1833ம்ஷூத்தில் தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம்.

ஷெயான் குத்தகைப்படி
குத்தகைதாரனிடத்திலிருந்து
வசூல் செய்யும்படி

மத்தியஸ்தர் கிருஷ்ணாஜி கேசவ
பண்டிதருக்குத் தாராசுரம் சத்திரம்
கிறாமத்தைப்பத்தி ஆயக்கட்டு,
சாதுர்பாக மானியம்[556] வகையறாவின்
துகை வசூல் செய்து கொடுக்க
வேணுமென்பதாய் ஷெ சத்திரம்
அமீனா எழுதிக்கொண்ட லட்டர்.

(6) 1834ஆம் ஷூத்தில் ஷெ சங்கதியைப் பத்தி தஞ்சாவூர் கோட்டை வகையறா கார்பாரவர்களுக்கு ஷெ சத்திரம் அமீனா[557] எழுதிக்கொண்ட லெட்டர்.

(7) 1854-ஆம் ஷூத்தில் ஹாஸ்தாந்திறம் ரெங்கு முதலியாரவர்களால் தாராசுரம் சத்திரம் குடிகளால் வருஷாவருஷம் வசூலாகும் துகைக்கி ஏற்ப்படுத்திய ஜாபிதா.

---

549. ஜமாபந்தி கணக்கு - ஊர்க்குடிமக்கள் அரசாங்கத்துக்கு செலுத்த வேண்டிய வரிப்பணத்தைக் குறித்து ஆண்டு முடிவில் நிறைவுறுத்தும் கணக்கு

550. வசக்கட்டு - செலவுக்கென்று முன்னதாகக் கொடுத்த பணம்

551. காபி - (copy) படி; நகல

552. ஆயக்கட்டு - கிராமத்தின் மொத்த நில அளவுக் கணக்கு

553. மகமை - கோயில் சத்திரம் முதலியவற்றின் செலவுகட்காக வசூலிக்கும் வரி

554. பிச்சைக்கட்டளை - தருமக்கட்டளை (இரப்போர்க்கு உணவிடுதற்காக)

555. மடப்புறம் - மடத்துக்கு விடப்பட்ட இறையிலி நிலம்

556. சாதுர்பாகம் - நான்கில் ஒரு பாகம்

557. அமீனா - பணம் வசூல் செய்யும் அலுவலன்

(பின்புறம்)

(8) 1239-ஆம் பசலியில் தாராசுரம் வட்டம் முதல் கண்டம் 3, ந-பு-புறம் போக்கு உள்ப்பட பைமாஷ் உள்ப்பட சிட்டா ஷெ ஷெ 1239 ஆம் பசலி பைமா- இப்படி பைமாஷ் சிட்டாக்கள்.

1862-ஆம் வருடத்தில் மேல்வாறம் அயிவேஜி செலுத்துவதாய் தாராசுறம் கிராமத்தார் கெடுக்கண்டு ஷெ கணக்கு வீரப்பன் நெட்டெழுத்துள்பட யெழுதிக் கொடுத்த சீட்டு.

1847 -ஆம் வருஷத்தில் மேல்வாறம் அயிவேஜி பாக்கி நிர்ப்பதைச் செலுத்துவதாய் ஷெ கிராமத்தார் யெழுதிக் கொடுத்த அத்தாட்சி.

1817- ஆம் வருஷத்தில் பிச்சைக் கட்டளையைப் பற்றி ஷெ கிராமத்தார் யெழுதிக்கொடுத்த குத்தகை அத்தாட்சி.

1854 -ஆம் வருஷத்தில் ஷெகிராம மிராசு வெங்கிட்டராம ரெட்டி யென்பவன் நஞ்சை நிலம் பிரபோசல் வாங்கியதைப் பத்தி சம்மதி பத்திரம்.

## ஆவணம் எண் 31

பந்தநெல்லூர் கோட்டை கில்லேதாரி[558] வேலை ஸ்ரீ துளஜாமகாராஜா சாயபு அவர்கள் இரண்டாவது தடவை பட்டத்துக்கு வந்த பின்பு[559] 1777-ஆம் வருஷத்தில் சரபோஜி விசுவாஸறாவ் என்பவருக்குச் செய்து கொடுத்தார்கள். துலுக்க ஸு[560] ஸம்பாஸம்பைன்[561] ஜமாதி லவ்வல் மீ[562] 20 உ ஷெ யாற[563] (பெல்லாபெ அஷ்னு சாபாற்மீ 9 உ) யெறந்து

558. கில்லேதார் - கோட்டைக் காவல் அதிகாரி

559. துளஜா இரண்டாவது தடவை பட்டத்துக்கு வந்தமை:- தஞ்சைக்கோட்டையைப் அரசையும் நவாப் முகம்மதலிகான் கும்பனியார் உதவியால் 17-9-1773இல் கைப்பற்றி ஏறத்தாழ மூன்றாண்டுகாலம் ஆட்சி நடத்தினான். மேலிடத்தார் கும்பினியாரின் செயலைக் கண்டித்து மீண்டும் துளஜாவுக்கு அரச பதவி அளிக்குமாறு ஆணையிட்டு லார்டு பிகட் (Lord Pigot) என்பவரை அனுப்பினர். அங்ஙனம் லார்ட் பிகட் 11-4-1776இல் தஞ்சைக்கு வந்து மீண்டும் துளஜாவை அரசர் ஆக்கினார் (பக்கம் 48)

560. துலுக்க வருஷம் - ஸுஹூர்ஸன் ஆண்டு

561. ஸமபாஸம்பைன - இத் தொடரை "ஸபா ஸபைன்" என்று படித்தல் தகும். ஸாபா - 7; ஸபைன் - 70; மயா - 100; அலப் - 1000 = 1177
ஸுஹூர்ஸன் 1177 + 599 = 1776(1777 ஆகலாம்)
இதில் மயா அலப் விடுபட்டுள்ளன.

562. ஜமாதிலவ்வல் - அரபு ஐந்தாவது மாதம்

563. சில சொற்கள் விடுபட்டுள்ளன

போய்விட்டான்.(1813-ம் வூத்தில்)அவளுக்குப் பதில் அசாமி ஆகயில்லை[564]யென்று (பழைய ரிக்காற்ட்டில்) யெழுதி வைத்திருக்கிறதனால் தெரியவருகிறது.

36-ஆம் வருஷம் ஷெியாள் பேரால் கில்லேதாரி நடப்பிவித்ததாயி தெரிய வருகிறது.

முந்தி 1765-ஆம் வூத்தில் காற்பாற் கொகலு யென்ம்பவறுக்கு மீ 1க்குச் செல்லு ஷெ5 பொன்னு வீதம் இருந்ததாக கணக்கு நூல் அறியும்படி இருக்குறது.

## ஆவணம் எண் 32

1777 வூத்தில் கேது மீ[565] 17 உ துளஜா றாஜா அவர்கள் திருவையாறு பதக்கத்தின் உத்தியோகஸ்தர்களுக்கு அறிவிக்கிற தென்னவென்றால் கோவிந்தறாவ் போசலை அவர்களுக்கு ஷெ பதகம்[566] திறப்பு திருவலஞ்சுழி மாகாணத்தில் அறியப்பட்டு வீடு கிராமம் குளபிரமாணம்படி[567] 14 அடிக்கோலால் நிலம் வேலி 32-மா[568] -3 இதில் புறம்போக்கு[569] னத்தம்[570], தெருவிருப்பு[571] நீர்னெலை[572]வகையறா வுள்பட நிலம் வேலி 5 போக பாக்கி நிலத்துக்கு விபரம்.

நஞ்சை திறப்பு[573] மான்னியம்[574] யெறயலியுள்பட[575] வேலி 22, புஞ்சை திறப்பு யெறயலியுள்பட வேலி 5-மா 3 = 27-மா 3

---

564. இவ்வாவணத்தால் பெண்பால் கில்லேதாராக இருந்தாரா என்பது நன்கு அறிய வாய்ப்பில்லை (ஆகயில்லை - ஆகவில்லை)

565. கேதுமாசம் - (தைமாசம்?)

566. பதக் - பதக்கம் - சிலவூர்களின் ஒன்றியம் (பக்.74)

567. குளப்பிரமாணம் - ஏரி நீரால் பயிரிடப்படும் மொத்த நிலம்

568. 29 மாஒரு வேலி

569. புறம்போக்கு - ஊர் மக்களுக்குப் பொதுவாகப் பயன்படுவதும், பயிரிடுவதற்குத் தகுதியில்லாததும், குடிகள்வசம் இல்லாததும் வரி விதிக்கப்படாததுமான நிலம்.

570. நத்தம் - ஊரில் குடியிருப்பிடம்

571. தெருவிருப்பு - வீடுகளின் முன்புறமுள்ள தெருவின்பகுதி

572. நீர்நிலை - குளம் குட்டை ஓடை முதலியன

573. திறப்பு - தீர்வைக்குட்பட்ட நிலம்

574. மான்யம் - தீர்வை செலுத்தாமல் அனுபவிக்கப்பெறும் நிலம்

575. யேறயலி - இறையிலி - தருமத்துக்கு விடப்பட்டதால் வரிநீக்கப்பட்ட நிலம்

ஆக நஞ்சை புஞ்சை யுள்பட இருபத்தியேழு[576] வேலி, மா-3 ஷெ கிராமம் முழுமையும் மான்யம் தவிர இப்போதிருக்கும் இனி ஏற்படும் வரியும் சகல சமுதாயங்களுடன்[577] இனாம் கொடுக்கப்பட்டது. அவர் வசப்படுத்துகிறது. புத்திரபௌத்திர பரம்பரை[578] நடப்பிவிக்கிறது.

## ஆவணம் எண் 33

துளஜா மகாராஜா சத்துப்போன பிர்ப்பாடு சிவிங்கிக்[579] கோட்டையிலே கவனற்[580] யிருக்குற வீட்டுலே எங்களை அழச்சி கொண்டு போனாற்ங்கள். அங்கே போகச்சே யின்ன காரியத்துக்கு அழச்சிக் கொண்டு பொனார் யென்று, யெங்களுக்குத் தெரியாது. அங்கே போனபிற்பாடு வங்காளத்தில் யிருந்துவந்து யேழு கேள்வியைக் கேட்டார்ங்கள். அதுக்கு எங்களுக்குத் தர்ம சாஸ்த்திரியம் தெரியாது. ராசாவின் வீட்டுப் பூர்வோத்திரியமும்[581] தெரியாது. அப்படிக் கொண்ட எங்களைக் கையெழுத்துப் போடச் சொன்னாற்ங்கள். கையெழுத்துப் போட்டேன். னான் அறியாதே சும்மா கையெழுத்தைப் போட்டேனே என்று பிற்பாடு ரொம்ப மனஸ்தாபம் பட்டேன். யின்னம் மனஸ்தாபம் படுகிறேன். யிந்தப்படிக்கு அப்பா சாஸ்திரி கையெழுத்து.

## ஆவணம் எண் 34

க எ ரு ரூ பா

*DEPUTY COLLECTOR TANJORE*

*17, Nov. 1877*

*Stamp Office*
*28, December 69*
*Madras.*

1878-ஆம் ஞு பிப்ரவரி மீ 24வக்கு ஈசுவற-ஞு[582] மாசி மீ 14 வ தஞ்சாவூர் அரண்மனையிலிருக்கும் லேட் ஹைனிஸ்[583] சிவாஜி மகாராஜா அவர்களுடைய மாப்பிள்ளை

576. இருபத்தியெழு - இருபத்தேழு
577. சமுதாயங்கள் - ஊர்ப்பொதுச் சொத்துக்கள்
578. புத்திரபௌத்ர பரம்பரை - மகன் பேரன் ஆகிய வழிவழியாக
579. சிவிங்கி - சிவகங்கை
580. கவர்னர் - லார்டு ஹோபர்ட் (பக்.52)
581. பூர்வோத்திரியம் - முன்பின் நடந்தவை
582. ஈசுவர வருஷம் - அறுபதாண்டுகளில் பதினோராவது
583. Late Highness - இறந்த மேன்மைதங்கிய அரசர்

துரையவர்களாகிய ஸ்ரீ ராஜா சக்காராம் ராவு சாகேபு மோகிதேஅமீர் ராவு அவர்கள் ஷெ ஜில்லா கும்பகோணம் தாலுகா சருவமானிய கொட்டையூரிலிருக்கும் கோபால செட்டியார் குமாரர் ராமய்ய செட்டியாருக்கு ஈட்டுக்கடன் பத்திரம் யெழுதிக் கொடுத்தது யென்னவென்றால் நமக்குச் சொந்த மானதுமிதனடியில் கண்ட விவறப்படிக்குள்ளதுமான தங்கப் பாத்திரம், சிவப்பு, வயிரம், பச்சை இழைத்த நகை வகையறாக்களைத் தங்களிடத்தில் யீடு கொடுத்து, அதின் பேரில் நாம் கடன் வாங்கினது ரூ ௯ய ரூ இந்தத் தொண்ணூறாயிறம் ரூபாயும் நம்முடைய பத்தானதற்கு விவறம் அரியலூரு[584], வகையறா கிராமம் வாங்க வேண்டியதற்காக 1876ஆம் ௵ மார்ச்சு ௴ 7வயில் இதனடியில் கண்ட நகைகளில் சில நகைகளின் பேரில் தங்களிடத்தில் நாம் கடன்வாங்கின ரூ உ ய ரூ[585] அதற்கு நாளது எ ய அ ஆம் ௵[586] ஜனவரி ௴ 31உ வரைக்கும் வட்டி ரூ உ ரூ ரு எ ௬ ய ரு (இரண்டாயிரத்து ஐநூற்றறுபத்தைந்து),77ஆம் ௵ ஏப்ரல் ௴ 28 உயில் புத்தூரு பங்களா ரிபேர்[587] சிலவுக்காக நம்முடைய ஏஜெண்டு ஸ்ரீநிவாசய்யங்காரால் வாங்கினது ரூ உ ரூ (இரண்டாயிரம்),அதற்கு 78ஆம் ௵ ஜனவரி ௴ 31உ வரைக்கும் வட்டி ரூ ள ௩ ய ௬ (நூற்று முப்பத்தாறரை),77ஆம் ௵ ஜூன் ௴ 28உயில்ஷெ பங்களா ரிபேர் சிலவுக்காகத் தங்களிடத்தில் கடன் வாங்கினது ரூ ரூ (ஆயிரம்).அதற்கு நாளது ௵ ஜனவரி ௴ 31உ வரைக்கும் வட்டி ரூ ரு ய ௩ வ (ஐம்பத்து மூணேகால்).அரியலூர் கிறாமம் வாங்க வேண்டியதற்காக ஸ்ரீரங்கம் டி கிருஷ்ணசுவாமி ஐய்யரிடத்தில் அடியில் கண்ட நகைகளில் சில நகைகளின் பேரில் நாம் வாங்கியிருந்த கடன் துகையை அவருக்குக் கொடுக்கும்படி நாம் சாட்டிவிட்ட வகையில் தாம் 77ஆம் ௵ நவம்பர் ௴ 29வயில் அவருக்குக் கொடுத்த துகை ரூ உ ய ரு ரூ ௩ ள எ ய ரு (இருபத்தையாயிரத்து முன்னூற்றெழுபத்தைந்து).அதற்கு நாளது ௵ ஜனவரி ௴ 31 உ வரைக்கும் வட்டி ரூ ௩ ள உ ய உ ௬ ,டில்விக்குப் போயிருந்த சிலவுக்காக ஷெ கிருஷ்ணசாமி ஐய்யரிடத்தில் இதனடியில் கண்ட சில நகைகளின் பேரில் நாம் வாங்கியிருந்த கடன் துகையைத் திர்க்க நாளது ௵ ஜனவரி ௴ 21 வயில் தாங்கள் கொடுத்த துகை ரூ உ ய ௬ ரூ ௩ ள ரு ய எ ௬ (இருபத்தாறாயிரத்து முன்னூற்றைம்பத்தேழரை), கோவிலுண்ணி கோபால தேசிக அய்யங்காறிடத்தில் இதினடியில் கண்ட சிலநகைகளின் பேரில் திருச்சினாப்பள்ளியில் பங்களா வாங்க வேண்டியதற்காக நாம் வாங்கியிருந்த கடன் துகையைத் திர்க்க ஷெ தேதியில் தாம் கொடுத்த ரூ ய க ரூ (பதினோராயிரம்),தொறையூர் ரெங்காரெட்டி இடத்தில் நாம் வாங்கியிருந்த கடன் துகையைத் திர்க்க ஷெ தேதியில் நாங்கள் கொடுத்த ரூ ரு ள (ஐநூறு), ஷெ தேதியில் நாங்கள் கொடுத்த துகை ரூ ௩ ய எ ரூ அ ள ரு ய எ ௬ (முப்பத்தேழாயிரத்து எண்ணூற்றைம்பத்தேழரை)அதற்கு ஷெசனவரி௴ 31உ வரைக்கும் வட்டி ரூ எ ய அ ௬ ௲ (எழுபத்தெட்டரையே அரைக்கால்), நாளது ௵ ஜனவரி ௴ உ ய உ வயில் நம்முடைய ஏஜண்டு ஸ்ரீநிவாசஐய்யங்கார் மூலமாய் நம்முடைய பத்துதல் ரூ ௬ ள (ஆறுநூறு) அதற்கு ஷெ

584. அரியலூர்

585. 20 ஆயிரம்

586. 78ஆம் வருஷம் (1878)

587. ரிபேர் - பழுதுபார்த்தல் (Repair)

மீ 31 உ வரைக்கும் வட்டி ரூ கஞ ஆக அசல் வட்டியுள்பட ரூ அ ய ககூ கள அ ய கரு ௱ சூ தெகிற மார்கழி மீ த்தில் மன்னார்கோயில்[588] றாஜகோபாலசுவாமி வெள்ளிப்பல்லாக்குத் தர்மத்துக்காக நாம் தங்களிடத்தில் பத்திகொண்ட ரூ ௩ள ரு ய[589] ஆக கூடுதல் ரூ கூய தூ ௩ ள ௩ ய கரு[590] நாளது தேதியில் தமக்கு நாம் ரொக்கம் கொடுத்து விட்டது ரூ ௩ள ௩ய கரு[591] ௱ சா போக பாக்கி தங்களுக்கு நாம் கொடுக்க வேண்டியது ரூ.கூய தூ. இந்தத் தொண்ணூறாயிரம் ரூபாயும் மேல்கண்ட விவறப்படி நம்முடைய பத்தாகிவிட்டபடியால் ஷெ துகைக்கி நாளது எ ய அ ௵[592] பிப்ரவரி மீ கஉ முதல் மீ கக்கு ரூ ளக்கு ருய(9/16) வீதம் ஒவ்வொரு ௵த்துக்கும் கூடுதலாகும் வட்டித் துகையை அந்தந்த ௵ ஐப்பசி மீ 30 உக்குள்ளாகவும் அசல் துகை ரூ கூய தூ த்தையும் 1883ம் ௵ ஜனவரி மீ 31 உக்குள்ளாகவும், தமக்கு நாம் செலுத்தி அடியில் கண்ட விவரப்படி தங்களுக்கு நாம் யீடு கொடுத்திருக்கிற நகைகளையும் இந்தப் பத்திரத்தையும் நாம் வாங்கிக் கொள்ளுவோமாகவும் மேல்கண்டபடி அசல் துகையும் வட்டித் துகையும் கெடுக்களில் கொடுக்கத் தவறினால் அப்படிக்குத் தவறின கெடுக்களின் துகைகளை அதுகள் செல்லாகும் தேதி வரையில் மேல்கண்ட வீதப்படிக்குள்ள வட்டியுடன் சேர்த்துக் கொடுப்போமாகவும் ஷெ கெடுவுக்குள் யெப்போதாவது அசலுக்காக துகை செலுத்துகிறதில் ரூ உ ய தூ க்கு (இருபதாயிரத்துக்கு) குறையாமல் செலுத்தி வருவதும் தவிர அதற்குப் பொருமான நகைகளை இதில் தாகல் செய்து பெற்றுக் கொள்வோமாகவும் இந்தப் பத்திரத்தில் வரவு வைக்கப்படாமல் வேறு விதமாய்ச் செலுத்தினதாகச் சொல்லும் செல்லுகள் செல்லத்தக்கதில்லை. நம்முடைய ஏஜண்டு ஸ்ரீநிவாசஐயங்கார் பேரால் வாங்கிய இந்த ஷெட்டவயில் இந்தஇட்டுக்கடன் பத்திரம் எழுதிக்கொடுத்தோம்.

யீடு கொடுத்த நகைகளின் விபரம்

1) பொன் பட்டை போட்ட பேலாக்கிண்ணம் க-க்கு[593] ரூ சய கூவ[594]

2) ஷெ பேலாக்கு ரூபாயிடை ரூ௩ய ருளு[595]

3) ஷெ பேலாக்கு ரூபாயிடை ரூ உ ய சளு[596]

588. மன்னார்கோயில் - மன்னார்குடி

589. ரூ.350 -

590. ரூ.90,339 1/2

591. ரூ.339 1/2

592. 78ஆம் வருஷம் (1878)

593. க - க்கு - 1க்கு

594. 49 - 1/4

595. 35 3/4

596. 24 3/8

4) ஷை பேலாக்கு ரூபாயிடை ரூ உ ய சரு ளு[597]

5) ஷை பேலாக்கு ரூபாயிடை ரூ உ ய சரு[598]

6) ஷை சாதா பேலாக்கு மேல் மூடி யுள்பட ரூபாயிடை ரூ ந ய எ ரு

7) ஷை சாதா பேலாக்கு மேல் மூடி யுள்பட ரூபாயிடை ரூ உ ய ந வ

8) ஷை சாதா பேலாக்கு மேல் மூடி யுள்பட ரூபாயிடை ரூ உ ய ந வளு

9) ஷை லோட்டா க க்கு மேல்மூடி யுள்பட ரூபாயிடை ரூ ச ய ளு

10) ஷை சாதா லோட்டா க-க்கு ரூபாயிடை ரூ உ ய அ வளு[599]

11) ஷை டம்பள் க க்கு ரூபாயிடை உ ய சரு

(கையொப்பம்)

3ம் பக்கம்

12) பொன் பட்டை போட்டை காசிசெம்பு க க்கு ரூபாயிடை சய க (41)

13) ஷை அநுடான[600] பஞ்சபாத்திரம்[601] க க்கு ரூபாயிடை ந ய எ ரு (37 1/2)

14) ந -குமிழ் வைத்த விருத்த[602] தட்டு க க்கு ரூபாயிடை சய களு (49 1/8)

15) ஷை கிண்ணி க க்கு ரூபாயிடை ய உ ரு (12 1/2)

16 ஷை சின்ன கிண்ணி க க்கு ரூபாயிடை கூரு (9 1/2)

17 ஷை சாதாகேடயம்[603] க க்கு ரூபாயிடை கூய எ ரு (97 1/2)

18) பொன் எழுவடச் சந்திரகாரம்[604] க க்கு நகைமுகப்பு சங்கிலி யுள்பட ரூபாயிடையரு (15)

19) ஷை கம்பிக்காறை[605] க க்கு ரூபாயிடை ய க வ (11 1/4)

20) ஷை வங்கி[606] ஜோடி க-க்குச் சலங்கை முத்துள்பட ருபாயிடை ந ய ரு வ (35 1/4)

21) கால்மோகறா[607] மாலை க-க்கு கால்மோகரா சகூம் அறை

---

597. 24 5/8

598. 24 1/2

599. 28 3/8

600. அனுடான - அனுஷ்டான - சமய ஒழுக்கங்களுக்குரிய

601. பஞ்சபாத்திரம் - அகன்ற வாயுள்ள தீர்த்த பாத்திரம்

602. விருத்த - வட்டமான

603. கேடயம் - திருவாசியொடு கூடியதாய் விக்கிரகத்தை எழுந்தருளப்பண்ண உதவும் சிறுவாகனம்

604. சந்திரகாரம் - சந்திரன் போன்று வட்டமான தங்க வளையங்கள் கோக்கப்பெற்ற மாலை

605. காறை - கழுத்தில் அணிந்து கொள்ளும் ஒரு வகை அணி

606. வங்கி - தோள் அணிகலன்

607. மோஹரா - தங்க நாணயம்

மோகறா க சங்கிலி, கண்டிமணி யுள்படி ரூபாயிடை ய் கூளு (19 1/8)
22) பொன்பாதசரம்[608] ஜோடி க-க்குக் கயறில் கோத்த ஒத்தை வரிசைச் சலங்கை திருகுள்பட ரூபாயிடைரு ய் ந ளு (53 3/4)க்குப் போக்கு இடைக்கு ளு (3/4) நீக்கி ரூபாயிடை ரு ய் ந (53)
23) ஷெ நாகபந்தா[609] ஜோடி க-க்கு சலங்கை செகப்பு முத்துள் பட ரூபாயிடை ய் அ ரு ளு (18 5/8)
24) ஷெ யிட்டில்ஜோடி க-க்குத் திருகுள்பட ரூபாயிடை ய் ளு ளு (10 7/8)
25) ஷெ தண்டை[610] ஜோடி க-க்கு ரூபாயிடை யி எ ளு ளு (17 7/8)
26) ஷெ கெண்டை மீன்-க நகாசு[611] சற்பாவளி[612] ஜோடி-க சாதாபீலி ஜோடி-க நெளி[613] ஒத்தை கக-கைச் சரடு[614] முகப்பு
திருகுள்படக் கையில் கட்டுகிற ஷெ ஜோடி -க, முகப்பு திருகுள்பட சூரிதை கொழகட்டை ஜோடி-க, நகாசு முகப்பு க. ஆக உருப்படி ய் உ - க்கு ரூபாயிடை யி சுவ ளு (14 3/8)

27) ஷெ களிச்சிக்காய் பாதரசம்[615] ஜோடி க-க்குத் திருகாணி யுள்பட ரூபாயிடை ந ய் உ ளு (32 3/4) க்கு அறக்குப் போக்கு ரூபாயிடை உ ளு (2 3/4) போக பாக்கி ரூபாயிடை ந ய் (30)

(கையொப்பம்)

(4ம் பக்கம்)

28) பொன் நகாசு சர்ஜாகாப்பு ஜோடி-க மணில்லாகாற ஜோடி -க ஆக ஜோடி உக்கு ரூபாயிடைய் ரு ளு (15 3/4)க்குப் அறக்குப் போக்கு ரூபாயிடை ரு ளு (5 3/4) போக பாக்கி ரூ. ய் (10)

29) ஷெ திருகுள்பட கங்கணம்[616] ஜோடி-க திருகுள்பட பிலாக்காயி கங்கணம் ஜோடி-க ஆக ஜோடி உ-க்கு அரக்குள்பட ரூபாயிடைஉ ய் ரு ரு (25 1/2)க்கு போக்கு ரூபாயிடை அ ரு (8 1/2) போக பாக்கி ரூபாயிடைய் எ (17)

---

608. பாதசரம் - மகளிர் கால் அணிகலன்
609. நாகபந்தம் - இணைந்த இரண்டு பாம்புகள் போன்ற அணிகலம்
610. தண்டை - காலணி வகை
611. நகாச - நகையிற் செய்யப்படும் அழகுவேலை
612. சற்பாவளி - சறப்பளி என்னும் அணிவகை
613. நெளி - வளைந்த விரலணி வகை
614. கைச்சரடு - கைக்கவசம்
615. பாதரசம் - கால் அணிகலன்
616. கங்கணம் - காப்புநாண்; ஒருவகைக் கைவளை

30) ஷெ ஒடாணி[617] யுள்பட சரி[618] ஜோடி உ-க்கு ரூபாயிடை உ ம் ரு ஓ (25 1/8)க்கு அறக்கு போக்கு ந-ரு (3 1/8) போக பாக்கி ரூபாயிடை உ ம் உ (22)

31) ஷெ சூரித்தைத் தட்டு ஜோடி-க க்கு ரூபாயிடைம் உ ரு ரு (12 5/8) க்குப் போக்குஉ ரு ரு (2 3/8) போக நீக்கி ரூபாயிடைய (10.)-

32) நகாசு பீலி[619] ஜோடி-க கலசபீலி ஜோடி-க, கிளிபீலி ஜோடி-க, சலங்கை மிஞ்சி ஜோடி-க, கல்புதைத்த மோதிரம்-க, ஆக உருப்படி கூ-க்கு வெள்ளிக்கம்பி அறக்குள்பட ரூபாயிடை ம் உ வ (12 1/4) க்குப் போக்கு உ வ (2 1/4) போக நீக்கி ரூபாயிடை ம் (10).

33) இடுப்பில் சொருகிற நகாசு கெண்டை மச்சம்-க, கையில் கட்டுகிற அஸ்த்தபல்லாஜோடி-க, ஆகஉ (4 1/4) உருப்படிங க்கு ரூபாயிடை ம் சூ வ (16 1/4) க்கு அறக்குப் போக்குசூவ (6 1/4) போக நீக்கி ரூபாயிடை ம்(10).

34) நகாசு ஜடநாகம்[620] க-க்கு உருப்படி ம் சு (16) உம் சலங்கை அறக்குப் பொடி கயறுள்பட ரூபாயிடை உ ம் உ ரு (22 3/4) க்குப் போக்கு எ ரு (7 3/4) போக நீக்கி ரூபாயிடை ம் ரு (15)

35) காலில் கட்டுகிற சப்பட்டை[621] சலங்கை[622] ஜோடி-க, மோகன மாலை[623] கோர்வை-க, ஜடகுச்சு[624] உருப்படிங நகாசு பாஜிபந்து[625] குச்சுள்பட ஜோடி-க, மொட்டுமாலை[626] கோர்வை-க, ஆக இனம் ரு க்கு ரூபாயிடை-ம் ரு க்கு பொன் உத்தேசம் ரூபாயிடை ம் உ (12)

(36) காலில் கட்டுகிற பகளம்[627] பொன் குண்டுகள் உள்பட ஜோடி-க மாந்தளிப் பச்சை பொன்குண்டு கயறில் கோத்த ஜோடி-க, சிகப்புச் சன்னத்துக்கு பச்சை தேஞ்ச ஒடஞ்சதுள்பட பகளம் கயறில் கோத்த ஜோடி-க.

---

617. ஒடாணி - அணி முதலியவற்றிலுள்ள மாட்டும் ஆணி

618. சரி - வளையல்களில் ஒரு வகை

619. பீலி - காலணி வகை

620. ஜடநாகம் - சடைநாகம் - தலையில் அணியும் அணிகலம்

621. சப்பட்டை - தட்டையான; உள்ளீடில்லாத

622. சலங்கை - சதங்கை

623. மோகனமாலை - பொன்னும் பவளமும் கோத்த மாலை வகை

624. ஜடகுச்சு - ஜடைக்குச்சு - தலைமயிர்ப் பின்னலுடன் வைத்துப் பின்னும் குஞ்சவணி

625. பாஜிபந்து - தோளணிவகை

626. மொட்டுமாலை - அரும்பு மாலை

627. பகளம் - பவளமாகலாம்

ஒதரி பொன் குண்டு ம், ஆக இனம்-சுக்கு ரூபாயிடை-சம் எ-க்கு பொன் உத்தேசம் ரூபாயிடை ம் உ (12).

37) பொன் றாக்குடி[628]-க போஞ்சி[629] ஜோடி-க, கோலாட்டக்கழி உஆக இனம் ங- க்கு ரூபாயிடைஉ ம் சரு (24 1/2) க்குப் பொன் உத்தேசம் ரூபாயிடை ம் (10)

5ம் பக்கம்

38) பொன் கைக்கோர்வை அறணாள்[630] க-க்கு முகப்பு திருகுள்பட ரூபாயிடைரு ஞு (5 3/8) ஆக கூடுதல் பொன் இனம் ங ம் அ[631] க்கு உத்தேச மதிப்பு ரூபாயிடை சுள சம் எக்கு[632] மதிப்பு ரூ ம் உ தூ சுளா உ ம் எ[633] (பன்னிரண்டாயிரத்து அறுநூ ற்றிருபத்தேழு)

39) பலச்சை வயிறப் பதக்கம் க-க்கு ஒரு பக்கம் முத்துவடம்ம் உ -ம் ஒரு பக்கம் ஷை வடம்ம் க-உம் தொங்கல் பச்சமணிய ங-உம் செகப்பு உ-ம் கயரு முத்துவடம் அறுந்து கட்டியிருக்கிறதுள்பட
ரூபாயிடைஉ ம் உ -க்கு மதிப்பு ரூ.எதூ (7000)

40) றஞ்சுகுதான்-க,க்கு ஒரு பக்கத்தில் செகப்பு வயிரம் இழைத்ததும் மேல் திருகு சிகப்பு வயிரம் இழைத்ததும் திருகாணியில் ஒரு வயிறம் உடைந்திருக்கிறதும், இரும்பு கம்பியுள்பட ரூபாயிடைசம் ங ரு று (43 5/8) ஷை இனத்தில் தொங்கல் பச்சைக-ம் பட்டைப் பச்சை உ-ம் முத்து தொங்கல் (ம) உள்பட மதிப்பு உத்தேசம் ரூ.எ தூ (7000)

41) உலாந்தா[634] கமலம் சிகப்பு இழைத்தது சூரியன் க-க்கு
அதில் ங சிகப்பும் இரண்டு முத்தும் நீங்கலாக இரண்டு முத்து கயறுகட்டியிருக்கிறதுள்பட ரூபாயிடைம் உ ரு (12 1/2)க்கு உத்தேச மதிப்பு ரூ.உ தூ ரு ள (2500).

42) உலாந்தா கமலம் சிகப்பு இழைத்த சந்திரன் க-க்கு அதில்ங முத்து நீங்கலாக ரூபாயிடைஎ ஞு (7 3/4)க்கு மதிப்பு ரூ.உ தூ ரு ள (2500)

---

628. றாக்குடி - ராக்கடி - தலையணிகலம்

629. போஞ்சி - கையணி வகை

630. அறணாள் - அரைஞான்

631. இனம் 38

632. ரூபாயெடை 947

633. ரூ.12627

634. உலாந்தா (?)

43) பலச்சை வயிரம்[635] இழைத்த தோடா ஜோடி க-க்கு அதின் முகப்பில் இரண்டு சிகப்பு நீங்கலாகவும் வயிரம் உடைந்திருக்கிறதும் திருகுநீங்கலாகவும் பின்புறத்தில் மெத்தை போட்டு தைத்திருக்கிறதுள்பட ரூபாயிடைசுயி அ (68) க்கு மதிப்பு ரூ. எ நூ(7000)

44) செகப்பு பலச்சை வயிறம் இழைத்த கை வங்கி ஜோடி க-க்கு உடைந்த வயிறம்கா உள்படவும் திருகு நீங்கலாகவும் ரூபாயிடை எ ரு (7 1/2)க்கு மதிப்பு ரூ. ௩நூ (3000)

45) இரு செகப்பு இழைத்த துத்திப்பூ[636]வில் கோத்த பலச்சை வயிரம் சிகப்பு இழைத்த மகரி[637] க-க்கு அதில் தொங்கல் பலச்சை வயிரம் யெழைத்த பதக்கம் க. அதில் முத்தும் ௩ ஒற்றைச் சிகப்பு கேட்டு, அட்டிகையில் கோத்த் மகரி க-க்கு அதில் பலச்சை வயிறம் இழைத்த தொங்கல் பதக்கம் அதில் முத்து-ய-நடு ஒதரி முத்து-க ஒற்றை, வடத்தில் முத்து பச்சைமணி கோத்த பலச்சை வயிறப்பதக்கம்க-க்கு அதில் தொங்கல் பச்சைமணி ய-க மேல்துறா பச்சைமணி-க, ஷை வடத்தில் பச்சைமணி ய உ முத்து ய உ கயரு. அறக்கு பட்டுக்குஞ்சம் உள்பட துத்திப்பு[638] பக்கங்களில் சன்னமுத்து[639] சுற்றியிருப்ப (அறிந்திருப்ப) துள்பட ரூபாயிடை 37க்கு மதிப்பு ரூ.எ நூ ரு ள (7500) ஆக மதிப்பு (மொத்தம்) சுயி கூநூ ள உ ய எ (49, 127)

(கையொப்பம்)

6-ஆம் பக்கம்

46) வயிற பலச்சை இழைத்த பாஜிபந்து[640] ஜோடி க-க்கு அதில்மேல்துறா பச்சை மணி -உ, தொங்கல்-எ துள பச்சை -உ, முத்துவடம்௩ உ உள்ப்பட்டது. ஒற்றையில் ஒருவயிரம் நீங்கலாகவும் ஒத்தையில் ஒரு வயிறம் துவாரம் போட்டிருக்கிற துள்படவும் கயறுள்பட ரூபாயிடை ய சுளுஷ (14 7/8) க்கு மதிப்பு ரூ.உ நூ ரு ள (2500)

---

635. பலச்சை வயிரம் - பலச்சை - பலசை - மட்ட வயிரம்; இலேசாக இருப்பது

636. துத்திப்பூ - ஒருவகைப்பூ

637. மகரி - மகரிகை - (அணிகலத்தில் அமைந்த) சுறாமீன் வடிவு

638. துத்திப்பு - துத்திப்பூ

639. சன்னமுத்து - மெல்லிய முத்து

640. பாஜிபந்து - தோளணிவகை

47) பலச்சை வயிறம் இழைத்த சின்ன பாஜிபந்து ஜோடி-க-க்கு அதில் முத்துவடம் ய உ-ம் துய்யா[641] சரிகைப்பட்டு நூல்கட்டு யிருக்கிறதுள்பட ரூபாயிடை எ ரு (71/2)க்கு மதிப்பு ரூது ரு ள (1500)

48) பலச்சை வயிறம் இழைத்த மயில்பசூி ஜோடி-க-க்கு அதில் துறா[642] முத்து அ-ம் தொங்கல் சன்னமுத்துஉ ஊ-உள்பட ரூபாயிடை ரு ரூஃ (5 3/8)க்கு மதிப்பு ரூது (1000)

49) பலச்சை வயிரம் சிகப்பு பச்சை இழைத்த ஜடநாகம் க-க்கு அதில் நாகம் ரெட்டை தாழுத்து தொங்கல் மச்சம் உள்ப்பட உருப்படியி க-உம் சன்ன சிகப்பு இழைத்த குச்சங-ம் குண்டுங-ம் நாகத்தில் துறாயி, தொங்கல் உள்பட முத்து எ-தொங்கல் பச்சைமணிச-கயறு கருப்புப் பட்டுக்குஞ்சம் உள்பட ரூபாயிடைஙய சுரு (36 3/4 )மதிப்பு ரூ.உ தூரு ள (2500)

50) ஒற்றைக்கமலம் கோத்த கெட்டு அட்டிகை[643] க-க்கு அதில் கமலம்ஙங-ம் அதின் தொங்கல் றாஜ குச்சுல் வயிறக்கமலம் சன்னம் மிஙு-ம் கயரில் கோத்த தொங்கல் பச்சை ச-ம் பட்டு நூல் கயறுள்பட ரூபாயிடை ய (10)க்கு மதிப்பு ரூ.எது (7000)

51) ஒற்றைக்கமலம் இழைத்த பீக்குபாளி[644] க-க்கு அதில் தொங்கல் வயிறம்-க-உள்பட ரூபாயிடைஞ று (7/8) க்கு மதிப்பு ரூ. து(1000)

52) பலச்சை வயிரம் சிகப்பு இழைத்த றாக்குடி க-க்கு அதில் சன்ன பச்சை இழைத்திருப்பதுள்பட ரூபாயிடையி சுவஞ (19 3/8) க்கு மதிப்பு ரூதுரு ள (1500)

53) வயிறம் சிகப்பு பச்சை இழைத்த றாக்குடி க-க்கு அதில் நடுக்கமலம்-எபலச்சை வயிறம் யி சு - செகப்பு பச்சை உள்பட
ரூபாயிடை மி ஙரு (13 1/2) க்கு மதிப்பு ரூது (1000)

54) செகப்பு பலச்சை வயிறம் இழைத்த பதக்கம்க-க்கு அதில் தொங்கல். குருவல்[645] முத்துயி ச-ம், சன்னமுத்து வடம் மி உள்பட ரூபாயிடை யி உ ஞ (12 3/4) க்கு மதிப்பு ரூஅ ள (800)

---

641. துய்யா சரிகை - துய்யாச்சரிகை - போலிசரிகை

642. துறா(?)

643. கெட்டு அட்டிகை - கெட்டி அட்டிகை - கெட்டி-உறுதி; அட்டிகை-கழுத்தணி

644. பீக்குபாளி; பீக்கு-பீக்கை-இலேசான

645. குருவல்; குரு - ஒளிபொருந்திய; வல் - வலிமையான

(55) செகப்பு வயிறம் இழைத்த பதக்கம் க-க்கு அதில் நடு பச்சை-க-தொங்கல் பச்சை-க, முத்துவடம் ச, உள்பட ரூபாயிடை சாரு (6 1/2) க்கு மதிப்பு ரூரு ள (500)

(56) வயிறக்கமலம் சிகப்பு இழைத்த டால்க்குமிழ் சு-க்கு அதில் உலாந்தா கமலம் உ ம அ -ம் சிகப்புகளும் பின்புறத்தில் வெள்ளிமரு சுத்துள்படவும், சிகப்பு வயிறம் இழைத்த (சந்திரம்) க-க்குப் பின்புறத்தில் வெள்ளிக்கட்டை உள்பட ஆக உருப்படி-ரு-க்கு ரூபாயிடை ஙயி ஙவ (33 1/4) -க்கு மதிப்பு ரூ.சூ ரு ள (1500) ஆகக் கூடுதல் (மொத்தம்)உ ம் அ ள (20, 800)

(கையொப்பம்)

(7-ஆம் பக்கம்)

57) பச்சை, சிகப்பு இழைத்த பாதசரம் ஜோடி சு-க்குத் தொங்கல் 49ம் ஒடாணியுள்பட ரூபாயிடை ஙயி ரு று (35 1/8) -ஒடாணியில் வொத்தையில் ஒரு சிகப்பு இல்லை மதிப்பு ரூ.எ ள (700)

58) சிகப்பு ஜிமிக்கி ஜோடி -க, பச்சை சிகப்பு இழைத்த ஜிமிக்கி[646] ஜோடி -க, ஆகஉ-க்கு முத்து கோசுள்பட ரூபாயிடை சுளு று (6 7/8) க்கு மதிப்பு ரூ.உ ள (200)

59) சிகப்பு இழைத்த நெளி[647] ஒற்றை -சு-க்குத் துறாமுத்து -க, தொங்கல் சன்னமுத்து-க, நடுநாயகம் நீங்கலாக வயிறம் சிகப்பு இழைத்த மோதிரம்-க: ஆக உ-க்கு ரூபாயிடைசாரு (6 1/2) க்கு மதிப்பு ரூ. ள (100)

60) வயிரபேஸரிக-க்குத் தொங்கல் பச்சை துறாவுள்பட பச்சமணி-ய-க்கு ரூபாயிடை க வறு (1 3/8)-க்கு மதிப்பு ரூ. உ ள ரு ம (250)

61) சிகப்பு இழைத்த பேஸரி[648] சு-க்குத் துறாயுள்பட முத்து ம ரு -க்கு ரூபாயிடை உ று (2 1/8) -க்கு மதிப்பு ரூ.எ ம (எழுபது)

62) பச்சை வயிறம் இழைத்த நத்து[649] சு-க்கு முத்து -ச- சிகப்புமணிஉ சன்னமுத்து கோசுள்பட ரூபாயிடை உ வ று (2 3/8) -க்கு மதிப்பு ரூ. உ ள ரு ம (250)

63) சிகப்பு சன்னம் பச்சை இழைத்த கங்கணம் ஜோடி க-க்கு திருகுள்பட ரூபாயிடை ம ளு று (10 7/8)-க்கு மதிப்பு ரூ.ள (100)

---

646. ஜிமிக்கி - கம்மலில் தொடுத்து அணியப்படும் முத்துக்கட்டிய காதணி வகை

647. நெளி - வளைந்த விரலணி

648. பேஸரி - மூக்கணி

649. நத்து - மூக்கணி

64) ஒற்றை முத்துக்கட்டின வளையல் ஜோடி க-க்குத் திருகுள்பட ரூபாயிடை 6-க்கு மதிப்பு ரூ.ள ரு ம (150)

65) செகப்பு இழைத்த பூவு ஜோடி க-க்கு நடுவில் பச்சை-உ, சிகப்பு இழைத்த சுண்டுவிரல் மோதிரம் -க உள்பட ரூபாயிடைஉ ளு (2 3/4)-க்கு மதிப்பு ரூ.ரு ம (50)

66) இரண்டுவட அவல் சரப்புளி[650] க-க்கு சன்ன சிகப்பு, பச்சை இழைத்த பாகக்காய் தாழுத்து-க, முத்து உ - க்கு ரூபாயிடை ரு-க்கு மதிப்பு ரூ.எ ம (70)

67) சிகப்பு வயிரம் பச்சைஇழைத்த ஜடநாகம்க-க்கு அதில் நாகம் ரெட்டை தாழுத்துள்பட உருப்படி- உ ம க, ,தொங்கல் முத்து-எ; மேல்த்துறா முத்து-சு , தொங்கல் பச்சைமணி-ருநாகத்தில் ரெண்டு சிகப்பு இல்லை. அதில் சிகப்பு இழைத்த குச்சு உருப்படி-ந குண்டு-ந, தொங்கல் முத்து -சுஉ, கயரு பட்டுக்குஞ்சம் உள்பட ரூபாயிடைரு ம உ ரு (52 1/2) -க்கு மதிப்பு ரூ. சுஙரு எ (6500)

68) உலாந்தா கமலம் பச்சை சிகப்பு இழைத்த சூரியன்க-க்கு, அதின் நடுவே ஒருவயிரம் நீங்கலாக ரூபாயிடை ம ந-ளு (13 3/4) -க்கு மதிப்பு ரூ.ஆ (1000)

69) பச்சை சிகப்பு இழைத்த சந்திரன் க-க்கு அதில் ந வயிரம் நீங்கலாகவும், துறா முத்துல் ந முத்து நீங்கலாகவும் ரூபாயிடை - ம உ ரு (12 5/8)-க்கு மதிப்பு ரூ.எ ள (700)

70) பச்சை சிகப்பு இழைத்த தண்டை[651] ஜோடிக-க்குத் திருகுள்பட ரூபாயிடை உ ம ரு ளு று (25 7/8)-க்கு மதிப்பு ரூ.ஆ (1000)

71) சிகப்பு இழைத்த கங்கணம்[652] ஜோடிக-க்கு அதில் பச்சை இழைத்த பூவு-உ, ஏனியில் உலாந்தா, கமலம் -அ ஒற்றையில் ஒரு சிகப்பு நீங்கலாக ரூபாயிடை உ ம ரு -க்கு மதிப்பு ரூ.ஆ (1000)

72) பச்சை மணி கோப்பு ஜோடி -க, ஒற்றை முத்துக் கோப்பு ஜோடி-க, அஞ்சுமுத்துக் கட்டின கொப்பு ஜோடி -க, சிகப்பு இழைத்த கோப்பு ஜோடி-உ தொங்கல் ஜிமிக்கி முத்து கோசுள்பட ரூபாயிடை க -க்கு மதிப்பு ரூ.ரு ள (500)

---

650. சரப்புளி - சரப்பளி - பொன்னால் இயன்ற கழுத்தணி வகை

651. தண்டை - காலணி வகை

652. கங்கணம் - ஒருவகைக் கைவளை

73) சிகப்பு இழைத்த முருகு[653] ஜோடி க-க்கு ஒற்றையில் ஒரு முத்து நீங்கலாக ரூபாயிடை க ரூ று (1 7/8) -க்கு மதிப்பு ரூ.ள (100)

74) பச்சை இழைத்த முருகு ஜோடி க-க்கு திருகுள்படவும், சு முத்து நீங்கலாகவும், ரூபாயிடைக வ று (1 3/8) -க்கு மதிப்பு ரூ.எ ம் (70)

75) சன்னத்துக்கு இழைத்த ஜிமிக்கி[654] ஜோடி க-க்கு அதில் முத்து கோசுள்பட ரூபாயிடைரு வ (5 1/4) -க்கு மதிப்பு ரூ.ள (100)

76) சன்ன சிகப்பு இழைத்த கிள்ளட்டிகை[655] க-க்கு அதில் குச்சு திருகுள்படவும் நூல் கயருள்படவும் ஒற்றைக் கிள்ளில் போன துள்பட ரூபாயிடைஎ று (7 1/8)-க்கு மதிப்பு ரூ.ள (100)

77) சிகப்பு இழைத்த பலபண்டறம்[656] கோற்வை க-க்கு கயருள்பட ரூபாயிடை சுருறு (6 5/8) க்கு மதிப்பு ரூ.ள(100)

78) ௲-ஒட்டுசிகப்பு இழைத்த அட்டிகை[657] க-க்கு அதில் சிகப்பு குச்சுமுத்து கயருள்படவும்சு -சிகப்பு நீங்கலாகவும் ரூபாயிடை - உ-க்கு மதிப்பு ரூ. ள (100)

79) மேல் காது குண்டு யாளி ஜோடி சு-க்கு சிகப்பு பச்சை முத்துள்பட ரூபாயிடை சு-க்கு மதிப்பு ரூ. ரு ள (500)

80) பலச்சை வயிறம் இழைத்த புலாக்கு[658] க-க்கு தொங்கல் உள்பட ரூபாயிடைவறு (3/4)-க்கு மதிப்பு ரூ.ள (100)

81) நத்து[659] க-க்கு அதில் முத்துசசிகப்பு மணி-உ- கோசுள்பட ரூபாயிடைறு (3/4)-க்கு மதிப்பு ரூ. ரு ம் (50)

---

653. முருகு - காதணி வகை

654. ஜிமிக்கி - கம்மலில் தொடுத்து அணியப்படும் முத்துக்கட்டிய காதணி வகை

655. கிள்ளட்டிகை - நகக்கிள்ளு வடிவான பொன் உருக்கள் அமைந்த கழுத்தணி வகை

656. பல பண்டறம் - (?)

657. அட்டிகை - கழுத்தணி வகை

658. புலாக்கு - மூக்கில் தொங்கவிடும் அணி வகை

659. நத்து - மூக்கின் வகை

82) வயிரசன்னம் இழைத்த ஜம்பசரம் ஜோடி -க, ஒற்றைச் சிகப்பு இழைத்த ஜம்பசரம் ஜோடி-க, ஆக ஜோடி உ-க்கு முத்து கேர்சு பச்சை-உ- உள்பட ரூபாயிடை அ-க்கு மதிப்பு ரூ. ள (100)

83) மயில் ஜம்பசரம் ஜோடி க-க்கு உருப்படி சு-க்கு, சிகப்பு சன்னம் வயிறம், பச்சை, முத்து, கோசுள்பட ரூபாயிடை சஉ (61/2) க்கு மதிப்பு ரூ. ள அ ம (180)

84) பொன் அன்ன பக்ஷி பாளி ஜோடி க-க்கு அதில் பலச்சை வயிறம் சும் முத்துக்கோசுள்பட ரூபாயிடை ந-வ - (3 1/4) -க்கு மதிப்பு ரூ. ரு ம (50)

85) பீலி ஜோடி க-க்கு மேல்க்கிளி பொன் சலங்கை, வெள்ளிக்கம்பியுள்பட ரூபாயிடை சஉ (6 1/2) -க்கு மதிப்பு ரூ. எ ம (70)

86) சிகப்பு இழைத்த மோதிரம் க-க்கு அதன் மேல் கிளியுள்பட ரூபாயிடை. க வ (1 1/4) -க்கு மதிப்பு ரூ. ந-ம ரு. (35) ஆக கூடுதல் (மொத்தம்) ரூ.ந-சூள ரு ம ரு (3,155)

(கையொப்பம்)

(9-ஆம் பக்கம்)

87) ஒற்றை அரனெல்லிக்காய் பச்சை மோதிரம் க-க்கு ரூபாயிடை ஙு (3/4) -க்கு மதிப்பு ரூ. உ ம ரு (25)

88) பொன் குண்டில் முத்துகட்டினதும் பவழம் உள்பட கையில் கட்டுகிற ஜோடி க-க்கு ரூபாயிடை ம க -க்கு மதிப்பு ரூ. ரு ம (50)

ஆக சிகப்பு வயிரம் இழைத்த இனங்கள் உள்பட மொத்த மதிப்புக் கூடுதல் ரூ. அ ம சுசூஉ எ கூம எ (எண்பத்து நான்காயிரத்து இருநூற்று தொண்ணூற்றேழு).

தஞ்சாவூர் கோட்டைக்குள் பந்தமாணிக்க அப்பா சந்நிதியிருக்கும் தெண்டோ பண்டித ரென்கிற தியாகராஜ பண்டிதர் குமாறன் பாவா சாமி பண்டிதர் அறிவேன்.

கும்பகோணம் தாலுகா கொட்டையூர் குப்பஸ்வாமியய்யங்கார் குமாறன் சக்கிறபாணியய்யங்கார் நெட்டெழுத்துள்பட அறிவேன்.

## ஆவணம் எண். 35

*Estimated value descriptions of Jewel pledged amount,*

மதிப்பு. சிகப்பு வைரம் இழைத்த ஜடை நகை -க- 2500 ரூ.
வைரமிழைத்த தோடா ஜோடிக-க்கு - 7000 ரூ.
வைரமிழைத்த பாஜிபந்து[660] ஜோடி க-க்கு 2500 ரூ.
வைரமிழைத்த பதக்கு-க்கு தொங்கல்
பச்சை உள்படவும் முத்துசரம் உள்பட 7000 ரூ.
சீமை கமலம் கெட்டட்டிகே -க-க்கு மதிப்பு 7000 ரூ.

## ஆவணம் எண் 36

1880 ஆம் ஞூ டிசம்பர் மீ 20உ கும்பகோணம் தாலூகா கொட்டையூரிலிருக்கும் லக்ஷிமி நாராயண செட்டியார் குமாரர் சாரங்கபாணி செட்டியார் என் அவிபக்த தம்பி[661]யும், தாயாதியும்[662] லிகல் ரெப்சன்டேட்டிவுமாகிய[663] புருஷோத்தம செட்டியாருக்கு எழுதிக்கொடுத்த வகாலத்து.

என் அவிபக்த தமயன் இறந்துபோன றாமய்யா செட்டியார்[664] தஞ்சாவூர் ஹர்ஹைனஸ்[665] பிரின்ஸ்பால்[666] அவர்களுக்குக் கொடுத்திருந்த கடன் துகையில் நாளது மீ, 16உ யில் பத்திரம் பெற்றுக் கொண்டது போகப் பாக்கித் துகை கவர்ன்மெண்டாரவர்களுடைய 1880ஆம் ஞூ செப்டம்பர்மீ 13உ 417 நீ: உத்திரவுப்படி ரூ. 26357-8-0 யை கும்பகோணம் தாலூகா கஜானாவில் வாங்க வேண்டியதற்காக உனக்கு இந்த அதிகாரப்பத்திரம் கொடுத்திருப்பதால் எனக்காக நீ ஆஜராகி, தாலூகாவில் ஷெ துகையை வாங்கி வரவும், அது விஷயத்தில் ரசிது

---

660. பாசிபந்து - தோளணி வகை

661. அவிபக்ததம்பி - பாதிக்கப்படாத சொத்துள்ள (குடும்பத்தில் உள்ள) தம்பி

662. தாயாதி - ஒருவீட்டில் பிறந்த உரிமைப் பங்காளி

663. Legal Representative - சட்டப்படி பிரதிநிதி

664. ராமய்யா செட்டியார் - கோபால் செட்டியாரின் மகன்

665. Her Highness (பெருமதிப்புக்குரிய அரசி)

666. பிரின்ஸ்பால் என்பதைப் பிரின்செஸ் (Princess) என்று திருத்திப்படிக்க. பிரின்செஸ் - இளவரசி (விஜயமோகன முக்தாபாய் - இரண்டாவது சிவாஜியின் இரண்டாவது மகள்)

முதவிய எந்த தஸ்தாவேஜிகளில் கையெழுத்து வைத்துக் கொடுத்த போதிலும், அதுகள் எல்லாம் நான் சுவயமாய்[667] நடத்தினது போல ஒப்புக் கொள்வேனாகவும்.

சாறங்கபாணி செட்டியார்

புளியஞ்சேரி மிராசு னாரண சக்கிறபாணியநார் அறிவேன். கும்பகோணம் தாலுகா கொட்டையூர் சாமிநாதன் அறிவேன். இதில் கண்ட கட்சிக்காறரும் இரண்டு சாட்சிகளும் யென்முன்பாக கையெழுத்து சாட்சி போட்டார்கள்

20-12-80.

சுப்பறாயர்.

அகூர் கிராம முன்சிப்.

## ஆவணம் எண் 37

1880ம் ஸு டிசம்பர்மீ 2உ மகாகனம் பொருந்திய இந்தியா தேசத்தின் சக்கரவர்த்தினி[668] அவர்களுக்கு

கும்பகோணம் தாலுகா கொட்டையூரிலிருக்கும் புருஷோத்தம செட்டியெழுதிக் கொடுத்த ரசிது யென்னவென்றால்.

தஞ்சாவூர் ஹர் ஹைனேஸ் தி. பிரின்ஸெஸ் விஜயமோகன முக்த்தாம்பா பாய் அம்மணி ராஜே ஸாகேப் அவர்களால் எனக்குக் கொடுக்கபட வேண்டிய கடனுக்காக சென்னைப்பட்டணம் கவர்ண்மெண்டாரவர்களுடைய 1880ம் ஸு செப்டம்பர்மீ 13உ யுள்ள 417 நீ- உத்திரவுப்படி தஞ்சாவூர் கவர்ண்மெண்டு எஜண்டு மேஸ்டர் E. F. வெப்ஸ்டர்[669] துரையவர்கள் மூலமாக நாளது தேதியில் ரூ.26357-8-0

இந்த ரூபாய் இருபத்தாறாயிரத்து முந்நூற்றியைம்பத்தேழு[670] அணா எட்டையும் நான் ரொக்கப் பற்றிக் கொண்டு அதற்காக என்னிடம் அடமானமாக யிருந்த இத்துடன் அண்டித்திருக்கிற[671] ஜாப்தாவில் கண்ட நகைகளை வாபஸ் கொடுத்து விட்டபடியினாலே அப்படி நான் பெற்றுக்கொண்ட மேலேகண்ட தொகைக்கு இதுவே ரசிதாக யிருக்க வேண்டியது.

---

667. சுயமாய் - தானே (நானே)

668. சக்கரவர்த்தினி - பேரரசி; விக்டோரியா. இவர் 1876இல் இந்தியாவின் பேரரசியானார்.

669. E.F. வெப்ஸ்ட்டர் - இவர் தஞ்சைக் கலெக்டர் ஆவர்

670. முந்நூற்றியைம்பத்தேழு - முன்னூற்றைம்பத்தேழு

671. அண்டித்திருக்கிற - இணைத்திருக்கிற

## ஆவணம் எண் 38

*No. A/17-12-80*

தஞ்சாவூர் ஜில்லா கலெக்டர் E.F. வெபஸ்ட்டர் தொரையவர்கள் கும்பகோணம் தாலூகா தாசீல்தாருக்கு (திரசரி) டெபட்டி கலெக்டர் அவர்கள் செக்கு கிடைத்த உடனே சில தொகையைக் கொட்டையூர் (புருஷோத்தம) செட்டியாரிடம் கொடுத்து ரசிது வாங்கி அனுப்பும்படி அர் அயினெஸ் பிறின்செஸ்[672] அவர்களுடைய கடன் தொகைக்காக ரூ.26357-8-0 கொட்டையூர் புருஷோத்தம செட்டியார் பேருக்குச் செக்கு அனுப்பும்படி திரசரிடிப்பட்டி கலெக்டர்[673] அவர்களுக்கு நாளதுமீ 16௳ யுள்ள A. நீ: லெட்டர் அனுப்பியிருப்பதன்றிஇறந்த இராமய்யா செட்டியார் பேருக்கு 78ம் ஷூ பிப்ரவரி மீ 24௳ யில் பிறந்திருக்கிற ஈட்டுக்கடன் பத்திரத்தை இத்தோடு உம்மிடம் அனுப்பியிருக்கிறோம். (அது) ரத்தானதர்க்காக ஷை இராமய்யா செட்டியாருடைய மூத்த வாரிசுயென்றுதெரியவருகிற சாரங்கபாணி செட்டியாருடைய கையெழுத்து அதில் வாங்கியும், சாக்ஷி கையெழுத்து வாங்கியும், வாபஸ் அனுப்ப வேண்டி(யது). மேலும் ஷை செக்கு கிடைத்தவுடனே ஷை சாரங்கபாணி செட்டியாருடைய அதிகாரப்பத்திரத்தைப் புருஷோத்தம செட்டியார் தாக்கல் செய்வதைப் பெற்றுக் கொண்டு, தொகையைப் புருஷோத்தம செட்டியாரிடம் பட்டுவாடா[674] செய்து, அது விபரத்துக்கு அவரிடத்தில் ஸ்டாம்பில் கிறப்படி[675] ரசிது வாங்கி அதையும் வகாலத்தையும்[676] நமக்கு நேரில் அனுப்ப வேண்டியது.

## ஆவணம் எண் 39

**வெள்ளி பாத்திர சாப்த்தா விவறம்**

| | |
|---|---|
| பீடம் க-க்கு சோபானம் உள்பட | சேர் சுரு (4 1/2) |
| குத்தி வெளக்கு உ -க்கு | சேர் உ ஙு (2 3/4) |
| ஷை திபத்தட்டு உ -க்கு | சேர் ரு (1/2) |
| திபக்கால் தூபக்கால் பஞ்சாறத்தி[677] ஆக உருப்படி ௩ -க்கு | சேர் க (1) |

672. Her Highness Princess - விஜயமோகன முக்தாபாய் (இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள்)

673. Treasury Deputy Collector. Treasury - கஜானா; கருவூலம்

674. பட்டுவாடா செய்து-கொடுத்து

675. கிறப்படி - முறைப்படி என்று திருத்திப்படிக்க

676. வகாலத்து - அதிகாரப்பத்திரம்

677. பஞ்சாரத்தி - ஐந்து திரிகளையுடைய விளக்கு

| | |
|---|---|
| அட்சதத்தட்டு ச -க்கு | சேர் ரு (1/2) |
| க ரு (1 1/2) அங்குலம் ஒசறம்[678] விளும்பு[679] | |
| வச்ச தாம்பாளம் க-க்கு | சேர் ௩ரு (3 1/2) |
| பியாலா[680] தட்டு உள்பட | சேர் ச (4) |
| அறடா[681] கட்டின பெரிய பஞ்சபாத்திரம்[682] க-க்கு | சேர் உ (2) |
| ஷெ சின்ன பஞ்சபாத்திரம் ரு -க்கு | சேர் சுவ (6 1/4) |
| ஸ்தாவி க-க்கு | சேர் க வ (1 1/4) |
| பெரிய உத்திரணி[683] உ-க்கும் சின்ன உத்திரணி ரு -ஆக எ -க்கும் | சேர் க ரு (1 1/2) |
| பஞ்ச பௌா[684] க-க்கு | சேர் க (1) |
| வ (1/4) சேர் ஜல முதல் வ ரு (3/8) சேர் ஜலம் வறக்கிம் பிடிக்கும் படியாயிம் ஒரே அடுக்காயிம் கிண்ணம் ரு (5) க்கு | சேர் க ரு (1 1/2) |
| (3/16) சேர் ஜலம் முதல் வ (1/4) சேர் வறக்கிம் பிடிக்கிம் படியாயிம் அடுக்கு உ-க்கு கிண்ணம் ய (10)-க்கு | சேர் உ (2) |
| ஆக கூடுதல் வெள்ளி | சேர் ௩ய உ வ (32 1/4) |

## ஆவணம் எண் 40

### தஞ்சாவூர்

தஞ்சாவூர் கவர்ண்மெண்ட் ஏஜண்டாகிய டபிள்யு யெப் கேடல் துரையவர்கள் உத்திரவுப்படி ஆக்ட்டிங் சர்க்கில் வீராசாமி பிள்ளையவர்கள்.

இதனால் சகலமாக ஜனங்களுக்குப் பிரசித்தமாக அறிவிக்கிறதென்ன வென்றால், மங்கள விலாசத்தைச்[685] சேர்ந்த நகைகள் பங்கிட்டுக் கொடுக்கும் பொருட்டு சர்க்கில் ஒரு ஏற்பாடாகியிருக்கையில் சிலர் ஷை மங்கள விலாசத்தாரிடத்தில் போய் ...............

678. ஒசறம் - உயரம்

679. விளும்பு – விளிம்பு

680. பியாலா - பேலா - ஒருவகைக்கிண்ணம்

681. அரடா - விளிம்பு (?)

682. பஞ்சபாத்திரம் - அகன்ற வாயுள்ள பாத்திரம்

683. உத்திரணி - உத்தரணி - தீர்த்தம் எடுத்தற்குரிய சிறிய கரண்டி

684. பஞ்சபேளா - ஐந்து கிண்ணங்களின் அடுக்கு

685. மங்களவிலாஸம் - இரண்டாம்சிவாஜியின் காமக்கிழத்தியர் கூட்டம் (பக்.330)

அவர்களிடத்தில் ஷெ நகைகளில் அதிக பாகத்தை பிரித்துக் கொடுப்பித்து அதற்காகத் தங்களுக்கு பிரயோஜனம் கேட்கிறதாயும் தெரிய வருகிறபடியால் இனி யாராவது இப்படிப் பட்ட செய்கையை யாராவது ஷெ நகைகள் பங்கிட்டுக் கொடுப்பதில் தங்களுக்கு வினியோகப் பாத்திய[686]மிருப்ப தாய்ச் சொல்வி அதை ருசுப்பித்தால்[687] அந்தப்படி செய்ய யெத்தினப் படுகிறதாக தெரியவருமே யாகில் அப்படிப்பட்டவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்களென்பதை அறிய வேண்டியும், ஷெ நகைகளைப் பங்கிட்டுக் கொடுப்பதில் தங்களுக்கு அதிகாரமாவது, செல்வாக்காவது இருக்கிறதாய் மாறுபாடு செய்வார்களேயாகில் அவர்கள் கடுமையாய் சட்டப்படி தண்டிக்கப்படுவார்களென்று சகலரும் அறிய வேண்டியது.

சர்க்கேல்.

## ஆவணம் எண் 41

1906-ம் ஹு மார்ச்சு மீ 15உ[688] அரண்மனையில் இறந்துபோன H. H. M. கவரம்பா[689] பாயிசாயேப் அவர்களால் ஸ்வீகாரப் பிள்ளையின்[690] குமாரர்களாகிய ஸ்ரீ. சிவாஜி ராஜே-1 ஸ்ரீ பிரதாப சிம்ம ராஜே-2 இவர்களுக்காக வைக்கப்பட்ட நகைகளை விலை மதித்த வர்த்தகர்களாய வெங்கடேசபட்டு, ஜெயசங்கர தவே-2. நாங்கள் தயார் செய்த ஜாப்தா.

பாயிசாயேப்[691] அவர்கள் தரித்திருந்த நகைகள்

| | |
|---|---|
| 1) வைரவளவி[692] ஜோடி 1-க்கு மதிப்பு | ரூ 1400-00 |
| 2) சிமைக்கமலம் மத்தியில் வைத்த சிகப்பு சுத்தி வைத்த தோடு ஜோடி 1-க்கு மதிப்பு | ரூ 2500-0-0 |
| 3) சிகப்பு ஒற்றைக்கல் அட்டிகை[693] வைர குச்சு நல்ல முத்து கட்டினதுள்பட மதிப்பு | ரூ. 1200-0-0 |

686. வினியோக பாத்தியம் - பிரித்துக் கொடுக்கும் உரிமை

687. ருசுப்பித்தால் - நிரூபித்தால்

688. 11உ என்றிருக்க வேண்டும். (கல்வெட்டு எண் 47, செ.இராசு, மராட்டியர் கல்வெட்டுக்கள்)

689. கவரம்பா - இரண்டாம் சிவாஜி ஒரேநாளில் திருமணம் செய்து கொண்ட 17 பேருள் ஒருவர்.

690. ஸ்வீகாரம் - இரண்டாம் சிவாஜி இறந்தபின்னர் காமாட்சியம்பா பாயியும் மற்றவர்களும் ஒருமனதாய் ராஜாராம் என்கிறவரை சுவீகாரம் எடுத்துக்கொண்டனர்.
<u>ராஜாராம்</u>: இவர் இரண்டாம் சரபோஜிக்கும் அஹல்யாபாயிக்கும் பிறந்த நான்கு பெண்களுள் சக்வார்பாயியின் மகன் ஆவர். இவர் மூன்றாம் சரபோஜி எனப்பட்டார். இவரது இரு குமாரர்கள் (1) சிவாஜி ராஜே (2) பிரதாப் சிம்ம ராஜே என்பவர் ஆவர்.

691. பாயிசாயேப் என்றது கவரம்பாபாயியை

692. வளவி - வளையல்

693. அட்டிகை - கழுத்து அணி

4) இரண்டு பட்டை (நாலுசர) முள்ள பஞ்சகரத்தின மாலை[694] -1 ருத்திராக்ஷம் கல்லெழைத்த டோபன் உள்பட மதிப்பு — ரூ. 3000-0-0

5) மூக்குப்பொட்டு 1க்கு மதிப்பு — ரூ 14-0-0

இறந்துபோன பாயிசாயேப் அரண்மனையில் சீல் செய்திருந்த ரூமிலிருந்து நகைகள் மதிப்பு ஜாப்தா

6) சிகப்புக் கல்லெழைத்த வளவி (வளையல்) ஜோடி 1க்கு — ரூ. 600-0-0

7) முத்துவளையல் ஜோடி 1க்கு மதிப்பு — ரூ. 700 -0-0

8) முத்து ஜுல்லடி[695] சிகப்பு (டாலர் உள்பட) சரம்(5)மதிப்பு — ரூ. 900-0-0

9) பலச்சை வயிர நல்ல முத்து கட்டின குருடு[696] ஜோடி 3க்கு மதிப்பு — ரூ. 175-0-0

10) சிகப்பு கல்லெழைத்த சந்திர முருகு[697] ஜோடி 1க்கு மதிப்பு — ரூ. 200-0-0

11) நல்ல முத்து நத்து[698] 1க்கு மதிப்பு — ரூ. 150-0-0

12) சிகப்பு ஜிமிக்கி[699] ஜோடி 2 உருப்படி 4க்கு மதிப்பு — ரூ. 60-0-0

13) கல்லெழைத்த பக்.ஜோடி 1-க்கு மதிப்பு — ரூ. 70-0-0

14) வைர புல்லாக்கு[700] 1க்கு மதிப்பு — ரூ. 50-0-0

15) சிகப்பு புல்லாக்கு 1க்கு மதிப்பு — ரூ. 50-0-0

16) சிகப்பு மோதிரம் 1க்கு மதிப்பு — ரூ. 50-0-0

17) சிகப்பு உருட்டு மோதிரம் மதிப்பு — ரூ. 25-0-0

18) கல்லெழைத்த (உருப்படி 2க்கு) சிகப்பு முகப்பு[701] 1-க்கு — ரூ. 30-0-0

19) சிகப்பு கடுக்கன்[702] ஜோடி 1க்கு — ரூ. 25-0-0

---

694. பஞ்சரத்தினமாலை - செம்மணி, முத்து அல்லது வயிடூரியம், வயிரம், பச்சை, நீலம், என்ற ஐவகை ரத்தினங்கள் பதிக்கப்பட்ட மாலை.

695. ஜுல்லடி (?)

696. குருடு - குருட்டுப்பாவலி - Ear ornament worn in the tragus ஒருவகைக் காதணி

697. முருகு - காதணி வகை Ornament worn in the helix of the ear.

698. நத்து - மூக்கணி

699. ஜிமிக்கி - கம்மலில் தொடுத்து அணியப்படும் முத்துக்கட்டியகாதணி வகை

700. புல்லாக்கு - மூக்கில் தொங்கவிடும் அணி வகை

701. முகப்பு - அணிகலன்களின் முன்புறத்தில் எடுப்பாகச் செய்யப்பட்ட பொருத்துவாய் முதலியன

702. கடுக்கன் - ஆடவர் காதணி

| | |
|---|---|
| 20) சிகப்பு கல்லெழைத்த ஜடகுச்சு[703] ஹாடா உள்பட உருப்படி 3க்கு | ரூ. 250-0-0 |
| 21) 30 பச்சைகள் சிறிதும் பெரிதுள்பட பவளம் பொட்டல மதிப்பு | ரூ. 70-0-0 |
| 22) 140 சிகப்புகள் அடங்கிய 18 நீ பொட்டலம் 1க்கு மதிப்பு | ரூ. 140-0-0 |
| 23) டீகா வகையறா 16 உருப்படி அடங்கிய 14 நீ. பொட்டலம் 1க்கு மதிப்பு | ரூ. 15-0-0 |
| 24) 3 முத்துக்கோசு உதிர்ந்த முத்து 3 முத்துள்பட 20 நீ பொட்டலம் 1க்கு மதிப்பு | ரூ. 35-0-0 |
| 25) ஆறு பலச்சை வைரமடங்கிய பொட்டலம் 21 நீக்கு மதிப்பு | ரூ. 40-0-0 |
| 26) 23 நீ.நீலம் சிகப்பு மதிப்பு | ரூ. 10-0-0 |
| 27) பலவர்ண மடங்கிய மணி 37 நீ பொட்டலம் 1க்கு மதிப்பு | ரூ. 1-8-0 |
| ஆக மொத்தம் மதிப்பு | ரூ. 11880-8-0 |

## ஆவணம் எண் 42

நகையீட்டின் பேரில் வீட்டின்பேரில் பந்தகம்[704]

| | |
|---|---|
| பூஜபந்து[705] வைரமிழைத்தது ஜோடி 1க்கு | 2 |
| ஓடாணி சிகப்புவைரமிழைத்தது ஜோடி 1க்கு | 2 |
| முத்து ஹாரம்....... | 1 |
| கொங்கரு பச்சையும் முத்தும் கோத்தது ஜோடி 1க்கு | 2 |
| ஆக உருப்படி | 7 |

பக்கம்-2

2. கல் இழைத்த நகைகள்

| | |
|---|---|
| முருகு[706] சிகப்பிழைத்தது வைரலோலக்[707]குள்பட | 1 |
| வைர முருகு | 1 |

703. ஜடகுச்சு - சடைக்குச்சு - தலைமயிரோடு பின்னித் தொங்கவிடுவதாய் இரண்டு மூன்று குச்சுக்களையுடைய அணி

704. பந்தகம் - அடைமானம்

705. பூஜபந்து - பாசிபந்து-தோளணிவகை

706. முருகு - காதணி வகை Ornament worn in the helix of the ear.

707. லோலக் - காதில் தொங்கவிடும் அணிவகை.

| | |
|---|---|
| வைர மோதிரம் - | 1 |
| பச்சைக்கல் வண்டுக்கடுக்கன் ஜோடி 2க்கு | 4 |
| ஆக | 7 |
| வைர பதக்கம் பெரிசு | - 1 |
| அறுனாள்[708] கல்விழைத்தது முகப்புள்பட | - 1 |
| கண்டி சிகப்பு இழைத்தது | - 1 |
| பொத்தானட்டிகை[709] மகரகண்டி[710] யுள்பட | - 1 |
| ஒண்டி[711] ரெக்கு[712] | - 1 |
| தோடா[713] சிகப்பிழைத்த சோடு-2-க்கு | -4 |
| பதக்கம் உலாந்தா கமலம் முத்துஜிஞ்சரியுள்பட | - 1 |
| பதக்கம் ஜிஞ்சரியைத் தவிர | - 1 |
| ஆக கூடுதல் | 18 |
| பொன்நகை | |
| ஜாம்பு[714] சின்னது | 1 |
| சந்திஹாரம் கல்விழைத்தது முகப்புள்பட | 1 |
| சயினுள் சாதா | 3 |
| அஜிரிபியாயென்கிற சானாரகாசு[715] | 1 |
| முத்து பாட்டலி[716] ஜோடு 1க்கு | 2 |
| ஆக | 8 |
| ஆக | 26 |

708. அறுனாள் - அரைஞாண்

709. பொத்தான் அட்டிகை - கழுத்தணி வகை

710. மகரகண்டி - Fish shaped necklace - கழுத்தணி வகை

711. ஒண்டி - ஒரு; தனியாக

712. ரேக்கு - தங்கம் முதலியவற்றின் மெல்லிய தகடு

713. தோடா - கையணி வகை

714. ஜாம்பு - சாம்பு - சாம்புநதம் - சிறந்த பொன்.

715. சானாரக்காசு - தென்னிந்தியர்க்கும் இத்தாலியருக்கும் வாணிகம் மிக்கிருந்த பொழுது கேரள நாட்டில் வழங்கி வந்த வேனிஸ்தேசத்துப் பொன் நாணயம் (பக்கம் 157)

716. பாட்டலி - முத்துக்கோத்த வளையல் (6-260)

*பக்கம்-3*

கல் இழைத்தது

| | |
|---|---|
| கண்டசரம்[717] சிகப்பு இழைத்தது | 1 |
| பக்கே ஜோடு 1-க்கு | 2 |
| பொன்வங்கி[718] கல்லிழைத்த பூவுள்பட ஜோடு 1க்கு | 2 |
| பதக்கம் பச்சை சிகப்பு இழைத்தது | 1 |
| ஒண்டி ரெக்கு[719] பழுதாயிருப்பது | 1 |
| மோதிரம் ஒன்பது சிகப்பு இழைத்தது | 1 |
| தசாவதாரம்[720] போட்ட அறுனாள்[721] | 1 |
| தட்டுச் சலங்கை ஜோடு 1க்கு | 2 |
| முத்து தோடா ஜோடு 1க்கு | 2 |
| சந்திர முருகு[722] வைரம் இழைத்த ஜோடு 1க்கு | 2 |
| வாளி[723] ஜோடு 2-க்கு | 4 |
| உச்சிப்பூ[724] சிகப்பு யிழைத்தது | 1 |
| புகடி[725] சிகப்பு யிழைத்தது ஜோடு 1க்கு | 2 |
| கிள் அட்டிகை முகப்பு சிகப்புயிழைத்தது நடுநாயக முள்பட | 1 |
| சந்திரமுருகு[726] சிகப்புயிழைத்தது ஜோடு 1க்கு | 2 |
| கண்டசரம்[727] துத்தூரி[728] பூப்போட்டது | 1 |
| சந்திரன் பாதரி | 1 |

717. கண்டசரம் - கழுத்தணி வகை

718. வங்கி - தோளணி

719. ஒண்டி ரேக்கு - மெல்லிய பொன்தகடு

720. தசாவதாரம் - திருமாலின் பத்தவதாரம், மச்சம் (மீன்), கூர்மம் (ஆமை), வராகன் (பன்றி), நரசிங்கம், வாமன (குறளன்), பரசுராமன், ராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி என்று பத்து

721. அறுனாள் - அரைஞான்

722. சந்திர முருகு - நிலவு போன்ற காதணி வகை

723. வாளி - காதணி

724. உச்சிப்பூ - குழந்தைகளின் தலையணி வகை

725. புகடி - கொப்பு காதணி

726. மேல் அடிக்குறிப்பு 722 காண்க

727. மேல் அடிக்குறிப்பு 717 காண்க.

728. துத்தூரி - துத்தரு - தாமரை மொட்டுப் போன்ற அணிவகை

| | |
|---|---|
| ருத்திராக்ஷ கண்டா[729] கல்லிழைத்த கவரி சங்க[730] முள்பட | 1 |
| மூது | 1 |
| விறவதியா ஜோடு 2-க்கு | 4 |
| ஆக | 33 |

பொன்நகை

| | |
|---|---|
| றாக்கடியின் தட்டை | -1 |
| கங்கணியின் துக்கடா[731] | -4 |
| காரை[732]க்கல்லழைத்த முகப்புடன் | -1 |
| பூணல்சரம்[733] மூணுக்கு | -1 |
| சடைவில்லை சர்ஜாமுகம் வைத்த உருப்படி 14க்கு | -1 |
| தங்கவிராகன் 24க்கு பொட்டலம் | -1 |
| அறுனாள்[734] | -2 |
| பூணல் சரம் 6 கல்லிழைத்த முகப்புடன் | -1 |
| வண்டயம்[735] ஜோடு 1க்கு | -2 |
| காப்பு ஒத்தை | -1 |
| ஹாதசரம்[736] ஜோடு 1க்கு | -2 |
| தூரா பாத்திரம்[737] | -1 |
| பாஜோபந்து[738] சிறுசு சோடு 1க்கு | -2 |

729. கண்டா - கண்டிகை

730. கவரிசங்கம்-கவரி சங்காம் - கவரி சங்கரர்களது உருவுடையதாய் இரு பிளவுபட்ட ஒற்றை உருத்திராக்கம் (கவரி - உமை; சங்கரர்-சிவன்)

731. கங்கணி - கங்கணம்; துக்கடா - சிறு துண்டு

732. காரை - காறை - பெண்களும் குழந்தைகளும் கழுத்தில் அணிந்து கொள்ளும் அணி

733. பூணல்சரம் - முப்புரிநூல்

734. அறுனாள் - அரைஞாண்

735. வண்டயம் - கழல்

736. ஹாதசரம் - பாதசூழம் - மகளிர் காலணி வகை

737. தூராபாத்திரம் - தாராபாத்திரம் - நீர்வார்க்கும் பாத்திரம்

738. பாஜோபந்து - பாசிபந்து - தோளணி வகை

| | |
|---|---|
| ஆக | -20 |

வெள்ளி நகை

| | |
|---|---|
| முத்து விளக்கு பெரிய ஜோடு 1க்கு | -2 |
| அஞ்சிரைப்பொட்டி[739] மாங்காய் மாதிரி | -1 |
| கிண்ணம் | -1 |
| பியாலா[740] பெரிசு | -1 |
| ஜாம்பு | -1 |
| மகில[741] மாதிரி டப்பா | -1 |
| கமல பாத்திரம்[742] | -1 |
| தமக்கு[743] தட்டு நகாஸ் போட்டது | -1 |
| சொம்பு நகாஸ்[744] போட்டது | -1 |
| பெரிய தாம்பாளம் | -2 |
| லோட்டா[745] | -1 |
| டப்பா மூடியுள்பட | -1 |
| வெற்றிலை மடித்து கோர்க்கும் வெள்ளிக்கம்பி | -1 |
| பாக்கு வெட்டி | -2 |
| கூஜா | -1 |
| சந்திரன் பியாலா மூடியுள்பட | -1 |
| ஆக | 19 |
| ஆக மொத்த நகை | -72. |

(கையொப்பம் மோடியில்)

739. அஞ்சிரைப்பொட்டி - அஞ்சறைப்பெட்டி-கடுகு மிளகு முதலியன வைக்கும் ஐந்தறையுள்ள பெட்டி.

740. பியாலா - பேலா - ஒருவகைக்கிண்ணம்

741. மகில - பெண்

742. கமலபாத்திரம் - நீர்வார்க்கும் பாத்திரம் (கமலம் - நீர்)

743. தமக்கு - தமுக்கு - செய்தி தெரிவிக்க அடிக்கும் ஒருகட் பறை

744. நகாஸ் - அலங்கார வேலை

745. லோட்டா - நீர் குடிக்கும் பாத்திரம்

பக்கம் 4

கல் இழைத்த நகை

| | |
|---|---|
| காப்பென்கிற ஓலை ஜோடு 2க்கு | -4 |
| நாகோத்திரம்[746] ஜோடு 2க்கு | -4 |
| நத்து[747] கல்லிழைத்தது | -1 |
| உமாமஹேசுவரத்தின்[748] தகத்தி[749] | -1 |
| சிவாஜி மகாராஜாவுடைய தகத்தி | -1 |
| சகுடா வளையல் ஜோடு 1க்கு | -2 |
| மோதிரம் பஞ்சரத்தினம் இழைத்தது | -1 |
| ஜாலிச்சிகாப் யென்கிற ஓலைஜோடு 1க்கு | -2 |
| பதக்கம் சின்னது | -8 |
| மாலை பஞ்சரத்தினம் இழைத்தது | -1 |
| வைரம் இழைத்த நத்து | -1 |
| பேசர்[750] கமலம் இழைத்தது | -1 |
| கர்ணப்பூ[751] வைரமிழைத்தது ஜோடு 1க்கு | -2 |
| காப்பென்கிற ஓலை வைரமிழைத்தது ஜோடு 1க்கு | -2 |
| ஆக | 31 |

பக்கம் 5

கல்லிழைத்த நகைகள்

| | |
|---|---|
| பதக்கம்[752] சிவப்பு இழைத்தது | -1 |
| சூடா[753] யென்னும் வளையல் ஜோடு 1க்கு | -2 |

746. நாகோத்திரம் - நாகாத்திரம் (?) - நாகபாணம்

747. நத்து - மூக்கணி

748. உமாமகேசுவரர் - உமையும் சிவபெருமானும்

749. தகத்தி - தகத்த - சிங்காதனம்

750. பேசர் - பேசரி - மூக்கன்

751. கர்ணப்பூ - ஒருவகைக் காதணி

752. பதக்கம் - கல்லிழைத்த தொங்கல் கழுத்தணி

753. சூடா - கைவளையல்

| | |
|---|---|
| துல்லடி[754] முத்துமாலை 7 யுள்ளது | -1 |
| உலாத்தா கமலக்கடுக்கன் ஜோடு 1க்கு | -2 |
| புல்லாக்கு[755] வைரலோலக்குள்பட[756] | -1 |
| முருகு[757] நாலு மூலை வைரமிழைத்தது | -1 |
| செடி சிமைக்கமலம் இழைத்தது ஜோடு 1 | -2 |
| கர்ணப்பூ[758] ஜோடு 1க்கு | -2 |
| ஜிமிக்கி[759] வைரமிழைந்தது ஜோடு 1க்கு | -2 |
| புகடி[760] சிகப்பு இழைத்து ஜோடு 1க்கு | -2 |
| பதக்கம் கொக்கி வைத்தது | -1 |
| உச்சிப்பூ[761] தறப்பு இழைத்தது | -1 |
| மாஸவாளி சிகப்பு இழைத்தது ஜோடு 1க்கு | -2 |
| விருஷபத்தின்[762]மேல் உமாமகேசுவரத்தின் தகத்தி[763] | -1 |
| கிருஷ்ண கொண்டையின் பாதம் | -2 |
| பாவக்காய் தாயத்து[764] | -1 |
| நாகமோடி[765] பாட்டலி[766] ஜோடு 2க்கு | -4 |
| நத்து[767] | -1 |
| ஓலையின் மயிர்மாட்டி[768] ஜோடி 1க்கு | -2 |
| பந்தலி யென்கிற தட்டைக்காப்பு ஜோடி 2க்கு | -4 |
| றாக்கடிவர்த்தி தகடு வைத்தது | -1 |

---

754. துல்லடி - (?)

755. புல்லாக்கு - மூக்கில் தொங்கவிடும் அணி

756. லோலக்கு - காதில் தொங்கவிடும் அணி

757. முருகு - காதணி வகை (Ornament worn in the helix of the ear)

758. கர்ணப்பூ - காதில் அணியும் பூப்போன்ற அணி

759. ஜிமிக்கி - கம்மலில் தொடுத்து அணியப்படும் காதணிவகை

760. புகடி - கொப்பு - காதணி

761. உச்சிப்பூ - குழந்தைகளின் தலையணி வகை

762. விருஷபம் - காளைமாடு

763. தகந்தி - தகத்து - பீடம்

764. தாயத்து - ஒருவகை அணிகலன்

765. நாகமோடி - பாம்பின் உருவம் அமைத்த தோளணிவகை

766. பாட்டலி - பாட்டில் (?) ஒரு வகைக் கையணி

767. (அடிக்குறிப்பு 44 காண்க)

768. மயிர்மாட்டி - காதணியிலிருந்து தலைமயிரில் மாட்டும் ஓரணி

| | |
|---|---|
| ஜிமிக்கி ஜோடு 1க்கு | -2 |
| அம்மன் வைத்த தகத்தி | -1 |
| மோதிரம் பச்சை இழைத்தது | -1 |
| ஷை வைடூரியம் ஷை | -1 |
| கடுக்கன் உலாந்தா கமலமிழைத்த ஜோடி 2ல் ஒத்தை ஜதையாயிருக்கிறது | -4 |
| முருகு நல்லபச்சை லோலக்குள்பட சீமைக்கமலமிழைத்து 2க்கு | -1 |
| முத்து கண்ட சரம் | -1 |
| புகடி யென்கிற கொப்பு ஜோடு 1க்கு | -2 |
| பெரியதுரை பாவம் யெழுதின பதக்கம் | -1 |
| உலாந்தா கமலம் இழைத்த கொக்கி | -2 |
| ருத்திராக்ஷம் 1குண்டு 1 ஆக | -2 |
| கோங்கூர் லோலக்கு ஜோடு 1க்கு | -2 |
| கடுக்கன் சின்னது உலாந்தாகமலம் இழைத்த ஜோடு 1க்கு | -2 |
| நாக்கடி சின்னது வர்த்தி தகடு வைத்தது | -1 |
| சந்திரப்பிரபை[769] சூரியப்பிரபை[770] புஸ்பராக[771] மிழைத்தது | -2 |
| மகரகண்டி[772] | -1 |
| மோதிரம் கமலம் இழைத்தது | -2 |
| சூரியப்பிரபை, சந்திரப்பிரபை சிகப்பு இழைத்த ஜோடு 1க்கு | -2 |
| பாங்குட்டிளா பான்பட்டி[773] | -1 |
| ஆக | 65 |
| பொன் நகை | |
| 75 பூவறாகன்[774] கோத்த துல்லடி மாலை | -1 |
| சந்திர ஹாரம்[775] | -1 |

69. சந்திரப்பிரபை - மகளிர் தலையின் இடப்பக்கத்தில் அணிந்துகொள்ளும் மணிபதித்த பொன் அணி வகை

70. சூரியப்பிரபை - மகளிர் தலையின் வலப்பக்கத்தில் அணிந்து கொள்ளும் பொன் அணிவகை

71. புஸ்பராகம் - புஷ்பராகம் - நவமணிகளிலொன்று

72. மகரகண்டி - மீன் வடிவிலமைந்த கழுத்தணி

73. பான்பட்டி - பான்பெட்டி - வெற்றிலை பாக்குப்பெட்டி

74. பூவராகன் - நாணயவகை (புலி வராகன் - Star Pagoda) (பக்.150)

75. சந்திரஹாரம் - சந்திரன் போன்று வட்டமான தங்க வளையங்கள் கோக்கப்பெற்ற மாலை

| | |
|---|---|
| காலுக்குப் போடும் சங்கிலி ஜோடு 1க்கு | -2 |
| தோடா கிறாம்பு பூ வைத்தது ஜோடு 1க்கு | -2 |
| காரை சின்னது | -1 |
| கிருஷ்ண கொண்டை | -1 |
| ஷை கொண்டையின் பேரில் தொங்கவிடும் முத்துக்குஞ்சம் | -1 |
| தண்டை[776] நகாஸ் போட்டதுஜோடு 1க்கு | -2 |
| வங்கி[777] சின்னது ஜோடு 1க்கு | -2 |
| பவழம் குண்டு ஜோடு 2க்கு | -4 |
| பூவராகன் 10க்கு வெள்ளி வளையமுட்பட | -10 |
| சந்திரன் | -1 |
| காலில் போடும் சலங்கை ஜோடு 1க்கு | -2 |
| வலம்புரி சங்கம்[778] | -1 |
| அறுனாள்[779] பவழம் கோர்த்தது | -1 |
| பொன் அர்ச்செலங்கை | -1 |
| ஆக | 33 |
| சம்புடம்[780] வெள்ளியில் கங்காஜமுளி[781] அஷ்டகோணம்[782] | -1 |
| ஆக மொத்த நகைகள் | 99 |

(ஒப்பம்) ஸ்ரீநிவாச சாஸ்திரியள்

776. தண்டை - காலணி வகை

777. வங்கி - தோளணி

778. வலம்புரிசங்கு - வலமாகச் சுழிந்துள்ள சங்கு

779. அறுனாள் - அரைஞாண்

780. சம்புடம் - சிறிய பெட்டி

781. கங்காஜமுளி - கங்காஜமுனி - கங்கை யமுனை (என்ற பெயர் வைக்கப்பட்டது)

782. அஷ்டகோணம் - எட்டுக்கோணங்களையுடையது

நகையின் விபரம்

கல் இழைத்தது உருப்படி

| | |
|---|---|
| முத்து பாட்டலி[783] ஜோடு 1க்கு | - 2 |
| முத்து கொப்பு[784] ஜோடு 1க்கு | - 2 |
| ஒத்தை சிகப்புவைத்த ஒலை[785] ஜோடு 1க்கு | - 2 |
| லோலக்கு[786] பச்சை இழைத்தது | - 2 |
| லோலக்குச் சிகப்பு இழைத்தது | - 2 |
| வைர ஒலை ஜோடி 1க்கு | - 2 |
| புலாக்கு[787] வைரம் இழைத்தது | - 1 |
| சந்திரமுருகு[788] ஜோடு 1க்கு | -2 |
| கடுக்கன் நாலுமூலை சவுக்க[789] முள்ள வைரம் இழைத்த ஜோடு 1க்கு | 2 |
| மோதிரம் ஒத்தை வைரமிழைத்தது | -2 |
| மோதிரம் சரபோஜி ராஜா பாவம்[790] யெழுதிய சுத்திவர[791] முத்து கட்டினது | -1 |
| புலாக்கு சிகப்பு, 1, வைரம் 2, வைத்தது | -1 |
| ஆக | 21 |
| பொன் விறவதி ஜோடு 1க்கு | -2 |
| ஆக | 23 |

783. பாட்டலி - முத்துக்கோத்தவளவி

784. கொப்பு - காதணி வகை

785. ஒலை - காதணி

786. லோலக்கு - காதணி வகை

787. புலாக்கு - மூக்கில் தொங்கவிடும் அணி

788. சந்திரமுருகு - சந்திரன் போன்று அமைந்த காதணி

789. சவுக்கம் - சதுரம்

790. பாவம் - உருவம்

791. சுத்திவர - சுற்றிலும்

வெள்ளி நகை. உருப்படி

| | |
|---|---|
| சொம்பு சாதா | -1 |
| சொம்பு நகாஸ் போட்டது | -1 |
| ஜெகனாத் லோடா[792] | -1 |
| சூஜா அன்னபக்ஷி நகாஸ் போட்டது | -1 |
| பீக்தாணி | -1 |
| பால்காச்சும் காசாண்டி[793] | -1 |
| சாதா தட்டு | -1 |
| தமக்குத் தட்டு[794] நகாஸ் போட்டது பெரிசு | -1 |
| சாப்பிடும் பெரிய வட்டில்[795] | -1 |
| சந்தியா பாத்திரம்[796] | -1 |
| தமக்குத்தட்டு சாதா றவுண்டு[797] மாதிரி | -2 |
| பியாலா[798] | -1 |
| பீங்கான் பெரிசு | -1 |
| பீங்கான் சின்னது | -1 |
| பால்வைக்கும் லோட்டா சொரக்காய் மாதிரி | -1 |
| பஞ்சபாத்திரம்[799] நகாஸ் போட்டது | -1 |
| பஞ்சபாத்திரம் உப்பல்[800] யெடுத்தது | -1 |
| உத்திரணி[801] | -1 |
| அஷ்ட கோணம்[802] ஷெ | -1 |
| லிங்கம்[803] வைத்தது ஷெ | -1 |

---

792. ஜகந்நாதத்திலிருந்து கொண்டு வரப்பெற்ற (நீர்குடிக்கும்) பாத்திரம்

793. காசாண்டி - வாயகலமுள்ள ஒருவகைப் பாத்திரம்

794. தமக்குத்தட்டு - தமுக்குப் போன்ற தட்டு (தமுக்கு - செய்தி தெரிவிக்க முழக்கும் ஒருகண் பறை)

795. வட்டில் - கிண்ணம்; தட்டு

796. சந்தியாபாத்திரம் - நாடோறும் வழிபாடு செய்யும் பொழுது பயன் படுத்தப்பெறும் பாத்திரம்

797. றவுண்டு - வட்டம் (Round)

798. பியாலா - பேலா - ஒருவகைக் கிண்ணம்

799. பஞ்சபாத்திரம் - பூசையில் அர்க்கியம், பாத்தியம், ஆசமனீயம், ஸ்நாநயம், சுத்தோதகம் என்பவற்றுக்கு உபயோகிக்கப்படும் ஐந்து நீர்வட்டில்

800. உப்பல் - பருத்திருத்தல்

801. உத்திரணி - தீர்த்தம் எடுத்தற்குரிய சிறுகரண்டி

802. அஷ்டகோணம் - எட்டுக்கோணம்

803. லிங்கம் வைத்து - சிவலிங்க உருவம் தீட்டுவது

| | |
|---|---|
| அப்கோறா | -1 |
| தொன்னை[804] | -2 |
| கிண்ணி | -5 |
| பியாலா[805] சின்னது | -2 |
| கோகறணம்[806] | -1 |
| கிண்ணம் | -1 |
| பலகை சின்னது அஷ்டகோணம் | -1 |
| பட்டம் | -5 |

சுவாமிக்கு ஆர்த்தி[807] செய்யும் பாத்திரங்கள்

| | |
|---|---|
| ருத்திரார்த்தி | -1 |
| பாரிஜாதக[808] ஆர்த்தி | -1 |
| கலபவிர்க்ஷ[809] ஆர்த்தி | -1 |
| பில்வார்த்தி[810] | -1 |
| தூபார்த்தி[811] | -1 |
| ஆக | -5 |
| வெள்ளிக்கட்டி | -3 |
| மெட்டி[812] ஜோடு 1க்கு | -4 |
| ஆக | -50 |
| ஆக மொத்தம் | - 73 |

அமி முக்தா பாயம்மாள் உத்திரவுப் படிக்கு

குப்புசாமிப் பிள்ளை(ஒப்பம்)

804. தொன்னை - வாழையிலையால் தைத்துச் செய்யப்பட்ட கலம் (போன்று வெள்ளியாற் செய்யப்பட்டது)

805. பியாலா - கிண்ண வகை

806. கோகர்ணம் - இரசம் மோர் முதலியன பரிமாறுவதற்குரிய பிடியுள்ளதும் மூக்குள்ளதுமான பாத்திரம்

807. ஆர்த்தி - ஆரத்தி - தீபாராதனை

808. பாரிஜாதம் - பஞ்சதருக்களில் ஒன்று; சுவர்க்கத்தினின்று கொணரப்பட்டது

809. கற்பகம் - பஞ்சதருக்களில் ஒன்று; வேண்டிய வேண்டியாங்கு தரவல்லது

810. பில்வம் - வில்வம் - சிவபூசைக்கு ஏற்றதான முவிலைகளையுடைய வில்வத் தழை

811. தூபாரத்தி - தூபக்கால்

812. மெட்டி - கால்விரலணி

பக்கம்7

நகையின் விபறம்

கண்டா பச்சை இழைத்த பதக்கம் - 1

மணிகர்ணிகா பாயம்மாள் உத்திரவுப்படி. குப்புசாமி பிள்ளை (ஒப்பம்)

பக்கம் 8

கல் இழைத்தது

| | |
|---|---|
| துல்லடி முத்துசரம் | -1 |
| முத்துக் கண்ட சறம்[813] | -1 |
| சிகப்பு இழைத்த கண்டசரம் சந்திரவ் மாதிரி | 1 |
| சிகப்பு இழைத்த பாட்டவி | -4 |
| சிகப்பு இழைத்த சந்திரமுருகு[814] ஜோடி 2க்கு | -4 |
| மூக்குத்திக் கமலம் இழைத்தது | 1 |
| கண்டசறம் துத்தரிப்பூ[815] மாதிரி | -1 |
| ஆக | 13 |

பொன் நகை

| | |
|---|---|
| சந்தாச்சி பாட்டவியா[816] | -4 |
| வாங்கியாச்சா பாட்டவியா | - 4 |
| தோடா வளவி[817] சர்ஜா முகம் வைத்த பட்டோதார் ஜோடு 1க்கு | -2 |
| காரை | -1 |
| வங்கி சின்னது ஜோடு 1க்கு | -2 |
| ஜவாச்சிமாள் | -1 |
| தாயித்து வகையறா கோர்த்த மாலை | -1 |
| ஆக | 15 |

வெர்னாசிபாயம்மாள் உத்திரவுப்படி

குப்புசாமி பிள்ளை (ஒப்பம்)

813. கண்டசரம் - கழுத்தணி

814. சந்திரமுருகு - சந்திரன் போன்ற அணி

815. துத்தரிப்பூ - துத்திப்பூ

816. சந்தாச்சி - சந்திரன் (போன்ற) பாட்டாலியா-பாட்லாக்கு-மாட்டியணிவதற்குரிய அணி

817. வளவி - வளையல்

பக்கம் 9

வெங்கோபபட் நகைகளின் விபரம்

| | |
|---|---|
| பாஜோபந்து[818] ஜோடு 1க்கு | -2 |
| ஐவ்யாச்சிமாள் 10 சரமுள்ள மாலை | -1 |
| பாஜோபந்து யென்னும் நகை | |
| பூறாவுக்குத் தயாராகாத உருப்படி 74க்கு | -1 |
| மூது | -1 |
| ஆக | 5 |

கல்விழைத்த நகை

| | |
|---|---|
| வைரமும் சிகப்புமிழைத்த தலையில் வைக்கும் பூ | -1 |
| வங்கிவர்த்தி தகடு வைத்தது ஜோடு 1க்கு | -2 |
| ஆக | 3 |
| ஆக மொத்தம் | 8 |

பக்கம் 10

| | |
|---|---|
| 10) ஹனுமார் வைத்து கல்விழைத்த பதக்கம் | -1 |
| பொன் நகை | |
| கோட்டு என்னும் வளவி பெலா முள்ளு மாதிரி | |
| சோடு 1க்கு | -2 |
| கங்கணி யென்னும் வளவி சோடு 1க்கு | -2 |
| மோகறா[819] 24 கோத்த சறம் 1க்கு | -1 |
| துல்லடி யென்னும் 199 மணி கோத்த சறம் | -2 |
| ஆக | 7 |

(ஒப்பம்) அண்ணுபட் எனும் விஸ்வநாத ராஜே

818. பாஜோபந்து - பாசிபந்து - தோளணி

819. மோகரா - தங்கநாணயம் (பக்கம் 152)

பக்கம் 11

நகைகளின் விபரம்

| | |
|---|---|
| 1) ஜவே யென்னும் வளவி ஜோடு 1க்கு | -2 |
| சந்திரமுருகு[820] சிகப்பு இழைத்த ஜோடு 1க்கு | -2 |
| வாளி[821] ஜோடு 1க்கு | -2 |
| மோதிரம் பச்சை இழைத்தது | -1 |
| மோதிரம் வைடூரியம் இழைத்தது | -2 |
| கடுக்கன் வைடூரியம் போட்டது ஜோடு | -2 |
| மூக்குத்தி | -1 |
| பாவக்காய் சிகப்பு இழைத்தது | -1 |
| பாட்டலியா[822] யென்னும் முத்துகோத்த வளவி ஜோடு 1க்கு | -13 |

கல் இழைத்த நகை

| | |
|---|---|
| ஸச்சா யென்னும் கழுத்தில் கட்டுமணி | -1 |
| மோதிரம் ஒத்தைச் சிகப்பு இழைத்தது | -1 |
| முத்து ஒலை திருகாணியுள்பட ஜோடு 1க்கு | -2 |
| காஸவ பாளி யென்னும் ஜோடி 1க்கு | -2 |
| காது கொப்பு ஜோடு 1க்கு | -2 |
| காது கொப்பு முத்து கோத்தது | -2 |

பொன் நகை

| | |
|---|---|
| வங்கி சர்ஜா வைத்தது ஒத்தை | -1 |
| காரை | -1 |
| பாட்டலியா யென்னும் வளவி ஜோடு 1க்கு | -2 |
| துல்லடி[823] யென்னும் 5 சறமுள்ள மாலை | -1 |
| சம்புக[824] புஷ்பமாலை | -1 |
| விறவதி[825] யென்னும் பீலி பவழம் கட்டினது ஜோடு 1க்கு | -2 |

820. மேல் அடிக்குறிப்பு 814 காண்க.

821. வாளி - ஒருவகைக் காதணி

822. பாட்டலியா - முத்துகோத்த வளையல்

823. துல்லடி - (?)

824. சம்புக - சண்பக

825. விறவதி(?)

| | |
|---|---|
| உய்கு-காங்கண[826] யென்னும் வளவி ஜோடு 1க்கு | -2 |
| விறவதியா யென்னும் பீலி[827] ஜோடு 1க்கு | -2 |
| சுண்ணாம்பு கறண்டம்[828] | -1 |
| தங்கச் சிப்பு | -1 |
| தங்கக் கறண்டம் | -1 |
| தங்கக் கறண்டாவின் துக்கடா[829] | -2 |
| ஆக மொத்த உருப்படி | -27 |

## ஆவணம் எண் 43

ஜிருது கானா[830]வைச் சேர்ந்த பித்தளை முதலிய பாத்திரங்கள் வகையறாவின் கிறயம் முதலான விவரத்தைக் காட்டிய ஜாப்தா.

| பாத்திரங்களின் விவரம் | உருப்படி | நிறை<br>மனு சேர் | ரூ-அ-பை |
|---|---|---|---|
| பித்தளை | | | |
| பலவிதமான பாத்திரங்கள் | 8079 | 1099 34 1/4 | 17104-8-9 |
| உபயோகமற்ற பாத்திரங்களால் கூடுதல் சரக்கு | | 679 1/2 | 6790-2-0 |
| | 8079 | 335 29 1/2 | 6103-15-1 |

| பாத்திரங்களின் விவரம் | உருப்படி | நிறை<br>மனு சேர் | ரூ-அ-பை |
|---|---|---|---|
| தாம்பிரம் | | | |
| பலவிதமான பாத்திரங்கள் | 2968 | 335 29 1/2 | 6103-15-1 |
| உபயோகமற்ற பாத்திரங்களால் கூடுதல் சரக்கு | | 400 1 3/4 | 6000-10-6 |
| | 2968 | 735 31 1/4 | 12104-9-7 |

826. காங்கணம் - கங்கணம்

827. பீலி - மகளிர் இடும் கால் விரலணி

828. கறண்டம் - கரண்டி

829. துக்கடா - சிறு துண்டு

830. ஜிராத்கானா - ஆயுதசாலை (பக்.452)

| | | |
|---|---|---|
| வெண்கலம் | | |
| பலவிதமான பாத்திரங்கள் | 16742 432 22 1/16 | 6788-2-8 |
| | 16 2 | 160-8-0 |
| ஆக | 16742 448 24 1/16 | 6948-10-8 |
| | 27789 2963 10 1/16 | 42947-15-0 |

1860 ஆம் ஸு ஏப்ரல் மீ 21 உ

## ஆவணம் எண் 44

1831 ஆம் ஸு மே மீ 9 உ மகாராஜா[831] சாயபு அவர்கள் சாமானை பட்டுரை வெங்கிடசாமி நாயக்கர் யிடத்திலிருந்து ஜான்பிளாக்கிபர்ன்[832] துரையவர்கள் பட்டுறை[833] றாமசாமி ஒப்புக் கொண்டதுக்கு விபரம்.

எ ௲. கறுப்பு நாற்காலி
சூ. மாக்கினி மேஜை
க. றவுண்[835] மேசை
க. பெரிய நாற்காலி
க. சஸ்ட்டு மேசை
க. சாதா மேசை
க. பொக்குயிஸ்டான்[838]
க. பெரிய ரைட்டிங்டஸ்க்கு[839]
உ. காறட்டேபில்
க. சதிரங்க[834] மேசை
க. சதிரங்க மேசை
உ. திரிசங்[836] டேபிள்
க. சோபா டேபிள்
ச. சேட்டுயிஸ்டான்[837]
சூ. மோறா
உ. கோட்டு யிஸ்டான்[840]

831. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

832. ஜான் பிளாக்குபர்ன் - ரெஸிடெண்டு (பக்கம் 67)

833. பட்டறை - தொழிற்கூடம்

834. சதிரங்க - சதுரமான

835. றவுண் - Round - வட்டமான

836. திரிசங் - Dressing

837. யிஸ்டான் - Stand

838. Book Stand

839. Writing Desk

840. Coat Stand

க. சின்னரைட்டிங் டஸ்க்கு
உ. சோபர் மேசை
உ. பேசனி ஸ்டான்[842]
உ. சர்தா மேசைப் பலகை
உ. றவுண்மேசைப்பலகை
ய உ. குளோப்பு[843]
மி எ. ஒத்தக்கிளைவால் சேட்டுக்கம்பி
சு. ரெட்டைக்கிளைக்கம்பி
உ. சின்னதோமத்திர[846] கட்டில்
ந. பெரிய தோமத்திர கட்டில்
க. கூசாயி ஸ்டான்[848]
க. கவுலத்திணிடப்பு
உ. கக்குசு[851] நாற்காவி
உ. பச்சை சகலாத்து[852]
க. சாம்பற் பாட்டு[853] போட்டி
க. தண்ணி தொட்டி
உ. கிறாக்கி தொட்டி
க. நிசசேரிபாக்கு சுகபோட்டு
எ. டீப்பாசு
உ. கேம் டேபிள்[841]
ந. சில்லரை மேசை
உ. மசாலிச்சிவிளக்கு வைக்கிற ஸ்டாண்டு
சு. குதிரை அளக்கிற கிசம்
க. கட்டில் பந்தல்
க. கிளாக்[844]
ய சேட்டு யிஸ்டாண்டு[845]
க. அழுக்கு உடுப்பு போடுகிற பிரப்பம் பொட்டி
க. லாந்தர்[847] யேணி
உ. சேபாகவுச்சு[849]
க. பெரிய அலுமார்[850]
க சின்ன அலுமார்
ரு. வெட்டி வேர்த்தட்டி
சு'. பங்கா[854]
உ. மேட்டி[855] அலுமார்
உ. குசினி[856] மேசை
உ. மாட்டு பொட்டி

---

841. Game Table

842. Basin Stand

843. Globe

844. Clock

845. Stand

846. தோமத்திர - கொசுவலை

847. Lantern

848. Kuja Stand

849. Sopha Couch

850. அலுமார் - அலமாரி - Almirah

851. கக்குசு - Latrine

852. சகலாத்து - ஒருவகைக் கம்பளித் துணி

853. சாம்பற் பாட்டு - Ashpot

854. பங்கா - ஆட்டுதற்குரிய தொங்கு விசிறி

855. மேட்டி - சிறப்பான

856. குசினி - சிறிய

க . கால்களுவிறபிடட்டடு
உ . காலியாயிருக்கிற சாம்பற
பாட்டுளூட வெத்து பெட்டி
க . தய்யல் மேசை
ச.பிறம்புக் கவுச்சு[857]

மெத்தை தலகாணி தினுசு

ரு . கட்டில் மெத்தை
ரு . கவுச்சு மெத்தை
ரு . மெத்தை வுறை
ந.லங்கின வுறை
ச .லங்கினி தலகாணி[860] உறை
உ உ . தலகாணி
ரு . தோமத்திர்க் கம்பிவிட்டு
ச . பழைய தோமத்திர்
ய க . வெள்ளித்தலகாணிவுறை
ச. பந்தல் உறை
ந. கேம்பு கட்டில் காதி தோமத்திரா
உ . சிட்டுதலகாணி வுறை
க . கிழிஞ்சபோன பழைய தோமத்திர்[858]
உ . டிப்பாசு சகலாத்து[859] வுறை
உ . நாற்காலி மெத்தை
ய ந.கிடங்குத் துவாலை[861]
உ . துப்படி[862] ய உ முழ்த்தில்
உ பயில் அறம்
ய க . கட்டில் துப்பட்டி
ரு . திரிசிங்டேபிள்[863] வுறை
எ . னூல் கறட்டின வலை

பாத்திரங்கள்

க . கொள்ளவிக்கிற அண்டா
ரு . பழைய கெட்டில்[865]
சு. யிஸ்மித்தி
உ . கிறில்[866]
உ ய சு. யிரும்பு புள்ளு
உ . தமறத்தங்காய் அச்சு
ந . தேக்குசா[864]
சு. சாசுபானை
சு தால்
ரு . தாலா
ய அ . கேக்கு அச்சு
க . அடிபோன தவா.

857. கவுச்சி - Couch
858. தோமத்திர் - கொசுவலை
859. சகலாத்து - ஒருவகைக் கம்பளித் துணி
860. தலகாணி - தலையணை
861. துவாலை - Towel
862. துப்படி - துப்பட்டி - மேல்விரிப்பு, போர்வை
863. திரிசங்டேபில் - Dressing Table
864. தேக்சா - பிடிபொடு கூடியபெரும் பாத்திரம்
865. கெட்டில் - கைப்பிடிவைத்த வெந்நீர்க் கொதிகலம் (Kettle)
866. கிறில் - Grille - வலைத்தட்டி

## இரும்புச் சாமான்கள்

ய ரு. சாறாயம் வைக்கிற யிஸ்டான்[867] பலகை
க. பீப்பா யிஸ்டான்
க. சோபா பலகை
க. யிரும்புரல் உலக்கை
க. வண்டிலமரு சுத்து
க. யிரும்புப் பொனடுப்பு
உ. றொட்டியிரும்பு
ய சூ. பொக்கு யிஸ்டான் கம்பி
க. உடம்பு குளிக்கிற அடி
போன தொட்டி
உ ய சூ. சாவி
உ. கேம்பகட்டில் சொருகு பலகை
க. பிள்ளை கக்குசு நாற்காலி
க. ஆமற்[868]
க. யிரும்பு சீப்பு
சூ. குளோப்புக்கம்பி
ச. வெட்டுக்கத்தி
உ ய சூ. லிம்மன் பாட்டில்
உ. பூட்டு
ரு. கற்பூரத்தயில பொட்டில்

## கோணி சாமான்கள்

உ. கோணிப்படுதா
க. ரெட்டு தலகாணி[869]
உ. தகரபயிடீசு

## தோட்டத்து சாமான்கள்

எ. மண்வெட்டி
உ. வாங்கருவாள்
க. கத்திரிக்கோல்
உ. கறுக்கறுவாள்
க. குறிக்கத்தி
க. களக்கட்டு[871]
ச. தாம்புக்கயர்
க. பூட்டுசாவி
க. கோடாவி
க. புனல்[870]
௱ தண்ணி பூட்டை
க. மரத்தொட்டி
க. கூலிங்கடப்பு[872]

---

867. யிஸ்டான் - Stand

868. ஆமர் - Armour போர்க்கவசம்

869. ரெட்டு தலகாணி - முரட்டுத்துணியாலான தலையணை

870. புனல் - Funnel - பெய்குழல்

871. களக்கட்டு - களைக்கொட்டு - களைபறிக்கும் கருவி

872. Cooling Tub

வெத்துப்பொட்டில்

ள உ ங௳ பெரிய வெத்துப்புட்டி | க. அரைப்புட்டி

ங௰ க . கூம்பாச்சிபுட்டி | சு. கேசுபுட்டி

சூ௰ க.சில்லரைப்புட்டி | சுள ௰ எ . கல்லுபுட்டி

பீங்கான் சாமான்

சூ௰ ங . சின்ன டீசு பெரிய டீசு[873] | க . மூடியில்லா குப்புடுறியன்

௰ உ . கவற்டீசு பாட்டம் உள்பட | ச . மீன் டீசு

அ . சதிரங்க டீசு | ச ௰ ங . சுடுதண்ணி பீஞ்ஞான்

ங . சாதா மூடியில்லாதது | ள ௩உ . தட்ட பீஞ்ஞான்

௰ உ . சாசு கோபளப் பாட்டம் உள்பட | எ ௰ உ . குப்பு பீஞ்ஞான்

க. பயிடீசு | ௰ ங சு . அரை பீஞ்ஞான் கால்பீஞ்ஞான்

௩. கிறாக்கி டீசு பெரியது | க . பளைய கோப்பை

ச . சல்லாத்துப்போல் | ௰ உ . முலாம் பூசின கோப்பை

ங௳ குப்புக் டுறியன் | ௰ உ . சாசர்[874]

முலாம் பூசின சாமான்கள்

குறுட்டுயிஸ்ட்டானில்[875] நல்ல புட்டி-ரு

உடைஞ்சபுட்டி -க .

ஆக புட்டி சு (6)

ச . பாட்டில் ஸ்டாண்டு[876]

௰ க . காண்டிலி ஷட்டிக்கு[877]

க . உடைஞ்ச காண்டிலி ஷட்டிக்கு

உ . லாந்தர்[878]

அ . கவறடீசு

---

873. டீசு - Tea spoon

874. சாசர் - Saucer - ஏந்துதட்டு

875. Crude Stand

876. Bottle Stand

877. Candlestick மெழுகு திரிவைக்கும் சட்டம்

878. லாந்தர் - Lantern - கண்ணாடி விளக்கு

கிளாசு வகை

ரு. டிக்காண்டா[879]
ய ரு. சல்லி கிளாசு
க. ஒட்டை கிளாசு
ய உ. கிறின்[880] கிளாசு
ரு ய ரு. கிளாறட்டி[882] கிளாசு
உ ய எ. ஒயின் கிளாசு
க. கிறாக்கி சக்கரைக் கோப்பை
ய சூ சல்லி மூடி
ய க. குளோப்பு[884] கிண்ணம்
உ ய சு. வால்சேட்டு டம்பர்
உ. சுலிமீன் கண்ணாடி
ய. குளோப்பு சங்கிலி
ரு. சயினாபேசன்[886]
சு. பீங்கான் கூசா

க. சாதா டிக்காண்டம்
உ ய க. மண்டோ கிளாசு
உ ய ரு. பீங்கற் கிளாசு
ய உ. பீர்வாட்டர்[881] கிளாசு
ய சு. சமபோயின் கிளாசு
உ. சல்லி பீங்கான்
உ. பட்டறபாட்டு கம்பிலிட்டு[883]
உ ய சு. வாலசேட்டு டம்பர்
க. சீனுபீர்க்கு
அ. டேபிள் செட்டு[885]
அ ய ரு. இரும்புக்கதிர்
சூ. இய்யக் கூசா
ரு, சக்கு[887]
ரு. மூடியில்லாத டீசு டீசு பாட்டு

உ. டேபில் செட்டு வயிக்கிற தோல் பெட்டி

க. காப்பி கிரைனர்[888]
க. கப்பல் அடுப்பு
உ. சேட்டுமீன்கவற்

க. காப்பி பாட்டு[889]
சு. கயிட்டு[890]
உ. றவுண்டின் விளக்கு

---

879. Decanter - மதுஊற்றுவதற்குரிய கலம்

880. கிறின் - Green - பச்சையான

881. Beer Water

882. Claret இனிய மதுவகை

883. Waterpot complete(?)

884. குளோப்பு - Globe

885. Table set

886. China basin

887. Jug

888. Coffee Grinder

889. Coffee Pot

890. Guide

க. பித்தளை பேசன்[891]   க. கரக்கடா

உ. சின்னக்கட்டி

ரூ அ ள ஙூ க ஆம் ௵ மெயி மீ கூ[892]   ஜான்பிளாக்கி பறனதுறை பட்டுரை.

:றாமசாமி (ஒப்பம்)

## ஆவணம் எண் : 45

| பழைய தளவாட விவரம் | துகை | |
|---|---|---|
| 1 உத்திரம் யெனம்[893] 2 க்கு | 18 | |
| 2 அட்டை யெனம் 2க்கு | 167 | |
| 3 தேக்குசரம் யெனம் 4க்கு | 33 34 8 | அடியும் |
| 4 நடுரூம் அசுமான் கிரிபோக யுள்பட சட்டம் | 30 | |
| 5 பனங்கிளாது[894] யெனம் 3க்கு | 332 | |
| 6 ரீப்பாய் பட்டை[895] யெனம் 2க்கு | 861 | |
| 7 தென்னஞ்சட்டம் யெனம் 1க்கு | 5 | |
| 8 மூங்கில் துண்டு யெனம் 3க்கு | 212 | |
| 9 ஆணி யெனம் 2க்கு | 642 | |
| 10 ஓடு யெனம் 2க்கு | 68000 | |
| 11 கீத்து யெனம் 2க்கு | 3825 | |
| 12 கம்பத்துக்கு நடுவில் வைக்கிற விருத்தக்கல்லு[896] | 22 | |
| 13 ஷெ கம்பத்துக்கு உச்சியில் வைக்கிற விருத்தக் கல்லு | 11 | |
| 14 உத்திரத்தில் பங்கா[897] கட்ட யிரும்புப் பட்டம் | 2 | |
| 15 ஊக்குப் பலகை[898] | 18 | |
| 16 ஷெ ஊக்கு தேய்த்த வளவு ஆணி | — | |
| 17 நிலைக்குமேல் வளவு பலகை | 2 | |

891. Basin - வட்டில்

892. 9-5-1831

893. யெனம் - இனம்

894. பனங்கிளாஸ் - பனைமரத்துச் சரம்

895. ரீப்பாய் - வரிச்சல்பட்டை

896. விருத்தக்கல் - வட்டக்கல்

897. பங்கா - ஆட்டுவதற்குரிய தொங்கும் விசிறி

898. ஊக்குப் பலகை - ஊஞ்சல் பலகை

| | |
|---|---|
| 18 தண்டியப்[899] பலகை | 8 |
| 19 தாம்பறக்குழாய் | 7 |
| 20 அங்கணமய்யத்தில் கட்டைவளையமுள்பட | 20 |
| 21 நிலை[900] யெனம் உக்கு உருப்படி | 27 |
| 22 லாந்தர்[901] கம்பி | 3 |
| 23 அசுமான் கிரிப்[902] சட்டம் பொதியுள்பட | 30 |
| 24 சுண்ணாம்பு புரை[903] | 2 |
| 25 கயிக்கட்டை | 4 |

நம்பர் புதுக்கோட்டை சமஸ்தானம் பிச்சத்தானம்பட்டி பங்களாவிலிருந்து பிரிக்கப்பட்டிருக்கிற பழைய சாமான்களின் ஜாபித்தா[904]

## ஆவணம் எண் 46

ஸ்ரீமகாராஜா[905] சாயேபு அவர்கள் திவானத்துக்கு[906], கொல்ல மாயாண்டி ஆசாரி மகன் றாமாசாமி ஆசாரி தெண்டனிட்டு யெழுதிக் கொடுத்த யாதி[907]

யென்னவென்றால், போனவருஷம் அயன் மாலிலப்பறத்தேகமாய்க் கெடியாரங்களும் கத்திகளையும் செய்யச்சொல்லி, அரண்மனையாவர்களின் உத்திரவு ஆனதின் பேரில் அண்ணா முதற்கொண்டு வெகுநாளை வரைக்கும் காத்திருந்து சேவுகம் பண்ணிக்கொண்டு வந்தேன். சிறிது நாளைக்குப் பிற்பாடு க மாசம் வரைக்கும் காயலாவாகி வீட்டிலிருந்தேன். அப்போ மாலாரனவோர்களுக்குந்[908] தெரிந்திருக்கும், அப்போ ஒண்ணும் பேசாமலிருந்து யிப்போ நாளது வருஷம் ஐப்பசி மாசம் யென் சம்பளத்தில் ரு -ரூபாய்

---

899. தண்டியம் - வாசற்படியின் மேல் கட்டை

900. நிலை - கதவுநிலை

901. லாந்தர் - Lantern - விளக்கு

902. அசுமானகிரிப் - மேற்கட்டி

903. சுண்ணாம்புபுரை - சுண்ணாம்பு அளக்கும் கருவி

904. ஜாபித்தா - பட்டியல்

905. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

906. திவானத்துக்கு - முன்னிலைக்கு

907. யாதி - மனு

908. மாலாரனைவோர்களுக்கும்

வதிஷ்ட்டப்பதக்கத்தில்[909] பிடித்தார்கள். ஷெ ரூபா பிடிக்க வேண்டிய காரணமென்னவென்று அயன்மால் உத்தியோகஸ்தாள் அவர்களிடத்தில் தகராறு பண்ணிக் கேட்டுக் கொண்டு யிருக்கயில் மறுபடியும் கார்த்திகை மாசத்து சம்பளத்தையும் கொடுக்க வேண்டாமென்று ஷெ அயன்மால் உத்தியோகஸ்தாள் என் சம்பளத்தை அட்டக்குப்[910] பண்ணின சேதி எனக்குத் தெரிய வந்து மறுபடியும் என் சம்பளத்தை அட்டக்கு பண்ண வேண்டிய தென்னவென்று கேட்டதற்கு ஷெ உத்தியோகஸ்த்தாள் சொன்னதென் னவென்றால் உன் பேரில் பணம் வர வேண்டியதாயிருப்பதினால் அட்டக்கு பண்ணியிருக்கிறதென்று சொன்னதற்கு நான் சொன்னது அறக்காசி[911]யளவில் யெந்த மாலாறுக்குக் கொடுக்க வேண்டியதில்லை என்று சொன்ன பிற்பாடு நீ காயலாவாயிருந்த போது, உனக்குத் தினம் -க-க்குச் சம்பளம் பு (பணம்) கரு (1 1/2) பணம் வீதமாகையால் அப்போ உனக்குப் பதில் வைத்து சேவுகம் பண்ணிவனுக்குத் தினம் -க-க்கு பு. க ரூ. (1 3/4) பணம் வீதம் தொகையாகி யிருப்பதினால் உன் சம்பளத்தை அட்டக்கு பண்ணி யிருக்குதென்று சொன்னதுமல்லாமல் அப்படிக்கி அந்தப்படிக்கு உனக்குச் சம்மதியில்லாவிட்டால் நீ அரண்மனையில் பிறாது பண்ணிக் கொள்ளலாமென்று உத்திரவு கொடுத்த படியினாலே யிந்த யாதியை எழுதிக் கொள்ளலானேன். ஆகையினாலே யிந்த யாதியைமகாராஜா சாயேபு அவர்கள் ஏற்றுக்கொண்டு, நான் ஏழை புராதின[912] வேலைக்காரனானதினாலும் அதுவுமல்லாமல் நான் வெகு குடும்பஸ்த்த[913]னானதினாலும் ஷெ அரண்மனையாரவர்களை யடுத்து, முன்போலே பாரி[914] சம்பளங்கள் பண்ணிக்கொண்டு பிரபல்லியஸ்த[915]னாக வேணுமென்று கோருதலையாயிருக்கையில் ஷெ அயன்மால்உத்தியோகஸ்தர்கள்ஏழையின் பேரில் ஏதோ வன்மம்[916] வைத்து என் சம்பளத் தை அட்டக்கு பண்ணி யிருப்பதினாலே யிப்போ வருகிற சங்கராந்திப்பண்டிகை[917] யின் ஊழியம் செய்து, இனாமுகள் வாங்கிறத்துக்குச் சக்தியில்லாதவனாய்ப் போனேன். ஆகையி னாலே ஷெ மகாராஜா சாயேபு அவர்கள் ஏழையின் பேரில் தயவுசெய்து என் சம்பளத்தில் பிடித்தமில்லாமல் இப்போ அட்டபண்ணியிருக்கிற சம்பளத்தையும் கொடுக்கும்படியாகவும்

---

909. பதக்கம் - சில ஊர்களின் ஒன்றியம் (பக்கம் 74)

910. அட்டக்கு - தடை

911. அறக்காசி - அரைக்காசு

912. புராதின - புராதன - பழமையான

913. வெகு குடும்பஸ்த்தன் - பெரிய குடும்பத்தையுடையவன்

914. பாரி - பெரிய

915. பிரபல்லியஸ்தன் - நன்கு அறியப்பட்டவன்

916. வன்மம் - தீராப்பகை

917. சங்கிராந்தி - பொங்கற்பண்டிகை

இனிமேல் மாசாமாசம் தடங்கல் பண்ணாமல் என் சம்பளத்தைக் கொடுத்து விடும்படியாய் ஷெ மாலாற் உத்தியோகஸ்தாளவர்களுக்கு உத்திரவு கொடுத்துஏழையைக் காப்பாத்த வேணுமென்று தண்டனிட்டு மிகவும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விளம்பி[918] ஸு
மார்கழி மீ 27 உ

இந்தபடிக்கி
றமசமி யிந்த யெழுத்து
கொல்ல றாசாமி சம்மதி

## ஆவணம் எண் 47

அமரசிங்கு[919] மகாறாஜா விண்ணப்பம் - கள்ளப்பத்து[920] சீமை அமல்தாற்[921] ஸதாசிவ எல்லோ-ஸுஹுர்ஸன் திஸா ஸம்மானயின் மயா அலப்[922] மொஹரம் மீ 24உ[923] சீமையில் பாளையக்கார சில்லதுறை றாமசாமி பண்ணி கொண்டாளனுடைய பாளயபட்டு நடவாசீ உள்பட இரண்டு பாளயப்பட்டுக்குத் தாயாதி கிஷ்ணபண்ணி கொண்டாள யென்பவள் ஆயிரம் விறாகன் பரங்கி பெட்டி[924] யென்று கவுல்[925] செய்து பாளயப்பட்டு செய்து கொண்டதில் அடியனுட[926] பாளையபட்டு சில்லத்துற அடியனுக்குத் திரும்பிக் கொடுத்து இருக்கிறது. அடியேன் அரண்மனையிலிருந்து கவுல்செய்த விறாகன் பாங்கி[927] 350 பேட்டி பாபது[928] 162 1/2 தங்கம் நஜர்[929] பூவிறாகன்[930] 135 3/4 க்கு 512 1/2 ஆக அ இறுத்தி[931]

---

918. விளம்பி - அறுபதாண்டுகளுள் 32 ஆவது

919. அமர்சிங்கு - இரண்டாம் துளஜா இறந்ததும் 1788இல் அரசு கட்டிலேறி 1798 வரை ஆட்சி செய்தவர்

920. கள்ளப்பத்து - 'சுபா' என்ற பிரிவு.

921. அமல்தார் - வருவாய்த்துறை அலுவலர் (பக்கம் 74)

922. திஸ்ஸா - சம்மானைன் - மயா - அலப் = 1189 + 599 = கி.பி.1788.

923. மொஹரம் 24-ஜுன் 28

924. பரங்கிப்பேட்டை ஆயிரம் வராகன்; பரங்கிப்பேட்டை வராகன் சிறிது மதிப்பு அதிகம் உடையது (பக்கம் 151)

925. கவுல் - உடன்படிக்கை

926. அடியனுட - அடியேனுடைய

927. வராகன் பாங்கி - பரங்கிப்பேட்டை வராகன்

928. பாபது - பாபத்து - தொடர்பாக

929. நஜர் - பெரியவர்களுக்குக் கொடுக்கும் காணிக்கை

930. பூ விறாகன் - புலிவராகன் (பக்கம் 150)

931. அஇறுத்தி - ஐந்நூற்று

பன்னிரண்டரை விராகன் வாங்கும்படி உத்திரவு செய்ய வேண்டியது. மேல்கண்டபடி நடத்தவும், ஸம்க்ஷேமம். ரபிலாகற மீ 7உ

## ஆவணம் எண் 48

ஸ்ரீமகாராஜா சாயேபு[932] அவர்கள் திவானத்துக்கு[933] வலம்புரியிலிருக்கும் சாமி சிறாங்கு[934] மகன் ராமசாமி சாமினாயக்கன் எழுதி கொடுத்த வாதி[935]

என்னவென்றால், ஸ்ரீபிரதாபசிம்ம[936] மகாராஜா சாயேபு அவர்கள் பட்டத்திலே நடந்து காரியங்களெல்லாம் என் தகப்பனார்[937] சொல்விக் கேள்வி. ஸ்ரீதுளசா[938] மகாராஜா சாயேபு அவர்கள் பட்டத்திலே ராமனாதபுரம்[939] மரத்தியின் பேரில் சண்டைக்குப் போறது. என் தகப்பனார் சாமிசிறாங்கும் ஙயிங(33) சனமும் வீரலட்சுமி, விசயலட்சுமி என்கிற பீரங்கியை இழுத்துக்கொண்டு, போய் சண்டைக்கு போனோம். மறுபடி தஞ்சை நகரம் வந்து சேர்ந்தார்கள். மதார்மல்க்[940] வந்து கோட்டையைப் பிடித்தான்[941]. பிக்கட்டு[942] துரை வந்து ஸ்ரீ மகாராஜா[943] சாயேபு அவர்களுக்குப் பட்டங்கட்டி[944] வைத்தார். மகாராஜாவே

---

932. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

933. திவானத்துக்கு - முன்னிலைக்கு

934. சிறாங்கு - கப்பல்கண்காணி

935. வாதி - யாதி - விண்ணப்பம்

936. பிரதாபசிம்மர் - 1739 முதல் 1763 வரை ஆட்சி செய்தவர்; இரண்டாம் துளஜாவின் தந்தை.

937. தகப்பனார் - சாமி சிறாங்கு

938. துளஜா - இரண்டாம் துளஜா (1763 முதல் 1787 வரை ஆட்சி செய்தவர்)

939. ராமநாதபுரத்தின் மேல் போர்: 1771 இல் இரண்டாம் துளஜா ராமநாதபுரத்தின் மேல் படையெடுத்தார். ஒவ்வொரு கோட்டையாகப் பிடித்துக் கொண்டு சென்று இராமநாதபுரக் கோட்டையை முற்றுகையிட்டார். இராமநாதபுரத்து அரசி சமாதானம் செய்து கொண்டார். துளஜா வென்று கொண்ட பகுதிகள் யாவும் அவர் வசமே ஆயின (பக்.89)

940. மதார மல்க - இவர் முகம்மது அலியின் இரண்டாவது மகன் (போ.வ.ச.பக்.120) (பக்கம் 90-91)

941. கோட்டையைப் பிடித்தது 17-9-1773 இல்

942. பிக்கட்டு - கவர்னர்: Lord Pigot ஜியார்ஜ் பிகட்டாக இருந்த பொழுது 14-1-1755 முதல் 13-11-1763 வரை சென்னைக் கவர்னராக இருந்தார். தஞ்சைக் கோட்டை முகம்மது அலி வசம் ஆனதும் மீண்டும் துளஜாவை அரசராக்குமாறு லார்டு பிகட் சென்னைக்குக் கவர்னராக 10-12-1775இல் அனுப்பப்பட்டார்.

943. மகாராசா என்றது இரண்டாம் துளஜாவை

944. பட்டம் கட்டியது 11-4-1776இல் (பக்.61)

கோட்டை அலங்கிருத[945]மில்லை மாட்டியன்[946] துரை சென்னைப்பட்டணம் போய்வந்தார். அவர் பாரிசம் எங்கள் தகப்பனார் சாமி சிறாங்கையும் நம் நடசனத்தையும் மாட்டியன் துரை வசமாக ஒப்பிவித்தார். கோட்டையுங் கட்டி முடிந்தது. அயிதர்[947] வந்தவன் பெரிய அணைக்கரையை வெட்டி கவிழ்த்துவிட்டான்[948]. ஸ்ரீ துளசி மகாராசா சாயேபு அவர்கள் எங்கள் தகப்பனார் சாமி சிறாங்கை அழைப்பிவித்து உனக்கு என்ன தேவையானதோ அதுகள்யெல்லாம் வாங்கிக்கொண்டு அணைக்கரையை அடைத்துப்போட்டு வரவேணுமென்று உத்திரவு பண்ணினார். அரண்மனையில் நம் உ யானையும்

சிலவுக்கும் வாங்கிக்கொண்டு நடய நடசனத்தோடே அணைக்கரைக்கு போய் : உடப்பிலே யானைகளை நிறுத்தி, அதன் சந்திலே முளைகளை நிறுத்தி அதன் அதன் சந்திலே முளைகளை நிறுத்தி ஆதரவு உண்டாக்கி அக்கரையிலே மண்ணையெடுக்கப் போனதுக்கு கிராமத்தான் தகராறு பண்ணினான். திருச்சினாப்பள்ளிக்குப் போய் (லாட்) சாயபு டீபு சாயபு[949] அவாளிடத்திற் போய் (தஸ்க்கா)...... வாங்கிக் கொண்டு வந்து, கிராமத்தாருக்குக் கொடுத்து மண்வெட்டிப் போட்டு, அடைத்துப்போட்டு தஞ்சை நகரம் வந்து சேர்ந்தோம். ஸ்ரீ அமரசிங்[950] மகாராஜா சாயேபு அவர்கள் பட்டத்திலே அவ்விதமாகவே நடத்திக்கொண்டு வந்தார்கள். ஸ்ரீ சரபோசி[951] மகாராஜா சாயேபு அவர்கள்சென்னைப்பட்டணம் போய்ப்பட்டம் பெற்றுக்கொண்டு தஞ்சை நகரம் வந்து பட்டத்திலிருக்கும் போது, அடியேன் பேரால் என் தகப்பன் அசாமியை என்பேறுக்கு பண்ணி வைத்தார்கள். நானும் ஊமையன் சண்டைக்குப்[952] போயிருந்தேன். ஸ்ரீ சரபோஜி மகாராஜா சாயேபு அவர்கள் சானுவனாயக்கன் பட்டணத்துக்குச் சவாரிபோய் போட்டிலேறி[953] விளையாடும்போது ஒரு ராத்திரி புயலிலே ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களும், கில்லேதார்[954] பவுசுதார்[955] வங்காளி சிறாங்கும்[956] அதுக்கு

---

945. அலங்கிருதம் - அழகாக

946. மாட்டியன் -Martin

947. அமிதர் - ஹைதர் அலி 20-7-1780இல் ஒரு பெரிய சேனையுடன் வந்து, 1781இல் மேமாசம் கொள்ளிடத்தைக் கடந்து தஞ்சையையடைந்தான். (சீனிவாசன் - கர்நாடகத்தில் மராட்டியர் ஆட்சி-பக்கம் 307)

948. "Every water duke and embankment totally destroyed" (பக்.310 அடிக்குறிப்பு) (பக்.93-94)

949. டீபுசாயபு - ஹைதர் அலியின் மகன் (Tipu Sultan)

950. அமர்சிங்கு - இரண்டாம் துளஜாவுக்குப் பிறகு 1788 முதல் 1798 வரை ஆட்சி செய்தவர்

951. இரண்டாம் சரபோஜி 1798இல் பட்டம் எய்தினார்

952. ஊமையன் சண்டை -(?)

953. போட்டில் - படகில் (Boat)

954. கில்லேதார் - கோட்டைக்காவலன்

955. பவுசுதார் - பவுஜ்தார் - நாட்டதிகாரி

956. சிறாங்கு - கப்பல் கங்காணி

நேமணக்கா[957] யிருந்த என்னையும், (இ) யாட்பாணம்[958] கொண்டு போய்விட்டது. மறுநாள் யாட்பாணம் விட்டு ய் தாசுக்கு[959] சாஞுவநாயக்கன் பட்டணம் வந்து சேர்ந்தோம். ஸ்ரீ அன்னதாதா[960] பிறந்த அன்றை[961] க்கிடீள கூபீரங்கி சுட்டது நான்தான். சாமளி சுப்பறாவு அன்ன தாதாவை தோளில் வைத்துக்கொண்டு மாடியின் பேரில் வைத்துக்கொண்டு ரேற்க்கிலா[962] சுட்டு[963] வேடிக்கை காஸ்பித்தவன் நான்தான் . என் மகனுக்கு கல்யாணம் செய்ய, அரண்மனையார் உத்திரவுப்படிக்கி போயிருந்தேன். போன விடத்தில் கபவாதசுரம்[964] வந்து வெகு அவஸ்த்தைபட்டு, தஞ்சைநகரம் வந்து சேர்ந்து, காரக்கோனை[965] சேவகத்துக்குப் போகவேணுமென்று கேட்டதற்கு அரண்மனையார் உத்திரவுப்படிக்குப் போகவேணுமென்று சொன்னார். நான் சிக்காயிருக்கிறது[966] மென்று, வெகு கடுதாசிகள் எழுதினேன். அதை அரண்மனையார்க்குத் தெரியப்படுத்தாதபடிக்குப் போனார்கள். அன்று முதல் நாளது வரையில் அலைந்து திரிகிறேன். ஏழையாகிய என்பேரில் அரண்மனையார் அவர்களுக்கு இரக்கமில்லை. ஆகையால் கோடானகோடி[967] ஜீவாத்துமா[968] வை ரெட்சிக்கப்பட்ட அன்னதாதாவே என்கூட ரு பெயர் ராவும் பட்டினி, பகலும் பட்டினியாக யிறந்து போகிறதாக யிருக்கிறது. ஏழையாகிய என் பேரில் இரக்கம் வைத்து, என் அசாமியை[969] எனக்குக் கொடுக்கவும். அது வரையில் தற்காலம் சிவனம் பண்ணும்படியாக (சில) சத்திரத்தில் உலுப்பை[970] செய்து காப்பாற்றவும். உத்திரவு செய்தால் இந்த விர்த்தாப்பிய[971] மான காலத்தில் வாங்கி சாப்பிட்டுக் கொண்டு, அன்னதாதாவுக்குப் புத்திர சம்பத்து[972] உண்டாகவேணுமென்று வெகு தெய்வங்களைத்

---

957. நேமணக்கு - நியமிக்கப்பட்டு

958. இயாட்பாணம் - யாழ்ப்பாணம்

959. பத்து தாசு: தாசு - 2 1/2 நாழிகை

960. ஸ்ரீ அன்னதாதா - என்றது: இரண்டாம் சிவாஜியை. அன்னதாதா - உணவு கொடுத்து ஆதரிப்போர்

961. இரண்டாம் சிவாஜி பிறந்தது 22-3-1808

962. ரேக்கிலா - ரேக்ளா - ஒருவர் மட்டும் உட்கார்ந்து விரைந்து செல்லக்கூடிய வண்டி

963. "சுட்டு" என்பதைக் "காட்டி" என்று திருத்திப்படித்தல் வேண்டும்

964. கபவாதசுரம் - (Pneumonia) சிலேட்டும வாதங்களின் சேர்க்கையால் தோன்றும் சுரநோய்

965. காரக் கோன் - கார்கூன் - ஒரு சாதாரண அலுவலர்

966. சிக்காயிருக்கிறது - உடல் நலமில்லை

967. கோடானகோடி - பலகோடி

968. ஜீவாத்மா - சிற்றுயிர்

969. அசாமி - வேலையாள்

970. உலுப்பை - உணவுக்குரிய அரிசி பருப்பு முதலியன (பக்கம் 78-79)

971. விர்த்தாப்பியம் - முதுமை

972. புத்திரசம்பத்து - புதல்வர்ப் பேறு

துதிபண்ணிக்கொண்டு வருகிறோம். அன்னதாதா வயத்திலே[973] பிருத்தாபசிங்[974] மகாராஜா சாயேபு வந்து பிறக்கப்போறார். என்கய்யாலே ள உ க வேட்டுபபோடக் காத்துக் கொண்டிருக்கிறேன். இந்த உபகாரத்தை எழையாகிய எனக்குச் செய்யவேணுமென்று ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் பாதத்தெண்டனாக விழுந்து கிடக்கிறேன்.

ஆனந்த ஷு
ஆனி மீ உ க[975] வ

சாமி சிறாங்மகன்
ராமசாமி னாயக்கன்.

## ஆவணம் எண் 49

ஸ்ரீ மகாராஜா[976] சாயபு அவர்கள் திவானத்துக்கு கோட்டைவெளி பூக்காரத் தெருவிலிருக்கும் அல்விசா தெண்டனிட்டு எழுதிக்கொடுத்த யாதி[977] என்னவென்றால், மால்சர்பத்கானா[978] நான் ஐந்துபழம் (ஆரஞ்சுபழம்) வியாபாரம் பண்ணினதில் மாவில் பணம் பாக்கி யிருப்பதால் சர்க்கார் ரவேசி[979] ப்படிக்கிப் பிடித்துக்கொண்டு என்னுடைய நிலுவை சாடாவாய்க்[980] கொடுக்கும்படியாய் உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

த அ ள சம சம்[981] ஷு
மார்ச்சு மீ ம வ

ம. அல்விசா.
கையெழுத்து.

## ஆவணம் எண் 50

ஸ்ரீமகாராஜா சாயபு[982] அவர்கள் திவானத்துக்கு கோட்டைவெளி கருந்திட்டாங்குடியிலிருக்கும் கோவிந்தறாவு சாளகே தெண்டனிட்டு எழுதிக்கொடுத்த யாதி[983] என்னவென்றால், நான் சர்பத் கானாவில் அஞ்சிறபழம் (ஆரஞ்சுப்பழம்) வியாபாரம் பண்ணினதில் மாவில் பணம் பாக்கி இருப்பதால் சர்க்கார் ரவேசுப் படிக்குப் பிடித்துக்

973. வயத்திலே - வயிற்றில்

974. பிருதாபசிங் - பிரதாபசிங்கர்

975. ஆனந்த - ஆண்டு அறுபதில் 48 ஆவது
ஆனந்த வருஷம் ஆனி மாசம் 29 - 11-7-1854 (பக்கம்89)

976. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

977. யாதி - விண்ணப்பம்

978. சர்பத்கானா - குளிர்பானம் தயார் செய்யும் இடம் (பக்.452)

979. ரவேசி - ரவேஸ் - தரகுப்பணம் (Customary Brokerage)

980. சாடா - முழுவதும்

981. 1844 ஆம் வருஷம்

982. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

983. யாதி விண்ணப்பம்

கொண்டு, என்னுடைய நிலுவை சாடாவாய் கொடுக்கும்படியாய் உத்திரவாக வேணுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தூ அ ள சஂயி சஙூ
மார்ச்சு மீ ய உ

கோவிந்த ராவ் சாளகே.
(நாகரியில் கையொப்பம்)

## ஆவணம் எண் 51

ஸ்ரீ மகாராசா சாயேபு[984] அவர்கள் திவானத்துக்கு கோட்டை வெளி பூமால் றாவுத்தன் கோவில்[985] தெருவிலிருக்கும் வடுகக்கொசத்தி[986] கோவிந்தம்மாள் எழுதிக்கொடுத்த யாதி என்னவென்றால்:- மால் சர்பத் கானாவில்[987] நான் நவபாண்ட[988] வியாபாரம் பண்ணினதில் வரவேண்டிய நிலுவைப் பணத்தை சர்க்கார் ரவேசுப்படிக்குப்[989] பிடித்துக்கொண்டு, என்னுடைய நிலுவை சாடாவாய்க் கொடுக்கும்படியாய் உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தூ அ ள சம சு[990]ஙூ
மார்ச்சு மீ ய உ

கோவிந்தம்மா.
கையெழுத்து.

## ஆவணம் எண் 52

அரிக்கார மகால்[991] பசவி நாணு வய்யனுக்கு எழுதினது. என்னவென்றால் நாளது மாதம்உ உ தேதியிலும் உ க தேதியிலும் நிற் சக்கலா[992] அம்பாபுறத்திலிருந்து அனுப்பின காகிதங்களை வரப்படுத்திக் கொண்டோம்.

சத்திரத்துக்கு அளக்கவேண்டிய நெல்லை அளக்காமல் குத்தகைக்காரனைக் கொண்டு அளந்து கொள்ளாமல் கமாவிசுதாறனைக்[993] கொண்டும் தர்மகாரியத்துக்கு றொம்ப அஜாக்கிரதை நடக்கிறதென்று அறிந்து கொண்டோம். கமாவிசுகார்[994] றாமடு அய்யன் புதுச்சேரிக்குப் போயிருந்து ஷெ ய கஉ ராத்திரி சத்திரம் வந்து சேர்ந்தாரென்றும் அறிந்தோம்.

---

984. மகாராசா என்றது இரண்டாம் சிவாசியை

985. பூமாலை ராவுத்தன் கோயில் - வடவாற்றுக்குத் தெற்கே உள்ளது

986. கொசத்தி - குயத்தி

987. சர்பத்கானா - குளிர்பானம் செய்து தரும் இடம் (பக்.452)

988. நவபாண்டம் - புதுப்பானை

989. ரவேசு - வழக்கமான தருகுப்பணம்

990. 1844 ஆம் வருஷம்

991. அரிக்கார மகால் - ஜாசூத மகால் (பக்.453); அரிக்காரர் - உறாக்காரா - ஒற்றர்

992. நிற் சக்கலா - நீர் சர்க்கார் என்று திருத்திப்படித்தும் கொள்க

993. கமாவிசுதார் - பலவூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்கம் 77)

994. கமாவிசுகாரன்-சத்திரமேற்பார்வை செய்பவன்

கமாவிசு நாமடு அய்யன் நாளது பங்குனிமீ ௰ உ தேதியில் ஒரு அர்ஜி[995] எழுதிக் கொண்டதில் கண்டயிடத்தில் சத்திரத்துக்கு நெல்லெல்லாம் கிடக்கிறதினாலே தான் சத்திரம் விட்டு (அசயக்கமா) தாயிருக்கிற[996]தென்றும் ஆகையால் அந்தக் காரியம் பார்த்துக் கொண்டு வந்து சேருகிறேனென்று, அரண்மனையார் சுருக்கவே வரச்சொல்லி எழுதின கட்டளைக்குப் பதில் உத்திரவாக ஓர் அர்ஜி எழுதிக் கொண்டிருக்கிறேன். அரண்மனையார் வரவழைத்ததற்கு அப்படி யெழுதினவன் சத்திரம் விட்டு மற்றொரு விடத்துக்குப் போனது மிகுந்த ஆச்சரியமாக இருந்தது. இப்பவும் கமாவிசு நாமடு அய்யனுக்கு இந்தப்பத்திரம்[997] கண்டவுடன் வரவழைத்து சத்திரத்துக் கணக்கும் கூடக் கொடுத்து ரெண்டு சிப்பாய்களையும் கொடுத்து இவ்விடம் அனுப்பிவிக்கவும். அதுக்கு அவன் உடனே புறப்பட்டால் நல்லது. இதுக்கும் அவன் ஏதாவது தடங்கல் சொல்லுவானேயாகில் அதற்காக நாலுபேர் சாட்சிவைத்து பதில் உத்திரவு எழுத வேண்டியது.

சத்திரம் கிராமம் குத்தகைக்காரன் சுற்றப்பட்டவர்க்கு[998] நீர் ஒரு அரிக்காரனை[999] அனுப்பி முகதாவில்[1000] வரவழைத்து குத்தகை நிலுவைக் கணக்கு கேட்டு வாங்கிக்கொண்டு, அந்தக் கணக்குப்படிக்கு நிலுவை கொடுக்கச் சொல்லி, அவன் அளக்கிற நெல்லும் நீர் கிட்டயிருந்து அளந்து கொண்டு களஞ்சியத்தில் போட்டு சேதிக்கு எழுதவும். இந்தப்படிக்குக் குத்தகைக்காரன் நடந்து கொள்ளாமலிருப்பானேயாகில் அது சங்கதிக்கும் சாட்சி ...... வைத்து பதில் உத்திரவு யெழுத வேண்டியது. இந்தக் காகிதம் உசூர்[1001] அரிக்காரன் நிசைநந்த மத்தியஸ்த அரிக்காரன் முன்னுக்கு கமாவிசுதாரு குத்தகைக்காரனுக்கும் வாசித்துக் காண்பிவித்து சேதிக்கு எழுதவும்.

சு அ ள உ ௰ ரு[1002] வரு
ஏப்ரல் மீ ரு உ

தஞ்சாவூர்

---

995. அர்ஜி - விண்ணப்பம்

996. விட்டு .... தாயிருக்கிறது - விட்டுப் போவதற்கு அவசியமாயிருக்கிறது என்று படிக்கலாம்

997. பத்திரம் - மடல்

998. சுற்றப்பட்டவர்க்கு - முதலியவர்களுக்கு

999. அரிக்காரன் - ஒற்றன்; தூதுவன்

1000. முகதா - முன்னிலை

1001. உசூர் - அரசனுடைய

1002. 1825 ஆம் வருஷம்

## (பின்புறம்)

நாஜசாம்பாள்புரம் சத்திரம்[1003] அமினா[1004] பிச்சுவய்யனுக்கு யெழுதுகிற தென்ன வென்றால்:-

நாளது தைமீ க உ க்கு உன்னை ஷெ சத்திரத்துக்கு அமீனாக நேமித்த நாள் முதல் இதுவரைக்கும் தாராசுரம் கிராமம் குத்தகை சுப்புப்பிள்ளை குத்தகை மேல் வாரத்தில் அளந்திருக்கிற நெல்லும் செலுத்தின பணமும், இவளவென்று தேதி வாரம் கண்டு அதிசீக்கிரத்தில் தயார் செய்து அனுப்பி வைக்கவும்.

## ஆவணம் எண் 53

விளம்பி[1005] ஸு தைமீ உ உ

துறகம் கொட்டுறப்ப செட்டியாருக்கு தஞ்சை நகரம் சாரங்கபாணி செட்டி வாங்கிக் கொடுத்த வியாபார விபரம்.

....கோபு குதிரை மட்டங்கள் உக்கு சரி விழும் பூவிராகன் உ ள ரு ய.[1006] ஷெ குதிரைகளுக்குச் செகப்புக்கல் இழைத்த முகப்பட்டை முதலாகியாகி சாரசமா உம்மாக விகி வகையறா, சாமான் -க-க்கு அடங்கல்[1007] கிறையம் பூவிராகன் உ ள ரு ய ஷெ பச்சை பச்சைக்கல் இழைத்த முகப்பட்டை முதலாகிய சாரசமா உ மகாவிகி வகையறா சாமான் -க-க்கு அடங்கல் கிறயம்[1008] பூவிராகன் -உ ள ரு யஇது அல்லாமல் உ குறாத்தி பகமாடுகள் ய எ. ஷெ கன்னுகள் சுகால்நடை உ ய க-க்கு அடங்கல் கிரையம் பூவிராகன் -உ ள ரு யஆகயெனம் ச-க்குக் கிரையம் பூவிராகன் - ரு[1009]

## ஆவணம் எண் 54

யாதாஸ்து[1010] தஞ்சாவூர் அரண்மனையிலிருக்கப்பட்ட புலி வகையறா மிருகங்களுக்கு விபரங்கண்ட ஜாப்தா தாலூகா தஞ்சாவூர் 1271 பசலி[1011] மே மீ 27 உ வேங்கபுலி ஆண் 2,

---

1003. ராஜசாம்பாள்புரம் சத்திரம் - தாராசுரம் சத்திரம் (பக்கம்273) இராஜசாம்பாள் என்பவர் இரண்டாம் துளஜாவின் முதன் மனைவி ஆவர் (போ.வ.ச.பக் 100)

1004. அமீனா - பணம் வசூல் செய்யும் அலுவலர்

1005. விளம்பி - ஆண்டு அறுபதுள் 32 ஆவது

1006. புலிவராகன் 250

1007. அடங்கல் - (இவற்றையும்) அடக்கிய

1008. கிரையம் - விலை

1009. புலிவராகன் ஆயிரம் (புலிவராகன் - பக்கம் 150)

1010. யாதாஸ்து - நினைவுக்குறிப்பு (Memorandum)

1011. பசலி - கி.பி.591 முதல் தொடங்குவதும் 1555 ஆம் ஆண்டு அக்பரால் ஏற்படுத்தப்பட்டதுமான ஆண்டு முறை. பசலி - 1271 + 591 = கி.பி.1862

குண்டடியன்[1012] கழுதைப் புலி[1013] ஆண் 2, குண்டடியன் பெண் குட்டி செப்டம்பர்மீ 11 உ யில் போட்டது. 1, ஜ்னவரி 31 உ யில் போட்ட குட்டி -2, ஆக-3, ஆக-11. ஜவாது[1014] பூனை பெண்-க ஆக 12.

## ஆவணம் எண் 55

ம.அ.ம.ஸ்ரீ பாவாசி ராமாசி பண்டித[1015]ரவர்களுக்கு அடியேன் வில்லியம் ஒல்ஸவர்த்[1016] மிகவும் வணக்கத்துடனே சலாம் செய்து யெழுதிக் கொள்ளும் விண்ணப்பம் என்னவென்றால்:-

தாங்களடியேன் பேரிலே தயவு வைத்து சத்திரபதி[1017] மகாராஜா சாயேபு அவர்களிடத்தில் சொல்லி வாங்கிக்கொடுத்த காட்டேவாட் என்னப்பட்ட குதிரையை இன்றைதினம் ஸவாரி செய்து கொண்டு, நவவித்தையா கலாநிதி சாலைக்குப்[1018] போயிருந்தேன். அந்தக் குதிரையின் பின்னம்கால் ஊனமாயிருக்கிறது. இப்படி யிருக்கும்போது, அதின் பேரிலே சவாரி செய்கிறது மோசமான காரியமானபடியினாலே அதுக்கு ஏதாவது, பரியாரம் செய்யவேண்டியதாயிருக்கிறது. செய்யாவிட்டால் குதிரை உபயோகத்துக்கு வரமாட்டாது. ஆகையாலே லாயத்து மத்தியஸ்தரவர்[1019]களுக்குச் சொல்லி, அதைச் செம்மைப் படுத்திக் கொடுக்கும்படியாய் உத்திரவாக மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். அந்தக் குதிரை செம்மையாகிற வரைக்கும் அடியேன் சாலைக்குப் போகக்கூடாதிருக்கிறபடியினாலே யிது காரியத்தைத் தங்கள் சித்தமறிந்து கொண்டு, மகாராஜா சத்திரபதி சாயேபு அவர்களுக்குத் தெரியக்கொடுக்கும்படியாய் அடியேன் தங்களைத் தாழ்மையாய் மனுக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரு அ ள உ மி கூ[1020] உ
ஏப்ரல் மீ உ க உ

இப்படிக்கு
தங்களுடைய தாழ்மையான
ஊழியக்காரனாகிய அடியேன்.[1021]

---

1012. குண்டடியன் - சிறுத்தை

1013. கழுதைப்புலி - கடுவாய் (Hyena)

1014. ஜவ்வாது - ஒருவகைப் பூனையினின்று கொள்ளப்படும் வாசனைப்பொருள்

1015. பாவாசி ராமாசி பண்டிதர் - சரபோஜி 1820-22இல் காசி யாத்திரையில் இருந்த போது உடன் இருந்த சர்க்கேல்; பின்னர் இவர் 1834 முதல் தஞ்சையில் சர்க்கேலாக இருந்தார் (பக். 86)

1016. வில்லியம் ஒல்ஸ்வர்த் - William Wordsworth

1017. சத்திரபதி என்றது இரண்டாம் சரபோஜியை

1018. நவவித்யா கலாநிதி சாலா - இது தஞ்சைக் கோட்டையில் இருந்த கல்விநிலையம். இதற்குச் சர்வவித்யாசாலா என்றும் பெயருண்டு (பக்.240)

1019. லாயம் - பாகா (Paga) மகால்; மத்யஸ்தர் - அலுவலர்

1020. 1829 ஆம் வருஷம்

1021. அடியேன் என்றது மனுச்செய்து கொண்ட வில்லியம் வேர்ட்ஸ்வொர்த் என்பவரை

## ஆவணம் எண் 56

ம.அ.ம.ஸ்ரீ. பாவாசி ராமாசி பண்டித[1022] ரவர்களுக்கு வில்லியம் ஒல்ஸ்வர்த்[1023] மிகவும் வணக்கத்துடனே சலாம் செய்து யெழுதிக்கொள்ளும் விண்ணப்பமென்னவென்றால்:

தாங்களடியேன் பேரிலே தயவுவைத்து சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களிடத்தில் சொல்லி வாங்கிக் கொடுத்த குதிரை[1024] பின்னங்காலிலே ஊனமாயிருக்கிறதைப் பற்றி, அதுக்குப் பரியாரம் செய்தாலொழிய உபயோகத்துக்கு வரமாட்டாதென்றும், அதுக்குப் பரியாரம் பார்க்கும் படியாய் லாயத்து மத்தியஸ்தருக்கு உத்திரவாக வேணுமென்றும், சிறிது நாளைக்கு முன்னே அடியேன் தங்களைக் கேட்டுக்கொண்டேன். ஆனால் லாயத்திலே அதுக்குப் பரியாரஞ்செய்து, நமக்கு உபயோகமாகிறது மகாபிரயெத்தினமான[1025] காரியமாயிருப்பதாலும் அடியேனும் அலுவலுக்குப் போகாமல் காலத்தை வீணாகச் செலவழிக்க வேண்டியிருப்பதனாலேயும் அடியேன் தானே யாரையாவது கொண்டு, அதைச் சொஸ்தப்படுத்திக் கொள்ளலாமென்று, யோசித்திருக்கிறேன். அப்படிச் செய்கிறதுக்குக் குதிரை நம்முடைய பார்வைக்கு முன்னாலே யிருக்க வேண்டியதா யிருப்பதினாலே அடியேனுக்கு முன்னாலே நேமிக்கப்பட்டிருந்த[1026] குதிரைகள் கட்டியிருந்த லாயம் யிப்போ க கோத்தாகவும்,[1027] லாயத்து மத்தியஸ்தருக்குச் சாகை[1028] யாகவும், செய்திருப்பதினாலே அடியேனுடைய குதிரையைக்கட்ட லாயமில்லாமலிருக்கிறது. ஆகையால் அடியேன் குடியிருக்கிற பாதிரியார்க் கோவிலுக்கு அருகாமையாயிருக்கும் செட்டிக்கடைக்குப் பின்னாலே மறைவாயிருக்கப்பட்ட யிடத்தில் கீற்றினாலே ஒரு லாயம் நம்முடைய சொந்தச் சிலவினாலே கட்டிக்கொள்ள வேணுமென்றுயிருக்கிறேன், அடியேனும் சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களுக்கு அடுத்தவ[1029] னானபடியினாலேயும் அந்த இடத்தில் ஒருலாயம்கட்டிக் கொள்ளும்படியாய், சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களிடத்தில் சொல்லி உத்திரவு வாங்கிக் கொடுக்கும்படியாய் மிகவும் மன்றாடிக் கேட்டு கொள்ளுகிறேன்.

இப்பேர்ப்பட்ட காரியங்களினாலே அடிக்கடி தங்களுக்கு அடியேன் தொந்திரவு கொடுக்கிறது, அடியேனுக்குத் தானே மிகவும் வெட்கமாகயிருக்கிறது. ஆகிலும் சக[1030] ருடைய இடர்களைத் (பிடுக்குங்களைத்) தீர்த்து வைக்கும்படியாய் சத்திரபதி மகாராசா சாயேபினுடைய சன்னிதானத்திலே தாங்கள் பொறுப்பாயிருப்பதினாலே இது

---

1022 & 1023. சர்க்கீலும் விண்ணப்பம் செய்தவரும்

1024. குதிரையின் பெயர் "காட்டேவாட்" என்று ஆவணம் 55இல் உள்ளது

1025. மகாபிரயத்தினம் - பெருமுயற்சி

1026. நேமிக்கப்பட்டிருந்த - நியமனம் செய்திருந்த

1027. கோத்து - பட்டாளம் தங்குமிடம்

1028. சாகை - வசிக்குமிடம்

1029. அடுத்தவன் - உதவியாள்; அண்டியிருக்கிறவன்

1030. சகா - தோழன்

காரியங்களை அடியேன்[1031] தங்களுக்குகொடுக்கிற தொந்திரவை மன்னித்து அடியேனுடைய விண்ணப்பத்தை செய்து கொடுக்க மன்றாடுகிறேன்.

மே மீ ௪௨

இப்படிக்கு
தங்களுடைய தாழ்மையுள்ள
ஊழியக்காரனாகிய அடியேன்.

## ஆவணம் எண் 57

ம.அ.மு.ஸ்ரீ பாவாசி ராமாசி பண்டிதரவர்களுக்கு அடியேன் வில்லியம் ஒல்ஸ்வர்த்[1032] அனேக சலாம் செய்து எழுதிக்கொள்ளும் விண்ணப்ப மென்னவென்றால் மகாராஜா சத்திரபதி சாயேபு அவர்கள் முன்னாலே நமக்குக் கொடுத்திருந்த குதிரைக் காயலாவாகிப் போனதினாலே அடியேனுக்கு நேமிக்கப்பட்ட அலுவலைப் பார்க்கத் தடைப்பட்டிருக்கிறேனென்று விண்ணப்பஞ் செய்து கொண்டதுக்கு, அப்போது லாயத்து மத்தியஸ்தம் செய்து கொண்டு வந்த இராமசாமி அப்பா அவர்களுக்கு நமக்கு வேறு குதிரை கொடுக்கும்படியாய்ப் பிறவானிக்கை[1033] யாயிற்று. அப்போது குதிரைகள் காலியாயிராததினாலே நம்முடைய பழையகுதிரையைத்தானே சொஸ்தமாக்கி அனுப்பிவிக்கிறோ மென்று சொன்னார்கள். ஆனாலந்தக் குதிரை சொஸ்த்தப்படாமல் மரணமாகிப் போயிவிட்டது. இப்போது பெரிய லாயத்திலே காட்டேவாட் என்று சொல்லப்பட்டகுதிரை துருப்புக்கும்[1034] ஊளுவுக்கும்[1035] யோக்கிய[1036] மில்லாமல் சும்மாய் நிற்கிறபடியினாலே தாங்களடியேன் பேரிலே கிருபைவைத்து மகாராசா சத்திரபதி சாயேபு அவர்களுக்கு இது காரியங்களைத் தெரியக் கொடுத்து, அந்தக் குதிரையை எனக்கு நேமுகம்,[1037] செய்து வைத்தால் எனக்குக் கையாளிக்கப்பட்ட[1038] அலுவலை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொண்டு வருகிறேன். இது தங்கள் சித்தமறியலாவதா யெழுதிக் கொண்டேன்.

ருஅளஉயகூ[1039] ஞூ
மார்ச்சு மீ யி அ௨
சிவகங்கைக்கோட்டை

இப்படிக்குத் தங்களுடைய
தாழ்மையுள்ள ஊழியக்காரனாகிய,
*(sd.) W. Words worth.*

1031. அடியேன் என்றது இக்கடிதம் எழுதிய வில்லியம் வேர்ட்ஸ்வொர்த் என்பவரை

1032. ஒல்ஸ்வர்த் - Wordsworth

1033. பிறவானிக்கை - பரவானகி - அரசனிடும் ஆணை; இவ்வாணையில் அரசரது கையொப்பம் இராது (பக்கம் 365)

1034. துருப்புக்கும் - சேனையில் இருப்பதற்கும்

1035. ஊளுவுக்கும் - உழவுக்கும்; உடம்பால் உழைப்பதற்கும்

1036. யோக்கியம் - தகுதி

1037. நேமுகம் - நியமனம்

1038. கையாளிக்கப்பட்ட - கையளிக்கப்பட்ட - ஒப்படைத்த

1039. 1829 ஆம் வருஷம்

## ஆவணம் எண் 58

ம.அ.ம.பாவாசி ராமாசி பண்டிதர்[1040] அவர்களுக்கு அடியேன் வில்லியம் ஒல்ஸ்வர்த்[1041] மிகவும் வணக்கத்துடனே சலாம் செய்து எழுதிக் கொள்ளும் விண்ணப்பமென்னவென்றால்.

தாங்கள் அரண்மனைக் காரியங்களைப் பொறுத்துப் பார்க்க ஆரம்பித்தது முதல் தாங்கள் செய்திருக்கிற திட்டங்களாலும் ஒழுங்குகளாலும் மகாராசா சத்திரபதி[1042] சாயேபு அவர்கள் காரியங்கள் செம்மையாய் நடந்து வருகிறதுமல்லாமல் அவரையும் தங்களையும் அன்றி யிருக்கப்பட்ட சனங்கள் சவுக்கியத்தையும் சந்தோஷத்தையும் அனுபவித்துக் கொண்டு வருகிறார்கள். ஆனால் அடியேன் சத்திரபதி மகாராசா சாயேபு அவர்களையும் தங்களையும் அன்றியிருந்த போதிலும் அடியேனுக்கு நேமிக்கப்பட்ட அலுவல் சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களுடையவும், தங்களுடையவும், கிறுபையுள்ள திஸ்ட்டிக்கு[1043] நேர்ப்படாததாயிருக்கிற படியினாலே தாங்கள் ஏழைகளுடைய சௌக்கியத்திற்காகச் செய்திருக்கிற திட்டங்களினுடையவும் ஒழுங்கினுடையவும் பலன் அடியேனுக்குப பலிதமில்லாமல்[1044] இந்த எட்டுமாதமாய் இரண்டு மாசத்தைச் சம்பளம் நிலுவையாய் விழுந்து கொண்டு வருகிறதுமல்லாமல் நவவித்தையா கலாநிதி சாலை[1045] யைச் சேர்ந்திருக்கப்பட்ட அல்ப[1046] சேவகனுக்கு முதலாய் சம்பளம் கொடுக்கப்படுகிறது. மத்தியஸ்தர் அவர்களைக் கேட்டால் உத்திரவு செய்து போட்டேன் வாங்கிக் கொள்ளுமென்கிறார். ஆனால் அடியேனுடைய கையிலே வந்து சேருகிறது வருத்தத்தி லிருக்கிறது.[1047] ஆகையாலே தாங்கள் ஏழைகளுடைய சவுக்கியத்துக்காக செய்திருக்கிற திட்டங்களினுடைவும், ஒழுங்கினுடையவும், பலனை சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களையும் தங்களையும் அடுத்திருக்கிற[1048] அடியேனும் அனுபவிக்கும்படியாய் மாதாமாதம் யெல்லாரோட எனக்கும் சம்பளம் கிடைக்கும்படியாகவும் நடக்கிற மாதத்தை யல்லாமல் நிலுவை யாயிருக்கப்பட்ட யிரண்டு மாச சம்பளத்தை என் கைக்குக் கொடுக்கும்படியாகவும், உத்திரவு கட்டளையிட மிகவும் மன்றாடிக் கொள்ளுகிறேன். யிது காரியத்தைப்பற்றி அடியேன் தங்களுக்கு அலட்டைக்[1049] கொடுக்க மனம் வெட்கப்பட்ட

---

1040. பாவாசி ராமாசி பண்டிதர் (பக்கம் 86) சர்க்கீல்

1041. ஒல்ஸ்வர்த் - Wordsworth

1042. சத்திரபதி என்றது இரண்டாம் சரபோஜியை

1043. திஸ்ட்டி - திருஷ்டி - பார்வை

1044. பலிதமில்லாமல் - பயன்படாமல்

1045. நவவித்தையாகலாநிதிசாலா (பக்கம் 240) தஞ்சைக் கோட்டைக்குள் இருந்த கல்வி நிலையம்.

1046. அல்ப - அற்பமான - சாதாரண

1047. வருத்தத்தில் இரக்கிறது - இல்லை

1048. அடுத்திருக்கிற - அண்டியிருக்கிற

1049. அலட்டு - தொல்லை

போதிலும் தங்களையல்லாம் வேறொருவராலும் அடியேனுடைய யிந்த இக்கட்டைத்[1050] திர்க்கக் கூடாதா யிருக்கிற படியினாலே தங்களுக்கு இதைப்பற்றி, அடியேன் கொடுக்கிற அலட்டை தயவாய் மன்னித்து ஆதரிக்கும்படியாய் மிகவும் தாழ்மையாய் வேண்டிக் கொள்ளுகிற தங்களுடைய தாழ்மையுள்ள

ஊழியக்காரனாகிய அடியேன்,
(Sd.) W. Wordsworth.

ரு அ ள உ ய சுஸு[1051]
செப்டம்பர் மீ 27 உ

## ஆவணம் எண் 59

ம.அ. முசுமதார்[1052] பாவாசி ராமாசி பண்டிதர் அவர்களுக்கு அடியேன வில்லியம் வேர்ஸ்வர்த்[1053] அனேக சலாம் செய்து எழுதிக்கொள்ளும் விண்ணப்பமென்னவென்றால்:- தாங்களடியேன் பேரில் கிறுபை வைத்து, சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களிடத்தில் சொல்லி வாங்கிக் கொடுத்த குதிரை காலிலே ஊனமாயிருக்கிற படியினாலே, அதுக்கு பரியாரம் செய்து, சொஸ்த்தப்படுத்திக் கொடுக்கும்படியாய் லாயத்து மத்தியஸ்தருக்கு உத்திரவாக வேணுமென்றும், சிறிது நாளைக்குமுன்னே தங்களுக்கு ஒரு விண்ணப்பம் எழுதிக் கொண்டேன். ஆனால் லாயத்திலே அதுக்கு பரியாரம் செய்கிறது மிகுந்த பிரயாசையான காரியமாயிருக்கிற படியினாலே அடியேன். தானே யாதொரு சாஸ்த்திரியைக்[1054] கொண்டு சொஸ்த்தப்படுத்திக் கொள்ளலாமென்கிறதாய் யோசித்துக்கொண்டு அப்படி செய்கிறதுக்குக் குதிரை நம்முடைய பார்வைக்கு முன்னே யிருக்க வேண்டியதானபடியினாலே நம்முடைய ஜாகைக்கு அடுத்தாற்போலே யிருக்கப்பட்ட அரண்மனை நிலத்திலே கூரையினாலே அடியேனுடைய சொந்தச் சிலவிலே தானே ஒரு லாயம் கட்ட வேணுமென்கிறதாய் ஏற்பட்ட விடத்திலே பாதச்சார் மத்தியஸ்த்தர்[1055] சிர்கேராவ் அவர்களை அரண்மனையார் உத்திரவில்லாமல் கட்டப்போகாதென்று தடைசெய்து போட்டார்கள். அதைப் பற்றியும் முன்னாலே தங்களுக்கு அடியேன் ஒரு விண்ணப்பம் செய்து கொண்டேன். இப்பவும் அடியேன் சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்களுடைய மனுஷனாயிருக்கிறபடியினாலேயும் குதிரையும் அவர்களுடையதாயிருக்கிறப்படியினாலேயும் அடியேன் கோரின இடத்திலே ஒரு லாயம் கூரையினாலே கட்டிக்கொள்ளும்படியாய் அடியேன் பேரிலே கிறுபை வைத்து உத்திரவு வாங்கிக் கொடுக்கும்படியாய் தாழ்மையாய்த் தங்களை மன்றாடிக் கொள்ளகிறேன். அடிக்கடி யிப்பேர்ப்பட்ட காரியங்களினாலே தங்களுக்கு வருத்தத்தை உண்டாக்கிறது. அடியேனுக்குத் தானே மிகவும் வெட்கமான காரியமாயிருக்கிறது. ஆகிலும் யெல்லா

---

1050. இக்கட்டு - நெருக்கடி; தொல்லை

1051. 1829 ஆம் வருஷம்

1052. மசும்தார் - நிலவரிக்கணக்கு எழுதும் பெரிய அலுவலர்

1053. வேர்ஸ்வர்த் - Wordsworth

1054. சாஸ்த்திரி - மருத்துவர்

1055. பாதச்சார் மத்தியஸ்தர் - காலாட் படை மேற்பார்வை அலுவலர்

ஏழைகளுடைய அரைகுறைகளைத்[1056] தீர்க்கும்படியாய்ச் சத்திரபதி மகாராஜா சாயேபு அவர்கள் சன்னிதானத்திலே தாங்களிருக்கிறபடியினாலே அடியேனுடைய அரைகுறைகளைத் தீர்க்கும்படியாய்த் தங்களை விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டியதாயிருக்கிறது. ஆகையாலே தங்களுக்கு அடியேன் கொடுக்கிற தொந்திரவுகளைத் தயவாக மன்னித்து அடியேனுடைய கோரிக்கையை நிறைவேற்றிக் கொடுத்துக் காப்பாற்ற வேண்டியது.

சூ அ ள உ ம கூ ஷு
ஜூன் மீ ௨௨

இப்படிக்குத்-தங்களுடைய
தாழ்மையுள்ள ஊழியக்காரனாகிய

(Sd.) W. Wordsworth.

## ஆவணம் எண் : 60

ரு அ ள ம அ ஷு ஜூலைமீ உ ம ௨[1057] உ ......... திய பாதசார[1058] நாமாஜிகாடிகே தறிஜீ[1059] சொந்தக்காரியமாக சென்னப்பட்டணம் போய் வருகிறதற்கு றகதாறி[1060] க ஷெ ஜெனநிஷபத்தி[1061] ........ வசத்தில் நாளது மீ உ ம அ ௨ கொடுத்திருக்கிறது.

சூ அ ள ம அ ஷு சூலை மீ ங ம௨[1062] ஜினிகர[1063] ரெவாஜி (தேவாஜி) காட்வே அவருடைய பிள்ளை கல்யாணத்திற்குப் புனாவிற்குப் போய் வருகிறதுக்கு றகதாறி[1064] - சூ-சங்கிறம் பண்டாரம்[1065] ரெகுனாத பண்டிதர்
வசம் கொடுத்தது ஷெ மீ ரு அ ள ம அ ஷு ஆகஸ்ட் மீ ம அ ௨[1066] சாரங்கபாணி அய்யங்கார் திருப்பதி யாத்திரை போய் வருகிறத்துக்காக றகதாறிகூ தவுலத்து பாவுலோக[1067] சபனிஷ்[1068] லெக்ஷ்மண பண்டிதர் வசம் கொடுத்தது ம. அநுமா செட்டி, திருப்பதி யாத்திரை போய் வருகிறத்துக்காக றகதாரி-கூ, மேலெழுதிய பண்டிதர் வசமிருந்து ம அ ஆகஸ்டு மீ உ ம உ ௨

---

1056. அரைகுறைகள்-முற்றுப்பெறாத காரியங்களை

1057. 20-7-1818

1058. பாதசார - காலாட் படையைச் சேர்ந்த

1059. தறிஜி - தர்சி - பட்டாளத்துத் பதவிகளில் ஒன்று; ஆறு சிப்பாய்களுக்குத் தலைவர் தர்சி எனப்பட்டார் (பக்கம் 342)

1060. றகதாறி - ரகதாரி - அரசாங்க முத்திரையுள்ள வழிநடைச்சீட்டு (பக். 342-3) (passport)

1061. ஜெனநிஷபத்தி - பொதுமக்களுக்கு உதவி செய்பவர்

1062. 30-7-1818

1063. ஜினிகர- ஜினாகரம் - சைனக்கோயில்; அரண்மனை

1064. றகதாறி சூ- ரகதாரி ஆறு

1065. சங்கிராம பண்டாரம் - ஆயுதசாலை (ஜிராத்கானா) (சங்கிராமம் - போர்)பக்கம் 452)

1066. 18-8-1818

1067. தவுலத் - ஆட்சி; பாவுலோக - ?

1068. சபனிஷ் - சப்நவிஸ் - எழுத்தர் (இராயசம்)

நரசிங்கவானனாறாயண சிங்கு சவான றசபுத்திர திருப்பதி யாத்திரை போய் வருகிறது நிமித்தயமாக றகதாறி-க.

கிருஷ்ணாசெட்டி, ஸ்ரீரங்கப்பட்டணம் போய் வருகிற நிமித்தியமாய் றகதாறி-க. பாவுலோக சபனிஸ்[1069] கோகிமோறே அவர் வசத்தில் கொடுத்திருக்கிறது. ஆகஸ்டு மீ உ ய உ வ

சூ அ ள ய சு ஷூ அக்டோபர் மீ .........வ கண்டறாவு சுப்பறாவு சித்தூருக்குப் போய் அரண்மனைக்குக் குதிரை வாங்கிக்கொண்டு வருகிறத்துக்காக றகதாறி..........................

ஷெ மீ ய உ வ .......... ஷெயாருக்கு ஷெயான் திரும்பவும் கொண்டு வந்து கொடுத்தது. சூ அ ள ய அ ஷூ ..............மீ கவ மேஸ்த்தர் பிளாக்பர்க்[1070] சாயேபு அவர்கள் விட்டு அனுப்பினது மீ உ வ.

கான் அகமதுகான்பார் நாகூருக்குப் போய், அப்படித்தானே சென்னப்பட்டணஞ் சேர்ந்த உதரகேண்மைக்கிப் போய்வருகிற நிமித்தியத்துக்காக றகதாறி-க. ஷெ மீ கவ லஷகிறி[1071] பதக்கம்[1072] ஸபநிஷ்[1073] நிஷபத்திரங்[1074] கண்ணாவசம் கொடுத்தது.

அல்லிபெகு ஆற்காட்டுக்குப் போய் குருவி கொண்டு வருகிறதுக்காக றகதாறி-க

சூ அ ள ய அ ஷூ ஜனவரி மீ திரும்பவும் வந்தது. ஏபரல் மீ எவ க உ பிராது பறன்சாயேபு அவர்கள் வீட்டுக்கனுப்பிவிடப்பட்டது.

சூ அ ள ய அ ஷூ ஏப்ரல் மீ அ உ சயது அகம்முது சகாபு தர்ஜாதறகு பீர்ஜா ஷெ மீ ய உ வ ..............றோசு னாகும்மண்ணா வசம் கொடுத்தது.

சூ அ ள ய அஷூ சூன் மீய அ உ பாதசார் ஸயி[1075] யிஸ்மாயில் அலம் வேலூருக்குச் சொந்தகாரியமாகப் போகிறதுக்காக றகதாரி க. ஷெ சபனிஸ்[1076] கோவிந்த ரகுனாத பண்டிதர் வகையறா கொடுத்தது சூன் மீ உ ய க வ

சூ அ ள ய அ ஷூ ஜூலை மீ ய க உ கலியாணமகால்[1077] தட்டி கிதாறி கானோஜி பாலேகர் வகையறா அசாமி ரூ, இவர்கள் புனா பிராந்தியம் பண்டரிபுரத்துக்குச் சமீபம் தாந்துளவாடி கிராமத்துக்குப் போயி கல்யாணஞ் செய்து கொண்டு திரும்பவும் வருகிறத்துக்காக, கவர்மெண்ட் றகதாறி-க ஷெ யானுக்குக் கொடுத்தது. ஜூலை மீ ய ரூ உ கானோஜி பாலேகர் நிஷபத்தி மானகோஜி மோறே வசத்தில் கொடுத்திருக்கிறது.

---

1069. சபனிஸ் - சப்நவிஸ் - எழுத்தர்

1070. பிளாக்பர்க் - ரெஸிடெண்ட் (பக். 66)

1071. லஷகிறி - லஷ்கர்

1072. பதக்கம் - சில ஊர்களின் ஒன்றியம் (பக்கம் 72)

1073. ஸபநிஸ் - சப்நவிஸ் - எழுத்தர்

1074. நிஷபத்திரம் - நிஷபத்தி - உதவி செய்பவர்

1075. பாதசார் ஸயிறிக் - காலாட்படைத் தலைவன் (?)

1076. சபனிஸ் - எழுத்தர்

1077. கல்யாணமகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்குமிடம்

## ஆவணம் எண் 61

ரூ அ ள சூ ம் (1860) ஸு பிப்ரவரி மீ ககஅரண்மனைச் சிலவுக்காக யெஷ்டிமேட் ஜாப்தா[1078] மாது ஸ்ரீ ஆவுசாயேபு பாயிசாயேபு[1079] கோவில் வாரி

| | = | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|
| வகையறா மோகினி | | 1855- | 1 | -0 |
| சம்பளக்காரர்களுக்கு | | 2121· | 13· | -4 |
| ஆஸ்பிடால்[1080] சிலவுக்காக | | 220· | -0· | -0 |
| மகால் ஜீறாக்கானா[1081] | | 100· | -0· | -0 |
| மாகால் லாயம்[1082] | | 140· | -0· | -0 |
| மகால் சர்பத்கானா[1083] | | 100· | -0· | -0 |
| தட்டிமகால்[1084] | | 327· | -8· | -0 |
| போதிலவார்ச் சிலவு[1085] | | 42· | -0 | -0 |

ஸ்ரீமது[1086] சகலகுண சம்பன்ன[1087] அகண்டித[1088] லக்ஷுமி அலங்கிருத[1089] றாஜ மான்னிய[1090] ஸ்ரீகும்பனியாருடைய பேரால் செய்யப்பட்ட கிறயங்களை[1091] வரவழைத்து அனுப்ப வேணும் யென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

---

1078. யெஷ்டிமேட் - Estimate - மதிப்பீடு; ஜாப்தா - பட்டியல்

1079. ஆவுசாயேபு என்றது அஹில்யாபாயியை; பாயிசாயேபு என்றது காமாட்சியம்பா பாயியை.

1080. ஆஸ்பிடால் - Hospital - மருத்துவமனை

1081. ஜிராத் கானா- ஆயுதசாலை (பக்கம் 455)

1082. மாகால் லாயம் - பாகா (Paga) மஹால் - குதிரைலாயம்

1083. சர்பத்கானா - குளிர்பானம் தயார் செய்யுமிடம் (பக்.452)

1084. தட்டிமகால் - மாட்டுப்பண்ணை (பக்.457)

1085. போதிலவார் - சாதல்வார் - சில்லறைச் செலவு

1086. ஸ்ரீமது - ஸ்ரீமத் - ஆடவர் பெயர் முன் வழங்கும் மரியாதைச் சொல்

1087. சகலகுண சம்பன்னர் - எல்லா நற்பண்புகளும் நிறைந்தவர்

1088. அகண்டித - இடைவிடாது

1089. லக்ஷ்மி அலங்கிருத - திருமகளால் அலங்கரிக்கப்பட்ட

1090. ராஜமான்ய - அரசனால் மதிக்கத்தக்க

1091. கிரயங்கள் - விற்பனை

கும்பகோணம் ஜில்லா கோர்ட்டு[1092] நியாயாதிபதியவர்கள் சம்க்ஷேபத்துக்கு[1093] கோட்டைக்குள் றாணிவாய்க்கால் சந்திலிருக்கும் குருசாமி பிள்ளை யங்கு றென்னாள்[1094] யென்பேரில் கிருபை செய்து றெக்ஷிக்க[1095] வேணுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கிருஷ்ணாஜி அப்பாஜி (ஒம்)

என் பேரில் கிருபை செய்து ரெக்ஷிக்க வேணுமென்று கேட்டுக் கொள்கிறேன். 1860 ஷ

## ஆவணம் எண் 62

உ

சிவமயம்[1096]

தஞ்சாவூர் உள்ளூர் ஆயத்துரை[1097] கணக்கில் கூவிபோகிக்க[1098] அதிகப்பத்து[1099] ரூ ள[1100] சொச்சம் பொன் ஆகியிருக்கிறதுக்கு ஆக யெனம் சொல்லுகிறதுக்கு நிம்மதி[1101] காரியத்தில் தன்னுடைய தலையிடுதல் யில்லை யென்றும், தன் பேறழுத்துகள் எழுதுகிறது[1102] மாத்திரம் தான் அறிவோமென்றும் மத்தியஸ்த்தானே ஸ்ரீ. சறிக்கிலவர்கள்[1103] காரியமும் பாத்துக்கொண்டு வந்தவர் யிப்படி சொல்லும்போது, அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொண்டு, வந்தனான் யென்ன சொல்லப் போகிறேன்.

---

1092. ஜில்லா கோர்ட்டு - மாவட்ட நீதிமன்றம்

1093. சம்க்ஷேபம் - முன்னிலை

1094. யங்குறென்னாள் - என்கிற நான்

1095. றெக்ஷிக்க - காப்பாற்ற

1096. சிவமயம் - கடிதம் முதலியவற்றின் தொடக்கத்தில் சைவ சமயிகளால் வழங்கப்பெறும் மங்கல மொழி

1097. ஆயத்துறை - சுங்கச்சாவடி

1098. போகிக்க - போகிக்கு; போகி - போகிச்சிவிகை சுமப்போன்

1099. அதிகப்பத்து - அதிகமாகப் பெற்றுக் கொண்டது.

1100. 1100/-

1101. நிம்மதி - நிம்மதி - ஓர் அலுவலர்

1102. பேறெழுத்துக்கள் எழுதிறது - கையொப்பம் இடுவது

1103. சறிக்கில் - சர்க்கேல்

ஆனாலும் நான் அவாளிடத்தில் செய்த ஊழியம் நிவவு பண்ணிக்கொடுக்கிற அவசரத்தில் அவர்கள் தானே எனக்குள்ள இனத்தினாலே னான்நின் செய்கிறதுக்கு பதிலாக சில (செல்) காரியங்கள் தெரியப்படுத்துகிறதில் அவாள் தயவுசெய்து, பார்க்கும்படியாய் னான் ஒவ்வொரு காரியமும் அவாளுக்குக் கையிலிருக்கிற தஸ்தா வேஜீகளில்[1104] யிப்போயிதில்[1105] அடக்கம் செய்திருக்கிறத்துக்கு விபரம்.

முதலாவது ஆயத்துரைக்கு[1106] முகாதலை[1107] கொடுத்திருக்கிற பணத்துக்கு விபரம்தெரியாமல் ஆதாயம் சிலவு[1108] தெரிய வேணுமென்கிறத்துக்கு மத்தியஸ்தரிடத்தில் னான் கொடுத்த யாதிக்கி[1109] நகல் முதலாவது விஷ[1110] வரு (ஷத்தில் கொடுத்த) யாதி க. சித்திரபானு[1111] ஷுத்தில் கொடுத்த ரெண்டு யாதி (உ) சுபானு[1112] ஷுத்தில் யாதி-க- ஆக யாதி - ச-

இந்த னாலு யாதிக்கும் சால்சாப்[1113] ஆகாமவிருக்கிறது என்கிறதும் சால்சாப் ஆகாததினாலே அதுக்குமேல் நடக்க வேண்டிய காரியம் ஆகாததினாலே காரியங்கள் தவக்கப்[1114] பட்டிருக்கிறதென்றும், மத்தியஸ்த்தானே அறிந்து கொள்ளலாம்.

இதுவுமல்லாமல் இப்போ சர்க்கிள்வாள்[1115] கேள்வி கேட்கிறபடிக்கி அந்த அதிகப்பத்து-ரூ சு ள சொச்சம் பொன்னில் எனக்கந்த அதிகாரமாகிற முன்னுக்குக் கிட்டக்கிட்ட ரூ எ ள பணம்[1116] வரைக்கும் போயிகளுக்கு அதிகப்பத்தா யிருந்து, அது அடிக்கடி ஆயத்துரையாருக்குத் தொந்திரவு செய்தேன். மத்தியஸ்த்தரிடத்திலேயும் வெகு தடவை சொல்லியிருக்கிறேன். அதனாலே மத்தியஸ்த்தாரவர்களும் ஆயத்துரை அண்ணாஜி

---

1104. தஸ்தாவேஜிகள் - ஆவணங்கள்

1105. யிப்போயிதில்-இப்பொழுது இதில்

1106. ஆயத்துறை - சுங்கச்சாவடி

1107. முகதலை - கைம்மாற்றுக்கடன்

1108. ஆதாயம் செலவு - வரவு செலவு

1109. யாதிக்கு - குறிப்புக்கு

1110. விஷு - ஆண்டறுபதுள் 15 ஆவது

1111. சித்திரபானு - ஆண்டறுபதனுள் 16 ஆவது

1112. சுபானு - ஆண்டறுபதனுள் 17 ஆவது

1113. சால்சாப் - பதில் கொடுத்தல்

1114. தவக்கம் - காலதாமதம்

1115. சர்க்கிள்வாள் - சர்க்கேல் அவர்கள்

1116. எழுநூறு பணம்

பண்டிதரும் மகமை கமாவிசுதாரும்,[1117] என்னிடத்தில் யாதொரு கணிசமு[1118] மில்லாமல் காண்பித்தார்கள், என்கிறதுக்கு மத்தியஸ்த்தர் கச்சேரியிலிருந்த மகமை கசானா எனக்குத் தெரியாமல்(த்)தானே அலாயிதாமாவில்[1119] வந்திருக்கிறது தானே பெரிய முகாந்திரமாய்[1120] யோசித்துப் பார்க்கலாம், னான் ஒவ்வொரு காரியமும் மத்தியஸ்தருக்குத் தெரியப்படுத்தாமல் நடந்த கொண்டதில்லை என்கிறத்துக்கும் மேலாகக் காண்பித்திருக்கிற னாலுயாதி தானே னான் தஞ்சாவூரில் முகதாவில்[1121] கொடுத்ததுமல்லாமல்,[1122] சவாரியிலும்[1122] அவாள் பேருக்குக் காகிதம் எழுதி எத்தனைத் துதியோ[1123] தெரியப்படுத்தியிருக்கிறேன் என்கிறதுக்கு ருசு வாத்தியாம்[1124] னான் எழுதியிருக்கிற காகிதத்தின் எதிர்நடை[1125] காகிதம் யேடு க-யிதில் வைத்திருக்கிறது.

ரெண்டாவது போயிகளுக்கு மத்திஸ்தானே பணம் கொடுக்கச் சொல்லி அப்போதைக்கப்போ பறமாணிக்கை[1126] சொல்லியிருக்கிறதும் போகயிலைப்பேட்டை, நிலுவைத்[1127] தண்டலுக்கு[1128] னான் கண்டிப்புச் செய்ததுக்கு வேண்டாமென்று மத்தியஸ்த பறகாணிக்கை சொல்லி நிறுத்தி யிருக்கிறத்துக்கும் வந்திருக்கிற பறமாணிக்கையில் ஞாபகப்படுத்துகிறதுக்கு ஆக ஆறுயேடு யிதிலடக்கம் செய்திருக்கிறேன்.

இதுகளெல்லா மத்தியஸ்தாரவர்கள் தயவுசெய்து நன்றாய்க்கவனித்து அடிக்கடி ஒவ்வொரு காரியங்களில் அனேக தரம் அறியப்படுத்தி யிருக்கிற யிந்த ஏழையாகிய ஊழியக்காரன் பேரில் இரக்கம் வைத்து, நான் செய்திருக்கிற சேவகம் அரண்மனையாருக்கு விசிதமா[1129] யறியப் படுத்தி, அரண்மனையார் மத்தியஸ்த்தருக்குக் கேட்கிற கேள்விக்கு

1117. கமாவிசுதார் - பல ஊர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்.77)

1118. கணிசம் - மதிப்பு

1119. அலாயிதாமால் - தனிமகால்

1120. முகாந்திரம் - காரணம்

1121. முகதாவில் - முன்னிலையில்

1122. சவாரியில் - சுற்றுப்பயணத்தில்

1123. துதி - தடவை (?)

1124. ருசுவாத்தியாய் - ருசுச் செய்ய; மெய்ப்பிக்க

1125. எதிரநடைகாகிதம் - மூலப்பிரதி

1126. பறமாணிக்கை - பிரமாணிக்கம் - ஆணை

1127. நிலுவை - பாக்கி

1128. தண்டல் - வசூல்

1129.. விசிதமாய் - விவரமாய்

மத்தியஸ்த்தருக்குத் தோனுகிறஉத்தரம் சொல்லி முழுதிலும் சேவகம் செய்திருக்கிற என்னைக் காண்பிவித்துக் கொடாமல் மேலெழுதிய ஞாபகங்[1130] களினாலும் இத்துடன் வைத்திருக்கிற ஏட்டினாலும் ஞாபகஞ் செய்து கொண்டு, என்னை ரெட்சிக்க வேணுமென்று, என்னுடைய மத்தியஸ்த்தராகிய காளறப்பா அவர்களுக்கு ஸ்ரீசர்க்கில்[1131] சாயபு அவர்களுக்கும் மிகுந்த வணக்கத்துடனே ஷெ மத்தியஸ்த்தர் வில்லையிதாராகிய[1132] அய்யாத்துரை யிந்த அர்ஜி[1133] செய்தேன்.

என்னிடத்தில் தாங்கள் கொடுத்த பத்திரத்தினடியில் சுருக்கமாய் உத்திர[1134] மெழுத நான்பட்ட சிரமத்தினால் யென்மனசு சம்மதிக்காமல் விஸ்த்தாரமாய்[1135] எழுதுகிறதுக்கு அந்தப் பத்திரத்தில் இடமில்லாததினாலே வேறே கடுதாசியில் உத்திரம் எழுதினதை க்ஷமை பண்ணவும்[1136] வாசக தோஷம்[1137] எழுத்துப்பிழைகளை க்ஷமை பண்ண வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

தாறண[1138] ஞு வில்லை[1139] அய்யாதுரை

தை மீ யெ அய்யன் (ஒ......ம்)

## ஆவணம் எண் 63

1860 ஞு ஜனவரி மீ த்து அரண்மனை சிலவுக்காக உத்தேச ஜாப்தா ஸ்ரீ ஆவுசாயேபு[1140] ம. காமாக்ஷியம்பாபாயி[1141] சாயேபு ம. 4 பாயிசாயேபு 2 பாயிசாயேபு வஜனாத்தமாப்பு[1142] அபினியாஜி கணபத்த றாவு சுர்வேயின் சமுசாரம்.

---

1130. ஞாபகம் - குறிப்பு
1131. சர்க்கில் (பெயர் ?)
1132. வில்லையிதார் - வில்லைத்தகடு தரித்த சேவகன்
1133. அர்ஜி - விண்ணப்பம்
1134. உத்திரம் - பதில்
1135. விஸ்த்தாரமாய் - விரிவாக
1136. க்ஷமைபண்ணவும் - மன்னிக்கவும்
1137. வாசகதோஷம் - சொற்பிழை
1138. தாரண - தாருண - ஆண்டு அறுபதில் பதினெட்டாவது
1139. வில்லை - வில்லை (தரித்த சேவகன்)
1140. ஆவுசாயு - அவதில்பாபாயி (இரண்டாம் சரபோஜியின் மனைவி)
1141. காமாட்சி அம்பாபாயி - இரண்டாம் சிவாஜியின் மனைவி
1142. வஜாத் மாப்பு - அரசகுடும்பத்தைச் சேர்ந்த பெருமகன்

| | ரூ. அ. பை |
|---|---|
| மிஷயன்[1143] பள்ளிக்கூடம் இதுகளின் மோகினி[1144] | 1757 -0 -0 |
| கோவில்வாரி வகையறா மோகினி | 98- -1 -0 |
| சம்பளக்காரர்களுக்கு | 2650- -9 -4 |
| ஆஸ்பிட்டியால்ச்[1145] சிலவு | 220- -0 -0 |
| மாகல் முதுபோக்கு[1146] கொட்டியம்[1147] | 2558- -4 -0 |
| மாகால் சர்பத்து கானா[1148] | 400- -0 -0 |
| தட்டி மாகால்[1149] | 445 -9 -0 |
| மாகல் லாயம்[1150] | 244-5-4 |
| மாகல் ஜாமதார்க்கானா[1151] | 500-0-0 |
| பொதிவார்ச் சிலவு[1152] | 42-0-0 |

ஸ்ரீ மகாறாஜா[1153] சாயேபு அவர்கள் ஸமுசாரத்தைச்[1154] சேர்ந்த சிரஞ்சீவி[1155] விஜயமோகன முக்தம்பாபாயி அமணி றாஜே[1156] சாயேபு அவர்களுக்குப் பிப்ரவரி மீ 1ந்தேதி முதல் பென்ஷன்[1157] மகறோறானத்து (?) வகையறா ஜனவரி மீ 31 உ வரையில் மோகினி ரூ

---

1143. மிஷயன் - Mission - கிறிஸ்துவ சபை

1144. மோகினி - உதவித்தொகை

1145. ஆஸ்பிட்டியால் - Hospital - மருத்துவமனை

1146. மாகல் முதுபோக்கு - முபதக் மகால் - சமையல் கூடம் (பக்.453)

1147. கொட்டியம் - சரக்கறை

1148. சர்பத்கானா - குளிர்பானம் தயார் செய்யுமிடம் (பக்.452)

1149. தட்டி மகால் - மாட்டுக் கொட்டில் (பக்.457)

1150. மகால் லாயம் - பாகா (Paga) மகால் பக். (453)

1151. ஜாமதார்கானா - அரசகுடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் இருக்கும் இடம் (பக்.453)

1152. பொதிவார்ச்சிலவு - சாதல்வார் - சில்லறைச் செலவு

1153. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியின் மாப்பிள்ளையான சக்காராம்

1154. ஸமுசாரம் - மனைவி, குடும்பம் என்று பொருள் கூறின் மேல் மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

1155. சிரஞ்சீவி - வாழ்த்து அடைமொழி; ஆண் பாலர்க்கு வழங்குவது; இங்குப் பெண்பாலுக்கு உள்ளது

1156. இவர் இரண்டாம் சிவாஜியின் பெண்மக்கள் இருவருள் இளையவர்

1157. பென்ஷன் - அரசாட்சியை ஆங்கிலேயர் எற்றுக்கொண்டதும், அரச குடும்பத்தாருக்கு ஊதியம் அளித்து வந்தனர். அவ்வூதியம் பென்ஷன் என்று குறிக்கப்பட்டது.

| | |
|---|---|
| கொடுக்க வேண்டியதற்காக- | 3440-0-0 |
| சுலக்ஷணாபாயி[1158] அமணி ராஜே சாயேபு | |
| அவர்களுடைய ஸஷ்டிப்பூர்த்தி சாந்திக்[1159] காகச் | |
| சிலவு | 200-2-3 |
| ஷெயார் இறந்து போனதுக்காக உத்திரக்கிரியைச்[1160] சிலவு | 1000-0-0 |
| ரெசிடெண்ட்[1161] பங்களா ரிப்பேர் வேலைக்காக ரூ. | 2087-4-9 |
| ஆக | 15643-3-8 |

1860 ௵

ஜனவரி ௴ 26௳

## ஆவணம் எண் 64

யாதாஸ்த்து[1162] 1859௵ ஜூலை ௴ ௯ ௳

அரண்மனை சிலவுக்காக உத்தேச ஜாப்தா

| | |
|---|---|
| மாதுஸ்ரீ ஆவுசாயேபு[1163] பாயிசாயேப் வகையறா மோகினி[1164] | 7796-9-0 |
| தவுலத்தல[1165] ஷெ வஜாரத்மாப்பு[1166] வகையறா | 3355-0-0 |
| சம்பளக்காரர்களுக்கு | 2870-0-0 |
| ஆஸ்பிட்டியால்[1167] சிலவுக்காக | 220-0-0 |

1158. சுலக்ஷணாபாயி - இரண்டாம் சரபோஜிக்கு அகல்யாபாயிடம் பிறந்த முதல் மகள் (போ.வ.ச.பக்.135)

1159. சஷ்டிபூர்த்திசாந்தி - அறுபதாவது வயது நிரம்பிய நாளில் செய்யும் சடங்கு

1160. உத்திரகிரியை - இறந்துபட்டவர் பொருட்டுச் செய்யும் சடங்குகள்

1161. ரெசிடெண்டு - பிலிப்ஸ் என்பவர் ஆகலாம்; இவர் ரெஸிடெண்டு கமிஷனர் ஆவர். இவர் 28-7-1860 இல் இப்பதவியை விட்டு விலகினார் (பக்கம் 69)

1162. யாதாஸ்து - விண்ணப்பம்

1163. ஆவுசாயேபு என்றது அஹல்யாபாயியை; பாயிசாயேபு என்றது காமாட்சியம்பா பாயியை.

1164. மோகினி - அரசாங்க உதவித்தொகை

1165. தவுலத் - அரசு

1166. வஜாரத்மாப்பு - அரசகுடும்பத்தைச் சேர்ந்த பெருமக்கள்

1167. ஆஸ்பிட்டியால் - Hospital - மருத்துவமனை

| | |
|---|---|
| மால் ஜிராத் கானா (ஆயுதசாலை) | 300-0-0 |
| மால்முது போக்கு[1168] கொட்டியம் (சமையல் அறை) | 7000-0-0 |
| உபிலி மால் (வண்டி வைக்குமிடம்) | 385-8-5 |
| மால் லாயம்[1169] | 224-5-4 |
| தட்டி மால்[1170] | 445-11-0 |
| மால் இமார்த்தி (மராமத்து) | 300-0-0 |
| மால் சர்பத்கானா[1171] (குளிர்ந்த சாமான்கள்) | 100-0-0 |
| சாதில்வார் சிலவுக்கு (சில்லறைச் சிலவுகள்) | 94-0-0 |
| றாஜமால் (நகை செய்யுமிடம்) | 50-0-0 |
| மால் ஜகேறா (குதிர்) | 18500-0-0 |
| தான தர்மம்-சில்லறை சிலவுக்கு | 200-0-0 |
| அல்லா பண்டி சிலவுக்காக | 1000-0-0 |
| மாதுஸ்ரீ காமாக்ஷி யம்பாபாயி சாயேபு அவர்களுக்கு பித்தளை சொப்பு கொடம் 8 கரிதி[1172] செய்து கொடுக்க வேண்டியதுக்கு | 64-0-0 |
| | 42925-9-9 |

1859 ஞு
சூலை மீ 9 உ

## ஆவணம் எண் 65

தஞ்சாவூர் கவுர்ண்மெண்ட் ஏஜண்டு[1173] டபிள்யூ எம். கேடல் இசுகுவயரவர்கள்[1174] சமுகத்துக்கு.

வஜராத்துமால்[1175] நாறாயண றாவும், மகிபதிறாவு சுருவே எழுதிக்கொண்ட பெட்டிஷன்[1176] என்னவென்றால்.

---

1168 முதுபோக்கு - முபதக்மகால் - சமையல் கூடம் (பக்.453)

1169 மால் லாயம் - பாகா (Paga) மகால் (பக்.453)

1170. தட்டி மகால் - மாட்டுக் கொட்டில் (பக்.457)

1171. குளிர்பானம் தயாரிக்குமிடம்

1172. கரீதிசெய்து - விலைக்கு வாங்கி

1173. 27-7-1859இல் சென்னை உச்சநீதிமன்றத் தீர்ப்புக்குப் பிறகு தஞ்சையில் அரசாங்க ஏஜெண்டாகக் கலெக்டர் நியமிக்கப்பெற்றார் (பக்கம் 70)

1174. இசுகுவயர் - Esquire - மரியாதையைக்குறிக்கும் சொல் (பின் ஒட்டாக வரும்)

1175. வஜராத்மாப் - அரசகுடும்பத்தைச் சார்ந்த பெருமகள்

1176. பெட்டிஷன் - Petition - மனு

என்னுடைய கல்யாணத்துக்காக நான் ரெத்தினாகிரி ஜில்லா துளஸணி கிராமத்துக்குப் போய்வர வேண்டியிருப்பதால் எனக்கு நாளது வருஷம் அக்டோபர் மாதம் 20 முதல் மீ ௱க்கு லிவும் ரகதாரியும்[1177] கொடுப்பிவித்து, நான் திரும்பி வருகிற வரையில் என் மொயினியைச்[1178] சர்க்காரில் நிருத்தல் செய்து வைக்கும்படி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்கிறேன். சலாம்.

*1860 ௵*

செப்டம்பர் மீ 27 ௳

## ஆவணம் எண் 66

சின்ன மகாராஜா[1] கல்யாணத்துக்காக வெள்ளைக்காரர் சற்தார்[2]களுக்கு ௲அ ௱ ௰ அ[3] ௵ சூன் மீ ௩ ௰ ௳ மேசை பண்ணுகிறபடியினாலே வருகிற சர்தார்களுக்கு மரியாதை செய்கிற விபரத்துக்கு ஸ்ரீ-ரிசிடெண்ட் பிளாக்பர்ன்[4] சாயேபு அவர்கள் நிஷபத்தி[5]யாக வந்த ஸ்மரனார்த்த[6]யேடும் அதற்குப் பிறத்தியுத்திரவு[7] அரண்மனையில் எழுதின ஸ்மரனார்த்தயேடும்மகால் அரிக்கார[8] ஆத்தூர் ராமசுவாமி அய்யன் கையில் கொடுத்து, ஸ்ரீ-ரெசிடெண்ட் சாயேபு அவர்கள் வீட்டுக்கனுப்பி யிருக்கிறது. மேலே எழுதிய இரண்டு ஸ்மரனார்த்தத்தின் எதிர்நடை[9] சினப்பா வசமாக வைத்திருக்குது.

வெகுதானிய ௵ ஆனி மீ ௰ அ ௳ மைசூரிலேயிருந்து வந்த ஜாலாகிர் ஜார்வஷிம் கோச.......................கொண்டு வந்த சாமான் விபரம், காகா சாமிக்குச் சொல்லி கோசாமி

---

1177. ரகதாரி - வழிநடைச்சீட்டு; Passport

1178. மொயினி - உதவித்தொகை

1. சின்னமகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

2. சர்தார்கள் - சேனாதிபதிகள்

3. 30-6-1818

4. வில்லியம் பிளாக்பர்க் - 1811இலிருந்து இவரைப்பற்றித் தெரிய வருகிறது.

5. நிஷபத்தி - உதவி

6. ஸ்மரனார்த்தயேடு - நினைவுக்குறிப்பேடு

7. பிரத்தியுத்தரவு - பதில்

8. அரிக்கார - அரிக்கர் - ஒற்றர்; தூதர் (Harkara)

9. எதிர்நடை - மூலப்பிரதி

கையிலிருந்த மைசூரிலிருந்து, பூனாவுக்குப் போற றகதாரி[10] யுங் கொடுத்து, றகதாறி வழி தப்பியிருக்கிற படியினாலே இவர்கள் கையிலிருக்கிற சாமான் வாங்கலாமாவென்று உஜீர் சலாத்துடனே /ஸ்ரீ/ பிளாக்பர்ன் சாயேபு அவர்களுக்குச் சொல்லி அனுப்பினதுக்கு சேதியுங் கேட்டு, றகதாறி வைத்துக் கொண்டு, யிதற்குப் பதில் னாளைக்குச் சொல்லி யனுப்பி வைக்கிறோமென்று மகாராஜா சாயேபு அவர்களுக்குச் சலாஞ் சொல்லச் சொன்னாரென்று காகாசாமி வந்து சொன்னார்.

ஆனி மீ ௰ ௬ உ திருச்சினாப்பள்ளி கலேக னெல்லெட்டன்[11] சாயேபு சின்ன மகாராஜா அவர்கள் கல்யாண விருந்துக்காகத் திருச்சினாப்பள்ளியிலிருந்து, ஜூன் மீ உ ௰ க உ ஆனி மீ ௰ எ உ வருகிறபடியினாலே அவாளுக்கு யி......கயில்......... வவுஜதார்[12] முத்தோஜி அய்யா யிங்கிறீஸ்[13] தாவீது பிள்ளை மானோஜி அப்பா தோட்டம் வரைக்கும் போனார்கள். அவாளுடன் கூட துருப்பு[14] குதிரை ௰ உ பிறாதாரி (க) போயிருக்கிறது. வெகுதானி[15] ஸு ஆனி மீ ௰ ௬ உ மைசூரிலிருந்து கும்பனி ......................

கோசாமி ஸ்ரீ. யிறோஜி[16] கானே றாவு[17] அப்பா அவர்கள் பேருக்கனுப்பின காயிதம் சினப்பா அண்டையில் கொடுத்திருக்கிறது. ஆனி மீ ௰ ௬ உ

சின்ன மகாறாஜா[18] சாயேபு அவர்கள் கல்யாணத்துக்காக அரண்மனையில் வெள்ளைக்கார சர்தார்களுக்கு மேசை செய்து மரியாதை செய்ததுக்கு விபரம். யென்னவென்றால் அஜாறம்[19] பந்தல் முதற்கொண்டு, மகறாச சபை பந்தல் வரைக்கும் பந்தலுக்கு வாழைகளும் தோரணமுங் கட்டி முன்னே விருந்து சொன்ன சறுதார்களுக்கும் துரைசானிய[20] ருக்கும், அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு வருகிறத்துக்காக எதிர்கொண்டு போன ரா. சர்க்கில்

10. ரகதாரி - வழிநடைச்சீட்டு (Pass)

11. கலேகனெல்லெட்டன் - கலெக்டர் (?)

12. வவுஜதார் - பவுஜ்தார் - நாட்டதிகாரி

13. யிங்கிறீஸ் - இங்கிலிஷ்

14. துருப்பு குதிரை - பட்டாளத்துக்குதிரை

15. வெகுதானிய - பகுதானிய - ஆண்டறுபதனுள் 12 ஆவது

16. யிறோஜி - Heroji -வீரர்

17. கானேறாவு - கானேராவ்; இவர் சர்க்கேலாகவும் இருந்தவர்

18. சின்ன மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

19. அஜாரம் - கிழக்கு வாயில்

20. துரைசானியள் - ஐரோப்பிய மாதரார்

ராமோஜீ சற்ஜே றாவு காடிகே[21] அவர்கள் ரிசிடெண்டு[22] சாயேபு அவர்கள் வீட்டுக்குப் பகல் ருரு (5 1/2) மணி வேளையில் போகும் போதுகூட போன சன்னாகத்துக்கு[23] விபரம்.

ஆனையின் பேரில் கார்கானா ஆனை[24]யின் பேரில் நிசானது[25] வாத்தில[26] சகிதமாயி[27] துருபு[28] குதிரை-ம உ. பிறாதரிடங்கா[29] சகிதமாக(க) பாலா[30] காறர் பயிறகாறர்[31] மால்தாற்-உஷியார் நேமினக்கு[32] டங்கா-க சங்கித மேளமும் யிந்த சன்னாகத்துடனே ரா. ரிசிடெண்டு, சாயேபு அவர்கள் வீட்டுக்குப் போனவிடத்தில் ரிசிடெண்டு சாயேபு அவர்களுக்கு சோடு சால்வை[33] கொடுத்து மரியாதை செய்து யி துரைசானியளும் யிகூ(19) பேர் சறுதார்களும் அவர்கள் சவாரியில்..........து கொண்டு சறிக்கில்............ அவர்களுடனே கோட்டை வாசல் படிக்குள் வந்தவுடனே கோட்டையின் பேரில் உ யிக (21) பிரங்கி சுட்டு, கிழ்க்கோட்டை வாசல் முதல்கொண்டு மகறாச சபைவரைக்கும்........... க்கிற காடடுகள்[34] நிறுத்தி.............யிசு பண்ணி அஜாறங் கிழ்வாசல் முதல் அகட்டுவரைக்கும்[35] உத்தியோகஸ்த்தாள் சகிதமாயி ஜீஞ்சார் முதல் காயிதா[36] ஜனங்களை யிருபுறமும் வரிசை நிறுத்தி வாத்தியததுடனே றயிசு செய்து, மகாறாச சபையில் தெண்டகம்.........க்கி யானை குதிரை யில்லாமல் தினி தின்கிற நிமித்தியத்துக்காக நிறுத்தி சேவுகத்துக்கு உபயுக்தமா

---

21. ராமோஜி சர்ஜேராவ் காட்கே (பக்கம் 85)

22. ரெசிடெண்டு - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.66)

23. சன்னாகம் - விருதுகள்

24. கார்கானா ஆனை - கானாக்களுக்குரிய யானை

25. நிசான் - கொடி

26. வாத்தில - வாத்தியங்கள்

27. சகிதமாய் - உடன்; உட்பட

28. துருபு - துருப்பு - பட்டாளத்து

29. டங்கா - ஒருவகைத் தோற்கருவி

30. பாலா - கைபிட்டி

31. பயிரகாரர் - வாத்தியம் வாசிப்போர்

32. நேமினக்கு - நியமித்த

33. சோடுசால்வை - இரட்டைச் சால்வை

34. காடடுகள் - Cadet - பயிற்சிப் படைஞர்

35. அகட்டுவரைக்கும் - உள்ளே இராச சபை வரைக்கும், (அகடு-உள்)

36. ஜீஞ்சார் முதல் காயிதா - ஆடம்பரமான வாழ்க்கையுடைய சீமான்கள் முதல் சாதாரண குடிமக்கள் வரை; (காயிதா - முறை)

யிருக்கப்[37] பட்டவர்கள் உதாமால்தார்கள்[38] சொபுதார்கள்[39] பாலதார்கள் சக்கிறரேவுசுகள் அபறாதியகளும்,[40] யிந்த ஜனங்களைச் சதிரிலே வைத்துக்கொண்டு சதிர்[41] அசுமானகிரி[42] வகையறா கட்டி சபையில் நடு அங்கணத்தின் மேல் புறமாக வெள்ளிக் கம்பத்துடனே சாந்தணி[43] நிறுத்திக் கிழுக்குச் சமுக்காளம் போட்டு, மேலே வெள்ளை பச்சை வடம் விரித்து, சாந்தணிக்குள்ளே சிம்மாசனம் போட்டு, பிச்சானா[44] செய்து, சிம்மாசனத்துக்கிருபுறமும் நாற்காலி போட்டு, சதிருக்கு முன்னிருக்கிற பந்தலில் மேசை போட்டு யிருக்கிறபடியினாலே பந்தலுக்கு வடபுறமாயி சறுதார்களை ஸ்ரீசர்க்கில் சாயேபு அவர்கள் சதிரில் கல்லுக்குச்[45] சமீபத்தில் அழைத்துக் கொண்டு வரும்பொழுது மகாறாஜா[46] சாயேபு அவர்கள் சிம்மாசனத்திலிருந்து ஷி சதிர்கல்லு வரைக்கும் எதிர்கொண்டு, துரைசானியளையும் சறுதார்களையும் சலாம் முதலானது மரியாதை செய்து மகாறாசா சாயேபு அவர்கள் சிம்மாசனத்திலே உட்கார்ந்த பிறகு வலதுபுறத்தில் உட்கார்ந்த துரைசானியளும் சறுதார்களுக்கும் பேர்வழி

மிஸ்தரிஸ்[47] அண்டர்-க; லெப்டன் கர்னல்[48] பிளாக்பர்ன்-க; மிஸ்தரிஸ் போல் க; சட்ஜி[49] மேஸ்தர் போனி-க; மிஸ்தரிஸ் மறபேட்டு-க; மேஸ்தர் மங்கு-க; மிஸஸ்[50] மக்காளி-க;கேப்டன்[51] ஸெடான்-க, மிஸஸ் கொலப்பு-க; கேப்டன் *Lifs*-க; மேஸ்தர் கோலபு[52] க; மேஸ்தர் ஹண்டர்-க, லெப்பிட்டன் மற்பேட்டு-க, மேஸ்தர் சான்பிளாக்பர்ன்-க; ஆக பேர்வழி ௰௪(14)

---

37. உபயுக்தமாய் - பொருத்தமாய்

38. மால்தார்கள் - மகால்களின் அலுவலர்கள்

39. சோபுதார்கள் - அரிக்காரர் - வெள்ளித்தடிபிடித்துக்கட்டியம் கூறுவோர்

40. அபராதியள் - தீங்கு செய்தவர்கள்

41. சதிர் - நாட்டியம்

42. அசுமான கிரி - மேற்கட்டி (Canopy)

43. சாந்தணி - மேடை (?)

44. பிச்சானா - படுக்கை (படுக்கைபோன்ற ஆசனம்)

45. கல் என்பது சதிருக்குரிய மேடா

46. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

47. மிஸ்தரிஸ் - Mistress (Mrs)

48. லெப்டன் கர்னல் - Lieutenant Colonel - துணைத்தளபதி

49. சட்ஜ் - Judge

50. மிஸஸ் - Mrs

51. கேப்டன் - Captain

52. மேஸ்தர் கோலபு -Mr.Coloff

இடது புறத்தில் உட்கார்ந்த பேர்வழிகள் மிஸ்தரிஸ் மைக்கேல்-க; கர்னல் டயிட்டன்-க, மிஸ்தரிஸ் கோலபு-க, மிஸ்தர் யேப்பிறன்-க, மிஸ்தரிஸ் டானில் கோலப்-க, கேப்டன் வர்ல்க்கர்-க, மிஸஸ் பறட்டு-க; கேப்டன் foot-க, மிஸஸ் பொட்டுலர்-க, மேஸ்தர்-க வகையறா க, பேர் தெரியாத சறுதார்-க, லெட்பிட்டன் மைக்கேல்-க, லெப்பிட்டன் brooke-க, மேஸ்தர் டானில் கோலபு-க, மேஸ்தர் மார்ட்டின்ஸன்-க, ஆக யி ரு (பதினைந்து)

யிந்தப்படி சருதார்களும் துரைசானியளும் உட்கார்ந்தவுடன் சதிரிலே பிட்டிலாதி[53] வாத்தியங்களும் பியாண்ட் வாத்தியங்களும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். மகாறாஜா சாயேப அவர்கள் வந்த துரைசானியளையும், சருதார்களையும், சிறிது உபசாரமாக உத்திரங்கள் பேசி உடனே மேலெழுதிய சருதார்களுக்கு மரியாதை செய்த விபரம் மகாறாஜா சாயேபு அவர்கள் பூவு ஆரங்களை[54] மிஸ்தரிஸ் அண்டர்-க, மிஸ்தரிஸ் மயிக்கேல்உ-வ, மிஸ்தரிஸ் போல்-ங மிஸ்தரிஸ் கோல்பு ச; யிந்த னாலு பேருக்கும் கொடுத்து அடியேனிடத்திலிருந்து கொடுத்த பேர்வழியள் மிஸ்தரிஸ் மறபேட்டு-ரு, மிஸ்தரிஸ் டானல் கோலபு-சா மிஸஸ் மக்காளி-எ; மிஸஸ் பறட்டு-அ மிஸஸ் கோலபுகூ மிஸஸ் போட்லர்-யி; மகாறாஜா சாயேபு அவர்கள் கொடுத்தது லெப்பிட்டன் கர்னல் பிளாக் பர்ன்-க; கர்னல் டயிட்டன்-உ;மேஸ்தர் போனி-ங; மேஸ்தர் யேப்பிறன்-ச; இவர்களுக்குப் பூவு கொடுத்து, மத்தப் பேர்வழிகளுக்கு அடியேன் கொடுத்தது மேஸ்தர் மங்கு ரு; கேப்டன் வல்க்கர்(சா) கேப்டன் ஸெடாள்-எ ; கேப்டன்foot-அ கேப்டன் Bips-கூ,மேஸ்தர் பேஜி-யி; மேஸ்தர் கோலபு யி க; பேர்வழி தெரியாத சர்தார் யி உ; லெப்பிட்டன் மைக்கேல் யி ங; மேஸ்தர் அண்டர் யி ச; லெப்பிட்டன் Brooke-யி ரு; லெப்பிட்டன் மறபேட்டு யி சா.மேஸ்தர் டானில் கோலாபு யி எ; மேஸ்தர் சானிபிளாக்பர்ன் - யி அ; மேஸ்தர் மார்ட்டிங்சன் - யி க மேலெழுதிய ஆரங்களை கொடுத்தபடிக்கி மகாராஜா சாயேபு அவர்கள் துரைசானிக்கு சால்வை யிதர துரைசானியருக்கு சால்லை கொடுத்தபிறகு, மேலெழுதிய னாலு சறுதார்களுக்கும் பதக்கங்களும் கொடுத்து மத்தப் பேர்வழிகளுக்கு பூவு கொடுத்தபடிக்கு துஸதுங்[55] கொடுத்து, மேலெழுதிய படி பன்னீரும் பாக்கு வெத்திலையுங் கொடுத்து மரியாதை செய்தார்கள். பூ ஆரங்கள் கொடுக்க ஆரம்பஞ் செய்தவுடனே வாத்தியங்களை நிறுத்தி னாலு ஜதை[56] தேவடியாளை நாட்டியஞ் செய்யச் சொன்னார்கள். யிந்தப்படி சறுதார்களுக்கு மரியாதை செய்தவுடனே ஒரு க்ஷணம் போது,[57] சறுதார்களுடன் சுக

53. பிட்டிலாதிவாத்தியங்கள் - பிடில் முதலிய இசைக்கருவிகள். பிடில் - Fiddle

54. பூவு ஆரங்கள் - பூச்செண்டு; பூமாலை

55. துஸ்து - ஆபரணம்

56. நாலு ஜதை - எண்மர்

57. க்ஷணம் போது - கணநேரம்

சல்லாபங்கள்[58] பேசிக்கொண்டிருந்து, உத்திரவு வாங்கிக் கொண்டு மகாராசா சாயேபு அவர்கள் அரண்மனையில் வந்து பிறகு, மேலெழுதிய சறுதார்களுக்கு துரைசானியளும், மேசைபால் போய் உட்கார்ந்து தினி சாப்பிட்டுப் பானமும் பண்ணி, சறுவத்திர[59] சருதார்களும், நின்று மகாராஜா சாயேபு பேரால் ஹீறோ என்கிற சந்தோஷ சப்தங்களை[60] உச்சரித்து ராத்திரி மூன்றுதாசு[61] வேளையில் துரைசானியள் சமுக்கிராளுக்கும்,[62] தவுலத்துப்[63] பங்கிலே அழைத்துக் கொண்டுபோய், சவாரியிலே உட்கார வைத்து, அவாள் அவாள் துரைசானியளை அவர்கள் அவர்கள் வீட்டுக்கு அனுப்பி வைத்து, திரும்பவும் சருதார்கள் எல்லாம் மேசையில் வந்து உட்கார்ந்து மத்தியபானம்[64] செய்து ஹீறோ என்கிற சந்தோஷசப்தங்களை[65] மறுபடியும் மேலெழுதியபடி இரண்டு தரம் உச்சரித்து, ராத்திரி -ரு- தாசு[66] வேளையில் புறப்பட்டுத் தவுலத்துப் ப்ங்குலே வந்து, கூடவந்த ராஜஸ்ரீ சர்க்கில் சாயேபு அவர்களுக்கும் சலாஞ் செய்து, அவரவர்கள் சவாரியிலே அவரவர்கள் உட்கார்ந்து புறப்பட்டு வீட்டுக்குப் போய் விட்டார்கள். காட்டு[66a] முதலான துகள் வேட்டு, சுட்டவரைக்கும் பகல் செய்த மரியாதைகள் போகும் பொழுது ராத்திரியானபடியினாலே ஒன்றும் செய்யவில்லை.

ராஜஸ்ரீ-ரிசிடெண்டு பிளாக்பர்ன் சாயேபு அவர்கள் ௲-பணம் தேவடியாளுக்கும் பியாண்ட் வாத்தியம் பிடில் வாத்தியம் வாசித்தவர்களுக்கும் அரிக்கார[67] ரெங்கய்யனன்டையில் அனுப்பி வைத்தார்கள். அந்த அய்வேசு[68] மறுனாள் மேலெழுதிய மூன்று சமையளுக்கும்[69]

---

58. சுகசல்லாபங்கள் - இனியபேச்சு

59. சர்வத்திர - எல்லா

60. ஹிறோ என்கிற சந்தோஷ சப்தங்கள் Hip Hip Hurrah என்று கூறுதல்

61. தாசு - 2 1/2 நாழிகை கொண்ட ஒரு மணி நேரம்

62. சமுக்கிராளுக்கும் - சமஸ்தர்களுக்கும் - எல்லாருக்கும்

63. தவுலத் - அரச

64. மத்யபானம் - மதுபானம் - கள் முதலியன குடித்தல்

65. சந்தோஷ சப்தங்கள் - மேல் கூறியவாறு Hurrah என்பது

66. தாசு - 2 1/2 நாழிகை கொண்டது

66a. காட்டு - Cadet - பயிற்சிப்படைஞர்

67. அரிக்காரன் - தூதன்; வெள்ளித் தடி பிடித்துக் கட்டியங் கூறுவோன்

68. அந்த அய்வேசு - அந்தத்தொகை - ரூபா நூறு

69. மூன்று சமையள் - மூன்று திறத்தாருக்கும் (தேவடியாள், பியாண்டு, பிடில்)

சமை [70] சு-க்கு யேசாய்பு விழுக்காடு [71] யிரித்துக் கொடுத்தது. மேலெழுதிய சதிரில்

அரண்மனை நிஷ்பத்தியள் [72] உட்கார்ந்த பேர்வழியள் ராஜஸ்ரீ சர்க்கில் றாமோஜி சற்ஜேஜறாவு காடிகே, சிவாஜி சற்ஜேறாவு காடிகே, பிக்காஜி மாடிக்கு, /ராஜஸ்ரீ/ மானகோஜி காடே, பாவாசாமி காடே, அண்ணாசாமி அப்பா புவஜதார் [73] ராஜஸ்ரீ முத்தோஜி அப்பா, அப்புறாவு காடிகே, மானசிங்க றாவு மோத்தே ஆக பேர்வழி ம், யிந்தபடி யிவர்களும் சதிரில் உட்கார்ந்திருந்தார்கள். யிந்தப்படி யிறோஜி [74] காளே றாவு, அப்பா அவர்கள் சொன்னது.

வெகுதானிய ஸு

ஆனி மீ ய அ உ

| | |
|---|---|
| செல்வி [75] கிளாசு டசன் உக்கு | உ ய சு |
| கிளாறட்டி [76] கிளாசு டசன் சு க்கு | சுய அ |
| ஒயின் [77] கிளாசு டசன் சு க்கு | சுய அ |
| டம்ளர் டசன் சு க்கு | சுய அ |
| ஸால்ட்டு செல்லா [78] - அ } | |
| பாட்டம் - அ | ய சு |
| பாசம் கிளாசு [79] டசன் ௩ க்கு | ௩ ய சு |
| விக்கொண்டர் மூடிவுள்பட | சு |
| | உ ள உ ய சு |

சூப்புடுரியன்- ௩; பெரிய டீசு- அ; அரை டீசு- அ, கோபுர டீசு-அ, சூப் பீங்கான்- ௩ ய சு, சுடுதண்ணீர்பீங்கான்- ௩ ய ரு, தட்டைப்பீங்கான்- ரு ய அ; அரைப்பீங்கான்- எ ய க; பிக்கில்

70. சமை - கூட்டம்; பகுதியினர்

71. லேசாய்பு விழுக்காடு - தரத்துக்கு ஏற்ப (?)

72. நிஷ்பத்தியள் - அதிகாரிகள் (உதவியாளர்கள்)

73. பவுஜதார் - பவுஜ்தார் - நாட்டதிகாரி (அ) சேனாபதி

74. யிரோஜி - ஹிரோஜி - வீரர்

75. செல்வி - மெல்லிய (?)

76. கிளாறட்டி - Claret - இனிய மதுவகை

77. ஒயின் - Wine

78. Salt Cellar-உணவு மேசை உப்புக்கலம்

79. பாசம் கிளாசு - Fashion Glass

பாட்டு -ரு. பட்டாபாட்டு-உ; பழக்கூடை-ந ம உ மீன் டீசு-உ. குறுட்டி[80] ஸ்டாண்ட்-க-க்குப் புட்டி-அ; குறுட்டி ஸ்டாண்ட்-க-க்குப்புட்டி- சு; வெள்ளி சாமான் உள்பட கேக்குபுட்டி -கூ; பெரிய சூரி கத்தி-சு, றொட்டி சுடுகிற சலாகு-க; நெருப்பு தள்ளுகிறது-க; பெரம்பு தட்டு-உ; மகாராஜா சபையிலிருந்து எடுத்துப் போனது மேசை-எ; . மாவுபீசியி[81] .....மேசை-அ இதுகளெல்லாம் மால்-அரிக்கார ராசகோபாலபுரம் வயித்தினாதய்யன் வசமாக ஜான் பாதிரியார்[82] வீட்டுக்கனுப்பியிருக்கிறது.

வெகுதானிய ஷு
ஆனி மீ உ ம் ௨ வியாழக்கிழமை

## ஆவணம் எண் 67

ஸ்ரீமகாராஜா[83] சாயேப் அவர்கள் திவானத்துக்கு கோட்டை வெளி மகர்நவம்புச்சாவடி ஆட்டுக்காரத் தெருவிலிருக்கும் இறந்துபோன நாகலிங்கப்பிள்ளை மகன் அப்பாசாமி மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்:-

என் தகப்பனாகிய இறந்துபோன நாகலிங்கம் பிள்ளை என்பவர் இறந்துபோன மேஸ்ட்டர் டானியேல் கோலேப்[84] துரையவர்கள் ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுக்கு இங்கிலிஷ் பாஷை போதித்துக்கொண்டிருக்கும் பொழுது ஷை படிப்புக்கு சகாவாயிருக்கும் படிக்கும் ஷை கோலேப் துரையவர்கள் அரண்மனையிலிருந்து, வீட்டுக்கு வந்துவிட்ட வேளையில் ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுடைய படிப்பைக் கூடயிருந்து கவனித்துவரும்படியாயும் அரண்மனையாரிடத்தில் மேலெழுதிய மேஸ்டர் டானியேல் கோலேப் துரையவர்கள் தானே சிபாரிசு செய்து அந்தப்படிக்கு மகாராஜா சாயேப் அவர்கள் சன்னியதானத்திலிருந்து,[85] ஊழியஞ் செய்து கொண்டு வந்தார்கள். அப்போது அரண்மனையாரவர்கள் ஷை என் தகப்பனுக்கு உலுப்பையும்,[86] தாட்டும்[87] உத்திரவு செய்து யிருந்தார்கள். அவ்விதமாய்

---

80. குறுட்டி - Crude

81. மாவபிசைய

82. ஜான்பாதிரி - இவர் தாரங்கம்பாடியில் ஆங்கிலப்பள்ளி நடத்தியவர்; தஞ்சையிலும் ஆங்கிலப் பள்ளி நடத்தியவர் (பக்கம் 211,243,266)

83. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

84. கொலேப் - John Elia Kohlhoff (இவர் தஞ்சையில் இருந்த பாதிரி; 21.5.1849இல் இறந்தார் (இராசு, மராட்டியர் கல்வெட்டுக்கள், எண் 60)

85. சன்னிதானம் - முன்னிலையில்

86. அரிசியும் சமையலுக்குரிய மற்ற பொருள்களும்

87. தாட்டு - தலைவாழையிலை (?)

அரண்மனையாரவர்களுடைய அன்னப் பிரவாகத்[88] திலிருந்து, எங்கள் குடும்பம் ஒறட்டுஞ்[89] சீவனார்த்தஞ் செய்து,[90] கொஞ்ச னாளைக்குப்பின் சம்பள மிவ்வளவென்று, நிஷ்க்கரிசை[91] செய்ய அரண்மனையார் யெத்தினித்திருக்கிற தருணத்தில் என் தகப்பனாருடையவும் அவருடைய குடும்பத்தாருடையவும், துறா அதிஷ்டமானது[92] என் தகப்பனை, அவருடன் இஷ்ட[93]மாயிருந்த சிலர் தூரதேசத்துக்கு வரும்படியாய்ப் பயிற்றுவித்து, அப்படியே அவர் முச்சில் பந்தறில்[94] போயிருந்து பிற்பாடு ஸ்ரீமகாராஜா சத்திரபதி சாயேப் அவர்களுடைய பாதாரவிந்தத்தை[95] நம்பி யிருந்த அனேகம் பாசைகளை[96] ரெட்சிக்கிறதையும்,[97] கேள்வியாகி கோடி சூரியப் பிரகாசமாக இருக்கப்பட்ட யிந்த முகார விந்தத்தையும்,[98] ஸ்ரீ பாதபத்[99]மயுகலத்தையும்[100] தரிசனம் செய்தால், ஷெ என் தகப்பனுக்கு மோக்ஷகெதி கிடைக்குமென்கிறது மன்னியில் தன்னுடைய தரித்திரங்களெல்லாம் நீங்கிப் போகுமென்று, எண்ணி, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வருகிற தருணத்தில் வழியில் அவருக்கு வந்து, சம்பவித்த சடுதியான[101] வியாதியினால் மரணமடைந்து போய் விட்டார். நாங்களிவ்விடம் வந்து சேர்ந்த பின்பு எங்களுடைய- நிலைமையைக் குறித்து மகாராஜா அவர்கள் சன்னிதானத்தில் விண்ணபஞ் செய்துகொள்ள யாதொருத்தருடைய ஆதரவுமில்லாமல் சிறுபையனாகிய நானும் மெத்தவும், விருத்தாப்பிய[102] மாகிய என்னுடைய பாட்டியாரும், சரீர அசௌக்கியத்தினாலும்[103] தரித்திரத்தினாலும் மெலிந்து நடக்க முதலாய

---

88. அன்னப்பிரவாகம் - சோற்றுவெள்ளம்

89. ஒரட்டும் - முழுவதும்

90. சீவனார்த்தம் செய்து - உயிர் வாழ்ந்து

91. நிஷ்க்கரிசை - உறுதி; நிச்சயம்

92. துறா அதிஷ்டம் - துர் அதிஷ்டம் - அதிர்ஷ்டம் இல்லை.

93. இஷ்டம் - விருப்பம்

94. முச்சில்பந்தர் - மசூலிப்பட்டணம் (?)

95. பாதாரவிந்தம் - திருவடித்தாமரை

96. பாசைகளை - பிரசைகளை என்று மாற்றிப்படிக்க

97. ரெட்சிக்கிறதை - காப்பாற்றுகிறதை

98. முகாரவிந்தம் - திருமுகத்தாமரை

99. பாதபத்ம - திருவடித்தாமரை

100. உகலம் - உகளம் - இணை

101. சடுதியான - விரைவான; சோதனையான

102. விருத்தாப்பியம் - முதுமை

103. சரீர அசௌக்கியம் - உடல் நலம் இல்லாமை

சத்துவ[104]மில்லாதிருக்கிற என்னுடைய தாயும், உத்தேசம் கூ பிறாயமான[105] என்னுடைய தமக்கையும் ஆகயென் தகப்பனுடைய போஷகத்திலிருந்த னாலு ஆத்மாக்களும், அன்ன வஸ்திரத்துக்கு ஏது இல்லாமல் இரண்டு னாள் பட்டினி மூன்றுநாள் பட்டினியுமாக யிருந்து, அத்தியா அவஸ்தைப்[106] படுகிறோம்.

ஆகையினாலே, ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்கள் ஏழையாகிய எங்கள் பேரில் சுவாமி நிமித்தியமாக மனமிரங்கி, கணக்களவில்லாத பரசைகளை[107] வைத்து, ரெட்சிக்கிற இந்த அன்னபிரவாகத்தில்[108] எங்கள் னாலு ஆத்மாக்களுககும் ஜீவனாத்தஞ்[109] செய்து வரும்படிக்கு, ஸ்ரீ மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்களுடைய சன்னிதானத்துக்கு யுக்தமென்று, தோணுகிற போதாவது, என் பேருக்கு நடந்து வரும்படியாக உத்திரவாக வேணுமென்று சமுட்சேபத்தில்[110] விண்ணப்பஞ் செய்து கொள்ளுகிறேன்.

சூஅ ள ௲ ௰ அ ஞு[111] — இந்தக் கிறல் அப்பாசாமி (கையெழுத்து.)

ஆகஸ்ட் மீ ௲ ௰ ௨

## ஆவணம் எண் 68

ஸ்ரீ.ஸ்ரீ. மானேசர் வீராசாமிப்பிள்ளை அவர்களுக்குப் பேர்விளங்கான்[112] எழுதிக்கொண்ட தாழ்மையான விண்ணப்பம் என்ன வென்றால்:-

இப்பவும் யிசு அயினிசு[113] மகாறாசா[114] இறந்துபோன நாள் முதல் யிதுவரையில் நாலு அஞ்சு சர்க்கில் ஆகிவிட்டார்கள். அவர்கள் நாளில் இவ்வளவு பரிக்ஷகாரமும்[115] சனங்களுக்குச்

104. சத்துவம் - வலிமை

105. பிறாயம் - வயது

106. அத்தியாவஸ்தை - மிக்க துன்பம்

107. பிரசைகள் - குடிமக்கள்

108. அன்னப்பிரவாகம் - சோற்று வெள்ளம்

109. ஜீவனார்த்தம் - பிழைக்கும் வழி

110. சமுட்சேபம் - முன்னிலையில்

111. 30-8-1838

112. பேர்விளங்காள் - பேர் விளம்பான் (சொல்லாதவன்)

113. யிசு அயினிசு - His Highness

114. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

115. பரிக்ஷகாரம் - சோதனை செய்தல்

சவுக்கியமும் பாயிசாயேபினுடைய நன்மையைப்பத்தி கோரிக்கை யுள்ளவனும் தாழ்மையுடன் வணக்கமுள்ளதாயும், உம்மைப் போல ஒருவருமில்லை யென்று நான் சொல்லுகிறதுமல்லாமல் பட்டண முழுமையும் உம்மைக் கொண்டாடி பேசுகிறார்கள். கம்பறாயிபாயி[116] சாயேபினிடத்தில் மங்களவாசம்[117] கியானாபாயி[118] ஒருத்தனால் ரொம்பவும் கலக முண்டாயிற்று. ஊர் முழுமையும் அபகீர்த்தி[119] யாயிருந்ததைப் பத்தித் தாங்கள் மனசு வாங்கி, அவள் அவ்விடம் வராமல் செய்ததைப் பற்றி யிப்போது அவ்விடம் ரொம்பவும் பரிகூஷகாரமாக[120] யிருக்கிறது. சக்காறாம்[121] சாயேபு அவர்கள் தன் வேலைக்காரனுக்குக் கல்யாணம் பண்ணி, அவன் பெண்சாதிக்கு[122]. கெடுக்க ஆசைப்பட்டு அவனுக்கு வெளியே விடாமல் செய்ததைப் பற்றித் தாங்கள் மனதின் மேல் வாங்கினத்துக்காக அவரும் பயந்து விட்டு விட்டார்கள். அந்தப் பெண் விபசாரி[123] யானதில் சந்தேகமில்லை. அந்த லவண்டி[124] ரெண்டு பாயிசாயேபினிடத்தில் வந்து யிருந்தாள். அவ்விடத்திலும் தங்கள் பயத்தினால் துரத்தி விட்டார்கள். இப்போது ஷி இரண்டு பாயிசாயேபினிடத்தில் நடக்கிற சமாசாரம் என்னவென்றால் அவாள் தம்பி ஒருவருடைய பெண் புஷ்பவதி[125] யாகி சூ மீ மாயிவிட்டது.

இதுவரையில் ருது சாந்தி[126] முகூர்த்தம் பண்ணாமல் இரகசியமாய் நடந்து வருகிறதாக கேள்விப்படுகிறோம். ஒருவேளை மூகூர்த்தம் செய்தால் வெளியேபோக வேண்டியதாய் நேரிடுமென்று காலதாமதம் செய்கிறார்கள். மங்களவாசம் சோனபா[127] என்பவள் குச்சிகாறி, தட்டவாணி[128] இவள் சொல்லுக்குள் அகப்பட்டு யிருக்கிறார்கள். அவள் அந்த

---

116. கம்பராயி - இவர் இரண்டாம் சிவாஜி ஒரேநாளில் மணம் செய்து கொண்ட பதினெழுவரில் ஒருவர் ஆகலாம். (எண்மரில் ஐந்தாமவர் சம்பராயி ஆகலாம்-பக்கம் 34)

117. மங்களவாசம் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர் (பக்கம் 339)

118. கியானாபாய் - மங்கள விலாச மாதராருள் ஒருவர்!(கியானா - ஞானா)

119. அபகீர்த்தி - பழி

120. பரிகூஷகாரம் - பரிஷ்காரம் - சீர்திருத்தம்

121. சக்காராம் - இரண்டாம் சிவாஜியின் இருமகள்களையும் மணந்து கொண்ட மருமகப்பிள்ளை

122. பெண்சாதியைக்

123. வியபசாரி - நெறிதவறியவள்

124. லவண்டி - கெட்ட நடத்தையுடையவள்

125. புஷ்பவதி - ருதுவாதல்; பூப்படைதல்

126. ருதுசாந்தி முகூர்த்தம் - மனையறம் படுத்தல்

127. சோனாபாய் - மங்களவாசத்தில் இருவர் காணப்படுகின்றனர்.

128. இவை வசைச்சொற்கள்

அரண்மனையில் எப்போதும் பிரியாமல் இருக்கிறாள். பாயிசாயேபினுடைய மூத்த தமயனுக்கும் அவளுக்கும் திரேக சம்பந்த[129] முண்டு. அந்த அரண்மனையிலிருக்கப் பட்ட ஜனங்களில் தினம் ஒவ்வொருத்தர் பேரில் கோள் சொல்லி, அனேகம் பெயருக்கு (பேரை) யெடுத்து விட்டாள். சொந்தத்தாயாருக்கும் அவாளுக்கும் துவேஷம் பண்ணி வைத்தாள். இந்த தருணத்தில் தாங்கள் கவனிக்காம லிருந்தால் தங்கள் பேருக்குக் குறைவு வந்து நேரிடும். ஷெ பாயிச்சாயேபு இதுவரையில் சம்பாதித்த கீர்த்தியும், புண்ணியமும் வீணாகப் போகும். என்கிறதைப் பத்திச் சந்தேகமில்லை. தாங்கள் யிந்தக் காகிதத்தின் பேரில் நம்பி ரகசியமாய் சோதித்தால் தங்கள் மனதிற்கே தெரியவரும். ஷெ சோனமாளுக்கு அவ்விடம் வராமல் செய்ய வேண்டும். மோயிதேறாவு சாயேபு[130] க்கு (பை) அரண்மனை விட்டு வெளியே அனுப்ப வேண்டியது. இந்த இரண்டு காரியமும் தாங்கள் அதிகாரத்துக்குட்பட்ட படியால் தாங்கள் செய்யாமல் போனால் தாங்கள் சம்பாதித்த கீர்த்திக்கும் அபகீர்த்தி வந்துவிடும் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை, தாங்கள் யிதைப்பற்றி யோசிக்க வேண்டியதில்லை. இதைப்பற்றித் தாங்கள் பூரண அதிகாரம் பெற்றுயிருக்கிறீர்கள். அவாளுடைய க்ஷேம ஆக வேணுமென்று தங்களுக்கு மனமிருக்கிறத்துக்கு இந்தக் காரியம் தாங்கள் செய்தால் ரொம்பவும் கீர்த்தி அடைவீர்கள். இந்த காரியத்தைப்பற்றிக் கவனிக்காமற் போனால் அரண்மனை வாசலுக்கு ஒருகாகிதமும், தங்கள் கச்சேரிக்கு ஒரு காகிதமும் பாயிசாயேப் பிடத்துக்கு ஒரு காகிதமும் கலெக்டருக்கு ஒரு காகிதமும் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் யாரோ எழுதினான் யென்று இராமல் விசாரிக்க வேண்டியது. அப்படி விசாரியாத வரையில் யிஸ்தியார[131] பிறப்பிளைபடும்.[132] யின்னம் சிலனாளையில் நான் ரூபகாவில்[133] வருவேன்.

## ஆவணம் எண் 69

தஞ்சாவூர் அரண்மனை சர்க்கில் வேலை பார்த்துக்கொண்டு வருகிற வீராசாமிப் பிள்ளைவர்களுக்கு ஷெ ஊரிலிருக்கும் எல்லையம்மன் கோவில் தெருவில் இருக்கும் சுப்பாநாயக்கர்மகன் ஐயாசாமி நாயக்கன் எழுதிக்கொடுத்த மனு என்னவென்றால்:-

ஷெ அரண்மனையில் நீங்கள் நேமித்திருக்கிற சிவாமுதலி என்பவனுக்கு முகத்தாறாய் நீங்கள் வேலை கொடுத்து இருக்கிறது என்னவென்றால்;- சொயபுரயோசனத்திற்கு இச்சித்து நேமித்து இருக்கிறதாகாக தெரியவருகிறது. ஷெ ஒட்டை பிடித்த காதனுக்கு

129. திரேக சம்பந்தம் - உடலுறவு

130. மோயிதேறாவு சாயேபு என்றது சக்காராமை

131. இஸ்தியார் - விளம்பரம்

132. பிறப்பிளைபடும் - பிறப்பிக்கப்படும்

133. ரூபகாவில் - அத்தாட்சியாக; ரூபிக்க

முகததார்[134] வேலை கொடுத்து இருக்கிறது மேல் எழுதியபடி தான் தோணப்படுகிறது. ஷெ கொட்டியத்தில்[135] நேசந்தை[136] வேலைப்பார்க்க நேமித்திருக்கிற சாமிபண்டிதன் முன் இராஜா நாளையில் கமாதாராய்[137] நேமித்து இருந்தார்கள். அப்போது ஷெ சாமி பண்டிதன் அரிசி ரவா இரண்டும் கணக்கில் பிரட்டு பண்ணினான் என்று எடுத்துப் போட்டார்கள். மறுபடி மங்கள விலாசத்தில்[138] போய் வேலைப்பார்த்தான். அவ்விடத்திலும் பிசகு செய்ததின் பேரில் ஷெ சாமி பண்டிதனை உள்ளே வராமல் படிக்கித் தாக்கீது[139] செய்தார்கள். அப்படி யிருக்க மேலும் அவருடைய நடத்தை காடேராவு வீட்டில் சூது ஆடுகிறது. தேவடியாள் லெச்சுமூ வீட்டில் சூது ஆடுகிறது. அவ்ருக்குத் தொழில் இதே தொழில். இப்பேர்ப்பட்டவனை நீங்கள் வேலை சுவாதினப்படுத்துகிறது[140] தங்களுக்கு அதிகக் கௌரவக் குறைவு: ஆகையால் இது சங்கதிகளைப் பற்றி தங்களுடைய ஏட்டு[141] மிஸ்தர் சிவாபண்டிதருக்குத் தெரியும். பேசேவு பண்டிதருக்குந் தெரியும். ஆகையால் யிந்தச் சங்கதிகளைத் தாங்கள் கவனிக்காத பட்சத்தில் துரையவாளிடத்தில் தெரியப்படுத்துகிறதற்குச் சித்தமா யிருக்கிறேன்.

## ஆவணம் எண் 70

ம.ரா.ரா. அப்பாவறகள் சாமிு றாவப்பா அவர்களுக்கு அனேக ஆசீர்வாதம். இப்பவும் இந்த விண்ணாத்தங்கரை வகையறா தேவஸ்தானம் செறப்பு[142] லெட்சுமணப் பண்டிதன் யென்பவன், நீலமேகப் பெருமாள் கோவில்[143] பரிசாறத்த[144]. .......... சேஷய்யங்கார் பெண்சாதியாகிய குச்சிக்காறியை வைப்பாய்[145] வைத்துக்கொண்டு இருக்கு......ம் தவிர ஷெ குச்சிக்காறி மருமான் கிருஷ்ணன் வந்தாலும் அவாளுக்கு எல்லாம் ஷெ குச்சிக்காறியைக்

---

134. முகததார் - (?)

135. கொட்டியம் - சரக்கறை

136. நேசத்தை - நிசிந்தா - குமாஸ்தா

137. கமாதார் - கமா(வி)சுதார் - சத்திரமேற்பார்வையாளர்

138. மங்களவிலாசம் - இரண்டாம் சிவாஜியின் காமக் கிழத்தியர் கூட்டம்

139. தாக்கீது - உத்திரவு

140. சுவாதீனப்படுத்துகிறது - நியமிப்பது

141. ஏட்டு - தலைமைக்காவலர் (?) (ஏட்டு - Head)

142. செறப்பு - சிறப்பு அதிகாரி (ஷராப் ஆகலாம்)

143. நீலமேகப்பெருமாள் கோயில் (பக்கம் 213 இல் 38)

144. பரிசாறத்த - பரிசாரகர் - சமையல் செய்பவர்

145. வைப்பாய் - வைப்பாட்டியாய்

கூட்டிக் கொடுத்துக் கொண்டு, அந்தக் கிருஷ்ணன் ....பயலும் அவளை வைத்துக்கொண்டிருக்கிறான். ஷெ செறப்பு[146] ரூ.2 லஞ்சம் வாங்கிக் கொண்டு சிங்கப்பெருமாள் கோவில்[147] பரிசாறத்தம்[148] செய்து கொடுத்திருக்கிறான். அந்த கிருஷ்ணன் பையஷ்ஆசாரயின[149]னாகயிருக்கிறான். அப்படிப்பட்டவனை நஸதிவு தேசமான கோவிலில் வேலை வாங்கி வருகிறான். அவனானல்ல[150] நடத்தைக்காரனஸ .[151]அவனை சேர்க்க கூடாது என்று சொன்னால் அந்த குச்சிகாரி மோகத்தினாலும் ரூ.2 லஞ்சம் வாங்கியிருக்கிற படியாலும் ஒருவர் சொல்லையும் கேட்கிறதில்லை. இந்த வகையறா அமினா ரொம்ப நல்லவர். கோவில் சொத்தில் ஒன்றும் ஆசைப்படுகிறதில்லை. இவர் வந்த னாள் முதல் சரியாய் நடந்து வந்தது. சுவாமிக்கு (எப்பாயி) இநத இந்த அமினா சரியாய் நடந்து வருகிறார். அப்படியிருக்க யிந்த முசாப்பு[152] வந்து கழுதைப் பெறளி[153] பண்ணிக்கொண்டு வருகிறான். ஆகையால் தேவப்பிராமண துறந்தராயும்[154] லட்சுமி புத்திர[155] ........... ளாயும் நீதி வந்தாளாயும் இருக்கிற தாங்கள் தயவுசெய்து இது சங்கதியை விசாரித்து நீலமேகப் பெருமாள் கோவில் பரிச்சாரகன் சேஷய்யங்கார் பெண்சாதி குச்சிகாரியுட மருமானை யிந்த வகையறா [156]னாலு கோவிலிலும்[157] ஒரு வேலையிலும் பிரவேசியாமலும் சேஷய்யங்கார் நடத்தையை விசாரிச்சுத் தெரியப்படுத்தும்படி இந்த வகையறா அமீனா[158] ராஜாராம் ராயருக்கு உத்திரவு ஆகும்படி செய்ய வேணுமென்று தங்கள் மேலான கக.........த்தே ரொம்பவும் பிராத்திக்கிறேன். இப்படிச்செய்தால் தங்களுக்கு ரொம்பவும் கீர்த்தியுண்டு. வேணும் அனேக ஆசீர்வாதம்.

---

146. செறப்பு-ஷராப் ஆகலாம்

147. சிங்கப் பெருமாள் கோயில் - மேல சிங்கப்பெருமாள் (பக்கம் 213இல் 36) (பக்கம் 190இல் 38)

148. பரிசாறத்தம் - பரிசாரத்துவம் - சமையல் செய்தலாகிய வேலை

149. ஆசாரயினம் -குறைநடத்தை

150. 'அவனோ நல்ல' என்று படிக்க

151. னஸ-ன (ல் + ல) னல்ல

152. முசாப்பு - சிறப்பு

153. பெறளி - புரளி - வஞ்சகம்

154. துரந்தராயும் - ஏற்றுக்கொள்பவராகவும்

155. லட்சுமிபுத்திரர் - செல்வந்தர்

156. 'இந்த வகையறா' என்றது வெண்ணாற்றங்கரைக் கோயில்கள்

157. நான்கு கோயில்கள் (213இல் 36,37,38,39):- மேல சிங்கப்பெருமாள், மணிகண்டப்பெருமாள், நீல மேகப்பெருமாள், வரதராஜப் பெருமாள்.

158. அமீனா - பணம் வசூல் செய்யும் அலுவலன்

ராக்ஷஸ ஞு பங்குனி மீ க ௳.

அந்த முசறப்பு[159] தங்கள் மனுசன் யன்று இவ்வளவு அநீதம் செய்கிறதாய்த் தெரிய வருகிறது. தங்கள் மனுஷனானால் நல்ல கிர்த்தியல்லவோ சம்பாதிக்க வேணும். இப்படிப் போக்கிரித்தனமான பேயனுக்குப் புத்தி கற்பிக்கும்படி..........யிருக்கிறான்............வாக வேணும். அமினாவுக்கு உத்திரவு.

## ஆவணம் எண் 71

மூலைமாடி அம்புறாயி[160] பாயிசாயேப்பிடம் கெட்ட நடத்தைகள் செய்து வருகிற பேர்வழிகள் மருந்து முதல்கொண்டு கொடுத்து வருகிற சீத்தாபாயி அவள் தங்கை மாயினி உ. அவள் தம்பி பெத்தாரு-க; ரெங்குசாமி-க: இருட்டு பங்கில் இருக்கிற கெம்புறாயி[161] அம்மணியிடம் இருக்கிற கெட்ட செய்கை உள்ளவர்கள் பேர் முகற்தியா ரூபாய்-க; அவள் புருஷன் தோட்டி வந்து......க, அவன் பெண்வேசம் போட்டுக்கொண்டு, உள்ளே பிரவேசிக்கிறவன்.

## ஆவணம் எண் 72

தஞ்சாவூரில் ரெசிடெண்ட் அலுவல் பார்க்கிற யென் டபிள்யூ கிண்டர்சலிஸ்கியர்[162] துரையவர்கள் சமூச்சேபத்துக்குப்[163] புதுக்கோட்டை சிலம்பாயி அனேகம் வணக்கத்துடனே சலாஞ் செய்து எழுதிக் கொடுத்த பெட்டிஷன்[164] என்னவென்றால்:-

ஷை புதுக்கோட்டையிலிருந்து க-வயசுள்ள என்மகள் ரெங்கம்மா என்பவளை அழைத்துக் கொண்டு முத்தோஜி அப்பா[165] வீட்டுச் சந்திலிருக்கும் தாசி விசாலாக்ஷி என்பவள் என்னைத் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் நான் இருக்கிற ஏழ்மைத் தனத்தைப் பார்த்து, எனக்கு ௩௱ ( 3 1/2) ரூபாவுக்கு ஒருசேலை வாங்கிக் கொடுக்கிறதாயும் என் கையில் பணம் கிடைத்த பிற்பாடு ஷை ௩௱ ரூபாயைக் கொடுத்துவிட்டால் என் பிள்ளையை அழைத்துக் கொண்டு போகச் சொல்லியும் சொன்னாள்.

159. முசறப்பு - சிறப்பு

160. அம்புராயி - இரண்டாம் சிவாஜி ஒரே நாளில் மணந்து கொண்ட பதினெழுவரில் ஒருவர் (சம்பராயி ஆகலாம்) (பக் 34)

161. கெம்புராயி - சம்பராயி ஆகலாம் (பக்கம் 34)

162. கிண்டர்ஸ்லி - (பக்கம் 67) யீஸ்கியர் - Esquire (அவர்கள் போன்ற அடைமொழி)

163. சமுச்சேபம் - முன்னிலைக்கு

164. பெட்டிஷன் - Petition - மனு

165. முத்தோஜி அப்பா - இவர் ஒரு பட்டாளத்துக்குத் தலைவர் (பக்.80)

அவள் நம்பிக்கையாய் சொல்லுகிறபடியால், அதை நம்பி ஷெ ௲ரு ரூபாயுக்கு வாங்கிக் கொடுத்த சேலையைக் கட்டிக்கொண்டேன். என் கையில் சிலனாளைக்குப் பிறபாடு கிடைத்த ரூ ௲ரு யையும், ஷெ தேவடியாளிடத்தில் கொடுத்து என்பிள்ளை விடச் சொல்லிக் கேட்டதற்கு, உன் பிள்ளை என்னிடத்தில்லை. அரண்மனையார் பிலவந்தமாய்[166] அழைத்துக்கொண்டு போய்விட்டார்களென்று சொல்லி, அரண்மனையாரிடத்தில், ௬ள ரூபாய் வரைக்கும் பெற்றுக் கொண்டாள்.

அது முதல் யென்னுடைய ஞாயம் கிடைக்காமல் என்னூருக்குப் புறப்பட்டுப் போய்விட்டேன். இப்போது தர்ம துரையவர்களுடைய அதிகாரத்தில் அரண்மனையிலிருந்து விட்டு விட்ட என் பிள்ளையை என் வசம் ஒப்பிவிக்காமல் துறாகிதப் படுத்துகிறாள்[167]. ஷெ தேவடியாள் அரண்மனையில் என் பிள்ளையைக் கொடுத்து, புணம் வாங்கிக் கொள்வதற்கு முன் ஒரு தேங்காய் கொண்டு போய் என் பிள்ளைக்குக் கொடுத்ததற்கு அந்தத் தேங்காயை என்னிடத்தில் வாங்கினதற்கு ஏன் வாங்கினாய் என்றும், என்னிடத்தில் பேச வேண்டாமென்றும் அரிவாளை அடுப்பில் காய வைத்து, ஷெ பிள்ளையின் இரண்டு அடித்துடையிலுஞ் சூடு போட்டு அதனாலந்தப் பிள்ளை ரொம்பவும் மரண அவஸ்தையாயிருந்து பிழைத்தது. மறுபிறப்பு அந்த அடையாளமும் இருக்குது. கும்பனியாரவர்கள் செய்யாத ஆக்கினை[168] செய்து இருக்கிறாள்.

ஆகையினால் தர்ம துரையவர்கள் ஏழையாகிய என்பேரில் தயவுசெய்து, ஷெ தாசி விசாலாட்சியையும், என்பிள்ளையையும் சமூகத்தில் வரவழைத்து ஷெ பிள்ளைக்கு இருக்கிற சூட்டின் தழும்புகளைக் கண்ணால் பார்த்து ஷெ தாசிக்குத் தகுந்த தண்டனை செய்கிறதும், தவிர, என் பிள்ளையையும் ஷெ தாசி(விசாலாக்ஷி) அந்தப் பிள்ளைக்காக அரண்மனையில் வாங்கின பணத்தையும் என்வசம் ஒப்பிவிக்கும் படியாய் உத்திரவாக வேணுமென்று, மிகவும் மன்றாடி கேட்டுக்கொள்ளுகிறேன்.

௲அளசயஉ[169] ௵ — இந்தக் கிறல்
ஆகஸ்ட் மீ ௲யகஎ — சிலம்பாயி. (ஒ....ம்)

---

166. பிலவந்தம் - பலவந்தம் - வன்முறையில்

167. துறாகிருதம் படுத்துகிறாள் - நிந்தனை செய்கிறாள்

168. ஆக்கினை - தண்டனை

169. 31-8-1842

# ஆவணம் எண் 73

இவை தஞ்சை ஸ்ரீ மகாராஜா பாயிசாயேபு[170] அவர்கள் திவானத்துக்குப் பாபவாசம் (பாபவினாசம்) தாலூகா விஜித்தி றாஜபுரம் கிராமமகாஜனம்[171] சுப்பறாயர் வகையறா பேர்வழிகள் எழுதிக்கொண்ட மாகதர்னாமா[172] கோர்ட்டில் ..........அய்யம்பேட்டை போஸ்டாபீசு

ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்கு மாஸாகா விஜித்தி றாஜபுரம் மகாஜனம் அனைவரும் எழுதிக் கொடுத்த யாதி[173] என்னவென்றால் ஷெ கிராமம் தேவஸ்தானம் அறைவேலை பார்த்து வருகிற சங்கறய்யன் என்பவன் ஷெ வேலைக்கு வந்தனாள் முதல் நாளது வரையில் திட்டப்படி சாமான் விடாமலும் நெய்வேத்தியம்[174] நித்தியம் ஷெ னாலு காலத்திலேயும் திட்டப்படி விட்டு னெய்வேத்தியம் செய்யாமல் அரிசியாய்க கொண்டு போய் விடுகிறார்கள். தோப்புத் துறவில் மட்டை முதலான சுள்ளிகளை எரிதுரும்புக்குப் போட்டு ஷெ. யெரிதுரும்பு[175] அயிவேஜியைப்[176] பங்குபோட்டுக் கொள்ளுகிறார்கள். தவிர கோவிலுக்குள்ளே மேளக்காரன் தேவடியாள் இன்னம் சில மோகினியளுடன் தினமானம்[177] தப்பாமல் கடுதாசி (விளையாடுவது) தவிர ஷெ சங்கரய்யன் என்பவர் கோவிலுக்குள்ளே சில குச்சிகாரிகளுடன் சம்போகம்[178] செய்ததாக யெங்களுக்குத் தெரிய வந்தது. பின்பு அவனை யிப்படிக் கொத்த செய்கைகள் நீ செய்து வருகிறது. சரியல்லவென்று கேட்டதற்கு நீங்கள் அதைக் கேட்க வேண்டியதில்லை யென்றும், இறந்துபோன மதக்கனீஷ்[179] அப்பாஸய்யர் மாப்பிள்ளை ரெங்கசாமி அய்யன் சிபாரிசு உள்ளவரையில் என்னை யாதொன்றும் செய்யக்கூடாதென்றும், அகம்பாவத்தினால்[180] சொல்லுகிறான். தவிர கோவில்களில்

---

170. பாயிசாயேபு என்றது காமாட்சியம்பாபாயி ஆகலாம்.

171. மகாஜனம் - ஊரில் முதன்மையானவர்

172. மாகதர்னாமா - மகசர்நாமா - பலர்கையெழுத்திட்ட பொது விண்ணப்பம்

173. யாதி - மனு

174. நெய்வேத்தியம் - அமுதுபடைத்தல்

175. எரிதுரும்பு - விறகு

176. அயிவேஜி - பொருள்

177. தினமானம் - நாள்தோறும்

178. சம்போகம் - உடலுறவு

179. மதக்கனீஷ் - பதக்நீஸ் - பதக் எனப்படும் சில ஊர்களின் தலைமை அலுவலர்

180. அகம்பாவம் - செருக்கு

தர்மிஷ்ட்டனாயும்[181] பாபதோஷத்துக்குப் பயந்தவனாயும் சம்சாரி[182] யாயும், அதிலேயே காலக்ஷேபம் செய்து வருகிறவனாயும் யிருந்தால் அந்தத் தர்மம் செம்மையாய் நடந்து வரும், அப்படிக்கி யில்லாமல் யிப்படிக் கொத்த போக்கிரியாயும் யெடவேட்டுக்கார[183] னாயும் யிருக்கிறபடியால் யிப்படிப் பட்ட அநியாயங்கள் செய்து வருகிறான். அவன் செய்து வருகிற செய்கைகளுக்குக் கும்பாபிஷேகம் பண்ணி அதன் பிறகு பூசை, நெய்வேத்தியஞ் செய்ய வேணும் என்று, வெகுபேர் பெரியோர்களும், வேதிஸ்சுவராளும்[184] சொல்லுகிறார்கள். தவிர ஷெ சங்கரய்யன் என்பவனை யிதற்கு முன் வெண்ணாற்றங்கரை அன்னச்சத்திரத்தில் சொயம்பாகி[185] போவியாயிருந்து அரிசி, புளி, உப்பு வகையறா சாமான்களைத் திருடுகிறதும் சாப்பிட வர பிராமணாளை ஏகதேசமாய்[186] யேசுகிறதும், யிப்படிக்கொத்த துஷ்ட்ட நடத்தைகளைக் கண்டு ஷெ சத்திரத்தார் தகுந்த தண்டனை செய்து அபராதம் வாங்கியிருக்கிறார்கள். யிது சங்கதிக்காக சாக்ஷி விசாரணை செய்ய வேண்டியிருந்தால் ஷெ சத்திரம் நிசி நீ[187] சுப்பு பண்டிதற்காரக்குள் கிஷ்டப்பா க. அவாலாதார[188] னாணய்யா க. மத்தியஸ்தம் றாமய்யா தீக்ஷதர் க. மற்றுமுள்ள சுவயம்பாகிகளனைவரும் க. இவர்களை விஸ்தாரமாய்ச் சமூகத்தில் வரவழைத்து விசாரணை செய்தால் சகல காரியமும் தெரியவரும். புராதன ஸ்தல[189] மான த்துனாலும்[190] அரண்மனையைச் சேர்ந்த தேவஸ்தானம் ஆனதினாலும் அப்படிப்பட்ட இடத்தில் யிப்படிப்பட்ட அன்னியிதம்[191] நடக்காமல் நீதியாய் நடந்து வரும்படியாய்

ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் ஏழைகளாகிய எங்கள் பேரில் தயவுசெய்து நாங்கள் எழுதிக்கொடுத்த யாதி[192] யை ஏற்றுக்கொண்டு, ஷெ ரெங்கசாமி அய்யன் சிபாரிசு செய்யாமலும் முன் வேலை பார்த்து வந்த செட்டிலிங்கப் பண்டாரம் என்பவனை

---

181. தர்மிஷ்டன் - தருமம் செய்பவன்

182. சம்சாரி - குடும்பம் உடையவன்

183. யெடவெட்டுக்காரன் - இளமட்டக்காரன் - இளம் வயதினன்

184. வேதிசுவராள் - வேதத்தில் வல்லவன்

185. சுயம்பாகி - சமையல்காரன்

186. ஏகதேசமாய் - நிந்தித்து; மரியாதை இல்லாமல்

187. நிசிநீ - நிசிந்தே - குமாஸ்தா போன்ற அலுவலர்

188. அவாலாதார் - அவில்தார் - ஹவில்தார் (படைத்தலைவர்)

189. புராதனஸ்தலம் - பழமையான தலம்

190. அனத்துனாலும் - ஆனதினாலும்

191. அன்னியிதம் - அநியாயம்

192. யாதி - மனு

எப்போதும் தள்ளுபடி செய்தது போல ஷெ யாரையும் நீக்கி வைத்து, தர்மம் செம்மையாக நடந்து வரும்படிக்கி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ராக்ஷஸ[193] வரு
மார்கழி மீ அ ௳

மிராசு ரெங்கய்யன்
மிராசு வெங்கப்பய்யன்
னாறணப்ப னாயக்கன்
பாலசுவாதியள்[194]

## ஆவணம் 74

சென்னப்பட்டணம் கோட்டை ஆலோசனையில் ஸ்ரீ ஸ்ரீ கனம் பொருந்திய கவுண்மெண்டார் துரையவர்கள் சமுகத்திற்கு

திருவாதி[195] தாலுகா கெண்டற கோட்டைச் சேர்ந்த அக்கச்சிப் பட்டியிலிருக்கும் மிராசு[196] சிதம்பரம் பிள்ளை மிகவும் வணக்கத்துடனே சலாம் செய்து எழுதிக் கொண்ட வாக்குமூலம் என்னவென்றால்.

தஞ்சாவூர் ஸ்ரீ ஹயநீஸ்[197] மகாராஜா சாயேபு அவர்களுடைய அரண்மனையில் சிறைகளைச் சேர்க்கிற முன்னிலைக்கு[198] நீங்கள் அக்கச்சிப்பட்டியிலிருக்கும் போது, அவ்விடத்தில் காலட்சேபத்துக்கு[199] நடவாமல் தஞ்சாவூருக்கு என் குழந்தைகளை அழைத்துக் கொண்டு பிழைக்க வந்த விடத்தில் அப்போது சிறக்களை[200] சேர்க்கும்படி யாயி நேமித்திருத்த சிலனூதன உத்தியோகஸ்தாளை நேமித்திருந்தார்கள். ஷெ அதிகாரத்தாள்[201] நாங்கள் வீட்டிலில்லாமல் வெளியில் வேலை செய்யப் போயிருக்கும் போது அந்த நேரத்தில் என் வீட்டில் ஷெ யார் வந்து துறாகிருதமாய்[202] என்னுடைய மகள் பெரியநாயகம் -க-மங்களம்

---

193. ராக்ஷஸ - ஆண்டறுபதுள் 49 ஆவது

194. பாலசுவாதியள் - இளம்பெருமக்கள்

195. திருவாதி - திருவையாறு

196. மிராசு - பரம்பரை உரிமை

197. ஹயநீஸ் - Highness

198. சிறைகளைச் சேர்க்கிற முன்னிலைக்கு - அடிமைகளைச் சேர்ப்பதற்காக

199. காலட்சேபத்துக்கு நடவாமல் - பிழைப்புக்கு ஒன்றும் இல்லாமையால்

200. சிறக்களை - அடிமைகளை

201. அதிகாரஸ்தாள் - அதிகாரிகள்

202. துறாகிருதமாய் - வன்மையால்

-க- யிந்த இரண்டு பெண்களையும் பிடித்துப்போய் அரண்மனையில் அடைத்துப் போட்டார்கள், நான்போய் அரண்மனை உத்தியோகஸ்தாளை விடச்சொல்லிக் கேட்டதற்கு என்னை அவர்களுடைய பாராவில் வைத்து, அன்ன ஆகராத்துக்கு விடாமல் கெட்டிபத்திரம்[203] செய்தார்கள். பிறகு எனகுத் தெரியாமல் மாறுபாடாய் ஷை பெண்களை நான்கிரயத்துக்கு வித்தது போலவும் சீட்டு யெழுதினதாயும் பொய்சீட்டு உண்டுபண்ணி அதின் என் கையெழுத்து வைக்கச் சொன்னார்கள். அப்படிக்கு னான் ஷெ ஆதரவில்[204] கையெழுத்து வைத்தால் என் பெண்களை விடுகிறதாயும் இல்லாவிட்டால் ஷெ பெண்களையும் என்னையும் பாராவில் தாலே இறந்து போறவரைக்கும் விடமாட்டேனென்று அடித்து, வெகு தொந்திரவு செய்ததினால் ஷெ இமுசையை[205] நான் பொறுக்க மாட்டாமல் பயந்து என் கையெழுத்து வைத்துக் கொடுத்தேனே அல்லாமல் என் மன சம்மதியாயி[206] வைக்கவில்லை. இது சங்கதியைக் குறித்து, அரண்மனையில் நான் ஒரு காசாவது, பணங்களாவது[207] யெந்த இனத்திலும் வாங்கவில்லை. இதைக் குறித்து ரிசிடெண்டு துரையவர்களிடத்தில் உ-தடவை நான் வாக்குமூலம் கொடுத்ததற்கு ஷெ யார் விசாரணை செய்யாமல் யென்னை அடித்துத் துரத்தி விட்டார். இதைக் குறித்து கவுண்ட்மெண்டார் துரையவர்களிடத்தில் தபால் மார்க்கமாக வாக்குமூலம் எழுதிக் கொண்டதுக்கு ஷெ செறைகளை[208] விடச்சொல்லி இப்போ ஷெ ரிசிடெண்டா யிருக்கிற கிண்டர்வி[209] துரையவர்களுக்கு உத்திரவு அனுப்பினதில் அவர் என்னை வரவழைத்து விசாரணை செய்ததில் ஷெ செறைகளை விடுகிறதாய்ச் சொல்லி மறுபடி நான்கிரயத்துக்கு வித்தது போல என்னைக் கையெழுத்து வைக்கும்படி அடித்ததில் ஷெ உபத்திரவம்[210] பொறுக்க மாட்டாமல் கையெழுத்து வைத்தேன். இதைக் குறித்து தபால், கடுதாசி அனுப்ப வேண்டுமென்று போஸ்டாபீசில் கடுதாசி கொடுத்ததற்கு ஷெ யெடுக்கத் தேவையில்லை யென்று அரண்மனையில் உத்திரவு கொடுத்ததாயும் உத்திரவின் பேரில் கடுதாசிகள் யெடுக்கிறதாகச் சொன்னதினால் கும்பகோணம் போஸ்டாபீஸில் தபால் கட்டினேன். அதற்கு ரசீது மிருக்கிறதினால் ஷெ கடுதாசிகளுக்குள் அடக்கம் செய்து இப்போது துரையவர்கள் சமூகத்துக்கு அனுப்பியிருக்கிறேன்.

---

203. கெட்டிபத்திரம் - உறுதிப்பத்திரம்

204. ஆதரவில் - சீட்டில்

205. இமுசையை - இம்சை - துன்புறுத்தல்

206. மனசம்மதியாய் - மனம் சம்மதித்து

207. காசு, பணம் - 32 காசு 1 பணம் (பக்.150)

208. செறைகள் - அடிமைகள்

209. கிண்டர்ஸ்லி - (பக்கம் 67)

210. உபத்திரவம் - துன்பம்

ஆகையால் நான் மிகவும் ஏழையானதினால் (யஜமானர்கள்) தர்ம துரையவர்கள் தயவு செய்து என்னுடைய பெண்ணை என்னிடத்தில் விடச்சொல்லியும் ஷெ நிலம்[211] சாகுபடி செய்யாமல் தரிசியாய்ப்[212] போட்டு, வான் தஞ்சாவூரில் காத்திருப்பதால் சர்க்காருக்குக் கிஸ்திப்பணம் செலுத்துகிற மிராசுதாரனானதினால் ஒழுங்குப்படி எனக்கு நியாயம் கிடைக்கும்படி மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். மேலும் கோர்ட்டார் துரையவர்கள் ஆதரவு வந்தால் தஞ்சாவூரிலிருக்கிற வெங்கிடறாயர் என்கிற ரைடர்[213] என்பவன் ஷெ உத்திரவு அழித்துப் போடுகிறதாயும் சென்னப்பட்டணத்துக்குப் பணம் லஞ்சம்கட்டி எவ்விதமும் நியாயமில்லாமல் செய்வேனென்று சபதம் கூறுகிறதினால் எங்களுக்குப் பணம்முதலானது கொடுத்து ஜெயிக்க எனக்கு நிர்வாக[214]மில்லாததினால் தர்ம துரையவர்கள் ஏழைகள் பேரில் கடாட்சம்[215] வைத்துக் காப்பாற்றும்படியாய் எங்கள் நியாயம் எங்களுக்கு கிடைக்கும்படியாய் ஷெ பெண்ணுக்காக என் பெண்ணுக்காக என் பெண்ணைப்பரிசம் போட்டுக் கல்யாணம் செய்ய வேணுமென்று வந்த மனுஷன் ௩ -மீ காத்திருக்கிறதினால், எங்கள் ஜாதியார் தள்ளுபடி செய்து எங்களை இருக்கும்படியாகவும் இருக்கிறதினால் ஷெ கல்யாண தர்மம் கும்பனியாருடைய தர்மமானதினால் அந்தத் தர்மம் நீங்கள் தர்மதுரையவர்களாயிருக்கிறதினாலே ஷெ பெண்களை விடுதலையாகும்படி உத்திரவு அனுப்ப வேணுமென்றும், அந்தப் பெண்கள் உங்களுடைய குழந்தைகளானதினாலே அனேக விதத்துடனே மிகவும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இது சங்கதியில் எவ்வளவாவது வித்தியாசமாயிருந்தால் உடனே அந்த இடத்துக்கு வரவழைத்து நீங்கள் செய்யப்பட்ட ஆக்கினைக்கு[216] உட்பட்டு இருக்கிறோம். ஆகையால்........................ சவறட்சணை[217] செய்ய தர்மதுரையவர்களுக்கு மிகவும் வணக்கத்துடனே சலாம் செய்து, எழுதிக் கொண்ட.............. வேணும். அனேகம் சலாம்.

௲அ ள சுயிஉ ஷு
ஆகஸ்ட் மீ கூ வ

இந்த கிறல்
சிதம்பரம் பிள்ளை.

---

211. நிலம் என்றது சிதம்பரம் பிள்ளை யென்கிறவருக்கு அவர் ஊராகிய அக்கச்சிப்பட்டியிலிருந்த நிலம்

212. தரிசியாய் - தரிசாய், உழுதுபயிரிடாமல்

213. ரைடர் - எழுத்தர் (Writer)

214. நிர்வாகம் - திறமை

215. கடாட்சம் - அருள்

216. ஆக்கினை - ஆணை

217. சவறட்சணை செய்ய - காப்பாற்ற

# ஆவணம் எண் 75

சென்னப்பட்டணம் மகாகனம் பொருந்திய கவர்னர் துரையவர்களாகிய ஜான்லாறட்டு யெல்பின்ஷ்டன்[218] கவர்னர் துரையவர்கள் சமுகத்துக்கு

சித்தூர் ஜில்லாவைச் சேர்ந்த றாய வேலூர் கோட்டையிலிருக்கும் சோலையா பிள்ளை மகன் கும்பகோணம் சபாபதியாபிள்ளை மிகுந்த வணக்கத்துடனே சலாஞ் செய்து, எழுதிக் கொண்ட பிராது[219] என்னவென்றால்,

நான் முன்னாலே இந்த தஞ்சாவூர் சீமையைச் சேர்ந்த கும்பகோணத்திலிருக்கும் போது, உத்தேசம் ௰௧ வருஷத்துக்கு[220] முன் எனக்குக் கல்யாணஞ் செய்ய நானும் என் தாயாரும் ஷை தஞ்சாவூரைச் சேர்ந்த திருவையாற்றுக்கு வந்து பெண் விசாரித்த விடத்தில் கள்ளச் சாதியாக ஷை திருவையாற்றிலிருக்கிற பெரியநாயக் கொத்தன் என்பவன் தான் வெள்ளாளச் சாதி யென்றும், தனக்கு மீனாட்சி யென்று ஒரு பெண்ணிருக்கிறதாகவும், அந்தப் பெண்ணை எனக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிறதாகச் சொன்னதினாலே அப்போது அவன் கள்ளச்சாதியென்று எனக்குத் தெரியாமல் இருந்ததினாலேயும், அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள என் தாயாரும் நானும் சம்மதித்து, எங்கள் ஜாதி வழக்கப்படி ஷை பெண்ணுக்கு நான் ரூ. உ௰௧ பணம் பரிசங் கொடுத்து. ரூ எ வரையில் சிலவு செய்து, கல்யாணஞ் செய்து கொண்டு, ஷை பெரியநாயகத்துடன் நான் உவருஷவரைக்கும் யோகக்ஷேமம் ஒன்றாக யிருந்தேன். அப்பால் நான் சீவன் நிமித்தியம் ஷை றாய வேலூர் கோட்டைக்குப் போக வேண்டியிருந்ததினாலே என் பெண்சாதியான ஷை மீனாட்சியை என் வசங் கூட்டிவிடச்சொல்லி, ஷை பெரியநாயகத்தை நான் கேட்டதற்கு ஷை பெண் ஏழு வயது (உடையவளாக) இருப்பதினாலே அந்தப்பெண் ருதுவாகிற வரையில்[221] அவளைத்தான் போஷிக்கிறதாயும் அந்தப்பெண் ருதுவானவுடனே காகித மூலமா யென்னை இவ்விடத்துக்கழைக்கிறதாயும், வந்தபின் ருதுசாந்தி கல்யாணஞ் செய்வித்து, பெண்ணை என் பின்னே கூட்டியனுப்புகிறதாயும் சொன்ன வார்த்தையை நான் மெய்யென்று நம்பி, ஷை ராயவேலூருக்குப் போய் விட்டேன். அவ்விடத்தில் போய்ச் சேவகம் அமர்ந்து மாதம் -க -க்கு ரூ. டூ ரு சம்பாதித்து ஜீவனஞ் செய்து கொண்டிருக்கையில் ஷை பெரியநாயகக்

---

218. ஜான் லாறட்டு யெல்பின்ஷ்டன் - John Lord Elphinston; இவர் 6-3-1837 முதல் 23-9-1842 வரை கவர்னராக இருந்தவர்.

219. பிராது - முறையீட்டு விண்ணப்பம்

220. பதினொரு வருஷத்துக்கு

221. ருது ஆகிறவரையில் - பெரியவள் ஆகிறவரையில்

கொத்தன் என்பவன் எனக்கு யாதொரு கடுதாசியும் எழுதி யனுப்பிவிக்கவில்லை. நான் என் சேவக நிமித்தியத்தினால் திருவையாற்றுக்கு இதுவரையில் அட்டிப்பட்டிருந்தேன்[222]. ஷெ பேட்டை ஸ்ரீ கண்டியமகாராஜா[223] அவர்கள் (தாயாரவர்கள்) ஷெ தஞ்சை நகரம் மகரநோன்புச்சாவடிக்கு வருகிறதாய் அந்தச் சவாரியில் என்னை நேமித்து அதனாலே ஷெ சாவடிக்கு வந்த நான் என்பெண் சாதியைப் பார்க்க ஷெ திருவையாற்றுக்கு வந்தவிடத்தில் ஷெ பெரியநாயகக் கொத்தனைக்கண்டு என் பெண்சாதி எங்கேயென்று, நாளது[224] சூலை மீ த்தில் போய்க்கேட்டதற்கு நான் ஊரில்லாத காலத்தில் ஷெ பெண்ணுக்குச் சம்பந்தமில்லாத திருவையாற்மிறாட்டிய[225] லெட்சுமி பாயி என்பவளும், பெரியான் என்பவனும் ஷெ தஞ்சை நகரத்தைச் சேர்ந்த மாது ஸ்ரீபாயிசாயபு[226] அவர்கள் அரண்மனையில் வித்துப் போட்டதாய்ச் சொல்லிப் போட்ட படியாலும், அந்தப்பெண்ணுக்குஷெ பாயிசாயேபு அவர்கள் அரண்மனையில் ஆனந்தவல்லி என்றும் பேர் வைத்து இருக்கிறதாக நான் கேள்விப்பட்டிருப்பதாலும், ஷெ பெண் கள்ளச்சாதியாயும், ஒருவேளை தோஷாறோபண[227] முள்ளவளாயிருந்த போதிலும், அந்தப் பெண்ணை யிப்போது நான் சேர்த்துக் கொள்ள சம்மதித்திருப்பதாலும், என் பெண்சாதியை எனக்கு விடுதலை செய்து கொடுக்க வேணுமென்று தஞ்சாவூர் ரெசிடெண்டு வேலை பார்க்கிற என். டபிள்யூ. கின்றர்சலி இஸ்க்குயர்[228] துரையவர்களுக்கு நான் பிராது கொடுத்ததற்கு என் பெண்சாதியை விடுதலை செய்யாதப்படிக்கு, கும்பனியில் பிராது செய்து கொள்ளச் சொல்லி இன்று செய்து கொடுத்து விட்டபடியால் நான் ஏழையும் இனிமேல் அவ்வளவு பணஞ் சிலவுசெய்து, கல்யாணம் பண்ணிக் கொள்ளவேறே நிர்வாக[229] மில்லாதவனாயிருக்கிற படியால் சகல பிரஜைகளுக்கும் நீதி நியாயஞ் செய்கிற தாங்கள் தயவு செய்து ஷெ யென் பெண்சாதியை விட்டுவிடும் படியாக உத்திரவு அனுப்பிவிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். நான் ஏழையான படியால் தங்களிடத்திலிருந்து உத்திரவு வருகிற

---

222. அட்டிப்பட்டிருந்தேன் - தாமதப்பட்டேன் (அதாவது வரவில்லை)

223. கண்டிய மகாராஜா - விக்கிரமசிங்கர் என்பவர் ஆவர். கி.பி.1816இல் ஆங்கிலேயர் கண்டியைக் கைப்பற்றினர்; விக்கிரமசிங்கர் என்ற அரசரை அப்பதவியினின்று நீக்கினர்; அவரையும் அவர் தாயையும் அவரது நான்கு மனைவியரையும் சென்னைக்கு அனுப்பினர். பின்னர் யாவரும் வேலூருக்கு அனுப்பப்பட்டனர் (பக்கம் 96)

224. நாளது - ஷெ 1842.

225. மிறாட்டிய - மராட்டிய

226. மாதுஸ்ரீ பாயிசாயேப் என்றது அஹல்யாபாயியை ஆகலாம்.

227. தோஷாரோபணம் - குற்றம் பொருந்துதல் (ஆரோபணம் - ஏறிடுதல்)

228. என் டபிள்யூ கின்றர்சலி இஸ்க்குயர் - N.W.Kindersly Esq.

229. நிர்வாகம் - தகுதி; செல்வவளம்

வரைக்கும் தஞ்சாவூர் தபால் ஆபீசில் காரத்திருக்கிறேன்.

௲௮௱௪௰௨ ௵ வேணும்
ஆகஸ்டு ௴ ௰ ௳ அனேக சலாம்.

௲௮௱௪௰௨ ௵ ஜுலை ௴ ௨௰௧ ௳ வயில் கிண்டர்சலி துரையவர்கள் கொடுத்த யிண்டார்சுமெண்டில்[230] கண்ட விவரங்களைப் பார்க்குமளவில் இதில் கவர்ன்மெண்டார் பிரவேசிப்பதற்கு அசாத்தியமில்லை[231]. சென்னைப்பட்டணத்தின் கோட்டை ௲௮௱௪௰௨ [232]௵ ஆகஸ்டு ௴ ௩௰ ௳ உத்திரவுபடிக்கி.

## ஆவணம் எண் 76

தஞ்சாவூர் அரண்மனை சர்க்கில் கோவிந்தறாயர் அவர்கள் சமூகத்துக்கு , ரெங்கசாமி னாயகர் சாஷ்ட்டாங்கமாய்[233] நமஸ்காரம் செய்து எழுதிக்கொண்ட பெட்டிஷன்[234] என்னவென்றால், தஞ்சாவூர் சிவாஜி மகாராஜா வைப்பாட்டி[235] என்கிற மங்கள விலாசத்தில்[236] ஒருவளாகிய[237] கோவிந்தாபாயி[238] லெட்சுமி அம்மாள்[239] இவர்கள் இரண்டு பேரும் திருவையார் சகாஜிநாயகர் அக் (கிரகாரத்திலுள்ள...(அய்ய)ங்காற் பிள்ளை (திருவேங்கடத்தய்ய) ங்காரை இடைவிடாமல் வைத்துக்கொண்டு றொம்பவும் கெட்ட செய்கைகளைச் செய்து கொண்டிருக்கிறாள். அதைப்பற்றித் தங்களுக்கு அனேக பெட்டிஷன்கள் எழுதியும், அதைத் தாங்கள் கவனிக்கவில்லை. இப் (பொழுது) தாங்கள் தயவு செய்து விசாரிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்

1876 ௵ ரெங்கசாமி னாயகர்.
ஆகஸ்டு ௴ 16 ௳

---

230 யிண்டார்சுமென்டு - Endorsement; அலுவலகக்குறிப்பு

231. அசாத்தியமில்லை - சாத்தியமில்லை என்று படிக்கலாம்; (முடியாது என்று பொருள்படும்)

232. 30.8.1842

233. சாஷ்டாங்க நமஸ்காரம் - இரு கை, இரு முழங்கால், இரு தோள், மார்பு, நெற்றி ஆக எட்டு உறுப்புக்கள் நிலந்தீண்டச் செய்யும் வணக்கம்.

234. பெட்டிஷன் - Petition - முறையீட்டு விண்ணப்பம்

235. வைப்பாட்டி - வைப்பு மனைவியர்

236. மங்கள விலாசம் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர்

237. ஒருவர் - ஒருத்தி

238-239. அம்மாமார் (பக். 329) (பக். 327)

## ஆவணம் எண் 77

தஞ்சாவூர் அரண்மனை சர்க்கீல் ம.ஸ்ரீ.ஸ்ரீ. கோவிந்தராயரவர்களுக்கு தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவிலிருக்கும் வீராசாமிப்பிள்ளை மிகுந்த வணக்கத்துடன் சாஷ்ட்டாங்கமாக நமஸ்காரம் செய்து எழுதிக்கொண்ட பெட்டிஷன் என்னவென்றால்.

இப்போது அரண்மனை மங்களவிலாசம் லெட்சுமி அம்மாள் என்பவள் கோவிந்தபாயி அம்மாளை அழைத்துக் கொண்டு போகிறதற்காக இன்றைய தினம் (வந்திருக்கிறாள்) ...... திருவேங்கிடத்தய்யங்காருக்குக். கூட்டிக் கொடுக்கிறதற்கும், தனக்கு அவளை வைத்துக் கொள்ளுகிறதற்கும் தான். ஆனால் அந்த லெட்சுமி அம்மாளுக்கு எப்போதும், கூட்டிக் கொடுக்கிற தொழில் தான். சர்க்கீல் வீராசாமிப்பிள்ளைவாள் நாளையிலே சீனிவாச அய்யங்காருக்குக் கூட்டிக் கொடுத்து.....(வீரா)சாமி பிள்ளைவாள் கேடவைப்பட்டு[240] கலெக்டருக்கு எழுதி பென்ஷன் நிறுத்தப்பட்டு போயிருந்தது. அவர் நாளையிலே லெட்சுமி அம்மாள் என்பவள் மேல்கண்ட திருவேங்கடத்தய்யங்காருக்கு, சர்க்கார் அறிந்த வேலையாக வேண்டும் என்று, வக்கீல் நேமித்தும், பணம் முதலானதுகள் செலவு இட்டுக் கூடிய பிரயாசைப் பட்டார்கள். அதற்கு வீராசாமி பிள்ளைவாள் அந்தப்படிக்கு வேலை கொடுக்க கூடாதென்றும், உள்ளே போகக்கூடாதென்றும், டையிரி[241] மூலமாய் உத்திரவாகப்பட்டு இருக்கிறது. அப்படியிருக்க, இப்போது திருவேங்கிடத்தய்யங்கார் அன்னியில்[242] உள்ளே..............................வைத்துக் கொண்டு, கோவிந்தாபாயி அம்மாளையும் வைத்துக் கொண்டிருக்கிறான். அதற்காகத்தான் லெட்சுமி அம்மாள் கோவிந்தாபாயி அம்மாளை அழைக்க வந்திருக்கிறாள். இதைப் பற்றிக் கலெக்டர் அவர்களுக்குத் தெரியபடுத்தியிருக்கி(றேன்) .......... ...... கையால் பொய்.......................விசாரித்து............(சி)ட்சை[243] விதிக்கும் படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

1876 ௵

செப்டம்பர் ௴ 18 ௳

வீறு பிள்ளை

## ஆவணம் எண் 78

தஞ்சாவூர் ஜில்லா கலெக்டர் *H.S. Thompson* கலெக்டர் துரைவாள் அவர்கள் சமூகத்துக்கு முத்துசாமிப்பிள்ளை அதிக வணக்கமாய் சலாம் செய்து எழுதிக்கொண்ட பெட்டிஷன்

---

240. கேடவைப்பட்டு - கேள்விப்பட்டு

241. டையிரி - Diary - பணிமுறை தேதிக்குறிப்பேடு.

242. அன்னியில் - அன்றியில்

243. சிட்சை - தண்டனை

என்னவென்றால், தஞ்சாவூர் சிவாஜி[244] மகாராஜா அவர்கள் பத்தினி விரதங்களில்[245] மங்களவிலாசம் லெட்சுமி அம்மாள் என்பவள் ஒருவள்[246] திருவாதி[247] புஷ்பமண்டபத் தெருவில் இருக்கிறாள். அவளுடைய தம்பி சீனிவாச அய்யங்கார் என்பவன், அவளுடைய வேலையைப் பார்த்துக்கொண்டு வந்தான். இப்படிக்கு இருக்கும் காலத்தில் ஷை மங்களவிலாச கோவிந்தாபாயி அம்மாள் என்கிற மற்றொருவளை மேல்கண்ட லெட்சுமி அம்மாள் என்பவள் அவளைத் தன்வீட்டுக்கு அழைக்கிறது போல அழைத்து, அவளைத் தன்னுடைய தம்பி கூட்டிக்கொடுத்தாள். அதனுடைய ஆசையினால் இந்த இடத்தை விட்டுப் போகமாட்டேனென்று யிருந்தாள். அப்படிக்கி இருக்கையில் கலெக்டர்வாள் 'கேடல்' துரையவர்கள் சமூகத்துக்கு இப்படிக்குப் பெட்டிஷன்கள் வந்தது. அதைப் பார்த்தவுடனே அவளைத் தஞ்சாவூருக்கு வரும்படியாக கலெக்டர் அனுப்பினார்கள். அந்த லெட்டருக்குப் போகாமல் இருந்துவிட்டார்கள். அதன் பிறகு நீங்கள் தஞ்சாவூருக்கு வராமலிருக்கிற வரையில் பென்ஷன் நிறுத்தப்பட்டு இருக்கிறதுயென்று மறுலெட்டர் அனுப்பினார்கள். அந்த லெட்டரைப் பார்த்தவுடனே புறப்பட்டுப் போய்விட்டார்கள். இப்படிக்கு இருக்கையில் மேல்கண்ட காரியஸ்தனாகிய சீனிவாச அய்யங்கார் என்பவன் இறந்து போய் விட்டான். அதன் பிறகு அவனுடைய ஒன்றுவிட்ட அக்கச்சி[248] பிள்ளையாகிய திருவேங்கிடத்தான் என்பவனை அந்த வேலையைப் பார்க்கும்படியாக அதிகாரப்பத்திரம் கொடுத்துப் பார்க்கச் சொல்லியும், இதற்கு, வக்கில் வைத்துப் பேசச் சொன்னார்கள். அதற்குக் கலெக்டர்வாளும், சர்க்கில் வீராசாமிப்பிள்ளையும், இந்த வேலைக்கு இதுவரையில் வக்கில் வைத்ததுமில்லை. ஆகையால் இவள் வக்கில் வைத்த சங்கதியைப் பார்த்தால் இதில் என்னமோ சூது இருக்கிறதென்று கண்டு பிடித்து, அவனுக்கு இந்த வேலையானது கொடுக்ககூடாதென்றும், அவன் இறாப்தா[249] கோஷா ஸ்திரீக[250]ளுக்கு யோக்கிதை[251] யுடையவனல்ல என்றும், அவன் லெட்சுமி அம்மாள் நேரில் போகக் கூடாதென்றும் வக்கில் வகாலத்து நமாவை[252] வைத்து. அனுப்பி விட்டார்கள். அந்த லெட்டரைப் பார்த்துக்கொண்டு சர்க்கில் வீராசாமிப்பிள்ளை

---

244. இரண்டாம் சிவாஜி

245. பத்தினிவிரதங்கள் - காதல் கிழத்தியர்

246. ஒருவள் - ஒருத்தி

247. திருவாதி - திருவையாறு

248. அக்கச்சி - தமக்கை

249. இறாப்தா - வந்துபோதல்

250. கோஷாஸ்திரீகள் - பிற ஆண்கள் காணாதபடி திரையிட்டு வரும் பெண்கள்.

251. யோக்கியதை - தகுதி

252. வக்காலத்து நாமா - வழக்கை நடத்துவதற்கு வக்கீலுக்குக் கொடுக்கும் அதிகாரப்பத்திரம்.

இருக்கிறவரைக்கும் உள்ளே போகாமலிருந்து, அவன் இறந்து போன பிற்பாடு கொஞ்சகாலம் றாப்தாவில் இருந்து,[253] இப்போது ஆறுமாத காலமாய் நேரில் போய்க்கொண்டு, தனக்கு ஆக வேண்டிய காரியங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறதும் தவிர முன்போல அந்த லெட்சுமி அம்மாள் என்பவள் மேல்கண்ட கோவிந்தாபாயி அம்மாளையும் வரவழைத்துச் சென்ற சூன் மீ முதல் சூலை மீ வரைக்கும், வைத்துக் கொண்டிருந்தாள். இப்படிக்கு இனிமேல் இங்கே வரும்படியாக மேல்கண்ட திருவேங்கிடத்தானைக் கூட்டிக்குடுத்து ஆசையைக்காட்டிக் கொண்டிருக்கிறாள். இப்போது அடிக்கடி தப்பாமல் உள்ளே போய்க் கொண்டிருக்கிறாள். ஆகையால் மேல்கண்ட ஒவ்வொரு சங்கதியையும், சர்க்கில் ஆபிசிலிருக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களையும், இன்னம் முதலான பேர்களையும், விசாரித்து, இதுகள் பொய்யாயிருந்தால் தங்களுடைய அபிப்பிராயத்தில் தோற்றுகிறதோ அதைச் செய்ய வேண்டியது.

*1875 ௵* முத்துசாமி பிள்ளை (ஒ...ம்)
*ஆகஸ்ட் மீ 2 உ*

## ஆவணம் எண் 79

மிமோ[254] மங்கள விலாசம் காரியஸ்தர்களுடையவும் அம்மாமார்க[255]ளுடையவும் பெயர்

காரியஸ்தர்கள் பெயர்

*1)* மல்லாரி தியாகராஜ பண்டிதர் *2)* வீம்மாஜி அர்சூள் *3)* மகாதேவறாவு மானாஜி நிம்பாள் கற்சாகேப் *4)* கிருஷ்ணாஜி மானாஜி சர்வந்தறாவு *5)* ஆத்துமாறாம் தாதாஜி பண்டிதர். *6)* வீரப்பிள்ளை *7)* சந்திர சேகர றாவு பேசுவே[256] *8)* சங்கர றாவு பேசுவே *9)* வெங்காஜி றகுமாஜி திட்சிதர் *10)* நாராயணசாமி ஜாம்பளே றாவு *11)* கோபால றாவு காடிகே *12)* சிவாஜி ஜாதவ் *13)* சாஹஜி மகாதேவ றாவு நிம்பாள்கர் சாகேப் *14)* சுப்பராயலு னாயக்கர்.

அம்மாமார் பெயர்

*1)* சாவித்திரிபாயி அம்மா *2)* ஆதிலெட்சுமிபாயி அம்மா *3)* தர்மவல்லி பாயி அம்மா *4)* இராமாயிபாயி அம்மா *5)* ஞானாபாயி[257] அம்மா *6)* சவுபாக்கிய லெட்சுமிபாயி அம்மா[258] *7)*

---

253. றாப்தாவில் இருந்து - போகாமலிருந்து

254. மிமோ - Memorandum - நினைவுக்குறிப்பு

255. அம்மாமார்கள் - மங்களவிலாச மாதரார் - இவர்கள் பாயி என்றும் அம்மா என்றும் வழங்கப்பெறுவர் (பக்கம் 332)

256. பேசுவே - பிஷ்வா - Peshwa

257. ஞானாபாய் - கியானாபாய்

258. சவுபாக்கிய லெட்சுமிபாயி - இவர் கவரை சாதியைச் சேர்ந்தவர் (பக்.334)

அகிலாண்ட பாயி அம்மா 8) கோவிந்தாபாயி அம்மா[259] 9) காமுபாயி அம்மா 10) சின்ன தர்முபாயி அம்மா 11) பெரிய வீரம்மாபாயி அம்மா 12) கமலாபாயி அம்மா[260] 13) சின்ன சோனாபாயி அம்மா 14) றாதாபாயி அம்மா 15) பெரிய மீனாபாயி அம்மா 16) கோரி லெட்சுமி பாயி அம்மா 17) குப்பம்மாபாயி அம்மா 18) சுந்தறா பாயி அம்மா 19) விசாலாட்சி அம்மா 20) கிருஷ்ணாபாயி அம்மா 21) பெரிய தர்முபாயி அம்மா 22) குணாபாயி அம்மா 23) சத்தியபாமாபாயி அம்மா 24) பார்வதி பாயி அம்மா 25) றமாபாயி அம்மா 26) கெங்காபாயி அம்மா 27) சின்ன வீரம்மாபாயி அம்மா 28) சின்ன மீனா பாயி அம்மா 29) பார்வதி பாயி அம்மா 30) தைய்யாபாயி அம்மா 31) கோதாவிரி பாயி அம்மா 32) இராதாபாயி அம்மா 33) சந்திரரேகாபாயி அம்மா 34) சாரதாபாயி அம்மா 35) பெரிய சோனாபாயி அம்மா 36) அம்முபாயி அம்மா 37) உறரிபாயி அம்மா 38) மங்கள நாயகி அம்மா[261]

## ஆவணம் எண் 80

ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்குக் கோட்டைக்குள் ஜவுளிக்கடைத் தெருவிலிருக்கும் தாசி செங்கமலம் என்கிறனான் தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி[262] என்னவென்றால்

ஷெ கோட்டைக்குள் மேலவீதி கொங்கணீஸ்வர சுவாமி கோவிலுக்கு[263] அடுத்த சந்திலிருக்கும் றாவ்சாயபு அவர்கள் என் வீட்டுக்கு வரத்துப்போக்காயிருந்தார். இப்படியிருக்க ஷெயார் நாளடைவில் நடக்கப்பட்ட நடவடிக்கை எனக்குச் சம்மதமில்லாததினால் நான் வரவேண்டாமென்று, சொன்னதைப் பற்றி ஷெ றாவ்சாயேபு என்பவர் நான் கோவிலுக்கு வரும் போதும், போகும் போதும், அடித்துத் தொந்திரவு செய்ததைப் பற்றி, அமீனா[264] அவர்களிடத்தில் சொல்லிக் கொண்டதற்கு ஷெ அமீனா அவர்கள் ஒரு சேவுகனை என்கூட அனுப்பி வித்ததின் பேரில் அப்பால் என்கூட ஷெ சேவுகனும் இருக்கும்போது ஷெ றாவ்சாயேபு என்பவர் கல்லுகளினா லடித்து தொந்திரவு செய்தார்.

---

259. கோவிந்தாபாயி அம்மா - அம்மாமார்களில் ஒருவர் (பக். 329)

260. கமலாபாயி என்பவர் தேவதாசி போலும் (பக்கம் 331)

261. மங்களநாயகி அம்மா - அம்மாமார் பெயர்கள்; அவற்றைக் கையெழுத்துக்கள் ஆகக் கொள்ள வேண்டும். இவ்விரண்டையும் ஒப்புநோக்கில் சில பெயர்கள் பொருந்துமாறு இல்லை. மங்களவாசத்தார் எத்தனைபேர் என்று கேட்டபொழுது 42 பேர் என்று பதில் வந்துள்ளது. நாற்பத்திருவருக்கும் குறைவாக இருந்தமைக்குக் காரணம் சிலர் இறந்திருந்தமையால் ஆகலாம். (பக். 329)

262. யாதி - விண்ணப்பம்

263. (பக்கம் 213இல் 3)

264. அமீனா - பணம் வசூல் செய்யும் ஓர் அலுவலர்

அது ஷெ சேவுகர்க்குத் தெரியும். மறுநாள் நான் பாக்கில்[265] வந்து மத்தியஸ்த்தர் சாமி அப்பா அவர்களிடத்தில் தெரியப்படுத்திக் கொண்டேன். அதற்கு அப்பா அவர்கள் கொத்தவால்ச் சாவடிக்குத்[266] தாக்கிதை[267] செய்தார். ஷெ கொத்தவாலிலிருந்து 2 சேவுகர்களையும் என் பாரிசப்படுத்தி கைப்பிடியாய்ப் பிடிக்கும்படியாய் உத்திரவு கொடுத்தார்கள். அப்படியே இரண்டு சேவர்களும் வந்து யிருக்கும்போது, மறுபடியும் அன்றையதினம் றாத்திரி களத்தில்[268] சிக்கார்மால்[269] ஆசாமிக்காறனாகிய பேர் தெரியாத அடையாளந்தெரிந்த மனுஷன் பிகாலையம்[270] விட்டெறிந்து ஒடைத்தான். அப்போ ஷெ சேவுகனும் ஷெயாளைக் கைப்பிடியாய் பிடித்து, பங்கில் கொண்டு வந்து ஒப்புவித்தார்கள். மறுபடியும் இன்னும் அரை நாழிகைக்கெல்லாம் ஷெ றாவ்சாயேப் என்பவர் கல்லாலெறிந்தார். உடனே சேவுகர் கண்டு, கைப்பிடியாய்ப் பிடித்து, பாக்கில்[271] கொண்டு வந்து ஒப்புவித்தார்கள். ஷெ பாக்கில் காரியம் பார்த்து, வருகிற அப்பா அவர்கள் இருவர்களுக்கு தாக்கிதை செய்து ஷெ றாவ்சாயேபு என்பவர்க்கு ரெண்டுபேர் சேவுகர் மோசலின்[272] போரில் ஷெயார் வீட்டில் அழைத்துக்கொண்டு போய்விட்டு இருக்க உடனே மறுபடியும் ராத்திரி காலம் ஆனதினால் பின்னையும் வந்து கல்லினாலும், சோட்டுனாலும்[273] ஒட்டினாலையும் இப்படியெல்லாம் யெறிந்து, தொந்திரவு செய்யும்போது அப்போது சாவடியில் வந்து, சொல்லிக் கொண்டு, ரெண்டுபேர் சேவ்கர்களை அழைத்துக் கொண்டு போய்க் கைப்பிடியாய்ப் பிடித்துக் கொடுத்தேன். ஷெ சேவர்களும் பாக்கில் கொண்டு போய் றா[274] முழுதும் பாறாவில் வைத்து, மறுநாள் விட்டார்கள். அந்தை[275] மாச்சலயத்தை[276] மனதில் வைத்துக்கொண்டு, தான் இனிமேல் செய்யாமல் யாரையாவது விட்டுச் செய்கிறதென்றும், அப்படிக்கி ஒருவரும் சம்மதப்படாவிட்டால் தானே வந்து, உயிர்வதை செய்து போடுகிறதென்று, யோசித்துப்

---

265. பாக்கில் - பாட்டிலே - வேறொன்றையும் கவனிக்காமல் தன் காரியமாய்

266. கொத்தவால் சாவடி - டாணா - காவலிடம்

267. தாக்கிதை - தாக்கீது - உத்தரவு

268. களத்தில் - காலத்தில்

269. சிக்கார்மால் -Shikar Mahal - வேட்டைமகால்

270. பிகாலையம் - ஊது குழல் (Bugle)

271. பாக்கில் - பங்கில் என்று திருத்துக.

272. மோசலின் - முச்சலிக்கை (?) - (ஜாமீன்)

273. சோட்டினாலும் - செருப்பினாலும்

274. றா - இரவு

275. அந்தை - அந்த

276. மாச்சல்லியம் - மாச்சரியம்; மாற்சரியம் - பகைமை

பார்க்கிறதாக கொங்கணேஸ்வரர் கோவில்[277] தாஸ்த்தானிகம்[278] முத்துவய்யர் சொல்ல னான் கேள்விப்பட்டு, இருப்பதாலும், ஸ்ரீ மகாராசா[279] சாயேபு அவர்கள் ஏழையாகிய என்பேரில் கிருபை செய்து, மேல் கண்டிருக்கிற றாவ்சாயேபு-க-பேர் தெரியாத அடையாளம் தெரிந்த சிக்கார்மால்[280] அசாமிக்காரன் உ இவர்களை வரவழைத்து அடியிற்கண்ட சாக்ஷிகளையும் வரவழைத்து விசாரணை செய்து, உயிர்வதை செய்ய எத்தனப் பட்டதற்கு தகுமான தண்டனை செய்யும்படியாயும் நான் ஊரிலிருந்து வழக்கப்படி நிலைமையாய் நின்று கோவிலுக்குப் போய் காலக்ஷேபம்[281] செய்து வரும்படியாயும், ஷை றாவ்சாயேபு அவர்கள் என்னை உயிர்வதை செய்யாமலிருக்குபடி ஜாமீன் வாங்கும்படியாயும், உத்திரவாக வேணுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஷை றாவ் சாயேபு என்பவர் நான் போகும்போது, வரும்போது, அடித்துத் தொந்திரவு செய்கிறார். ஷை பீகலையும்[282] கொண்டு (ஒடைத்ததற்கு) கல்லு ஓடு முதலானதினால் அடித்து தொந்திரவு செய்ததற்கு உயிர்வதை செய்து போடுகிறேனென்று யோசனை செய்ததற்கு அறியும் சாக்ஷி. கொங்கணேஸ்வர சுவாமி கோவில் தாஸ்த்தானிகம் உத்தேசம் சுயி வயதுள்ள முத்துவய்யர் -க- தேவஸ்தானம் சேவுகமாயிருக்கிற உத்தேசம் உ யி வயதுள்ள ராமசாமி னாயக்கர்யென்கிற கோவிந்தப்பனாயக்கர் உ ஜவுளிக்கடைத் தெருவிலிருக்கும் உத்தேசம் சுயி வயதுள்ள றோசன பிள்ளை ந ஷை கொத்தவால் சாவடியிலிருந்து வந்த பேர் தெரியாத அடையாளம் தெரிந்த சேவுகர்கள் பேர் உ ஆக சாக்ஷிகள் ரு.

ரு அ ள சுயி சூவ
பிப்ரவரி மீ யி எ வ

## ஆவணம் எண் 81

ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்கு பேரளந் தாலூகா திருவீதி[283]யிலிருக்கும் தாசி சின்னிக்குட்டி மகள் செல்லக்குட்டி மிகுந்த வணக்குத்துடனே தெண்டனிட்டு எழுதிக்கொண்ட மனு.

---

277. (பக்கம் 213இல் 3)

278. தாஸ்த்தானிகம் - தாசனும் தானிகளும் ஆன / தாசன்-ஊழின்; பக்தன்; தானிகம் - கோயில் உரிமையை வழிவழியுடையவன்.

279. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

280. சிக்கார்மால் - ஷிகார்மகால் - வேட்டைமகால்

281. காலக்ஷேபம் - உயிர் வாழ்வதற்குரிய தொண்டு

282. பீகல் - Bugle - ஊதுகுழல்

283. திருவீழி - திருவீழி மிழலை என்னும் ஊர்

ஷை கோட்டைக்குள் மாசி ஜெனரல் ஸ்ரீ முத்தோஜி அப்பா[284] வுடைய ரெண்டாவது சம்மந்தத்[285] தினுடைய பிள்ளையாகப் பேரிட்டுக் கொண்டு திரிகிற கோவிந்தசாமியண்ணா என்பவனுக்கு ஷை முத்தோஜி அப்பாவினுடைய அசல் பிள்ளையாகிய ஸ்ரீ. ராமலிங்கண்ணா பேரில் கோர்ட்டில் பிறாது செய்து, கோர்ட்டில் தலைமையா யிருந்தவர்களைச் சேர்த்துக்கொண்டு துரு வியாச்சியப் பட்டு[286] அதனாலே உள்ளத்தை[287] யெல்லாம் இழந்து போய், சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஷை கோட்டையிலிருக்கும் தாசி அன்னத்து மக்களிடத்தில் நேந்தபடி[288] பொய்யும் புளுகும்[289] சொல்லி அவள் வீட்டில் இவனுக்குச் சாப்பாடு போட்டும், ஷை யாருடைய உள்கட்டுக் கோப்பு வீட்டை அடகு வைத்து, ரூ ள வாங்கிக் கொண்டும், பிச்சைக்காரியிடத்தில் கடனுக்குப் போய் சம்பாதித்த நுணாக்காய்(க்கிர)ந்தியை[290] ஷை அன்னத்து மக்களுக்கும் கொடுத்து, அவள் கெற்பமானவளுக்கு ஏதோ மருந்து கொடுத்து, கொன்று போட்டவன் ஷையாளை மோசம் பண்ணி வீட்டைப்பிடுங்கிக் குமரவேலு வாத்தியிடத்தில் உள்கட்டில் ரூ. அய க்கு அடகுசீட்டு எழுதிக்கொடுத்து, பணம் வாங்கிக் கொண்டு வெளிக்கட்டு முதலான குத்திவிளக்கு[291] முதலான பாத்திரங்களையும் வஜாறத்துமாயபு[292] ஸ்ரீபரமசிவ ஜாதவ் விடத்தில் ரூ உ ள ரு யக்கு அடகுசீட்டு பண்ணிக்கொடுத்து, ஸ்ரீராமலிங்கண்ணா பிள்ளைகள் தயாவிசையமாய்[293] மனதிரங்கிக் கொடுத்த ஆவிக்கரைக் கிராமம் பத்துவேலி நிலத்தையும் காடறம்பம்[294] சர்வமான்யம்[295] சொற்ப[296] நிலத்தையும் பள்ளிகளிடத்திலும், தன் மாமனாரிடத்திலும் ரூ உ ரூ க்கு கெடுசாசனம்[297] பண்ணிக்கொடுத்துப் போட்டு, சாலிய மங்கலத்திலிருந்து

---

284. முத்தோஜி அப்பா (பக்கம் 80)

285. சம்மந்தம் - மனைவி

286. துருவியாச்சியம் - துர்வியச்சியம் - அநியாயமான வழக்கு

287. உள்ளத்தை - உள்ளதை - உள்ளபொருள்கள்

288. நேந்தபடி - நேர்ந்தபடி - இஷ்டப்படி

289. புளுகு - கற்பனை

290. நுணாக்காய் கிரந்தி - நுணாக்காய் போன்ற கிரந்திப்புண் (Venereal)

291. குத்திவிளக்கு - குத்து விளக்கு

292. வஜாரத்துமாப்பு - அரசகுடும்பத்தைச் சேர்ந்த பெருங்குடிமகள்

293. தயா - தயை, அருள்; விசையம் - விஷயம்

294. காடாரம்பம் - நீர்ப்பாசனம் இல்லாத நிலப்பகுதி

295. சர்வமான்யம் - எந்தவிதமான தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்கும் நிலம்.

296. சொற்ப - சிறிது

297. கெடுசாசனம் - குறிப்பிட்ட காலத்துக்குத் தொகை செலுத்துவதாகக் குறிப்பிட்டு எழுதும் அடைமான பத்திரம்.

நாலுவேலி நிலத்தையும் ஸ்ரீபஸாறஜீ அப்பா வீட்டு அடிமை அய்யாசாமியிடத்தில் வித்துப்போட்டும், ஸ்ரீ ராமலிங்கண்ணாவாள் கொடுத்த ஆஸ்தி வகையறாக்களையெல்லாம் அவர்கள் தானே கொன்று போடுகிறதாய் சுந்தரம் என்பவனை கோவிந்தசாமியும், அவன் தாயாரும் சேர்த்துக்கோண்டு, ரொம்பவும் குறைச்சலான பேருக்கு இடம்பண்ணிக்கொண்டும் சகலத்தையும் கடன் பத்திர முதலானத்தையும் ஷெ சுந்திரம் கொள்ளைய்யிடவும் பக்கிரியாயும் [298] நிலத்தைத் காலடியாய்த் துண்டு முதலானதுமில்லாமல் பக்கிரியைப் போலே.........ஊரில் வந்து அவர்களை வணங்கினான். மேலெழுதிய காரியங்களை ருசுப்படுத்தும் போதுமான பெரிய மனுஷாள் ஸ்ரீவஜாறத்துமாயபு சுபாஜிமாடிக்கறாவு சாயேபு அனேகம் பெரிய மனுஷளைக் கொண்டும், ராமலிங்க அண்ணா அவாள் வீட்டில் கணக்கில் கட்டிருக்கிற மாதர்னாமா [299] அத்தாட்சியினாலும் கோவிந்தசாமி மாமியாராகிய தாசி அன்னத்தைக்கொண்டும் ருசுப்படுத்தச் சித்தமா யிருக்கிறேன். என் தங்கையை மோசம்பண்ணி இவனுடைய போக்கிரித் தனத்தை அறியாதவளான என் தங்கை ஷெ ஊரில் வந்திருந்து கொண்டு, சகலமான அரிசிகளும் [300] என் வீட்டிலிருந்து கொண்டு வந்து, ஷெ ஊரில் அம்பட்டன் சவரம் பண்ண வேண்டியதுக்குப் போட்டிருந்த குச்சில் [301] ஒரு விரியோலை [302] யை மறைத்துக் கொண்டு எட்டுமாச காலம் ஷெயானுக்குச் சமயல் பண்ணிப் போட்டுக் கொண்டு, அவனுக்குப் பெண்சாதியாயு மிருந்ததில் எனக்குக் கொடுக்க வேண்டியது ரூ. உ ள ரு ம ஷெ என் தங்கை அரூப [303] மாயும் தேவடியாதினத்துக்கு [304] யோக்கியமில்லாதவளாயிருந்த போதிலும், அவளைக் கொண்டு எங்கள் குடுத்தனத்திற்குள்ள நெல்லும் சிலவும் சமயலுக்காகவும் வருத்தமில்லாமல் நடப்பித்து வந்தோம். மறுபடி ஷெ குலியிலும் சமயலும் வேறே....... சிக்கு கொடுத்த ஷெ சிலவினாலும் ரூ ரு ம வரவேணும். இதற்காக எங்கள் பத்து ரூ ம க ஸ்ரீ அண்ணாவாள் [305] பிள்ளைகள் தலையாரி மோசவில் வயிற்று தொந்தரவின் பேரில் வருத்தப்பட்டு, ஒரு தவலையை வித்துக் கொடுத்தான். மற்ற பணத்திற்குப் பிறாது செய்யலாமென்றால் அதம்பாவூரில் அவனுக்குத் தயாவிசையமாய்க் கொடுத்துச் சொற்ப நிலத்தையும் ஷெ ஊர் தட்டானிடத்தில் அடகு

---

298. பக்கிரியாயும் - பாக்கியாயுள்ள என்று படிக்க.

299. மாதர்னாமா - மகசர்நாமா - பலர் கையெழுத்திட்ட பொது விண்ணப்பம்.

300. சகலமான - அரிசிக்கும் - அரிசி முதலான எல்லாப் பொருள்களும்

301. குச்சில் - சிறிய வீடு

302. விரியோலை - ஓலைப்பாயி

303. அரூபம் - நல்ல உருவம் இன்மை

304. தினத்துக்கு - தனத்துக்கு - நிலைமைக்கு

305. ஸ்ரீ அண்ணாவாள் என்றது ராமலிங்கண்ணாவை

வைத்துப் பணம் வாங்கிக் கொண்டு, ஷெ அம்பட்டன் குச்சிலே குடியிருக்கிறான், போறாததுக்கு என் தங்கைக்கும் அப்படிப்பட்ட வியாதி[306] யைக் கொடுத்து விட்டான். ஷெ வியாதியைப் பற்றி விசாரித்தாலும், ஸ்ரீ டாக்டர் துரையவர்கள் உத்திரவின் பேரில் திறசற[307] மருந்து கொடுத்து, மீசையைச் (வீசையைச்) செறச்சுப்போடச் செய்ததும் விசித[308] மாகலாம். போக்கிரியும் நிலையற்ற காலாடியுமா[309] யிருந்த போதிலும் சம்பாதித்தாவது குடுப்பானென்று தைரியப்படுகிறதுக்கு முட்டாளும் எழுத்தறியாமூடனுமாயும் இருக்கிறான். முத்தோசியாப்பாவுக்கு அவன் அசலாயிருந்தால் இப்படிக்கி இழிவான காரியங்கள் செய்து கொள்ளமாட்டான். ஸ்ரீ மல்லாற்ஜி அப்பா வீட்டு அடிமை அய்யாசாமி இவன்களுக்காகவே போட்டிருக்கிற சாயே கடை நிமித்தத்தினால் கோட்டையில் அனேகம் பேர் துர்புத்திக்காரர்களைச் சேர்த்துக்கொண்டு, குடிக்கிறதும் சபையில் சிலருடைய ஒத்தாசையினாலும், ஏதோ அறுநூறு, எண்ணூருக்குப் பிராது செய்திருக்கிறதாயும் அதில் எனக்குக் கொடுத்து விடுகிறதாயும் சொல்லுகிறான். ஸ்ரீ அண்ணாவாள் பிள்ளைகளுக்கு ஷெ ஸ்ரீ மல்லாற்ஜி அப்பா வீட்டு அடிமை அய்யாசாமி கொடுக்க வேண்டிய ரூ உ ள ரு ய கோவிந்தசாமி அய்யாசாமிக்குச் சாதகமாய்த் தான் குடியிருந்த கொஞ்ச வீட்டையும், ஷெ சபையில் ஜாமீன் கொடுத்து,அந்தப்படி நடவாததினாலே ஷெ வீட்டை ஏலம்போட வேண்டியதுக்காக தண்டோறானாலும் தேதியும் போட்டதிலும், ஷெ தேதியில்லாத போக்கிரியாயும் சுத்த பரதை[310] யாயும் கல்யாண வீடுகளில் வயறு வளக்கும்படியான அந்தஸ்து இருப்பதாலும் ஏழையாகிய என்துகை என்னமாய்க் கிடைக்கும். அப்படிப்பட்டவனுடைய சொல்லை னான் எப்படி நம்புகிறது. அய்வேஜிக்கி[311] யிடமில்லை என்பது நடவடிக்கையில் தெரிகிறபடியாலும், நூறு பொன்னுக்கு மேல்பட்ட துகை தர்மசபையைச் [312]சேர்ந்ததாகையாலும், ஏழை பேரில் தயவுசெய்து, ஷெ யானை வரவழைத்து விசாரித்து னான் இன்னவிதமாய்ப் பிறாது செய்து கொள்ளுகிறதென்று

---

306. "அப்படிப்பட்ட வியாதி" என்றது நுணாக்காய்க்கிரந்தி என்ற நோயை

307. திறசற - தினசரி - நாடோறும்

308. விசிதம் - விளக்கம்

309. காலாடி - வேலையில்லாமல் திரிபவன்

310. சுத்த பரவை - மிக்க ஏழை

311. அய்வேஜி - பணம்

312. தர்மசபை - 1800 முதல் தஞ்சையில் இருந்த நான்கு வழக்கு மன்றங்களில் ஒன்று.

உத்திரவு கொடுக்கும்படியாய், தர்மசபையாரவர்களுக்கு உத்திரவு ஆக வேணுமென்று தெண்டனிட்டுக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சூஅ ள சயி சு ஷ இந்தக் கிறல் செல்லக்குட்டி
நவம்பர் மீ ச[313]

## ஆவணம் எண் 82

ஸ்ரீ மகாராஜா[314] சாயேபு அவர்கள் திவானத்துக்கு[315] சரபேந்திர ராசப்பட்டணம் தாசி றமாமணி தெண்டனிட்டு எழுதிக்கொடுத்த மனு என்னவென்றால்.

என்னுடன் அஞ்சுபேர்களை ஸ்ரீ அரண்மனையாரவர்கள் கிரையத்துக்கு[316] வாங்கி ஷெ சரபேந்திர ராசப்பட்டணம் சிலம்பறயீஸ்பறன்[317] கோவிலுக்குப் பொட்டுக்கட்டி[318] வைத்து ஷெ கோவிலில் பொட்டுக்கட்டி கொண்டதற்கு பேர்வழி -க-க்கு அஞ்சு பணம்[319] ரெண்டு கலம் நெல்லு சம்பளஞ் செய்து கொடுத்தார்கள்.

உ -வது ஷெ சம்பளத்தைத் தவிர ஷெ கோவிலில் யாதொரு வருமானமில்லாமலும் வேறே சம்பாத்தியமில்லாமலும் அரண்மனையைக் காத்துக் கொண்டு, அரண்மனையார் கொடுக்கிற அன்னத்தை ஷெ. அசாமிக்காரர்கள் அவாளவாள் சம்பளத்தை வாங்கிக் கொண்டு காலச்சியம்[320] பண்ணிக் கொண்டு வருகிறோம்.

ந- வது ஷெ அசாமிக்காரரில் சீத்தா என்பவள் உத்தேசம் யெட்டு ஒன்பது மாசத்துக்கு முன் பித்தலாகிரி[321]யினால் சித்த பிரமத்தி தப்பி [322]யின்ன விடமென்று தெரியாமல் திசை தப்பி போய்விட்டாள். அவளுடைய சம்பளத்தைத் தவுலத்து பரமலோக்கு மத்தியஸ்த்தர்[323]

---

313. 4-11-1846
314. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை
315. திவானத்துக்கு - முன்னிலைக்கு
316. கிரையத்துக்கு - விலைக்கு
317. 'சிதம்பர யீசுவரன்' என்று திருத்திப் படிக்க
318. பொட்டுக்கட்டுதல் - கோயிலுக்கு உரிமையாக்கித் தாசிக்குத் தாலி கட்டும் சடங்கு.
319. அஞ்சுபணம் - ஐந்து பணம் (2 வெள்ளிப்பணம் அல்லது அரைச்சக்கரம்) (பக்கம் 150)
320. காலச்சியம் - காலக்ஷேபம் - காலங்கழித்தல்
321. பித்தலாகிரி - பித்தமயக்கம்
322. சித்தபிரமத்திதப்பி - சித்தப்பிரமை உடையவளாய் (?) பைத்தியம் பிடித்து
323. தவுலத் பரமலோக்கு மத்தியஸ்தர் - மக்கள் தொடர்பு அலுவலர்.

நிறுத்தல் செய்து போட்டார்கள். அவளுடைய பிள்ளைகள் சின்னம் செறுசானத்தினால்[324] ஷ பிள்ளைகளில், பெண்பிள்ளை பிள்ளை க -க்கு மாதம் க -க்கு ரூ 2 கொடுக்கிறதாய்ச் சொல்லிப் பால் கொடுக்கத் தாய் வைத்துப் போட்டு, ஷ தாய்க்குக் கொடுத்து வரவும். ஷ பிள்ளைகளைச் சவறட்சனை செய்து வருகிறதற்கு எனக்கு வருகிற அஞ்சு பணம் ரெண்டுகல நெல்லும், என் சம்சாரத்திற்குப் பத்திரமாய்த் தெரியப்படுத்துகிற படியால் ஷ பிள்ளைகளைச் சவறட்சனை செய்ய எனக்கு நிர்வாகமில்லாததினால் ஷ சித்தாளுடன் அசாமியை அவள் பெண் பேரால் செய்து கொடுக்க வேணுமென்று எங்களுக்கு மத்திஸ்த்தராகிய மல்லாற்சாமி பண்டிதவர்களிடத்தில் யாதி[325] கொடுத்தேன்.

௪ வது ஷ மத்திஸ்த்தர் ஷ சம்பளத்தை ஷ பிள்ளைபேரால் செய்து கொடாமல் எங்களுக்கு அரண்மனையாரவர்கள் சமபளம் கொடுத்து நியமித்து இருக்கிற விடத்தில் நாங்களிருக்கிறபடியால் அரண்மனையில் எங்களுக்குச் சேவுகம் நேரிட்டால் ஷ சித்தாளுடைய சேவுகத்துக்கு என்னைப்பதில்வைத்துப் பார்த்துக் கொள்ளுகிறதாயும் ஷ பிள்ளைகளைச் சவறட்சணை செய்துவருகிறதாயும், சகலத்துக்கும் பாத்தியப்பட்டு ஷ சம்பளம் நெல்லும் என்னிடத்தில் கொடுத்து வரவேணுமென்று, என்னை அத்தாட்சி எழுதிக்கொடுக்கச் சொல்லினாலும் அத்தாட்சி எழுதிக் கொடுத்து ஷ சம்பளம் நெல்லைக் கேட்டதற்கு கார்பார் பிரசங்கத்துக்கு[326] எழுதி யிருக்கிறதாயும், உத்திரவு வந்தவுடன் கொடுக்கிறதாகச் சொல்லி, ஷ மத்தியஸ்த்தர் இரண்டுமீ வரைக்கும் சொல்லிக்கொண்டு, வந்தவர் அப்பால் இன்னம் உத்திரவு வரவில்லை யென்றும் கார்பார் பிரசங்கத்தில் போய்க் கேட்கச் சொல்லிச் சொன்னார்கள்.

ரு-வது ஷ கார்பார் பிரசங்கத்தில் போய்க்கேட்டால் சால்சாப்பு[327] பண்ணி உத்திரவு கொடுக்கிறோம், என்று சொல்லிக்கொண்டு, மூன்று மாத காலமாய் இழுத்து விட்டுக் கொண்டு வருகிறார்களே தவிர உத்திரவு கொடுக்காததினால் ஷ பிள்ளைக்குப் பால் கொடுக்கிற தாய்க்கு நாலுமாசம் வரைக்கும் பாக்கியிருக்கிறது. அவள் கேட்கும் போதெல்லாம் அரண்மனையில் ஷ பிள்ளையின் தாயார் சம்பளம் உத்திரவாகி வந்துவிடும், வந்தவுடன் கொடுக்கிறேனென்று சொல்லிக்கொண்டு, வந்தேன். இப்போது ஷ பால் கொடுக்கிற தாய் ஷ பிள்ளை கொண்டு வந்து விட்டுப் போய்விட்டாள். இப்போது ஷ பிள்ளை வயிற்றுக்குப் பால் யில்லாமல் கஞ்சித்தண்ணிகளைக் கொடித்து[328] ஷ பிள்ளை

324. செறுசு - மிகச்சிறியவள்; ஆனத்தினால - ஆனதால்.

325. யாதி - விண்ணப்பம்

326. கார்பார் பிரசங்கம் - கார்பார் அலுவலகம்; இது சர்க்கிலாபீஸ் எனப் பெறும்

327. சால்சாப்பு - சரியாகப் பதில்கொடாமல்

328. கொடித்து - குடித்து

பரமேஸ்பர[329] சாட்சியாய் வயற்றுக்குப் பாலில்லாமல் அரண்மனை பிள்ளைகளாயிருந்து இறந்து போறதா யிருக்கிறது. நான் சகலத்துக்கும் பாத்தியப்பட்டு அத்தாட்சி எழுதிக் கொடுத்து னான் ஷெ பிள்ளைகள் சவறட்சணை செய்யாமல் இறந்து போனால் சிசுவதை[330] எனக்கு லபிக்கும்[331] போலேயிருக்கிறது.

ஆகையால் லோகத்தின் இருளை விலக்கா நின்ற சந்திரனைப் போலொத்த ஏழைகளை ரட்சித்து, அன்னம் கொடுத்துக்காப்பாற்றி வருகிற ஸ்ரீமகாராஜா சத்திரபதி சாயேப் அவர்கள் ஏழையின் பேரில் கிருபை செய்து ஷெ பிள்ளைகள் பிழைத்து அரண்மனை உள்ளியம்[332] செய்து வரும்படியாய் ஷெ சம்பளம் நெல்லுக்கு உத்திரவு கொடுக்கும்படியாய் கார்பார் பிரசங்கத்தாரவர்களுக்கு உத்திரவாக வேணுமென்று ஏழை தண்டனிட்டுக் கேட்டுகொள்ளுகிறேன்.

ஹு அ ள ச ய் ம எ ஷு
பிப்ரவரி மீ உ ம ந[333] ௨

இந்தக் கிறல்
ரமாமணி கைக்கிறல்.

## ஆவணம் எண் 83

ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்கு நியாயா திசர[334] சபையின் விசுவாவிசு[335] ஷு த்திய 2-வது லக்கத்தின்

நியாயப்பிரதிவாதியாகிய கோட்டைக்குள்ளிருக்கும் வீறறாகு பிள்ளை எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால் ஷெ லெக்கத்தின் வாதிகளாகிய நீலகண்டன் வகையறா ந ய உ பேர்கள் என் குமாரத்தியைச் சபர்திஸ்தியாய்த்[336] தூக்கிப் போய் காணாத்தாலி[337] கட்டின சங்கதியைப் பத்தி நான் பிராது செய்து கொண்டதின் பேரில் நியாய சபையாரவர்கள் ஷெ என் பிராதில் கண்ட சாட்சி ருசுவார்த்திகளைக் கேட்டு, ஷெ பெண் கழுத்திலிருந்த

---

329. பரமேஸ்பர - பரமேசுவர

330. சிசுவதை - குழந்தையைக் கொல்லுதல் ஆகிய பாவம்

331. லபிக்கும் - கிடைக்கும்

332. உள்ளியம் - ஊழியம்

333. 23-02-1847

334. நியாயதிசர - நியாயாதீச - இது 1800 முதல் தஞ்சையில் விளங்கிய நான்கு நீதிமன்றங்களில் ஒன்று (பக்கம் 167)

335. விசுவாவிசு - விசுவாவசு - ஆண்டறுபதுள் முப்பத்தொன்பதாவது

336. சபர்திஸ்தியாய் - ஜபர்தஸ்தியாய் - பலவந்தமாய் - வன்மையாய்

337. காணாத்தாலி கட்டுதல் - வலிதிற் பெண்ணை கொண்டு சென்று பெற்றோருக்குத் தெரியாமல் தாலி கட்டுதல்

காணாத்தாலி, மட்சங்களையும் பார்த்து, கயிலாசவாசி [338]யாகிய ஸ்ரீ பெரிய மகாராஜா[339] சாயேபு அவர்கள் நாளையில் கல்லுக்கார மேலு. க வீறாகு னாயக்கர்-க ரெங்கனாத பிள்ளை-க. இந்த மூன்று பேர்கள் காணாத்தாலி கட்டின சங்கதியைப்பத்தி ஷெ மூன்று பேருக்குமான மூன்று தீர்ப்பின்படி ஷெ நீலகண்டன் வகையறாப் பேர்களுக்கும் தண்டனை விதிக்கிறதென்று, ஷெ என்பிராதை நியாயதாயி முடிவு செய்ததின் பேரில் ஷெ தீர்ப்புக்கு ஷெ நீலகண்டன் வகையறாப் பேர்கள் அப்பிறி தோஷப்பட்டு, [340] புணர நியாயம்[341] பண்ணிக்கொண்டார்கள். தர்ம சபையார் அவர்கள் ஷெ நியாயசபையின் ஷெ தீர்ப்பைத்தானே உறுதிப்படுத்தி யெதாப்பிறாப்பத்தியாகத்[342] தீர்மானித்தற்கு மேல் ஷெ நீலகண்டன் வகையறாப் பேர்கள் நியாயாதி சபையில் துதியபுணர நியாயம்[343] பண்ணிக் கொண்டார்கள். ஷெ நீலகண்டனுடைய பெரியதாயார் சுந்தரம்மாள் ரூ. சுள, ருள வரையில் சிலவழித்தாவது ஷெ தீர்ப்பை உடைத்துத் தன் பட்சத்தில்[344] மறு தீர்ப்பு செய்து கொள்ளுவே னென்று சொல்லிக்கொண்டு திரியுறாள்[345]. ஷெ நீலகண்டன் வகையறாப் பேர்கள் மிகுந்த பணக்காரரும் பெரிய மனுஷாளுடைய சிபாரிசு உள்ளுவர்களுமாக யிருப்பதால் நியாயாதி சபையார் அவர்கள் ஷெ நீலகண்டன் வகையறாப் பேர்களுக்குப் பட்சமாயிருந்து கொண்டு, ஷெ தீர்ப்பை உடைத்து மறுதீர்ப்பு செய்ய நியாயாதி சபையாரவர்கள் எத்தனப்பட்டு யிருக்கிறதா கக் கேள்விப்பட்டு இருக்கிறேன். நான் மிகவும் ஏழை வர்த்தகன். ஷெ எதிரிகளைப் போல சிலவழிக்க என்கையில் பணங்காசு கிடையாது. ஆனதால் ஷெ நியாயாதிசர் சபையார் அவர்கள் செய்கிற அநியாயத்தைப்பத்தி [346]மேலான சமூகத்துக்குத் தெரியலாவதாய் இந்த மனு மூலமாய்க் கதறலானேன்.

ஆகையால் தயவுசெய்து ஷெ நி(ஞ்)யாயாதிசர்[347] சபையாரவர்கள் எந்தத் சாஸ்த்திர ஒழுங்கைக் கொண்டு ஷெ தீர்ப்பை உடைக்க ஏதுபட்டுயிருக்கிறார்களோ, அந்தச் சாஸ்த்திர

---

338. கயிலாசவாசி - இறந்த அரசர்களைக் குறிக்கும் சொற்றொடர்

339. பெரிய மகாராஜா என்றது இரண்டாவது சரபோஜியை

340. அப்பிரிதோஷப்பட்டு - வெறுப்படைந்து

341. புணர்நியாயம் - புனர்நியாயம் - மேல்முறையீடு-வழக்கை மீண்டும் விசாரித்தல்

342. யெதாப்பிறாப்பத்தியாக - எதாப்பிரகாரமாக - வழக்கம்போல்

343. துதியபுணர்நியாயம் - துவிதிய புணர் நியாயம் - இரண்டாவது தடவை மேல் முறையீடு

344. தன்பட்சம் - தன்பக்கம்

345. திரியுறாள் - திரிகிறாள்

346. பத்தி - பற்றி

347. நி(ஞ்)யாயாதிசர்-நியாயாதீசர்

ஒழுங்குகளை அரண்மனையிலிருக்கிற தர்ம சாஸ்த்திரம் வாசித்த அனேகம் சாஸ்த்திரிகளுக்கு மெய்ப்பித்து அப்பால் ஷெ நம்பரின் வியாச்சித்தை[348] நியதாய்[349] முடிவு செய்யும்படி நி(ஞ)யாயாதிசர் சபையார் அவர்களுக்கு உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சூ அ ள ச யி சூ ஸு
பிப்ரவரி மீ உ யி எ[350] உ

வீராகு பிள்ளை
கையெழுத்து.

## ஆவணம் -எண் 84

மத்தியார்ஜூனம்[351] தஞ்சாவூர் இலாகா பென்ஷன் பட்டுவாடா[352] வானதும் பாக்கியும்[353] கண்டு ஜாப்தா கும்பகோணம் தாலுகா 1873 ஸு செப்டம்பர் மீ 30 உ உத்திரவு வந்தது.

| | மத்தியார்ஜூனம் பென்ஷன்[354] | தஞ்சாவூர் பென்ஷன் |
|---|---|---|
| | 1526-12-0 | 41-0-0 |
| பட்டுவாடா | 1526-12-0 | 36-0-0 |
| பாக்கி | | 5-0-0 |

2160 நீ நாகனிஸகங்கா தறனா பேயு ஆகஸ்டு
24:97 இந்த உ நம்பர் ரசீது கைப்பிரதியை[355] அனுப்புகிறேன்.

J. Mahadeva Rao.

---

348. வியாச்சியம் - வழக்கு

349. நியதாய் - நியதியாய் - நீதிமுறைப்படி

350. 27-2-1846

351. மத்தியார்ஜுனம் - திருவிடைமருதூர் (அர்ஜுனம்-மருது); தலவிருட்சம் மருது; தலைமருது-மல்லிகார்ச்சுனம்; ஸ்ரீசைலம்; இடைமருது-திருவிடைமருதூர்; கடைமருது-புடார்ச்சுனம், திருப்புடைமருதூர் (திருநெல்வேலி மாவட்டம்)

352. பட்டுவாடா - கொடுத்தல்

353. பாக்கி - மீதி

354. மத்தியார்ச்சுனம் பென்ஷன் என்பது திருவிடை மருதூரில் இருந்த அமர்சிங்கரின் வழியினருக்கு அளித்த உதவித் தொகை.

355. கைப்பிரதி - மூலவோலை - Original

## ஆவணம் எண் 85*

மத்யார்ஜூனிலுள்ளமேன்மை தங்கிய இராசா பிரதாபசிம்ம மகாராசாவின் வளர்ப்பு மகனான இராச ஸ்ரீ ஏகோசி சாகேப்[356] அவர்களின், 1877 மார்ச்சு முதல் ஜூலை வரையிலான ஒய்வூதியப் பட்டியல்.

பெயர்.

இராச ஸ்ரீ ஏகோசி அவர்களுக்கு 1877 மார்ச்சு முதல் சூலை வரையில் ஒய்வூதியம் மாதம் உரூ 1000/- தொகை உரூ 5000/- மொத்த உரூ 5000/- உம் பெற்றுக் கொள்ளப்பட்டது.

தேதி ஆகஸ்டு 9, 1877.

கையொப்பம் ரா. ஏகோசி

தஞ்சாவூர்

அரசுப்பிரதிநிதிகள் அலுவலகம்

ஆகஸ்டு 1877

மத்யார்ஜூனிலுள்ள மேன்மை தங்கிய இராசா பிரதாபசிம்ம மகாராசாவின்[357] வளர்ப்பு மகனான இராசஸ்ரீ ஏகோசி அவர்களின் நவம்பர் 1873 ஆம் மாதத்திய ஒய்வூதியப்பட்டியல்.

பெயர்.

இராசஸ்ரீ ஏகோசி -காலம் நவம்பர் 1873-ஒய்வூதியத்தொகை உரூ 1000.0.0 மொத்தம் உரூ ஓராயிரம் மட்டும்.

டிசம்பர் 10, 73

கையொப்பம்

இராச ஸ்ரீஏகோசி.

தஞ்சாவூர்

அரசுப்பிரதிநிதிகள் அலுவலகம்

டிசம்பர் 5, 1873

## ஆவணம் எண் 86*

மத்யார்ஜூனிலுள்ள[358] மேன்மை தங்கிய இராசா பிரதாபசிம்ம மகாராசாவின் வளர்ப்பு மகனான இராச ஸ்ரீஏகோசி அவர்களின் அக்டோபர் 1873 ஆம் மாதத்திய ஒய்வூதியப் பட்டியல்

---

356. யேகோஜி - திருவிடை மருதூரில் இருந்த அமர்சிங்கரின் மகன் பிரதாப சிம்மர். இப்பிரதாபசிம்மரின் சுவிகார மகன் யேகோஜி எனப்பட்டார் (திருமுடி சேதுராமன் சுவடி, பக்கம் 492)

357. பிரதாபசிம்ஹர் - இவர் திருவிடைமருதூரில் தங்கியிருந்த அமர்சிங்கரின் மகன் ஆவர்.

358. மத்தியார்ஜுனம் - திருவிடைமருதூர்

* ஆவணம் எண் 85, 86 ஆகியன ஆங்கில ஆவணங்கள். தமிழ் மொழி பெயர்ப்பு: மோடி வல்லுநர்

பெயர்.

இராசஸ்ரீஏகோசி-காலம் அக்டோபர் 1873-ஒய்வூதியத் தொகை உரூ 1000-0-0 மொத்தம் உரூ ஓராயிரம் மட்டும்.

நவம்பர் 11, 1873

கையொப்பம்
இராசஸ்ரீஏகோசி
தஞ்சாவூர்
அரசுப் பிரதிநிதிகள் அலுவலகம்
நவம்பர் 1873

மத்யார்ஜூனிலுள்ள மேன்மை தங்கிய இராசா பிரதாபசிம்ம மகாராசாவின் வளர்ப்பு மகனான இராசஸ்ரீஏகோசி அவர்களின் செப்டம்பர் 1873 ஆம் மாதத்திய ஓய்வூதியப் பட்டியல்.

பெயர்.

இராசஸ்ரீ ஏகோசி-காலம் செப்டம்பர் 1873-ஒய்வூதியத் தொகை பெற்றுக் கொண்டது உரூ 1000-0-0 மொத்தம் உரூ ஓராயிரம் மட்டும்.

அக்டோபர் 10, 73

கையொப்பம்
இராசஸ்ரீ ஏகோசி
தஞ்சாவூர்
அரசுப்பிரதிநிதிகள் அலுவலகம்
அக்டோபர் 1873

தஞ்சாவூர் அரசுப் பிரநிதியிடமிருந்து 1878 ஆம் ஆண்டு புத்தகங்களின் விலைக்காக உரூ 12 (மூன்று ரூபாய்களாக) மூன்று அணாவும் பெற்றுக் கொள்ளப்பட்டது.

மார்ச்சு 13, 1878

தஞ்சாவூர் அரசுப் பிரதிநிதியிடமிருந்து சனவரி, பிப்ரவரி மாதங்களின் என்னுடைய பள்ளிக்கூடக் கட்டணத்திற்காக உரூ 4/- பெற்றுக் கொள்ளப்பட்டது.

இளவரசர்[359]

மார்ச்சு 11, 1878

359. இளவரசர் என்றது திருவிடைமருதூரில் வாழ்ந்த யேகோஜியின் மகன் ஆகலாம்.

# ஆவணம் எண் 87

யாதாஸ்தும்[360] அவுசாயேபு[361] பாயிசாயேபு[362] அவர்களுக்கு சறபறாயி[363] மஹாலிலிருந்து ரொக்கம் சேரவேண்டிய துகை ஜாப்தா 1863ம் ஹூ ஜனவரி மீ வரைக்கும்.

| பெயர் | துகை<br>ரூ.அ. பை |
|---|---|
| ம. ஆவுசாயேபு[364] | 1 - 11 - 10 |
| ம. காமாட்சிஅம்பாபாயி சாயேபு | 58 - 4 - 11 1/4 |
| ம. சய்யம்பாபாயி சாயேபு[365] | 1 - 3 - 1/4 |
| ம. மாம்பாபாயி சாயேபு | 1 - 14 - 11 3/4 |
| ம. ஜீஜாபாயி சாயேபு | 4 - 4 - 5 3/4 |
| ம. ஜயத்தியம்பாபாயி சாயேபு | 2 - 10 - 3 3/4 |
| ம. அபரூபம்பாபாயி சாயேபு | 3 - 13 - 9 |
| ம. அவசாம்பாபாயி சாயேபு | 2-9-1 3/4 |
| ம. ஸகுணாம்பாபாயி சாயேபு | 0 - 3 - 7 3/4 |
| ம. சிமாம்பாபாயி சாயேபு | 4 - 8 - 6 3/4 |
| ம. திபாம்பாபாயி சாயேபு | 6 - 8 - 4 1/4 |
| ம. ராமகுமறாம்பாபாயி சாயேபு | 2 - 2 - 11 1/2 |
| ம. யேசுவத்தியம்பாபாயி சாயேபு | 7 - 8 - 10 1/4 |
| ம. சுகுறாம்பாபாயி சாயேபு | 2 - 1 - 3 3/4 |
| ம. கிரிஜாம்பாபாயி | 4 - 14 1/2 |
| ம. கவுறாம்பாபாயி சாயேபு | 11 - 14 6 3/4 |
| | 116 - 6 - 11[366] |

360. யாதாஸ்து - நினைவுக்குறிப்பு

361. அவுசாகேப் - அஹல்யாபாயி

362. பாயிசாகேப் - காமாட்சியம்பாபாயி

363. சறபராயி மஹால் - பொருள்களை கொடுக்கும் துறை

364. மா.அவுசாகேப் - அஹல்யாபாயி

365. மா.சய்யம்பாபாயி முதற்கொண்டு (பக்கம் 435இல்) கவுரம்பாபாயி வரையிலும் உள்ள பதினால்வர் பெயர்களுடன் அருணாம்பாபெயரும் காணப்படுகின்றது. அருணாம்பா கி.பி.1860இல் இறந்தாள். (பக்கம் 34)

366. ரூ.அ.பை - ரூபா, அணா, பைசா; 12 பைசா-1 அணா; 16 அணா ஒரு ரூபா

சனதுகள் [123] ரிகார்டில் ரோகாக்க [124] ளிருக்கின்றன. சிலவற்றிற்கு சனது ரிகார்டு ரோகாக்களில்லை அனுபவமட்டிலிருக்கிறது. இவைகளில் நவாபின் [125] ஆட்சியில் சிலவற்றிற்கு நடந்திருக்கிறது. அதை அனுபவிப்பவர் ஒருவருமில்லை. முதலில் இந்த சமஸ்தானத்தில் நந்தன [126] ஸு வரையில் நடந்தபடி விஜய [127] ஸம்வத்ஸரத்தில் ஸமஸ்தானம் இருந்தது.

சனதா பரவானகிகள் சிலருக்கு புதியதாக செய்து கொடுத்தபடி சனதுகளும் ரிகார்டு ரோகாக்களும், அனுபவம் மனதிற்குவாங்கி ஷெ பிரமாணம் ஆரம்பிக்கிற வருஷத்திலிருந்து நடத்துகிறது.

நந்தன வருடத்தில் பீரங்கி வரி நிலம் மான்யத்திற்கு ரூபாயின் வரியும், [128] கல்லா மான்யமும் குல் மான்யம் வகையறா எல்லாவற்றிற்கும் பாதி - இந்தப்படி நடந்திருக்கிறது. இந்த வருடத்தில் கேள்வி இல்லாமல் வழக்கப்படி நடத்துகிறது. இவைகளுக்கு ரிகார்டிலிருந்து ரோகாக்களை எழுதிக் கொடுக்கும்படி உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது. மேற்சொன்னபடி ரோகாக்களை எழுதிக் கொடுக்கிறது.

## ஆவண எண்: 158

பரவானகி 1776

பராபவ ஸு மாக மீ சுத்த திரியோதசி [129] புதன்கிழமை இராத்திரி சதுர்த்தசி ரா. துளஜா ராஜா சாயேப் அவர்கள் கைலாயவாசமானார். [130] அதன் பொருட்டு 11, 12-ம் நாள் பிராமணாளுக்கு பூமிதானம் கொடுத்தார். மூன்று பேர்களுக்கு நஞ்சை, புஞ்சை(3 1/2) மூன்றரை வேலி நிலம் ஸர்வமான்யம் [131] கொடுத்தார்கள்.

---

123. சனதுகள்-அரசாங்க முத்திரையோடு உரிமை வழங்கும் சாஸனங்கள்

124. ரோகாக்கள்-அத்தாட்சிச் சீட்டுகள்

125. நவாப என்றது முகம்மது அலிக்கானை: அவனது ஆட்சி தஞ்சையில் 17-9-1773 முதல் ஏறத்தாழ மூன்றாண்டுகள் நிகழலாயிற்று (பக். 90)

126. நந்தன-ஆண்டறுபதனுள் இருபத்தாறாவது, இது கி.பி. 1772 ஆதல் கூடும்

127. விஜய-ஆண்டறுபதனுள் இருபத்தேழாவது. இது கி. பி. 1773 ஆதல் கூடும்

128. ரூபாயின்வரி என்றது வரியைப் பணமாகச் செலுத்துதல் போலும்.

129. பராபவ-ஆண்டறுபதனுள் நாற்பதாவது; மாக-மாசிமாதம்; சுத்தம்-வளர்பிறை; திரியோதசி-திரயோதசி; 13 ஆம் நாள். இது 8-2-1787 ஆகலாம் எனினும் இது வெள்ளிக்கிழமை ஆகிறது.

130. கைலாசவாசமானார்-இறந்தார்

131. ஸர்வமான்யம்-எந்தவிதமான தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்படும் நிலக் கொடை

அரஜி[132]

## ஆவண எண்: 159

1780 வெள்ளப்பத்து[133] ஆதம் முத்துத்துரை சமுத்திரத்திலிருந்து மூழ்கி சங்கு எடுக்கிறவர்களுக்கு ஆயிரத்திற்கு 12 சக்ரம்[134] 5 பணம் கொடுக்கிறார்கள். அக்கம் பக்கம் 14 சக்ரம் கொடுக்கிறார்கள். அந்தப்படிக்கி கொடுக்கவேணுமென்று.

## ஆவண எண்: 160

1787 ரா. அமரசிங்க ராஜா[135]

ஸ்ரீநெய்வேலி நாதசுவாமி பூஜை நைவேத்தியத்திற்காகச் தஞ்சாவூர் 144 சக்ரப் முந்திக்கொடுக்கப்பட்டது. மொகலாயர்கள் இராஜ்யம் செய்யும் பொழுதும், நடந்து வந்தது மகாராஜா சமஸ்தானத்தில் வந்த பின்னர் சர்காரிலிருந்து பாளையக்காரரிடம் ஒப்புவித்தார் ஷை பாளையக்காரரும் ரொக்கம் கொடுக்க முடியாதாகையால் நஞ்சைபுஞ்சை நிலப் கொடுத்தார். நஞ்சை 12 மா. புஞ்சை - 24 மா. சர்க்காரில் சுரோத்திரியம் கிராமப் (பாளையக்காரருடைய) ஜப்தி செய்த போது கோவில் நிலமும் ஜப்தி செய்தார். கோவில் நிலத்தை விலக்க வேணுமென்று கொடுத்த மனு.

பரவானகி 1776

திருவண்ணாமலையில் சர்க்காருடைய மடமிருக்கிறது. அதற்கு பேஸஜி[136] யானவர் சபாபதி மூர்த்தியைச்[137] செய்து கொடுத்தார். அதற்கு பூஜை நிவேதனத்திற்காக பண்டாரம் வசம் 20 சக்ரம் கொடுக்கிறது.

## ஆவண எண்:161

## (Bundle No.912 C)

ரா. யசவந்தராவஜி[138] அவர்களுக்கு ஸேவகன் அண்ணாவின்[139] நமஸ்காரம். இங்குள்ள

---

132. அர்ஜி-விண்ணப்பம்

133 வெள்ளப்பத்து-கடற்பகுதி என்று பொருள்படும் போலும்

134. சக்ரம்-32காசு 1 பணம்; 10 பணம் 1 சக்கரம் (பக்கம் 150) ஒரு ரூபாய்க்கு 6 1/2 பணம் (பக்கம் 134)

135. அமரசிங்கர்-பிரதாபசிங்கரின் இரண்டாவது மகன் (துளஜாவுக்குப் பிறகு 1788-1798 வரை ஆட்சிபுரிந்தவர்)

136. பேஸஜி-அரசர்

137. சபாபதி-நடராஜர்

138. யசவந்தராவஜி-சரபோஜி அமரசிங்கிடமிருந்து விடுபட்டுச் சென்னையில் இருந்தபொழுது அவருடன் இருந்த அலுவலர்களில் ஒருவர்; (பக்கம் 79)

139. அண்ணா என்பது பாபண்ணா என்பவரை; இவர் தஞ்சையிலிருந்து அவ்வப்போது சென்னையில் இருந்த சரபோஜியின் அலுவலருக்குக் கடிதம் எழுதியவர் ஆவர் (பக்கம் 79-80)

சமாசாரமோ ரெஸிடெண்ட் மக்லோட் ஜப்தி[140] செய்த இராஜ்ய கார்பார்களும் நியமித்தபடி கார்பாரும் நடந்து வருகிறது. நியாய மஹாவில் நியமனஞ் செய்தார். 5 பேருக்குள் மேஸ்தார் பாதரி சாஹேப் [141] ஆனவர் சொல்லி ஹரிபட்டருக்கும் வேலை செய்து கொடுத்தார்.

ஸர்கேல் பாபா[142] வானவர் தன்னுடைய கார்பார் பேஸஜி (உத்யோகம்) போனபிறகு இன்று வரையிலும் சமஸ்தானத்தின் பாக்கி எல்லாவற்றையும் எடுத்து எழுதிக் கொடுத்தார். அதற்கு மக்லோட் ரயத்துகளுடைய கையொப்பம் வாங்கிக் கொடுத்தால் நாம் வசூல் செய்கிறோம். இல்லாவிட்டால் அந்த பாக்கிக்கு நீங்கள் பதில் கொடுக்கும்படி ஆகுமென்றார். இந்த சங்கதியைக் கேட்டு மாயவரம் மன்னார்குடி ஊர்களிலுள்ள ரயத்துக்கள் ஊரைவிட்டு ஓடிப்போனார்கள். ஜப்திக் காரருடைய ஜனங்களுக்காக அவர்கள் வரவேண்டியிருக்கிறது.

இங்கிருந்து நேற்று சிவராயர்[143] குமாரர் ஜீவட்றாவ் என்பவரை சென்னையிலிருந்து பாலேபீல் என்பவர் அனுப்புங்கள்; நான் அவ்விடம் பார்த்து வருவதாக எழுதி வந்ததாம். அதன்படி ஜீவட்ராயருடன் சில நகைகள் வீடு வாசல் செலவுக்கு வேண்டிய சாமான்கள் வகையறா கொடுத்து அனுப்பி யிருக்கிறார். ஹேஜீபுக்கு [144]சால்சாப் ஜீவட்ராவ் மூலம் அனுப்புகிறது. நிச்சயஞ் செய்து சென்னப்பட்டணத்திற்கு அனுப்பியிருக்கிறார். அறியவும். அதற்கு மக்லோட் விபக்ஷியினிடம் (அமரசிங்கு) சென்று சொன்னார். கூட சேது பண்டிதரையும் உபலாவணியாப்பிள்ளைக்கும் அழைத்துச் சென்றார்.

விபக்ஷி[145]யானவர் சொன்னதாவது:-

கணபதி அக்கிரஹாரத்தைத் தன் மகளுக்கு[146] கொடுத்திருக்கிறது. அவர் வார்த்தையைக் கேட்டு மனதுக்குத் தோன்றுகிறாற் போல பேசுகிறாய். சுகமாக உன்மனதிற்கு வந்தபடி செய்து கொள்ளென்று கண்டித்துச் சொன்னாராம்.

---

140. மக்லோட் ஜப்தி-அமர்சிங்கு கம்பெனிக்குக் கொடுக்க வேண்டிய தொகைகளைக் கொடுக்காமற்போனால் மன்னார்குடி, திருவையாறு, மாயவரம், பட்டுக்கோட்டை ஆகிய சுபாக்களினின்று வசூல் செய்து கொள்ளலாம் என்று 1787ல் ஒரொப்பந்தம் செய்து கொள்ளப் பெற்றது. அதன்படி ரெஸிடெண்டு ஆக இருந்த மக்லோட் ஜப்தி செய்தார் (பக்கம் 64-65)

141. பாதரி சாஹேப் என்றது ஸ்வார்ஷ் (Schwartz) பாதிரியாரை

142. ஸர்கேல் தஞ்சை மராட்டிய அரசில் ஒரு தலைமையான அலுவலர்; தலைமை அமைச்சர் என்னலாம். அமர்சிங்கு காலத்தில் சர்க்கேல் வேலையில் பாபா என்பவர் இருந்துள்ளார்.

143. சிவராயர்-அமர்சிங்கு காலத்தில் சர்வாதிகாரியாக இருந்தவர்.

144. ஹேஜிப் என்பவர் கணக்குப்பிள்ளை (பக்கம் 76) சால்சாப்-பதில்; சாக்குப்போக்கு

145. விபட்சி-எதிரி; இவண் அமர்சிங்

146. மகள் என்றது யமுனாபாயியை

3. சுபாவுக்கும்[147] ஸர்வமான்யம் மத்யஸ்தம்[148] நியமிக்கிறேனென்று மக்லோட் சொன்னார். சுகமாக செய்து கொள்ளுங்களென்று சொன்னார்.

ஸர்கேல் பாபா அவர்கள் ஸேது பண்டிதருக்கும் உபலாவனியா பிள்ளைக்கும் ரொம்ப அடக்கி ஹுஜாராய்[149] நடக்க வேணுமென்று கண்டித்துப் பேசினார். ஜப்தியான 3 சுபாக்களுக்கும் இராஜாவின் மூலமாக தாசில்தாரை நியமிக்கப் போகிறார். சிவராயர் விபக்ஷிக்குச் சொன்னதாவது:- இப்பொழுது ஸர்கேல பாபாவுக்கு என்ன வேலை அவர் வந்த வேளையின் குணம் ஸமஸ்தானம் ஜப்தி செய்துவிட்டாரே. இனி அவரை நீங்கள் வீட்டிலிரும் என்று சொல்லுகிறேன் என்றாராம். அதற்கு விபக்ஷியானவர் சரி ஆகட்டும் சொல்லுகிறேனென்றாராம். ஸர்கில் பாபாவுக்கு வீட்டிலிரும் என்று சொன்னார் போலிருக்கிறது. இந்தப் பிரசங்கம் மிஸ்தருடைய முன்னிலையில் நடந்தது. அவர் சொன்னதாவது அந்த மனுஷனுக்கு இப்படித்தான் ஆக வேண்டுமென்றார்.

மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப் இவர்களிடமிருந்து சமாசாரம் லாட்ஹோபரபட் ஆனவர் ராஜா ஸ்ரீமந்த் சத்திரபதி[150] சாஹேப் புறப்படுகிற நாள்[151] நிச்சயஞ் செய்து சொல்லுவதற்கு மிஸ்தர் ஜெரிக்[152] சாயேப்புக்கு சொல்லி யிருப்பதாகச் சொல்ல ஆரம்பித்தார்கள். இதை தவிர புறப்படுகிற தினம் லாட்சாஹேப் வந்து வஸ்திரம், ஆபரணம் கொடுத்து சிலவக்கும் சாமான்களுக்கும் கூட கொடுப்பதற்கு ஸந்நாஹா[153] (யானை, குதிரை, சிப்பாய் முதலிய ராஜ சின்னம்) வகையறாவைக் கொடுத்தனுப்பப் போவதாகச் சொன்னார். 4, 5 நாட்களில் புறப்படுவார்களென்று நான் எண்ணுகிறேனென்று சொன்னார் அறியவும்.

## ஆவண எண்: 162

ஸ்ரீயசவந்த கிருஷ்ணாஜி சுவாமிகளுடைய ஸேவைக்கு ஸேவகன் அண்ணாவின் அனேக நமஸ்காரம்.

அமரசிங்கு விபக்ஷியினிடமிருந்து ஸமாசாரமோ ரஜப்[154] மீ 12உ இரவில் மிஸ்டர் மக்லோட் ஆனவர் இராஜ்யத்தை முழுமையும் கம்பெனியாருடைய துகைக்காகக் கொடுத்து விடுகிறது. இல்லாவிடில் சிவராயரிடம் ஒப்புவிக்கிறது. இந்தப்படி கொடுத்தால் சிவராயரிடம் ஒப்புவிக்கவில்லை. இராஜ்யத்தையும் கொடுக்கப் போவதில்லையென்று சொன்னார். பிறகு

---

147. மூன்று சுபாக்கள்-பாபநாசம், மன்னார்குடி, மாயவரம் (ஆவண எண்:162)

148. மத்யஸ்தம் - ஒரலுவல்

149. ஹுஜாராய் எச்சரிக்கையுடன்

150. சத்திரபதி என்றது சரபோஜியை

151. சென்னையிலிருந்து தஞ்சைக்கு வருவதற்குரிய நாள்

152. ஜெரிக் - ஸ்வார்ஷ் பாதிரியார்க்குப் பதிலாகச் சென்னையில் நியமிக்கப்பட்டுச் சரபோஜிக்கு உதவியாயிருந்தவர்.

153. ஸந்நாஹம் - அரசன் வெளியிலே புறப்படுங்கால் கொணரும் சின்னங்கள்.

154. ரஜப் மாசம் - முகமதியருடைய மாதங்களில் ஏழாவது

மக்லோட்டானவர் ஒரு உடன்படிக்கை வருமானம் கும்பனியின் துகைக்காக பாபனாசம், மன்னார்குடி, மாயவரம் இந்த 3 சுபாக்களையும், மிஸ்டர் ஜாம் என்பவர் காலத்தில் 5,55,000 (ஹொன்ன) [155]விராகன் கூட இருக்கிறது. அதன்படி விட்டு விடுகிறது. 3 வருஷத்திற்கொருமுறை கணக்குத் தீர் ப்பது. கும்பனியின் துகை பாக்கி இருக்குமானால் ஈடு செய்து கொடுக்கிறது. கும்பகோண. சுபா, பட்டுக்கோட்டை (ஜகாயதி) வரிகள் வகையறாக்களை விபக்ஷியானவர் வைத்துக்கொண்டு காலங்கழிக்கிறது. அதிலிருந்து வருடத்திற்கு 60,000 விராகன் கடனுக்குச் செலுத்துகிறது[156]. இந்தப்படி சம்மதித்தால் கையொப்பம் போட்டுக் கொடுங்கள். இல்லாவிட்டால் சிவராயரிடத்தில் ஒப்புவித்து விடுங்களென்று எழுதி யனுப்பினார்.

உடனே சாயங்காலம் 4, 5 தரம் சொல்லி அனுப்பி இராத்திரி 9 மணிக்கு மிஸ்தர் மாக்லோட் கோட்டையின் வாசலை மூடி ரிஜிமெண்ட் மிஸ்தர் இராமன் வீட்டுச் சமீபங்கொண்டு வந்து வைத்து பட்டாளம் முழுமையும், திட்டி வாசலுக்கு அருகில் கொண்டு வந்து வைத்து, மக்லோட் விபக்ஷி அவர்களிடம் போய் சொன்ன தாவது:-

சமாதானமாகக் கையொப்பமிட்டுக் கொடுத்தால் நலம். இல்லாவிட்டால் கும்பனியின் விரோத முண்டாகுமென்று சொன்னார்.

பிறகு விபக்ஷி ஜப்தி செய்யப்பட்ட 3 சுபைகளின் கடுதாசியில் கையெழுத்திட்டுக் கொடுத்தார். சிவராயருடைய வழி இங்கிலிஷ்காரர்கள் போக வேண்டிய தில்லையென்று தீர்மானமானது.

விபக்ஷியானவர் நேற்று ஸர்கில் பாவாவிடமிருந்து பிரமாணம் வாங்கினார்களாம. என்னவென்றால்:- ஆங்கிலேயருக்கு 3 சுபை கொடுத்திருக்கிறதே. அவர்களிடம் சென்று கார்பார் செய்கிறதில்லை யென்று நம்பிக்கையுடன் சொன்னாராம்.

பிறகு மிஸ்தர் மாக்லோட் 3 சுபாக்களுடைய கணக்குகளைக் கேட்டதற்கு கீலக ஸு[157] முதல் இதுவரையில் ஒன்றும் பாக்கியில்லை. அவரிடம் நாநாவிதமாகச் சேர்த்து 4, 5 லக்ஷம் விராகன் பாக்கி இருப்பதாக எழுதிக்கொடுத்தாராம். அதற்கு ரெசிடெண்ட் மாக்லோட் பாக்கிக்கு ரயத்துகளுடைய கையெழுத்துக்களை வாங்கிக் கொடுத்தால்தான் ஒப்புக் கொள்ளுகிறே னென்றார். இந்தக் கணக்கு எனக்குத் தேவையில்லை. மகாராஜாவிடம் திருப்பி அனுப்பிவிட்டார்.

நேற்றைய தினம் 3 சுபைகளுக்கும் மக்லோட் சிப்பந்திகளை நியமித்தார். மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப்பினுடைய மூலமாய் உப்பலாவாணியா பிள்ளையை கார்பாரியாய் நியமித்தார். பாபனாசத்துக்கு பாபண்ணாவை நியமித்தார். துபாசி ஜாயறு மூலமாய் மன்னார்குடிக்கு முத்துசாமி அய்யங்காரை நியமித்தார். மாயவரத்துக்கு சேஷ அய்யங்காரை நியமித்து வஸ்திரம் கொடுத்து, மறுபடியும் அர்ஜ அடமானி கிருஷ்ணப்பாவை மத்தியஸ்தராக

155. ஹொன்னம் - ஒருவகை நாணயம் (பக்கம் 155)

156. 60,000 வராகன் கடனுக்குச் செலுத்துதல் (பக். 52)

157. கீலக - ஆண்டறுபதுள் 42 ஆவது (கி. பி. 1788 ஆகலாம்)

நியமித்தார். சீகாழியில் சேஷய்யருக்கு நியமித்தார். ரிகார்டு சேதுபந்த் இடம் ஒப்புவித்தார். மத்யஸ்த்தம் நாயனாவுக்குக் கொடுத்தார். ஜப்தி கார்பார் இந்தப்படி நியமனம் செய்தார்.

விபக்ஷியானவர் பட்டுக்கோட்டை சுபா ஒன்றை மட்டும் வைத்துக்கொண்டு நிர்வாகம் செய்யமுடியாது. அதனால் அதையும் கும்பனியில் ஒப்புக்கொண்டு ஐந்திலொரு பங்கு கொடுத்தால் போதுமென்று எழுதிக்கொடுத்தாரென்று கேள்விப்படுகிறோம்.

மிஸ்தர் பாதரிசாயேப் சொன்னதாவது:- "ஸ்ரீமந்த் சத்திரபதி மகாராஜா சாயேப் ஜனவரி மீ" 23உ தோட்டத்திலிருந்து புறப்பட்டு ...... ...... பரஸ்தானம் வைத்து இருக்கிறார். 2,3 நாட்கழித்து புறப்பட்டு வரப்போகிறாரென்று சொன்னார். அதனால் தபாலில் கடிதத்தை அனுப்பினால் வந்து சேருமோ, சேராதோ எழுதவில்லை. இன்று 4 நாள் ஆகுமென்று சொன்னார். அதற்காக கடிதத்தை இன்று எழுதியனுப்பிருக்கிறேன்.

ரா. ஜீ. யசவந்த் கிருஷ்ணாஜி சுவாமிகளுக்கு கொடுப்பது ஸேவக அண்ணாவின் அநேக நமஸ்காரம்.

விபக்ஷி (அமரசிங்) இன் சம்சாரம் ரெசிடெண்ட் மக்லோட் வந்து சேர்ந்த பின் ஜப்தி செய்வதென்று நிச்சயஞ்செய்து, ஸர்கேல் பாபாவுக்கு ஜப்தியின் கார்பார் கொடுப்பது யென்று வந்தாராம். அதற்கு சிவராயர் பாபாவுக்கு முன்னால் கார்பார் கொடுத்திருந்ததால் அப்படிக் கொடுக்கப்படவில்லை.

மக்லோட் தினந்தோறும் மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப்பின் பேட்டிக்கு வருகிறார். எல்லா விஷயங்களையும் மிஸ்தர் பாதரி சாயேப்பைக் கேட்டு நடக்கிறது. மிஸ்தர் மக்லோட்டும் கர்னலும் திவான் அரண்மனையையும் பாக்கியையும் சுற்றிப் பார்த்தார்.

சிவராயருடைய கடன்காரர்கள் சென்னையிலிருந்து அநேக பேர் வந்திருக்கிறார்கள். கடன்காரர்களின் தொந்திரவு அதிகம். இதைத்தவிர கும்பனியாருக்கு கொடுக்க வேண்டிய துகைக்கு மக்லோட் அதிகமாகக் கண்டிப்பாயிருக்கிறார். அதற்கு சிவராயர் அவர்கள் அண்ணன் தம்பிமார்கள் திவான் அரண்மனையில் ராமசுவாமி மஹாலில் உட்கார்ந்திருக்கிறார்கள். நேற்று ரெசிடெண்ட் மக்லோட் திவான் அரண்மனைக்குப் போயிருந்தார். கூட 4 ஸோல்ஜர்களையும் அழைத்துக் கொண்டு போய் கும்பனியின் துகையைக் கொடுத்தால் சரி. இல்லாவிட்டால் பாராவை வைத்து விடுவேனென்று சொன்னாராம். 8 தினங்களில் துகையைக் கொடுக்கிறோமென்று சொன்னார்களாம். பிறகு ஸோல்சர்களை கூட அழைத்துக் கொண்டு போய் விட்டார்.

பாபா அவர்கள் வேலை பார்க்கிறார். ஆனால் அவருக்கு எந்த வேலையையும் செய்ய விடுகிறதில்லை. பாபாவும் காலத்தை அனுசரித்து சிவராயர் மனசுப்படி நடந்து வருகிறார். பட்டுக்கோட்டையின் வரும்படி சின்னய்யங்காருக்கு50 ஆயிரம் ரூபாய்க்கு அண்ணாசாமி அய்யங்கார் எழுதிக் கொடுத்தார். பாபா நிர்ணயஞ் செய்து வரும்படியை சிவராயர் குடும்பத்திலே தீர்ப்பதால் ஒரு பிரசங்கமும் (வேலையும்) நடக்க ஒட்டவில்லை. பாபாவும் சொல்லுகிறாராம். எனக்கும் தெருவுக்கு இழுத்துக்கெடுத்து விட்டீர்களே என்று ரொம்ப

வியனத்துட னிருக்கிறாராம். கான் சாயேப் [158] மாரடைப்பினால் பரலோக மடைந்தார். அறியவும்.

## ஆவண எண்: 163

ரா. ஸ்ரீ யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணா அனேக நமஸ்காரம்.

அமரசிங்குக்கு உடம்பு சரியாக இல்லை. 8 நாட்களாக வெளியில் புறப்படுவதில்லை. ஜபம் தபம் பிராமண போஜனம் நடத்துகிறார்கள்.

நாடுகளின் சமாசாரமோ இவ்வருஷத்துக்கு மன்னார்குடி பதகநவீஸ் [159] உத்யோகத்தை யேரங்குடி கிருஷ்ணராயருக்குக் கொடுத்தார். மாயவரம் பெரம்பலூர் வெங்கடாசல அய்யருக்குக் கொடுத்தார். கும்பகோணத்தை இராமஸ்வாமிக்குக் கொடுத்தார். பாபானாசம் தரசி வெங்கப்பய்யாவுக்குக் கறார் செய்தார். சீர்காழி பட்டுகோட்டை கைலாசமய்யருக்குக் கறார் செய்தார். இந்தப்படி வேலைகள் நடக்கின்றன. இனி நடக்க போகிற விஷயங்களுக்குப் பின்னால் எழுதுகிறேன். தாங்களறியவும்.

## ஆவண எண்: 164

ரா. ஸ்ரீ. யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணாவின் அனேக நமஸ்காரம்.

திருநெல்வேலியிலிருந்து ஷாஹீகான் என்பவர் கோட்டைக்கு வெளியில் அசரோபசாஷாவினுடைய தெக்காலில் [160] வந்து, இறங்கினார். விபக்ஷி அவரைப் பார்க்க போனார். ஒரு குதிரையும் சால்வையும் கொடுத்தார்கள்.

ரா. ஸ்ரீ. யசவந்த கிருஷ்ணாஜி சுவாமி அவர்களுக்கு ஸேவக அண்ணாவின் அனேக நமஸ்காரம்.

இங்கு ஊரில் ஜனங்கள் பேசிக் கொள்தாவது:- சென்னப்பட்டணத்திற்கு 10, 20 பேர்கள் வந்திருக்கின்றார்கள். புதிய கவர்னர் வந்திருக்கிறார். அனேக கடிதங்கள் வந்திருக்கின்றன. அதனால் ரா. ஸ்ரீ. ஸ்ரீமந்த் சத்திரபதி [161] அவர்களின் காரியம் ஊர்ஜித [162] மாகுமென்று பேசிக் கொள்ளுகிறார்கள்.

---

158. கான்சாஹேப் (?)

159. பதக்நவீஸ்-பதக் எனப்பட்ட ஒன்றியங்களின் தலைமை அலுவலன்

160. தெக்கால் - தைக்கா-மகமதியப் பெரியோர்களின் சமாதியிடம்; பக்கிரிகளின் தங்குமிடம்

161. சத்திரபதி என்றது சரபோஜியை

162. காரியம் ஊர்ஜிதம் ஆதல் ஆவது சரபோஜி நாடாட்சியைப் பெறுதல் (ஊர்ச்சிதம்-உறுதி)

## ஆவண எண்: 165

ரா.ஸ்ரீ. தத்தாஜி அப்பா[163] சாயேப் அவர்களுக்கு இராமச்சந்திர சிவாஜியின் அனேக ஆசிர்வாதம்.

பாதரி சாயேப்[164] அவர்களைக் கண்டேன். அவர்களும் சந்தோஷத்துடன் ஸ்ரீசத்திரபதி சுகமாக இருக்கிறாரா? தினந்தோறும் குதிரையைப் பழக்குகிறாரா? ஆங்கிலேயமும் உங்களுடைய எழுத்தும்[165] எழுதுகிறாரா? வேட்டைக்குப் போகிறாரா என்று கேட்டார்.

## ஆவண எண்: 166

ரா. ஸ்ரீ. யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணா அநேக நமஸ்காரம்.

இராமநாதப்புரத்திலிருந்து முத்து இரளப்பிள்ளை என்பவர் தஞ்சாவூருக்கு வந்திருக்கிறார். அவரிடம் 4 சுபாக்களையும் குத்தகைக்கு 30 லக்ஷம் சக்கரத்திற்குத் தீர்த்து, தேசம் அவருடைய சுவாதினமாகப் போகிறது. விபக்ஷி(அமரசிங்கின்)யின் பேட்டியுமானது. சால்வைகளைக் கொடுத்தார். பிராமணன்[166] க்ஷயரோகத்தினால் ரொம்ப சக்தியில்லாமல் இருக்கிறார். ஆங்கிலேயர் வந்து பார்க்கிறார்கள். அறியவும்.

## ஆவண எண்: 167

ஸ்ரீ ராம்

ஸ்ரீ. ஸ்ரீ. சரபோஜி ராஜா அவர்கள் மேஜர் ஜெனரல் விலியம் கேடர்ஸ்[167] கவர்னர் சாயேப் ஸலமுலா முலாஹீதாலா சாஹேப் முஷபகமகதரதான கர பர்மாயேதோஸதான பைஜபகஷ பைஷர சான - ஹானரபிள் இன்று

சலாம்.

நீங்கள் சத்துருவை[168] ஜயிப்பதற்குப் போகும் பொழுது, தஞ்சாவூரில் தங்களைப் பார்த்தேன். அப்பொழுது என்னுடைய கஷ்டங்களை எல்லாம் சாஹேப்புக்குத்[169] தெரிவிப்பதற்கு

---

163. தத்தாஜி அப்பா-இவர் சரபோஜி சென்னையில் இருந்தபொழுது உடன் இருந்தவர் ஆவர். ஸ்ரீயசவந்த கிருஷ்ணாஜியைப் போன்று இருந்தவர்

164. பாதிரி சாகேப் என்றது ஸ்வார்ஷ் பாதிரியாரை

165. உங்களுடைய எழுத்து என்றது மராட்டிய மொழிக்குரிய தேவநாகரி எழுத்தாகும்.

166. பிராமணன் என்றது சிவராயரை

167. மேஜர் ஜெனரல் வில்லியம் கேடர்ஸ்-மேஜர் ஜெனரல் வில்லியம் மெடோஸ் ஆகலாம். இவர் 20-2-1790 முதல் 31-7-1792 வரை கவர்னராக இருந்தவர்

168. சத்துரு என்றது அமரசிங்குவை

169. சாஹேப் என்றது கவர்னரை

போதுமான நேரமில்லையென்று நாமும் வருவதற்கு உத்திரவு கேட்டதற்கு அப்படி அவசியமில்லை. நாம் சத்துருவை ஜயித்து வரும்பொழுது, எங்களுக்கு நியாயப்படி நடத்துகிறேனென்று வாக்களித்தீர். அன்று முதலிது வரைக்கும் சாஹேப் ஜயமடைந்து மதராஸுக்கு வந்து சேர வேணுமென்று எப்பொழுதும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தோம்.

இப்பொழுது சாஹேப்புக்கு ஞாபகமூட்டுவதற்கு நானும் என் தாயாரும்[170], பாட்டி[171] எல்லோரும் கஷ்டப்படுகிறோம். அவை எழுதி முடியாது. அவர்களை கோவிலுக்குக் கூட போகவொட்டாமல் அதிக மரியாதைக் குறைவாக செய்து ஜெயிலில் போட்ட கைதியைப் போல ஒரே இடத்தில் வைத்திருக்கிறார். ஆதலால் அவர்களுடைய சரீரத்தில் உபாதி[172] ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய பாட்டியோ அசாத்தியமான உபாதியுடன் கூடியவளாயிருக்கிறார். நம்முடைய இராஜ்ய பதவியையும் நம்முடைய பாத்தியதையும், அபகரித்து, நமக்கு (நம்மை) கொன்றுவிட வேண்டுமென்று முயற்சித்தார்.

அந்த அமரசிங் இப்பொழுது நம்முடைய பாட்டி திரௌபதாபாயீ சாஹேப் அவர்கள் பரலோகமடைந்தால், அவர்களுடைய கிரியை தான் செய்ய வேண்டுமென்று, யோசனை செய்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

அப்படி அவருக்கு உத்திரவு இட்டால் இராஜாவின் குடும்பம் அதிக ஹீனதசை யடைந்து மரியாதையில்லாமல் போகும். என்னுடைய தாயார், தகப்பனார், சாஹேப் தான்.ரக்ஷணை செய்வதால் நமக்கு சாஹேப்பைத் தவிர வேறு ஆதாரமில்லை. ஆகையால் சாஹேப் எங்கள்மேல் தயவுசெய்து, நம்முடைய குடும்பத்தின்பேரில் உபத்திரவஞ் செய்யாமல் உத்திரவு செய்து நியாயமாக விசாரணை செய்து, நம்முடைய சாஸ்திரப்படிக்கும், ஜாதி விவகார வழக்கப்படிக்கும் நமக்குதான் அதிக பாத்யதையிருக்கு தென்று, தங்களுக்குத் தெரிந்த பின்பு, அந்தக் கிரியை[173] முழுமையும் நானே செய்து முடிக்கிறேன். அமரசிங்குக்கு யாதொரு பாத்தியதையு மில்லாதபடியால் அவர் செய்யக்கூடாது. தற்காலம் அவர் இராஜ்ய பாரம் செய்வதால் இராஜா சாஹேப் பெண்களுக்கு கிரியை எந்த மரியாதைப்படி நடத்த வேணுமோ அந்தப்படிக்கி நடக்கும்படியும் மரியாதையும் நிம்மிடமிருந்து தான் கிரியைகளைச் செய்யும்படி உத்திரவு அனுப்பவேண்டும். நாம் இன்னும் என்ன விசேஷம் தங்களுக்கு எழுதுவது.

ஸ்ரீராம் பிரதாப்[174]

தஞ்சாவூர் துளஜா மகாராஜாவின் தாயார் மா.ஸ்ரீ.திரௌபதாம்பாபாயி சாஹேப் அவர்கள் எழுதியது.

---

170. தாயார் என்றது துளஜாவின் மனைவியர்களுள் ஒருவரை

171. பாட்டியென்றது துளஜாவின் தாயாகிய திரௌபதாம்பா பாயியை

172. உபாதி-நோய்

173. கிரியை என்றது நீத்தார்க்குச் செய்யும் கடமைகளை

174. ஸ்ரீராம்பிரதாப்-அரசர் கையொப்பம் இடுவதாயின் ஸ்ரீராம்பிரதாப் என்று கையொப்பம் இடுவர் (பக்கம் 365)

சாஹேப் அவர்கள இராஜ்யத்திற்கு வந்து சேர வேண்டுமென்று, ஒரு லக்ஷம் ஸ்ரீராம நாமத்தை எழுதியிருக்கிறேன். இதற்கு பிராமண போஜனமாக வேணும்; காரியம் சித்திக்கும் என்று நமக்கு ஒரு பெரிய சந்நியாசி சொல்லியிருக்கிறார்.

## ஆவண எண்:168

ரா.ஸ்ரீ.அண்ணாஜி பண்டிதர் சுவாமியின் சேவைக்கு சேவக யசவந்த் கிருஷ்ணாஜியின் அநேக நமஸ்காரம். 28வ. யன்று ஸ்ரீமந்த் சத்திரபதி[175] மகாராஜாவும் மாதோஸ்ரீ பாயிசாஹேப்[176] எல்லோரும் சைதாப்பேட்டையிலிருந்து புறப்பட்டு பல்லாவரம் சாவடிக்கு வந்து சேர்ந்தார்கள். இந்த சங்கதியை ஸ்வர்ஷ் பாதரி சாஹேப் அவர்களுக்குத் தெரிவிக்கவும்.ஸ்ரீமந்த் சத்திரபதி சாஹேப் சீகாழி, மாயவரம், கும்பகோணம் இந்த வழியாக வருவதால் நீங்கள் பாதரி சாஹேப் அவர்களுக்குச் சொல்லவும்.என்னவென்றால்,

அந்தந்த சுபாவின் அம்மல்தார[177] வர்கள் அவரவர் எல்லைக்குள் அவரவர்கள் ஹாஜிரிலிருந்து[178] எங்கே மகாராஜா தங்குவாரோ அங்கங்கே விடுதிகளைச் செய்து, கொடுத்து, சாமான்களைச் சுமாரான விலைக்குக் கொடுக்கும்படியும் மிஸ்தர் மாக்லோட் அவர்களுக்குச் சொல்லி உத்திரவு அனுப்பும்படிச் சொல்லவும்.

## ஆவண எண்:169

ரா.ஸ்ரீ. தத்தாஜி அப்பா அவர்களுக்கு சிநேகிதர்-ரகோஜி மஹாடிக் ராம் ராம். ஒரு கடிதம் எழுதினதற்குப் பதில் வரவில்லை. இப்பொழுது மக்லோட் வந்த நாள் முதற்கொண்டு அவருடைய அந்தரங்கத்தைத் தெரிந்து கொள்வதற்கு பச்சைமால் சேஷோ பந்த்தும் நாமும் அதே முயற்சியிலிருக்கிறோம். இப்படியிருக்கையில் நம்முடைய யஜமான்[179] சாயேப் அவர்களுடைய வேண்டியவர்கள் அந்தரங்கமாகப் பேசுவதற்கு பெரிய மனுஷாள் ஒருவரும் இல்லையாவென்று மக்லோட் விசாரித்தார். அதற்கு நாம்மிடங் கொடுக்காமலே அந்த்ரங்கமான சங்கதியை அறிந்தோம். அந்த சங்கதி என்னவென்றால்,

ஸ்ரீமந்த் ராஜா ஸ்ரீயஜமான சாஹேப் அவர்கள் பேரில் அங்குள்ள பிரபு[180] வானவர் அந்தக்கரணத்துடனும், அபிமானத்துடனும் ரா.ஸ்ரீ.யஜமான் சாஹேப் அவர்களைக் கூட

175. சத்திரபதி என்றது சரபோஜியை

176. பாயிசாகேப் என்றது துளஜாவின் மனைவியர்களுள் ஒருவரை

177. அம்மல்தார்-வரி வசூலிக்கும் அலுவலர்

178. ஹாஜரில் இருந்து-வந்திருந்து

179. யஜமான் என்றது சரபோஜியை

180. அங்குள்ள பிரபு என்றது கவர்னரை

அழைத்துக்கொண்டு வந்து, அவருடைய மனோபிஷ்டத்தைப்[181] பூர்த்தி[182] செய்ய வேணுமென்று நிச்சயித்திருக்கிறார்கள். அதற்கு நாமெல்லோரும் சாதகமாகயிருக்க வேண்டியிருக்கிறது; அப்படியே நாமும் ஏற்பாடு செய்திருக்கிறோம். இவ்விஷயம் தங்களுடைய யஜமான் சாஹேப்புக்குச் சீக்கிரம் தெரிவிக்கவும். இதை ரொம்ப ரகசியமாக வைக்கவும்.

பிராமண பூர்வமாக[183] யஜமான் சாயேப்பின் மனதில்தானிருக்க வேண்டும். இன்றும் ஸர்க்கார் உத்தியோகஸ்தர் ஸர்க்காருடைய சங்கதியைச் சொலலுகிறதாவென்றால் மா.ஸ்ரீ.பெரியபாயி சாஹேப் அவர்களுக்கு நாம் போதனை நன்றாக செய்திருக்கிறோம். குழந்தையை எப்படியாவது கொடுத்துவிட்டு இங்குவந்தால் தங்கள் வேலை எல்லாம் என்ன ஆகும். இந்தப்படி ஸ்ரீதர மேத்தாவின் மூலமாக கார்யம் ஆரம்பித்திருக்கிறது. இன்றும் அங்கிருந்து பிரபுவுக்கும் ஏராளமாக வேண்டுமென்கிற இச்சையிருப்பதால் ஸ்ரீமந்தரை[184] இங்கு வைத்துக்கொண்டு, எதிர்க்கட்சிக்காரரை அடக்குகிறேன்.

இப்பொழுது சென்னைக்குப் புதிய கவர்னர்[185] வந்திருப்பதால் அந்த கவர்னர் மனது பிரகாரம் ஒன்றும் நடக்கவில்லை. இப்படி சந்தோஷம் நேற்று முதல் அடைகிறார்கள்.

முந்தாநாள் வரையில் பயப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் ஒருவேளை நம்முடையவரை அழைத்து வந்த பிற்பாடு கவர்னர் மனது பிரகாரம் நடக்கவில்லை. ஆனால் கஷ்டம் ஏற்படும் போலிருந்தது. இப்பவும் யஜமான் சாயேப்பின் யேகாதி சமயத்தினால் (அதிஷ்டத்தினால்) காரியம் எப்படியும் நிறைவேறுமானால் அவ்விடமிருந்து பந்தோபஸ்து வர வேண்டியதில்லை. இங்கிருக்கிற ஆங்கிலேயராலும் கொஞ்சம் சகாயம் (பாதுகாப்பு) ஆகும்படி ஏற்பாடு செய்து வைக்கவும். எல்லா வேலைகளுக்கும் அனுகூலமென்று தோன்றுகிறது. இங்குள்ள ஆங்கிலேயரால் எனக்கு எல்லாம் சாதிக்கும்படியாயிருக்கிறது. அங்குள்ள தங்களுக்குத் தெரிந்து, தம்முடைய பேரால் வருகிற கடிதம் வந்தால் ஆக வேண்டிய காரியங்களை செய்து முடியுமென்றிருக்கிறது. இங்கு அவரால் நடக்க வேண்டிய முயற்சிகளும் நம்பேரில் அந்தக்கரண பூர்வமாக இருக்கிறது. அதை நன்றாகப் பராமரித்து எழுதியிருக்கிறது. நாம் அவ்விடம் அந்தக் காரியத்தைச் சீக்கிரம் செய்யவேண்டுமென்றிருக்கிறேன். எப்பேர்ப்பட்ட வேலைகளையும் கூடுமான வரையிலும அனேகருடைய மனதிலுள்ளதையறிந்து செய்கையினாலாவது கூடி வரும்படி சந்தோஷத்தைக் காண்பிக்கவேணும்.

புது சங்கதி . . . சங்கதியை எழுதுகிறேன் என்ன வென்றால் - மக்லோட் இலாவூ வந்தது முதல் இங்குள்ள காரியங்களை முடிக்காமலிருப்பதால் பிசகு செய்தாரென்று சென்னைக்கு வரவழைத்தார் என்று கேள்விப்பட்டேன்.

---

181. மனோபீஷ்டம்-மன விருப்பம்

182. பூர்த்தி-நிறைவு

183. பிரமாண பூர்வகமாக-உறுதியாக

184. ஸ்ரீமந்தர்-ஸ்ரீமான் (சரபோஜி)

185. புதிய கவர்னர் என்றது 7-9-1794 இல் பதவியேற்ற லார்டு ஹொபர்டு ஆகக்கூடும்

இங்கே அவரிடமுள்ள துபாசி வகையறாக்கள் அவர் சம்சாரம் சீகாழியிலிருப்பதால் அவர் போயிருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

இராஜா[186] வெள்ளியைப் போட்டுத் துலாபாரம்[187] செய்து எல்லோருக்கும் கொடுத்தார். ஸர்கேலவர்கள் துணிமணிகளையும் ஐந்துவித லோகங்களையும்[188] போட்டு துலாபார தானம் கொடுத்தார். இராமேஸ்வரத்தில் வந்த எல்லாப் பிராமணாளுக்கும் பூரி (தக்ஷிணை) கொடுக்கிற வரையில் 1/2 படி அரிசியும் 4 காசும் கொடுத்து வந்தார். அரண்மனை ஜனங்களுக்கும் கணக்குப் பிள்ளைகளுக்கும் பட்டுக் கோட்டையிலிருந்து கடைசி வரைக்கும் ஒருபடி அரிசி கொடுத்து வந்தார். இராமேஸ்வரத்தில் ஒரே மாதிரியாய் எல்லா ஜனங்களுக்கும் கொடுத்தார்.

4 வருஷ மாக மழையும் ஜலமுமின்றி அங்குள்ள ஜனங்களுக்கு ரொம்ப சிரமமிருந்தது. இவ்வருஷம் ரொம்ப மழை தண்ணீர் கஷ்டமில்லை விற்பனை சுபிட்சமானதால் யாத்திரை ஜனங்களுக்கு சுகமாக ஆயிற்று.

## ஆவண எண்: 170

ஸர்க்கார் இலாகாவில் கிராம முன்சீப்[189] நியமிக்கிற விஷயம். [190] பிரின்சிபால் கலெகடர் சாயேப் அவர்களுக்கு ஸர்க்கார் காரியங்களில் இருக்கிற ஊக்கமும் அவ்விஷயத்தைப் பற்றித் தாங்களனுப்பிய உத்திரவையும் விஸ்தாரமாகக் கண்டிருக்கிறீர்கள். அவையெல்லாம் படித்து, மனதுக்கு வாங்கி ஹுஜூர் அவர்களுடைய சித்தம் சந்தோஷமும் அந்த சாயேப்புக்கு ஸ்துதி பரமுமாயு மிருக்கிறது.

நாம் ஸர்க்கார் இலாகாவில் கிராம முன்சீப் நியமனஞ் செய்யப் போகிறோமென்று, சென்ற, ஏப்ரல் 15உ க்குத் தங்களுக்கு தெரிவித்தபடி ஹுஜூரே இதுவரைக்கும் கிராம முன்சீப்பை நியமனஞ் செய்திருக்கிறார். என்னவென்றால் சிற்சில பரிவர்த்தனம் ஆகும்படியாகயிருப்பது. ஆன பிற்பாடுதான் ஒருநல்ல ஏற்பாடு செய்வதாக யோசனையிருக்கிறது.

மேஜிஸ்திரேட்டு போலிஸ் சங்கதியின் காரியம் ஒரு கட்டுப்பாடு செய்வதில் சில நியாயம் பிரின்சிபால்[191] கலெக்டர் என்னைக் கேட்பார் என்று தெரிவதால் அவ்விஷயத்தில் ஸர்க்காருடைய அபிப்பிராயத்தின்படி தெரிந்திருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

அவ்விஷயத்தில் காரணமாக (சாதாரணமாக) சர்க்காருடைய அபிப்பிராயமென்னவென்றால் சமீபத்தில் சில வருஷங்களாக இந்த தேசத்தின் ஜனங்களுக்கு

186. இராஜா என்றது அமரசிங்கு எனத் தோன்றுகிறது

187. துலாபாரம்-தானம் செய்யும் பொருட்டு ஒருதட்டில் பொன்னும், ஒரு தட்டில் தானுமாக இருந்து பொன் நிறுக்கும் சடங்கு

188. பஞ்சலோகம்-பொன், வெள்ளி, இரும்பு, செம்பு, ஈயம் என ஐந்துவித உலோகங்கள்.

189. கிராமமுன்சீப் -ஊர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி

190. இது 3-ஆம் பகுதி 36 (8)ல் 19-1-1827 இல் எழுதியது எனக் காணப்படுகிறது.

191. கலெக்டர் காமல் ஆக இருக்கலாம்.

அனைக்கு சர்க்காருக்கு தாம் கொடுக்க வேண்டிய மகசூல் தகுந்த காலத்தில் கொடுக்காமல் தப்பித்துக் கொள்வதற்கு அந்தப் பாக்கியைப் போட்டு, சில நாட்களுக்கப்பால் அதை தான் கொடுக்க வேண்டியதில்லை. அதை நமக்கு சர்க்காரானவர் தள்ளிக் கொடுக்க வேணுமென்று வீண் தகராறு ஏற்படுத்தி, அவ்விஷயத்தில் சில நியாயமாகத் தோன்றும்படி உண்டு பண்ணி சர்க்காருக்கு நஷ்டத்தையும் அநியாயஞ் செய்வதாகவும் முயற்சி யெத்தனை விதம் உண்டு பண்ணுவதற்கு கற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நம்மைப் பார்க்கிலும் புத்திமானும் சாமர்த்தியவானுமான ஆங்கிலேய கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கு மாகையால் சர்க்கார் இலாகாவிலுள்ள ரயத் வகையறா ஜனங்களுடைய தில்லம் பில்லத்தினால் மகசூலின் போதுமான வசூல் முன் சொல்லப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்கு அந்த ஜனங்கள் மரியாதையுடன் கீழ்ப்படிந்து, நடக்க வேண்டுமென்றும், நன்னடத்தையாக இருக்க வேண்டுமென்றும் ஏற்படுவதற்கு மாத்திரம் நாம் நியமனஞ் செய்த அதிகாரத்தில் வேறு அதிகாரிகளுடைய பிரவேசமில்லா மிருக்க வேணுமென்றுதான் நம்முடைய மனதிலுள்ள எண்ணம் தவிர வேறு காரணத்தினாலல்ல.

நாம் இவ்வளவு பிராத்தனை செய்வது அனுசிதமென்று சொல்லக்கூடாது. ஏனென்றால் சாமான்யமாக ஒரு அதிகாரிக்குத் தன்னுடைய அதிகாரத்தில் வேறொரு அதிகாரத்தின் தொடர்பு ஏற்பட்டால் காரியம் எந்த விதமாக முடியுமென்று எண்ணினால் கேட்பவர்களுக்குப் பதில் சொல்வது கூட சிரமமென்பது பழைய காலத்து வார்த்தை எல்லா புத்திமான்களும் ஏற்றுக்கொள்வது நியாயமாகையால் சமஸ்தானாதிபதிகளிடத்தில் சொற்ப கிராமங்களும் சில தோட்டம் வீடுகள் இருக்கின்றன. அவைகளில் வேறொருவரும் பிரவேசிக்காமலிருக்க வேண்டுமென்பது நலம் யென்று அவர்களுடைய சிநேகிதர்கள் அறியாமல் இருக்க மாட்டார்களென்பது எல்லோருக்கும் தெரிந்திருப்பதால் இவ்வளவுதான் எங்கள் பிரார்த்தனை.

ஆனால் மனிதர்களை கொலை, களவு, வீட்டுக்குத் தீ வைத்தல் அதனால் அதிக பிரமாதமும், அதிக நஷ்டமும் ஏற்படுவது. இப்பிரகாரம் குற்றவாளிகளை விசாரிப்பது. பெரிய வயதான மனிதர்கள் பயந்து சாவதானமாக செய்ய வேண்டியதாகையால் அப்படி விசாரணையும் இருதாரார்களும் வேறு இடத்திற்குப் போயடையக் கூடிய சந்தோஷத்தை அடைவார்கள். நியமனஞ் செய்த காரியமும் மாஜிஸ்திரேட்டு சாயேப் அவர்களின் விசாரணைக்கு ஒப்படைப்பதில் எப்பொழுதும் ரா.ஸ்ரீ. ஸர்கேல் சந்தோஷமாயிருப்பாரென்று தாங்கள் சமயோசிதமாய் வணக்கமாகத் தெரிவிக்கலாம்[192]

கையெழுத்து
பாபாஜி

## ஆவண எண்:171

மிராசுதார்கள் தரம் போடுவதற்கு (நிர்ணயிப்பதற்கு) வேண்டுமென்ற சங்கதி

அதில் நிலத்தின் ஸ்வரூபத்தை அறிந்து அதற்குத் தரம் நிர்ணயஞ் செய்வதற்கு அனுபோகமுள்ள 2 (இரண்டு) மிராசுதார்களைத் தன்னிடம் அனுப்ப வேணுமென்று

192. பகுதி 3ல் ஆவணம் 39(9), இதன் தேதி ஜுன் 7, 1827

பிரின்சிபால் கலெக்டர் அவர்கள் தங்களுக்கு நேரில் பார்த்த போது, தெரிவித்த விஷயம் விஸ்தாரமாகத் தெரிவித்திருக்கிறீர்கள். அதை மனதில் வாங்கி ஹுஜூரவர்களுக்குத் தெரியப்படுத்தினதிற்கு ஹுஜூரே அல்லது எனக்கு கொடுத்த உத்திரவை தெரிவிக்கிறேன் என்னவென்றால்:-

ஸர்க்கார் இலாகாவில் கொஞ்சம் கிராமங்களிருக்கின்றன. அதில் மூப்பானைப் போல் பெரிய மிராசுதார் ஒருவருமில்லை. இருக்கிறவர்களில் யோக்யமானவரை பிரின்சிபால் கலெக்டர் வேண்டுமென்றால் கொடுப்பதற்கு ஹுஜூருடைய எண்ணம் நன்றாக இருக்கிறது. ஆனால் தரம்போட்டு அதன் பேரில் ஜமாபந்தி நிர்ணயமாகி துகையை சர்க்காருக்கு செலுத்தி அந்நிலத்திலுள்ள வரும்படியை அனுபவிப்பதற்கு லாப நஷ்டத்திற்குப் பாத்தியதையாகிற மிராசுதார்களிடமிருந்துதான செய்யப்படுகிற நிச்சயம் சுத்தமாகத்தா னிருக்குமென்று நம்பத்தக்க தல்ல.

ஏனென்றால் மிராசுதார்கள் நிலத்தினுடைய தரத்தையும் கண்டுமுதல் துகையையும் நிர்ணயிப்பார்கள். அவர்களுக்குத் தெரிந்தவுடன் தாகலா (ருஜு) பார்ப்பதற்கு இதுவரையிலும் யிந்த சமஸ்தானத்தில் முன்கால முதற்கொண்டு ஆக வில்லையாகையால் இந்த சமஸ்தானத்தில் ஆற்றங்கரையிலுள்ள நிலம் மணல் கடினமில்லாததாயம், மிருதுவாகவும், சுண்ணாம்புக்கல், பாறையில்லாத புதிய பிரவாகத்தினுடைய வண்டலுடன் கூடிய கருப்பு களிமண்ணுள்ள நிலம் எல்லாம் உயர்ந்தது முதல் தரத்தினதான். ஆனால் இப்பேர்ப்பட்ட இடங்களில் உடப்பு வந்து யெக்கல் அடித்தால் அந்த நிலம் அநேக வருஷங்களுக்குப் பிரயோஜனப்படாது. சில நிலங்கள் சியந்திரத்திற்கு உபயோகப்படுகிறது. இம்மாதிரியான சங்கடங்க ளேற்படாமவிருக்கிற நிலங்களில் மகசூல் அனுபவிப்பதற்கு ஆற்றுப் பிரவாக ஜலமும், மழையும் ஒவ்வொரு வேளையிலும் தவறாமல் இருந்து விதை விடுதல், நடவும், தகுந்த சமயத்தில் ஆகி, நிலத்தில் களை காலா காலத்தில் தவறாமல் எடுத்து, அதிக சௌகரியத்துடன் நிலம் கெடாமலும், நிலத்தில் எலி . . . . முதலியவைகள் புகுந்து செய்யும் கெடுதிகள் உண்டாகாமல் கதிர் கிளம்பி, பால் நிறையும் பொழுது, மழை காற்று இவைகளால் பால் வழிந்து போகாமலிருந்து நிலத்தில் பட்டடையில் பஞ்சமசி மென்கிற ...... திருட்டு போகாமல் நன்றாகப் பாதுகாக்கப்பட்டால் முன் சொன்ன மாதிரியான நிலம் முதல்தரமென்று சொல்வதற்கு ஒருபொழுதும் சந்தேகப்பட வேண்டியதில்லை. சொல்லப்பட்ட மாதிரியான சாதன சம்பத்தியும் கெடுதி யின்மையும் ஈஸ்வரனுடைய சுவாதீனத்திலிருப்பதால் இந்த தேசத்தில் தரம் நிர்ணயிக்கப் படாமல் இருந்திருக்கலாம் என்று அறிய வேண்டியிருக்கிறது.

இதர தேசங்களிலோ பூமியின் கொஞ்சம் அடியில் சிறிது தூரத்தில் வற்றாத நீரிருக்கும். அவ்விடங்களில் கிணறு தோண்டி தண்ணீரை இறைப்பது எப்பொழுது ஆற்றில் உடப்பு ஜலமில்லாமற் போவது, இதனாலாகிற கெடுதல்கள் இதிவில்லை. ஒரு கிணற்றிலிருந்து இவ்வளவு தண்ணீர் இறைத்தால் இத்தனை நிலம் சாகுபடி செய்யலாமென்றும், இவ்வளவு கண்டுமுதல் ஆகுமென்றும், பழைய காலத்திய கணக்கிலிருந்து ருஜு பார்க்கலாம்.

குளம், குட்டை இவைகளில் தண்ணீர் நிரம்பினால் அதிலுள்ள தண்ணீர் இவ்வளவு நிலத்திற்கு இவ்வளவு மாதத்திற்கு வருமென்று (சாகுபடிக்கு) நிர்ணயஞ் செய்து, அதன்படி நிலத்தின்

மகசூலில் பிசகாகாது.

அதற்குக் கணக்கு இருக்கிறது. ஆகையால் அப்பேர்ப்பட்ட இடங்களில் தரம் நிர்ணயஞ் செய்திருக்கலாம். அப்படியில்லா விட்டாலும் புதியதாக நிர்ணயம் செய்வதற்கு சுலபமாகும்.

இத்தேசத்தின் அளவு முன்கால முதற்கொண்டு சுத்தமாகவும், சந்தேகத்தைப் போக்கடிக்கத் தக்கதாயுமாக வில்லை. சமீபத்தில் சில வருஷங்களாக கும்பனி உத்தியோகஸ்தர்கள் அளந்தது நடக்கிறபடி சரியாயிருக்கலாம். ஆனாலும் ஒவ்வொரு காரியத்திற்கும் சந்தேகத்தைத் தீர்க்குமென்று நம்பக்கூடாது. ஆனாலும் அக்காரியம் செய்ய முடியாதது என்றும் சொல்லக்கூடாது. ஆனால் சிரமத்தினால்தான் சாதிக்க முடியும்.

ஏனென்றால் அந்நிய தேசத்தில் ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊரின் சில மானயமாகவும் நிலங்கள் அனேகமிருக்கிறது. அப்பேர்ப்பட்ட ஊர்களில் ஊருக்கருகாமையில் சில நிலங்கள் ஸ்சகாலும் பாக்கி உபயோகமில்லாததும், தரிசியாகவும் இருக்கிறது: அப்பேர்ப்பட்ட சைகால் நிலங்களை சாகுபடி செய்யும் ரயத்துக்கள் சிலபேர்தானிருக்கிறார்கள். அந்த ஒருவருடைய நிலத்திற்கு சம்மந்தமடையாமல் மற்றொருவன் சாகுபடி செய்கிற ரயத்துகளுடைய பேர்கள் கண்டு நிலங்களின் கணக்குகள் சுபாவமாகவே ஆகிறது.

இந்த தேசம் ஆறுள்ள அனாதிதரிசுயென்று சொல்லப்பட்ட நிலம் ஒரு வேளை ஊர்களில் கொஞ்சமளவுள்ளவையாக யிருக்கலாம். அல்லது பாக்கி சைகால் நிலமும் ஜனங்கள் வசிப்பதற்கு இதனால் ஆற்றினிருகரைகளிலும், ஒன்றைப்(1 1/2) பாகமாக வியாபித்திருக்கும்.

ஒவ்வொரு ஊரின் ஒரு கட்டளையிலுள்ள நிலத்திற்கு 2,4 மிராசுதாரர்கள் சாகுபடி செய்வதற்கு பாத்தியமுள்ளவர்களாக யிருப்பார்கள். உடனே 2 வது அல்லது 3 வது வருஷத்தில் ஊர் மிராசுதாரர்கள் கரையேடு என்கிற நிலத்தின் மாறுதல்களைச் செய்து கொள்ளுவார்கள். அப்பொழுது முன்சொன்ன கட்டளைக்கு முதலில் கண்ட மிராசுதாரர்களின் பேர்வழிகள் வித்தியாசமடையும் தானங்கிரயமும், மான்யமும் பேர்வழிகளும் வித்தியாசப்படலாம்.

ஒரு சிற்றூருக்கு மிராசுதார் அனேகம் பேர்களிருப்பதால் மிராசுதாரரின் பேர்வழி வாரி நிலத்தின் கணக்கைக் காப்பாற்ற வேணும். பிறகு வருஷா வருஷம் கரையேடு வேளையில் மிராசுதாரர்களின் பேர்வழிவாரி கட்டளைவாரியாக இனாமும் சிலவும் உடனே பார்த்துக் கணக்கைத் தயார் செய்ய முடியாத காரியமென்று இது வரையிலும் எல்லா சந்தேகத்திற்கும் பரிகாரஞ் செய்கிறதான பைமாஷ் ஒருவரும் செய்யாமலிருக்கிறார்கள்.

தற்போது பிரின்சிபால் கலெக்டர் சாயேப் அவர்கள் பைமாஷ் செய்வதற்கு ஆரம்பஞ் செய்த விதமும் அதற்காகப் பைமாஷ்தார் பிர்க்காதார் இவர்களை நியமித்து, அவர்களிடமிருந்து வேலை விவரப்படி வாங்குவதின் மாதிரியும் நன்றாய் யோசனை செய்துபார்த்தால் இப்பொழுது நடந்து கொண்டிருக்கும் பைமாஷ் பூர்ணமாகச் செய்து தயாராகிற கணக்கு ஒவ்வொரு எல்லை விவாதமும் நிலம் விவாதமு முண்டாகாதபடிசெய்வதற்கு ஒருவேளை சொல்லப்பட்ட விவாதமேற்பட்டால் அதை அதிக சுலபமாக நன்றாய்க் காட்டு வதற்கும் ரொம்ப உபயோகப்படுமாகையால் மேறசொன்ன பைமாஷ் ஹுஜூருக்கு அதிகப்பிரிய முள்ளதா யிருக்கிறதென்று தெரிவிக்கிறோம்.

ஆனால் இப்பொழுதே சுதந்திரம் (நிர்பந்தம்) அடைந்தபடி சொல்லப் பட்ட மாதிரியான பைமாஷ் ஆகி அப்பைமாஷ்படி கட்டளைவாரி மிராசு பேர்வழிவாரி கண்டு முதல் கணக்கு ஆகும்தான். அப்படி 3 அல்லது 5 வருஷத்திய கணக்குத் தயாரானால் அந்தக் கண்டு முதல் மூலம் சுதந்திரம் செய்யத் தரத்தை ஒவ்வொரு மிராசுதாரரும் சச்சரவின்றி ஒப்புக்கொள்வதற்குத் தகுந்ததாயும், சந்தேகமற்றதாகவும் அதிகசுத்தமும் ஆகலாமென்று, யோசனையைத் தெரிவிக்க ஹுஜூரால் கட்டளையிடப்பட்டிருக்கிறோம்.

சொன்னவிதம் தரம் சுதந்திரமடைந்த பின்பும் வெள்ளச்சேதம், வரளச்சேதம் உண்டானால் அந்தச் சேதம் மிராசுதாரருடைய ஆஸ்தியைக் கூட இழுக்கும் போவிருந்தால் அப்பேர்ப்பட்ட சேதம் (நாசம்) நிஜமென்று தெரியவந்தால் அவ்விஷயத்தில் பிரின்சிபால் கலெக்டர் சாயேப் அவர்கள் ஏதோ தகுந்த தயவைக் காண்பிக்கிறது. மிராசுதாரர்களுக்கு விருத்தி (நிலம்) சேதம் ஏற்படாமலிருப்பதற்கு காரணமும் கவர்ண்மெண்டுக்கு கீர்த்தி விஸ்தாரமாகும்படியாகவு மாகலாம்.

பிரின்சிபால் கலெக்டர் அவர்களான ஏ. டி கேமல் சாயேப் அவர்களுக்கு வேலை பார்க்கிற இடத்திலிருக்கிற அசட்டையின்மை (சுறுசுறுப்பு) ஆகிய அக்கரையும் தான் பரிசுத்தமானராகவும் ஒவ்வொரு உத்தியோகஸ்தர்களுக்கு பரிசுத்தமாகவும் பட்சாபாத மில்லாமலும் வேலை வாங்கிற சாமர்த்தியமும் நியாயஞ் சொல்வதிலுள்ள பிரியமும் இத்தேசத்தின் மிராசுதார்களுக்கு தரம் சர்க்காருக்குச் செலுத்த வேண்டிய வரியைத்தவிர வேறு வரி போட்டுக் கொஞ்சங்கூட சிலவு தமக்குக் கொடுக்கும்படியாக இருக்காதென்ற நம்பிக்கை நம்முடைய காலத்தில் உண்டாகலாமென்று அந்த நம்பிக்கையினால் தான் பார்த்து வருகிற நிசமான துகையைத் தெரிவிப்பதற்கு அனுமானமற்றிருப்பாரென்று ஹுஜூருக்கு தோன்றியிருக்கை நம்பிக்கையை நாம் தெரிவிப்பதற்கு சந்தோஷமாக யிருக்கிறோம்.

சேவக-பாபா

## ஆவண எண்:172

காசி யாத்திரைக்குச் சென்று திரும்பி வருகிறவரையில் நடக்கவேண்டிய விபரம்[193]

விக்ரம[194] ஹு புரட்டாசிமீ 9 உ[195]

(1) நவராத்திரி முதலிய எல்லாப் பண்டிகைகளும் ஆயுதபூஜை, விஜய தசமி, சீமோல்லங்கணம் வகையறா உற்சவங்கள் நம்முடைய குழந்தையின் மூலமாக வழக்கப்படி நடத்தவேணும்.

(2) நவராத்திரியின் பண்டிகையும் ஆயுதப்ரக்ஷாளனம் பூசையும் சீமோல்லங்கனமும் இதற்கு ரெசிடெண்ட் வந்து பின்பு எல்லாவற்றையும் பூர்த்தி செய்கிறது.

193. இத்தலைப்பில் உள்ளவற்றை பகுதி 3இல் காணலாம்.

194. விக்ரம-ஆண்டறுபதனுள் பதினான்காவது

195. இது 22-9-1820 ஆகும். பகுதி 3 ஆவணம் 38 (31)

சிலங்கன சாவடியிலிருந்து அரண்மனைக்குத் திரும்பும் பொழுது ரெசிடெண்ட் சாயேப் எங்கள் குழந்தையோடு இரதத்தில் உட்கார்ந்து, அரண்மனைக்குக் கொண்டு வந்து சேர்ப்பிக்க வேணும். இப்பண்டிகையை முன்னிட்டு இனாம் வகையறா வழக்கப்படி சேர வேண்டியவர்களுக்குக் கொடுக்கிறது.

(3) தீபாவளி முதல எல்லாப் பண்டிகைகளும் பாவுபீஜ, அரண்மனையிலுள்ள சுவாமிகளுக்கு மகோற்சவம் புண்ணிய காலத்தில் வழக்கப்படி தான தர்மங்களை நடத்துகிறது.

(4) சி. சௌ. சைதம்பாபாய் சாயேப் மா. ஸ்ரீ. அவுசாஹேப் ஐந்து மாப்பிள்ளைகள் சி. சௌ. ஐந்து வர்க்கம் அமணி ராஜே. ஐந்து குழந்தைகள் இவர்களுடைய மொயின் தான தர்மங்கள் வகையறா ஒன்றுங் குறைவில்லாமல் வழக்கப்படி நடக்க வேணும்.

(5) நம்முடைய அந்தப்புரத்தில் பண்டிகை முன்னிட்டு மாப்பிள்ளை ஜனங்களுக்கும் பட்டுவாடா செய்ய வேண்டிய வாழைப்பழம், தேங்காய், எண்ணை, ஆடுகள், உலுப்பை வகையறாக்களைக் கொடுத்து வந்த மாமூல்படி சி. சௌ. சைதம்பாபாய் சாஹேப் அவர்களிடத்தில் கொடுப்பது.

(6) குழந்தைகளின் பிறந்த நாளில் எல்லோருக்கும் நடக்கவேண்டிய வழக்கப்படி மரியாதை செய்கிறது.

(7) ஜனவரி, கிறிஸ்மஸ் இந்த இரண்டு பண்டிகைகளுக்கும் ரெசிடெண்ட் முதலிய ஆங்கிலேயர்களுக்கு சர்க்காரிலிருந்து செய்ய வேண்டிய மரியாதை வழக்கப்படி செய்கிறது.

(8) ரெசிடெண்ட் சாயேப்பினுடைய அனுமதியின்பேரில் புதிய துரைகள் பேட்டி வாங்கி அவர்களுக்கு ரெசிடெண்ட் சாயேப்பினுடைய புத்திமதிப் பிரகாரம் மரியாதையை நடத்த வேணும்.

(9) விஜயதசமி சிலங்கனத்திற்காக ரெசிடெண்ட் சாயேப் முதலிய துரைகளிடமிருந்து எங்களுக்கும் எங்கள் குழந்தைகளுக்கும் நடந்து வந்த மரியாதை இப்போது எங்கள் குழந்தைகளுக்கு நடக்க வேணும். அவர்களுக்கு சர்க்காரிலிருந்து செய்து வந்த மரியாதையை வழக்கப்படி நடத்த வேணும்.

(10) சீமோலங்கனமாக இரண்டாவது தினத்தில் நம்முடைய சமஸ்தானத்தின் ஜனங்களுக்கும் கலெக்டரிடமுள்ள உத்தியோகஸ்தர்களின் பேட்டியை ரெசிடெண்ட் அருகிலிருந்து செய்து வைக்க வேணும். ஷை உத்தியோகஸ்தர்களுக்கும் சர்க்காரிலிருந்து வழக்கப்படி செய்ய வேண்டிய மரியாதையைச் செய்ய வேண்டியது.

(11) கோட்டையிலும் வயனிலும் குடியிருக்கும் ஜனங்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டிய காரியம் அதற்காக வைத்திருக்கிற 4 சபைகளிடத்தில் திருஷ்டி வைத்து, நியாயமுண்டாகும்படி ஜாக்கிரதை செய்ய வேணும். ஒரு வேளை சபையில் யாருக்காவது அநியாயமா யிருப்பதாக ருஜுவானால் அப்படிப்பட்டவருக்கு யுக்தமான தண்டனை செய்வது, அல்லது அவரை நீக்க வேண்டியதாக ஏற்பட்டால் நீக்கி விடுகிறது.

(12) கோட்டையிலும் லயனிலும் வசிக்கிற ஜனங்களின் நகை நாணயங்களைக் காப்பாற்றுவதால் எல்லா ஜனங்களுக்கும் கவலையற்றவராகவும், சந்தோஷமுண்டாகும்படியாகவும், திருடர்களின் பயத்திலிருந்து காப்பாற்றுவதற்கும் நியமிக்கப்பட்டவர்கள் சரியானபடியாக நடக்கிறார்களா வென்று பார்த்து, அந்தப்படித் தவறு செய்கிறவர்களுக்கு உடனே தண்டனை செய்வது அலலது வேலையிலிருந்து நீக்கி விடுகிறது.

(13) முகாசா, சத்திரம், தோட்டம் வகையறாவின் அமீனா முதலியோர் சிப்பந்திகள் அவரவர் வேலைகளைச் சரிவரச் செய்யாவிட்டால் காரியத்தைக் கெடுத்து விட்டாலும் அவர்களின் பேரில் தப்பிதமென்று ஏற்படுத்தி அவர்களை வேலையிலிருந்து நீக்கி, யோக்கியமானவரை நியமித்து, இராஜாங்கத்தின் வரவு தர்மம், விருத்தியடையும்படியாகச் செய்ய வேணும். ஷெ வரவும் தர்மமும் இவ்விரண்டிற்கும் கெடுதல் செய்பவர்களுக்குத் தண்டிக்க வேணும்.

(14) யாத்திரைக்கு எங்களுடன் வருகிறவர்களுடைய சம்பளத்தை அவர்களின் வீட்டில் சேர்ப்பிக்கிறது. ஷெ ஜனங்கள் யாத்திரையிலிருப்பதால் அவர்கள் திரும்பும் வரையிலும் அவர்களின் பேரிலோ அல்லது அவர்கள் வாரிசின் பேரிலோ யாராவது வியாஜ்ஜியம் செய்தால் அதைத் தள்ளி விடவும். ஷெ யாத்திரை ஜனங்களின் வாரிசு வியாஜ்ஜியம் செய்தாலும் அதை உடனே விசாரித்து அவர்களின் பேரில் வம்பு செய்கிறவர்களை தண்டனை செய்து ஷெ ஜனங்களைக் காப்பாற்ற வேண்டும். தினந்தோறும் அவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்து அவரவர் சுபாசுபங்களுக்கு சாமான்ய ஜனங்களுக்கு 5 சக்கரத்திலிருந்து 10 சக்ரம் வரையில் அவரவர்கள் யோக்கிதைப்படி இனாம் கொடுத்து உதவுகிறது. அவரவர்களுடைய க்ஷேமங்களை கடிதமூலம் தெரிவித்துக் கொண்டிருக்க வேண்டும்.

(15) இராஜாங்கத்தின் ஒவ்வொரு காரியமும் வரவு சிலவு வகையறா சிறியதாகவுமல்லது பெரியதாகவு மிருந்தாலும், அதை ரெசிடெண்ட் சாயேப் அவர்களுக்குத் தெரிவிக்காமலும் அவருடைய சம்மதமின்றியும், செய்யக்கூடாது. எல்லாம் அவருடைய சம்மதத்தின்படி நடக்கவேணும்.

(16) நம்முடைய குழந்தையும் மாப்பிள்ளையும் கோட்டைக்கு வெளியில் உலாவப் போகவேண்டுமென்றிருந்தால் போகலாம்.

(17) மேற்சொன்ன வகைகளில் கண்டது அல்லது நம்முடைய மா. ஸ்ரீ.சி. குழந்தை, சௌ. நாட்டுப்பெண், சி.சௌ. பெண்கள், அவர்களின் குழந்தைகள் இவர்கள் ஒருவேளைப் பருவ காலத்திலும் உற்சவ காலத்திலும் திருவையாறு வரையில் போய் மூன்று தினங்கள் வரையிலிருந்து வரவேண்டு மென்றால் அவர்களுடைய மாமூல் பிரகாரமுள்ள சாஹித்தியங்களைச் செய்து கொடுத்து அனுப்பி, மூன்று தினங்களுக்கு மேல் கோட்டைக்கு வெளியே தங்காமல் ஏற்பாடு செய்யவும்.

(18) மாதாமாதம் கிஸ்தித் தொகையும் வருடக் கடைசிக் கணக்கையும் தீர்த்துப் பாக்கித் தொகையையும், கும்பனியிலிருந்து வருகிறதற்கு நம்முடைய குழந்தையின் பேராலுட

கையெழுத்திட்டு ரசீது தயார் செய்து அந்த ரசீதில் ரெசிடெண்டின் கையெழுத்தும் வாங்கிக் கொடுக்க வேணும்.

(19) நம்முடைய குழந்தையைக் காப்பாற்றுகிற விஷயத்திலும் அவர் வித்யாவாள் ஆக வேண்டிய விஷயத்திலும் நம்முடைய தர்பாருடைய வேஷத்தைப் போட்டுக் கொள்ளுவதற்கு ரெசிடெண்ட் தயையுள்ளவராக இருக்கவேண்டும்.

(20) நம்முடைய பிறந்த நாளன்று பெரிய கோட்டையின் பேரில் நம்முடைய வயதின் கணக்குப்படி குண்டுபோட வேணும். அதற்காக அதே தினத்தில் சிவகங்கை கோட்டையின் மேல் 21 (இருபத்தோரு) குண்டுகளைப் போடவேண்டும்.

(21) வசந்த பஞ்சமி தினம் நடக்கும் ஸதர் (தர்பார்) வழக்கப்படி நடத்த வேண்டும்.

(22) ரா.ஸ்ரீ. சுவாமிகளுக்கு ஸ்ரீராமநவமி புண்ணியதிதி பண்டிகை வகையறாக்களுக்கு மொயினும், மரியாதையும் நடக்க வேண்டியது.

(23) இங்கிருக்கும் சிப்பந்திகளில் ஸர்கேல் பங்க் நாயிக், கில்லேதார், சேனாபதி ஸர்காருடைய உறவினர்கள் இவர்களுடைய வீட்டில் சுபா சுபங்களானால் இனாமும் வஸ்திரமும் வழக்கப்படி நடக்க வேண்டும்.

(24) எல்லா தேவஸ்தானங்களுக்கும் இரத உற்சவத்திற்காக பூஜையும் தக்ஷணையும் வஸ்திரங்களும் பானக பூஜையும் கொள்கஞ்சி வகையறாவும் வழக்கப்படி நடக்க வேணும்.

(25) துக்கோஜி பாலியவயது குழந்தையானதால் அவர் வெளியே போவது வருவது சுகம். சந்தோஷத்திற்குப் பாத்திரராக யிருக்க வேண்டுமென்பது என்னுடைய முக்கியமான எண்ணம் ஆதலால், அதற்காக அவர்களிடமுள்ள சில ஜனங்கள் கெடுக்க எண்ணங்கொண்டு அந்தக் குழந்தையைக் கைதியைப் போல செய்ய முயற்சிக்கிறார்கள். இப்படியிருந்தாலும் அந்தக் குழந்தை வெளியே உலாவப் போய் வருமாகில் அவருக்குப் பதக்கமும் கைக்கு ஏதாவது ஆபரணங்களையும் ஆடைகளையும் கொடுத்து அவருடன் கூடப் போகிறவர்களுக்கு 2,4 காரியத்திற்குப் போதுமானதை கொடுத்து உத்திரவிடலாம்.

(26) சௌ. ராஜம்மாவும் உபலம்மாவும் சுபான்ஜி போஸலேயின் சம்சாரம். நான் என்னம்மா இவர்களிடம் தான தர்மத்திற்காக கொடுத்து வரவேணும்.

(27) வியாச பூசை பதிலாக அந்தந்த மடங்களுக்கு வஸ்திரம் வகையறாக்களை மாமூல்ப்படி கொடுத்து வரவேணும்.

(28) நம்முடைய தாயிமார்களுக்கு தானம் தர்மத்திற்கு கொடுக்கிற வழக்கப்படிக் கொடுத்து வரவேணும்.

(29) மஹாலோ மஹால்களில் நடக்க வேண்டிய அவசியமான சிலவுகள் அதிகமாக இருப்பதாலும் சைன்யத்திலுள்ள சிப்பந்திகளுக்கு மாதச்சம்பளம் அதிகமாக இருப்பதாலும் மஹாலோ மஹால் அவசியமான சிலவுக்கு இடஞ்சலாவதினால் சம்பளக்காரர்களின் துகையில் மாதத்திற்கு ஐயாயிரம் அல்லது ஏழாயிரம் சக்கரம் கம்மி செய்து கொண்டு அந்த

பாபத்தில் துகையை மாதத்திற்கு கும்பனியிலிருந்து வருகிற கிஸ்தியின் துகைக்கு அதிகம் ஆகாமல் சம்பளக்காரர்கள் வகையறாவும் மஹாலோ மஹால் நடக்கிற யுக்தமான சிலவுகளைச் செய்கிறது. ஷை சிலவுக்கு ஷை துகை போதாமல் இடைஞ்சலானால் கும்பனியிலிருந்து வருடக் கடைசியில் இதரத் துகைகள் வருகிறதில் நடத்துகிறது. பாக்கி மீறுகிற துகையை சம்பளக் காரர்களுக்குப் பாக்கிக்கு கொடுக்கிறது.

(30) சம்பளக்காரர்களுடைய மாத சம்பளத்துகையில்(ஐயாயிரம்) அல்லது ஏழாயிரம் சக்கரம் குறைப்பதற்கு தங்கள் இஷ்டப்படி கம்மி சம்பளமும் வேலையிலிருந்து நீக்குவது வேலைவிட்டுப் போகிற சிப்பந்திகளுக்கு வேறு ஏதாவது கொடுக்கிற விஷயத்தில் ரெசிடெண்ட் சாகேப் தயவுசெய்து நமக்கு நம்முடைய சமஸ்தானத்திலிருந்து கொடுக்கிற துகையில் முந்தியே வாங்கிக் கொடுத்து சகாயம் செய்ய வேணும்.

(31) பௌர்ணமிக்கு இரவில் போட வேண்டிய குண்டுகளை வழக்கப்படி போட வேண்டும்.

(32) சமஸ்தானத்திற்காக பானகபூஜை மாமூல்படி நடக்க வேண்டும்.

மேலெழுதிய விவரப்படி நடக்கிறது.

ஸர்கேல் ராஜெஸ்ரீ ராமோஜி
ஸர்ஜேராவ் காட்கே.

## ஆவண எண்:173

1885 [196] கி.பி. ஜூலை மீ முதல் ஹுஜூர் கச்சேரியில் தமிழ் பாஷையில் கணக்குத் தயார் ஆகிறது என்றும், ஆனால் சர்க்காருக்கு அனுப்ப வேண்டிய கணக்கு தமிழிலே எழுதுவதா அல்லது மோடியிலே எழுதுவதா என்று சிரஸ்தேதார் எங்கள் பேரால் கடிதம் எழுதியிருப்பதால் தாங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறது. ராஜம்மா பேட்டைக்கு அம்மா பேட்டை யென்று பிரதிப்பெயர் மாற்றப் பட்டிருக்கிறது.

## ஆவண எண்: 174

1856 அக்டோபர் 18உ [197] ரெசிடெண்ட் சாஹேப் அவர்கள் எழுதிய விஷயங்களுக்கு சீக்கிரம் கணக்குத் தயார் செய்து அனுப்புகிறது.

உள்ளே வைத்த கடிதம் (*enclosure*) கமிஷனர் சாகேப் சர்க்கீல் வேலை பார்க்கிறவருக்கு எழுதிய கடிதத்தின் நகல்.

(1) நான் எந்த வேலைக்காக வந்திருக்கிறேனோ, அந்த வேலையை முடிப்பதற்கு வேண்டிய சில கணக்குகள் தங்களிடமிருந்து வரவேண்டியதாக செப்.29உக்கு ரெசிடெண்ட்

196. பகுதி 3 ஆவணம் 42 (18)இல் 1855 என்று குறிக்கப்பட்டுள்ளது.

197. பகுதி - 3, ஆவணம் 42 (44).

சாயேப்புக்குப் பிரார்த்தித்தேன். அவர் என்னிச்சையைத் தங்களுக்குத் தெரிவிப்பதுடன் சீக்கிரம் ஜாக்கிரதை செய்ய வேணுமென்றும், தங்களுக்குத் தெரிவித்திருக்கிறார்.

(2) 3 வாரமாகியும் அவைகளில் ஒரு ஜாப்தா கூட எனக்கு வந்து சேரவில்லை. அதுவுமல்லாமல் வேலை ஆரம்பித்த விஷயங்கூடத் தெரியவில்லை.

(3) என்னுடைய இந்த வேலையைப் பூர்த்தி செய்வதற்கு எனக்கு கவர்ன்மெண்டின் கண்டிப்பு உத்திரவு இன்றும் அதில் தாமதமொன்றுமாகக் கூடாது. எனக்கு வேண்டிய கணக்குகளைத் தங்களிடமிருந்து வருமென்று எதிர்பார்ப்பது, வீணாகையால் நானே கணக்கு தயார்செய்ய வேண்டிய ஜாக்கிரதை செய்ய வேண்டியிருக்கிறது.

(4) தஞ்சாவூர் இராஜ்ய விஷயத்திற்கு கவர்ன்மெண்டார் செய்த நிர்ணயம் இன்றும் இராஜ்யத்தை ஒப்புக்கொண்டு இராசா சாயேப்பின் குடும்பமும் உறவினர்களுக்கு ஜீவனஞ் செய்து கொடுக்கிற வேலையைச் செய்யும்படி சொன்ன விவஸ்த்தை நடப்பு மீ 15வுக்கு தங்களுக்கும் சாமான்யமாக சர்க்காருக்கும் சாகேப் அவர்களுக்கும் நான் தெரிவித்தேன். அப்பொழுது தகுந்த சமயத்தில் ஆஸ்தி காப்பாற்றப்படும். இன்னும் சமஸ்தானத்தின் ஆஸ்தி (சொத்து) எல்லாம் கவர்ண்மெண்ட்டுக்குச் சேரும் என்று தங்களுக்குச் சொன்னோம். அந்த சொத்துக்களைப் பந்தோபஸ்த்தாக ரக்ஷிப்பதற்கு எனக்கு கவர்ண்மெண்டார் உத்திரவிட்டிருக்கிறார்கள்.

(5) அவ்விதம் செய்வதற்கும் ஷெ ஆஸ்தி பூமிரூபமோ, நகையோ அல்லது வேறு தினுசாகவோ இருக்கலாம். அதன் விபரத்தைத் தெரிந்து கொள்ளுவதற்கு நான் இராஜா சாஹேப்பின் நாடு, நகரம், தோட்டம், சத்திரம் இன்னும் கோவில்களுக்கு விடப்பட்ட மான்யம் இன்னும் தஞ்சாவூர் ஜில்லாவிலிருக்கிற இரகசியமான சொத்துக்களும் இராஜ்யத்திற்குச் சொந்தமான தஸ்தாவேஜுகளையும், கவர்ண்மெண்டாருடைய பேரால் சுவாதீனம் செய்து கொள்ளுகிற எனக்கு உத்தேசமிருக்கிறது. ஆனாலும் அப்படி செய்தாலும், அந்த சொத்துக்களில் பாகங்களில் தர்ம சத்திரம் வகையறாக்களுக்கோ அல்லது பிறருக்கு ஏதாவது (பாத்தியம்) விவகார மிருந்தால் ரொம்ப ஜாக்கிரதையுடன் விசாரணை செய்து பாத்தியதை ருஜுவானால் அந்த சொத்தை சொந்தக்காரர்களிடம் கொடுக்கப்படுமென்று தங்களுக்கு நிச்சயமாகச் சொல்லுகிறேன். இன்றும் அந்த விஷயம் பிறருக்கும் நன்றாகச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

(6) கலெக்டரவர்கள் தற்காலம் நாடு, நகரங்கள், தோட்டம் எல்லாவற்றையும் வசப்படுத்திக் கொண்டு அந்தந்த நாடு நகரங்களின் உத்தியோகஸ்தர்கள் தங்கள் கணக்கைத் தங்கள் கணக்கப்பிள்ளைகளிடம் கொண்டு வந்து ஆஜர் செய்கிறதென்று, சொல்லும்படியாகவும், மிராசுதாரர்கள் கிஸ்தித் துகைகளைக் கவர்ண்மெண்ட் சிப்பந்திகளிடத்தில் செலுத்துகிறதென்று தெரிவிக்கும்படியும் நான் அவரை பிரார்த்திக்கிறேன். தாங்களும் அதே பிரகாரம் உத்திரவு அனுப்புமாறு பிரார்த்திக்கிறேன்.

(7) கோட்டையிலுள்ள எல்லோருக்கும் சொந்தமுள்ள சொத்தை நாளை விடியற்காலையில் வந்து சுவாதீனஞ் செய்து கொண்டு அதில் சிலவற்றை ஆங்கிலேயருக்கு ஸ்வாதீனஞ் செய்து கொடுக்க யோசனை செய்கிறேன். நீங்களும் கஜானா சங்கிராம பாண்டார் ஜாமதார்கானா

(துணிமணிகள் இருக்குமிடம்) நூல் நிலையம், தாரு கானா (வெடி மருந்துள்ள இடம்) வெள்ளி ஜெஹனாக்கள், காதிகள் (ஆசனங்கள்) பல்லக்குகள், பதக்கம், ரிகார்டுகளையும் மத்தியஸ்தருடன் விடியற்காலையில் 5-30 மணிக்கு கோட்டையின் கீழ் வாயலில் வந்து என்னுடைய பேட்டி வாங்க வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

(8) ஒவ்வொரு சிப்பந்தியும், தன் தன் வசமுள்ளதை. எல்லாவற்றையும் வேண்டும் போது மரியாதையுடன் கொடுத்துவிட வேண்டும். அவர்களுக்கு நீங்கள் உத்திரவு செய்ய வேண்டும். அவர்களில் யாராவது வராமலிருந்தாளென்று தெரியவந்தால் அவருக்கு கவர்ண்மெண்ட்டாருடைய கோபம் நேரிடும்.

(9) தங்களுக்கு இம்மாதிரியான புகார் சொல்ல வேண்டிய அவசியமில்லையென்று உறுதியாக யிருக்கிறேன். இன்றும் கவர்ண்மெண்டுக்கு விசுவாசமாக யிருப்பதைத்தவிர வேறு வழியில்லை. நீங்கள் இராஜா சாகேப் அவர்களுடைய சம்சாரங்களுக்கு ஹிதம் நீங்கள் செய்ய முடியாது என்பது தங்களுக்குத் தெரியும் என்று நான் அறிகிறேன்.

(10) பொது சொத்துக்களை சுவாதீனஞ் செய்து கொள்ளுவதற்கு செய்யும் நடவடிக்கையினால் இராஜா சாயேப் சம்சாரங்களுக்கு ஒரு வீண் பயம் அல்லது அஸமாதானம் உண்டாகாதபடி தடுப்பதற்கு நீங்கள் ரொம்ப ஜாக்கிரதை செய்ய வேணுமாகப் பிரார்த்திக்கிறேன்.

அவரிடத்தில் ஒரு அவநம்பிக்கையினால் ஆங்கிலேய சிப்பாய்கள் வரவில்லை யென்றும், அந்தச் சிப்பாய்கள் அரண்மனையி லுள்ளவர்களுக்கு ஏதாவது பாதகம்(கெடுதல்) செய்யாமலிருக்கும்படி உத்திரவு செய்யப்படுமென்றும், கவர்ண்மெண்டின் அதிகாரத்திற்குள் ஒவ்வொரு இடத்திலும் நடக்கிற வழக்கப்படி பெரிய மனிதர்களுடைய சொத்துகளுக்கு ஷெ சிப்பாய் ஒரு காவல் மாத்திரம் என்று நியமிக்கப்படு மென்றும், நீங்கள் நான் சொன்னதாக அவர்களுக்குத் தெரிவிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

1856 ஞு
அக்டோபர் 17 உ
தஞ்சாவூர் ரெசிடெண்ட்

H. Pharbasa
Commissioner

## ஆவண எண் 175

1856 அக்டோபர் 18உ [198] சர்க்காரின் தஸ்தாவேஜுகளின் ஜாபிதா தயார் செய்வதற்கு ஒரு குமாஸ்தாவை அனுப்பியிருக்கிறது. அவருடன் ஒரு சர்க்கார் குமாஸ்தாவையும் நியமித்து சகாயஞ் செய்ய வேண்டுமென்றும், ரிகார்டு ஆபீசின் கதவுகளுக்குத் தினம் கச்சேரியில் வேலை பார்த்து, வீட்டுக்குப் போகும் போது, தன்னுடைய டலாயித்து விடுதலை கொடுக்க வேண்டுமென்றும், தஞ்சாவூர் கமிஷனர் எச்.பார்பஸா எஸ்கொயர் நமக்குக் கடிதம் எழுதி

198. முட்டைஎண் 912C ஆவணம் 42 (46)-பகுதி-3

யிருக்கிறார். இதனுடைய சரியான நகலைத் தாங்கள் பார்ப்பதற்கு இதனுடன் அனுப்பியிருக்கிறேன்.

(*sd*) ஸர்கேல்
உள்ளுள்ள கடிதம் (*Enclosure*)

தஞ்சாவூர் கமிஷனர் எச்.பார்பர்ஸா எஸ்கொயர் ஸர்கேலவர்களுக்கு எழுதிய கடிதத்தின் நகல். தர்பாருடைய ரிகார்டுகளும், தர்பாருடைய பொது சொத்துக்களும், தற்காலம் சுவாதீனம் செய்து கொள்ளுகிறதென்று என்னுடைய உத்தேசம் என்னுடைய நேற்றைய கடிதத்தில் தங்களுக்குத் தெரிவித்திருக்கிறேனே! தாஸ்தான் (நெற்களஞ்சியம்) ஜாமதர்கானா (துணிமணிகள் இருக்குமிடம்) லங்கிராம பாண்டார் வெள்ளி ஹெளதாக்களும் தேருமிருக்கிற இடங்களுக்கு இன்று காலையில் நான் முத்திரை போட்டேன். ஆனால் தஸ்தாவேஜு கச்சேரிக்கு முத்திரைப் போடாமல் விட்டிருக்கிறேனென்பது தங்களுக்குத் தெரியும்.

நாடு நகரங்களின் ஸ்திதியும் அது இன்னாருடையது என்று சொல்லுகிற விஷயத்திலுள்ள பாத்தியதையை நான் முழுமையும் தெரிந்து கொள்ளும் வரையில் பொது ரிகார்டு என்னுடைய வசத்திலிருப்பது அவசியமாயிருக்கிறது. ஆகையால் இக் கடிதத்தை அனுப்பியிருக்கிறேன். இந்தக் குமாஸ்தாவுடன் தங்களுடைய ஒரு குமாஸ்தாவையும் நியமித்து ஷி தஸ்தாவேஜுகளின் ஜாபிதா ஒன்றைத் தயார் செய்யச் சகாயம் செய்யும்படி அவருக்கு உத்திரவு கொடுக்க வேண்டுமென்று வேண்டுகிறேன்.

இக்கடிதம் கொண்டு வரும் டலாயிதன் (சிப்பாய்) தினந்தோறும் ருஸ்தாக்கள் கச்சேரி முடித்துக்கொண்டு வீட்டுக்குப் போகும்பொழுது, ரிகார்டு கதவுகளுக்கு அவன்என்னுடைய முத்திரையைப் போட, அவனுக்கு விடுதலை (இடம்) கொடுக்க வேணும், நடக்கிற வேலைகளுக்கு வேண்டியதாயிருக்கும் கணக்கை என்னைக் கேட்டால் கொடுக்கப்படும்.

*Sd. H.Pharbasa*
*Commissioner.*

## ஆவண எண் : 176

ஸ்ரீராம் ஸமர்த்த[199]

ரா.ஸ்ரீ.சரபோஜி மகாராஜா சாகேப் அவர்களுக்கு ஸேவகன் பாபாஜி பவார் ஸாஷ்டாங்க தண்டவத். ஏகராஜ மகாராஜா முதற்கொண்டு துளஜா மகாராஜா வரையிலும் நம்முடைய வழக்கம் மானம் மரியாதையுடன் நடந்து வந்தது. இப்பொழுது வழக்கத்துக்கும் மான மரியாதைக்கும் பழுது வந்து விட்டது. இங்கே நம்முடைய கால க்ஷேபமும் செய்ய முடியவில்லை.

199. பகுதி - 3 மூட்டை எண் 912C ஆவணம் 18 (2)

ராஜஸ்ரீ ஏகராஜ மகாராஜா முதல் துளஜா மகாராஜாவிடத்தில் நீங்கள் தான் இருக்கிறீர்கள். நமக்குப் பூர்வகாலத்தில் ராஜஸ்ரீ சிவாஜி மகாராஜா ஸாதாராவிலிருந்து திருமலவாடிக்கு வந்திருந்தபோது, பேட்டி ஆனது. பேட்டி ஆன பின்பு அவர்களுக்குள் பிருதம் தகராறு ஏற்பட்டது. அப்பொழுது அவர்கள் தட்புவதற்கு முடியவில்லை. அப்பொழுது பாபாஜி என்பவர் தன்னுடைய தேகத்தில் சக்தியில்லாம லிருந்தாலும், ரா.ஸ்ரீ.மகாராஜாவைத் தன் முதுகில் தூக்கிக் கொண்டு இரவில் 12 மணிக்கு கொள்ளிடம் நதியைக் கடந்து சமஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தார். இப்பொழுது ராஜஸ்ரீ மகாராஜா அவர்கள் செய்யும் ஆக்ஞைப்படி நடக்கிறேன் வேண்டுகிறேன். சேவகனுக்கு தாமதமன்னியில் காப்பாற்ற வேண்டும்.

## ஆவண எண்: 177

*1850 ஜூன் 24உ*

ஸ்ரீமந்த் சத்ரபதி சாயேப் அவர்களுக்கு சாமியாப்பிள்ளை[200].

தஞ்சாவூர் கிடங்கில் காய்ச்சும் சாராயம், யானை, குதிரை, வகையறாவுக்கு சர்க்காரில் சிலவு ஆனது போக வித்து முதலானது துகையை மேஸ்தர் ராமனுடைய மாடியில் வைத்திருக்கும் தர்ம பள்ளிக்கூடத்திற்குக் கொடுப்பது வழக்கம்.

பாரீஸ் சாகேப் காலத்தில் கும்பனியில் எடுத்துக் கொண்டு மேற்சொன்ன குத்தகைத் துகையை ஜாஸ்தி பாக்கி வைத்துக் கொண்டார்.

அதுவும் நிற்க வில்லியம் சாகேப் நாளில் அமானத் ஷெ சாராயம் கிடங்கினுடைய மணியம் ஏற்படுத்தி சர்க்காருடைய துகையை ரொம்ப வைத்துக் கொண்டு தேசாந்திரத்திற்கு ஓடிப்போய் விட்டார். 6500க்கு இருக்கிற குத்தகையை 10,000 சக்கரத்திற்கு ஒப்புக்கொண்டு பிராது செய்த விஷயம்.

## ஆவண எண்: 178

ரா.ஸ்ரீ.தத்தாஜி அப்பா சாயேப் அவர்களுக்கு சேவகன் பாபண்ணா[201] அனேக ஆசீர்வாதம்.

இங்கு சமஸ்தானத்தின் விஷயம். மார்க்கசிரிஷம் வத்யம் பஞ்சமி வரையில் ரா.ஸ்ரீ.சிவராயர் மாஜி சர்கேல் பாபாவுக்கு தன்னுடைய கார்பாரி என்று உத்திரவிட்டு மாதத்திற்கு 200 வராகன் சம்பளம் போட்டு, அவருடைய பிள்ளைக்கு ரிகார்டு ஆபீஸில் நியமித்து, 1 மாதமாயிற்று. மகாராஜாவானவர் அவருக்குக் கொடுக்ககூடாதென்றார். அதற்கு அவருடைய சகோதரரிருவர் ஸமஸ்தான முழுமையும் கெடுத்து, கடன்காரர்கள் தொல்லை ரயத்துக்களுக்குக் கூட பயமில்லாமல் ஆங்கிலேயருக்கும் பணம் சரியாகச் சேருவதில்லை.

---

200. பகுதி - 3 முட்டை எண் 912C ஆவணம் 18 (10)

201. பகுதி - 3 முட்டை எண் 912C ஆவணம் 18 (32)

இதைத்தவிர தான் தன்னுடைய கார்பாரைக் கெடுத்து, இராஜ்ய முழுவதையும் கொள்ளையடித்திருந்ததும் ஜீரணமாகும். ஆங்கிலேயருக்கும் அவர் செய்ததினால் இராஜ்யம் நன்றாகுமென்று அவருக்கு முன் செட தார்கள். அவர் ரொம்ப தகராறு செய்ததினால் நாம் எந்தெந்த வழியாக சர்க்காருக்கு வரும்படி வருமோ அதற்கு நீங்கள் குறுக்கிடக் கூடாது என்று தகராறு நடந்து பிறகு அவர் ரா.ஸ்ரீ.பாதுரி சாயேப்பை வரவழைத்து அதிகாரம் ஒப்புக் கொண்டார். அதிகாரம் செய்யும் பொழுது அவர் விசாரணை செய்ததில் தாங்கள் சொன்னபடி கேட்டு நடந்தார்.

பிறகு அவருடைய 4 சகோதரர்களும் சேர்ந்து வீட்டில் கலகம் செய்து நாமெல்லோரும் விஷத்தைச் சாப்பிடுகிறோம். அதை விசாரித்ததில் ஒருமாத முதற்கொண்டு வெளியே வரும். இதற்காக துகை வேண்டியதில்லை. பங்குகள் போட வேண்டுமென்று அவர் மேல் பாரம் *(Responsibility)* விழுந்து, 9 வருஷமாயின. வரும்படி என்று வரவு இல்லை. இதற்காக அதை நிறுத்தும்படி சொன்னார்.

அவர் சர்க்காருக்குச் சேர வேண்டிய 30 லக்ஷம் சக்ரம் வரையில் போய் விட்டது. அதிகாரம் இன்னாருக்குக் கொடுத்தால் அவரும் கெடுத்து விட்டாரென்று நமக்கும் வார்த்தை வரும். தங்கள் சகோதர பந்துக்கள் கொடுக்க வேண்டியதை மகாராஜாவிடம் தள்ளிக் கொடுக்க மன்னிப்புக் கேட்டு உத்திரவு வந்தால் முன்னால் சௌகரிய முண்டாகும். பின்பு சர்க்காருக்குத் துகை சேரும்படியாக செய்ததினால் தங்களுக்கு தற்போது சௌகரியமென்று அனேக விதமாகச் சொன்னார். ஆனாலும் அவருடைய தம்பியின் உபத்திரவத்தினால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் பதகறிசியா என்னும் அதிகாரத்தைச் சின்னாமுதலியாருக்கு நிச்சயமாகக் கொடுத்து, அவர்களால் ஒன்றுஞ் செய்ய முடியாமற் செய்து வந்தார்.

அவரும் நம்மை அதிகநாட்கள் வீட்டிலிருந்திர்கள். நம்முடைய என்ன பயம் இராஜாங்கத்தின் விஜாரணை செய்யும் பொழுது, சர்க்காருடன் சேர்ந்து பாபா வருவது என்று பேசுவது அதற்கு அவர் குறுக்கிடுவார். சர்க்கார் ரிகார்டிலுள்ள ஒருவர் போய்விட்டார்; போய் விட்டார் என்று எழுதிப் பிரசுரம் செய்வது இப்படிக் கார்பார் செய்து வந்தார். வந்தத் துகையை கஜானாவில் வரவு வைக்கிறது என்று வழக்கம் செய்தார். சிலகாலம் அப்படியே நடந்தது. இதனால் இராஜாவுக்கு ரொம்பசந்தோஷம் உண்டாயிற்று. இராஜாவுக்கு சொந்த சிலவுக்கு ஒரு நாளைக்கு 100 சக்ரமும் ஹுஜூர் மகாலில் ஒரு நாளைக்கு 500 சக்ரம் வீதம் கொடுப்பதென்றுஞ்செய்து, கடன் 7 லக்ஷம் வராகன் வரையிலிருக்கிறது. அவர் கொடுக்கல் வாங்கல் கணக்கு பார்த்து கடன் கொடுக்கிறேனென்று கணக்கு பார்த்ததில் வரவு சிலவுகளின் கணக்கே கிடையாது. இன்று வரையில் 7 வருஷமாயிற்று. கணக்கு எழுதுகிற ரா.ஸ்ரீ.பாபண்ணாவோ பரலோகமடைந்தார். கடன் எவ்வளவென்று நிர்ணயஞ்செய்வது விசாரித்தில் வரவு சிலவு கணக்கு ராயர் வீட்டில் தயாராகிறது. இங்குள்ள சமாசாரம் இம்மாதிரி யிருக்கிறது.

சின்னாமுதலி இராஜ்யம் முழுவதும் அடமானம் கொடுக்க வேணுமென்று, இவருடைய சகோதரர்கள் எல்லோரும் சச்சரவு செய்வதற்கு இரவுபகல் உபத்திரவஞ் செய்து ராயர் ஒப்புக்கொண்டார். பிறகு சென்னப்பட்டணத்திலிருந்து கடன்காரர்கள் தொந்திரவு

இங்குள்ள கடன் தொந்திரவு என்று சிவராயர் தோட்டத்தில் வசிப்பதாலும் உபத்திரவமாகு மென்று ஸ்ரீராமசுவாமி மகாலில் சென்று வசித்தார்.

இச்சமாசாரமெல்லாம் மக்லோட் துரைக்கு தெரிந்து அவர் நேற்று திங்கட்கிழமை இரவு தர்பாருக்கு வந்து பகலில் மக்லோட்டின் ரா.ஸ்ரீ.பாதரி கர்னால் வகையறா எல்லோரும் சேர்ந்து என்ன செய்தார்களோ தெரியவில்லை.

இந்த 4 சகோரர்களையும் பிடித்து சென்னைக்கு அனுப்பும்படியாகவும் பாபா அவர்களையே எல்லா விஷயங்களையும் நடத்துவதென்றும் சென்னப்பட்டணத்திலிருந்து எழுதி வந்ததாம்.

பிறகு இரவில் மக்லோட்டுடன் ஒரு கும்பனி சால்ஜாப் ஆபிசரையும் இரவு 8 மணிக்கு கீழ்வாயிலில் ஹாஜாரியில் வைத்துத்தான் சீக்கிரமாக இராஜாவின் பேட்டி வாங்கி ரொம்ப புத்திமதியைச் சொல்லி, சிவராயருக்காக இராஜ்யத்தை இழக்கிறீர்கள்; அடமானங் கொடுக்க வேண்டியதில்லை யென்று கும்பனியார் நிச்சயித்திருப்பதால் இப்படி செய்வது யுக்தமாவென்று கேட்டதற்கு நாம் அடமானம் கொடுக்கவில்லை. சுயதேசத்தை யெல்லாம் வைக்கப்பட்டது. நம்முடைய சமஸ்தானத்தில் முன்னோர்கள் செய்ததுதான். ஆனால் அடமானங் கொடுக்கவே யில்லை யென்று சாதித்தார். ராயரை ஒப்புவிக்க மாட்டோம். நீங்கள் என்ன செய்ய முடியும் என்றும் அடமானம் கொடுக்கவில்லை யென்றும் எழுதினார். கொடுப்பீர்களோ என்று கேட்டதற்கு அந்தப்படிக்கி எழுதினதையும் கொடுக்கிறேனென்றார். ஒரு நிச்சயம் . ராயரை ஒப்புவிக்கிறதில்லை அதனால் என்ன ஆனாலும் ஆகட்டுமென்று உறுதியாக நிச்சயம் செய்தார்கள்.

நாளைக்கு எல்லாம் பேசிக்கொள்ளலாமென்று, மக்லோட் சோல்ஜரையும் அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போனார்.அங்கேயும் சின்னா முதலியிட மிருந்தும் எழுதி வாங்கி யிருக்கிறாராம். அடமானம் வாங்கவில்லை. அவருடைய பணம் எனக்கு வேண்டியதில்லை என்று எழுதி வாங்கினாராம். அதற்கு பாரா தாக்கல் செய்திருக்கிறாரென்றும் ஒரு வதந்தி (ஜனங்கள் பிரஸ்தாபம்) இருக்கிறது. அவர் தம்முடைய வீட்டுக்காரர்கள் வஜாரத்மாப இவர்களுடைய வீட்டுக்காரர்கள் துருப்பு எல்லோருக்கும் உத்திரவு செய்து, அரண்மனையில் பங்கு பங்குக்கும் தோட்டத்தின் வழிக்கும் கூட ரொம்ப ஜாக்கிரதையாக..... உட்கார வைத்திருக்கிறார். ஸந்தப்பா முதலியவர்கள் எல்லோரும் தர்பாரிலிருக்கிறார்கள். தர்பாரெல்லாம் இன்றும் ஆகப் போகிறதென்று பயந்திருக்கிறார்கள். ராயருக்கு ஒருவிதமான அபாயமும் வரக்கூடாது என்று இராஜா நிச்சயம் செய்திருக்கிறார். அறியவும்.

இப்போது இங்கு இராஜாவின் விசாரம் இப்படியாகி யிருக்கிறது. தம்மிடம் சமஸ்தானத்தை ஒப்புவித்தால் கும்பனியின் துகையைக் கும்பனிக்குச் சுலபமாகச் செலுத்துகிறோம். இராஜ்யத்தின் விசாரணை ஒழுங்காக நடத்துகிறோமென்று ஒரு வார்த்தையைச் சேர்த்து பின்பு எந்தநேரத்தில் நீங்கள் நமக்கு ஆதினம் கொடுப்பீர்களோ, அந்த காலத்தில் கொடுக்கலாம். தற்காலம் இப்படி பேசி ஏதாவது நடந்திருந்தால் அதைச் செய்வோம். இங்கு சமயம் ரொம்ப அனுகூலமா யிருக்கிறது. அவருக்கும் தங்கள் பேரில் பிரியமிருக்கிறதால்

காரியம் கைகூடும் படி வரும்படியாக யிருந்தால் முயற்சி செய்தால் கைகூடுமென்று எண்ணி எழுதியிருக்கிறேன்.

நீங்கள் எல்லாம் அறிந்தவர். தங்களுக்குத் தெரியாத தொன்றுமில்லை. நாங்கள் தங்களை நம்பியிருக்கிறோம். ஆகையால் இவ்வளவு எழுதுவது அவசியம். நாங்களோ தங்களுடையவர்களென்று எல்லோருக்கும் தெரியவும் நம்முடைய காலக்ஷேபம் ரொம்ப சிரமமாயிருக்கிறது. தினப்படி காரியம் நடப்பது ரொம்ப கஷ்டம்.3 ஸ்ரீ மாயின. ஈஸ்வரன் தங்கள் பேரில் தயவு செய்ய வேணும். இச்சமயத்திலும் நம்மைக் காப்பாற்றுவது விசேஷமல்ல; ஆனால் நம்முடைய நேரம் இப்படியிருக்கிறது. ஸ்ரீதத்தாத்ரேய சுவாமிக்கு தயவு இன்னும் வரவில்லை. இதனால் பரதேசத்துக்குச் செல்லும்படி யாகுமோ என்று தெரியவில்லை.

நாம் ரா.ஸ்ரீ.பாபாவின் பேட்டிக்குப் போயிருந்தோம். அவரும்தான் தங்களுடையவர் என்று சொன்னார். இந்த நேரத்தைத் தாங்கள் உபேட்சித்தால் நாம் குடும்பத்துடன் மேற்கே போவதற்கு யோசித்திருக்கிறோம். தங்களை நாம் ரா.ஸ்ரீ.பாபாவினிடத்தி லிருக்கிறீர்களென்று எண்ணியிருக்கிறோமாகையால் இங்கு நடப்பதையும் தாபத்திரயத்தையும் எழுதி யிருக்கிறோம்.

இங்கு வதந்தி கவர்னர் தங்களை அழைத்துக் கொண்டு வரப்போகிறார். மாதத்திற்கு 5000 வராகன் கொடுப்பதாகத் தீர்ந்திருக்கிறது. இவ்விடம் ஸ்தாபனஞ் செய்கிறோமென்று ஆபாலவிருத்தர்கள் ஒரே மாதிரியாகப் பேசுகிறார்கள். நாம் செய்த பூஜாபலம் எப்படியிருக்கிறதோ தெரியவில்லை. தாங்கள் எங்களைக் காப்பாற்றுவீர்களென்று இருக்கிறோம். அறிஞருக்கு என்ன எழுதுவது.

## ஆவண எண் 179

[202] திருப்பனந்தாள் ஊரிலுள்ள சொக்கலிங்கத் தம்பிரான் காசியிலிருக்கிற தன்னுடைய மடத்திலுள்ள தம்பிரான் தனக்கு கீழ்படிந்து நடப்பது பழையவழக்கம். ஸ்ரீ காசி யாத்திரைக்கு ஹுஜூருடைய சவாரி சென்றபோது கூட இங்கிருந்து போயிருந்த செட்டப்ப தம் பிரானானவர் காசியிலுள்ள மடத்திற்கு இப்பொழுது இருக்கிற அயஹரப்ப தம்பிரானை நியமித்தார்.

நமக்கு முன்னிருந்தவர்களுக்கு எப்படி நடத்தி வந்தீர்களோ அப்படி நடத்த வேணுமென்று பிரார்த்திக்கிறோம்.

---

202. பகுதி - 3 மூட்டை எண் 912C ஆவணம் 37 (12,13,14)

## ஆவண எண் 180

1795 ஷு டிசம்பர் மீ 25உ மக்லோட் ரெசிடெண்ட் தஞ்சாவூர் அவர்களுக்கு ராஜஸ்ரீ மகாராஜ் அமரஸிங்ஜீ ராஜாவின் சலாம்.

நேற்று நீங்கள் நம்முடைய பேட்டிக்கு வந்திருந்த போது காரைக்காலின் 4 மாகாணத்தில் 7000 வராகன் பாக்கி யிருக்கிறது. அதற்கு கும்பனிக்கு ஜாமீன் கொடுத்தால் காரைக்காலின் 4 மாகாணங்களையும் நம்முடைய சுவாதினஞ் செய்வதாக முதலில் நீங்கள் சொல்லியிருந்திர்களே. அதற்காக நாம் கும்பனியின் பாக்கி 4 மாகாணங்களில் என்ன இருக்கிறதென்று விசாரித்ததில் ஷெ மாகாணங்களில் 2000 வராகன் கும்பனியில் பாக்கியிருப்பதாக நமக்குத் தெரிந்தாவந்த விபரம் தங்களுக்கு நன்றாகத் தெரியவேண்டியதற்காக வெவ்வேறு ஷெ 4 மாகாணம் பாபத்தில் தனி கணக்குகளின் ஜாபிதாவை அனுப்பியிருக்கிறோம். அதை நீங்கள் மனதுக்கு வாங்கி கும்பனிக்கு 4 மாகாணம் பாபத்து பாக்கி யிருப்பது தங்களுக்குத் தெரியவரும். விசேஷமொன்றுமில்லை.

ஸ்ரீராம் பிரதாப்

## ஆவண எண் 98*

(No. 313)

பெட்டிஷனர்[203] நாளது மீ 13 உ யுள்ள ஜில்லா கெஜட்டின் 444வது பக்கத்தைப் பார்த்துக் கொள்ள வேண்டியது.

வல்லம் *Government Agent - 16-10-60*

வஜாத்துமாப்பு[204] கண்டேறாவு சாமறாவு காடிகே சர்ஜேறாய் 59ம் ஷு[205] டிசம்பர் மோகினி பணம்[206] கிடைக்க வேணும்.

தஞ்சாவூர் கவர்ண்மென்ட் ஏஜண்டு டபிள்யூ, யெப் கேடல் இசுக்கொயரவர்கள் சமுகத்துக்கு வஜறாத்துபாபு கண்டேறாவ சாமறாவு காட்டிகே சர்ஜேறாயி அவர்கள் மிகுந்த வணக்கத்துடனே சலாஞ் செய்து எழுதிக்கொண்ட வாக்குமூலம் என்னவென்றால், நமக்கு அரண்மனை தவுலத்து வடிகர் பதக்கத்திலிருந்து 1859ம் ஷு டிசம்பர் மீ தத்து சம்பளம்

* சரசுவதி மகால் மோடிப் பலகணி-IIயின் மூல ஆவணம் 98ஆம் எண்ணில் தொடங்குகிறது. இதற்கு முன்னுள்ள 149 முதல் 180 வரையிலான ஆவணங்களின் மூலப்படி கிடைக்கவில்லை. எனவே, முன்வரிசை எண் மோடி வல்லுநரால் கொடுக்கப்பட்டது.

203. பெட்டிஷனர் - மனுச்செய்து கொண்டவர்

204. வஜரத்து மாப்பு-வசிராத்துமாப- அரசுகுடும்பத்தைச் சேர்ந்த பெருமகன்

205. 1859 ஆம் வருஷம்

206. மோகினி பணம்-உதவித்தொகை

மோகினி செல்ல வேண்டியது பாக்கி இருக்கிறது. அதைக் கணக்குப்படி நம்முடைய அதிகார பத்தரம் பெற்ற காரியஸ்தர் சுப்பாஜி சம்பாஜி யிடத்தில் ரசீது வாங்கிக் கொண்டு பணம் கொடுக்கும்படி. உத்திரவாக கேட்டுக் கொள்ளுகிறோம்.

1860ம் ௵ செப்டம்பர் ௴ 28 ௳

## ஆவணஎண் : 99

ஸ்ரீ மகாராஜா சாயேபு[207] அவர்கள் திவானத்துக்கு[208] கோட்டைக்குள் சக்கானாயக்கன் தெரு[209] விலிருக்கும் சரபேந்திர றாச பட்டணம் தாசி வரலெக்ஷ்மி மகள் ரமாமணி என்கிற னான் தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி என்ன வென்றால் ஷெ என் தாயார் வீரலெக்ஷ்மி முதலான என்னையும், னாங்களுள்பட எங்கள் வகையறா அஞ்சுபேர்களையும் ஸ்ரீ கயிலாசவாச[210] சரபோசி மகாராஜா சத்திரபதி சாயேபு அவர்கள் நாளையில் கிரயப்படுத்தி சரபேந்திர றாச பட்டணத்தில் [211]இருக்கிற சிதம்பரயீஸ்வர சுவாமிக்கு எங்களைப் பொட்டுக்கட்டி வைத்து ஷெ கோவிலில் எங்களுக்குப் பட்டச்சாத வருமானம் (வறிமான) முதலான யாதொரு வருமானம் கிடையாததினால் எங்கள் வயத்துக்கு மட்டும்நடந்து வரும்படிக்கி பேரொன்றுக்கு மாசம்-க-க்கு அஞ்சுபணமும் ரெண்டு கல நெல்லும் சம்பளம் செய்து கொடுத்தும் அப்போது என் தாயார் நீங்கலாக மற்ற னாலுபேர்களும் சின்னஜ் சிறிதாய் யிருந்ததினால் ஷெ சம்பளக் கணக்கில் வீரலெக்ஷ்மி வகையறா அசாமி-ஐந்தென்று கண்டு எழுதி யிருந்ததே தவிர மற்ற நான்கு ஆசாமி பேர்களுடைய பேரைக் கண்டெழுதி யிருந்ததில்லை. அந்தக் கணக்கு சரபேந்திரராச பட்டணத்து கச்சேரியில் யிருந்தது.

உ-வது கயிலாசவாச சிவாஜி மகாராஜா சத்திரபதி சாயேபு தகத்துக்கு [212]வந்த பிறகு ஷெ சரபேந்திர றாசபட்டணத்துக்கு கனகசபை பிள்ளைப் பேருக்கு மத்தியஸ்த்தமாகி அவ்விடத்து கணக்கை சிவங்கிக் கோட்டை வைய்யாபுரி மேஸ்திரி கச்சேரியில் ஒப்புவித்து அவ்விடத்திலும் வீறா வகையறா அசாமி ஐந்தென்று கண்டெழுதியும், அவாளிடம் சிறிதுனாள் சம்பளம் வாங்கி வந்தும், மறுபடி உத்தேசம் பதினேழு வருஷத்திற்கு முன் ஷெ ஐந்து அசாமிக்காரருடைய பேர்கண்டு சங்கீத பதக்கத்தில் எழுதிவைத்து, அவ்விடத்தில் நேமணக்கு[213] செய்து, அவ்விடத்திலும் சிறிது னாள் சம்பளம் வாங்கி வந்தும் மறுபடி

207. மகாராஜா என்றது சிவாஜிக்கு அடுத்து வந்த ராஜாராம் என்பவரை. ரமாமணி என்பவளுடைய இந்த 'யாதி' யின் தேதி 1856 ஆகையால் இங்ஙனம் கொள்ளப்பட்டது.

208. திவானத்துக்கு - முன்னிலைக்கு

209. சகானாயக்கன் தெரு-தஞ்சையில்,இன்றும் உள்ளது.

210. கைலாசவாசி-இறந்துபோனவர்

211. சரபேந்திரராஜபட்டணம்-சாளுவநாயக்கன் பட்டணம் (செ.இராசு, தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள், கல்வெட்டு எண் 90, (பக்கம் 148)

212 தகத்து - சிங்காதனம்

213 நேமணக்கு-நியமனம்

உத்தேசம் பத்து, பதினேழு வருஷத்துக்கு முன் ஷை ஐந்து அசாமிக்காரருடையபேர்கண்டு நிம்மத்து[214] கச்சேரியில் பதியவைத்து, அவ்விடத்திலும் சிறிதுனாள் சம்பளம் வாங்கி வந்தும் அப்பால் தவுலத்து பாவுலோக்குல்[215] பதிய வைத்து, அவ்விடத்திலும் நாங்கள் சம்பளம் பத்தி வருகையில் ஸ்ரீ சிவாஜீ மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்கள் கயிலாச பதவி அடைந்து போன பிறகு அரண்மனையாரவர்கள் எங்கள் சம்பளத்தை தள்ளிப்போட்டார்கள்.

௩-வது மேல் சொல்லிய மாலோமாவில்[216] நாங்கள் சம்பளம் வாங்கி வருகையில் ஸ்ரீ சிவாஜீ மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்கள் நாளையில் சிறிதுனாள் சனங்களுக்கு சம்பளத்தில் கால் மாசம், அரைமாசம் கொடுத்து வந்த போது ஷை வீரலெக்ஷ்மி வகையறா அசாமி ஐந்தென்று கண்டிருந்த போது அந்த அசாமி ஐந்திற்க்கும் கயறாதா[217] பாக்கி ரூ சுய அ ரு ரு -ம் ஷை ஐந்து அசாமி பேர்களுக்கும் கிடைக்க வேண்டியதை அரண்மனையாரவர்கள் விசுவாவிசு[218] ஹு த்தில் சனத்துக்களுக்கு நிலுவை கொடுக்கும் போது, எங்கள் ஐந்து அசாமிகாரருக்கும் கொடுக்க ஷை அரண்மனையாரவர்கள் எத்தனைப்பட்ட முன்னுக்கு ஷை அசாமிக்காரரில் ஒருத்தியான அகிலாண்டமென்பவள் ஷை நிலுவை முழுதலும் தனக்குக் கிடைக்க வேணுமென்று ஷை துகையைக் குறித்து ஷை ஹு த்தில் முத்திரித சபையில்[219] பிராது செய்தாள்.

௪-வது அதைப்பற்றி அசல் அப்பீல் யிஸ்பாசால்[220] வரையில் வியாஷ்சியமாடி[221] ரூ அ ள சுய சுா (1846) ஹு[222] சூலை மீ உ ய க வயில் ஷை கயறாதா பாக்கி ஐந்து பேர்களும் விதாயப்படிப்[223] பெற்றுக்கொள்ள வேணுமே தவிர முழுவதும் ஷை அகிலாண்டத்துக்கு கிடைக்க வேண்டியதில்லை என்று தீர்ப்பு செய்து, இப்போது ஷை தீர்ப்பின்படி ஷை நிலுவை பணத்தைக் கொடுக்கும்படி தபுத்திர தாருக்கு எழுதினதற்கு எங்கள் பேரில் இன்ன மாவில் கணக்கு இருக்கிறதென்று தெரியவில்லை யென்றும், பார்த்துச் சொல்ல வேணுமென்று

214. நிம்மத்து-நியமனம் (?)

215. தவுலத்பாவுலோக-அரசாங்கவூழியம்

216. மாலோமால் - ஒவ்வொரு மகாலிலும்

217. கயறாதா - சம்பளம்

218. விசுவாவசு-ஆண்டறுபதனுள் முப்பத்தொன்பதாவது

219. முத்திரித சபை-தஞ்சையில் சரபோஜிகாலத்தில் நிருவிய நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று. முத்திரித சபையில் சிறியவழக்குகள் விசாரிக்கப்படும் என்றும் பெரும் பாலான வழக்குகள் முதன்முதலில் முத்திரித சபையில் தான் விசாரிக்கப்பெறும் என்றும் தெரிகின்றன (பக். 168, 169)

220. யிஸ்பாசால் - இசுபசால் - அசல் வழக்குகளின் இறுதி மேன்முறை யீட்டுக்குரிய நீதிமன்றம் என்று தோன்றுகிறது. "கார்பார் பிரசங்கத்தார் வழக்குக்குரிய ஆவணங்களை வருவித்து ஆய்ந்து "இசுபசால்" என்ற அவையில் மேல்முறையீட்டுக்கு (appeal) அனுப்பச்செய்வர் (பக்.168).

221. வியஷ்சியமாடி - வழக்கை நடத்தி (வியழ்சியம் - வியாச்சியம்)

222. 1846 ஆம் வருஷம்

223. விதாயப்படி - விகிதப்படி

காலாறண்[224] படுத்தி வருவதால் எங்கள் சம்பளம் சாரி[225] எடுபட்டு வயற்றுக்கு யில்லாமல் கஷ்டப்படுகிறோம்.

ஆகையால் ஏழையாகிய என் பேரில் த..வுசெய்து, விசுவாவிசு ஷுத்தில் மலோமாலிலிருந்த சம்பளபாக்கி பணத்துக்கு விபரத்தை.த் தபுத்திரத்தார் வரவழைத்து, நிலுவைக் கொடுத்திருக்கும்படிக்கு, மேல் சொல்லியபடி எங்களுக்கு சம்பள பத்து (பற்று) வாகியிருக்கிற மாலோமால் கணக்கைப் பார்த்து, வீரலெக்ஷ்மி வகையறா அசாமி ஐந்திற்கு இவ்வளவு பாக்கி யிருக்கிற தென்கிற கணக்கைப் பார்த்து, அத்தொகையைத் திர்ப்பின் விபரப்படி கொடுக்கும்படி ஸ்ரீ காற்பாற் பிரசங்கத்தா[226] ரவர்களுக்கு தபுத்தர கணக்கைக் காட்டி ஷை கணக்குப்படி கொடுக்கும்படி உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

யிந்த யாதி எழுதிக் கொடுத்தது கோட்டைக்குள் ஜவுளி செட்டித்தெரு அடைக்கலம் பிள்ளை மகன் முத்தியப்பிள்ளை, எழுத்துக்கூலி வாங்கவில்லை.

சூ அ ள ரு யி சூ ஷு[227]
டிசம்பர் மீ
தேதி ஆறு

யிந்த - கீறல்
ரமாமணி.

## ஆவண எண்: 100

ஒரு ரூபாய்
காகிதம்

பொக்கிஷம்

சூ அ ள ரு யி ந ஆம் ஷு[228] ஜனவரி மீ௨௨ மத்தியார்ச்சனம்[229] அரண்மனையிலிருக்கும் (இ) அமரசிம்ம[230] மஹாராஜா சாகேப் அவர்களுக்கு பெண்ணும் மா.தோ.ஸ்ரீ. யமுனாபாயிராஜா அம்மணி சாகேப் யாகிய நாம் ஷை யூர் மஹாதானபுரத் தெருவிலிருக்கும் நம்முடைய யஜமான்களுக்கு[231] சகோதரி பிள்ளையான மாருஸ்வாயிசி என்கிற சிவாஜி காசிறாவு சி.....க்கிம் நாம் வளர்த்தப் பிள்ளையாகிய கிருஷ்ண சுவாமியாருக்கு எழுதிக்கொடுத்த உடன்படிக்கை என்னவென்றால், நம்முடைய சத்திரம் வகையறா தர்மத்தை நடப்பிவித்து

224. காலாறணம் - காலஹரணம் - காலதாமதம்

225. சாரி - கொடுக்கப்படுதல் (?)

226. கார்பார்பிரசங்கம் - தருமசபை என்ற நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு மேல் முறையீடு செய்யும் சபை. இச்சபையார் வழக்குக்குரிய ஆவணங்களை வருவித்து "இசுபசால்" என்ற அவையில் மேல்முறையீட்டுக்கு அனுப்பச் செய்வர். இதனைச் சர்க்கேல் அலுவலகம் என்றும் கூறுவர் (பக்.168)

227. 1856ஆம் வருஷம்

228. 1853ஆம் வருஷம்

229. மத்தியார்ச்சுனம் - திருவிடைமருதூர்

230. அமரசிம்மர் - துளஜாவுக்குப் பின் 1788 முதல் 1798 வரை ஆட்சி செய்து அரச பதவியினின்று நீக்கப்பட்டவர்

231. யஜமான்கள் என்றது அமரசிங்கராகலாம் அல்லது யமுனாபாயி அவர்களின் கணவர் ஆகலாம்.

வரவேண்டியதையும், நம்முடைய தம்பி பிரதாப சிம்மஜி அவர்கள் வீகு யமுனாபாயி[232] சாயேப் முதலானவர்களிடத்தில் நமக்கு வரவேண்டிய கடன்களைத் தீர்த்து எங்களில் கிருஷ்ண ஸ்வாமியய்யன் வகையறாகளுக்கு சில துகை கொடுக்கிறதென்றும், கொடுத்து வரதென்றும்.[233]

நம்முட உத்திர கிரியளை[234] சிவாஜி காசிறாவு சிநெ நடப்பிவிக்கிறதென்று கண்டு ரு ய[235] பிப்ரவரி மீ" எ உ யிலும், ரு ய க[236] பிப்ரவரி மீ" ய அ உ யிலும், ஷெ டிசம்பர் மீ" ரு உ யிலும், ஷெ டிசம்பர் மீ" ய சு உ யிலும், நாம் பிலப்பத்திரங்கள்[237] எழுதி வைத்திருக்கிற பிரகாரம் ஷெ யூர் மகாதானபுரம் அக்கிரகாரத்தில் கட்டியிருக்கிற நம்முடைய சத்திரத்தையும், அதில் பிராமண போசனம் சதாவிர்த்தி[238] முதலான தர்மத்துக்காக சிவபுறாணி[239] கிராமத்தில் நாம் வாங்கியிருக்கிற நபு.[240] வகையறா. கூ. வி.சூமா.[241] சருவமான்னிய[242] நிலத்தையும் அதின் தான சாசனம் மூலாதிரவு[243] சகிதமாயி[244] நாளது தேதியில் எங்களில் ஸ்வாதீனப்படுத்திப் போட்டபடியினாலே ஷெ பில[245] பத்திரத்தில் கண்டபடி நமக்கு வரவேண்டிய நகைகளை சகஜமாகவாவது சர்க்கார் கவர்ண்மெண்ட்[245] ரெவின்யூ, மேஜிஸ்திரேட்டு, சிவில் நியாயஸ்தலம் இதுகள் மூலமாவது அவரவர்களிடத்தில் நீங்கள் வாங்கிக் கடன் முதலானதுகளைத் தீர்த்து, தர்மம் வகையறாக்களையும் ஸ்வாமிக்கு ஒப்பாய் நீங்கள் நடப்பிவித்து வரவேண்டியதும், தவிர எங்கள் கட்சியில் ஷெ தர்மத்தை நடப்பிவிக்கத் தகுந்த மனுஷாளை நீங்கள் ஏற்படுத்த வேண்டியது. புதுக்கோட்டை கோபால னாயக்கருக்கு கிருஷ்ண ஸ்வாமியய்யன் பேரால் எழுதி கொடுப்பட்டிருக்கிற கடன் துகை பிலபத்திரத்தில்[247]

---

232. யமுனாபாயி யார் என்று தெரியவாய்ப்பில்லை

233. வரது - வருவது

234. நம்முடைய உத்தரக்கிரியைகளை; உத்தரக்கிரியை - இறந்தபின்னர்ச் செய்யும் சடங்குகள்

235. 1850 ஆம் வருஷம்.

236. 1851 ஆம் வருஷம்

237. பிலப்பத்திரங்கள் - பல பத்திரங்கள்

238. சதாவிருத்தி - சத்திரம் முதலியவற்றுள் வழிப்போக்கர் முதலாயினார்க்கு நாடோறும் அளிக்கும் உணவுப்பொருள்

239. சிவபுராணி - திருப்பனந்தாளுக்குக் கிழக்கே 2 கி.மீ. தொலைவிலுள்ள ஊர்

240. ந.பு. - நன்செய் புன்செய்

241. 9 வேலி 6 மா (20 மா ஒருவேலி)

242. யாதொரு தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்கும் நிலம் சருவமானியம் எனப்படும்.

243. மூலஆதரவு - மூலவோலை

244. சகிதமாய்-உடன்

245. பில - பல

246. கவர்ன்மென்டு - அரசாங்கம்; ரெவின்யூ - வருவாய்த்துறை; மேஜிஸ்த்திரேட்டு - குற்றவியல் துறை அதிகாரி; சிவில் நியாயஸ்தலம் - நீதிமன்றம்

247. பிலபத்திரத்தில் - எழுதப்பட்டுள்ள பல பத்திரங்களிலும்

கண்டு எழுதப்படா ததினாலந்தக் கடனையும் மேலே கண்ட அயிவேஜியி[248] லதித்துப்[249]போட வேண்டியது.பின்னும் நம்மிடத்திலிருக்கிற பொன், வெள்ளி, பஞ்சலோக பாத்திரங்களையும் மரப்பெட்டி வகையறா முதலான சாமான்களையும் நமக்குப் பிறகு எங்களில் சிவாஜி காசிறாவு[250] சிலவற்றைஎடுத்துக்கொள் ளுகிறது. இதில்கண்ட விவரப்படி நடத்த நீங்கள் பாத்தியஸ்தர்களே[251] யல்லாமல் ஷெ தர்மங்க்ள் நகைகள் கடன் இதுகளுக்கு இனிமேல் நமக்கு சம்பந்தமில்லை. இந்தப்படி நம்முடைய மனப்பூர்வமாயிந்த உடன்படிக்கையே உங்களுக்கு எழுதிக் கொடுத்தோம்.

ஒப்பம்:- ஸ்ரீராம் என்று ஷெ ராசா அம்மணி சாகேப்பவர்கள் பாளேபந்தில்[252] கையெழுத்து வைத்திருக்கிறார்கள்.

ஒப்பம்:- வைத்தியனாதராவ் ராவுத்தறாவ் நல்லவடே அரிவே[253] னென்று மகாராஷ்டகலபியில்[254] சாட்சி போட்டிருக்கிறார்.

ஒப்பம்:- வஜராத்து மாயு[255] - சுப்ப றாவு பத்து மாஜி பவுமாற[256] அருவே[257] னென்று மகாராஷ்டக லபியில் சாட்சி போட்டிருக்கிறார்.

ஒப்பம்:- சிவாஜி அந்தஜி அருவேனென்று ஷெ லபியில் சாட்சி போட்டிருக்கிறார்.

ஒப்பம்:- சிவபுறாணி கிராமம் ஷெ யார்கள் காரியம் குற்றாலம் சிவஸ்வாமிய்யனருவேன்

ஒப்பம்:- இந்த உடன்படிக்கை எழுதின நெட்டெழுத்து[258] மகாதானபுரம் மிராசு அய்யாவய்யன் குமாரன் மஹாலிங்கபடை

அசலுக்கு சரியான நகல்.

---

248. அயிவேஜியில் - சொத்து இருப்பில்

249. அதித்துப்போடவேண்டியது - கொடுக்க வேண்டியது

250. சிவாஜிகாசிறாவு - அமர்சிங்கின் சகோதரி மகன்

251. பாத்தியஸ்தர் - உரிமையுடையவர்

252. பாளேபந்து - பாலபோத் என்ற தேவநாகரி எழுத்து

253. அரிவேன் - அறிவேன்

254. மகாராஷ்டக லபி - மகாராஷ்ட்ர லிபி - மராட்டி எழுத்து

255. வஜாரத்து மாப்பு - அரசகுடும்பத்தைச் சேர்ந்த பிரபு

256. மாஜி பவுமாற - மாஜி பவுசுதார் (?); முன்னாள் சேனைத்தலைவன்

257. அருவேன் - அறிவேன்

258. நெட்டெழுத்து - பத்திரம் எழுதியவன்

## ஆவண எண்: 101

ஸ்ரீ மகாராஜா சாயேப்[259] அவரகள் திவானத்துக்கு[260] கோட்டைக்குள் வடக்கு வீதியைச் சேர்ந்த பாவாசங்கர் அக்கரகாரத்தில் இருக்கும் வல்லம் வெங்கட்டராம ஜோசியருக்கு பிரதினாமாகிய[261] கோவிந்தஜோசியர் குமாரனாகிய வெங்குசாமி ஜோசியர் என்கிற வெங்கிட்டராம ஜோசியர் எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்:- ஸ்ரீ அரண்மனையாருடைய அன்னப்பிரபாவத்துனால்[262] ஏழையாகிய எனக்கு ஜோசியம் பல சாஷ்த்திரமும்[263] தமிழும் தெரியும். தமிழ் லிபியில் ஜேபாய்[264]நீசு வேலை பார்க்கும்படித் தறிப்பித்தாய்[265] சில தடவை ஜெபாபநீசுக்கு பதில் உதவியாக வேலை பார்த்து வந்திருக்கிறேன். என் தகப்பனார் இறந்து போன பிற்பாடு என்னபேரால் மீ க-க்கு ரூ ௩,ச[266] வீதம் சம்பளம் செய்து நடந்து கொண்டு வந்தது. இப்படியிருக்க கோதானம்[267] க-க்கு ரூ ௩ யாக செய்து எனக்கு ௵ க ௵ யெட்டு கோதானம் செய்து சிலனாள் கொடுத்துக்கொண்டு வந்தார்கள். அது மீ மீ வரப்பட்ட தலவாயிப்படி இருக்க ஷெ துகை என்பேரில் பாறி[268] குடும்ப காலட்சேபத்துக்கு போதவே போதாது. யிப்படி யிருக்க ஷெதுகையைக்கூட உத்தேசம் உ ௵ — காலமாய் சரஸ்வதி மகலார் கொடுக்கிறது யில்லை. நான் கேட்டால் சமுசாவிசி[269] மட்டும் சொல்லுகிறார்கள். நான் கண்டித்துக் கேட்டால் நான் சேவுகம் செய்கிறதேயில்லை போலச் சொல்லுகிறார்கள். கோதானத்தை சாஸ்த்திரப்படியும் முன்வழக்கப்படியும் என்னிடத்தில் நேராய்க் கொடுத்திருந்தால் சரஸ்வதி மகால.ர் அப்படி அட்டி[270] சொல்லக் காரணமில்லை. சொல்லவு மாட்டார்கள். அப்படிக்கில்லாமல் மகலார்[271] கொடுக்கும்படி செய்திருக்கிறபடியால் வீணான அட்டி சொல்லி காலகறணம்[272] செய்து, அபகரித்துக் கொள்ள எத்தனப்படுகிறார்கள். நானோ மிகுந்த ஏழை எனக்கு அரண்மனையாரைத் தவிர

---

259. மாகாராஜா என்றது இறுதி அரசராகிய சிவாஜியை

260. திவானத்துக்கு - முன்னிலைக்கு

261. பிரதினாமாகிய - பிரதிநாமமாகிய - மறுபெயராகிய

262. பிரபாவத்துனால் - பிரபாவத்தினால் - சிறப்பால்

263. சாஷ்த்திரமும் - சாத்திரமும்

264. ஜேபாய்நீசு - ஜவாப் நவீசு – நீதிபதியின் துபாஷி

265. தறிப்பித்தாய் - தர்ப்பீது ஆய் - பயிற்சி பெற்ற

266. ரூபா மூன்று, நான்கு

267. கோதானம் - பசுவைத் தானமாகக் கொடுத்தல்

268. பாறி - பாரி - பெரிய

269. சமுசாவிசி - சம்ஜாயிஷி–சமாதானம்

270. அட்டி - தடை

271. மகலார் - மகாலார்

272. காலகறணம் - காலதாமதம்

வேறு ஒரு விதமான சிபார்சும் ஆஸ்தியும் கிடையாது. நான் கடன் வாங்கி காலேட்சேபம் செய்வது நிர்வாகத் தப்பிதமாயிருக்கிறது, அல்லாமலும் என் தகப்பனார் பேரால் நடந்துவந்த அ ள கூயி உ -ம்[273] நம்பர்-ந;அ ள கூயி ந ம்,[274] நீ- க;அ ள கூயி ச -ம்[275] நம்பர் க: ஆக ந சோ.ந.ம.தற[276] அயக்கட்டு[277] மான்னியம் சறட்டுகளை என் தகப்பனார் இறந்து போனவுடனே என்பேரால் தாக்கல் செய்து பாக்கி அயிவேஜி உள்பட கொடுத்து நடப்பிவித்து வரும்படி என்பேரில் தயவு செய்து, அரண்மனையார் சயி உ -ம்[278] ஷு டிசம்பர் மீ த்தில் கலெக்டர் அவர்களுக்கு விபரமாய் மிமோறண்டம்[279] எழுதி யிருக்கிறார்கள். அப்போதே என் பேரால் தாக்க[280] லாகி யிருந்தால், இப்போதைக்கி ஏழு, யெட்டு வருஷமாகி இருக்கும், சயி உ -ம் ஷு டிசம்பர் மீ முதல் அசூறில்[281] வாக்குமூல முதலானது கொடுத்து, பிரயத்தனம்[282] செய்து கொண்டு வருகையில் நான் சயி எ-ம்ஷுடத்தில்[283] கலெக்டர் துரை பேரால் தபால் மூலமாய் எழுதிக்கொண்ட வாக்குமூலப்படி எனக்குச் செய்து நடப்பிவித்து வருகிறதாய் பிஷப் துரை[284] ஜாப்காலில்[285] சொல்லி, மறுபடியும் அரண்மனையாருடைய விசாரணைக்கு ஷெ வாக்கு மூலத்தையும் யாதாஸ்த்தையும்[286] கலெக்டர் அரண்மனைக்கு அனுப்பி வித்தார்கள். அதின் பேரில் அரண்மனையார் என் தகப்பனார் பேரால் எழுதின மிமோறண்டத்தையும், பிறகு எனக்காக கலெக்டருக்கு எழுதின மிமோறண்டத்தையும் அனுபோகத்தையும் பார்த்து அறிந்து யோசித்து சயி அ -ம் ஷு ஏப்ரல் மீ த்தில் ஷெ ஆயக்கட்டு மான்னிய சங்கதியைக் குறித்து எனக்காக கலெக்டர் துரையவர்கள் பேரால் அரண்மனையார் மிமோறண்டம் எழுதினதில் நான் பஞ்சாங்க கணித வேலை பார்த்து வருகிற காரியம் சரிதானென்றும், அதற்காகவே ஷெ மான்யம் வழக்கமாய் நடப்பிவித்து வருகிறதென்றும், ஷெ மான்யம் தலைமுறை தலைமுறையா நடக்கப்பட்டது

---

273. 892

274. 893

275. 894

276. சோத்திரியம், நத்தம், மனைமற்ற (?)

277. அயக்கட்டு - ஆயக்கட்டு - நீர் நிலம்

278. 1842ஆம் வருஷம்

279. மிமோறண்டம் - நினைவுக்குறிப்பு

280. தாக்கல் - பதிவு

281. அசூறில் - அசூரில் - உசூரில் - அரசாங்கத்தில்

282. பிரயத்தனம் - முயற்சி

283. 1847ஆம் வருஷத்தில்

284. பிஷப் - ரெஸிடென்டு

285. ஜாப்காலில் - ஜாப்தாவில்

286. யாதாஸ்த்து - நினைவுக்குறிப்பு

என்றுமானதால் ஷெ ரு நிம்பர் சறட்டுகளை என்பேரால் தாக்கல் செய்து, பாக்கி அமிலேஜி உள்பட கொடுத்து, நடப்பிவித்துக்கொண்டு வரும்படியாய்க் கண்டு, மொமோறண்டம் எழுதியிருக்கிறார்கள். அப்போதே என் பேராவாகி யிருந்தால் இப்போதைக்கு ஸ்ரு 2 மாகி யிருக்கலாம். அப்படியும் செய்யாமல் காலதாமதம் செய்து வந்தபடியால் அதற்காக நான் ஆசிறாயி[287] கலெக்டரா யிருக்கிறா ஜான்பறட்டு துரையவர்கள் என்னுடைய தஸ்த்தாவேஜி[288] மிமோறண்டம் முதலான நியாயத்தை யோசியாமல் ஸ்ரு ய க்கு மேற்பட்ட சறட்டுக்களே செய்யக்கூடாதென்று சுரு ச -ம் ஸ்ரு டிசம்பர் மீ 12வயில்போறட்டு[279] உத்திரவு வந்து யிருப்பதினாலே என் மான்னியம் செய்யக்கூடாதென்று உத்திரவு கொடுத்து, என்னிடத்திலிருந்த மூன்று சறட்டுகளையும் மற்ற பத்திரத்தில் வாங்கி வைத்துக் கொள்ளச் சொல்லி சொன்னபடி திபிட்டி சிறஸ்தா[290] ரெங்காராயர் அவர்கள் வாங்கி வைத்துக்கொண்டு யிருக்கிறார்கள்.

சுய எ ஸ்ரு த்தில் மிமோறண்டம் எழுதப்பட்டு யிருக்கிறது: சுய எ -ம் ஸ்ரு த்தில் ஷெ சங்கதிக்காக மறுபடியும் பிஷப்துரை அரண்மனைக்கு எழுதி அனுப்பி விசாரணை துவக்கம் செய்து, மறுபடியும் அரண்மனையார் சுரு அ -ம் ஸ்ரு த்தில் மிமோறண்டம் எழுதினபடியால் அதிக கால தாமதம் நேரிட்டு யிருக்கிறது. அப்போதே செய்திருந்தால் துரை சொன்ன டயணக்குள்[291] (டயத்திற்குள்) தான் யிருக்கும். இப்படி யிருக்க அனுபோகம் தெரியாத, நூதனபாயி வேலை பார்க்கிற பறட்டுதுரை[292] நியாயத்தையும் வரவழைத்துப் பார்த்து, போஜித்து நியாயப்பிரகாரம் என்பேரால் செய்யாமல் வீணான அட்டி சொல்லியிருக்கிறார்கள். ஏழையான நான் பொழைக்கிற நிமித்தியத்தால் கலெக்டருக்கு மிமோறண்டம் எழுதுவதால் அரண்மனையாருக்கு நஷ்டமில்லவே யில்லையானதினால் என்பேரில் தயவுசெய்து, கலெக்டர் துரையவர்கள் ஷெ சங்கதிக்காக போறட்டுக்கு எழுதி போர்ட்டு உத்திரவின் பேரில் ஷெ மான்னியத்தை என்பேரால் தாக்கல் செய்து, கலெக்டர் கொடுக்கும் படி கலெக்டர் துரையவர்களுக்கு ஒரு வாரத்திற்குள் ஜெறூறாயி[293] சர்க்கேல் வாள்[294] மிமோறண்டம் எழுதும்படி செய்தால் என் காரியமாகுமானதால் ஜெரூரில் சர்கேல் ஸ்ரீ அண்ணாஜி தியாகறாஜ பண்டிதர் அவர்களுக்கு ஜெறூற...கொடுக்கிறது மன்னியில்[295] ஏழையாகவும் சிபாரிசு யில்லாதவனாகவும் யிருகுடும்ப சமுசாரியாகவுமிருக்கிற நான்

287. ஆசிறாயி - ஆசநாகி - சென்று

288. தஸ்தாவேஜி - பத்திரங்கள்

289. போறட்டு - Board of Directors

290. திபிட்டிசிறஸ்தார் - Deputy Sheristadar

291. டயணக்குள் - காலத்துக்குள் (டயன் - time)

292. பரட்டுதுரை - இவர் தற்காலிக (acting) ரெஸிடெண்டாக இருந்தவர்.

293. ஜெறூறாய் - ஜரூராய் - விரைவாய்

294. சர்க்கேல்வாள் - சர்க்கேல் அவர்கள்

295. அன்னியில் - அன்றியில்

காலட்சேபத்திற்கு யில்லாமல் பட்டினியாய கஷ்டப்படுகிறபடியால் என் குடும்ப காலட்சேபத்துக்கு தகுந்த சம்பளம் செய்து, என்னை சபைகளில் தமிழ் ஜெபாபநீசு வேலை பார்த்து வரும்படியாயும் ஜெரூரில் செய்ய வேணுமென்று இந்த அரண்மனையை ஏழுதலை முறையாய் காத்த வம்சத்தவனாகிய நான் மிகவும் வெகு விதமாய் மன்றாடி கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆ அ ள சுயி கூ஖
ஜுன் மீ 2 உ[296]

வெங்குசாமி ஜோசியர்
என்கிற வெங்கட்டராம
ஜோசியர் கையெழுத்து.

## ஆவண எண்: 102

ஸ்ரீ.மகாராஜா சாயேப் அவர்கள் திவானத்துக்கு கோட்டைக்குள் வடக்கு வீதியைச் சேர்ந்த பாவாசங்கர் அக்கிறகாரத்தில் இருக்கும் வல்லம் கோவிந்த ஜோசியர் குமாரனாகிய வெங்கிட்டராம ஜோசியர் எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால் - உத்தேயம்[297] ஞூ ய ப(த்து)க்கு முன் என் தகப்பனார் இறந்து போனார். அப்போது என் பாரி[298] குடும்ப காலட்சேபத்துக்கு மீ கூக்கு ரூ சுரூஞு சம்பளமும் சில்லறை தான.... மாயி சில வருமானமும் எனக்கு நடந்து வந்தது. இப்படி யிருக்க சில தடவையில் குலறத்து கோதானம் க-க்கு ரூ. ந யாக செய்து, அப்போறப்பட்ட கோதானத்தில் எனக்கு ஞூ க க்கு யெட்டு கோதானத்துக்கு ரூ. உ ய சு வீதம் நடந்து வரும்படி செய்து யிருந்தார்கள். அதுயெனக்கு வெகுனாள் கொடுத்து வந்தார்கள். நானும் ஜோசிய முதலான வேலை வழக்கப்படி பார்த்து வந்தேன். இப்படிக்கெல்லாமிருக்க இப்போதைக்கு ஞூ உ - க்கு முன் முதல் ஷெ சொற்பத் துகையைக் கூட எனக்குக் கொடாமல் யிருக்கிறார்கள். நான் கேட்டால் மட்டும் கொடுத்துவிடுகிறதாய் சமுசாவிசி[299] சொல்லுகிறார்கள். அதிசயமாய்[300] தொடர்ந்து கேட்டால் நான் ஏதோ ஜோசியவேலை பார்க்கிறதில்லை போல சொல்லுகிறார்கள். அது நிமித்தியத்தால் ஷெ கோதான அயிவேஜியைக் கொடுக்கிறதில்லை போல சொல்லுகிறார்கள். தான அயிவேஜியைத் தவிர சம்பளமல்லா அந்த அயிவேஜியைத் தானமாகிற தருணத்தில் தானே எனக்கு நேராய் கொடுக்க வேண்டியதைக் கொடாமல் இருப்பதினாலும் என்பாரி குடும்ப காலேட்சேபத்துக்குப் போதாமலிருந்த ஷெ துகையைப் பாக்கியில்லாமல் கொடுத்துவிடும்படியாயும் ஏழையாகிய எனக்கு அரண்மனையாரைத் தவிர, வேறு சிபார்சும், ஆஸ்தியு மில்லவே யில்லை. எனக்குத் தமிழ் தெரியும். அதனால் ஜெபாபநீசு வேலையும்

---

296. 2-6-1849.

297. உத்தேயம் – உத்தேசம் - ஏறத்தாழ

298. பாரி - பெரிய

299. சமுசாவிசி - சம்ஜாயிஷி - சமாதானம்

300. அதிசயமாய் - அதிகமாய் (?)

பார்ப்பேன். அனுமான[301] மில்லையானதால் என் குடும்ப காலட்சேபத்துக்குத் தகுந்த சம்பளம் செய்து, சபையில் ஜெபாபநிச வேலை பார்க்கும்படி நேமணக்கு செய்யும் படியாயும் என் தகப்பனார் பேராவிருந்து சறட்டுகளை என்பேரால் செய்து கொடுக்கிறதாய் கலெக்டர் பிஷாப் துரை அரண்மனைக்கு மிமோறண்டம் எழுதி யிருக்கிறார்கள். அரண்மனையாரும் கலெக்டருக்கு எனக்காக இரண்டு மிமோறண்டம் எழுதியிருக்கிறார்கள். அப்போதே என்பேரால் செய்திருந்தால் இப்போதைக்கு ௵ ரு, ௬ ௵ மாகியிருக்கும். யிப்படி யிருக்க ௵ ய்-க்கு மேல் காலதாமதமாகி யிருப்பதினால் செய்ய போர்ட்டு உத்தரவில்லை யென்று சொன்னதுமல்லாமல் என் சறட்டுக்களை வாங்கிக் கொண்டார்களானதால் கலெக்டர் போர்ட்டு[302] உத்திரவுப்படி செய்யும்படி கலெக்டருக்கு எழுதும்படியாயும் சர்கேலுக்கு உத்திரவாக வேணும்.

ரு அ ள ச/ய் ௯-ம் ௵[303]
சூன் மீ ய் ௯ உ

வெங்கட்டராம
ஜோசியர் கையெழுத்து.

## ஆவண எண்:103

ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்கள் திவானத்துக்கு கோட்டைக்குள் வடக்கு வீதியைச் சேர்ந்த பாவாசங்கற் அக்ரகாரத்தில் இருக்கும் வல்லம் கோவிந்த ஜோசியர் குமாரன் வெங்கட்டராம ஜோசியர் என்கிற னான் எழுதிக்கொண்ட யாதி என்னவென்றால், மேல வெளிக்குப் பிரதினாமமான[1] சரபேந்திரபுரம் கிராமத்தில் ராமய்யா அவர்கள் என் தகப்பனுக்கு நஞ்சை, புஞ்சை நிலம் வேலி-க வ-ம் பிரமவாஸ்து[2] மனை-க ம்; கொடுத்த னாள் முதல் உ ய ௬௵மாயி[3] அனுபவித்து வரப்பட்ட நிலம் வேலி- க வ -வில் கொத்தங்குளப்பாச்சல் சோளகட்டளை வேலி அறையில் ரூ.ரு ய் பெற்ற ஒரு தளையை ஷை சரபேந்திரபுரம் கிராமத்தின் சாரி பஞ்சனத சாஸ்தி என்பவன் துராகிருதமாயும்[4] நிபந்தனைக்கு விரோதமாயும், சகல ஜன விரோதமாயும் ஷை ரூ ரு ய் பெற்ற ஒரு தளையை மறியல் செய்து யிருக்கிறான். அதனால் சாகுவாரி[5] செய்யாமல் அறக்கதாயி[6] சேதப்பட்டுமிருக்கிறது. ஆகையால் ஏழையான என்பேரில்

---

301. அனுமானம் - சந்தேகம்

302. போர்ட்டு - Board of Directors

303. 19-6-1849

1. பிரதினாமம் - மறுபெயர்

2. பிரமவாஸ்து (?)

3. இருபத்து ஆறு வருஷமாய்

4. துராகிருதமாய் (உரிமையல்லாத பொழுதும்) வன்மையோடு

5. சாகுவாரி - சாகுபடி - பயிரிடுதல்

6. அறக்கதாய் - வீணாகி (?)

தயவுசெய்து, என் மேலெழுதிய நிலத்தைத் துராகிருதமாய் மறியல் செய்ததில் வந்திருக்கப்பட்ட சேதத்தை போடட தில் வாங்கித் தருகிறதுமல்லாமல் மறியலை விடுதலை செய்யும்படியாயும் ஷெ மறியல் செய்ந துராகிருதத்துக்குத் தருமான தண்டனை செய்ய வேணுமென்றும், யினி மறியல் செய்யாமலிருக்கும்படியாயும் செய்விக்க வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

௲அ௱௪௰௪-ம் வருஷ
நவம்பர் மீ ௨௰௧ ௳ [7]

## ஆவண எண்: 104

தஞ்சாவூர் மகாராஜா சீவச[8] அவர்கள் சன்னிதானத்துக்கு தஞ்சாவூர் சீர்மையின் கலெக்டர் சாயேப் அவர்களுடைய அசூல்[9] மராமத்து மேஸ்த்திரியினுடைய சகோதரன் சென்னப்பட்டணம் ச.முனுசாமி னேட்டைவு[10] சோவயா மிகுந்த வணக்கத்துடனே எழுதிக் கொண்ட தென்னவென்றால்,

௧-வது மாதி மேட்டிகால்[11] சாஸ்த்திர விதிப்படி விவலயினுசடியுமெண்டு[12] அல்லது டிவோடல்[13] என்கிற ஆயுதத்தைத் கொண்டு சீமைகளை[14] அளந்து, மேப்புகள்[15] எழுதவும், ஷெ ஆயுதத்தைக் கொண்டு வேலை செய்யவும் மலைகள் அளக்கவும், தெரியும்.

௨ - வது பாலம் மதகு உப்பரிகை[16] மாடி யிதுகள் முதலாகிய கட்டிடங்களைக் குறித்தும், கட்ட வேண்டியதைக் குறித்தும், யிச்கேலின்படி[17] பிளான்[18] எழுதவும் பிளானைப் பார்த்து, திட்டம் போடவும், திட்டக் கணக்கைப் பார்த்து பிளான் எழுதவும், ரஸ்தா[19] ரோட்டு

---

7. 21.11.1844

8. சீவச - சிவாஜி

9. அசூர் - உசூர் - அரசாங்கத்துக்குரிய

10. னேட்டைவு - Native (இந்த நாட்டவராகிய)

11. மாதிமேட்டிகால் - Mathematical

12. விவலயினுசடியுமெண்டு - Revolving Instrument (?)

13. டிவேடல் - Dividal

14. சீமைகளை - ஊர்களை

15. மேப்புகள் - Maps (நிலப்படங்கள்)

16. உப்பரிகை - மேல்மாடி

17. யிச்கேல் - Scale

18. பிளான் - Plan

19. ரஸ்தா - சாலை

வேலைகள் செம்மையாயும் யிங்கிலிஷை மோஷதறாபூ [20] போட்டு வைக்கவும் அறிந்திருக்கிறேன்.

சவது லேடியித்தாகிறாப்பி பிரஸ்[21] வேலைகளும், தெரியும். அதன் விபரம் என்னவென்றால் மசியினால் காகிதத்தில் எழுதப்பட்ட வேலைகளெல்லாம் சீமைக்கல்லில் ஒட்டினால் எழுதப்பட்டிருக்கிற எழுத்துக்களை அந்தக் கல்லானது கிரகித்துக் கொண்டு எத்தனை காப்பி வேண்டியதோ, அத்தனை அந்தப் பிரஸில் [22]அடித்துக் கொள்ளலாம். அந்தப் பிரஸில் தான் நோட்டுகள், படங்கள், மேப்பு முதலானது போடுகிறது. அந்தப்பிரஸ் வாங்க வேண்டியதா யிருந்தாலும் வாங்கலாம். இதுவெகு ஆச்சரியமான வேலை.

ரு -வது ஷை இந்த வேலைகளும் இந்து தேசத்தார்கள் இதில் கண்டிருக்கிற வேலைகளும் கற்றுக் கொண்டிருப்பது மிகவும் அரிது.

சூ -வது இந்த வேலைகள் பிறகு கற்றுக் கொடுப்பதும் மிகவும் லேசாய்ப் படித்து கொடுக்க மாட்டுவேன்.

எ-வது ஷை. சீமையின் ஆறாவது டிவிஷன்[23] அசிஸ்டெண்டு சிவில் இஞ்சினே[24] யரிடத்தில் டிபார்ட்மெண்டு ரயிட்ட[25] ராகவும் பிளான் மேஷ்ட்டராகவும்[26] யிருந்தேன். மகாராஜா அவர்களுடைய சீவனம் சம்பாதித்து[27] அவர்களுடைய அன்னம் போசிக்க[28] வேணுமென்கிற அபேஷஷை[29] னெடிகிலும்[30] ஆசை கொண்டவனா யிருந்ததினாலே ஷை இஞ்சினேயரி[31] டத்தில் இருப்பதற்கு மனதில்லாதவனாக ராஜினாமா கொடுத்து விட்டு, அதற்காக செர்ட்டைபை கேட்டும்[32] பெற்றுக் கொண்டேன். அதையும் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன்.

---

20. யிங்கிலிஷைமோஷதறாபூ - இங்கிலிஷ்மொசைக் தரை

21. லேடியித்தாகிறாப்பிபிரஸ் - Lithographic Press

22. பிரஸில் - Press -இல்

23. Division

24. Assistant Civil Engineer

25. Department Writer

26. Plan Manager

27. சீவனம் சம்பாதித்து - அலுவல் பெற்று

28. போசிக்க - புசிக்க - உண்ண

29. அபேஷஷை - அபேட்சை - விருப்பம்

30. னெடிகிலும் - நெடுகிலும் - எப்பொழுதும்

31. Engineer

32. Certificate

அ -வது அது முதல் மகாராஜா அவர்களுடைய சன்னிதானத்துக்கு கொடுக்க, தஞ்சாவூர் சீமையின் மேப்பு வெகு கணக்கு விபரங்களாயும் பேரார்களா[33] யிருக்கப்ப்ட்டதுகள் யாதிந்தமும்[34] அந்தந்த யிடங்களில் கட்டப்பட்டிருக்கிற பாலங்களும் கண்டு முக்கால் வரிசை[35] தயாராகி விட்டது. இந்தக் கடிதத்தோடே கூட ஒரு தலைப்பு மதகு பிளானும் அடக்கஞ் செய்திருக்கிறேன்.

நாளது மீ சு உ திங்கட்கிழமை யன்றைய தினம் ஷெ மேப்பையும் மாதி மேட்டிக்கால் இனிஸ்றடியுமெண்டும்,[36] சர்க்கம் பிரிண்டர் என்கிற ஆயுதங்களும் எடுத்துக் கொண்டு தங்கள் அல்லா மாடியிடத்தில்[37] வந்து காத்து யிருக்கிறேன்.

சூ அ ள சுய அ -ம் ஷு[38] இப்படிக்கி
மார்கழி மீ த உ ச.முனிசாமி
வல்லம்.

## ஆவண எண்: 105

ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் திவானத்துக்கு கோட்டைவெளி மானோம்புச் சாவடி சக்கரைகுளம் இடத்தெருவில் இருக்கும் கேசவறாவுமோத்தே தோட்டம் மாஜி[39] பில்லு[40] கருவக்காய்க் குத்தகைக்காற ராமக்கோனான் மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு எழுதிக் கொண்ட மனு என்னவென்றால், நான் பறாபவா[41] ஷுத்தில் ஷெ தோட்டம் பில்லு கருவக்காய் இதுகள் சற்காரில் ஸ்ரீ உ ய க -க்கு குத்தகை எடுத்து, ஷெ கருவக்காயை மானோம்புச் சாவடி ஆட்டுக்காரத் திருமலை ணாயக்கனுக்கு ரூ- ழ க -க்கு நான் உள்க் குத்தகைக்கு கொடுத்து, ஆடுங்கொண்டுவந்து விடுகிற முன்னிலைக்கு ஷெ தோட்டம் காவல்க்காரனும் சேவுக சுப்பராவும், அரண்மனையாட்டை மேயவொட்டாமல் தடங்கல் செய்தார்கள். இதைக் குறித்து நான் கச்சேரிக்குப் போய் கற்ணம் வெங்கிடு சுப்பய்யருக்கு தெரிவித்ததற்கு அவர் என்னை அழைத்துக் கொண்டு போய் பாளாசாமி பஞ்சுவய்யர் இவர்களிடத்தில் விட்டு காரியத்தைத் தெரியப்படுத்தினார். அதற்கவர்கள் அரண்மனை ஆடு மேயட்டும். நீ பக்கத்திலடைத்தபடி அரண்மனையார் ஒத்துக் கொடுப்பார்களென்று

33. போரர்கள் - போறுகள்

34. யாதிந்தமும் - ஆதியந்தமும் - தொடக்க முதல் இறுதிவரை

35. வரிசை - பங்கு

36. Mathematical Instrument

37. அல்லாமாடி(?)

38. 1848ஆம் வருஷம்

39. மாஜி - முன்னாட்குரிய

40. பில்லு - புல்

41. பறாபவா - பராபவ - ஆண்டறுபதனுள் நாற்பதாவது

சொன்னதின் பேரில் குத்தகை ஆட்டை நிறுத்திப் போட்டு நான் ஷை குத்தகைக்காக அரண்மனையில் ௩ தடவையாய் செலுத்துன ரூ ௰௩- போக பாக்கி ரூ ௮ இந்த ரூ ௰௩-யும் நான் முன்னாடி செலுத்திப் போட்டபடியால் அரண்மனையில் எனக்கு வரவேண்டிய ரூ ௰க யில் நான் செலுத்த வேண்டிய ரூ ௮ போக அதிக பத்து அரண்மனையில் எனக்கு வரவேண்டிய ரூ. ௩ - யைக் குறித்து நான் அரண்மனையாரை கேட்டதற்கு இன்னம் எதிலேயாகிலும் ஒத்துக் கொடுக்கிறோமென்கிறதாய்ச் சொன்னார்கள். யிதைக் குறித்து அரண்மனையில் உ - மனு கொடுத்தற்கு யாதொரு உத்திரவும் பிறக்கவில்லை. இப்படியிருக்க ௩ ஷூத்துக்குப் பின்பு, என்பேரில் ரூ-௮-வரவேணுமென்று திமித்தியார்[42] சேவுகளை விட்டு வீணாய் என்னைத் தொந்திரவு செய்கிறார்கள்.

ஆகையால் மகாறாசா சாயேபு அவர்கள் ஏழையின் பேரில் கிருபை செய்து, எனக்கு அரண்மனையில் கருவக்காய் குத்தகைக்கு வரவேண்டிய ரூ௰க -வில் நான் அரண்மனையில் செலுத்த வேண்டிய ரூ ௮ பாக்கி ரூ. ௩ - யும் திமித்தியார் எனக்கு ஒத்து கொடுக்கும்படி உத்திரவாக வேணுமென்று மிகவும் மன்றாடி கேட்டுக் கொள்கின்றேன்.

௲௮ள௯௰௯-ஷூ[43] ராமகோனான்
சூலை மீ உ௰௯ை

## ஆவண எண்: 106

ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் திவானுத்துக்கு மானோம்புச்சாவடி சக்கரைகுளம் இடத்தெருவிலிருக்கும் ராமக்கோனான் எழுதிக் கொண்ட மனு.

ஸ்ரீமகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்கு கோட்டைக்குள் பெரிய பாளயம் இடயர்கள் மாமுண்டி யிதனடியில் கையெழுத்து வைத்திருக்கிற ௮ - பேர் மந்தைக்காரர்களாகிய நாங்களனைவரும் மிகவும் வணக்கமாய்த் தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்:- கோட்டைக்குள்ளிருக்கிற வீடுகளின் பசுமாடு, எருமைமாடு முதலானதுகளை யெல்லாம் நெடுங்காலமாய் மேலவீதி, வடக்குவீதி சறாகங்களைச் சேர்ந்த மாடுகளை வடக்கு வாசல் வழியாய்ச் சக்கறாம் பேட்டை மைதானங்களில் நாங்கள் ஒட்டிக்கொண்டு போய் மேய்த்து, சிங்கப்பெருமாள் குளம் முதலான இடங்களில் தண்ணீர் குடித்தும், கோடைக் காலங்களில் அகழில் தண்ணீர் குடித்தும் வழக்கமாய் வந்து கொண்டிருந்ததும், தவிர கிழவீதி தெற்குவீதி சறாகங்கைகளைச்[44] சேர்ந்த மாடுகள் கிழவாசல் வழியாய் மழை காலத்தில் இசுரமூர்த்தி மைதானத்தில் மேய்த்தும் கோடைக் காலத்தில் மாரியம்மன் கோவில் சமுத்திரம் கடை கடப்பை ...... முதலான ........ ..........
.......................................................... ....................................................................................
கோட்டையில் ......................... குப்பையெல்லாம் கொண்டு .................... கொட்டுகிற

42. திமித்தியார் - திம்மதி என்ற அலுவலர்; இவர் வழக்குமன்றத் தீர்ப்பில் கையொப்பம் இடுபவர் என்றுசொல்லப்படுகிறது. (பக்கம் 76)

43. 29-7-1849

44. சறாகங்கள் - சரகம் - எல்லை

*சொற்பயிடத்தில் சு பக்கத்து மாடுகளும் வந்து நின்று ஒன்றோடொன்று நெருங்கி முட்டிக் கொண்டு மாடுகள் சேதப்படுகிறதுந்தவிர தண்ணீரிவில்லாமலும், மேய்ச்சலில்லாமலும் வெகு பசுக்கள் இறந்து போகுதென்று நாளது ஞு ஆகஸ்ட் மீ ௨ யி வயில் நாங்கள் கொடுத்த யாதிக்கு யிதுவரையிலும் மாமூல்படி மேல்கண்ட யிடங்களில் மாடுகளை மேய்த்து தண்ணீர் குடித்து வரும்படி உத்திரவாகாததினால் வெகு பசுக்கள் சேதப்பட்டு நாங்களும் தொந்திரவுபடுகிறபடியால் மேல்கண்ட இடங்களுக்கு உத்திரவானதின், பிறகு மாடுகள் அவிழ்த்து மேய்ச்சலுக்கு கொண்டு போக வேண்டியதா யிருக்கிறது. ஆகையால் கிருபை செய்து மாடுகள் ஒட்டிக்கொண்டு போய் நிற்க வைக்கவும், மேய்க்கவும், தண்ணீர் குடிக்கவும் இடமில்லாதிருப்பதால் மாமூல்ப்ப......*

............

............

கேட்டுக் கொள்ளுகிறோம்

சூ யி அ ள ரு யி

செப்டம்பர் மீ ௨ யி அ ௨[45]

## ஆவண எண்: 107

**தஞ்சை நகரம் கோட்டைக்குள் சர்கேல் ஸ்ரீ அண்ணாஜி தியாகராஜ பண்டிதர் அவர்களுக்கு வருவது ஜரூர்[46]**

**சர்கேல் ஸ்ரீ அண்ணாஜி தியாகறாச பண்டிதவர்களுக்கு ஸ்ரீசாமிராவ் அப்பா அவர்கள் சமூகத்துக்கு எழுதிக்கொண்டது.**

**ஸ்ரீ மகாராஜா[47] சத்திரபதி சாகேப் அவர்கள் இலாகாவில் அனேகமான தர்மங்களும் தேவாலயங்களும் உண்டு பண்ணி பரிபாலனம் செய்து கொண்டு வருகிறதில் வெகு பிராமணாள் வாச யோக்கியமும்[48] ஆதறணையும்[49] உள்ள தஞ்சாவூர் சமஸ்தானத்தில் மத்திய றாஷ்ட்டறமாயும், பாறியான ஸேது முதலான மார்க்கத்திலிருக்கிற நீடாமங்கலத்துக்குப் பிறதினாம[50] மான யமுனாம்பாள்[51] புரத்தில் சத்திரம் தேவஸ்தானம்[52]**

---

45. 28-9-1850

46. ஜரூர் - அவசரம் அல்லது கவனத்துக்கு

47. மகாராஜா என்றது சிவாஜியை (1832-1855)

48. வாசயோக்கியம் - வசிப்பதற்குத் தகுதி

49. ஆதரணை - ஆதரவு

50. பிரதிநாமம் - மறுபெயர்

51. யமுனாம்பாள் - இவர் பிரதாப சிங்கரின் மூன்றாவது மனைவியாவர் (பக்.271)

52. சந்தான இராமசாமி கோயில் என்று பெயர் (4-35)

முதலான தர்மம் விமரிசையாயும், புறோவிரித்தி[53] யாயும் நடந்துவருகிறத்தில் சிலநாளைக்கு முன் முல்லவாசல்[54] ராமசாமிய்யனுக்கு ஷெ தர்மத்தின் விசாரணைக்காக நேமித்த அவர் வேலை பார்த்ததில் வெகு துரோகங்கள் செய்ததின் பேரில் அவரை நீக்கி வைத்தார்கள். அப்பால் ஒரு மார்க்கமாய் நடந்து வந்தது. மறுபடி சிலநாள் கழித்து மாத்தூர் அய்யாவய்யன என்பவனைக் கமாவிசு[55]வேலையில் நியமித்து வைத்திருக்கிறார்கள். அதில் அவர் தர்மம் என்கிறதும், சர[56] என்கிறதும் எவ்வளவும் மனதில் எண்ணாமல் தன்சொந்த மனவிர்த்தி[57] போல நினைத்து, அனேக தர்மம் துரோகங்களும், பிற..(ம்) துரோகங்களும், ராஜ துரோகங்களும், சிவ துரோகங்களும்[58] பண்ணினதை அரண்மனையார் கேழ்க்கத்? தெரிந்து அவனைத் தள்ளுபடி செய்தார்கள்.

இப்போ ஷெ தர்மத்துக்கு ஆதாரபூர்வமான கிராமங்களின் மிராசுதார்கள் சரிவர நடக்கத் தக்கினவர்கள்[59] அல்ல பொல்லள்[60] செய்யாது சறாகமாயி ஷெ கிராமங்களை இஜாறா[61] செய்ய ஒட்டாமல் அனேக விதமான இடைஞ்சல் செய்து காலாகாலங்களில் மகசூல்களையும், அறுப்பு விடாமல் அறுத்துப்போட்டு, அப்பால் கண்டு மு.வ.கூ ரக ராமய்யங்கார் என்பவனை அனுப்பிவித்ததில் ஏதாவது ஒரு மார்க்கமாகும் காலத்தில் முன்னாலே கமாவிசு வேலைப் பார்த்த தர்மதுரோகியான மேல்கண்ட அய்யாவய்யன் என்பவனையும் கண்டு முதல்[62] எ-க்கு கமுகு போறாது போலவும், அதற்காக அனுப்பியிருக்கிறதாயும், ஷெ இருவர்களையும் வந்திருக்கிறதில் ஷெ அய்யாவய்யன் என்பவனுக்கு முன்போல் கமாவிசு வேலையில் ஸ்தாபித்து வைக்கிறதாய் பதக்கவனீசு[63] அவர்களும் தாங்களும் உறுதி சொல்வி யிருக்கிறதாக ஷெ சத்திரத்தில் இருந்து கொண்டு தர்மத்தை அழிக்கிறதும், சத்திரம் கோவில் ஆள் மாகாணக்காரர்[64] உலுப்பைக்காரர்[65]களுக்கு பயங்காண்பித்து அவர்களைக் கொண்டு,

---

53. புரோவிருத்தி - வளர்ச்சி

54. முல்லவாசல் - திருமுல்லைவாயில்

55. கமாவிசு - சத்திரமேற்பார்வை அதிகாரி

56. சர - நடைபெறுவதாகுக

57. மனவிருத்தி - மனவிருப்பம்

58. சிவ துரோகம் - உயிர்களுக்குக் கேடு பயத்தல்

59. தக்கினவர்கள் - தக்கவர்கள்

60. அல்லபொல்லள் - அல்லதும் பொல்லாததும்; அல்லது - மாறானதும்; பொல்லாதது - தீமையானது

61. இஜாரா செய்ய - குத்தகைக்கு விட

62. கண்டு மு. - கண்டுமுதல் - விளைந்த விளச்சலால் பெற்ற தானியம்

63. பதக்நவீசு - பதக் அல்லது பதக்கம் என்ற ஒன்றியத்தின் மேற்பார்வை அலுவலன்

64. ஆள்மாகாணம் - அலுவலகத்தில் பணிபுரியும் மக்கட்கூட்டம்

65. உலுப்பைக்காரர் - உலுப்பை பெறுபவர்; உலுப்பையாவது சத்திரத்தில் வந்து உண்ணமுடியாதவர்கட்கும், பைராகிகட்கும், மேனிலை அலுவலர்கட்கும் கொடுக்கப்படும் அரிசி முதலியன.

சுயபிரயோஜனத்துக்கு இச்சைப்பட்டு வாங்குறதும், இல்லாதவரையில் அவாளவாளுடைய ஜீவனத்தைத்[66] தள்ளிப் போடுகிறதாயும் சொல்லுகிறதினாலும் ஷெியான் வந்த பிறகு, இரண்டு ஜீவனத்தைத் தள்ளுபடி செய்திருக்கிறதினாலும், ஆவனுக்கிருந்த பதக்கவனீசு அவர்களுடைய பாந்தவ்யத்[67] தினாலேயும், ஒருவேளை தாங்களும் அவருடைய சொல்லைத் தட்டாமல் இந்த கமாவிசு வேலையை ஸ்தாபித்து வைத்தால் ஏழை அனேக குடும்பங்களுக்கு ஜீவனத்துக்கு ஏதுவில்லாமல் போய்விடும் என்கிறதை எண்ணிப் பயந்து அவாளும் ஏதாவது கொடுத்து வருகிறார்கள். இது அல்லாமல் ஏழையாயும், வேறு காலட்சேபத்துக்கு யாதொரு ஆதாரமும் இல்லாதவாளாயும்[68] இருக்கிற சில பிராமணாள் முதலானவர்கள் சத்திரத்தில் சாப்பிட்டுக்கொண்டு வருகிறவர்களைக் குறித்து சாதம் போட வேண்டாம் என்று உத்திரவு கொடுத்திருக்கிறான். ஆனால் தனக்கு ஏதாவது பேர்வழி க-க்கு ஒரு ரூபாய வீதம் செலவுக்குக் கொடுத்தால் சாதம் போடச் சொல்லுகிறதாயும் இருக்கிறது. சுத்த பரதேசியாய் சத்திரத்தில் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறவர்களுக்கு கூட தனக்கு யாதொரு அதிகாரமுமில்லாத காலங்களில் இப்படியான இடைஞ்சல் செய்து, தன்னுடைய சுயபிரயோஜனத்தினாலே, எதிரி ஷெி வைத்திருக்கிறான். ஆனால் ஷெி யிருவர்களும்[69] கண்டு முதலுக்காக வந்ததில் கண்டு முதலைவிட்டு, எல்லா கிராமங்களுக்கும் ஆஜாரான பிறகும், இவ்விடத்தில் இருந்து கொண்டு, அதில் ஷெி அய்யாவய்யன் என்பவன் இவ்விடத்தில் வந்தனாள் முதல் யாதொரு உத்திரவு மன்னியில் நாள் க-க்கு ௬ - உலுப்பை வாங்கிக் கொண்டு வருகிறது தவிர முன்னாலே யிந்த சத்திரத்தில் தானே முக்கியமான பிராமண போஜனம் முதலான செலவுக்கு விடப்பட்ட வலியன பாபத்தியில் தானே மோசம் செய்து ........ காறயோஜறுயபத்தி யிருக்கிறதைத் தங்கள் சித்தத்துக்கு செம்மையாய் விசிதமாயிருக்கிறதை மறுபடியும் அவனை வேலையில் ஒட்டவைக்க வேண்டியதற்காக பதகவனீசு அவர்களை யாதொரு அதிகாரம் கொடாமல் அனுப்பியிருந்த போதிலும், கமாவிசு வேலை முழுமையும் தனக்கு ஸ்தாபித்து விட்டது போல ஷெி அய்யாவய்யன் என்பவன் சன்னதுகள், பத்திரங்கள் கணக்கு முதலான துரோபஸ்துகளுக்கு[70] கையெழுத்து வைத்துக்கொண்டு, கமாவிசு அதிகார முழுமையும், செய்து வருகிறான். நீதி விசாரணையுள்ள தங்களுடைய அதிகார காலத்தில் யாதொரு பாத்தியதை இல்லாத ஷெி அய்யாவய்யன் என்பவன் வந்து மேல்கண்ட விபரங்களான தர்மதுரோகங்கள் பண்ணினதும், இன்னும் பண்ணப்போகிறதுமா யிருக்கிறதை செம்மையாய் விசாரணை செய்யவேணும். இல்லாதவரையில் தர்மங்களும், வெகுஜன பிராமணாளும் மூழ்கிப் போகிறதும தவிரவும் இந்த தர்ம தேவதையான யமுனாம்பாள் பிரத்தியட்ச தேவதையானபடியால் அதன் பலமும் காண்பிவிப்பாள். ஆகையால் தர்மப்பிரபுவான தங்கள் ....... இருவர்களுடைய சமூகத்திலும் விசிதமானால் தர்மத்துக்கும் வெகு ஜனங்கள் ஏழைகளுக்கும் குறைவில்லையென்று எழுதலானேன்.

---

66. ஜீவனம் அலுவல்

67. பாந்தவ்யம் - உறவு

68. இல்லாதவாளாயும் - இல்லாதவர்களாயும்

69. இருவர் - ராமையங்காரும் அய்யாவய்யனும்

70. துரோபஸ்துகள் (?) - ஆவணங்கள்

# ஆவண எண்: 108

ரா.ஸ்ரீ.அயினிசு[71] மகாராஜா[72] சாயேப் அவர்கள் திவானத்துக்கு திருவாதி[73] திவானாவாடா[74] தோட்டம் திம்மதி[75] வகையறாவைச் சேர்ந்த முகாசா[76] திருவிசநல்லூர் பண்டாரவாடை மிராசு[77] சுப்பிரமணியப்பிள்ளை, முருகப்பிள்ளை இருபேரும் மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு எழுதிக் கொண்ட யாதி[78].

ஷெ கிராமம் சம்பா பற்று மாசூல் மார்கழி மாதத்திலும், தை மாதத்திலும் ஷெ ள சேதத்தில் போய் அறுக்கப்பட்ட மாசூல் மாசி மீ ய எ உ வரையில் அறுப்பு அறுக்காததினால் மாசூல்களெல்லாம் வெய்யலால் ரொம்பவும் மக்கிப்போய், முதல் இருக்கிற இடம் கூட தெரியாதபடிக்கி (பகடையும்) நீர்முள்ளியும் மேலாடிப் போயிருப்பதினாலே அரண்மனையார் அவர்கள் ஏழையாகிய எங்கள் பேரில் தயவுசெய்து ஷெ மாசூல் புள்ளி பார்த்து[79] அறுப்பு அறுக்கும்படியாய் உத்திரவு ஆனால் எங்களுக்கு நாளது சாலுக்கு[80] தசுகூலிக்காவது[81] ஏதாவது கொஞ்சம் அயிவேசு மீறலாம்[82]. விதை ஒன்று மட்டுமாவது, பக்கத்தில் வாங்கிக் கொள்ளுகிறோம். பலன் தயார் ஆகி மூன்று மீ ஆகி அந்த வயலில் தானே மடித்துப் போனால் அரண்மனையார் அவர்களுக்கு அது ஒரு ஆதாயம் சிலவு அல்ல. எங்களுக்கு வேறு கெதி மோட்சமின்ன மெந்த விதமும் எங்களுக்கு முறி துகைக்கு[83] அரைத்திட்டம் கூட காணாது போலயிருப்பதினாலே நாங்கள் கையெழுத்து வைக்க தக்கதில்லை. எந்தவிதமும் அரண்மனையார் அவர்கள் தயவுசெய்து, திம்மதி வகையறா

---

71. அயினிசு - Highness; His Highness என்று பிரதாப சிம்மர் காலத்திலிருந்து வெள்ளையர் அடைமொழி கொடுத்துப் பெருமைப்படுத்தி வந்தனர். அங்ஙனமே சரபோஜி காலத்திலும், அவர் மகன் சிவாஜி காலத்திலும் தொடர்ந்து வந்தது (பக்கம் 348-349)

72. மகாராஜா என்றது சரபோஜியின் மகனான சிவாஜியை

73. திருவாதி - திருவையாறு

74. திவான்வாடா - மந்திரியின் மாளிகை

75. திம்மதி - அரசாங்க அலுவலர்

76. முகாசா - உத்தியோகத்தின் பொருட்டு வரியின்றியும் அல்லது வரிகுறைத்தும் கொடுக்கப்படும் நிலம்

77. மிராசு - நிலம் அல்லது அலுவல் இவற்றுக்குப் பரம்பரையாய் வரும் உரிமை

78. யாதி - மனுபட்டியல்

79. புள்ளியார்த்தல் - அறுவடைக்கு முன் வயலின் விளைவை மதிப்பிடுதல்

80. சால் - விதை விதைப்பதற்கு

81. தசகூலி - பயிரிடுவதற்கு நில உரிமையாளர்கள் கொடுக்கும் கடன்

82. அயிவோசுமீறலாம் - பொருள் மீதியாகலாம் (அயிவோசு - அயிவேஜி - பொருள்)

83. முறிதுகைக்கு - முறித்தொகைக்கு - உடன்படிக்கைச் சீட்டில் கண்ட தொகைக்கு

மத்தியஸ்தர் அவர்களுக்கு உத்திரவாகி புள்ளிபார்த்து கண்டுமுதல் செய்ய வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

கீலக[84] ௵
மாசி மீ ௰௭ உ

## ஆவண எண்: 109

ஸ்ரீ மகாராஜா[85] சாயேபு அவர்கள் உசூர் சன்னிதானத்துக்கு முத்திரித சபையின்[86] பறபவா ௵ த்திய - உ ள ௰ எ -ம் லெக்கத்தின்[87] முதல் பிரதிவாதி மாறிய பிள்ளை தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்:- முன் இலாகா சாராயக்குத்தலைக்காரர்களாகிய நான் உள்பட ஆறுபேரும், சுபகிருது[88] ௵த்தில் செய்து கொண்ட உடன்படிக்கை போது கட்டி வைத்து யிருக்கிறதைத் தரவேணுமென்று செய்துயிருக்கிற ஷெ ௵த்திய- உ ள அ ௰ அ -[89] லக்கத்தின் பிறாதுக்கு பிரதிவாதியாகியும் ரூ. ரு ள வரவேணுமென்று ஷெ உ ள ௰ எ -ம் லக்கத்தில் ஷெ சாராயக் குத்தகைக்காரர்களில் நான் உள்பட நாலு பேர்கள் பிராதுசெய்த வாதி சுப்பபிள்ளைக்கி ஷெ லக்கத்தில் ஷெ வாதி ஒப்புக்கொண்டு யிருக்கிறபடி வளர்த்த தகப்பனாரான முத்திரித சபையின் உபதிஷ்ட[90] ராமசாமி அப்பா அபோத கல்ப்பனையாய் (அமோககற்பனையாய்) ஏழையாகிய னான் குடும்பத்துடனே மூழ்கிப் போகும்படி ஷெ வாதியைக் கொண்டு சுத்தப்பிரட்டாய் எங்கள் பேரில் ரூ-ரு ள -[91] வரவேணுமென்று பிராது செய்வித்து, அதிகார பலத்தினால் செய்து வருகிற விஸ்தாரமான மோசடியின் அடியில்கண்டு எழுதுகிற சுருக்கங்களை சத்திரபதி ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் மனசுக்கு வாங்கி, இரக்கம் வைத்து, நியாயமாய் காப்பாற்ற வேணுமென்பதாகவும், மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகின்றேன். ஷெ ராமசாமி அப்பா ஷெ சுப்பபிள்ளையைக் கொண்டு ரூ-ரு ள -க்காக செய்த பிராதில் ஏதோ அபாண்ட கற்பனையாய் நான் உள்படக் குத்தகைக்காரர்கள் அனைவரும் ஷெ சாராயக் குத்தகை வாங்கின முன்னுக்கு செய்து கொண்ட உடன்படிக்கையில், நிஷ்கரணமாய் ஷெ சுப்பப்பிள்ளைக்கு நாங்கள் ஆறுபேரும் ஒரு கூட்டு கொடுக்கிறதாகப் பேசி அதை அவன் பேரால் அந்த உடன்படிக்கையில் கண்டு எழுதாமல்

---

84. கீலக - ஆண்டறுபதனுள் 42 ஆவது; கி.பி.1849 ஆகலாம்

85. மகாராஜா என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜி

86. முத்திரித சபை - சரபோஜி காலத்திலிருந்து தஞ்சையிலிருந்த நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று. இச்சபையில் சிறிய வழக்குகள் விசாரிக்கப் பெறும்; பெரும்பாலான வழக்குகள் முதன் முதல் இச்சபையில் தான் அனுமதிக்கப்பெறும் (பக்.167–169)

87. 217 ஆம் எண்

88. சுபகிருது - ஆண்டறுபதனுள் 36 ஆவது

89. 288

90. உபதிஷ்ட - (உபதிருஷ்டா) புரோகிதர்

91. 500

அவன் கூட்டையும் சேர்த்து ஏதோ என் பேருக்கு இரண்டு கூட்டென்று ஷை உடன்படிக்கையில் எழுதி, அதில் ஷை சுப்பபிள்ளை தவிர குத்தகைக்காரர்கள் ஆறுபேரும் கையெழுத்தான பிறகு, அவன் கூட்டுக்காக ஏதோ என்னிடமாயிருந்து- உ ள [92] - உடன்படிக்கை பற்றிக் கொண்ட துகை தப்பிப் போயிருக்கிறதாகவும், ஆனால் அவன் கூட்டுக்காக குத்தகைக்காரர்களனைவரும் அவனுக்கு சிலதுகை கொடுத்து இருக்கிறது போக உத்தேசம் ரூ- ரு ள -னான் உள்பட நாலுபேர்களிடத்திலிருந்து வாங்கித்தர வேணுமென்று செய்த பிராதுக்காக எங்களை வாக்குமூலம் கொடுக்கும்படியாக சபையார் போட்ட நோட்டீசின் பேரில் இலாகாவைச் சேர்ந்த சாராயக் குத்தகை ஒப்புக்கொள்ள வேண்டியதைப் பற்றி நானும் மொட்டைப் படையாச்சியும், சர்க்கார் விளம்பரம் போட்டதின் பேரில் ஒழுங்குப்படிக்கி அதற்கு முன்னிருந்த குத்தகைத் துகைக்குச் சாஸ்தியாய் துகை ஒப்புக் கொள்ளுகிறதாய் கோரி கொடுத்த எங்கள் யாதிக்காக சர்க்கார் வழக்கப்படி நாங்கள் கோரின துகைக்கு சாஸ்தியாய் ஒருவரும் கோரிக் கொள்ளாததினால், எங்கள் யிருவர்கள் யிடத்திலும் முன் குத்தகைக்காரர்களாயிருந்த அங்கண்ண னாயக்கன் க-கணபதியாப்பிள்ளை-க-இவர்களையும் சேர்த்து ஆக எங்கள் நாலு பேர்களிடத்திலிருந்து சர்க்கார் அத்தாட்சி முச்சலிக்கா [93] வாங்கிக் கொண்டு ஷை எங்கள் நாலுபேர்கள் பேருக்கும், குத்தகைக்காரார் செய்ததின் பேரில் ஷை நாங்கள் நாலுபேரும் வழக்கப்படி டேவணி [94] செலுத்தி முதல் வைத்து துகை கிரமப்படி நான் அதிக முதல் வைத்தத்துக்காக எனக்கு இரண்டு கூட்டும், மற்ற மூன்று பேருக்கும் பேர்வழி க-க்கு ஒரு கூட்டாகவும் பேசித் தீர்மானித்துக் கொண்டதில் அங்கண்ண னாயக்கன் கணபதியாப்பிள்ளை இருவரும் அவர்கள் கூட்டுக்குள் போகல் கூட்டாய் சேர்த்த முத்தி வீறுபிள்ளை-க-திருமலை னாயக்கன்-க-ஆகயிந்த ஆறு பேரும் செய்து கொண்ட உடன்படிக்கையில் ஷைஆறு பேர்களைத் தவிர போகல் கூட்டாய்ச் சேர்த்துக் கொள்ளக்கூடாதென்றும், விபரம் கண்டு அதில் ஷை ஆறு பேரும் கையெழுத்து வைத்து சாட்சிக்கு ஷை சுப்பபிள்ளை-க சுப்பறாமய்யனும், சாட்சியும் போட்டு ஷை உடன்படிக்கையை நாங்களாறு பேரும் வந்து கேட்டால் கொடுக்கிறது என்று நம்பிக்கையாய் ஷை ராமசாமி அப்பாவிடத்தில் ஷை குத்தகைக்காரர் ஆறு பேருமாய் போருக்கட்டி [95] வைத்திருக்கிறதை ஷையார் கொடுக்காமல் யிருந்ததைக் குறித்து, அவர் பேரில் பிராது செய்து, ஷை உடன்படிக்கையை வாங்கி விபரம் பார்த்து, வாக்குமூலம் கொடுக்க வேண்டியதாயிருக்கிறதாயும், ஷை சுப்பப்பிள்ளை ஷை குத்தகைக்காக எங்களுக்கு கூட்டாளி அல்லவென்றும், அவன்கோருகிற துகை கொடுக்கத் தக்கதல்ல என்றும், நாங்கள் மனு கொடுத்தப்படி ஷை உடன்படிக்கையைப் பற்றி ஷை ராமசாமி அப்பா பேரில் நாங்கள் பிராது செய்து நாலு மாசத்தைக்கு முன்னமே விசாரணை முடிவாயிருக்கிறதில் நான் பூர்த்தியாய் ருசுப்படுத்தி வைத்திருக்கிறபடி தீர்ப்பு செய்கிறதாவது. அல்லது எங்கள்.........ஷை உடன்படிக்கை எங்களுக்கு வாசித்துக்

---

92. 200

93. அத்தாட்சிமுச்சலிக்கா - சாமீன் பத்திரம்

94. டேவணி - முன்பணம்

95. போருக்கட்டி - பொறுப்புக்கட்டி

காண்பிக்கிறதாவது செய்யாமல் ஷை சபைகளில் (உபரி)ஷ்ட அதிகாரஸ்த்தரான ஷை ராமசாமி அப்பாவின் தாட்சண்ணியத்துக்கு உள்ப்பட்டு யாதொரு சுச்சமல்லது பயமன்னியிலே[96] ஷை ராமசாமி அப்பா சபாசதாள்[97] அனைவர்களுக்கும் சூ அ ள சுய் அ ஷூ சூலை மீ ய் உ[98]யில் நான் சமூகத்துக்கு கொடுத்திருக்கிற மனுவில் கண்டு இருக்கிறபடினயமும்[99] பயமும் காண்பிக்கிறதினால் ஙூ ய்[100] நயந்தும், பயந்து மிருக்கிற சபாசதாள் அவர் தாட்சண்ணியத்துக்கு உட்ப்பட்டு யிருக்கிறதின் பேரில் ஷை ராமசாமி அப்பா ஷை உ ள ய் எ-ம் லக்கத்தின்[101] வாதியினிடமாயிருந்து பிரதிக்கினை[102] வாங்க வேணுமென்று சொல்லி, ஷைசபையிலிருக்கிற ஒவ்வொரு சறப்பயாள்[103] இடத்திலிருந்து அவ்விடத்து, சபாவணிசுகள்[104] யிடத்திலிருந்தும், லாயர்களி[105]டத்திலிருந்தும் ஷைநம்பருக்கு விரோத கற்பனையாய் பிரதிக்கினை தயார் செய்து, நான் வாங்கிச் கொள்ளுகிறதும், கேட்டுக் கொள்ளுகிறதும் அதில் சிலர்கள் பிரதிக்கினைக்கு யோக்கியமில்லாத தள்ளுபடி செய்யும்படியான வியாச்சியமென்று சொன்னால் அவர்கள் ஏதாகிலும் குற்றம் சாட்டி ஜீவனம் யெடுத்து விடுகிறதாகவும்,[106] மற்ற யிடங்களில் மாற்றிவிடுகிறதாகப் பயமுறுத்துகிறதும் இவ்விதமான ஷை ராமசாமி அப்பாவின் செய்கைக்காகப் பயந்து, அதில் சிலர்கள் சுத்தப்பிரட்டாயும், கட்டுப் பாடாயும், பிறருக்கு முழு விரோதமாயும் தயார் பண்ணி வாதி (நியுறன) பேருக்கு எழுதி வைத்து யிருக்கிற பிரதிக்கினையில் குத்தகைக்காரர்களாகிய நாங்கள் ஷை குத்தகை ஒப்புக்கொள்ளுமுன்னுக்கு வைத்து, சோற்றுக்கு ஊழிய வேலை செய்து கொண்டு யிருக்கப்பட்ட வாதியினிடம் நாங்கள் போய் அனுசரித்து ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்களாலேதான் கொடுக்கும்படியான குத்தகையை யாதொரு அதிகாரமும் சம்பந்தமு மில்லாததா யிருந்த ஷை ராமசாமி அப்பா வாதி சொல்லி ஷை ராமசாமி அப்பா ஷை குத்தகை எங்கள் பேரால் செய்தால் அதை பிரதிலெக்ஷமாக.........அல்லது விலையாகவோ தெரியவில்லை. ஷை குத்தகையில் யிந்த வாதிக்கு ஏதோ ஒரு கூட்டு கொடுக்கிறதாக நாங்கள் பேசி யிருந்ததாக ஷை குத்தகை போது உடன்படிக்கையில் வாதி பெயரையும், கண்டு, என் பங்குடன் இரண்டு பங்கு கண்டு எழுதியிருக்கிறதாய் சொல்லுகிறதுந்தவிர, யிந்த வாதிக்கு

96. அன்னியிலே - இல்லாமல்

97. சபாசதாள் - சபைக்குரியவர்கள்

98. 10-7-1848

99. எயமும் - நயமும் - நல்ல வார்த்தையினாலே

100. 30

101. 217ஆம் எண்ணின்

102. பிரதிக்கினை - சம்மதம்

103. சறப்பயாள் - அலுவலர்

104. சபாவணிசுகள் - சப்நவீஸ்

105. லாயர்கள் - Lawyers (வக்கீல்கள்)

106. வேலையிலிருந்து நீக்கிவிடுவது

னான் ஏதோ உள் உடன்படிக்கை எழுதிக் கொடுத்து யிருந்ததாகவும், அது கை தப்பிப் போயிருக்கிறதாகவும் ஷெ குத்தகைப் பொது கணக்கில் வாதி பெயருக்கு பத்தெழுதி சிலபணம் குத்தகைக்காரர்கள் அனைவரும் கொடுத்து வந்ததாகவும், பாக்கி உத்தேசம் - ரூ. ரு ள-என்னிடம் வாங்கித்தர வேணுமென்று ஷெபிராதுக்கு முழு விரோதமாய் பிரதிக்கினை எழுதி வைத்ததைப் பற்றி உத்திரப்பத்திரம்[107] கொடுக்கும்படியாகச் சபையார் போட்ட நோட்டீசுக்கு[108] நான் எழுதிவைத்துயிருக்கிற உத்திரப் பத்திரத்தில் ஷெகுத்தகை சுதா[109] விலாவது அல்லது யாரைக் கொண்டாவது செய்து கொடுக்கும் வல்லமை வேலைக்காரனாயிருந்து ஷெ ராமசாமி அப்பாவினால் அன்றைய தினம் வாங்கிக் கொண்டு (நாளது) தேதி வரையிலும் நாள் தள்ளிக்கொண்டு வருகிற யிந்த பாதிக்கு இருக்குமென்று எண்ணி ஷெ யானை, நாங்கள் அனுசரித்து ஷெ குத்தகையில் கூட்டு போட்டு கொடுக்கிறதாக சொல்லுவது..........சித்தமா யிருக்கிறது என்றும், ஷெ வாதியின் சொல்லும்பேரில் ஷெ ராமசாமி அப்பா ஷெ குத்தகை செய்து கொடுத்ததாகச் சொல்லுவது பிறட்டு யென்பதற்கு ஸ்ரீ மகாராஜா சாயெப் அவர்களாலே தான் செய்து கொடுக்க வேண்டியதாயிருக்கிறதே தவிர ஷெ குத்தகை கொடுக்கிறதைப்பற்றி யாதொரு சம்பந்தமும், பாத்தியதையு மில்லாத ஷெ ராமசாமி அப்பா செய்து கொடுத்ததாக சொல்லுவது பிறட்டு என்பதற்கு சர்க்காரரே பூர்த்தியாய் ருசுவாயிருக்கிறார்களென்றும், அப்படிக்கி வாதியே எங்களுக்கு குத்தகை செய்து கொடுத்ததாய் சொல்லுகிறானே தவிர, வேறு விதமாய்த்தான் முதல் வைத்தவனாகவாவது குத்தகை சேர்ந்த காரியங்களில் பாடுபட்டவனாகவாவது, சொல்லாதவனா யிருக்கிறதினாலும், ஷெ யான் பிராது வாக்குமூலத்தில் ஷெ உடன்படிக்கையில் அவனுக்கு ஒரு கூட்டு உண்டு என்று எழுதி யிருக்கிறதினாலும் மேல்கண்டபடி அவனுக்கு குத்தகைக்காரர்களாகிய நாங்கள் ஒரு கூட்டு போட்டுக் கொடுத்ததாகச் சொல்லு(வது) பொய் யென்பத்து(க்கு) மேல்கண்ட அவன் பிராது முதலான நியாயமே போதுமான ருசுவென்றும், குத்தகைக்காரர்களாகிய நாங்கள் அனைவரும் தன்னிடத்தில் சிலபணம் கொடுத்து யிருக்கிறதாக சொல்லுகிற ஷெ வாதியே அவன் கூட்டுக்காக நான் ஒரு உள் உடன்படிக்கை செய்து கொடுத்ததாகவும் சொல்லுவதினால் அப்படிக்கி அனைவரும் கூட்டுப் போட்டுக் கொடுத்து பணம் செலுத்தினது நிஜமானால் நான் ஷெயானுக்கு உள் உடம்படிக்கை எழுதிக் கொடுத்ததாகச் சொல்லுவதும் ஏதோ பாக்கித்துகை நான் கொடுக்க வேணுமென்று சொல்லுவது பொய் என்றும், ஒருபோதும் செல்லாதென்றும் ஸ்தாபிக்க வேண்டியதா யிருக்கிறதும் தவிர, அப்படிக்கி நானே உள் உடன்படிக்கை எழுதிக்கொடுத்திருந்து பாக்கி பணத்தை நானே கொடுக்க வேண்டியதா யிருந்தால் அனைவருமாய் வாதிக்கு கூட்டுப் போட்டுக் கொடுக்கவும், அனைவரும் சிலபணம் செலுத்தவும், பொது கணக்கில் ஷெ வாதிக்கு பத்தெழுதவும்[110] ஆஷ்பத[111]

107. உத்திரப்பத்திரம் - பதில் அறிக்கை

108. நோட்டீசு - (Notice) - அறிவிப்பு

109. சுதாவில் - தானாக; நேரில்

110. பத்தெழுதவும் - பற்று எழுதவும் (பற்று - வரவு)

111. ஆஷ்பதம் - ஆஸ்பதம் - இடம்; ஆதாரம்

மில்லாததாயிருக்கிறத்தினாலும்[112] ஷெ யானுக்கு ஷெ குத்தகையில் ஒரு கூட்டு உனக்கு என்பதும், அதுக்காக நான் பணங்கொடுக்க வேணுமென்று சொல்லுவதும், ஒருபோதும் செல்லாத பிரட்டு என்பதற்கு அவனுடைய மேல்கண்ட விதமான தட்டுகெட்டா[113] யிட்டுக்கட்டின[114] முகாந்திரம்[115] போதுமான ருசுவாயிருக்கிற தென்றும் ஆகையால் ஷெ வாதிக்கி ஒரு காசளவில் னான் கொடுக்க வேண்டியதில்லை என்று கண்டு எழுதிக் கொடுத்திருக்கிறதினாலேயும், ஷெ சபையார் போய் (பொய்) பிராது செய்த வாதியை அதட்டித் தெண்டித்து, அவன் பிராதை மித்தியாபியோக[116] மென்று தள்ளுபடி செய்ய வேண்டியதைச் செய்யாமல் ஏதோ குருடான கபடு யோசனையினால் என்னை மோசப்படுத்த வேணுமென்கிற, அபிப்பிராயத்தோடே வாதியினிடம் பிரமாணப்பத்திரம் வாங்கி, அவரைப் பக்கமான பத்துக் கட்டாய்[117] ஏற்படுத்தின பொய் சாட்சிகளின் விசாரணையும் செய்து இருக்கிறார்கள். அந்த சாட்சியினுடைய வாக்கு மூலங்களைக் கவனித்துப் பார்த்தால் உபயோகமற்ற பொய்சாட்சிகளென்பது தெரியும்படியாயிருக்கிறது மல்லாமல் யிந்த மனுவில் நான் மேல்க்கண்டுஎழுதிய நியாய ருசு முதலானதஸ்த்தா[118] விஷயங்களும் தாக்கலான காரணங்களினாலே வாதிபிராது சுத்தப்பிறட்டு யென்று, ஷெ ராமசாமி அப்பாவின் ஒத்தாசையினால் எனக்கு நேரிட்ட இம்சை[119] மோசடியென்று, அதைப்பற்றிச் சொல்வி யிருக்கிற சாட்சிக்காரர்கள் கூட்டு சாட்சிகளென்று விகிதமாயிரு யிட்டுத் தர்மமான ஸ்ரீ.மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்கள் ஏழையாகிய என்பேரில் இரக்கம் வைத்து, வாதி எங்கள் பேரில் செய்து யிருக்கிற பிராதின் அடுக்குகளையும், நாங்கள் ஷெ ராமசாமி அப்பா பேரில் செய்து இருக்கிற பிராது கொடுக்கிறதாயும் சன்னிதானத்தில் வரவழைத்துக் காற்பாற் பிரசங்கத்தில்[120] நாலு சபையார்களை[121] யும் வரவழைத்துக் கொண்டு யுக்தமாய்த் தோணுகிறபடி கார்பாற் பிரசங்கத்தார் தீர்ப்பு செய்கிறதாவது அல்லது ஷெ இரண்டு நம்பருக்காக மேல்க்கண்ட விதமான எனக்கு எதிரியான ஷெ ராமசாமி அப்பா ஷெ முத்திரித சபையில் மேலான அதிகாரியானதினால், அவ்விடத்தில் இருக்கிற சற்பயாள்[122] அனைவரும் அவருடைய தாட்சண்ணியத்துக்கு உட்ப்படாமல் நியாயமாகியும்,

---

112. இருக்கிறதினாலும்

113. தட்டுக்கெட்டாய் - தாறுமாறாக

114. இட்டுக்கட்டின - இல்லாததை ஏற்றுச்சொல்லிய

115. முகாந்திரம் - விஷயம்

116. மித்தியை - பொய்; அபியோகம் (?)

117. பத்துக்கட்டு - குடியானவன் சாகுபடி செய்யும் நிலம்

118. தஸ்த்தா - காகிதங்களின் தொகுதி

119. இம்சை - தொல்லை

120. கார்பார் பிரசங்கம் - சர்க்கேல் அலுவலகம் (பக்.168)

121. நாலுசபைகள் - முத்திரித சபை, தருமசபை, நியாயசபை, நியாயாதீச சபை (பக்கம் 167)

122. சற்பயாள் - அலுவலர்

சத்தியமாகியும் தீர்ப்பு செய்கிறது என்பதைப் பற்றி ஷெ சபையின் சற்பயாள் அனைவரிடத்திலும் உறுதி கேட்டுக் கொள்ளும்படியாயாவது ஸ்ரீ சர்க்கீல் பண்டிதர்[123] அவர்களுக்கு உத்திரவு கொடுத்து, ரெட்சிக்காவிட்டால் நான் பிள்ளைக்குட்டி முதலானதுடன் ஏழை மூழ்கிப் போறதாயிருக்கிறபடியால், யிந்த மனுவுக்கு நியாயமான உத்திரவு கொடுத்து காப்பாற்ற வேணுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தூ அ ள சயி கூ ௵ மாறியப்ப பிள்ளை
ஜனவரி மீ உ ய ௩ ௳[124]

## ஆவண எண்: 110

ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் திவானத்துக்கு

சில்லாவிலிருந்து யிந்த தஞ்சை நகரம் கருந்திட்டாங்குடியில் கல்லுக்காரத் தெருவில் ராமானுச மடத்தில் வந்திறங்கி இருக்கும் நம்மய்யா ஆழ்வான் தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்.

நெல்லூர் ஜில்லாவில் மேசறடானா[125] துரையவர்கள் ஷெ யூரில் கமானாப்பிசறா[126] யிருக்கையில் அவருக்குள் நான் முப்பத்திரெண்டு[127] வருஷ காலமா நான் பொட்டுலர்[128] (பட்லர்) உத்தியோகம் செய்து கொண்டிருக்கையில் அபிநீசு[129] சரபோஜி மகாராஜா சாயேபு அவர்கள் காசி யாத்திரைக்கு[130] வந்த பின்னும் ஷெ கமானாயாசரை[131] வந்து கண்டு முன்னுக்கு னான் ஷெ மகாராஜா சாயேபு அவர்கள் பாதாரவிந்தத்துக்கு[132] ஏற்க நடந்து கொண்டதற்காக எனக்கு? ஆபீசருமிறந்து போனார். அதன் பிறகு நானும் பிள்ளைக்குட்டிகளுடனே வெளியில் புறப்பட்டுக், குதிரை யின் பேரில் கண்டாளமும்[133]

---

123. சர்க்கீல் பண்டிதர் - ஸ்ரீ அண்ணாஜி தியாகராஜ பண்டிதர்

124. 23.1.1849

125. மேசறடானா - Major Tone

126. கமானாப்பிசறாய் - Commanding Officer ஆய்

127. முப்பத்திரண்டு

128. பொட்டுலர் - Butler - பணியாள்

129. அபிநீசு - Highness (பக்கம் 348-349)

130. சரபோஜி கி.பி.1820இல் காசிக்குப் புறப்பட்டு 1822 ஏப்ரல் திங்களில் தஞ்சைக்குத் திரும்பினார் (பக்கம் 100-106)

131. கமானாயாசர் - Commanding Officer

132. பாதாரவிந்தம் - திருவடித்தாமரை

133. கண்டாளம் - எருத்தின் மேலிடும் பொதி

போட்டுக் கொண்டு, ராமேஸ்வர யாத்திரை பண்ணி நூற்றெட்டுத் திருப்பதி[134] யும் சேவித்துக் கொண்டு வருகிறதற்காக வரும்போது ஷெ கண்டாளம் போட்டுக் கொண்டு வந்த குதிரை சென்னப்பட்டணத்துக்கிப்பால் ஷெ குதிரை இறந்து போய் விட்டது. அப்பால் ஷெ கண்டாள மானங்களை[135] எல்லாம் ஆளின் பேரில் மூட்டையாய் செய்து வைத்துக் கொண்டு வருகையில் ஷெ பாட்டை மார்க்கத்தில் ஷெ மூட்டை யுடனே ஷெ ஆளும் திருடிக் கொண்டு ஓடிப் போய் விட்டான். அப்பால் னான் அட்சய பாத்திரம்[136] செய்து கொண்டு மகாராச சத்திரபதி சாயேப் அவர்களுடைய பாதார விந்தத்தில் வந்து, சேர்ந்திருக்கிறேன். என்னுடைய பாரியாளு[137] மிப்போது ஆறுமாதம் கெர்ப்பஸ்திரியா யிருக்கிறாள். நானானால் ராமேஸ்வர யாத்திரை போய் நூத்தெட்டுத் திருப்பதியும் சேவித்துக் கொண்டு மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்களுக்கு தீர்க்காயுசும், புத்திர சந்தானமும்,[138] பூமி உள்ளவரைக்கும், தங்களுடைய வம்சமுமிருந்து வரும்படியாயும், தீர்த்த யாத்திரைக்குப்[139] போகிறபடியினாலே ஷெ தீர்த்த யாத்திரை பண்ணி, என்னூருக்குப் போய் நான் சேருகிற வரைக்கும், எனக்கு அன்னம் ......... கொடுத்து ரெட்சிக்கும் படியாய் உத்திரவாக வேணுமென்றும், தெண்டனிட்டுக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரு அ ள ச யி கூ[140] ஞு
சூலை மீ ம் ௰ ச உ

## ஆவண எண்: 111

ஸ்ரீ மகாராஜா[141] சயேப் அவர்கள் திவானத்துக்கு[142] கும்பகோணம் தாலுக்கா பாபுராஜபுரத்தி விருக்கும் ரங்கனாதய்யங்கார் குமாரன் கிருஷ்ணய்யங்கார் எழுதிக்கொண்ட மனு என்னவென்றால்:-

எனக்கும் என் தகப்பனுக்கும் சமாதானப்படாமல் நாலாம் என்பவன் அவளுடைய தமயன் வகையறா பேர்களுடன் அவர் கும்பகோணத்திலும் என் சம்சாரத்துடன் நான் ஷெ

134. நூற்றெட்டுத் திருப்பதிகள் (திருநாடு 1; வடநாடு 12; தொண்டை நாடு 22; சோழநாடு 40; பாண்டியநாடு 18; மலைநாடு 15; (அபிதான சிந்தாமணி பக்கம் 1558-1564 / பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் எழுதிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி காண்க)

135. கண்டாளமானங்கள் - குதிரைமேல் ஏற்றிய சுமை

136. அட்சயபாத்திரம் - பிச்சையெடுக்கும் பாத்திரம்

137. பாரியாள் - மனைவி

138. புத்திரசந்தானம் - ஆண்மக்கட்பேறு

139. தீர்த்தயாத்திரை - புண்ணிய தீர்த்தங்களில் நீராடப் பயணம் செல்லுதல்

140. 14-7-1849

141. மகாராஜா என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

142. திவானத்துக்கு - திருமுன்னிலைக்கு

பாபுராஜபுரம் கிராமத்திலும் இருந்தோம். இப்படியிருக்க என் தகப்பனாருக்கு போன மார்கழி மீ"த்தில் அதிக உபத்திரவத்தினால்[143] பிரக்கினை[144] யில்லாமல் வாயடைச்சுப் போயிருந்த சமயத்தில் அவருடைய மச்சினன் ஷெ அப்பனைய்யங்கார் வகையறா பேர்களை ரூ கூ ள சூ ய உ [145] பொறுமானமா (னமுள்ள கல்) இழைத்த நகைகளையும் சில தஸ்தாவேசுகளையும் மோசடியாய் கைவசப்படுத்திக் கொண்டு, போய்விட்டது மல்லாமல் தஞ்சை நகரம் கோட்டை வெளியிலிருக்கிற கிரைக் கொல்லை சருவமான்னிய தோட்டங்களை விற்று அயிவேஜையும்[146] கைப்பற்றிக் கொள்ள வேணுமென்று நினைத்து என் தகப்பனிடத்தில் கல்ப்பிவித்துக் கொண்டு அரண்மனையில் வந்து தெரியப் படுத்தினதின் பேரில் அந்தப்படி சரிதானா என்று என் தகப்பனாரையும், என்னையும் கேட்டு வரச்சொல்லி, அரண்மவனயார் மனுஷர்களை அனுப்பி வைத்து, அவர்கள் வந்து என் தகப்பன் பிரதிக்கியை யன்னியில்[147], அத்தியாவசான காலமாய்[148] இருந்ததையும் பார்த்துப் போட்டு என்னையும் கேட்டார்கள்.

ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் என் பாட்டனார் ராமனுஜ அய்யங்காரை வைத்து நடப்பிவித்த பிரகாரம் ஸ்ரீமந்த் ஸ்ரீ மகாராஜா சத்திரபதி சாகேப் அவர்களும் என்னையும் நடப்பிவிக்க வேணுமென்று னான் கேட்டுக் கொண்டேன். அப்படி நிலம் விற்க சம்மதமில்லை யென்று நான் சொன்னதையும், அவர்கள் சமூகத்தில் தெரியப்படுத்தி யிருக்கிறார்களே .இப்படி யிருக்க என் தகப்பனார் ஷெ தோட்டங்களில் சிலதை[149] தன் தங்கை முதலானவர்களுக்கு ஆதரவு செய்து கொடுத்தது போல ஷெ அப்பனையங்காற் சில பெறட்டாதிறவுகளை[150] செய்து கொண்டிருக்கிறதாய் கேள்விப்பட்டு மேல்க்கண்டபடி அவன் செய்திருக்கிற பெறட்டு நடவடிக்கைகளைக் குறித்து தாலுக்காவில் ஷெ வகையறா பேரில் மேஜிஸ்டிரேட்டில்[151] பிராது செய்து விசாரணை நடந்து வருகிறது. ஷெ அப்பனையங்கார் முதலானவர்கள் செய்து கொண்டிருக்கிற தப்பாதிரவுகள் குறித்து, யிந்த தஞ்சை நகரத்தில் கூட சில பிரட்டுகள் பண்ண எத்தனப்படுகிறதாய் கேள்விப்படுகிறது மன்னியில் இன்னும் சில பிரட்டாதிரவு செய்திருக்கிற தாயும் கேள்விப்படுகிறேன். ஷெ

---

143. உபத்திரவத்தினால் - நோயினால்

144. பிரக்கினை - உணர்ச்சி

145. ரூ.662/-

146. அய்வேஜி - தொகை

147. பிரதிக்கியையன்னியில் - உணர்ச்சியின்றி

148. அத்தியாவசானகாலம் - நெடுங்காலம்

149. சிலதை - சிலவற்றை

150. பெறட்டாதிறவுகள் - புரட்டு ஆதரவுகள் - பொய்யான பத்திரங்கள்

151. மேஜிஸ்டிரேட் – Magistrate (குற்றவியல் வழக்கு விசாரணை செய்பவர்)

வாதியள்[152] யாவத்தும் என் பாட்டனார் சம்பாதித்தது. அதுகளை[153] தர்ம சாஸ்திரப்படிக்கும், சட்டப்படிக்கும் என் தகப்பனார் என் அனுமதி யன்னியில் அவருடைய அபிப்பிராயப்படி செய்ய யாதொரு பாத்திய[154] மில்லாதவரா யிருந்த போதிலும் அரண்மனை மனுஷாள் வந்து பார்த்த அன்றையத் தினம் சாயந்தரமே அவர் தெய்வ கெதியா (ய்ப்)[155] ........ போயிருக்க அவர் செய்து கொடுத்தது போல கற்பித்துக் கொண்டிருக்கிற பிராட்டாதிரவைப் பற்றி, அவ்விடத்தில் யாரையாவது ஷெ யார்கள் மோசம் செய்ய வந்தாலாவது, பிரட்டான ஆதிரவுகளாவது பண்ணவாவது வந்தால் அவர்களுக்கு அரண்மனையில் முத்திரைக் கடுதாசி முதலானதுகள்[156] கொடாமலிருக்கும் படியாய் ரொம்பவும் ஸ்ரீமந்து மகாராஜா சாகேப் அவர்களுடைய தருமபரிபாலனமான பிரார்த்தித்துக்கேட்டுக் கொள்ளுகிறேன். வேணும்.

சூ அ ள சுயி கூ ஞு[157] வேணும்
மார்ச்சு மீ கிருஷ்ணய்யங்கார்

## ஆவண எண்: 112

பிரியமுள்ள கனம் பொருந்திய அய்யாவே, மகாராஜா உத்திரவு செய்தபடி

புதிதாய்க்கட்டின நூயி ருபுஸ்த்தகமும் சீமையில் கட்டின புத்தகம் சஆகபுத்தகம் நூயி கூ[158] பங்குனி மீ சுஉ வெள்ளிக்கிழமை சாயங்காலம் தாசு[159] யி க ரு[160]க்கு அனுப்பப்பட்டது. வந்து சேர்ந்தவுடனே உஜூர் சன்னிதானத்தில் செலுத்தப்பிரார்த்திக்கிறேன். புத்தகங்கள் அடக்கஞ் செய்து வருகிற தோல்பட்டி—க. பெட்டிக்குள் புத்தகத்தின் மெதுவுக்காக விரித்திருக்கிற துப்பட்டி - க.பெட்டிக்கு மேல் ரெட்டு கலோப்பு[161] மெழுகு சீலை கலேப்பு - க. அதன்மேல் கருப்பு கித்தானால் மடித்துத் தைத்திருக்கிறது - க ; காறணி-உ வாரை-க.[162] ஆக உருப்படி-அ கவாசு வசம் காகிதம்-க- பெட்டியின் திறவுகோல்-க. இதுகள் வரப்பார்த்துக் கொள்ள வேண்டியது.

152. வாதியள்யாவத்தும் - பொருள்கள் எல்லாமும்

153. அதுகளை - அவற்றை

154. பாத்தியம் - உரிமை

155. தெய்வகதியாய் - இறந்து

156. முதலானதுகள் - முதலியவற்றை

157. 1849ஆம் வருஷம்

158. 39

159. தாசு - 2 1/2 நாழிகை கொண்ட ஒருமணி நேரம்

160. 11 1/2

161. ரெட்டு - கனமான; கலோப்பு (?)

162. வாரை - மூங்கில் (?)

பங்குனி மீ சா உ வாஞ்சிலிங்கம் பிள்ளை
வெள்ளிக்கிழமை
ராத்திரி தாசு உ[163]

## ஆவண எண்: 113

மத்தியஸ்தம் /ஈ/ பிள்ளையவர்கள் அய்யாக்கண்ணுப் பிள்ளையவர்கள் சமுகேஷபத்துக்கு[164] தேவஸ்தானம் சறாப்பு[165] னாயனா எழுதிக் கொண்டது என்னவென்றால், தேவஸ்தானம் வகையறா சிலவுகளுக்குப் பணம் கொடுக்க வேண்டியதற்காகத் தங்களுத்தாரசிட்டுப்[166] பிரகாரம் பணம் சிலவு செய்து கொண்டு வந்தேன். சாளுவநாயக்கன் பட்டணம் சவாரியாகிற முன்னுக்கு[167] இனிமேல் சிலவு நடக்க வேண்டிய பணத்துக்கு சிட்டுகளுகிறது[168] எப்படி என்று காற்பாற்[169] பதகனவீசு ஆபசகாய அய்யரிடத்தில் சொன்னார். அதற்கு அவர் சொன்னது அப்பப்ப சிட்டுக்கள் சிட்டுக்கள் செய்து தபாவில் அனுப்பி தங்களிடத்திலிருந்து மறுபடியும் வரவழைத்துக் கொண்டு பணம்சிலவு செய்கிறதாகச் சொன்னார்.

சொல்லுகிறதினால் இப்படிக்கிப் பணம் சிலவு செய்யச் சொல்லி எனக்குத் தாங்கள் உத்திரவு கொடாததினாலேயும் பணத்தினுடைய சங்கதி ஆனதினாலேயும் சீட்டுகளுகிறதுக்கு மு ......... யிது வயணம் தெரியலாவதா எழுதிக் கொணடேன். உத்திரவு வந்தபடி நடந்து கொள்ளுகிறேன்.

தஞ்சாவூர் தூ அ ள ௩ ௰ க -ம் ௵ தேவஸ்தானம்
மார்ச்சு மீ ௰ கூ உ[170] சறாப்பு னாயனா

## ஆவண எண்:114

ஸ்ரீ மகம்மேரு அகண்டித[171] லட்சுமி அலங்கிருத[172] ஸ்ரீ ஸ்ரீ ஹறிசக்கர பாணி[173]

---

163. ராத்திரிதாசு 2 - இரவு 8 மணி

164. சமுகேஷபத்துக்கு - முன்னிலைக்கு

165. சறாப்பு - பொருள் நிலைய அலுவலன் (Shroff)

166. உத்தாரச்சீட்டு - அனுமதிச்சீட்டு

167. சவாரியாகிற முன்னுக்கு - செல்வதற்கு முன்

168. சிட்டுகளுகிறது - சீட்டு எழுதுகிறது

169. காற்பாற் - கார்பார்; இவர் ஒரு பெரிய அலுவலர்; இவர் அரசரது மெய்காப்பாளர்களின் தலைவர் ஆதல் கூடும் (பக்.75)

170. 19.3.1831

171. அகண்டித - பிரியாத

172. அலங்கிருத - அலங்கரிக்கப்பட்ட; அழகு படுத்தப்பெற்ற

173. ஹறிசக்கரபாணி - இவர் "நியாயசபை" என்ற நீதிமன்றத்தின் நடுவர் (நியாயாதிபதி) என்று தெரிகிறது. (பக்.175)

பண்டிதரவர்களுக்கு அச்சனா பண்டிதர் நமஸ்காரம். இப்போது கண்டியூர் மிராசு சின்னக்கண்ணு பிள்ளை என்பவன் சாலாகைற வரைக்கும் ரூ சுய[174] வரையில் சர்க்காருக்கு செலுத்த வேண்டிய பாக்கி வைத்துக் கொண்டு, அவன் தஞ்சை நகரம் கோட்டை புது முதல் சாராயக் குத்தகைக்காரனுக்குள் கொடுக்கிறதாய் தெரியவருகிறபடியினாலே அவனை யிந்தத் தாலூகா சேவுகனாகிய கடுதாசி கொண்டு வரப்பட்டவன் வசத்தில் கூட்டி அனுப்பிவித்து அவ்விடத்திய சுபாதி சுபங்களுக்கும்[175] வேண்டிய காரியங்களுக்கும் எழுதியனுப்பிவிக்க வேண்டியது. வேணும் நமஸ்காரம்

ரு அ ள ங ய க -ம் ஷு[176] சூலை மீ உ யி ரூ முகாம் திருவாதி[177] ஒப்பம்

அச்சனா பண்டிதர்

## ஆவண எண்:115

ரு அ ள ங யி க-ம் ஷு டிசம்பர் மீ யி ரு உ[178] ஸ்ரீ மகாராஜா[179] சாகேப் அவர்கள் திவானத்துக்கு இதனடியில் கையெழுத்து வைத்திருக்கிற மிராசுதார் செட்டி வர்த்தகாளாகிய னாங்கள் வந்து எழுதிக் கொடுத்த முச்சிலிக்கா[180] என்னவென்றால் - இலாகா தென்னமநாடு கிராமத்து ஆலத்தியேரிக்கி மாமூல் வழக்கப்படி கடப்போக்கு விடாமல் நூதனமாயி மோட்டில்[181] வெட்டி விட்டு இருப்பதை யிட்டுத் தாராளமாய்த் தண்ணீர் வடியாமல் விசேஷமாய் வந்த பிரவாகத்[182] தண்ணீர் தேங்கலாகி அதனால் வேலி[183] நிலத்தின் நஞ்சைப் பயிர்கள் சேதப்பட்டுப் போயிருக்கிறதாயுமாகையால் எப்போதும் போல மாமூல் வடிமடையைத் தானே வெட்டிவிடும்படிக்கு உத்திரவாக வேணுமென்று கும்பனியிலாகா, ஆழிய வாய்க்கால் கிராமத்தார் திருவாதி தாலுகா தாசில்தார் மூலமாய் அசூரில் பிராது செய்து அதற்காக பிரின்ஸ்பால் கலெக்டர்[184] சாகேப் அவர்கள் ரிசிடெண்ட்[185] சாகேப்

---

174. ரூ.60/-

175. சுபாதிசுபங்கள் - சுபாதிசயங்கள் - நற்செய்திகள்

176. 29.7.1831

177. திருவாதி - திருவையாறு

178. 15.12.1831

179. மகாராஜா என்றது சரபோஜியை

180. முச்சலிக்கை - உடன்படிக்கை

181. மோட்டில் - மேட்டில்

182. பிரவாகம் - வெள்ளம்

183. 40 வேலி (வேலி - 20 மா)

184. கலெக்டராக இருந்தவர் கிண்டர்ஸ்லி ஆகலாம் (பக்கம் 71)

185. ரெஸிடென்டு ஜே.பிளாக்பர்ன் ஆகலாம்

அவர்கள் மூலமாய் அரண்மனைக்கு யாதாஸ்த்து[186] வந்ததின் பேரில் மேலெழுதிய காரியங்களின் நிஜ ஸ்திரி யைப்[187] பார்த்துக் கொண்டு வரும்படி அரண்மனை உத்திரவாகி நியாய சபையின் நியாய கர்த்தர்[188] அரிச்சக்கிரபாணியவர்கள் ஷெ இடத்துக்கு வந்து ஷெ ஸ்தலத்தை சுத்திப் பார்க்க வேண்டியதற்காக எங்களை அழைப்பிவித்து ஆழியவாய்க்கால் கிறாமத்து ஆறுமுக ஆரத்தி குமாரசாமி காலிங்கறான் இவர்களுடன் எங்களை ஷெ ஏரியின் வடிவடையையும் உள்வாயில் சாகுபடி செய்திருக்கிற நஞ்சைப் பயிர்களையும் சுத்திப் பார்த்து வரும்படி உத்திரவு கொடுத்தப் பிரகாரம் நாங்கள் ஷெ ஏரியின் வடிமடையைப் பார்த்த விடத்தில் தென் கடைசியிலும், வடகடைசியிலும் தாராளமாய் வடிமடையால் ஜலம் போக்கா யிருந்ததாய்த் தெரிய வருகிறதில் தென்கடைசி வடிமடையில் மாத்திரம் இப்போது தண்ணீர் ஓட்டமில்லாமல் வடகடைசி, கடைப்போக்கில் மாத்திரம் முழங்கால் மட்டு ஜலம் வரைக்கு தாராளமாய் ஓடிக் கொண்டிருக்கிறது. ஷெ இரண்டு கடைசி வடிமடைக்கும் தெற்கும் வடக்கும் நடு கீழ்க்கரையில் வடிமடை விட்டு வருகிற வழக்கமென்று ஷெ ஆழியவாய்க்காலான தகறார்[189] சொல்வதை பார்த்ததில் ஷெ இரண்டு இடமும் ஒடப்பு[190] எடுத்துக் கரைகட்டி இருக்கிறதாய் ஷெ இடங்களின் இரண்டு புறங்களிலும் இருக்கிற பழைய கரைகளால் வியத்தமாய்க் காணப்படுகிறதே யல்லாமல் ஷெ இடத்தை வடிமடை என்று சொல்லுவதற்கு யாதொரு காரணமும் காணப்பட வில்லை. ஷெ யிடத்தில் வடிமடைவிட்டால் ஏரியில் சுத்தாங்கம்[191] தண்ணீர் இல்லாமல் வடிந்தும் ஓடை குளமாயும் போகும். எல்லா இடங்களின் ஏரிகளுக்கும் கடைசிகளில் வடிமடை விட்டு வருகிற வழக்கப் பிரகாரம் இந்த ஏரிக்கும் மாமூல்ப் படி வடிமடை வெட்டிவிட்டு, இருக்கேயல்லாமல் அதில் யாதொரு வித்தியாசங்களுமில்லை. புதுசாய் வடிமடை வெட்டி விட்டதாய்க் காணப்படவுமில்லை. ஷெ ஆழியவாய்க்கால் கிராமத்தார் சாகுபடி செய்திருக்கிற நஞ்சைப்பயிர்களையும் நாங்கள் சுத்திப் பார்த்த யிடத்தில் ஷெ ஏரித் தண்ணீர் எதிப்பினால் யாதொருச் சேதங்களு மில்லை.

ஷெ பயிர்களுக்குத் தெற்கே ஆலத்தியேரி நீர்நிலை உத்தேசம் ய உ அடிக் கோலால் - உ ய, ௩ய-கோல் விஸ்தாரம் இருக்கிறதுமல்லாமல் ஷெ சாகுபடி நிலத்திற்கும், நீர்நிலைக்கும் வெகு மேடா (மோடா) யிருப்பதினால் இந்த ஏரியின் நீர்நிலைமட்டும் அதிகப் பிரவாகம் வந்ததினாலிதை மட்டும் யாதொரு சேதமுமில்லாமலிருக்கிறதுன் தவிர மேலெழுதிய இரண்டு கிராமத்தார்களும் விவாதமென்று சொல்லுகிற ஷெ ஏரியின் உளவாயைச் சேர்ந்த ..... யாயி ஷெ ஆழிய வாய்க்கால் கிராமத்தார் சாகுபடி செய்திருக்கிறதில் ஏரியின் தண்ணீர் எதிர்ப்புமில்லை. இந்த ஏரியின் தண்ணீர் எதிர்ப்பினால் ஷெ ஆழியவாய்க்காலால் சாகுபடி

186. யாதாஸ்த்து - ஒரு அலுவலர் பிறிதொருவருக்கு எழுதும் நினைவுக்குறிப்பு

187. நிஜஸ்திதி - உண்மையான நிலைமை

188. நியாயசபை - சரபோஜியின் காலத்தில் தஞ்சையிலிருந்த நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று. நியாயகர்த்தர் - நியாயதிபதி

189. தகரார் - தடை

190. ஒடப்பு - உடைப்பு

191. சுத்தாங்கம் - முழுவதும்

செய்திருக்கிற நஞ்சைப் பயிர்களுக்கு யாதொரு சேதங்களுமில்லை. இந்தப்படி நாங்கள் கண்ணாலே பார்த்து வந்ததுக்கு பிரமாண மூலமாய் நாங்கள் மனோஜியில்[192] எழுதிக் கொடுத்த முச்சலிக்கா,

கண்ணங்குடி மேலயூர்

மிராசுதார்கள் கையெழுத்து

## ஆவண எண்:116

ஸ்ரீ மகாராஜா[193] சாயேபு அவர்கள் நியாயசபையின்[194] நியாய கர்த்தருக்கு ஸ்ரீ அரிச்சக்கரபாணி பண்டிதரவர்கள் முன்பாக வெளிக் கொத்தவால் சாவடி[195] நேமணக்கு[196] கொத்தவால் சேவகன் கோனேபடி னாயக்கன் எழுதி வைத்த அ(றிக்)கை வாக்குமூலம் என்னவென்றால்,

இன்றையத் தினம் பகல் இரண்டு தாசி[197] வேளையில் சீனுகற வெங்கடாசலம் என்பவன் கொத்தவால் சாவடியில் வந்து எருமைத்தோல் க ஆக-யிருபது மாட்டுத் தோல் வாங்கிக் கொண்டு போகையில் சராயிச்சாவடிக்கி[198] தென்புறம் சாலையில் கும்பனி சாயா[199] சவுக்கை சேவுகன் வந்திருந்து கொண்டு விடமாட்டேனென்று தடங்கல் பண்ணி யிருக்கிறதாகச் சொல்லிக் கொண்டான். என்னைப் போய் அரண்மனைக்குப் போகிற தோலானபடியினாலே தடங்கல் பண்ணாமல் விட்டு விடும்படி ஷெ சாயா சேவுகனுக்குச் சொல்லிப் போட்டு வரச்சொல்லிக் கொத்தவால் எனக்கு உத்திரவு கொடுத்து நான் போய் ஷெ ஜாயா சேவுகனாகிய மூர்த்தி னாயக்கனுக்கு சொன்ன விடத்தில் தல்லத்துக்கு[200] கொண்டு வந்தால் பதிந்து கொண்டு விட்டு விடுகிறேன். இல்லாவிட்டால் விடமாட்டேனென்று சொன்னான். இப்பால், ஷெ சீனுக்கார அரண்மனையில் போய் தல்லத்துக்கு வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து, பதிந்து கொண்டுவிடச் சொன்னான். ஷெ சேவுகன் பதிந்து கொடுக்கிறேனென்று வாங்கினவன் இப்போது பதியவும் மாட்டேன், தோலை விடவுமாட்டேன். கலெக்டர் கிண்டர்சல்லி துரையவர்களுக்கு எழுதி யிருக்கிறேன். உத்திரவு வந்தப்படி நடந்து

---

192. மனோஜி - மனோராசி - சம்மதம்

193. மகாராஜா என்றது சரபோஜியை

194. நியாயசபை - சரபோஜியின் காலத்தில் தஞ்சையிலிருந்த நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று.

195. கொத்தவால் சாவடி - காவல் தலைவன் இருக்கும் இடம்

196. நேமணக்கு - நியமிக்கப்பட்டவன்

197. பகல் இரண்டு தாசி - பகல் 2 மணி (தாசி - தாசு)

198. சராயச்சாவடி - வழிப்போக்கர் தங்குவதற்குரிய விடுதி

199. சாயா - சராய்

200. தல்லத்து - சாவடிக்கு (?)

கொள்ளுகிறேன் என்று சொல்லி ஷெ தஸ தக்கை[201] ஷெ சீனுக்கரிடத்தில் கொடுத்துப் போட்டான். ஷெ தோலுகள் ஷெ சேவுகனிடத்தில்தான் யிருக்கிறது. ஆகையால் நடந்த காரியத்துக்கு இந்த அறிக்கை வாக்குமூலம் எழுதி வைக்கலானேன்.

சூ அ ள ட ய க -ம் ஷு ஒப்பம்-கோனே படி னாயக்கன் கையெழுத்து
அக்டோபர் மீ உ யி கூ உ[202]

அசலுக்குச் சரியான நகல்

## ஆவண எண்:117

ஸ்ரீ மகாராஜா[203] சாயேப் அவர்கள் திவானத்துக்கு

அப்பீல்வாதி[204] அப்பீல் பிரதிவாதி கோட்டைக்குள் மேல் ஷெ கோட்டைக்குள் அலங்கம்[205] தமதமாவு[206] க்கு ஷெ கோட்டைக்குள் தென்புறம் சந்திவிருக்கும் . . . . ணுக கொத்தன் மகன் அருணாசலக் கொத்தன் சுப்பா னாயக்கன்- மகன் சாமினாதன் சுந்திரபத்து னாயகன்- அந்திஸ்து[207] செவுகர விரித்திக்கொத்து வேலை அப்பீல் வாதி தெண்டனிட்டு அப்பீல் பிரதிவாதியின் பேரில் பண்ணப்பட்ட பிராது என்னவென்றால்:- உத்தேசம் உ,ந மாசத்துக்கு முன் என்னுதான்[208] வீட்டுச் சாசனத்தில் கண்ட நிலத்தில் போட்டிருந்த தெருவு திண்ணையில் சிலயிடத்தில் பழுதாய்ப் போன(ப்)படியால் அவ்விடத்தில் ஷெ திண்ணையை னான் பழுது பார்க்கும் பொழுது, ஷெ பிரதிவாதியானவன் ஒழுங்கு விரோதமாய் துராக்கிருதமாய்[209] மரித்து ஷெ சங்கதியைப் பத்தி என் பேரிலும் என் பெண்ஞ்சாதியாகிய முனியம்மாள் என்பவள் பேரிலும் நியாய சபையில் பிராது பண்ணினான். ஷெ நியாய சபையார் அவர்கள் மறியல் தள்ளி ஷெ திண்ணை போட்டபடியால் ஷெ திண்ணையை எடுத்துப் போடச் சொல்லியும் ரூ வ - அபராதம் விதித்திருக்கிறோமென்றும், எனக்கு அறிவித்த படியால் ஷெ சங்கதியைப் பற்றி தர்மசபையில்[210] நான் மாத்திரம் அப்பீல்

---

201. தஸ்தக்கை - தஸ்கத்தை (தஸ்கத் - கையெழுத்து)

202. 29-10-1831

203. மகாராஜா என்றது சரபோஜியின் மகன் சிவாஜியை

204. அப்பீல் - Appeal - மேல்முறையீடு

205. அலங்கம் - கொத்தளம் (மதிலுறுப்பு)

206. தமதமா (?)

207. அந்திஸ்து - அந்தஸ்து - நிலைமை

208. என்னுதான - என்னுடையதாகிய

209. துராக்கிருதம் - உரிமையில்லாத பொழுதும் வலியநிகழ்த்தும் செயல்

210. தருமசபை - தஞ்சையிலிருந்த நான்கு நீதிமன்றங்களில் ஒன்று

பண்ணினேன் ஷை தர்ம சபையாரவர்கள் ஷை திண்ணையை எடுக்க வேண்டிய தில்லையென்றும் ரூ -வ- அபராதம்கொடுக்க வேண்டியதில்லை யென்றும், தீர்ப்புச் செய்து, ஷை பிரதிவாதிக்காகி கிரயம் ரூ -ரு- எனக்குக் கொடுக்கிற தென்றும் தீர்ப்பு செய்து ஷை பிரதிவாதிக்கு நோட்டீசு அனுப்பினார்கள். ஷை பிரதிவாதி என்பேரிலும் ஷை முனியம்மாள் பேரிலும் ஷை சங்கதியைப் பற்றி நியாயாதிசர்[211] அவர்கள் சபையில் அப்பீல் பண்ணினான். ஷை நியாயாதிசர் அவர்கள் சபையார் அவர்கள் சொன்னது. உன்பேரில் குற்றமில்லை. ஷை முனியம்மாள் துர்ப்பாஷையாய்த்[212] திட்டினதாய் ருஜுவாகிறபடியால் தர்மசபை தீர்ப்புப்படி திண்ணை விழயமட்டும் ஷை பிரதிவாதி சிலவில் பிராது செய்து கொள்ளுகிற தென்றும், நியாயசபை தீர்ப்புப்படி ரூ -வ- அபராதம் என்னிடத்தில் வசூல் செய்கிறதென்றும், யிந்த சபையின் முத்திரைக் காகித விலை ஷை பிரதிவாதிக்கு ரூ -ரு- நீங்கள் கொடுக்கிறதென்றும், தர்மசபை முத்திரைக் காகித விலை ரூ-ரு-ஷை பிரதிவாதி உங்களுக்கு கொடுக்க வேண்டியதில்லை யென்றும், அநியாயமாய் தீர்ப்பு செய்து, எங்களுக்கு நோட்டீசு அனுப்பியிருக்கிறார்கள். ஆனால் ஷை நியாய சபையார் அவர்கள் ஷை முனியம்மாள் என்பவளுக்குரூ -வ-அபராதம் விதித்ததற்கு, அவள் அதற்கு சம்மதிப்பட்டு யிருந்து விட்டாளே தவிர, அவள் தர்மசபையில் புணர் நியாய பிராது[213] பண்ணவில்லை.ஷைபிரதிவாதி தர்ம சபையில் அவள் பேரில் பிராது பண்ணவில்லை.யிப்படிக்கு யிருக்க தர்மசபையில் பிராது பண்ணாமலும், தீர்ப்பு செய்யாமலும் இருக்காமல் நியாயா திசர் சபையில் பிராது பண்ணினால் அந்தப் பிராதைத் தள்ளுபடி செய்யாமல் ஏற்றுக்கொண்டு, தீர்ப்பு செய்ய ஒழுங்கு இருக்கிறதா? ஒழுங்கு இல்லையே ஷை நியாயாதிசர் சபையார் அவர்கள் ஒழுங்குக்கு விரோதமாய் அநியாயமாய் மேலெழுதியப்படி தீர்ப்பு செய்திருக்கிறார்கள். ஆனதால் கார்பார் பிரசங்கத்தில்[214] நான் அப்பீல் பண்ணலானேன். ஆகையால் மனுநீதி அரசாட்சி செலுத்தி வருகிற/ஸ்ரீ/ மகாராஜா[215] சத்திரபதி சாயேப் அவர்கள் கிருபை செய்து, மேலெழுதிய காரியங்களைத் தங்கள் இரக்கமுள்ள சித்தத்தில் அங்கிகரித்து ஷை நியாயாதிசர் அவர்கள் சபையிலிருந்து வருகிற தஸ்த்தா வேஜுகளை தனித்தனியே பரிசோதித்துப் பார்த்து, நியாயமாய் விசாரணை பண்ணி ஷை நியாயாதிசர் சபையார் அவர்கள் போட்டிருக்கிற ரூ. வ-அபராதத்தையும் ஷை பிரதிவாதிக்கி நான் கொடுக்கும்படி போட்டிருக்கிற முத்திரைக் காகிதக் கிரயம் ரூ-ரு-யும் தள்ளுபடி செய்து தர்மசபை தீர்ப்புப்படி ஷை பிரதிவாதி முத்திரைக் காகிதக் கிரயம் ரூ. -ரு-யும் தள்ளுபடி செய்து தர்மசபை தீர்ப்புப் படி ஷை பிரதிவாதி முத்திரைக் காகிதக் கிரயம் ரூ -ரு- எனக்கு கொடுக்கும் படியாகவும், நியாயாதிசர் அவர்கள் சபை தீர்ப்பை மறுத்தளித்து,[216] எனக்கு மறுதீர்ப்பு செய்து கொடுக்கும்படியாய்க் கார்பார் பிரசங்கத்தின் கனம் பொருந்திய அதிகாரஸ்த்தாள்

211. நியாயாதிசர் - தஞ்சையிலிருந்த நான்கு நீதிமன்றங்களின் நடுவர்

212. துர்ப்பாஷை - கெட்ட பேச்சு

213. புணர்நியாயபிராது – மேல்முறையீடு

214. கார்பார் பிரசங்கம் - ஸர்க்கேல் அலுவலகம் (பக்.168)

215. மகாராஜா என்றது சரபோஜியின் மகன் சிவாஜியை

216. மறுத்தளித்து - மறுதலித்து - மறுத்து

அவர்களுக்கு உத்திரவாக வேணுமென்று பிரார்த்தித்து மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தூ அ ள ச ய கூ-ம் ஷுல[217] சாமிநாத னாயக்கன்
செப்டம்பர் மீ ய சூ உ-ம் 2

## ஆவண எண்:118

ஸ்ரீமகம்மேரு அகண்டித[218] அலங்கிருத யஜமான்னிய[219] ராஜ ஸ்ரீ தஞ்சை நகரம் நியாய கர்த்தர் அரிசக்கரபாணி பண்டிதர் அவர்களுக்கு திருவாதி தாலுக்கா தாசீல் நரசய்யர் நமஸ்காரம்.

இப்போதும் அவ்விடத்து இலாகா புதுலயன் பழையலயன் சாராயக் குத்தகை ஒப்புக் கொண்டிருக்கிற யிஜாராதாரன்[220] புதுலயனுக்காக தஸத்த குடனே[221] கொண்டு போகிற கருப்பெட்டி தவிர பழயலயனுக்கு கருப்பெட்டி யாதொரு ஆதரவுமன்னியில் கொண்டு போகிறதாய் சவுக்கிதாறனால்[222] தெரியவந்த சங்கதி அசூர் உத்திரவுப்படி விசாரணை செய்ய வேண்டியதற்காக ஷெ குத்தகைகாரனை இந்தக் கடுதாசி வந்தவுடனே அட்டி அன்னியில்[223] யிவ்விடம் சேர அனுப்பிவித்து அவ்விடத்து சுபாதிசுபங்களுக்கும்[224] வேண்டிய காரியங்களுக்கும் எழுதி அனுப்பிவிக்க வேண்டியது.

தூ அ ள ங ய க -ம் ஷுல ஒப்பம்
செப்டம்பர் மீ உ ய உ[225] தாசில் நரசய்யர்
திருவாதி தாலூகா

அசலுக்கு சரியான நகல்.

## ஆவண எண்: 119

ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் திவானத்துக்கு மாஜி நெல்லுப் பேட்டை கொட்டியம் ராமசுவாமி பிள்ளை மகன் அருணாசலம் மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு எழுதிக்

217. 16-9-1849

218. அகண்டித - பகுக்கப்படாத

219. யஜமான்னிய-ராஜமான்னிய - அரசராக விளங்குகிற

220. இஜாராதாரன் - குத்தகை எடுத்தவன்

221. தஸ்த்தர் - பத்திரம் (records)

222. சவுக்கிதார் - வாயிற்காவலர் (அ) ஊர்க்காவலர்

223. அட்டியன்னியில் - தடையின்றி

224. சுபாதி சுபங்கள் - நன்னிகழ்ச்சி முதலியன

225. 20-9-1831

கொடுத்த யாதி என்னவென்றால்:- வடக்கு வாசலுக்கு வெளியே அரண்மனையார் நெல்லுப்பேட்டைக்கு முன்நிலம் விட்டபோது என் தகப்பனும், நாராயண செட்டியும் ஷை நிலத்தில் கொஞ்சம் நந்தவனம் செய்து, ஒரு குளமும் வெட்டி, அதில் புளியமரம், வேம்பு, பூவரசு, மற்ற சில்லரை மரங்களும் அதில்வைத்து ஷை நந்தவனம் தர்மம் நடந்து வந்தது. இப்படி ஷை நாறாயண செட்டி வைப்பாட்டி மகன் ராமசுவாமி என்பவன் ஷை நந்தவனத்திலிருந்த புளியமரத்தை ஷூ -க- க்கு நாலு ரூபாய்க்கு குத்தகைக்கு கொடுக்கிறது. அப்படிக்கி வருஷா வருஷம் வாங்கிக் கொண்டு வந்தான். இப்ப அந்த மரங்களையும், இன்னும் அதிலிருக்கப்பட்ட பூவரசு மரங்கள், வேப்ப மரங்கள் இதுகளை வெட்டிக் காளவாய்க் காரன்[226] னிடத்தில் பத்துப் பதினைந்து ரூபாய்க்கு விற்றுப் போட்டு, ஷை நந்த வனத்தில் என் தகப்பனும், அவர் கூட்டாளியும் கட்டி வைத்த சாவடியில் கஞ்சா குடிக்க இடம் கொடுத்து, அதில் குடிக்க வருகிற பேர்களை விட்டு, ஷை நந்தவனத்தைக் கொத்தச் சொல்லி, நந்தவனம் என்கிற பேருக்கு மாத்திரம் கொஞ்சம் துளசியும், மற்ற பூச்செடியில் சிறிது வைத்து மற்ற இடங்களில் பறங்கி, அவரை புடல், முருங்கை, அகத்தி; கஞ்சா யிதுவெல்லாம் பயிர் பண்ணித் தன்வீட்டுக்கு கொண்டு போனது போக மற்றதை விற்றுப் போடுகிறது. இதுவல்லாமல் ஷை நெல்லுப்பேட்டையிலிருக்கிற வர்த்தகன் யிடத்தில் ஷை நந்தவனத்துப் பேர் சொல்லி கால்படி அரைப்படி நெல்லு வாங்கிக் கொண்டு அதில் ஷை சீவனம் பண்ணிக்கொண்டு வருகிறான். ஆகையால் ஸ்ரீ மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்கள் ஏழையாகிய அடிமையின் பேரில் தயவு செய்து, ஷை நந்தவனத்தில் ஆகிற பயிரில் எனக்குப் பாதி கொடுக்கும்படியாய் உத்திரவு கொடுத்து, அருளவும். அப்படிக்கி எனக்கு உத்தரவு இல்லாவட்டால் ஷை நந்தவனமாகிய தோட்டத்தை அரண்மனையில் சேர்க்கும்படியாவது சமூகத்தின் உத்திரவு ஆகவேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

[அசலுக்கு சரியான நகல்]

## ஆவண எண்:120

ஸ்ரீ மகாராஜா சாகேப் அவர்கள் திவானத்துக்கு கோல னாயக்கன் சேவகஞ் செய்து வருகிற இதனடியில் கையெழுத்து வைத்திருக்கிற கறச்சுமால்[227] கொல்லற ராமசாமி வகையறா பதினாறு பேர்களும் எழுதிக் கொடுத்த கபுலாத்தி[228] என்னவென்றால், எங்கள் பதிநாறு பேரையும் ஸ்ரீ அரண்மனையாரவர்கள் தனித்தனியே ரொக்க ஜாமீன் கொடுக்கச் சொல்லிச் செய்த உத்திரவுக்கு நாங்கள் சம்மதப்பட்டு ரொக்க ஜாமீன் கொடுக்கிறதற்கு இதுவரையில் பிரயத்தனம் பண்ணியும் சர்க்காரவர்களுக்கு பகந்தாள்[229] ஜாமீன் அகப்படாமற் போனத்தினால் நாங்கள் பதினாறு பேரும் ஒன்று சேர்ந்து பேசி சம்மதியாய் எழுதிக்கொடுத்த கபுலாத்து விபரம் - மேலெழுதிய கோலனாயிக் சேவகத்தில் மாலோமால் அவாலா வகையறா ஸ்தலத்தினால் வரப்பட்ட தங்கம், நகை ரொக்கம் வகையறா நாங்கள் வாங்கி,

226. காளவாய்க்காரன - செங்கற்களைச் சுடும் சூளைகருப்பவன்

227. கறச்சுமால் - பொருட்செலவு மகால்

228. கபுலாத்தி - கபுலாத் (அ) கபுலாயத்: அரபுச் சொல், ஒப்பந்தம் (வாய்மொழி (அ) எழுத்தில்)

229. பகந்தாள் - ரொக்கம் (?)

அரண்மனையாரவர்கள் உத்திரவின்படி சிலவுபண்ணிக் கொண்டு வருகிறதில் அதிகமாய்க் கைப்பேறி போனாலும் பணம் ஷை னகைநாணய வைக்கப்பட்ட இடத்திலிருந்து களவு போய் சர்க்கார் விசாரணையில் அந்தக் களவு எங்கள் பேரில் சமதலையானால்[230] றோஜ[231] கிரிதி கணக்குப் பிரகாரம் குறைச்சல் விழுப்பட்ட பாக்கி தங்கம், நகை, ரொக்கம் வகையறா, நாங்கள் பதினாறு பேரும் சேவிக்கப்பட்ட எந்த அவாலாவில், எந்த மாவில், எந்த கோல உடைய அஜாக்கிரதையினால் அந்த லுத்த.சாள சம்பவிக்குதோ அப்போது அந்த கோல பிடித்துக் கைது பண்ணிக் கொண்டு, அவன் பேரில் சுமதலையான களவு நகை, நாணயம், வகையறாஷ (அரைக்கால்)க்குஸ்ஷ -ம் (மாகாணி அரைக்கால்?)க்கு ஷைகுற்றவாளியினுடைய வீடு வாசல் ஆஸ்தி பாஸ்தியை இடாய் வசூல் பண்ணிக்கொள்கிறது. அப்படிக்கு வசூல் ஆகிறதிலும் பாக்கிவிழுந்தால் அடியில் கையெழுத்து வைத்திருக்கிற நாங்கள் பதினாறு பேர்களும், ரொக்கம் செலுத்தி வைக்கிறோம். ஷை குற்றவாளியை ஷை அசாமியில் இருந்து அரண்மனையாரவர்கள் தள்ளுபடி செய்து எங்கள் நிஷபதியில்[232] வேறொருவருக்கு செய்து கொடுக்கிறது. இந்தப்படி நாங்கள் பதினாறு பேரும், சம்மதியா எழுதிக்கொடுத்த கபுலாதி.

கூஅ ள சுயி ந-ம் ஷூ மே மீ உயிஎ உ[233] க்கு சரியான சோபகிருது[234] ஷூ வையாசி மீ யிரு உ கருச்சுமால் கொல்ல(ற்)றாமசாமி னாயக்கன் தகப்பனார் ரங்க னாயக்கன் சம்மதி. கருச்சுமால் கொல்லற் வீர றாகு னாயக்கன் சம்மதி கருச்சுமால் கொல்லற் சேஷப்ப னாயக்கன் தாசப்ப னாயக்கன் சம்மதி. றாஜ்மால் கொல்ல(ற்)றாமசாமி னாயக்கன் குருவப்ப னாயக்கன் சம்மதி. றாஜமால் கொல்ல(ற்)றாமசாமி னாயக்கன் சுப்பா னாயக்கன் சம்மதி. றாஜமால் கொல்ல(ற்)றாமசாமி னாயக்கன் றாமானாயக்கன் சம்மதி. றாஜமால் கொல்லற்றங்கப்ப னாயக்கன் அழகிரி னாயக்கன் சம்மதி (ஆஸிரி) தபதகம் அம்மாளு அம்மாள் தகப்பன் சுப்பா னாயக்கன் சம்மதி. ஆவு சாகேப்பு சாமதாற்கானா[235] கொல்லற் ஜகன்னாத னாயக்கன் சேஷப்பனாயக்கன் சம்மதி. பெரிய கொட்டியம் கொல்லற் சுப்பா னாயக்கன் சேஷப்ப னாயக்கன் சம்மதி. விஜயசயதம்பா ஸிறேசி கொல்ல(ற்) வெங்கடசுப்பா னாயக்கன் கிருஷ்ண னாயக்கன் சம்மதி யிமார்த்தி[236] கொல்லற் னாறாயண னாயக்கன் வெங்கிடாசல னாயக்கன் சம்மதி

230. சமதலை - சுமைதலை - பொறுப்பு

231. றோஜகிரிதி - ரோஜு - நாடோறும்; கரிதி - விலைக்கு வாங்குதல்

232. நிஷபத்தி - இடத்திலிருந்து

233. 27-5-1843

234. சோபகிருது - ஆண்டறுபதுள் முப்பத்தேழாவது

235. சாம்தார்கானா - ஜவுளி நகை ஆகியவை இருக்கும் பகுதி

236. யிமார்த்தி - இமாரதி - மராமத்து வேலையைக் கவனிப்பவர் (பக்.458)

## ஆவண எண்: 121

௲அ ள ௩ம௰-ம்[237] வருஷம் ஏப்ரல் மாதம், ஸ்ரீ. மகாராஜா[238] சாயேப் அவர்கள் திவானத்துக்கு வாதி, துக்கோஜி[239] சாயேப் பிரதிவாதி களாகிய கோட்டையிலிருக்கும் ஸ்ரீ காமாட்சியம்மன் கோவில்[240] ஸ்தானிகாள்[241] நாங்கள் உபயவாதிகளும்[242] ராசிநாமாவாய்[243] எழுதிக் கொடுத்த அத்தாட்சி[244] என்னவென்றால் வாதியானவருடைய சொந்தமான கெங்காதர தோட்டத்துக்குக் கிழண்டையும் அதுக்கடுத்த ஷெ கோயில்[245] சருவமான்யம் கோவிந்தராச தோட்டத்துக்கு மேலண்டை பக்கமாயும் யிருக்கிற வேலியும், அந்த வேலிக்குச் சரியாய் இருக்கிற மூங்கில் குத்து வகையறாவுக்கும், வாதி என்னைச் சேர்ந்த தென்றும், பிரதிவாதிகள் கோவில் தோட்டத்தைச் சேர்ந்த தென்றும், நாங்கள் உபயவாதிகளும், இவ்விதமாய் தகராறு பட்டு, அரண்மனையில் சொல்லிக் கொண்டத்துக்காக சாட்சி அனுபவ முதலான ஆதிரவுகள் ஆயுத்தம்[246] பண்ணும் படியாய் உத்திரவான காரியத்துக்கு ஒருவருக்கொருவர் சாட்சிதோசம் யிருக்கிறதையிட்டும், ஆதரவுகளினால் ஒரு வீதாயகம்[247] செய்யக் கூடாததைப் பத்தியும் உபயவாதிகளும், ஏகமனசாயும், ராசியாயும்[248] ஒரு பிரிவினை செய்து கொண்ட விபரமாவது:

வாதி[249] யானவருடைய தோட்டத்தைச் சேர்ந்ததென்று வாதி சொல்லப் படுகிற மேல்க்கண்ட வேலி முதலானதுகள் பிரதிவாதிகள் கோவில் தோட்டத்தைச் சேர்ந்த தென்கிறத்துக்கு கிராம தேவதை முன்பாக தேச வழக்கப்படி வெட்டியானைக் கொண்டு, பிரமாண பூர்வகமாய் எல்லை ஒட்டி, சேர்த்துக் கொள்ளுகிறதென்றும் அது வாதி ஒப்புக்கொண்டு வியாச்சியத்தை[250] விட்டு விடுகிறதென்றும் பேசி அந்தப்படி ஒட

237. 1830ஆம் வருஷத்தில்

238. மகாராஜா என்றது சரபோஜியை

239. (பக்கம் 110 இல் 25) ஒரு துக்கோஜி கூறப்பெறுகிறார். அவரும் இங்குக் குறித்தவரும் ஒருவரா வேறா என்று தெரிய வாய்ப்பில்லை.

240. காமாட்சியம்மன் கோயில் - தஞ்சாவூர் மேலவீதியிலுள்ளது

241. ஸ்தானிகாள் – ஸ்தானீகர்கள் - கோயில் காரியங்களைக் கண்காணிப்பவர்

242. உபயவாதிகள் என்றது வாதிபிரதிகளை

243. ராசிநாமா - உபயவாதிகளும் தமக்குள் இருக்கும் வேறுபாடுகளைத் தீர்த்துக் கொண்டு உடன்பாடு தெரிவித்தல்.

244. பிராமண (பிரமாண) அத்தாட்சி - உறுதிமொழி

245. ஷெகோயில் - காமாட்சியம்மன் கோயில்

246. ஆயுத்தம் - ஆயத்தம்

247. வீதாயகம் - அளவும் (?)

248. ராசியாய் - சமாதானமாய்

249. வாதி - துக்கோஜி

250. வியாச்சியம் - வழக்கு

பிரதிவாதிகளும் ஒப்புக்கொண்டு உபயவாதிகளும் சம்மதமாய் ஒரு நிஷ்கரிஷ[251] செய்து கொண்டிருக்கிறபடியினாலே, இந்த நிஷ்கிரிஷைப் படிக்கு சர்க்காரார் தயவுசெய்து ருசுவாதிக்காக ஒரு காரியஸ்தனை நியமித்து, எல்லை ஒடும்படிக்கி செய்ய வியாச்சியம் தீர்மானம் செய்து போடும்படியாய் நாங்கள் உபயவாதிகளும் யேகமனதாயும் பிரமாண பூர்வகமாயும் எழுதிக் கொடுத்திருக்கிற இந்த அத்தாட்சியினால் நாங்கள் பாத்தியப்பட்டிருப்பதினாலே சர்க்காரார் யிந்த அத்தாட்சி பெற்றுக் கொண்டு இந்தப்படி பயிசலா[252] பண்ணும்படியாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## ஆவண எண்: 122

தஞ்சாவூர் சிமைக்கி கலெக்ட்டராகிய யேசக்டி பிலப்பி யிசுக்கொயரவர்கள்[253] சமூகத்துக்கு திருவாதி தாலுகா கோட்டை வெளியிலாக வேலூரிலிருக்கும் திருவாதி தாலுகா கோற்படி[254] ௲அ ள ரு ய எ[255]ம் ஷுத்திய ௲அ ள ரு ய சு[256]ம் நிம்பரில் பிராது பண்ணியிருப்பதற்கு உ-ம் பிரதிவாதியாகிய சாந்தாயி மிகுந்த வணக்கத்துடனே சலாம் செய்து எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்:-

விவாத மனை நிலம் பிராதில் குறித்த காமாட்சியம்மன் கோவிலுக்குச் (சொந்தமானதென்பதற்கு) - சு ய சு ய க[257] வருஷத்துக்கு முன் தஞ்சைநகரம் அரண்மனையார் அவர்களால் ஷெ காமாட்சியம்மன் கோவிலுக்கு கொடுபட்டிருக்கிற சிகாசன்னது[258] ஆதாரமா யிருப்பதினாலே ஷெ சிகாசின்னது (கச்சேரியின்) நகல் பெற்றுப் போய் கோர்ட்டில் தாக்கல் செய்ய வேண்டியதற்காக ஷெ கோர்ட்டில் மனு கொடுத்து:-.......... பெற்று வந்து யிந்த மனுவுடனே கொடுத்து யிருக்கிறேன். ஆகையால் எளியவள் பேரில் தர்ம துரையவர்கள் தயவுசெய்து, அரண்மனையில் இருக்கப்பட்ட மேல்க் கண்ட சிகாசன்னத்துக்குச் சரியான நகல் துரையவர்கள் ......... னுடனே எனக்கு கிடைக்கும்படியாய் உத்திரவாக வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். வேணும் சலாம்.

௲அ ள ரு ய எ -ம் ஷு[259] டிசம்பர் மீ ய க உ

யிந்தக் கிறல் சாந்தாயி

---

251. நிஷ்கரிஷை - உறுதி

252. பயிசலா - வழக்கைத் தீர்த்து வைத்தல்

253. Philip Esquire - இவர் தஞ்சை கலெக்டராக 1855 முதல் இருந்தவர்(?)

254. கோற்படி - கோர்ட்டில் - வழக்குமன்றத்தில்

255. 1857ஆம் வருஷம்

256. 1856ஆம் எண்

257. 60, 61

258. சிகாசன்னது - முத்திரையோடு கூடி உரிமை கொடுக்கும் சாசனம்

259. 11.12.1857

## ஆவண எண்: 123

திவானி[260] அதாவது கும்பகோணம் ஜில்லா திருவாதி தாலூகா முன்சிப் கோர்ட்டாரவர்கள் முன்பாக ௲ ௮ ௱ ௫ ௰ ௭ -ம் ௵ டிசம்பர் ௴ ௫ ௳[261] -யில் நடந்த நடவடிக்கையிலிருந்து எடுத்தெழுதிய யேகஸ்சூர் கட்டு[262]

௲ ௮ ௱ ௫ ௰ ௭ ௵
நம்பர் ௲ ௩ ௱ ௫ ௬

2-ம் பிரதிவாதி சாந்தாயி
ஆஜீறாய விவாத

மனைநிலம் பிராதில் குறித்த காமாட்சியம்மன் கோவிலுக்குச் சேர்ந்த மஸீ என்பதற்கு ௬௰, ௬௰ ௧ ௵ -க்கு முன் தஞ்சை நகரம் அரண்மனையாரவர்களால் ஷை காமாட்சியம்மன் கோவிலுக்கு கொடுபட்டிருக்கிற சிகா சன்னது ஆதாரமா யிருப்பதாயும் ஷை சிகாவுக்கு ஷை அரண்மனையாரவர்களிடத்திலிருந்து நகல் பெற்று வந்து தாகல் செய்ய ௬ -வாரம் கெடுக்கண்டு யேகஸீ சூர்க்கட்டு கொடுக்க வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறாள். 10 தினத்தில் வாங்கி வந்து தாகல் செய்யும்படி உத்திரவு செய்யலாச்சுது.

ஆனந்த நாத பிள்ளை[263]
குமாஸ்தா

ஒப்பம்
அன்னுசாமி முன்சிப்

௲ ௮ ௱ ௫ ௰ ௭ ௵ டிசம்பர் ௴ ௭ ௳[264]

இதை ஷை 2-ம் பிரதிவாதியிடத்தில்[265] கொடுக்கப்பட்டது.

## ஆவண எண்: 124

ரா. மகாராஜா[266] சாயேபு அவர்கள் திவானத்துக்கு கோட்டைக்குள் ராஜ கோபால சுவாமி கோவில்[267] தெருவிலிருக்கும் தாளம்பி அக்காள் எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்:-

கெங்காபாய் என்பவள் தன்னுடைய சிலவானு ராக்கடியை ஸாகோபா பண்டிதர் என்கிறவரிடத்தில் அடகு வைத்து இரண்டு ரூபாய் கடன் வாங்கி யிருந்தாள். மறுபடி முதல் இரண்டு ரூபாயும் ஷை யானிடத்தில் கொடுத்து, அதுவரைக்கும் வட்டி தீர்த்துக் கொண்டு, அந்த வட்டி சொச்சத்தில் ஷை ஸாகோபா என்னிடத்தில் பால் வாங்கினதற்காக

260. திவானி - நியாயஸ்தலம்

261. 5.12.1857

262. யேகஸசூர்கட்டு - Extract - பகுதிகள்

263. ஆனந்தநாத பிள்ளை - எழுதியவர் பெயர்

264. 7.12.1857

265. இரண்டாம் பிரதிவாதி யென்றது சாந்தாயியை.

266. மகாராஜா என்றது சரபோஜியை

267. ராஜகோபால சுவாமி கோயில்–மன்னார்குடியிலுள்ளது

பத்துத்துட்டு[268] எனக்குக் கொடுக்கச் சொல்லி, வாதியும் ஒப்புக்கொண்டு, ஷெ பத்துத்துட்டும் வாதி எனக்குக்கொடுத்தான். ஷெ னாகோபா வாதியிடத்தில் முதலும் வட்டியும் வாங்கிக் கொண்டவன் ஷெ நகையை வாதிக்குக்கொடுக்காமல்லையென்று, ஷெ நகையை என் முகாந்திரமாய்[269] அடகு வைத்ததாய்க் குறித்து, வாதி முத்திரை சபையில் என் பேரில் யாதிபோட்டு சபையாற் வாதி சாட்சியை விசாரணை பண்ணின விடத்தில் ருசுவாகாததினால் வாதி போட்ட யாதியைத் தள்ளி என் பேருக்கு ...................... செய்தார்கள். அப்பால் ஷெ வாதி தர்ம சபையில் புனர் நியாயம் பண்ணின பிறகு ஷெ (சபை) யாறும் என்னை வாக்கு மூலம் கேட்டார்கள். நான் நடந்தபடி வாக்குமூலம் எழுதிக் கொடுத்திருக்க அதுகளை விசாரணை செய்யாமல் வாதி நகை வைத்து பணம் வாங்கின னாகோபாவை காண்பிக்கச் சொல்லி நோட்டீசு மூலமாய் எனக்குத் தெரியப்படுத்தினார்கள். உடனே ஷெ னாகோபாவை பா..............ஆசிநில்லாதினால்[270] சபையில் தெரியப்படுத்தி, அதற்காக யாதியும் கொடுத்திருக்க சிறிது னாள் கழித்து ஷெ னாகோபாவை மாது ஸ்திரி, ஆவுசாயேப்[271] அவர்கள் அரண்மனையில் பாராவில் வைத்து யிருந்த சமாசாரம் நான் கேள்விப்பட்டு, ஷெ சபையிலும் நான் தெரியப்படுத்தியிருக்க ஷெ னாகோபாவை அழைத்து விசாரணை செய்யாமல் வாதியினுடைய பட்சத்தினாலே ஷெ நகைக்காக நான் வாதிக்குப் பணம் கொடுக்கிறதென்று தீர்மானம் செய்து நோட்டீசு ஒட்டியிருக்கிறார்கள். அதற்காக னான் காற்பாற் பிரசங்கத்தில்[272] புனர் நியாயாதி கொடுத்திருக்கிறேன். ஆகையால் ரா.மகாராஜா சாயேபு அவர்கள் ஏழையின் பேரில் தயவுசெய்து கார்பாற் பிரசங்கத்தில் புனர்நியாய விசாரணையில் எனக்கு நியாயம் கிடைக்கும் படியாய் விசாரணை செய்ய வேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடனே கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரு அ ள ௲ ௨ ஞ[273]
பிப்ரவரி மீ ௨ ௩ ௳ ௨

இந்தக் கிறல்
தாளம்பி அக்காள்[274]

## ஆவண எண்: 125

சாகேப் அவர்கள் ............ கிய அரிச்சக்கரபாணி பண்டிதர்[275] அவர்கள் சமுகேஷபத்துக்கு[276]

---

268. துட்டு - ஒரு சிறிய நாணயம்; 48 துட்டு - ஒரு ரூபா (பக்.154)

269. முகாந்திரமாய் - வழியாக

270. ஆசீர் இல்லாததினால் - வராததால்

271. ஆவுசாகேப் என்றது சரபோஜியின் மனைவியாகிய அகல்யாபாயியை.

272. கார்பார் பிரசங்கம் (பக்கம் 168)

273. 23-2-1832

274. அக்காள் - அக்காமார்களில் ஒருவர் - பணிப்பெண்டிர் (பக்.336)

275. அரிச்சக்கிரபாணி பண்டிதர் - நியாயசபையின் நியாயாதிபதியாயிருந்தவர்

276. சமுசேபம் - திருமுன்னிலைக்கு

பாக்குவான்[277] சுப்பராயன் எழுதிக் கொண்ட அர்ஜி என்னவென்றால் நான் வருகிறத்துக்குள்ளாக இன்றையத் தினம் காலமே இரண்டு தாசு வேளையில் தலயாபாளயத்தில் கோர்ட்டு அமீனா[278] முத்துசாமிப்பிள்ளை சேவுகன் கோவிந்தப்ப னாயக்கன் வாதி மனுஷன் புட்டன்பாயி யிவர்கள் மூன்று பேரும் தய்க்கால்[279] வாசலில் நின்று கொண்டிருக்கும் போது, ஷெ தய்க்காலுக்கு ஊழியம் கொண்டு வந்த வெட்டியானைப் பிடித்து தமுக்கு[280] கொண்டு வரச்சொல்லி, அவனைக் கண்டிச்சதற்கு அவன் வரமாட்டேனென்று தகராறு பண்ணினதாயும் நீ வெட்டிமை[281] யில்லையென்று அத்தாட்சிக் கொடு யென்று கண்டித்தவிடத்தில் வெட்டிமை உண்டென்று சொன்னான். உடனே அவனை தமுக்குக் கொண்டு வரச்சொல்லி ரூ. ௬ளஅ[282] சொச்சத்துக்கு நாளைத் திங்கட்கிழமைத் தினம் இரண்டு தாசுக்கு அப்புதஞ்சிறாயன் வகையறா யகவிடும்[283] வெள்ளி நகை பொன்னகை வெங்கலம் பித்தளை வகையறா சாமான் முதலான ஆஸ்திகளை ஏலம் போடுகிறபடியினாலே சுற்றிலும் யிருக்கப்பட்டக் கிராமத்தாரும் வந்து ஏலம் எடுக்கலாமென்று கிராமத்தில் னாலு பக்கமும் தமுக்கு போடும்போது ஏலம் போடக் கூடாதென்று சேவுகன் ஏகாம்பரம் தடங்கல் பண்ணினதற்கு தேவ என்று தமுக்குப் போட்ட பிறகு ராமன் காடவராயன் விட்டு .............................. சேவுகனும் ........................ங்கள் உத்திரவுப்படி தலயாபாளயத்துக்குச் சேர்ந்த ஷெ அமீனா முத்துசாமிப் பிள்ளையையும் ஷெ சேவுகரையும் அழைப்பிவித்து அரண்மனையை சே(ர்ந்த) இலாகாவின் தமுக்குப் போடலாமா வென்று கேட்டதற்கு ஷெ அமீனா முத்துசாமிப்பிள்ளை சொன்னது முன்னாலே நீங்கள் சொன்ன காரியப்படிக்கி ரா.னாதர்[284] அவர்களுக்கு நாம் காகிதம் எழுதினதற்கு -மி அ- கிராமத்தைச் சேர்ந்தது அல்லா கோர்ட்டு துரை[285] அவர்கள் சேதுபாவா சத்திரம் போயிருக்கிறபடியால் இன்றையத்தினம் கும்பகோணத்திற்கு ஷெ துரை அவர்கள் வருவார்கள். வந்தவுடனே உத்திரவு எழுதுகிறோம். நீ ஒழுங்குப்படிக்கு இன்று முதல் ஒருவாரம் வரைக்கும் ஷெ கிராமத்தில் நிதம் (தினம்) ஏலம் போடுகிறதென்று தமுக்கு போட்டுக் கொண்டு வருகிறதென்று உத்திரவு வந்திருக்கிற

---

277. பாக்குவான் - பட்டாளத்துப்பதவிகளுள் பெரியவற்றுள் ஒன்று. (ஆறு ஆட்களுக்குத் தலைவன் 'தர்சி'; 4 தர்சிகளுக்குத் தலைவர்களுள் ஒருவர் 'பாக்வான்' (பக்.342)

278. கோர்ட்டு அமீனா - Court Amin- நீதிமன்ற கட்டளைகளை நிறைவேற்றுபவர்.

279. தைக்கால் - பக்கிரிகள் தங்குமிடம்

280. தமுக்கு - செய்திகளைத் தெரிவிப்பதற்கு அடிக்கப்படும் ஒருமுகம் உடைய பறை

281. வெட்டிமை - வெட்டியான் என்ற ஊழியம்

282. ரூ.608/-

283. அகவிடும் - அடகு வைத்துள்ள (?)

284. னாதர் - நாஜர் - நாஸர் - நியாயமன்றத்தலைவரின் ஆணைகளை நிறைவேற்றும் அலுவலர்

285. கோர்ட்டு துறை - நியாயாதிபதி

தென்று சொன்னான். அந்த உத்திரவைக் காண்பியென்று சொல்லேன். காண்பிக்க மாட்டேனென்று சொன்னான். ஷி அமீனாவும் சேவுகர் வகையறா பேர்களும் தஞ்சாவூர் கோட்டைக்குப் போய் சாப்பிட்டு விட்டு, நாளை உதயத்துக்கு வருகிறேன் என்று சொல்லிப்போட்டு, போயிருக்கிறான். யிது சமுஷ்சேபத்துக்குத் தெரியலாவதா எழுதிக் கொண்டே(ன்)........ உத்திரவு வந்தபடி நடந்து கொள்ளுகிறேன்.

௲ அ ள ௩ ௰ ௩-ம் ௵[286]<br>
ஏப்பிரல் மீ ௰ ச உ

பாக்குவான் சுப்பறாயன்<br>
என்று கையெழுத்து

அசலுக்குச் சரியான நகல்.

## ஆவண எண்: 126

ஸ்ரீ மகாராஜா[287] சாயேப் அவர்கள் திவானத்துக்கு கோட்டை வெளி வடக்குவாசல் தெருவிலிருக்கும் மருதை க; வீரப்பன் உ , ஆறுமுகம் ௩, னாகன் ச, பழனி ரு , நாங்கள் தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்:- மாமாங்க[288] சவாரிக்கு வேலைக்கார சனங்களை சேவுகம் வைக்கிறதாய் நாங்கள் கேள்வி ஆகி வந்திருப்பதால் எங்களுக்கு என்ன வேலை தெரியுமென்றால் கரிதிமாவில் கருதி பண்ணப்பட்ட தமுக்கு தட்டு, மட்டத்தட்டு, பெரிய கூடை, மண் தட்டு சிப்பாய்களுடைய தலப்பாப் பொட்டி, அல்லா பண்டிகைக்கி மகற நனம்பு மால் வேலைகளுக்கு குச்சிகள் சீவுவோம், வேட்டைக்குப் போனால் காடுகள் வெட்டி, ஒழுங்குபடுத்துவோம், அரண்மனை தோட்டங்களில் மூங்கில் வெட்டுவோம். முள்ளு கழிப்போம். இந்த வேலைகள் எங்களுக்குத் தெரியவருமாகையால் அரண்மனையாறவர்கள் ஏழைகளாகிய எங்கள் பேரில் கிருபை செய்து, மேலெழுதிய வேலைகளுக்காக எங்களைச் சேவுகம் வைத்துச் சவரட்சணை செய்து ..........................

௲ அ ள ரு ௰ ம் ௵[289]<br>
பிப்ரவரி மீ ௰ உ

யிந்தக்கிறல் வீரப்பன்<br>
யிந்தக்கிறல் ஆறுமுகம்<br>
யிந்தக்கிறல் னாகன்<br>
யிந்தக்கிறல் பழனி

## ஆவண எண்:127

ஸ்ரீமகாராஜா[290] சாயேப் அவர்கள் திவானத்துக்கு சரபேந் (திரபட்) டணத்திலிருக்கும் சாயபு மிகுந்த வணக்கத்துடன் சலாம் செய்து எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால் எங்கள்

286. 14.4.1833

287. மகாராஜா என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

288. மாமாங்கம் – மகாமகம்; பன்னிரண்டாண்டுகட்கு ஒருமுறை வருவதும், மாசிமாதத்தில் குருசிங்கராசியில் இருக்க முழுமதியோடு மகம் சேரப் பெறுவதுமான புண்ணிய நாளில் கும்பகோணத்தில் நடைபெறும் விழா.

289. 10.2.1850

290. மகாராஜா என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

தகப்பனார் அசாமியை எங்கள் அண்ணன், தம்பி நாலு பிள்ளைகளுக்கும் அசாமி செய்து வைத்தீர்கள். ரா.மகாராஜா சாயேப் அன்னத்துக்கு யாதொரு விரோதமில்லாமல் சேவுகம் செய்து வருகையில் ஸ்ரீ.மகாராஜா சாயேபு சவாரி வந்திருந்த போது, கொழும்பு யா(ழ்ப்பா)ண முதலான இடங்களுக்கு தோணியில் சபர் போகச்[291] சொல்லி உத்திரவு கொடுத்தார்கள். ஷெ அசாமிக்காரர்கள் ........... பாளகரையார் சமக குளிக்காரர்கள் முதலான பேர்களைச் சபர் போகச் சொன்னதற்கு ஒருவரும் போறதில்லை யென்று சொல்லி விட்டார்கள். அப்போதையில் என்னையும், என் தம்பியையும் அரண்மனை யார் எந்த இடங்களுக்குச் சபர் போகச் சொல்லுகிறீர்களோ அந்த இடங்களுக்கு சித்தமாய் சபர் போறோமென்று ஒப்புக் கொண்டதின் பேரில் கரையார்[292] சமக்குளி(க்காரர்கள்)............அவாளும் ஒப்புக் கொண்டார்கள். அப்ப.......மூணு வருஷ காலம் சபர் செய்து வந்தோம். யின்னமும்..............மகாராஜா சாயேப் உஜீர் போட ........ லும் சேவுகம் செய்தே ............ அப்போது அரண்மனை..........எலக்குச் சொற்பச் சம்பளம்................பளம் செய்து தருகிறோமென்று...................அதை எண்ணி நான் சேவுகம் செய்...........மலும் அரண்மனையாருக்கு யாதொரு தப்பித......................ததிலை.

ஆ.................டணம் நேமணக்கு முன் இருந்த உத்தியோகஸ்தர்களுடைய நிர்பந்தனையினால் நான் பயந்து ராஜினாமா எழுதிக்கொடுத்ததே யன்னியில் வேறு யாதொரு குற்றங்களும் நான் செய்ததில்லையானதால் அரண்மனையார் ஏழையின் பேரில் தயவுசெய்து, என் சேவுகத்துக்கு உத்திரவாக வேணுமென்று மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ளு அ ள ரு ம -ம் ஷூ[293] சறாங்கு அல்லிசா
செப்டம்பர் மீ உ ம எ உ

கோட்டைக்குள் மா(னா)ஜப்பா தெருவிலிருக்கும் திருவேங்கிடசா(மி) குமாரன் கோபாலசாமி எழுத்துக்கூலி ரூ- ரு

## ஆவண எண்:128

ரா. அய்யா அவர்கள் சமுகேஷபத்துக்கு தங்கள் ஆபத்ஸகாயய்யன் எழுதிக்கொண்டது. என்னவென்றால் - இப்பவும் னாளது தேதி காலமே,[294] இரண்டு தாசு வரையில் இவ்விடத்தில் வீட்டில் மாதுஸ்ரீ சுந்தரத்தம்மாள் மனோமணி அம்மாள் - ள - அரியபிள்ளை அவர்கள் முதலானவர்களும், மற்றுமுள்ள பேர்கள் அனைவர்களும், நான் சுகமா யிருக்கிறோம்.

291. சபர்போதல் - (தோணியில்) பயணம் செய்தல்

292. கரையார் - கடற்கரைப் பக்கத்து வாழும் வலைஞர்

293. 27.9.1850

294. காலமே - அதிகாலையில்

மற்றப்படி நேற்றிய தினம் பாசிக்கு[295] சஞ்சாயம்[296] தீர்வை[297] உ பணம் சூ பாசி சஞ்சாயம் தீர்வை பு- ச ளு வாண சஞ்சாய தீர்வை பு. கரு(ஒன்றரை) ஞ (அரைக்கால்) (முக்கால் வீசம்) ஆக ரூ. உ, பணம் சூ வ ஙீ நகர்மால்[298] ரஸ்தா யிமாற்தி வேலை[299] யில் நேற்றய தினம் மெய்க்காட்டுசனம்[300] சூ யி -க்கு ரூ. ங பணம் ரு ஙீ ம தருக்குக் கீழ்புரம் கரைக்கு மண்வெட்டி கொட்டினார்கள். நகற்பரிஷ்கார மாவிலே வண்டி வேலை மெய்க்காட்டு மாமூல்படிக்கு சனம் ரு யி அ -க்கு ரூ. ங பணம் எ வ ஙீ டி வண்டிகள் மாமூல்ப்படி னாலுவீதியிலும் சந்துகளிலும் குப்பை எடுத்து மோரிகளில்[301] மண்யெடுத்துக் கொண்டு போய்ப் போட்டுக் கொண்டு வருகிறார்கள். ரஸ்தா யிமாற்தி வேலைக்கணக்கில் நேற்றைய தினம் வரைக்கும் கொடுக்க வேண்டியது. ரூ. ள யி எ பணம் உ ஙீ சூ- திருவாதி யிமாற்த்திக்கி கொடுக்க வேண்டியது. ரூ. அ யி ங பணம் எ ஞ (போக) சில்லரை வர்த்தகாளுக்கு கொடுக்க வேண்டியது.ரூ. யி சு பணம் ரு வ

மெய்க்காட்டுக் கூலிபாக்கி யி அ பணம் கஞ சூஆக ரூ. ள யி எ பணம் உ ஙீ சூ இப்படிக்கிபாக்கி யிருப்பதினால் இனிமேல் தலை தவக்கமாய்ப் போகுமாகையால் ஏதாவது தொகை அயிவேசு கொடுக்கும்படியாய் உத்திரவு வரவேணும்.

கொட்டியத்துக்கு செலவுக்கு ரொம்பவும் நித்தியப்படிக்கு கூட தட்டாய் பணம் இல்லாமலிருந்ததுக்காக பங்கு னாயக்கர் அவர்களிடத்தில் ஏதாவது செலவுக்கு கொடுக்கவேணும். இன்று கொட்டியத்துக்கு ரொம்பவும் தகராறுபட்டு ரூ. ரு யி-கொடுக்கச் சொன்னார்கள். அந்த ஐம்பது ரூபாயும் வாங்கிக் காரியம் நடந்து வருகிறது.

ரா. பண்டிதர் அவர்கள் சரணகமலத்தின்[302] பிறமாறமாகிய[303] என் சிரசு அந்த கமலத்தினுடைய மகிமையினாலே எப்போதும் அங்கேயே மக்கின[304]மாயிருக்கிறது என்கிற (இங்குற) காரியத்தைத் தங்களுடைய நினைவில் பதிய வைத்து யிருந்ததைத் தானே மறுபடியும் நினைவு மூட்டுகிறேன்.

சூஅ ள ங யி க -ம் வு[305] வேணும்.
மார்ச்சு மீ உ யி வ தங்கள் ஆபத்சகாயய்யன்
முகாம் - தஞ்சாவூர்

---

295. பாசி - பயறு; மீன்

296. சஞ்சாயம் - குடிவாரம்

297. தீர்வை - வரி

298. நகர்மால் - நகரத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்வதற்குரிய அலுவலகம் (பக்.456)

299. யிமாறதி வேலை - கட்டிட மராமத்து வேலையைக் கவனித்தல்

300. மெய்க்காட்டு சனம் - குத்தகைக்கு எடுத்துக் கொள்ளாமல் தனித தனியாகக்கூலிபெறும் வேலையாட்கள்.

301. மோரி - கழிவு நீர் வடிகால்

302. சரணகமலம் - திருவடித்தாமரை

303. பிரமரம் - வண்டு

304. மக்கினம் - மக்கனம் - மூழ்கியிருத்தல்

305. 20.3.1831

## ஆவண எண்: 129

ரா.அய்யா அவர்கள் சம்க்ஷேமத்துக்கு தங்கள் ஆபகஸாயய்யன் [306] எழுதிக் கொண்டது என்னவென்றால் - இன்றையத்தினம் காலமே ஒரு தாசு வரைக்கும் வீட்டில் மாது ஸ்ரீ சுந்தரத்தம்மாள் மனோமணி அம்மாள், ரா.அரியபிள்ளை அவர்கள் முதலானவர்கள் சுகமா யிருக்கிறார்கள். நேற்றையத்தினம் பசிக்கி [307] கூடுதல் ரூ. க பணம்க ரூபாசி சஞ்சாயம் கூடுத்தல் பணம் ச ரூ ளு வாண சஞ்சாயம் ரூ. ந பணம் உ ளு ஙீ ஆக கூடுதல் ரூ. சபணம் கனு ரஸ்தாயிமாற்தி வேலை கப்பி போடறதும் பத்தை யடிக்கிறதும் [308] வண்டி வேலை குப்பை வாரிக் கொட்டுகிறது. மாமுல்ப்படி நடந்து வருகிறது. தேவஸ்தானம் ஆயதுரை [309] (இர)ண்டு அலுவலும் தெண்டகப் படிக்கு [310] நடந்து வருகிறது. தேவஸ்தானத்தில் நேமணக்காய் நடந்து காரியமாகிறதற்கு வருகிற அரிக்காரர் [311] முதலானவர்களுக்கு மோயிஸி படி [312] முதலானது மாமூல்ப்படி கொடுத்து வரும்படி உத்திரவு ஆகவேணும். கொட்டியத்துக்குப் போய் மாமூல்ப்படி னான் காரியம் பார்த்து வருகிறேன். மற்றப்படி னான் யிவ்விடத்தில் நடந்து கொள்ள வேண்டிய காரியங்களுக்கு உத்திரவு வந்தபடி நடந்து கொள்கிறேன்.

கூ அ ள ந ய க -ம் ஞு — வேணும்
மார்ச்சு மீ ம எ உ — தங்கள் ஆபஸகாயய்யன்
முகாம்-தஞ்சாவூர்

## ஆவண எண்: 130

ரா. அய்யா அவர்கள் சம்கேஷபத்துக்கு தங்கள் ஆபஸகாயய்யன் எழுதிக் கொண்டது. [313] என்னவென்றால், இன்றையத்தினம் காலமே ஒரு தாசு வரைக்கும் வீட்டில் மாதுஸ்ரீ சுந்தரத்தம்மாள் மனோமணி அம்மாள். ரா. அரியப்பிள்ளை அவர்கள் முதலானவர்களும், மற்று முள்ளவர்களும் சுகமா யிருக்கிறார்கள். நேற்றையத் தினம் பசிக்கி குடுதல் (கூடுதல்) ரூ. க பணம்க ரூபாசி சஞ்சாயம் குடுதல் (கூடுதல்) பணம் ச ரூ ளு வாண சஞ்சாயம் ரூ. ந பணம் உ ளு ஙீ-ஆக கூடுதல் ரூ. ச பணம் கனு ரஸ்தா யிமாற்தி வேலைக்கப்பி போடறதும் பத்தை யடிக்கிறதும், வண்டிவேலை குப்பை வாரிக் கொட்டுகிறதும். மாமூல்ப்படி நடந்து வருகிறது. தேவஸ்தானம் ஆயதுரை இரண்டு அலுவலும் தெண்டகப்படிக்கி நடந்து வருகிறது. தேவஸ்தானத்தில் நேமணக்காய் காரியம் பார்க்கிறதற்கு வருகிற அரிக்காரர்

306. ஆபகஸகய்யன், ஆபகஸாயய்யன் - ஆபத் ஸகாய அய்யன்

307. பசிக்கு – பாசிக்கு

308. பத்தையடித்தல் - மண்ணொடு கூடிய பசும்புல் துண்டுகளை வெட்டி எடுத்துக் கொண்டு வந்து பதித்தல்

309. ஆயதுரை - ஆயத்துறை - சுங்கச்சாவடி

310. தெண்டகப்படிக்கு - வழக்கப்படி

311. அரிக்காரர் - ஹர்காரா - ஒற்றர் முதலிய அலுவலர்கள்

312. மோயிஸிபடி முதலானது - மோகினி, சம்பளம் படிகள் முதலியன

313. முந்தைய கடிதப்படியே உள்ளது.

முதலானவர்களுக்கு மோயிஸி படி முதலானது மாமூல்ப்படி கொடுத்து வரும்படி உத்திரவு ஆகவேணும். கொட்டியத்துக்குப் போய் மாமூல்ப்படி நான் காரியம் பார்த்து வருகிறேன். மற்றபடி நான் இவ்விடத்தில் நடந்து கொள்ள வேண்டிய காரியங்களுக்கு உத்திரவு வந்தபடி நடந்து கொள்ளுகிறேன்.

ரூ அ ள ந ய க -ம் வ
மார்ச்சு மீ ய எ வ
முகாம்-தஞ்சாவூர்

வேணும்
தங்கள் ஆபஸகாயய்யன்

## ஆவண எண்:131

ரா. அய்யா அவர்கள் சமூகத்துக்கு தங்கள் ஆபஸகாயய்யன் மிகவும் வணக்கமாய் எழுதிக் கொள்கிற தென்னவென்றால்:- இப்பவும் இன்றையத்தினம் ராத்திரி இரண்டு தாசு[314] வரைக்கும் இவ்விடத்தில் வீட்டில் அனைவர்களும் க்ஷேமம். நேற்றையத் தினம் - ரா.சிரஞ்சீவி, அரியப்பிள்ளை அவர்களுக்கு சரீரத்திலே பகல் எட்டு தாசு[315] வேளையில் கொஞ்சம் சூடு போல் கண்டு மாறாலே[316] வாயுவினாலே கொஞ்சம் வலியும் கண்டு இருந்தது. அதுக்கு இன்றையத்தினம் விரோசனத்துக்கு[317] காலம்[318] கொடுத்து நன்றாய் விரோசனமாகி, தேகம் நல்ல அனுகூலமாய் சுகமாய் பத்தியம் வாங்கி[319] க்ஷேமமா யிருக்கிறார்கள். சமாசாரம் தெரியலாவதாய் எழுதிய காரியம் வேணும்.

ரூ அ ள ந ய க -ம் வூ[320]
மார்ச்சு மீ ய சுவ
முகாம் தஞ்சாவூர்

தங்களுடைய
ஆபஸகாயய்யன்

## ஆவண எண்:132

ரா. அய்யா அவர்கள் சமூகத்துக்கு தங்கள் அபஸகாயய்யன் எழுதிக் கொண்டது என்னவென்றால் இன்றையத்தினம் காலமே ஒரு தாசு வரைக்கும் இவ்விடத்தில் மாது ஸ்ரீ சுந்தரத்தம்மாள், மனோமணி அம்மாள், ரா.அரியப்பிள்ளை அவர்கள் முதலானவர்களும், மற்றுமுள்ளவர்களும் சுகமாயிருக்கிறார்கள். நேற்றையதினம் பசிக்கி சஞ்சாயதீர்வை ரூ. க பணம் கூபாசி சஞ்சாய தீர்வை பணம் ரூ. ரு வ வாண சஞ்சாய தீர்வை பணம் க ரு ளு சூ ஆக

---

314. ராத்திரி இரண்டு தாசு - இரவு தொடங்கி இரண்டு மணி (அதாவது இரவு 8 மணி)

315. பகல் எட்டு தாசு-பகல் எட்டு மணி (அதாவது பிற்பகல் 4 மணி)

316. மாறாலே - மார்பிலே

317. விரோசனம் - பேதிமருந்து

318. காலமே - காலையில்

319. பத்தியம் வாங்கி - மருந்துக்கேற்ற உணவு உண்ணுதல்

320. 16.3.1831

ரு உ பணம் ரு ளு ஈ ரஸ்தா யிமாற்றி வேலை சனம்ரு ய கக்கு ரூ. ௩பணம் உ ளு ௩ வீ சுமதருக்கு வடபுரம் கரைக்கு மண்வெட்டிக்கொட்டி யிருக்கிறது. மேழவாசல் ரஸ்தாவில் இரண்டு மாங்கன்று வைத்து இருக்கிறது. பத்தையருக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டு வருகிறார்கள். முன்னாலே வைத்து யிருக்கிற மாங்கன்று, பிலாக்[321] கன்றுகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டு வருகிறார்கள். வண்டி வேலை வீதியிலும் மோரியளிலும் சுரங்கங்களிலுமிருக்கிற குப்பை மண்ணுகளை ரேவணி பள்ளத்தில்[322] கொண்டு போய்க் கொட்டிக் கொண்டு வருகிறார்கள். தேவஸ்தானத்தில் ஸ்ரீகாளியம்மன் கோவிலில் நேற்றையத்தினம் துசாரோகண[323]மாகி உச்சவம்[324] நடந்து வருகிறது. ஆயத்துரைக்[325] காரியம் ஜாக்கிரதையாய் நடந்து வருகிறது. கொட்டியத்துக்கு னான்போய் தெண்டகப்படிக்கு காரியம் பார்த்து வருகிறேன். மற்றபடி நான் இவ்விடத்தில் நடந்து கொள்ள வேண்டிய காரியங்களுக்கு உத்திர்வு வந்தபடி நடக்கக் காத்து யிருக்கிறேன். வேணும்.

தாதாகலம் கொட்டியத்தில் ரம்ஞ்சான் சந்து[326] வரைக்கும் பேர்வழிகள் பேரில் பாக்கி அரிசி வெங்கடாசலப்பிள்ளை கணக்குப்படி ரூ. ரூரு ள ரு ய ௩ ளு சுகற்கோன்[327] கிருஷ்ணய்யர் கணக்கு ஆகவில்லை. அதினாலே அந்த கணக்கும், வெங்கடாசலப் பிள்ளை கணக்கும் ஒத்துக்கொண்டு கையெழுத்து ஆகவில்லை. அந்தக் கார்கோன் கிருஷ்ணப்பாவை சுருக்கிலே[328] கணக்கு முடிக்கும்படி ஜாக்கிரதைப் பண்ணியிருக்கிறேன்.

ரூ அ ள ௩ய க -ம் உ[329]
மார்ச்சு மீ ய கூ
முகாம் - தஞ்சாவூர்

தங்கள்
ஆபகஸகாய்யன்

## ஆவண எண்:133

ரா. அய்யா அவர்கள் சமூகத்துக்கு தங்கள் ஆபகஸகாய்யன் மிகவும் வணக்கமாய் எழுதிக் கொள்ளுகிறதென்னவென்றால் இன்றையத்தினம் காலமே மூன்று தாசு[1] வரைக்கும்

---

321. பிலா - பலா

322. ரேவணிப்பள்ளம் - அகழி (?)

323. துசாரோகணம் - கொடியேற்றம்

324. உச்சவம் - திருவிழா

325. ஆயத்துறை - சுங்கச்சாவடி

326. ரம்சான் சந்து - ரம்சான் பண்டிகை நடைபெறும் சந்து (?)

327. கற்கோன் - கார்கோன் - கணக்கு அலுவலன்

328. சுருக்கிலே - விரைவில்

329. 19.3.1831

1. காலமே மூன்றுதாசு - காலையில் மூன்றுமணி நேரம் (முற்பகல் 9 மணி)

இவ்விடத்தில் வீட்டில் தங்கள் தயவுனாலேயும், ஆசிர்வாதத்தினாலேயும், மாதுஸ்ரீ சுந்தரத்தம்மாள் அவர்கள் சிரஞ்சீவி மனோன்மணி அம்மாள் அவர்கள் சிரஞ்சீவி ரா. அரியப்பிள்ளை அவர்கள் முதலானவர்களும், மற்றுமுள்ளவர்களும், சுகமாயிருக்கிறார்கள். மற்றப்படி சேதிகளும் வேண்டிய காரியங்களுக்கும் உத்திரவுப்படி நடந்து கொள்ளுகிறேன்.

ரூ அ ள ங ழ க -ம்[2]
மார்ச்சு மீ உ ᏝᎴ எ ௨
முகாம்-தஞ்சாவூர்

வேணும்
தங்கள் ஆபஸகாயய்யன்

## ஆவண எண்:134

சுவாமி[3] அவர்கள் திவ்ய[4] ஸ்ரீ சறணாறவிந்தங்களில்[5] குழந்தையாகிய ஆபஸகாயய்யர் மிகவும் வணக்கமாய் சாஷ்ட்டாங்கமாக நமஸ்கரித்து[6] விக்கியானம்[7]. இப்பவும் நாளது தேதி வரைக்கும் இவ்விடத்தில் வீட்டில் தீர்த்த ரூபனாகிய[8] ஸ்ரீ மாமா அவர்கள் மாதுஸ்ரீ அக்கா, அம்மா குழந்தைகள் அனைவர்களும், மற்றுமுள்ள பேர்களும் சுகமாயிருக்கிறார்கள். அவுஷத கொட்டடி[9] முத்துசாமி யிடத்தில் சுவறணமாலிகா வசந்த மாத்திரை[10] க-ஒன்று அசுவ கெந்தாதி லேகியம்[11] ஒரு சேரும் வாங்கி சவாரி அனுதினம் சாயங்காலத்தில் தானே நான் அக்காவிடத்தில் கொண்டு போய்க் கொடுத்து, அவாளும் வெங்கோப பண்டிதர் அவர்களிடத்தில் சேரப் பண்ணினார்கள். சென்னப் பட்டணத்திலிருந்து வேதசாஸ்திர சம்பன்ன[12] ராகிய ரா.கிருஷ்ணபட்டாச் சாரியார் அவர்கள் குடியிருக்கிற அரண்மனை தோட்டம், வீடு, ஷை பட்டாச்சாரியார் பழுது பார்த்துக் கட்டினத்துக்கு[13] செலவு ஆகியிருக்கிற கணக்கும், ஷை தோட்டம் வருமானத்து ஒரு கணக்கும், எஜமானர்கள்

---

2. 27.3.1831

3. சுவாமி - ஆபத்சகாயய்யன் என்பவர் எழுதியவற்றுள் எல்லாம் 'அய்யா' என்று இருக்க இங்கு மட்டும் "சுவாமி" என்றுள்ளது

4. திவிய - திவ்விய - மேலான

5. சரணாரவிந்தங்கள் - திருவடித்தாமரைகள்

6. சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து - இருகை, இரு முழங்கால், இருதோள், மார்பு, நெற்றி ஆகிய எட்டுறுப்புகள் நிலந்தீண்டுமாறு வணங்கி

7. விக்கியாபனம் - விஞ்ஞாபனம் - விண்ணப்பம்

8. தீர்த்தரூபன் ஆகிய - தூயோன் ஆகிய; மரியாதைக்குரிய

9. அவுஷதக்கொட்டடி - மருந்துகள் வைக்கப்பட்டிருக்கும் அறை (பக்.307)

10. இம்மாத்திரை சுரநோயுற்றவர்க்குக் கொடுக்கப்படும் மாத்திரை எனத் தோன்றுகிறது

11. அசுவகந்தி என்பது அமுக்கிறா என்ற செடி, அதன் கிழங்கு முதலிய பொருள்களைக் கொண்டு செய்யும் லேகியம்

12. சம்பன்னர் - நிறைவுடையவர்

13. கட்டினத்துக்கு - கட்டினதற்கு

சன்னிதானத்திற்கு காகிதத்துடன் அனுப்பினதாயும் அதற்கு சால்சாப்பு[14] ஆகவேணுமென்றும், ஷை பட்டாச்சாரியார் தேகஸ்திதி[15] அனுகூலத்திற்காக முன்தத்தும் பிள்ளையைக் கொண்டு மாத்திரையினாலே சரீரம் சொஸ்த்தமா[16] யிருப்பதினாலே இன்னும் அந்த மாத்திரையில் நூறு மாத்திரை கொடுக்கும்படியாக உத்திரவு ஆகவேணுமென்றும், பாலச்சந்திர சாஸ்திரியள் பிள்ளை சா.சிசாஸ்திரியள், எஜமானர்கள் சன்னிதானத்திற்கு அறிவிக்கும்படி கேட்டுக் கொண்டபடி விண்ணப்பம் செய்யலானேன். மற்றப்படி நான் நடந்து கொள்ள வேண்டியதற்கு புத்திமதி எழுதி வருகிறபடிக்கு நடக்கக் காத்திருக்கிறேன்.

ரு அ ள ந ய க -ம்ஹ[17]
மார்ச்சு மீ உ ௰ க ௨
முகாம் - தஞ்சாவூர்

ஆபகஸ்காயய்யன்

# ஆவண எண்:135

ரா. அய்யா அவர்கள் சமூகத்திற்கு தங்கள் ஆபஸகாயய்யன் எழுதிக் கொண்டது என்னவென்றால் - இன்றையத்தினம் காலமே மூன்று தாசு வரையில் இவ்விடத்தில் வீட்டில் மாதுஸ்ரீ சுந்தரத்தம்மாள் - மனோமணி அம்மாள ரா.அரியப் பிள்ளை அவர்கள் முதலானவர்கள் அனைவர்களும், மற்றுமுள்ள பேர்களும் சுகமாயிருக்கிறார்கள். சவ்வால்[18] ஹ சு உ யில் என்பேரால் எழுதப்பட்ட தங்களுடைய காகிதத்தை நேற்றையதினம் னாலு தாசுக்கு வரப்பத்திக் கொண்டு,[19] அதில் காணப்பட்ட உத்திரவுப் பிரகாரம் நடந்து வருகிறதே முக்கியமான காரியமா யிருக்கிறேன். கொட்டியத்து யிஸது மேல் அரிசி சமுசாயி[20] கணக்கு நேற்றைய தினம் வெங்கடாசலப்பிள்ளை கணக்கு எழுதப்பட்ட கார்கோனிடத்தில், கணக்கு ருசுப்படுத்திக் கொண்டு வந்தார். அந்தக் கணக்குக்கு நான் கையெழுத்து வழக்கப்படி வைத்து இருக்கிறேன். கொட்டியத்தில் நிசிந்தை[21] யுடையபண்ணீசனுடைய[22] தாயாதிகளில் ஒருவர் தெய்வீகமாய் போன படியினாலே[23] அவருக்கு பத்துனாளைக்கு துஷ்டடியா[24] யிருக்க.

14. சால்சாப்பு ஆகவேணும் - பதில் வரவேண்டும்

15. தேகஸ்திதி - உடல்நிலை

16. சொஸ்த்தம் ஆய் - தேறி

17. 21.3.1831

18. சவ்வால் - முகம்மதியருடைய மாதங்களில் பத்தாவது

19. வரப்பத்திக்கொண்டு - பெற்றுக்கொண்டு

20. சமுசாயி - கடன்

21. நிசிந்தை - ஒரு அலுவலன்

22. பண்ணிசு - பண்டவாணிகர் (?)

23. தெய்வீகமாய் போனபடியினாலே - இறந்தமையால்

24. துஷ்டடியாய் (?) - ஆசௌசம்; சூதகம் ; உறவினர்களின் இறப்பினால் ஏற்படும் தீட்டு

வேண்டியது சம்பவித்தது இன்றும் காசு நீசு[25] காயலாவா[26] யிருந்து இப்போது சித்தே[27] லெகுவாய் கொட்டியத்துக்கு ஒரு வேளை வருகிறபடியினாலேயும் ஷெ காசு நீசனுடைய பண்ணீசு காயலாவாய் மாலுக்கு வராமல் யிருப்பதுனாலேயும் காசு நீசு மாலுக்கு வந்தாலும் கொள்ளு சமாவிசுக்குப் போனால் காயலாவா யிருந்த உடம்பு காயிலா ஆகும். இன்று சொல்லுகிறதாயும் அதனாலே கொள்ளு கமாவிசு அறகத்தாய் போறதாயும்[28] ரூமாசி[29] அவால்தாற்[30] சொல்லிக் கொண்டார். ஆகையால் படுபூசி காரியம் பார்க்கிற கோபால் பண்டிதரை வைத்துக் கொண்டு, ரூமாசியையும் கிட்ட ஜாக்கிரதையா யிருக்கச் சொல்லி, ஷெ கமாவிசு தட்டாமல் சமா செய்யும்படி நமாசிக்கி[31] னான் சொன்னேன். மற்றப்படி அந்த மாலிலே நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஒருவேளை காசுநீசு மாலுக்கு வருகிறபடியினாலே ஜாக்கிரதையாய் நடந்து வருகிறது. நேற்றையத் தினம் பசிக்கி சஞ்சாய திர்வை ரூ க பணம் சுாரு ரீ சூ பாசி ஷெ பணம் சுாறு சூ வாணம் ஷெ க ரு ஙு ஆக ரூ உபணம் ச நகர் பரிஷ்கார ரஸ்தாவேலை நேற்றையத்தினம் மெய்க்காட்டுசனம்சூயிக்கு ரூ ந. பணம் ரு ரீ மதக்குக்கு[32] கீழ் பாரிசம்[33] கரைக்கு மண்யெடுத்துக் கொட்டிக் கொண்டு வருகிறார்கள். வண்டி சேவுகம் தெண்டகப்படிக்கு நடந்து வருகிறது. நகற்மால் வண்டியில் ஒரு வண்டி, சவாரீ முகாமுக்கு சாமந்தார் கானாவில் மருந்து வரப்பட்ட சாமானுக்காகவும் அசுவ றக்ஷ[34] சபனீசு[35] யிடத்தில் யிருந்து வரப்பட்ட சாமானுக்காகவும் கொடுக்கும்படியாய் அரண்மனையார் உத்திரவு கொடுத்து, அதுக்கு பதிலாய் யிமாற்தியில் இருந்து, ஒரு வண்டி நகர்மாலுக்கு கொடுக்கிறோமென்றும் சொல்லி இருக்கிறான். நகர்மால் வண்டி ..........ல ஷெ சாமான் இன்றையத்தினம் புறப்பட்டு, சவாரி முகாமுக்கு வருகிறது. மற்றப்படி நான் இவ்விடத்தில்

---

25. காசுநீசு - (கமாவிசு) ஒரு சிறிய அலுவலன்

26. காயலாவாய் - சுரநோய் பிடிக்கப்பட்டு

27. சித்தே - சற்று

28. அறகத்தாய்போறதாயும் - யோக்கியமாய்ப் போகிறதாகவும்

29. ரூமாசி - ஹவில்தாரின் பெயர் போலும்

30. அவால்தாற் - ஹவில்தார் - இராணுவ அதிகாரி

31. நமாசிக்கி - நமாசிக்கு (?)

32. மதக்குக்கு - மதகுக்கு

33. கீழ்பாரிசம் - கிழக்குப்பக்கம்

34. அசுவ ரக்ஷக - குதிரைகளைக் காப்பாற்றும்

35. சபனீசு - சப்நிவீஸ் - எழுத்தர்

நடந்து கொள்ள வேண்டிய காரியங்களுக்கு எழுதி வருகிற உத்திரவுப்படி நடக்கக் காத்து யிருக்கிறேன்.

சூ அ ள ௩ ய க -ம் ஷு[36] தங்கள்
மார்ச்சு மீ˝ உ ய க உ ஆபஸகாயய்யன்
முகாம் தஞ்சாவூர்

## ஆவண எண்:136

ரா. அய்யா அவர்கள் சமுகத்துக்கு தங்கள் ஆபகஸ்காயய்யன் எழுதிக் கொண்டது. என்னவென்றால்:- இன்றையத் தினம் காலமே இரண்டு தாசு வரைக்கும் மாதுஸ்ரீ சுந்தரத்தம்மாள், மனோமணி அம்மாள், ரா.அரியப்பிள்ளை அவர்கள் முதலானவர்கள் அனைவர்களும் சுகமா யிருக்கிறார்கள். நேற்றையத்தினம் ராத்திரி மூன்று தாசுக்கு மேல் ஸ்ரீகோதண்டராம சுவாமி கோவிலில்[37] சுவாமி கருட வாகனத்து மேல் சப்பரத்தில் எழுந்தருளியாகி ராத்திரி ஒன்பது தாசுக்கு[38] கோவிலுக்கு வந்து, மண்டகப்படியில் விளங்கினார். கொட்டியத்துக்கு நான் தெண்டகப்படிக்கிப் போய் காரியம் பார்த்து வருகிறேன். தேவஸ்தானம் ஆயத்துரை அலுவல் சருவ ஜாக்கிரதையாய் நடந்து வருகிறது. நேற்றையத் தினம் பசிக்கி சஞ்சாயத்திர்வை ரூ. க பணம் எஃபாசி சஞ்சாயத்திர்வை ரூ ஞ்ரு வாணசஞ்சாயத்திர்வை ரூ௩ பணம் ௩ வ ஙி˝ஆக ரூரு பணம் சுவ ஞீபங்குனிமீ˝ ரு ரஸ்தா மெக்காடு ஜனம் ௩ ய கூக்கு ரூ உ பணம் சு ஞுஸிரஸ்தா மதக்கு மேல்புரம் கரையில்மண் எடுத்துக்கொட்டி, யிருப்பதஞ்சு கெஜம் வரைக்கும் பத்தையடித்து,[39] பதினைந்து கெஜம் நீளம் கப்பியும்,[40] அடித்துத் திர்மானமாகியிருக்கிறது. சூஉ ஜனம் சுய கூ-க்கு ரூ உ பணம் கஞு மதகுக்கு மேற்கு மண்யெடுத்துக் கொட்டிப் பத்து கெஜம் கப்பிப்போட்டு திம்மசு பண்ணி[41] யிருக்கிறது. வண்டி சேவுகம் தெண்டகப்படி நடந்து வருகிறது. கொட்டியத்தில் யிஸது மேலுக்கு விட்ட நெல்லினுடைய அரிசி சாகுபடி கணக்கு சந்தா ஆன மறு தேதியில் திர்மானமாய் எழுதி ஆகிற வழக்கத்திற்கு விரோதமாய் சந்தா ஆகி மூன்று தேதி ஆகி வருகிறது. கணக்கு ஆகவில்லை, என் கணக்கு ஆகயில்லை என்று வெங்கடாசலப்பிள்ளையைக் கேட்டால் கிருஷ்ணய்யன் என்பவர் கணக்கு எழுதி முடிக்கவில்லை. அவர் கணக்கு எழுதி முடித்தவுடனே ருசுப்பித்துக் கொண்டு வருகிறேன். இன்னும் தன்னிடத்தில் கணக்கு ஆகியிருக்கிற தென்றும், சொல்லுகிறார். ஷ கிருஷ்ணப்பாவை ஷ கணக்கை சுருக்கிலே முடிக்கும்படியாயி சொல்லியிருக்கிறேன். இது சேதி தெரியலாவதாய் எழுதிக் கொண்டேன்.

---

36. 21.3.1831

37. கோதண்டராமசாமி கோயில் - மாரியம்மன் கோயில் என்று வழங்கும் ஊரிலுள்ள திருமால் கோயில்

38. ராத்திரி 9 தாசு - இரவு 3 மணி

39. பத்தையடித்து - மண்ணோடு கூடிய பசும்புல்துண்டுகளை வெட்டிக் கொண்டு வந்து பதித்தல்

40. கப்பி - ஜல்லி

41. திம்மசு பண்ணி - திமிசுக்கட்டையால் கெட்டிப்படுத்தி; திமிசு - இளகிய தரையை கெட்டிப்படுத்தும் கட்டை

மறறப்படி னான் நடந்து கொளள வேண்டிய காரியங்களுக்கு எழுதிய திர்வுப்படிக்கு நடக்கக் காத்து யிருக்கிறேன். வேணும்.

தூ அ ள ஙூ ய க -ம் ஹ[42] தங்கள்
மார்ச்சு மீ ய அ உ முகாம்-தஞ்சாவூர் ஆபகஸகாயய்யன்

## ஆவண எண்:137

இப்பவும்-அய்யாவே.

ரா.கிருஷ்ண சுவாமி திட்சதர் அவர்களுக்காக செய்வித்த சந்தனாதித் தயிலம் சிசா- உ லேகியம் சேர் அ : தூபம் சேர் உ இந்த மருந்துகள் சுருவாகி[43] ஷெ மருந்துகளை - ரா.பங்கு னாயக்கர் இடத்தில் காண்பி வித்து, அவாள் உத்திரவுப்படி திட்சிதர் அவர்கள் வீட்டில் கொண்டுபோய் நேற்றைய தினம் கொடுத்தேன். இன்று மருந்து கொட்டடி முத்துசாமி தங்களுக்கு அவன் பேரால் சாஷ்டாங்கமாக அடைவதுடன் தெரியப்படுத்த வேணுமென்று சொன்னதுமல்லாமல் கற்பூற வேஷ்டி-க-; சீட்டிபிறபோசு-க இந்த உருப்படியும் ஆனைமால்[44] அவால்தார் வசமாய் கொடுத்து, அனுப்பி யிருக்கிறதாய் தெரியப்படுத்த வேணுமென்று சொன்னான். இது காரியம் தெரியவாவதாய் எழுதிக்கொண்டேன்.

தூ அ ள ஙூ ய க -ம் ஹ தங்கள்
மார்ச்சு மீ ய கை உ ஆபகஸ்காயய்யன்

தேவஸ்தானம் கார்பாரி கிருஷ்ணப்பா தங்கள் பெயருக்கா, தன்னுடைய க்ஷேமத்துடன் அனேக ஆசிர்வாதம் தெரியப்படுத்த வேணுமென்று சொன்னார்.

## ஆவண எண்:138

நகல்

ஸ்ரீ மகாராஜா[45] சாயேப் அவர்கள் திவானத்துக்கு ஸ்ரீ நம்பர் ஆவுசாயேப் தோட்டம் வகையறா மத்தியஸ்தம்[46] அண்ணாஜி பண்டிதர் முன்பாக ஷெ இலாகாவைச் சேர்ந்த இதனடியில் கையெழுத்து வைத்திருக்கிற சுங்கந்தவிழ்த்தான்[47] மிராசுதார்களுடைய விசாரணை:-

---

42. 18.3.1831

43. சுருவாகி - (?) தயார் செய்யப்பட்டு

44. ஆனைமால் - பீல்கானா; ஹத்திகானா; யானைகள் கட்டுமிடம்

45. மகாராஜா என்றது சரபோஜியை

46. மத்தியஸ்தம் - ஒர் அலுவலன்

47. சுங்கந்தவிழ்த்தான் - சுங்கந்தவிர்த்தான்; இது முதற்குலோத்துங்கனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று. இப்பெயர் கருந்தட்டான்குடிக்கு உரியதாயிருந்தது என்று 1916க்குரிய கல்வெட்டெண்கள் 231,233 ஆகியவற்றால் அறியப்பெறும். இந்நாளிலும் கருந்தட்டாங்குடியின் ஒரு பகுதிக்குச் சுங்கம் தவிர்த்தான் திடல் என்ற பெயர் உள்ளது (பக்கம் 178)

கேள்வி:- சங்கந்தவிழ்த்தான் கிராமத்தில் நீங்களறிந்த வயதில் விற்று இருக்கிற மனைக்கட்டுக்கள் எவாளவாள்[48] யார் யாருக்கு எந்த விலைக்கு விற்று இருக்கிநீர்கள்?

பதில்:- நாராயணக் கலக்குடையாயெனபவருக்கு வேலாயுதம் நிஎன்பவன் தன்னுடைய பெரியப்பன் மனையை பதினைந்து பொன்னுக்கு[49] வால்வீச்சுடன்[50] உத்தேசம் ச௰ரு - அடிமனையை சுத்தக்கிரய[51] சாசனம் பண்ணிக் கொடுத்திருக்கிறான்.

ஷை நாராயணக்கலக் குடையாருக்கு சக்கிறமணி என்பவன் உத்தேசம் உ௰சு அடி வால்வீச்சுடன் மனையை பதினைந்து பொன்னுக்கு வித்திருக்கிறான். ஷை நாராயணக்கலக் குடையான் மகன் கிருஷ்ணசாமி கலக்குடையான் என்பவனுக்கு வீரப்பெருமா பிள்ளை மகன் கோபாலப்பிள்ளை என்பவன் வால்வீச்சுடன் உத்தேசம் உ௰எ அடி மனை நஞ்சை/ ச௰ /குளி[52] உ ள ௰ ஸ்ரீ ௰ க பணத்துக்கு விற்று யிருக்கிறான்.

கேள்வி:- ஷை கிராமத்தில் இந்தக்கிறயத்துக்கும் அதிக விலையாய் யாராவது யாருக்காவது விற்றதுண்டா?

பதில்:- இதுக்கு அதிக விலைக்கு விற்றதில்லை.

கேள்வி:- வாதி வீராயி என்பவளுக்குக் கோர்ட்டில் ஆன ராஜினாமா திர்ப்புப் படிக்கு முத்துக்கிருஷ்ணா ரெட்டி உள்ளூத்தாறம் கொடுக்க வேண்டிய நஞ்சை நிலம் வகையறா இனங்களில் இதுவரைக்கும் தாபனம்[53] ஆக வேண்டியது அசல் ஒப்பந்தம் வால்வீச்சுடன் நல்ல மனையா யிருப்பத்தைந்து அடிமனை க ; தாபனம் ஆகவேண்டியிருக்கிறதற்கு இப்போது, முத்துக்கிருஷ்ணா ரெட்டி, உள்ளூத்தாரம் குடியிருந்துக் கொண்டு இருக்கிற கட்டுக் கோப்பு வீட்டே அல்லாமல் ஷை முத்துக்கிருஷ்ணா ரெட்டி சதாசிவய்யனிடத்தில் வாங்கி யிருக்கிற மனையை ஷை தாபநத்துக்காக விட்டு விடுகிறோமென்று சொல்லுகிறதை ஷை மனை தெற்குத்தெரு தென்சறகு, கோடியில் ஷை தெருவாரி தண்ணீர் அடிக்கிற இடத்திலும், இருக்கிற படியினாலே ஷை மனையை தான் வாங்க மாட்டேனென்று ஷை வீராயி என்பவள் சொல்லுகிறாளே. அதுக்கு வால் வீச்சுடன் தாபனம் ஆக வேண்டி இருபத்தைந்து அடிமனைக்குப் பொதுவாய், மனை கிரயம் பண்ணினதைப் பிரதிவாதி முத்துக்கிருஷ்ணா ரெட்டி இடத்தில் வாங்கி வாதி வீராயி என்பவளுக்கு தாபனம் பண்ண வேண்டியதாயிருக்குதே. அதற்கு ஷை மனை கிரயமாய் பிரதிவாதி யினிடத்தில் எத்தனை பணம் வாங்கி வாதிக்குக் கொடுக்கலாம். அது விகிதமாய் தருமமாய், உங்களுக்குத் தோணினதைச் சொல்லும்.

பதில்:- பதினைந்து பொன் வாங்கிக்கொடுக்கலாம்.

---

48. எவாளவாள் - எவ்வெவர்

49. பொன் - 10 பணம் கொண்டது

50. வால்வீச்சு - வாசல் முதல் கொல்லையின் முடிவு வரையுள்ள வீட்டின் நீளம்

51. சுத்தக்கிரயம் - எல்லாவுரிமைகளோடு விலைக்குக் கொடுத்தல்

52. குளி - குழி

53. தாபனம் - நிலை நிறுத்துதல்

கையெழுத்துபஸவாரெட்டி கையெழுத்து; கையெழுத்து ராமாயீ கையெழுத்து; கையெழுத்து-கோபால பிள்ளை கையெழுத்து; கையெழுத்து அய்யாவு கையெழுத்து

ரூ அ ள ங௰ க -ம் ஹு[54]
ஆகஸ்ட் உ ௰ க ஷ

அசலுக்குச் சரியான நகல்

## ஆவண எண்: 139

நகல்

ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் திவானத்துக்கு சுங்கந்தவிழ்த்தான் மிராசு முத்துக்கிருஷ்ணா ரெட்டி மிகுந்த வணக்கத்துடனே தெண்டனிட்டு எழுதிக் கொடுத்த யாதி என்னவென்றால்:- ஷெ கிராமத்திலிருக்கும் வாதியாகிய வீராயி என்பவளுக்கு ராஜினாமாப் - பிரகாரம் நடப் விட்டது போக பாக்கி உ ௰ ரு அடிமனை விடச்சொல்லி, என்னை அரண்மனையார் ரொம்பவும் தொந்திரவு செய்கிறதினாலே எனக்கு குடியிருக்கிற மனையைத் தவிர வேறுமனை இல்லாததினாலே ஷெ கிராமத்தில் மிராசு சதாசிவய்யனிடத்தில்/ உ ௰ ரு /அடிமனை கிரயத்துக்கு நான் வாங்கி மேலெழுதிய வீராயி என்பவளை ஒப்புக் கொள்ளச் சொல்லுகிறதினாலே ஷெ கிராமத்தில் கிரயத்துக்கு வாங்கி இருக்கிற மனைகளில் உசந்த விலையாய் வால் வீச்சுடனே உ ௰ எ அடிமனை ஷெ யூரிவிருக்கும் சக்கரைமயிடத்தில் நாராயணக் கறக்குடையார் ரூ. ௰ ரு பணத்துக்கு வாங்கி யிருக்கிற வீதப்படிக்கு ஷெ யாளுக்கு நான் கொடுக்க வேண்டிய உ ௰ ரு அடிமனைக்குள்ள வீதம் ரூ. ௰ ங பணம் க[55] ஆகிறது. அரண்மனையார் என்னை மனைவிடச் சொல்லித் தொந்திரவு பண்ணுகிறதினாலும், எனக்கு வேறு மனை இல்லாததினாலும் மேலெழுதிய வீதப்படிக்கு மேல் அதிகமாய் ரூ. ங பணம் ரு[56] கொடுக்கிறேன். நான் ரொம்பவும் ஏழையானதினாலும், ஷெ மனைக்காக நான் கொடுக்கிற ரூ. ௰ எ பணம் சு[57] பதினேழு பொன், னாலு பணத்தை அவளுக்கு வாங்கிக் கொடுத்து, அவளுக்கு வாங்கிக் கொடுத்து ரசீது வாங்கிக் கொடுக்க வேணுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கற ஹு
ஆவணி மீ அ ஷ[58]

கையெழுத்து
கிருஷ்ணாரெட்டி கையெழுத்து.

அசலுக்குச் சரியான நகல்.

---

54. 21.8.1831

55. 13 பொன் 1 பணம்

56. 3 பொன் 5 பணம்

57. 17 பொன் 4 பணம், இதனால் 10 பணம் கொண்டது ஒரு பொன் என்பது அறியவருகிறது. 10 பணம் - ஒரு சக்கரம்; எனவே சக்கரமும் பொன்னும் ஒன்றே ஆதல் அறியப்பெறும்

58. கற வருஷம் ஆவணி மீ 8 ஷ - (1831) ஆண்டறுபதனுள் 25 ஆவது

## ஆவண எண்: 140

சவுபாக்கியவதி மாது ஸ்ரீ ராஜாகுமராம்பாபுரம் சத்திரம்[59] திவானத்துக்கு திய்யத்தூர்ஸ்ரீ சுந்தரராஜா பெருமா கோவில்[60] பூஜ பண்ணுகிற ரெங்கப் பங்கார் எழுதிக் கொடுத்த அத்தாட்சி பிலவங்க ஸூ சித்திரை மீ ரு உ[61] என்னவென்றால் - ஷெ கோவிலுக்காக உள்ளூரில் வரப்பட்ட மான்யம் வகையறா வருமானம் முழுவதும் சாத்தியடி வெட்டி வயல் சுறோத்திரியம், பங்கு வகையறா வருமானம் முழுவதும் இன்னம் ஷெ கோவிலுக்கு எந்த விதத்தில் வருமானம் இருக்கிறதோ, அதுவும் மேலெழுதிய கோவிலுக்கு வரப்பட்ட யாவத்து வருமானங்களும், அரண்மனையார் சேகரம் செய்து, ஒரு இடத்தில் வைத்து, அதில் நித்தியப்படி னாள் க க்கு அரிசி சுஉ உரி[62] மரக்கால் வீதமும் என் சிலவுக்கு மீ க க்கு ரூஉ வீதம் ஆள் மாகாண து றோபஸ்துக்கும்[63] மீ க க்கு ரூ. .க . வீதமும் வாங்கிக் கொண்டு நித்தியப்படி கோவில் பூசை, நெய்வேத்தியம்[64] தப்பாமல் நடப்பிவித்துக் கொண்டு வருவோமாகவும், மேலெழுதிய துகை ரூ. க க்கு கூடுதலாகிறதற்கு மேலெழுதிய வருமானம் அதிகமாய் வந்தால் வந்தத்துக்கு தக்கது வருஷ ஏறுபடியும்,[65] திருப்பணி வகையறா ஏதாவது இருந்தால் அதுவும் அரண்மனையார் திட்டம் தரப்படி நடப்பிவிக்கிறது. மேலெழுதிய திட்டத்துக்கு வருமானம் குறைச்சல் வந்தால் குறைச்சலான தாமாஷாபடி[66] நிரவல்படி ஆள் மாகாணம் சம்பளம் அந்த வருஷத்துக்குத் தள்ளிப்போட்டு நித்தியப்படி பூஜை நைவேத்தியம் நடப்பிவித்துக் கொண்டு வருவேனாகவும். இதில் யாதொரு வித்தியாசமாய் அரண்மனையாருக்கு மீறி நான் நடக்கிறதில்லை. அப்படிக்கி வித்தியாசமாய் நடந்தால் அதில் வந்த சொந்தத்துக்கு பாத்தியப்பட்டு அரண்மனையில் விதிக்கப்பட்ட அபராதத்திற்கும் தண்டனைக்கும் உட்பட்டு நடந்து கொள்வோனாகவும், இந்தப்படி ஷெ சொல்லப்படிக்கு கணக்கு செந்திவேலுபிள்ளை கையெழுத்து.

ஒப்பம்.
ரெங்கசாமியய்யங்கார்.

ஒப்பம்
ரங்கனாத கமாவிசு தாற்யென்று யாதியில்
எழுதி இருக்கிறது.

---

59. இராசகுமாராம்பாபுரம் சத்திரம் - இது மீமிசல் என்ற ஊரில் கி.பி. 1777இல் கட்டப்பெற்றது. இராசகுமாராம்பா என்பவர் இரண்டாம் துளஜாவின் மனைவியாவர். இச்சத்திரத்துக்கு அருகில் கல்யாண ராமசாமி கோயில் எடுப்பிக்கப்பெற்றது.

60. சுந்தரராஜ பெருமா கோவில் என்பது இராசகுமாராம்பா சத்திரத்துக்கு அருகில் உள்ள கோவில் ஆகலாம்.

61. பிலங்க சித்திரை மீ 5 உ - (1847) ஆண்டறுபதனுள் 41ஆவது

62. உரி - அரை நாழி (நாழி - காற்படி)

63. காவல் செய்வதற்குரிய ஆள் (துறோபஸ்து - பந்தோபஸ்து)

64. நெய்வேத்தியம் - கடவுளுக்குப் படைக்கும் உணவு

65. ஏறுபடி - அதிகப்படித்தரம்

66. தாமாஷாபடி - சராசரியாக

## ஆவண எண்: 141

ரா. சின்ன மகாராசா[67] சாயேபு அவர்கள் கல்யாணத்திற்காக அரண்மனையில் வெள்ளைக்கார சர்தார்களுக்கு மேஜை செய்து மரியாதை செய்ததுக்கு விபரம் என்னவென்றால் அஜாரம்[68] பந்தல் முதல் கொண்டு மகராச சபை பந்தல் வரைக்கும், பந்தலுக்கு வாழைகளும், தோரணமுங் கட்டி, முன்னே விருந்து சொன்ன சர்தார்களுக்கும், துரைசானியளுக்கும், அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு, வருகிறதற்காக எதிர்கொண்டு போன /எ/ சர்க்கீல் ராமோஜி சர்ஜேராவு[69] காடிகே அவர்கள் ரெசிடெண்ட் சாயேப்[70] அவர்கள் வீட்டுக்கு பகல் ௫ ௫ மணி வேளையில் போகும் போது, கூடப்போன சன்னாகத்துக்கு[71] விபரம் - ஆனையின் பேரில் கார்கானா ஆனையின் பேரில் நிசான[72] துவாத்தில்[73] சகிதமாய் துருப்பு[74] குதிரை- ௰ உ ,பிறாதரிடங்கா சகிதமாக-க, பாலா காறர்,[75] பயிற்காறர்[76] சோபுதார்[77] பாலதார், உதாமாலதார்- உ ,ஷெ யார் நேமிணைக்கு டங்கா க,[78] சங்கீத மேளமும் யிந்த சன்னாகத்துடனே /எ/ றிசிடிண்டு சாயேப் அவர்கள் வீட்டுக்கு போனவிடத்தில் ரிசிடெண்ட் சாயேப் அவர்கள் செய்து ய. துரைசானியளும் ௰௬ பேர் சர்தார்களும் அவர்கள் சவாரியில்..............து கொண்டு சர்க்கில்............அவர்களுடனே கோட்டை வாசல் படிக்குள் வந்தவுடனே கோட்டையின் பேரில் உ ௰ க பீரங்கி சுட்டு கீழ்க்கோட்டை வாசல் முதல்கொண்டு மகராச சபை வரைக்கும் (இ)ருக்கிற காட்டுகள்[79] நிறுத்தி (ற) யிசு பண்ணி அஜாறங்[80] கீழ்வாசல் முதல் சுகட்டு வரைக்கும் உத்தியோகஸ்த்தாள் சகிதமாயி ஜீஞ்சார[81] முதல் கயிதா செனங்களை[82] யிருபுறமும் வரிசை நிறுத்தி

---

67. சின்னமகாராஜா என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

68. அஜாரம் - ஆஸ்தானமண்டபம்

69. ராமோஜி சர்ஜேராவ் காடிகே - (பக்கம் 85)

70. ரெசிடெண்டு - பிளாக்பர்ன்

71. சன்னாகம் - விருதுகள் முதலியன

72. நிசான் - கொடி

73. துவாத்தில் (?)

74. துருப்பு - Troop - சேனை

75. பாலாக்காரர் - பாலா என்னும் ஈட்டியை வைத்திருப்பவர்

76. பயிர்க்காரர் - வாத்தியக்காரர் (?)

77. சோப்தார் - வெள்ளித்தடி பிடித்துக் கட்டியம் கூறுவோர்

78. டங்கா - ஒரு வகைத் தோற் கருவி

79. காட்டுகள் - Cadet

80. அஜாரம் - ஆஸ்தானமண்டபம்

81. ஜீன்சார் (?)

82. காயிதா ஜனங்கள் - வழக்கமாக வரும் மக்கள்

வாத்தியத்துடனே நாசிக செய்து, மகறாச சபையில் தெண்டகம் (படி)க்கி, யானை, குதிரையில்லாமல் தீனி தின்கிற நிமித்தியத்துக்காக நிறுத்தி சேவுகத்துக்கு உபயோகமாக யிருக்கப்பட்டவர்கள், உதாமால்தாரர்கள்,[83] சோபுதார்கள், பாலதார்கள், சக்கிர ரெஷ்சகாள்,[84] அபறாதியளும்[85] இந்த சனங்களை சர்க்கில் வைத்துக் கொண்டு சதிர் அசுமானகிரி[86] வகையறாகட்டி சப்பிறமாக[87] வெள்ளிக் கம்பத்துடனே சாந்தணி நிறுத்திக் கீழுக்கு சமுக்காளம் போட்டு, மேலே வெள்ளை, பச்சை வடம் விரித்துச் சாந்தணிக்குள்ளே சிம்மாசனம் போட்டு, பிசசானா[88] செய்து, சிம்மாசனத்துக்கிருபுறமும் நாற்காலி போட்டு சதிருக்கு முன்னிருக்கிற பந்தலில் மேசை போட்டு இருக்கிற படியினாலே பந்தலுக்கு வடபுறமாய் வேப்பமரத்துக்கு கீழ்புறமாய் சர்தார்களை /எ/ சர்க்கீல் சாயேப் அவர்கள் சதிரில் கல்லுக்கு சமீபத்தில் அழைத்துக்கொண்டு வரும்போது, மகாராஜா சாயேப் அவர்கள் சிம்மாசனத்திலிருந்து ஷெ சதிர்கல்லு வரைக்கும் எதிர்கொண்டு துரைசானியளையும், சலாம் முதலான மரியாதை செய்து, மகாராஜா சாயேப் அவர்கள், சிம்மாசனத்தில் உட்கார்ந்து துரைசானியளும் சர்தார்களும் பேர்வழி:மிஸ்ஸநீஸ் அண்டர் - க, லெப்பிட்டன் கர்னல் பிளாக்பர்ன்- க, மிஸ்ஸநிஸ் போல்-க, சடஜமேஸ்தர் போளி- க, மிஸ்தரிஸ் மறபெட்டு- க, மிஸஸ் மக்காளி-க, கேப்பிட்டன் ஸெடான்க மிஸஸ் கொலப்பு-க, கேப்டன் *Bifs*-க, மிஸ்தர் கோலபு-க, மேஸதர் ஹண்டர்-க, லெப்பிட்டன் மறபெட்டு-க, மேஸ்தர சான் பிளாக்பர்ன்-க, ஆக பேர்வழியள்-ய சு; இடது புறத்தில் உட்கார்ந்த பேர்வழிகள்: மிஸ்தரிஸ் மைக்கேல்-க, கர்னல் டயிட்டன்-க, மிஸ்தரிஸ் கோலபு-க, மேஸ்தர் எப்பிரன்-க, மிஸ்தரிஸ் டானில் - கோல்ப்-க, கேப்பிட்டன் வால்க்கர்-க, மிஸஸ்-பறட்டு-க, கேப்டன் *foot*-க, மிஸஸ் பொருட்டுலர்-க, மேஸதர் *Aaz*-க, பேர் தெரியாத சருதார்-க, லெப்பிட்டன் மைக்கேல்-க, லெப்பிட்டன் *Brook* க, மேஸ்தர் டானில் கோலபு - க ; மேஸ்தர் மார்ட்டின் ஸண் - க ; ஆக யரு. இந்தப்படி சர்தார்களும் துரைசானியளும் உட்கார்ந்தவுடன் சதிரிலே பிட்டிலாதி[89] வாத்தியங்களும், பியாண்ட்[90] வாத்தியங்களும், வாசித்துக் கொண்டிருந்தார்கள். மகாராஜா சாயேப் அவர்கள் வந்த துரைசானியளையும், சருதார்களையும், சிறிது உபசாரமாக உத்திரங்களைப் பேசிவுடனே மேலெழுதிய சர்தார்களுக்கு மரியாதை செய்த விபரம். மகாராஜா சாயேப் அவர்கள் பூவு ஆரங்களை மிஸ்தரிஸ் அண்டர்-க, மிஸ்தரிஸ் மையிகேல் உ; மிஸ்தரிஸ் போல் ௩, மிஸ்தரில் கோலபு ௪, யிந்த நாலு பேருக்கும் கொடுத்து, அடியேனிடத்திலிருந்து, கொடுத்த பேர்வழியள் மிஸ்தரிஸ் மறபேட்டு- ரு, மிஸ்தரிஸ் டானில் கோலபு சு, மிஸஸ் மக்காளி- எ ; மிஸஸ் பறட்டு அ, மிஸஸ் கோலபு கூ; மிஸஸ் பொட்டுலர்

83. உதாமால்தாரர் - எல்லா மகால்களுக்கும் உரிய அலுவலர்கள் (?)

84. சக்கிரரெஷ்சகாள் - ஆணைச்சக்கரத்தைக் காப்பவர் (பெரிய அலுவலர்?)

85. அபறாதியள் - அபராதிகள் - தண்டனை அனுபவிப்போர் (தீங்கு செய்தோர்)

86. அசுமானகிரி - மேற்கட்டி

87. சப்பிரம் - சப்பரம்

88. பிச்சானா செய்து - உட்கார்ந்து (?)

89. பிட்டில் - Fiddle என்ற இசைக்கருவி

90. பியாண்ட் - Band

யி - மகாராஜா சாயேப் அவர்கள் கொடுத்தது. லெப்படன்கர்னல் பிளாக்பர்ன் க, கர்னல் டயிட்டன் உ. மேஸ்தர் போனி ங, மேஸ்தர் ஏப்பிரன் ச, இவர்களுக்குப் பூக்கொடுத்து, மற்றப் பேர்வழியளுக்கு அடியேன் கொடுத்தது. மேஸ்தர் மங்கு ரு, கேப்டன் வலக்கர் சு, கேப்டன் ஸேடான்ன, கேப்டன்foot - அ, கேப்பிடன்Bif - கூ, மேஸ்தர் யேஜி-யி மேஸ்தர் கோலபுய் க, பேர்வழி தெரியாத சருதர்-யி உ, லெப்டன் மைக்கேல்-யி ங, மேஸ்தர் அண்டர்ய-யி ச, லெப்பிட்டன் Brooke-யி ரு, லெப்பிட்டன் மறபெட்டு-யி சு, மேஸ்தர் டானில் கோலபு-யி எ, மேஸ்தர் சால்பிளாக்பர்ன்-யி அ மேஸ்தர் மார்ட்டிங்கன்-யி கூ, மேலெழுதிய ஆரங்கள் கொடுத்தபடிக்கி மகாராஜா சாயேப் அவர்கள் துரைசாணிக்கு சால்வை, யிதர துரைசாணிய ளுக்குஞ் சாலுவை கொடுத்தப் பிறகு, மேலெழுதிய னாலு சர்தார்களுக்கு மத்துஸ்தரம் பதக்க ங் களும் கொடுத்து, மற்றப்பேர் வழியளுக்கு பூவு கொடுத்தப்படிக்கு துலைதுங் கொடுத்து மேலெழுதியபடி பன்னீரும், பாக்கு, வெற்றிலையுங் கொடுத்து, மரியாதை செய் தார்கள் பூவு, ஆரங்கள் கொடுக்க ஆரம்பஞ்செய்தவுடனே வாத்தியங்களை நிறுத்தி நாலுசதை தேவடியாளை நாட்டியஞ் செய்யச் சொன்னார்கள். யிந்தப்படி சர்தார்களுக்கு மரியாதை செய்தவுடனே ஒரு க்ஷணம் போது சர்தார்களுடன் சுகசல்லாபங்கள்[91] பேசிக் கொண்டிருந்து, உத்திரவு வாங்கிக் கொண்டு, மகாராஜா சாயேப் அவர்கள் அரண்மனையில் வந்த பிறகு மேலெழுதிய சர்தார்களும், துரைசாணியளும், மேசையில் போய் உட்கார்ந்து, தீனி சாப்பிட்டுப் பானமும் பண்ணி சருவத்திர சருதார்கள் நின்று, மகாராஜா சாயேப் பேரால் ஹீறோ[92] என்கிற சந்தோஷ சப்தங்களை உச்சரித்து, ராத்திரி மூன்று தாசு வேளையில், துரைசாணியள் சமுக்கி ராளுக்கும்,[93] தவுல்த்து[94] பங்கிலே அழைத்துக்கொண்டு போய் சவாரியில் உட்கார வைத்து, அவாள் அவாள் துரைசானியளை அவர்கள் அவர்கள் வீட்டுக்கனுப்பி வைத்துத் திரும்பவும் சருதார்கள் எல்லாம் மேசையில் வந்து உட்கார்ந்து, மத்திய பானம்[95] செய்து, ஹீறோஎன்கிற சந்தோஷ சப்தங்களை மறுபடியும் மேலெழுதியபடி இரண்டுதரும் உச்சரித்து, ராத்திரிக்கு எ தாசு வேளையில்[96] புறப்பட்டு, தவுலத்து பங்கிலே வந்து கூட வந்த ரா.சர்க்கில்சாயேப் அவர்களுக்கும் சலாஞ் செய்து, அவரவர்கள் சவாரியில் அவரவர்கள் உட்கார்ந்து புறப்பட்டு வீட்டுக்குப் போய்விட்டார்கள். காட்டு முதலானதுகள் வேட்டு சுட்டவரைக்கும் பகல் செய்த மரியாதையள் போகும்பொழுது, ராத்திரியானபடியினாலே ஒன்றுஞ் செய்யவில்லை/எ/ரெசிடெண்ட் பிளாக்பர்ன் சாயேப் அவர்கள் ரு. எ உ யி[97] தேவடியாள்களுக்கும் பியாண்ட் வாத்தியம் பிட்டில் வாத்தியம் வாசித்தவர்களுக்கும் இனாம்

---

91. சுகசல்லாபம் - இன்பமான பேச்சு

92. ஹீறோ - Hurrah என்னும் மகிழ்ச்சிக்குறிப்பு

93. சமுக்கிராளுக்கும் - சமஸ்தர்களையும் - எல்லாவரையும்

94. தவுலத் - ஆட்சிக்குரிய

95. மத்தியபானம் - மதுபானம்

96. எ - தாசுவேளையில் - ஏழுதாசு - இரவு 1 மணி

97. 120 பொன்

அரிக்கார[98] ரெங்கய்ய ணன்டையில் அனுப்பி வைத்தார்கள். அந்த அயிவேசு[99] மறுநாள் மேலெழுதிய மூன்று சமையலருக்கும் சமைக்கு ரூ சய விழுக்காடு பிரித்து கொடுத்தது. மேலெழுதிய சதிரில் அரண்மனை நிஷ்பதியள்[100] உட்கார்ந்த பேர்வழியள் ரா.சர்க்கில் றாமோஜி சர்ஜேறாவ் காட்கே, சிவாஜி சர்ஜே றாவ் காடிகே, பிக்காஜி மாடிக்கு மானகோஜி காடே.........பாவாசாமி காடே, அண்ணாசாமி அப்பா புவஜதார்[101] முத்தோஜி அப்பா, அப்புறாவு காடிகே, மான்சிங்க றாவு ஜாதவ், கேசவறாவு மோத்தே ஆக பேர்வழி ய யிந்தப்படி யிவர்களும் சதிரில் உட்கார்ந்து நந்தார்கள். யிந்தப்படி யிறோஜி காளேறாவப்பா அவர்கள் சொன்னது.

வெகுதான்ய[102] ஹூ ஆனி யீ- ய அ உ*

## ஆவண எண்: 142

செல்லி கிளாசி[103] டஜன் 2-க்கு உ ய சு; கிளாறட்டி[104] கிளாசு டஜன் சு-க்கு சுய அ, ஒயின் கிளாசு டஜன் சு-க்கு, சுய அ, டம்பிளர்[105] டஜன் சு-க்கு, சுய அ; ஸாலட்டு[106] செல்லா- அ, பாட்டம்- அ, பாசம்[107] கிளாசு டஜன் ந -க்கு ந ய சு, விக்கொண்டர் மூடி உள்பட சு, சூப்பு டூரியன்[108] ந; பெரிய டீசு[109] - அ, அரை
டீசு- ய அ, கோபுரடீசு- அ, சூப்பீங்கான் ந ய சு, சுடுதண்ணிப்பீங்கான் ந ய ரு; தட்டைப் பீங்கான் ரு ய அ, அரை பீங்கான்- எ ய க, பிக்கில்பாட்டு[110] - ரு, பட்டர் பாட்டு,[111] - உ பழக்கூடை ந ய உ, மீன்டீசு உ, குறுட்டி ஸ்டாண்டு[112] க -க்கு புட்டி- அ, குறுட்டி ஸ்டாண்டு

---

98. அரிக்காரன் - வெள்ளித்தடி பிடித்துக் கட்டியங்கூறுவோன் (ஒற்றர் - ஹர்ஹாரா)

99. அயிவேசு - பணம்

100. நிஷ்பதியள் - அலுவலர்கள்

101. புவஜதார் - பவுஜ்தார் (Foujdar) சேனைத்தலைவர்

102. வெகுதான்ய - பகுதான்ய; ஆண்டறுபதனுள் பன்னிரண்டாவது (1818)

* மோடிப் பலகணி I ஆவணம் 66இலும் இதே நாளிட்ட இதே செய்தி உள்ளது.

103. செல்லிகிளசு - Jelly glass (Jelly - பழச்சாற்றின் வடிகுழம்பு)

104. கிளாறட்டி - Clarity - தெளிவு

105. டம்பிளர் - Tumbier - குவளை

106. ஸாலட்டு - Salad

107. பாசம் - Fashion

108. சூப்பு டூரியன் - Soup tureen ( a deep tuble vessel for holding soup)

109. டீசு - Tea-spoon

110. பிக்கல் பாட்டு - Pickle pot

111. பட்டர்பாட்டு - Butter pot

112. குறுட்டி ஸ்டான்டு - Cruet-stand (இன்தேறல் எண்ணெய் முதலியவை கொண்ட கலங்களைத் தாங்கும் சட்டம்)

க -க்கு புட்டி - ச, வெளி சாமான் உள்பட கேக்கு புட்டி - க, பெரிய சூரிகத்தி - ச, ரொட்டி சுடுகிற சலாகு -[113] க, நெருப்பு தள்ளுகிறது - க, பிரம்பு தட்டு- எ, மகறாச சபையிலிருந்து எடுத்துப் போனது மேசை- எ, மாவு பிசைகிற மேசை - சஉ இதுகளெல்லாம் மால் அரிக்காரர் ராசகோபாலபுரம் வைத்திய னாதய்யன் வசமாக வீட்டுக்கனுப்பி யிருக்கிறது.

வெகுதானிய ௵ ஆனி மீ உ ௰ ௨

## ஆவண எண்: 143

தபத்திரம் பாரா[114] விலிருக்கிற திறவுகோல் விபரம்:-

பள்ளிய மேசை திறவுகோல் க, பழைய மேசை திறவுகோல், க, .......... க, பெரிய பெட்டி க, பாறாபெட்டி- க, மண்டபம் கொட்டடி- உ, கொல்லுப் பட்டடை- க, கொல்லை- க, சாமான் கொட்டடி-க, தண்ணீப் பந்தல் - க, வெளிவாசல் க, பழைய தப்பிறம் பூட்டுதிறவு- க, தவுலத்பாவ லேகா[115] - உ, ஆவாலா- ந, சத்திரமாகால் - சா. அலாதி[116] மால்- உ, பங்கு உ, சபை ச, திறவுகோல் ந; ஆக ந ௰ ரு

## ஆவண எண்: 144

சென்னைக்குப் போக பந்தோபஸ்து.

நெ. சா ௰ - இந்த வழிச்சீட்டு[117] கொண்டு வருகிற தஞ்சாவூர் இஸ் அயினிசு[118] மகாராஜா அவர்கள் சேவுகத்திலிருக்கிற முத்தோஜி கோவிந்தறாவு[119] தஞ்சாவூரில் பிறந்த - யிவடத்திலிருந்து
பல்லக்கு- க, குதிரை- ச, வயல வண்டி- உ, பொட்டி வண்டி - ச, சாமான் வண்டி அ. ஆண்பிள்ளை சனம் -அ ௰, பெண்பிள்ளை-சா௰, துப்பாக்கி- ச, கத்தி அ, இதுகளுடனே திருப்பதி ஹாளஹஸ்த்தி[120] சென்னப்பட்டணத்துக்குத் தடங்களில்லாமல்[121] போகிறதற்கு உத்திரவு கொடுக்கவும்.

---

113. சலாகு - சிறு நாராசம்

114. பாரா - காவல் செய்கிறவன்

115. தவுலத்பாவலோக் - அரசாங்கஊழியர்

116. அலாதி - தனியான

117. வழிச்சீட்டு - வெளியூர்களுக்குச் செல்வதற்குரிய சீட்டு

118. இஸ்அயினிசு-His Highness (பக். 348-349)

119..முத்தோஜி கோவிந்தறாவு - பெரிய அண்ணாவின் பெயர் (2-230) (பக்.81)

120. ஹாளஹஸ்த்தி - காளஹஸ்தி - திருக்காளத்தி என்ற சிவத்தலம்

121. தடங்களில்லாமல் - தடங்கலில்லாமல்

| | |
|---|---|
| றஹதாரி[122] கொடுத்த யிடமும் தேதியும் | அதிகாரியுடைய கையொப்பம் |
| தஞ்சாவூர்<br>ரெசிடெண்ட் ஆபீசு[123]<br>௲ ௮ ௱ ௪௰ ௯ ௵<br>ஏப்ரல் ௬ ௳ | G.Bird<br>*Acting Resident.* |

(பின்புறம்)

(முத்தோஜி கோவிந்தராவ் யாதவ் அவர்களின் வழிநடைச் சீட்டு)

*1849 April 6* (மோடியில்) *copy*

*To all whom it may concern.*

*No.60 Permit the Bearer here of Moodhojee Govinda row Native of Tanjore & in the service of His Highness the Rajah of Tanjore to Lap from hence to Tripathy, Calaustry and (and) Madras & with (1) Palanquin, 4 Horses, 2 Bullock coaches, 4 Bandies of carts, 80 men and 60 women armed with 4 firelocks, & of swords & to return without molestation*

*Date of this passport 6th April 1849*
*and where granted Tanjore*
*Residents Office*

*Signature of the Public Officer*
*J.Bird*
*Acting Resident.*

---

122. றஹதாரி - வழிநடைச் சீட்டு (பக்.342-343)

123. 6.4.1849

# ஆவண எண்: 145

## தஞ்சாவூர் மியூனிஷிபல்[124] கமிஷனர் ஆபீஸிக்கு பாரங்கள் தயார் செய்து கொடுத்ததற்கு ஜாபிதா

1860 ஹு டிசம்பர் மீ

| ரேட் | பாரங்களின் விபரம் | | ஸ்டேட் மெண்டுபடி | ஸ்டேட்மெண்டுக்கு மேல் | | |
|---|---|---|---|---|---|---|
| | | நோட்டீசு | | ஜாஸ்தி | மொத்தம் | |
| | | | | 250 | | |
| 8 | 1 | டிக்கெட் | | 1200 | 1200 | 4-0-0 |
| 4 | 2 | டிக்கெட் | 500 | 1200 | 1700 | 5-17-0 |
| 2 | 3 | டிக்கெட் | 5000 | 16000 | 21000 3 | 10-0-0 |
| 1 | 4 | டிக்கெட் | 5000 | 16000 | 21000 3 | 10-0-0 |
| 2 | 5 | டிக்கெட் | 5000 | 13000 | 18000 3 | 10-0-0 |
| | | தினச்சேரி[125] | 1600 | 13000 | 1600 3 | 1-12-0 |
| | | வீக்லி[126] | 100 | 13000 | 100 | 1-2-0 |
| | | மாசாந்திரம் | 50 | 50 | 100 | 4-0-0 |
| | 10 | வண்டி மாடுகளுக்கு லைசென்ஸ் ரிசிஸ்தர் | 25 | 25 | 50 | |
| | 31 | வண்டி குதிரை முதலியதுகளின் ரிஜிஸ்தர் பாரம் | 500 | 25 | 500 3 | 10-0-0 |
| | 32 | லைசென்ஸ் பெற்றுக் கொள்வதற்காக அப்ளிகேஷன் பாரம் | 500 | 25 | 500 3 | 5-0-0 |

124. மியூனிஷிபல் கமிஷனர் - Municipal Commissioner - நகராட்சித்தலைவர்

125. தினச்சேரி - தினசரி - நாடோறும்

126. வீக்லி - Weeklv - வாரத்துக்குரிய

## லைசென்சு

1. 4-சக்கரவில்வைத்த வண்டி 2-குதிரையினா லிழுக்கப்பட்டது

| | | |
|---|---|---|
| 30 | 20 | 100 |

2. 4-சக்கரவில்வைத்தவண்டி 1குதிரையினாலிழுக்கப்பட்டது

| | | |
|---|---|---|
| 50 | 50 | 100 |

| ரேட் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்டுபடி | ஸ்டேட்மெண்டுக்கு மேல் ஜாஸ்தி | மொத்தம் | |
|---|---|---|---|---|---|
| 3 | வில்வைத்த2 சக்கர வண்டி | 100 | 50 | 100 | |
| 4 | பெரிய குதிரை | 100 | 50 | 100 | |
| 5 | மட்டக் குதிரை கோவேரு கழுதை | 100 | 50 | 100 | |
| 8 | 3அடி 6அங்குலமட்டம் | 100 | 50 | 100 | |
| 9 | காளைமாடு 1000 | 50 | | 1000 | |
| 10 | கழுதை 250 | 50 | | 250 | |
| 10 | சுமைவண்டி ரிஜிஸ்டர்செய்வதின் டிக்கெட் | 1000 | 50 | 1000 | |
| 6 | சுமை வண்டி ரிஜிஸ்தர் | 25 | 50 | 25 | |
| 9 | இன்ஸ்பெக்டர் டைரி | 500 | 50 | 500 | 1-0-0 |

## கும்பகோணம் முனிசிபால் கமிஷன் ஆபீஸிக்கு பாரங்கள் தயார் செய்து கொடுத்ததற்கு ஜாப்தா 1866 ஷ

| நம்பர் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்ட் படி | ஜாஸ்தி | மொத்தம் |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1 | 4 சக்கர வில்வைத்த வண்டி 2 குதிரையினா லிழுக்கப்பட்டது | 10 | 70 | 80 |
| 2 | 4-சக்கர வில்வைத்த வண்டி 1 குதிரையினா லிழுக்கப்பட்டது | 10 | 70 | 80 |
| 3 | வில் வைத்த 2 சக்கர வண்டி | 10 | 70 | 80 |

| | | | | |
|---|---|---|---|---|
| 4 | பெரிய குதிரை | 50 | 30 | 80 |
| 5 | மட்டக்குதிரை, கோவேரு கழுதை | 50 | 30 | 80 |
| 8 | 3 அடி 8 அங்குல மட்டம் | 50 | 30 | 80 |
| 9 | காளைமாடு | 1000 | 30 | 1000 |
| 10 | கழுதை | 50 | 30 | 50 |
| | சுமைவண்டி லைசென்சு | 1000 | 30 | 1000 |
| 6 | சுமை வண்டி ரிஜிஸ்தர் | 25 | 25 | 50 |
| 10 | வண்டி மாடுகளுககு லைசென்சு பெற்றுக்கொள்வதின் ரிஜிஸ்தர் | 25 | 25 | 50 |
| 31 | வண்டி குதிரை ரிஜிஸ்தர் | 400 | 25 | 400 |
| 32 | லைசென்சு பெற்றுக்கொள்ளு வதற்காக செய்யப்பட்டது | 400 | 25 | 400 |
| 9 | இன்ஸ்பெக்டர் டைரி | 100 | 25 | 100 |
| | | 50 | 25 | 50 |

## மன்னார்குடி முனிசிபால் கமிஷனர் ஆபீசுக்கு பாரங்கள் தயார் செய்து கொடுத்ததற்கு ஜாப்தா 1866 ஷு

| நம்பர் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்டுபடி | ஜாஸ்தி | மொத்தம் | |
|---|---|---|---|---|---|
| 8 | டிக்கெட் | 150 | 0 | 150 | 0.13.0 |
| 4 | டிக்கெட் | 250 | 0 | 250 | 0.21.0 |
| 2 | டிக்கெட் | 2500 | 12000 | 14500 | 2.9.9 |
| 1 | டிக்கெட் | 2500 | 5000 | 7500 | 1.0.5 |
| 1/2 | டிக்கெட் | 2500 | 20000 | 22500 | 3.15.0 |
| | தினச்சேரி கணக்கு | 800 | 20000 | 800 | 3.16.0 |
| | வீக்லி | 50 | 20000 | 50 | 3.1.0 |
| | மாசாந்திர கணக்கு | 50 | 50 | 100 | 3.4.0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 9 | இன்ஸ்பெக்டர் டைரி | 50 | 50 | 50 | 3.2.0 |
| | | 1000 | 50 | 1000 | 3.10.0 |

## நாகப்பட்டிணம் மினிசிபல் கமிஷன் ஆபீஸிக்கு பாரங்கள் தயார் செய்து கொடுத்ததற்கு ஜாப்தா.

| நம்பர் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்ட் படி | ஜாஸ்தி | மொத்தம் | |
|---|---|---|---|---|---|
| 8 | டிக்கெட் | 150 | 50 | 150 | 3.10.13 |
| 4 | டிக்கெட் | 250 | 50 | 250 | 3.10.21 |
| 2 | டிக்கெட் | 2500 | 50 | 2500 | 3.8.9 |
| 1 | டிக்கெட் | 2500 | 50 | 2500 | 3.8.9 |
| 1/2 | டிக்கெட் | 2500 | 50 | 2500 | 3.8.9 |
| | தினச்சேரி[125] | 800 | 50 | 800 | 3.16.0 |
| | வீக்லி[126] | 50 | 50 | 50 | 3.1.0 |
| | மாதாந்திரக் கணக்கு | 50 | 50 | 100 | 0.4.0 |

| நம்பர் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்டுபடி | ஜாஸ்தி | மொத்தம் | |
|---|---|---|---|---|---|
| 10 | வண்டி மாடுகளின் லைசென்ஸ் ரிஜிஸ்தர் | 50 | 50 | 50 | |
| 31 | வண்டி குதிரைகளின் ரிஜிஸ்தர் | 400 | 50 | 400 | 0.8.0 |
| 32 | லைசென்சு பெற்றுக் கொள்வதற்காக செய்து கொள்ளப்பட்ட அப்ளிகேஷன் லைசென்சு | 400 | 50 | 400 | 0.4.0 |
| 1 | 4 சக்கர வில்வைத்த வண்டி 2 குதிரையினா லிழுக்கப்பட்டது | 10 | 70 | 80 | |
| 2 | 4 சக்கர வில்வைத்த வண்டி 1 குதிரையினா லிழுக்கப்பட்டது | 10 | 70 | 80 | |
| 3 | வில் வைத்த ரெண்டு சக்கர வண்டி | 10 | 70 | 80 | |
| 4 | பெரிய குதிரை | 50 | 30 | 80 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5 | மட்டக்குதிரை, கோவேருகழுதை | 50 | 30 | 80 | |
| 8 | 3 அடி 8 அங்குல மட்டம் | 50 | 30 | 80 | |
| 9 | காளை மாடு | 1000 | 0 | 1000 | |
| 10 | கழுதை | 50 | 10 | 60 | |
| | சுமைவண்டி லைசென்சு | 1000 | 0 | 1000 | |
| 6 | சுமைவண்டி ரிஜிஸ்தர் பாரம் | 25 | 25 | 50 | |
| 9 | இன்ஸ்பெக்டர் டைரி | 100 | 0 | 100 | 0.4.0 |

## மாயூரம்[127] முனிசிபல் கமிஷனராபீசுக்கு தயார் செய்து கொடுத்த பாரங்களின் ஜாப்தா.

| நம்பர் | பாரங்களின் விபரம் | ஸ்டேட்மெண்ட் படி | ஜாஸ்தி | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 4,2-குதிரை வில்வண்டி | 5 | 35 | 40 |
| 2 | 4-சக்கர வில்வைத்த வண்டி | 5 | 35 | 40 |
| 3 | 1-குதிரையினா லிழுக்கப்பட்டது வில்வைத்த 2 சக்கர வண்டி | 5 | 35 | 40 |
| 4 | பெரிய குதிரை | 25 | 15 | 40 |
| 5 | மட்டக்குதிரை கோவேரு கழுதை | 25 | 15 | 40 |
| 8 | 3 அடி 8 அங்குல மட்டம் | 25 | 15 | 40 |
| 9 | காளை மாடு | 500 | 0 | 500 |
| 10 | கழுதை | 25 | 5 | 30 |
| | சுமைவண்டி லைசென்சு | 500 | 0 | 500 |
| 6 | ஷ ரிஜிஸ்தர் | 13 | 27 | 50 |
| 10 | வண்டி மாடுகளுக்கு லைசென்சு ரிஜிஸ்தர் | 13 | 27 | 50 |
| 31 | வண்டி குதிரை ரிஜிஸ்தர் | 200 | 0 | 200 |
| 32 | லைசென்சு பெற்றுக் கொள்வதற்காக செய்யப்பட்ட அப்ளிகேஷன் பாரம் | 200 | 0 | 200 |
| 9 | இன்ஸ்பெக்டர் டைரி | 50 | 0 | 50 |
| | | 1000 | 0 | 1000 |

127. மாயூரம் - மயிலாடுதுறை

## ஆவண எண்: 146

## தஞ்சாவூர் மங்கள விலாசத்தைச்[128] சேர்ந்த சுரோத்திரியம்[129] வடமட்டம் பூங்குடி கிராமங்களின் 99ம் ஷூ பிப்ரவரி மீ முதல் மே மீ வரைக்கும் உள்ள கிஸ்தி துகை தண்டல் வைத்து கொள்ள வேண்டியதற்கு ஜாப்தா - தாலுக்கா நன்னிலம்.

| கிராமங்களின் பெயர் | மாதம் | ஜோடி[130] | குயிட் றெண்டு[131] | தண்ணீர் தீர்வை | இனாம் றொக்கம் | ஆக |
|---|---|---|---|---|---|---|
| வடமட்டம் | பிப்ரவரி | 27.12.0 | 7.12.0 | 2.8.0 | 5.3.5 | 43.3.5 |
| | மார்ச்சு | 41.10.0 | 11.10.0 | 3.12.0 | 7.11.0 | 64.4.0 |
| | ஏப்ரல் | 69.6.0 | 19.6.0 | 6.4.0 | 12.13.0 | 107.13.0 |
| | மே | 55.8.0 | 15.8.0 | 5.0.0 | 10.4.0 | 86.4.0 |
| | ஆக | 194.4.0 | 54.4.0 | 17.8.0 | 25.15.5 | 301.15.5 |
| பூங்குடி | பிப்ரவரி | 19.8.0 | 8.13.0 | 3.8.0 | 4.2.0 | 35.15.0 |
| | மார்ச்சு | 29.4.0 | 13.3.6 | 5.4.0 | 5.3.0 | 53.14.6 |
| | ஏப்ரல் | 48.12.0 | 22.0.6 | 8.12.0 | 10.5.0 | 89.13.6 |
| | மே | 39.0.0 | 17.10.0 | 7.0.0 | 8.4.0 | 71.14.0 |
| | ஆக | 136.8.0 | 61.11.0 | 24.8.0 | 28.14.0 | 251.9.0 |

128. மங்கள விலாஸம் - சரபோஜியின் மகனாகிய சிவாஜியின் காமக் கிழத்தியர் தங்கிய இடம் மங்களவாஸம் அல்லது மங்கள விலாஸ் என்று குறிக்கப்பட்டது (பக்.330-331)

129. சுரோத்திரியம் - வேதம் வல்ல பிராமணருக்குக் கொடுக்கப்பட்ட நிலம் சுரோத்ரியம் எனப்பட்டது. சுரோத்ரியமாகக் கொடுக்கப்பட்டவை அனாதிதரிசு நிலமாகும். சுரோத்திரியம் பெற்றவர் தம் வாழ்நாள் முழுவதும் சுரோத்திரியத்தை அனுபவிக்கலாம். அவர் சந்ததியினருக்கு உரிமையில்லை. விற்பனை செய்வதாயின் அரசுக்கே விற்றல் வேண்டும் (பக்கம் 259-263)

130. ஜோடி - ஜோடிகை - இனாம் ஊர்களில் அரசுக்குச் செலுத்தும் குறைந்த நிலத் தீர்வை.

131. குயிட்றெண்டு - Quit rent

| கிராமங்களின் பெயர் | மாதம் | ஜோடி | குயிட்றெண்டு | தண்ணீர் தீர்வை | இனாம் றொக்கம் | ஆக |
|---|---|---|---|---|---|---|
| ஷை, இரண்டு கிராமங்களின் மாதாவாரி இனவாரி மொத்தம் | பிப்ரவரி | 47.4.0 | 16.9.0 | 6.0.0 | 9.5.5 | 79.2.5 |
| | மார்ச்சு | 70.14.0 | 24.13.6 | 9.0.0 | 13.14.0 | 118.9.6 |
| | ஏப்ரல் | 118.2.0 | 41.6.6 | 15.0.0 | 23.2.0 | 197.10.6 |
| | மே | 94.8.0 | 32.2.0 | 12.0.0 | 18.8.0 | 158.2.0 |
| | ஆக | 330.12.0 | 115.15.0 | 42.0.0 | 64.13.5 | 553.8.5 |
| 98 ஜாஸ்தி வசூலிலிருந்து நாளது பிப்ரவரி கிஸ்திக்கு ஈடு செய்தது | | 11.0.1 | -- | – | 8.0.2 | 19.0.3 |
| பாக்கி சாங்கிஷன்ரக வேண்டியது | | 319.11.11 | 115.15.0 | 42.0.0 | 56.13.3 | 534.8.2 |

## ஆவண எண்: 147

தஞ்சாவூர் கவர்மெண்ட் ஏஜன்ஸி சர்க்கில் ம.ஸ்ரீ.ரா.கே.கோவிந்தறாயரவர்கள் சமூகத்துக்கு ஷை ஆபீஸ் கிளார்க்கு அண்ணாசாமி றாவ் எழுதிக் கொண்ட ரிபோர்ட் ச..............23உ............தஞ்சாவூர் ஜில்லா கலெக்டர்[132] துரையவர்களுடைய (நம்பர்) 20 யுள்ள 927 நம்பர் லெட்டரில் இன்ஸ்பெக்ஷ[133]னுக்காக அபேக்ஷிக்கும்[134] கண்டற கோட்டை ஜமீன்தாரிக்கும்[135] கொடுத்த சிகாசன்னத்து[136] உத்திரவுப்படி ரிகார்டில் பரிசோதித்துப் பார்ப்பதில் சிகாசன்னத்துக் கொடுத்திருப்பதாய் ஷை ரிஜிஸ்தரினால் தெரிய வருகிறதில்லை. ஆனால் சிகா பரவானகி[137] என்கிற உத்திரவு பதிவு ரிஜிஸ்தரில் பார்ப்பதில் அகப்பட்டு கண்டற கோட்டை பாளயப்பட்டு[138] அச்சுத பண்டாரத்தா ரவர்களுக்கு 1777ம் ஸெத்துக்கு

---

132. ஜில்லா கலெக்டர் - மாவட்ட ஆட்சியர்

133. இன்ஸ்பெக்ஷன் - Inspection

134. அபேக்ஷிக்கும் - விரும்புகிற

135. ஜமீன்தாரி - சமீந்தார் - குடிகளிடம் தாமே வரி வசூலித்து அரசாங்கத்துக்கு மொத்த வரி செலுத்தி ஆட்சி செய்பவர்

136. சிகாசன்னது - முத்திரை யோடு உரிமை கொடுக்கும் சாஸனம்

137. சிகா பரவானகி - சிகா - முத்திரை; பரவானகி - அரசனது ஆணை; இதில் அரசனது கையொப்பம் இராது (பக்கம் 365)

138. பாளையப்பட்டு - அரசனுக்குப் போரில் உதவ வேண்டும் என்ற நிபந்தனையுடன் பாளையக்காரருக்கு விடப்பட்ட ஊர்

சரியான சல்லாசப்பைன்[139] வருஷத்தில் மகாராஜாவின் சிகாசன்னத்து கையெழுத்து இல்லாது சிகாவானபரவானகி 1 ஷெ. யார் பேரால் 1799ம் ஹெக்குச் சரியான திசாதிசைன்[140] வருஷத்திலான சிகாபரவானகியில் ஷெ. பாளயப்பட்டுக்கு கோனூர் நாடு வெகு நாளாய் சேர்ந்திருந்ததை 1796ம் வருஷத்துக்குச் சரியான சித்தி திசைன்[141] வருஷத்தில் சர்க்காரில் சேர்க்கப்பட்டிருப்பதை இப்போது முன் வழக்கப்படி ஷெ கோனூர் நா(ட்டி)ன் பாளயப்பட்டுக்குச் சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்பதாய்க் கோரிக்கொண்டபடி ஷெயார் பேராலான சிகா பரவானகி 1 இவை இரண்டு அசல் பரவானகிகளும் கலெக்டர் துரையவர்களுடைய சாகெட் சகிதமாய் சமூகத்தில் பார்வைக்காக அனுப்பியிருக்கிறேன். மேல்க்கண்ட பரவானகை இரண்டையும் பார்வையிட்டு வாபஸ் அனுப்பும்படியாய்ச் செய்யக் கோருகிறேன்

1777 ஹெ

மிமோ[142] கண்டற கோட்டை அச்சுத பண்டாரத்தார் பாளேகார சு (கூ) ர் சன சயாசபைன் ம(யா) அலப்[143] வருஷத்துக்குச் சரியான 1777-ம் ஹெ எழுதிக் கொண்ட அர்ஜியானது என்னவென்றால், அடியேனுக்கு பாளயப்பட்டு முன் நந்தன[144] வருஷம் வரையில் நட(ந்த)படி(கூடுதல் தஞ்சைபொன்) கண்டற கோட்டை சீர்மை ந-க்கு 7000 கோனூர் நாடு பொன்[145] 8000த்தில் கோனூர் வெங்கிடறாயர் அமரம் ஆதனக்கோட்டை 1300 பொன் போக பாக்கி பொன் 6700 கோனூர் ஆயம் 275 களத்தூர் 1347 பணம் 5 1/2 ஆக பதினய்யாயிரத்து முன்னூற்றி இருவத்தி இரண்டு[146] பொன் அஞ்சரை பணம் இதற்கு (பேஷகஷ்) தோப[147] சருக்காருக்கு கொடுத்து வரப்பட்டது.

தஞ்சை பொன்

---

139. சல்லா (ஸ்) - 3; சபைன் 70; அதாவது 73. சுஹூர்சன் 1173 உடன் 599 சேர்ப்பின் கி.பி.1772 ஆகும். இங்கு 1777 என்பது பொருந்தவில்லை. ஆகையால் சல்லா என்பது சமான் (8) என்றிருக்க வேண்டும்.

140. திசா (திசா) - 9; திசைன் 90; அதாவது 99. சுஹுர்ஸன் 1199 உடன் 599 சேர்ப்பின் கி.பி.1798 ஆகும். இங்கு 1799 என்றுள்ளது.

141. சித்தி (?) திசைசன் - 90. சித்தி என்பதைக் (சீத்'என்று படித்தால் சீத் திசைன் என்பது 96 ஆகும். 1196 + 599 = 1795

142. மிமோ - மெமோராண்டம் - நினைவுக்குறிப்பு

143. சபா (சமான்) சபைன் மயா அலப்
(சமான் = 8; சபைன் = 70; மயா = 100; அலப் = 1000)
(சஹூர்சன் 1178 + 599 = கி.பி. 1777)

144. நந்தன - ஆண்டறுபதனுள் 26 ஆவது (கி.பி.1772 ஆகலாம்.)

145. பொன் - 10 பணம் (சக்கரம்) (பக்கம் 150)

146. பதினைபாயிரத்து முன்னூற்றிருபத்திரண்டு

147. தோபா - வரி

பகுதான்னிய[148] ஷு 3600 பிரமாதி[149] ஷு 3000 விக்கிரம[150] ஷி 2000 விஷு[151] ஷு 3000 இதற்கு சித்திரபானு[152] வருஷத்தில் தோபா மாப்[153] செய்த காலத்தில் சர்காரிலிருந்து அடியேன் பேருக்கு சனதில் தோபா மதுரை பொன் 5000 மாப் செய்திருப்பதாய் எழுதப்பட்டிருக்கிறது. பேஷ்கஷ்[154] திரும்ப சர்க்காரில் வாங்கினபடி தஞ்சை பொன் பார்த்திப[155] ஷு 3000 விய[156] ஷு 2000 சர்வஜித்[157] ஷு 3000, சர்வதாரி[158] ஷு 800 விரோதி[159] வருஷத்தில்) தோபா (மா)ப்பு செய்யப்பட்டிருக்கிறது. இப்போது சாயேப் (அவர்கள்) மேஹறவான்[160] செய்து அடியேனுக்கு பாளயப்பட்டு (கறார்) செய்து கொடுத்து அடியேனிடத்திலிருந்து பேஷ்கஷ் தோபா வருஷாவருஷம் தஞ்சை பொன் 3000 மூவாயிரம் வீதம் தோபா வாங்கிக் கொண்டு நாளது வருஷத்திய தோபாவுக்கு ஆகும் பேஷ்கஷ் கூடுதல்படி அஞ்சில் இரண்டும் பசானம் அஞ்சில் மூன்று வீதம் ஆகும்.

தாபாசாயபட்ட[161] துகை வஜா கொடுத்து[162] முஜார்[163] கொடுத்து, பாளயப்பட்டு, மராமத்து செய்து, சிகா சன்னத்து எழுதிக்கொடுக்க உத்திரவாக வேணும்.

1799ஷு

மிமோ பட்டுக்கோட்டை சுபா கள்ளப்பத்துச்[164] சேர்ந்த கண்டர கோட்டை பாளயப்பட்டு அச்சுத பண்டாரத்தார் சூஸூர்சன் திஸ்ஸா திசைன் ம(யான)தன் அல்லபுக்கு[165] சரியான 1799ம் ஷு எழுதிக் கொடுத்த அர்ஜி என்னவென்றால் கோனூர் நாட் சேர்ந்த சந்தை ஆயம்[166] உள்பட ஷி பாளயப்பட்டில் வெகு நாளாய் நடந்திருந்தது. சன்[167] சித்த திசேன்[168]

---

148-152. பகுதான்ய முதல் சித்திரபானு வரை முறையே ஆண்டறுபதுள் 12 முதல் 16 வரையில் ஆகும்.

153. மாப் - மாபி - மன்னிப்பு (தள்ளுபடி)

154. பேஷ்கஷ் - வரி

155-156. பார்த்திப, விய இவை ஆண்டறுபதனுள் முறையே 19 ஆவது 20 ஆவது ஆகும்.

157-159. இவை ஆண்டறுபதனுள் முறையே 21,22,23 ஆகும்

160. மேஹற்வாண் (?) - (மேஹர்பான்) பெரிய மனது

161. தாபாசாயப்பட்ட - கொடுக்காமல் நின்ற (?)

162. வஜாகொடுத்து - தள்ளுபடி செய்து

163. முஜார் - முஜறா - வரி தள்ளுபடி

164. கள்ளப்பத்து - கள்ளர் எனும் இனத்தார் வாழுமிடம்

165. திஸ்ஸா (திசா) திசைன்மயா அலப் (திசா = 9; திசைன் = 90; அலப் = 1000) 1199 + 599 = கி.பி. 1798

166. சந்தை ஆயம் - சந்தைக்குரிய வரி

167. சன் - சுஹூர்சன்

168. சித்த(சீத்)திசைன் (6 + 90 = 96)
சுஹூர்சன் 1196+600=1796 (பக்.367)

ஸூக்குச் சரியான 1796ம் வருஷமுதல் சர்க்காரில் சேர்ந்திருக்கிறது. இப்போது முன்னிருந்தபடி பாளயப்பட்டுடன் சேர்ந்து கொடுப்பதைப் பற்றி ஒப்புக் கொண்டது. சர்க்காருக்கு பேட்டிக்காக கபூல்......செய்த[169] ....... பரங்கி விராகன்[170] 1000 (ஆயிரம்) விராகன் கழல் செய்யப்பட்டிருக்கிறது. ஷி பேட்டியின் துகை ரொக்கம் செலுத்தி வைப்பேன். சாயேப் மேஹர்பானுன் செய்து பாளயப்பட்டில் கோனூர் நாடு செந்தை ஆயம் உள்பட முன்னிருந்தபடி சேர்ந்து முன்னிருந்த வழக்கப்படி தோபாவும் வாங்கிக்கொண்டு நாளது வருஷம் முதல் வருஷா வருஷம் நடந்து வரும்படி உத்திரவாக வேணும். மேல் கண்டபடி மொகறம்[171] 30 உ முதல் ஷி பாளயப்பட்டில் சேர்த்து நடத்தி வருகிறது.

ரபிலாகர்[172] மீ 25உ சம்க்ஷேபம்

1777 ஸூ

மிமோ கண்டற கோட்டை பாளயக்காரர் அச்சுத பண்டாரத்தார் சுகூர்சன் சப்பா சபைன் ம(யா) அல்லப் ஸூ அர்ஜியானது அடியேனு (க்கு பாளையப்பட்டுமுன்) நந்தன வருஷம் வரையில் நடந்தபடி கூடுதல் தஞ்சை பொன் கண்டர கோட்டை சீமை மாகாணம் 3க்கு 7000, கோனூர் நாடு பொன் 8000த்தில் கோனூர் வெங்கிட்டராயர் அமறம் ஆதனக்கோட்டை 1300 பொன் போக பாக்கிப் பொன் 6700 கோனூர் ஆயம் 275 களத்தூர் 1347 பணம் 5 1/2 1322 பணம் 5 1/2 ஆக பதினைந்தாயிரத்து முன்னூற்றி இருபத்திரண்டு பொன் அஞ்சரை பணம் இதற்கு பேஷ்கஷ் சர்க்காருக்கு கொடுத்து வந்தப்படி தஞ்சை பொன் வெகுதான்னிய ஸூ 3600 பிரமாதி ஸூ 3000, விக்கிறம ஸூ 2000, விஷு ஸூ 3000 இதற்கு சித்திரபானு வருஷத்தில் பேஷ்கஷ் மதுரை பொன் 5000 மாப்பு செய்திருப்பதாய் எழுதப்பட்டிருக்கிறது. திரும்ப சர்க்காரில் பேஷ்கஷ் வாங்கினபடி தஞ்சைப்பொன் பார்த்திப ஸூ 3000 விய ஸூ 2000, சர்வஜித் ஸூ 3000, சர்வதாரி ஸூ 800, விரோதி வருஷத்தில் பேஷ்கஷ் மாப்பு செய்யப்பட்டிருக்கிறது. இப்போது மகாறாஜா சாயேபவர்கள் பேஷவான் செய்து கொடுத்து அடியேனுக்கு பாளயப்பட்டு கறார் செய்து கொடுத்து, அடியேனிடத்திலிருந்து பேஷ்கஷ் வருஷாவருஷம் தஞ்சைப்பொன் 3000 வீதம் தோபா வாங்கிக் கொண்டு நல (வருட) த்திய தோபாவுக்கு ஆகும் பேஷ்கஷ் கூடுதல்படி கார் அஞ்சில் இரண்டும் பசானம் அஞ்சில் மூன்று வீதம் ஆகும். தாமாஷாபட்ட துகை வஜா கொடுத்து, பாளயப்பட்டு, மராமத்து செய்து, சிகாசன்னத்து எழுதிக் கொடுக்க உத்திரவாக வேணும்.

1799

மிமோ பட்டுக்கோட்டை சுபா கள்ளப்பத்துச் சேர்ந்த கண்டர கோட்டை பாளயப்பட்டு அச்சுத பண்டாரத்தார் சுக்கூர்சன் திசா திசைன் மயாதைன் அல்லப் ஸூ எழுதிக் கொடுத்த

169. கபூல் செய்த - ஒப்புக்கொண்ட

170. பரங்கி விராகன் - பரங்கிப்பேட்டை வராகன் (பக்.151)

171. மொகரம் - முகமதியர் மாதங்களில் முதல் மாதம்

172. ரபிலாகர் - ரபிஉல் ஆஹிர் (முகமதிய மாதங்களில் 4ஆவது மாதம்)

அர்ஜி என்னவென்றால் கோனூர் நாடு சந்தை ஆயமுள்பட்ட ஷெ பாளயப்பட்டுச் சேர்ந்து வெகுநாளாய் நடந்து கொண்டிருந்த சன் சித்த திசைன் ஹூ முதல் சர்க்காரில் சேர்ந்திருக்கிறது. இப்போது முன்னிருந்தப்படி பாளயப்பட்டுடன் சேர்த்துக் கொடுப்பதைப் பற்றி, சர்க்காருக்கு பேட்டிக்காக ஒப்புக்கொண்ட பரங்கி விராகன் 1000 விராகன் ஒப்புக் கொண்டிருக்கிறது. ஷெ பேட்டியின் துகை ரொக்கம் (செலுத்தி வைப்போர்) சாயேப் பெஹர்வான் (செய்து பாளையப்பட்டில்) கோனூர்நாடு, செந்தை ஆயமுள்பட முன்னிருந்தபடி சேர்த்து, முன்னிருந்த வழக்கப்படி பேஷ்கஷ் வாங்கிக் கொண்டு நாளது வருஷ முதல் வருஷா வருஷம் நடந்து வரும்படி உத்திரவாக வேணும்.

ரபிலாகர் மீ 25 உ சம்க்ஷேபம்

1799

## ஆவண எண்: 147A

*Memo-The subject of the report written in the year of Soogoorsuns thisa thisine mayathine aluf, by Atchutha pandarathar paliaput of Kantra Kottai belonging to the Pallapattu of Pattukotai for long time Konoor Nadu, Market and Toll, were joined to and conducted by the above paliaput. From the year of Sunsitha thisine it is under the attachment of the government. It is agreed to pay 1000, Thousand Parangi Pagoda, the sum generally agreed for the visit of the circar to adjoin now the same with paliaputar it was before and to give it. I shall cause to pay the amount for the visit. The Maharajah saib should be graciously pleased to adjoin the Konoor, Nadu Market and Toll to the paliaput it was before to receive tribute according to the previous custom to be confirmed every year from current year.*

## order.

*To be continued to be adjoined to the above paliaput as requested above from the 30th of the month of Moharam*

*25 : of Rabilakaram*

*Shamushamam.*

## ஆவண எண்: 148

### அரண்மனையிலிருந்து வெளியே போகும் சாமான்களுக்கு ஜாப்தா

| வருஷம் மாதம் தேதி (1) | மணி (2) | சொத்துக்காரர்கள் பெயர் (3) | சாமான்களின் விவரம் (4) | மதிப்பு ரூபாய் (5) | சமான்கள் எவ்விடத்திற்கு போகிறது என்ன வேலைக்காக யார்வசம் கொண்டு போகப்பட்டது (6) | கொண்டு போகிறவர்களின் கையெழுத்தும் அப்போது பாராவில் இருக்கிற கான்ஸ்டப்பில் கையெழுத்து செய்யவேண்டியது (7) |
|---|---|---|---|---|---|---|
| 14.9.11 | 7 மணி | ஜிறாத்கானா[173] விலிருந்து | பித்தளை தேக்கு-1, உருளி-2, சத்தல்-2, குவளை-2, அன்னக்குத்தி-1, பிச்சான்-1, சிக்குப்படுதா-1, காவிப்படுதா-1, ஆக உருப்படி 11-க்கு ரூ. | 35 | பாகவத சிவராவ் வீட்டுக்கு காதுகுத்து கல்யாண விசேஷத்துக்கு ஜூறாத்கானாவில் வாச்மேன் சிவராம்ராவ் வசமாக் போகப்பட்டது. | சிவராம்ராவ் மருதமுத்து - 1264 |
| 16.9.11 | பகல் 11.30 மணிக்கு | சங்கரநாராயண பாலம்பாயிட மிருந்து | நெல்கலம் 7 1/2 அதின் கிரயம் ரூ. | 14 | வலியன்னுக்காக கிருஷ்ணப்பிள்ளை வசம் போகப்பட்டது | கீறல் கிருஷ்ணசாமி 1282 |
| 16.9.11 | சா. 6 1/2 மணி | சீனியர் ராணி[174] பக்கத்திலிருந்து | ருணிக்குண்டு-2, போகிணிச்சட்டி-2 | 15 | சுபறாதி நாகசாமி றாவு வீட்டிற்கு அரிக்கார செங்கமலம் பிள்ளைவசமாய் | செங்கமலம் பிள்ளை 1282. |
| 17.9.11 | பகல் 12 மணி | பெரிய கொட்டியம் யிருந்து போகப்பட்டது | நெல்கலம் 25க்கு ரூ. | 50 | வலியக்கார நல்லம்மாவசமாகப் போகப்பட்டது. பெரிய கொட்டியம் கந்தசாமிப்பிள்ளை உத்தரவின் பேரில் கொடுக்கப்பட்டது | கந்தசாமி பிள்ளை வெங்கிடசாமி நீ. 1283. |
| 17.9.11 | பகல் 2 1/4 மணி | சோட்டா ராஜா அரண்மனை யிலிருந்து | சிறுமணி 18 கலம் நெல் ரூ. | 30 | வலியன் குத்துவதற்காக கொட்டியக்கார சாமினாதபிள்ளைவசமாய் | சாமினாதப்பிள்ளை வெங்கிடசாமி நீ. 1283. |

173. ஜிராத்கானா - ஆயுதசாலை

174. சீனியர் ராணி என்றது - 1912 மே மாசத்தில் தெய்வகதியடைந்தவரும் சிவாஜி ஒரே நாளில் மணந்த 17 பேரில் ஒருவருமான ஜிஜாம்பா பாயிசாகேப் ஆகலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 19.9.11 | 11 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | சோலை முத்துப்பிள்ளை வீட்டுக்குப் போகிற சாமான் குவளை-2, தேக்கு-1, அரிக்கஞ்சட்டி-1, போவுணிச்சட்டி-1, 5 சாமான் | 50 | சோலை முத்துப்பிள்ளை வீட்டுக்குப் போகிறது. | சக்கா அரிராவ் வெங்கிடசாமி நீ: 1283. |
| 19.9.11 | பகல் 12 மணிக்கு | சீனியர் பாய் சாயேப் பக்கத்திலிருந்து | சம்பா நெல் 60 காலம் நெல்லுக்கு மதிப்பு | 120 | வலியன் குத்துவதற்காக துளசியம்மாள் ..........கொண்டு போகப்பட்டது | அழகப்பிள்ளை கோபால்சாமி நீ-2. |
| 19.9.11 | பகல் 2 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | வெள்ளியில் செய்த வெற்றிலை பாக்குப் பெட்டி-1 | 50 | ரிப்பேர்க்காக வேலாயுதப்பிள்ளை வசமாய்கொண்டு போகப்பட்டது. | வேலாயுதம் கோபால் சாமி நீ-2 |
| 20.9.11 | சா. 2 மணி | சூப்ரண்டண்டு பக்கத்திலிருந்து | 2 டோர் சாமான் கறி வகையறா | 500 | உக்கடைத்தேவருடைய வீட்டிற்கு போகப்பட்டது | கோவிந்தசாமி நீ: 1294 |
| 21.9.11 | காலை 8 மணி | ஐசாள் சாயேப் பக்கத்திலிருந்து | பித்தளை குத்து விளக்கு ஜோடி-1 மதிப்பு ரூ. | 25 | ஷை யார் வீட்டில் நாக்கன் வேலை பார்க்கும் அரிகிருஷ்ண நாயக்கன் வசம் போகப்பட்டது | அரிகிருஷ்ண னாயக்கன் வெங்கிடசாமி நீ: 1283 |
| 21.9.11 | பகல் 2 மணி | ஆவாசாயேப் பக்கத்திலிருந்து | கிருஷ்ணமூர்த்திமிடம் மதிப்பு ரூ. | 15 | நவராத்திரி கொலுவுக்காக கலெக்டர் ராமச்சந்திர அய்யர் அவர் வீட்டிற்கு சேவுக ராதாகிருஷ்ண வசமாய்க் கொண்டு போகப்பட்டது. | |
| 22.9.11 | காலை 9 3/4 மணி | சோட்டாறாஜா பக்கத்திலிருந்து | 3 கலம் சம்பாநெல் மதிப்பு | 6.0.0 | வலியன் குத்துவதற்காக பழனியாண்டி வசமாய் | பழனியாண்டி கண்ணுசாமி நாயுடு நீ-1287 |
| 29.9.11 | இரவு 7 மணி | ஜீராத்கானாவில் இருந்து போகிறது | பல்லாக்கு காசுடன்-1, குத்து விளக்கு-4, ஆக மதிப்பு ரூ | 200 | காமாக்ஷியம்மன் கோவிலுக்கு நவராத்திரி பூஜைக்காகப் போகிறது | பாப்பு றாவு கண்ணுசாமி நாயுடு நீ-1287 |
| 23.9.11 | 8 1/2 மணி | ஆவாசாயேப் பக்கத்திலிருந்து | வெள்ளிக்குடம்-1, வெள்ளிசாமரம்-2, ஆக உருப்படி 3க்கு ரூ | 150 | காமாக்ஷியம்மன் கோவிலுக்காக நவராத்திரி உற்சவத்துக்காக பாப்புறாவ் வசமாய் கொண்டு போகப்பட்டது. | பாப்பு றாவு கோபாலசாமி நீ-2 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 25.9.11 | 9 மணி | சின்னத்துரை பக்கமிருந்து | சின்னபஞ்ச-2, குண்டுகுவளை-1, தேக்கு சா-1, தேக்கடி-1, சத்தல்-1 ஆக உருப்படி 6 | | கொட்டியம் சுப்பிரமணியப்பிள்ளை வீட்டுக்கு ஷ யார் வசமாகப் போகப்பட்டது | சுப்பிரமணிய பிள்ளை 1291 |
| 25.9.11 | 9 மணி | சின்னதுரை பக்கமிருந்து | பெரிய புடவை-2, சின்னது-2 ஆக 4 | 15 | | |
| 26.9.11 | 10 மணி | சின்னதுரை பக்கமிருந்து | வலியன் நெல்கலம் 13ரூ | 26 | மீனாக்ஷி ஆயி வீட்டுக்கு வலியனுக்காக ஷ இடத்தில் ஆபறாகி வேலை பார்க்கும் ரெகனாத சூர்யராம்சி வசம் போகப்பட்டது. | |
| 28.9.11 | 11 மணி | பெரிய கொட்டியம் | நெல்கலம் 20 மதிப்பு ரூ | 40 | ராம அண்ணா பிள்ளைக்கு வலியன் விடப்பட்டது | கந்தசாமி பிள்ளை கண்ணுசாமி நாயுடு ரீ-1287 |
| 29.9.11 | 11 மணி | சீனியர் ராணி பக்கமிருந்து | மரம் வீணை-1 மதிப்பு ரூ. | 10 | வெளியில் ரிபேருக்காக ஷ இடத்தில் வேலைபார்க்கும் ரெங்கநாதபிள்ளை வசமாகப் போகப்பட்டது. | கீறல் ரெங்கநாதன் |
| 29.9.11 | 12 மணி | சீனியர் பக்கமிருந்து | மரம் வீணை-1 மதிப்பு ரூ | 10 | வெளியில் ரிப்பேருக்காக ஷ வேலைபார்க்கும் வசமாகப் போகப்பட்டது | |
| 29.9.11 | பகல் 2.30 | சீனியர் ராணி பக்கமிருந்து | பெரிய குவளை-2 குண்டு-2, ஆக 4-க்கு மதிப்பு ரூ | 40 | மன்னயப்பா ஜாயம் வீட்டு தேவைக்காக | கீறல் ரெங்கநாதன் ரெத்தினசாமி 1297 |
| 29.9.11 | சா. 5.20 | சீனியர் ராணி பக்கமிருந்து | வலியனுக்காக நெல் 13 3/4 ரூ | 26 | வலியன் குத்துவதற்காக கொண்டு போகப்பட்டது | வெங்கிடாசலம் பிள்ளை |
| 2.10.11 | 11 மணி | பிராபாய் அம்மா பக்கத்திலிருந்து | பச்சை நெல் கலம் 2 மதிப்பு ரூ | 4 | மிசினுக்காக வலியன் இடப்பட்டது | நாராயணப்பிள்ளை கோபால்சாமி ரீ-2. |
| 2.10.11 | சா. 3 மணி | ஜாமதார்கானா[175] விலிருந்து | பட்டுக்குடை-1, சாமரம் கொடி-1 | 30 | ஜிறாத்கானா போஸ் நாயக்கன் மருதமுத்து கோவில் அம்புப் போடக் கொண்டு போகிறார். | மருதமுத்து 1264 |

175. ஜாம்தார் கானா - அரசகுடும்பத்துக்குரிய ஆடைகள் நகைகள் வைக்கப்பெற்ற இடம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 2.10.11 | 6 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | வெள்ளி யிசத்-1, வெள்ளி குலாம் தாளே-1, வெள்ளி விடையடப்பா-1, ஆக உருப்படி 3 | 200 | மாயணா அம்மணி வீட்டுக்காக ஷ யாரிடம் சுபுறாதி வேலை பார்க்கும் ரெகுநாத குரியவமுசு மூலியமாய்க் கொண்டு போகப்பட்டது | |
| 10.11 | காலை 10 மணி | ஸ்ரீசீனியர் ராணி பக்கமிருந்து | நாற்காலி உருப்படி 2க்கு கிரயம் | 7 | வடக்கு வீதிக்கு ஜீவாய் அம்மணி வீட்டுக்கும் ஆத்மாராவ் உத்தரவின் பேரில் போகப்பட்டது | ஆத்மராம் மருதமுத்து 1264 நீ. |
| 5.10.11 | பகல் 12 மணி | பெரியதுரை பக்கத்திலிருந்து | வெள்ளி கூஜா-1, வெள்ளி கிண்ணம்-15, வெள்ளி வட்டி பெரியது-1, சின்னது-1, வெள்ளி பேலா-1, வெள்ளிகுண்டு செம்பு-1, வெள்ளிகெண்டி-1, வெள்ளி சின்னதாம்பாளம்-1, வெள்ளி பூப்போட்ட பலகை-1 | 200 | மாடிக்றாவ் சாயேப் வீட்டுக்கு பெரியதுரை பக்கத்திலிருந்து உஜீர் வேலை பார்க்கும் ராமச்சந்திரராவ் எழுதிவைத்துக் கொண்டு போகப்பட்டது | ராமசந்திரராவ் |
| 7.10.11 | 11 மணி | பெரியகொட்டியம் | நெல்வலியனுக்காயிடப்பட்டது கலம் 40 மதிப்பு ரு | 100 | றாமா அண்ணா வகையறாக்கு யிடப்பட்டது | கோபால்சாமி 2நீ. |
| 8.10.11 | பகல் 11 மணி | ம.ஸ்ரீ. சின்னதுரை பக்கமிருந்து | வலியன் நெல் கலம் 7க்கு ரு | 14 | மேல்ப்படி கொட்டியக்காரர் சுப்பிரமணியபிள்ளை வலியன் கலம் 7 ஷ யாரிடத்தில் வேலை பார்க்கும் ரெகுநாதசூரியவம்சம் உத்திரவின் பேரில் போகப்பட்டது | மருதமுத்து 1264 |
| 8.10.11 | 11 மணி | பெரியபிள்ளை பக்கமிருந்து | சவுளி கோதண்டபாணி பிள்ளை கடன் தீர்க்க | 985 | பெரிய துரை பக்கத்திலிருந்து ஷெயார் கார் கிருஷ்ணறாவ் மூலியமாய் கொண்டுபோகப்பட்டது. கோவிந்தசாமி காலேராவ் உத்தரவின்பேரில் | கோவிந்தசாமி காளேவாவு மருதமுத்து 1264 நீ. |
| 9.10.11 | கா. 10 மணி | வராயி அம்மிணி பக்கத்திலிருந்து | வலியன் நெல் கலம் 50க்கு ரூ | 100 | வகையறா ஷ சந்திரசாயேப் வீட்டுக்கு நெல்கலம் 5க்கு கிரயம் ரு. 10.0. | வெங்கிடாசலம் பிள்ளை கோவிந்தசாமி-1274 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 10.10.11 | காலை 9.30 மணி | சீனியர் ராணியிடமிருந்து போகப்பட்டது | கனாத்து படுதா-2, குண்டு-3, போவணி சட்டி-1, பலகை-1 ஆக ரு | 17 | சேத்துராம் வீட்டு தேவைக்குப் போகப்பட்டது | கோவிந்தசாமி றாவ். |
| 10.10.11 | பகல் 11.30 மணி | சீனியர் ராணியிடமிருந்து போகப்பட்டது | சமக்காளம்-1, குவளை-2, தேக்-1, தாம்பாளம்-2, அரிவாள் மணை-2, சார்ணி-1 | | ஷ சேத்துராம் வீட்டுக்கு போகப்பட்டது | ஷேக்பரித் |
| 10.10.11 | காலை 2 மணி | வராயி அம்மணி பக்கத்திலிருந்து | பித்தளைக்குடம்-2, பித்தளைக்குவளை-2, பித்தளைக்குண்டு-1, பித்தளை போணி-1, ஆக உருப்படி 6 | 15 | ரிப்பேருக்காக சால்சாப் காளீம் சாயேப் முலியமாய்க் கொண்டு போகப்பட்டது | வெங்கிடசாமி நீ. 1283 |
| 11.10.11 | 5 | தேவஸ்தானம் ஆபிசிலிருந்து | அமேயனா கிருஷ்ணமூர்த்திறாயர் | 40.9 ..8 | பெரிய கோயில் சிலவுக்காக போகப்பட்டது | கிருஷ்ணமூர்த்திராவ் ரெத்தினசாமி 1293 |
| 11.10.11 | சா. 5 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | நெல்கலம் 4க்கு ரு | 8 | வாடிக்கார் போம்ளேறாவ் வீட்டுக்கு கொண்டு போவதாக காரியம் விஸ்நாத்ராவ் வசமாய்க் கொண்டு போகப்பட்டது | விஸ்வநாதராவ் கோபால்சாமி |
| 12.10.11 | சா. 6 மணி | ஜா(ம்)தார்கானாவி லிருந்து | பட்டுக்கோட்டை 1க்கு | 15 | முகாசா இன்ஸ்பெக்டர் வீட்டுக் கல்யாணத்திற்காக மேலவாடி விசாரிப்பு சாமினாததேவர் வசமாய்க் கொண்டு போகப்பட்டது | சாமிநாத தேவர் வெங்கிடசாமி நீ. 1283 |
| 14.10.11 | பகல் 12 மணி | ஜீராத்கானா விலிருந்து போகப்பட்டது | ரெட்டகம்பம் டேறா சட்டில் உள்பட டேரா 2 ஷ-1, கொம்பு-1 ஆக 3 | 500 | | |
| 16.10.11 | 11 மணி | சின்னதுரை பக்கமிருந்து | காசா நெல் கலம் 31 | 78 | கொட்டியக்கார சுப்பிரமணியபிள்ளை வலியன். விடப்பட்டது. | கண்ணுசாமி நாயுடு 1287 நீ. |
| 16.10.11 | பகல் 12 மணி | பெரிய துரை பக்கத்திலிருந்து | வலியம் நெல் கலம் 20க்கு ரு | 40 | அங்கம்மா ஆயி வகையறா பிடித்துப் போவதாக ஷயாரிடம் வேலை பார்க்கும் சைனிக்கே கோவிந்தன் எழுதி வைத்துக்கொண்டு போகப்பட்டது | இந்தக் கீறல் கோவிந்தன் வெங்கிடசாமி நீ. 1283 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 18.10.11 | 12 மணி | பெரிய கொட்டியத்திலிருந்து | நல்ல அம்மாள் வகையறா வலியனுக்காக நெல் 40 கலம் கிரையம் ரு | 80 | நெல்லு கொண்டு போனவர்கள் நல்ல அம்மாள் வீட்டுக்கு | கோதண்டசாமி, வேங்கிடசாமி நீ: 1283 |
| 20.10.11 | சா. 5 மணி | ஜீராத்கானாரிவிலிருந்து | பெரிய ரெட்டு ஜமுக்காளம்-2, வினாத்து சமுக்காளம்-1 ஆக உருப்படி 3க்கு | 200 | டாக்டர் வீட்டுக் கல்யாணத்துக்காக போலீஸ் பாராக்காரர் கோவிந்த ராவ் எழுதி வைத்துக்கொண்டு போகப்பட்டது | கோவிந்தசாமிராவ் வெங்கிடசாமி 1283 |
| 22.10.11 | கா. 8 மணி | வராயி அம்மணி பக்கத்திலிருந்து | பித்தளை தேக்-1, இரும்பு சாரணி-1, ஆக உருப்படி 2க்கு | 15 | ஜாம்ளேராவ் சந்தில் கோவர்த்தன[176] பூசைக்காக விஸ்வநாதராவ் வீட்டுக்குப் போவதாக சால்சாப் கண்ணுராவ் எழுதி வைத்துக் கொண்டு போகப்பட்டது. | கண்ணுராவ் |
| 26.10.11 | 12 மணி | பெரிய துரை பக்கத்திலிருந்து | வலியம் நெல் கலம் 30க்கு ரு. | 60 | சொர்ணத்தாய் பிடித்துக்கொண்டு போவதாக ஆடக்கார வேம்பய்யன் எழுதி வைத்துக்கொண்டு போகப்பட்டது. | வேம்பய்யன் ஆடைக்காரன்[177] |
| 27.10.11 | 8 மணி | சின்ன துரை பக்கத்திலிருந்து | பித்தளைக்குவளை-2, குண்டு-1, ஆக 3க்கு ரு | 15 | சொர்ணத்தாயி பிடித்துக்கொண்டு போகிறதாக கொட்டியம் விட்டல்ராவ் எழுதிவைத்துக்கொண்டு போகப்பட்டது | விட்டல்ராவ் |
| 28.10.11 | 10 மணி | ஆவாசாயேப் பக்கமிருந்து | வெள்ளி தாம்பாளம்-1, வெள்ளிக் கிண்ணி-1, தேக் பெரியது-2, உருளி-2, சத்தல்-2, குவளை-1, பித்தளைக் கரண்டி-1, பெரிய தாம்பாளம்-1, ஆக உருப்படி 8-க்கு ரு. | 80 | சுதேசி இஸ்டீல் டிரக் கம்பெனி மானேஜர் முத்துக்குமார சாமிப்பிள்ளை வீட்டுக் கல்யாணத்திற்க்காக டையார் பக்கத்தில் பாறா கிருஷ்ணப்பிள்ளை எழுதி வைத்துக் கொண்டு போகப்பட்டது | கிருஷ்ணன் கண்ணுசாமி நாயுடு 1287 |

176. கோவர்த்தனம் - இந்திரன் சினம் கொண்டு ஏவிய பெருமழையைத் தடுத்தற் பொருட்டுக் கண்ணன் குடையாகப் பிடித்ததும் வடமதுரைக்குப் பக்கத்தில் உள்ளதுமான மலை

177. ஆடைக்காரன் - தண்ணீர் கொண்டு வருபவன்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 29.10.11 | பகல் 11 மணி | பெரிய கொட்டியத்திலிருந்து போகப்பட்டது | நெல் வலியனுக்காக கந்தசாமி பிள்ளை வீட்டுக்குப் போகப்பட்டது நெல் கலம் 10க்கு ரூ | 22 | ஷ கொட்டியம் வேலைசெய்யும் கந்தசாமி வசம் போகப்பட்டது | கந்தசாமிப் பிள்ளை மருதமுத்து 1264 |
| 30.10.11 | பகல் 11 1/2 மணி | | நெல் கலம் 8க்கு ரூ | 20 | வலியனுக்காக கொண்டுபோகப்பட்டது கிருஷ்ணப்பிள்ளை வீட்டுக்கு | கிருஷ்ணப்பிள்ளை |
| 30.10.11 | பகல் 12 மணி | சீனியர் ராணி பக்கமிருந்து போகப்பட்டது | பித்தளைப்பாத்திரம் உருப்படி 16க்கு | 200 | கோவிந்தசாமி அப்பா வீட்டுக்குப் போகப்பட்டது | காளே. |
| 31.10.11 | சா. 4.30 மணி | சின்னதுரை பக்கமிருந்து | பித்தளை சாமான் சின்னகுவளை 2ஷ குண்டு-2, சின்னதவளை-1, தாம்பாளம்-1, ரூ மதிப்பு | 30 | வெங்கடேச பெருமாள்கோவில் தெருவுக்கு சிவசாமிராவ் வீட்டுக்குத் தேவைக்கு உசூர் வேலை பார்க்கும் சக்காரிராவ் உத்தரவின் பேரில் போகப்பட்டது | சக்க அரிராவ் மருதமுத்து 1264 |
| | | | | | | |
| 2.11.11 | பகல் 10 1/2 | அரிமொய்தேராவ் சாயேப் | கோவிந்தசாமி மொய்தேராவ் சாயேப்பிற்கு இனாமாகக் கொடுத்த நெல்கலம் 3க்கு ரூ | 6 | வடக்குவீதி கிருஷ்ணசாமி தகப்பனார் இறந்துபோனதற்குக் கொடுத்தார் | கண்ணுசாமி |
| 2.11.11. | மணி 12 | சின்னப்பிள்ளை பக்கத்திலிருந்து | சுப்பிரமணியப்பிள்ளை வீட்டுக்கு நெல்கலம் 12 ரூ | 25 | | சக்கா அரிராவ் |
| | | | | | | |
| 11.11 | 11 1/2 மணி | பெரிய கொட்டிய மிருந்து போகப்பட்டது | நெல்கலம் 40 கந்தசாமி வகையறா வசமாய் போகப்பட்டது. ரூ | 86 | வலியக்கார கந்தசாமிப்பிள்ளை வீட்டுக்குப் போகப்பட்டது | கந்தாமிப்பிள்ளை ரெத்தினசாமி 1293 |
| 7.11.11 | மணி 11 | சீனியர் ராணி அம்மாள் பக்கத்திலிருந்து | வலியன் நெல் 45 கலம் நெல்போகிறது கிரயம் | 90 | அங்கம்மாள் வகையறாவுக்கு கலம் 45 கொண்டு போகிறார்கள் வலியம் நெல் | முத்துசாமிபிள்ளை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 7.11.11 | மணி 11 | சீனியர் பக்கத்திலிருந்து | பச்சமால்சாயேப் வீட்டுக்குப் போகிற சாமான்கள் பெரியதேக்கு-3, பஞ்சு பாத்ரே-1, தாம்பாளம்-2, உருளி-2, சந்து-2, தவ்வா-1, ஜார்ணி-1, அரிக்கஞ்சட்டி-1, ஆக..12, சிக்குப்படுதா-1, கத்தும்-2, சமுக்காளம்-1, ஆக மொத்தம் சாமான்-17 | 300 | பச்சமால் வீட்டு தேவை பிள்ளையைத் தொட்டியில் போடுகிறதுக்காக | கிருஷ்ணசாமிறாவ் |
| 7.11.11 | மணி 6 | ஆவாள்சாயப் பக்கமிருந்து | பழுதுபார்க்கப் போகிறது படம் 2 கிரயம் ரூ | 7 | கவளறாம் கொண்டு போனது | கவளாறாம் கோவிந்தசாமி 1279 |
| 8.11.11 | மணி 6 | அரண்மனை சூரிய ரால் சாயேப் பக்கமிருந்து தனது சொந்தவீட்டுக்கு போகிற சாமான்கள் | வீட்டுப்பல சாமான்களும் போயிருக்கிறது | | அவாள் சொந்த வீட்டுக்கு | இந்த கீறல் அய்யாவு கோபால்சாமி நீ.2 |
| 11.11 | 7 மணி | சோட்டா றாஜா பக்கமிருந்து | பித்தளை குவளை-1, குண்டு-1, ஆக உருப்படி 2க்கு ரூ | 10 | பச்சமால் ஆடக்கார சுப்பிரமணியன் பச்சமாலுக்கு கொண்டு போவதாக எழுதிவைத்துக்கொண்டு போகப்பட்டது | சுப்பிரமணியன் கோபால்சாமி |
| 9.11.11 | கா. 9 மணி | சோட்டாறாஜா பக்கமிருந்து | வெள்ளிதாம்பாளம்-1, பன்னிர்செம்பு-1, பாக்கு வெற்றிலைப் பெட்டி -1, சந்தனவட்டி மைடப்பி-1, பிச்சானா-2 | 200 | பச்சமால் சாயேப் வீட்டுக்கு விசேஷத்துக்காக ஆடக்கார பழனியாண்டி வசமாகப் போகப்பட்டது. | பழனியாண்டி |
| 9.11.11 | கா. 11 மணி | சீனியர் ராணி அம்மாள் பக்கத்திலிருந்து | வலியன் நெல் கலம் 30க்கு ரூ | 75 | வலியன் பேர்வழி வந்த அம்மாள் வகையறாக்கள் ஷை கொட்டியக்கார வேங்கடாசலம்பிள்ளை உத்திரவின்பேரில் போகப்பட்டது. | வெங்கடாசலம் பிள்ளை மருதமுத்து 1264 |
| 11.11.11 | காலை 10 | சீனியர் பாயிசாயேப் பக்கமிருந்து | பித்தளை தேக்-1, தாம்பாளம்-1, அண்டா-1, குவளை-1, யெண்ணைச்சட்டி-1, குண்டு-3, கரண்டி-1, ஆக 9 | 50 | வலியக்கார மீனாட்சி வசமாகக் கொண்டு போகப்பட்டது. உசிர் சேவுகம், நாராயணன் | நாராயணன் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 15.11.11 | சா. 4 1/2 மணி | பெங்கலராசாப் பக்கமிருந்து போகப்பட்டது | ரவிபெருமாள் ராஜா படம் 3க்கு ரு | 1-8 | செகநாத சாயேப் வீட்டுக்கு..... வேலை செய்யும் ஸரஸாபாய் அம்மாள் வசம் போகப்பட்டது | ஸரஸாபாய் அம்மாள் |
| 16.11.11 | சா. 5 மணி | சீனியர் பாய்சாயேப் பக்கமிருந்து | பேக்கு-2, உருளி-1, சாலத்திரம்-1, பெரிய தாம்பாளம்-1, பிச்சானா-1 | 40 | சந்திரார் சாயேப் வீட்டில் குப்புறாவ்வசமாய் கொண்டு போகப்பட்டது. | கோபாலசாமி குப்புராவ் நீ: 2 |
| 17.11.11 | பகல் | சீனியர் ராணி பக்கமிருந்துபோகப் பட்டது | சம்பா நெல் கலம் 18க்கு ரு | 45 | வலியம் குத்துகிறதற்காக காரியம் வெங்கடாசலம்பிள்ளை வசம்கொண்டு போகப்பட்டது | வெங்கடாசலம் பிள்ளை |
| 18.11.11 | | சீனியர் ராணி பக்கத்திலிருந்து | நாற்காலி 60க்கு | 24.0 .0 | வெண்ணாற்றங்கரைக்கு கோவிந்தசாமி காளாறாவ் வசமாய் கொண்டுபோகப்பட்டது. | |
| 18.11.11 | | சீராத்கானாவி லிருந்து | பெரிய டேரா -1, சின்ன டேரா-1, ஆக 2 சாமான்கள் உள்பட படுதா பெரியது 1க்கு | 600 70 | அரித்துவார மங்கலத்துக்கு உக்கடைத் தேவர் மாரியப்ப கண்டியர் வசமாய் வாச்மேன் சிவறாம்றாவ் வசமாய் அனுப்பப்பட்டது | சிவறாம் ராவ் |
| 18.11.11 | காலை 10 மணி | சீனியர் பாய்சாயேப் பக்கத்திலிருந்து | வெள்ளி சொம்பு-1, டம்ளர்-1, வட்டி-1, தாம்பாளம்-1 ஆக4 | 200 | உபயோகத்திற்காக அப்பன்ராவ் வசமாய்ப் போகப்பட்டது. | அப்பன்ராவ் கோவிந்தசாமி 1274 |
| 19.11.11 | காலை 10 மணி | சீனியர் பாய்சாயேப் பக்கத்திலிருந்து | வலியன் நெல் 4க்கு மதிப்பு ரு. | 10 | வரதம்மாள் வீட்டுக்கு வலியனுக்கு மேல் படி இடத்தில் கொட்டியம் வேலைபார்க்கும் வெங்கடாசலம்பிள்ளை வசமாய்ப் போகப்பட்டது. | வெங்கடாசலம் பிள்ளை |
| .11.11 | காலை 9 மணி | அரிசாயேப் பக்கத்திற்கு கிஷ்ணசாமி சாயேப் பக்கத்திலிருந்து | பித்தளைக் காது வைத்த அண்டா-1, தாம்பரத்தவளை-1, துப்பட்டி-1, அரிசி குருணி-1, பழையக் கதவு-பாதி-1, ஆக உரு-5 | 10 | ராஜகோபாலசுவாமி கோவில் பக்கத்திலிருக்கும் கிஷ்ணசாமி சாயேப் அக்காள் அம்மணிபாய் காயிலாவுக்குக்காக கூலிக்கார காமாட்சி வசமாய் போவதாகக் பாராக்கார ரெங்கசாமி எழுதி வைத்துக் கொண்டு போகப்பட்டது. | ரெங்கசாமி மருதமுத்து 1264 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 24.11.11 | பகல் 12 மணி | வர்தாநந்த சாயேப் பக்கத்திலிருந்து | வலியம் நெல் கலம் 9க்கு ரூ. | 20 | வரதாநந்த சாயேப் பக்கத்தில் கரீதி வேலை பார்க்கும் கிஷ்ணபிள்ளை பிடித்துக்கொண்டு போகப்பட்டது. | இந்தகீறல் கிஷ்ணபிள்ளை |
| 24.11.11 | சா. 4 மணி | ஈரா. பாயியம்மணி பக்கமிருந்து சூரியேறாவ் சாயேப் அரண்மனை யிலிருந்தும் | சத்தல்-1, பஞ்ச பாத்திரம்-1, சின்ன பஞ்சபாத்திரம்-3, வெண்கலலோட்டா-1, சின்னதேக்கு-1, பிங்கா-1, சின்ன தாம்பாளம்-2, ஆக உருப்படி-10 | 30 | வடக்குவீதி கிஷ்ணசாயேப் வீட்டுக்குப் போகிற ஷை இடத்தில் கரீதி வேலை பார்க்கும் ரெங்கசாமிப் பிள்ளை வசமாகப் போகப்பட்டது. | ரெங்கசாமி பிள்ளை வெங்கிடசாமி நீ. 128 |
| 25.11.11 | சா.4 மணி | ஆவா சாயேப் பக்கத்திலிருந்து | வெள்ளி சாமரம் ஜோடி-1, வெள்ளிக் காவடி சொம்பு ஜோடி-1, ஆக உருப்படி 4-க்கும் | 500 | வாடிக்கேறாவ் சாயேப் பக்கத்தில் காவடி எடுக்க ஆவார்சாயேப் பக்கத்தில் ஆட வேலைபார்க்கும் கலியபெருமாள் எழுதி வைத்துக்கொண்டு போகப்பட்டது | இந்தக்கீறல் - கலியபெருமாள், கண்ணுசாமி. |
| 25.11.11 | இரா. 7 மணி | சோட்டாறாஜா பக்கத்திலிருந்து | பட்டுக்கோட்டை சாமரம் வெள்ளி மொளன் கொடுத்தது மதிப்பு ரூ | 40 | ஷை இடத்தில் உகுர் வேலைபார்க்கும் பாபுறாவ் வீட்டுக்கு விஷேத்துக்காக ஷை வசமாக போகப்பட்டது | பாப்புறாவ் |
| 26.11.11 | பகல் 12 மணி | சீனியர் ர்ாணி பக்கத்திலிருந்து | | | எல்லையம்மன் கோவில் அய்யருக்கு 60 கலியாணத்திற்காக ராமசாமி வசமாய் | ராமசாமி ரெத்தினசாமி 1293 |
| 27.11.11 | பகல் 10 மணி | சோட்டா றாஜா பக்கத்திலிருந்து | வலியன் நெல் கலம் 3க்கு கிரயம் | 6 | கொண்டுபோகிற ச. செங்கமலம் வலியன் நெல் | முத்து கோவிந்தசாமி 1274 |
| 28.11.11 | பகல் 11 மணி | பெரிய துரை பக்கத்திலிருந்து | நெல் கலம் 3க்கு மதிப்பு ரூ. | 6 | சொர்ணத்தாய் வசம் வலியன் நெல் கலம் 3 விடப்பட்டது | கண்ணுசாமி நாயுடு 1287 |
| 2.12.11 | சா. 5.34 | ஜீராத்கானாவி லிருந்து | டேரா -1, சமுக்காளம்-1 | 35 | மங்கள விலாசத்துக்கு ………………… | கிருஷ்ணசாமி சாயேப் வெங்கிடசாமி 1283 |
| 3.12.11 | காலை 12 | பெரிய கொட்டியத்திலிருந்து | நெல்கலம் 45 மதிப்பு ரூ | 110 | வலியனுக்கு ஷை கொட்டியம் வேலை பார்க்கும் கந்தசுவாமி பிள்ளை வசமாகப் போகப்பட்டது | கந்தசாமிபிள்ளை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 4.12.11 | பகல் 11 | சின்னதுரை பக்கத்திலிருந்து | நெல் கலம் 35 வலியனுக்காக | 80 | கொட்டியக்கார சுப்பிரமணியம் பிடித்துக்கொண்டு போவதாக அபறாதி[178] ரெகுநாத ஜிரோ[179] வமிச எழுதி வைத்துக் கொண்டு போகப்பட்டது. | 1289 |
| 6.12.11 | பகல் 12 மணி | ஜிறாத்கானாவி லிருந்து | ரெட்டைக்கம்ப டேறா வகையறாக்கள் உருப்படி 25 மதிப்பு | 500 | சயிதம்பறம் சத்திரத்திற்கு[180] விசேஷத்திற்காக ஷ சிறாத்துகானா வேலைபார்க்கும்......... சாயேப் உத்தரவின் பேரில் போகப்பட்டது. | ரெத்தினசாமி 1293 |
| 2.12.11 | பகல் 12 மணி | ஜிறாத்கானாவி லிருந்து | பந்தலுக்கு கட்டவேண்டிய தேர்ச்சீலை வகையறா உருப்படி 8 | 10 | சயிதம்பாபுரம் சத்திரத்திற்குப் போகப்படுகிறது. | ரெத்தினசாமி 1293 |
| 7.12.11 | பகல் 11.30 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | ரிபேர்க்காக பித்தளை தவலைப்பானை உருப்படி 1க்கு ரூ | 5 | ரிப்பேர்க்காக ஆடக்கார சொக்கலிங்கம் கோர்ட்டுக்கு போகிறபடியால் ஷ 2....சேவுகம் சக்காரிரிறால் உத்தரவின் பேரில் போகப்பட்டது. | சக்கா அரிராவ் கோவிந்தசாமி 1274 |
| 7.12.11 | பகல் 1 மணி | பாய்சாயேப் பக்கத்திலிருந்து | வலியம் நெல் கலம் 90க்கு ரூ | 200 | துளசி அம்மாள் வகையறா பிடித்துக்கொண்டு போவதாக கொட்டியம் வெங்கடாஜலம்பிள்ளை எழுதிவைத்துக் கொண்டு போகப்பட்டது. | கோபால்சாமி வெங்கடாசலம் பிள்ளை |
| 8.12.11 | பகல் 12 மணி | ஜிறாத்கானாவி லிருந்து | குதிரை டேறா வகையறா உருப்படி-1 | 30 | பெரிய தாக்காலுக்கு டேறா வகையறாக்கள் போகிறபடியால் ஷ சிறாத்துவில் வேலைபார்க்கும்.. பாபுவின் உத்தரவின் பேரில் போகப்பட்டது. | பாப்பு 1289 |

178. அபறாதி - அபராதி - தீங்கு செய்பவன்(?)

179. ஜுரோ - சூரிய

180. சயிதம்பறம் சத்திரம் - சைதம்பாபுரம் அன்னசத்திரம். இது குரக்கோட்டை அன்னசத்திரத்துக்கு அருகில் இருந்தது (பக்.276-277)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8.12.11 | சா. 3 மணி | ஜாம்தார்கானா விலிருந்து | வெள்ளி அம்பாரி அஸ்மான கிரி[181] யுள்பட மதிப்பு ரூ. | - | மெட்றாஸ் சக்கரவர்த்தி[182] படம் ஊர்வலம் செய்து வைப்பதற்காக மகாறாஜா சபை சாமிநாதபிள்ளை வசமாகப் போகப்பட்டது | வேலு முதலியார் நீ, 1291 |
| 9.12.11 | பகல் 11 மணி | ஜிராத்கானாவி லிருந்து | டேறா வகையறாக்கள் 2க்கு மதிப்பு ரூ | 500 | பூண்டி வாண்டையார் பங்களாவுக்கு விசேஷத்துக்காக ஷை...... .......... நாராயணசாமி நாயக்கர் உத்தரவின் பேரில் போகப்பட்டது. | நாராயணசாமி நாயுடு கோபாலசாமி நீ.2. |
| 9.12.11 | பகல் 11.30 | சின்னதுரை பக்கமிருந்து | பஞ்சபாத்திரம்-3, குண்டு-2, சாற்ணி-1, பாய்சுருட்டு-3, மதிப்பு | 40 | சாட்டு சுப்பிரமணியப்பிள்ளை சந்திலிருக்கும் வேலாயுதம் பிள்ளை வீட்டுக்கு கல்யாணத்திற்காக ஷை யாரிடத்தில் வேலை பார்க்கும்... ரெகுநாதசூர்ய வம்சம் உத்திரவின் பேரில் போகப்பட்டது. | கோபால்சாமி 2 நீ. |
| 9.12.11 | இரா. 8 மணி | சோட்டாறாஜா பக்கமிருந்து போகப்பட்டது | பெரிய ரெத்தின கம்பளி-1, அதன் கிரயம் ரூ | 15 | வடக்குவீதி பெரியசாமிப்பிள்ளை வீட்டுக்குப் போகப்பட்டது. ராமச்சந்திரரால் வசம் போகப்பட்டது | கோபாலசாமி நீ.2 |
| 10.12.11 | காலை 7 மணி | ஆவாசாயேப் பக்கமிருந்து போகப்பட்டது | குண்டு-2, போவணிசட்டி-1, மூடி-1, முக்குச்சட்டி-1, லோட்டா-1, சின்னகுண்டு-1 | | கிருஷ்ணசாமி சாயேப் வீட்டுக்குப் போகப்பட்டது. ஆடிமுத்து ஆடக்காரன் வசம் போகப்பட்டது. | கீறல்- ஆடிமுத்து ஆடக்காரன் வேலுமுதலியார் 1291 |
| 10.12.11 | சா.4 மணி | சீனியர் பாய் சாயேப் பக்கத்திலிருந்து | வகபலகை[183] 5 அடி நீளம் 1 கெஜ அகலம் 1 | 3.0.0 | மாடிக்றால் சாயேப் வீட்டிற்கு சால்சாப்பு குப்புறால் வசமாய்க் கொண்டு போகப்பட்டது. | குப்புறாவு கோபால்சாமி நீ.2 |
| 10.12.11 | சா.5 மணி | ஆவாசாயேப் பக்கமிருந்து போகப்பட்டது | பித்தளைத்தவலை-1, தாம்பாளம்-1, கறண்டி-1, மதிப்பு ரூ | 15 | தேவஸம் கிருஷ்ணசாமி சாயேப் வீட்டுக்குப் போகிறது | இந்தக்கீறல் கலியன் |

181. அஸ்மானகிரி - மேற்கட்டி

182. சக்கரவர்த்தி என்றது ஏழாம் எட்வர்டை

183. வகபலகை - விசிப்பலகை - ஊஞ்சற்பலகை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 10.12.11 | 8 1/2 மணி | ஆவாசாயேப் பக்கமிருந்து போகப்பட்டது | வெஷ்ணை தின்கும் கிருஷ்ணன் படம் பெரியது-1 | 50 | அய்யங்கடை யிடத்தில் உகுரிலிருக்கும் துக்காறாம் றாவு உற்சவம் நடத்துவதற்கு கொண்டு போகப்பட்டது. | துக்காராம் ராவ் கோலமுத்து |
| 11.12.11 | மணி 9 | ஜிராத்கானாவி லிருந்து | மெத்தை-1, மதிப்பு ரூ | 30 | தையல் கடைக்கு | சிவராம்ராவ் கண்ணுசாமி நாயுடு |
| 12.12.11 | காலை 10 மணி | ஜிராத்கானாவி லிருந்து | வெல்வெட் நாற்காலி-3, ரெத்தின கம்பெளி-2, கெகப்பு இழைத்த விரிப்பு-1 | | | |
| 13.12.11 | பகல் 12 1/2 மணி | பங்கிலே யிருந்து | பன்னீர் சொம்பு-1, மயில் வாகனம்-2, வெள்ளிதாம்பாளம் 3க்கு மதிப்பு ரூ | 500 | ஜிவாய் அம்மணி வீட்டுக்கு கொண்டு போகிறது. வெங்கிடாசம்பிள்ளை மூலியமாய் | வெங்கிடாசலம் பிள்ளை. |
| | | | வெற்றிலை வைக்கும் தட்டு, அதில் இரண்டு தட்டுக்கு வெள்ளி சந்தின.... லா-1 | 30 | | |
| | | | அத்தர் வைக்கும் டப்பா-1, புனுகுவைக்கும் தங்க குடுக்கை-1, சால்வை முடுகிறது மதிப்பு | 3 | | 1273 ஙீ.சா. கோலமுத்து. |
| 14.12.11 | சா. 6.30 மணி | ஜீனியர் ராணி பக்கத்திலிருந்து | பஞ்சபாத்திரம் இரண்டு | 10 | சதாசிவ மாடிக்கு திற...கல்யாணத்திற்கு கண்ணுராவ் வசமாய் போகப்பட்டது. | கண்ணுறாவு வெங்கிடாசலம் பிள்ளை ஙீ.1283 |
| 15.12.11 | இரா. 7.45 மணி | சபையில் யிருந்து போகப்பட்டது | பெரிய மேஜை-3, மூன்றுக்கு ரூ. | 15 | முகாசா ஆபிஸுக்கு போகப்பட்டது | |
| 15.12.11 | இரா. 8.30 மணி | வரா அம்மணி சாயேப் பக்கத்திலிருந்து போகப்பட்டது | படுக்கை மெத்தை-1, தலகாணி[184]-1, சமுக்காளம்-1, ஆக 3க்கு ரூ | 7 | | முனுசாமி றாவ் |

184. தலகாணி - தலையணை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 15.12.11 | இரா. 8 மணி | ஜிராத்கானாவி லிருந்து | மேசை 3 போயிருக்கிறது. அதுமதிப்பு ரூ | 30 | தட்டிமாலுக்குப்[185] போகிறது | |
| 16.12.11 | பகல் 9 மணி | ஜிராத்கானாவி லிருந்து | டிபார்ட்டிக்காக[186] முகாசா ஆபிஸில் இருந்து வந்த நாற்காலி மேஜைகள் | | மறுபடியும் திருப்பி ஆபிஸுக்கு கொண்டு போகப்பட்டது | கோலமுத்து |
| 19.12.11 | பகல் 11 மணி | பெரிய கொட்டி யத்திலிருந்து | வலிய நெல் கலம் 40 மதிப்பு ரூ | 90 | ஷை கொட்டியம் கந்தசாமி பிள்ளை வகையறா ஷை கொட்டியம் துரைசாமிப்பிள்ளை உத்தரவின் மீது போகப்பட்டது. நல்லஅம்மாள் வலியன் பிடித்துபோகிறவர்கள் | துரைசாமிப்பிள்ளை ரெத்தினசாமி 1298 |
| 21.12.11 | பகல் 11 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | வலியன் நெல் கலம் 12 1/2 மதிப்பு ரூ | 31.4 .0 | ஷை யார் யிடத்தில் கொட்டியம் வேலை பார்க்கும் சுப்பிரமணியபிள்ளை வலியன் ஷை யாரிடம் வேலை பார்க்கும் கிருஷ்ணசாமி ராவ் உத்தரவின்பேரில் போகப்பட்டது | கிருஷ்ணசாமிராவ் மருதமுத்து 1264 |
| 24.12.11 | பகல் 11 மணி | ஜிராத்கானாவி லிருந்து | பித்தளை அண்டா-2, ஷை கொப்பரை-2, கரண்டி-1, துன்னக்குச்சி-1, தேக்கு-2, பஞ்சபாத்திரம்-1 ஆக உருப்படி 10 | 60 | கிருஷ்ணாஜி...........குருபூஜைக்காக வி. ............ வசமாய் கொண்டு போகப்பட்டது. | கிருஷ்ணசாமிறாவ் ரெத்தினசாமி 1293 |
| 24.12.11 | சா. 3 மணி | சின்னதுரை பக்கமிருந்து போகிறது | பொம்மை ஜோடி-1, ஷை ரண்டு ஜோடி-கப்படி-3, வைத்த பொட்டி-1, ஆக 5 | 15 | சந்திராயி வீட்டுக்குப் போகிறது. | |
| 25.12.11 | காலை 9 1/4 மணி | ஜிறாத்கானாவி லிருந்து | குத்துவிளக்கு 4 | | அல்லாப்பண்டிகை உற்சவத்திற்காக கொண்டு போகப்பட்டது | துரைசாமிப்பிள்ளை. |

185. தட்டிமால் - மாட்டுக்கொட்டில் (பக்.457)

186. டிபார்ட்டி - Tea party - தேநீர் விருந்து

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 28.12.11 | காலை 9.30 | ஜீனியர் ராணி அவர்கள் பக்கமிருந்து | இரும்பு எண்ணை தவ்வா-1, பித்தளை காது இல்லாத உருளை-1, மதிப்பு ரூ | 8.0.0 | காதுயில்லா உருளி, எண்ணைத் தவ்வா, வடக்கு ஆசார வீதியிலிருக்கும் சேத்துறாம் வீட்டுக்கு தேவைக்காக சால்சாப்பு காசி உத்தரவின் பேரில் போகப்பட்டது. | காசி மருதமுத்து 1264 |
| 28.12.11 | சா. 3 1/2 மணி | ஆவாசாயப் பக்கத்திலிருந்து | சம்பா நெல் 2 கலம் மதிப்பு ரூ | 4 | கிஷ்ணசாயப் மருமகன் சகாம் சாயேப் வீட்டிற்கு வேலைக்காரி திருவேங்கடத் தம்மாள் வசமாய் கொண்டுபோகப்பட்டது | இந்தக்கிறல திருவேங்கிடத்தம்மாள் ரெத்தினசாமி 1293 |
| 28.12.11 | சா. 5 1/2 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | குத்துவிளக்கு 2க்கு | 15 | சாமினாதபிள்ளை வீட்டிற்கு அல்லா பண்டிகைக்காக சக்கா அரிராவ் வசமாய்க் கொண்டு போகப்பட்டது | சக்கா அரிராவ் ரெத்தினசாமி 1293 |
| 29.12.11 | 11 மணி | சின்னதுரை பக்கமிருந்து | பித்தளை குவளை-1 மதிப்பு ரூ | 15 | சாமிநாத பிள்ளை வீட்டுக்கு போகிறது | சக்கா அரிராவ் |
| 2.1.12 | பகல் 1 மணி | சீனியர் ராணி பக்கமிருந்து | பெரிய தேக்-1 | 30 | பாவுசாமி சாயேப் வீட்டு விசேஷத்திற்காக ஷை இடம் காயிதா வேலை பார்க்கும் காத்தப் பெருமாள் எழுதி வைத்து ஷை வசமாய் போகப்பட்டது | காத்தப் பெருமாள் வேலு முதலியார் 1291 நீ: |
| 2.1.12 | பகல் 1 மணி | பெரிய கொட்டியத்திலிருந்து | வலியம் நெல் கலம் 52 | 117 | நல்லம்மாள் வகையறா பிடித்துப் போவதாக கொட்டியம் கந்தசாமிப்பிள்ளை எழுதி வைத்துக்கொண்டு போகப்பட்டது | கந்தசாமிப் பிள்ளை வேலு முதலியார் 1291 நீ: |
| 2.1.12 | சா. 6 மணி | ஜிறாத் கானாவிலிருந்து | பெரியசெம்பு தேக்-1க்கு | 20 | படே உசேனி அல்லா கோவில்[187] விசேஷத்திற்காக ஷை யாரிடம் நகராட்சி வேலை பார்க்கும் குலாம் காதர் சாயேப் எழுதி வைத்துக் கொண்டு போகப்பட்டது. | குலாம் காதர் சாயேப் கோலமுத்து |

187. படே உசேன் தர்கா - அரண்மனை தேவஸ்தான மேற்பார்வையிலிருப்பது (பக்.213 இல் 15)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 9.1.12 | சா. 3 3/4 மணி | வறாம்சா பக்கத்திலிருந்து | 20 கலம் நெல் மதிப்பு ரூ | 45 | வலியன் குத்துவதற்காக லட்சுமாயி வசமாய் கொண்டு போகப்பட்டது | லட்சுமாயி |
| 7.1.12 | சா. 5 1/4 மணி | ஆவா சாயேப் பக்கத்திலிருந்து | சம்பா நெல்கலம் 1க்கு மதிப்பு ரூ | 2.4.0 | வீட்டிற்கு சாப்பாட்டிற்காக மாரிமுத்து என்கிற மாப்பிள்ளை வசமாய்க்கொண்டு போகப்பட்டது. | மாரிமுத்துப்பிள்ளை மாப்பிள்ளை |
| 8.1.12 | 11.30 மணி | சீனியர் பக்கத்திலிருந்து | வலியன் நெல் கலம் 60க்கு மதிப்பு ரூ | 150 | வலியன் குத்துவதற்கு காத்தப்பெருமாள் வசம் போகப்பட்டது. | காத்தப்பெருமாள் |
| 10.1.12 | காலை 10 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | தேக்கம் பீரோல் 1க்கு மதிப்பு ரூ | 20 | கீழவீதி பச்சைமால் சாயேப் வீட்டுக்கு .......டி யாரிடத்தில் வேலை பார்க்கும் ...... நாராயணசாமிப்பிள்ளை உத்தரவின் பேரில் போகப்பட்டது | நாராயணசாமி |
| 10.1.12 | பகல் 1 மணி | சின்னதுரை பக்கத்திலிருந்து | நெல்கலம் 7க்கு மதிப்பு ரூ | 67 | வலியன் கொண்டு போ..... சுப்பிரமணிய பிள்ளை வசமாய்க் கொண்டு போகப்பட்டது | சுப்பிரமணிய பிள்ளை வெங்கிடசாமி 1283 |
| 10.1.12 | பகல் 2 மணி | ஹரிசாயேப் பக்கத்திலிருந்து | சம்பா நெல் கலம் 13க்கு மதிப்பு ரூ | 32.8 .0 | வலியன் குத்துவதற்காக வடக்குவீதி கோவிந்தசாமி சாயேப் வீட்டிற்கு கிருஷ்ணசாமி வசமாய்க் கொண்டு போகப்பட்டது | |
| 16.1.12 | சா. 5 மணி | இங்கிளராவ் பக்கத்திலிருந்து | பூனா படம் பெரியது படம்-3, சின்னபடம்-1, ஆக உருப்படி-4 மதிப்பு ரூ | 2 | வடக்குவீதி தேசங்கறாவ் சாயேப் வீட்டுக்குப் போகிறபடியில், இங்கிளராவ் சாயேப் பக்கத்தில் வேலை பார்க்கும் முத்துசாமி பிள்ளை உத்திரவின் பேரில் போகப்பட்டது. | முத்துசாமி பிள்ளை மருதமுத்து 1264 |

# தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதி-1*

## Bundle No. 2C, Sub Bundle No. 23

## (1)

ஸ்ரீ ராஜராஜஸ்ரீ சாயபு[1] அவர்கள் சர்க்காரில் புதுகொ(ட்டை)[2] வலங்கை[3] பெரியதின(க்கா)ற[4]னாகிய (நாறா) யண செட்டி மகன் அழகிரிசெட்டி-க. யிடங்கை பெரிய தினக்காற அஞ்சுசாதி[5] பெரிய தினக்காற னாறாயண ஆசாரி -க. இவர்கள் எழுதி வைத்த வாக்குமூலம்.

கேழ்[6]:-வலங்கையில் சேர்ந்த சாதிகள் யார்? இடங்கை சேர்ந்த சாதி யார்-அது விவறு[7] சொல்லுங்கோள்.

மறு:-வலங்கையை சேர்ந்த சாதிகள், ரெட்டிவடுகர்[8]-க. கமல வடுகர்-க. தொளுவ[9]வடுகர்-க. தொளுவ செட்டி-க. வெள்ளாத[10]செட்டி-க. குத்தி கொஸா[11]-க. றங்கா(ரி) வடுகர்-க.

* மோடி ஆவணக் கட்டுகளில் இருந்து பிரித்தெடுக்கப்பட்ட தமிழ்க் காகிதச் சுவடிகள்

1 ராஜராஜஸ்ரீ சாயபு என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

2 புதுக்கோட்டை

3 வலங்கை - பல்வேறு சாதி மக்களிடை வேற்றுமை உணர்ச்சி தோன்றுங்கால் அரசினிடத்து முறையிடு செய்வர். அங்ஙனம் முறையிடுங்கால் அரசனது வலது பக்கத்தில் இருந்தவர் வலங்கையினர் என்றும், இடது பக்கத்தில் இருந்தவர் இடங்கையினர் என்றும் கூறப்பெற்றனர். (பக். 408)

4 பெரிய தினக்காரன் - பெரிய தனக்காரன் - ஊரில் உயர்ந்த நிலையிலுள்ளவன்; செல்வாக்கும் உள்ளவன்.

5 அஞ்சுசாதி - பாஞ்சாளர்கள் - தட்டான், கன்னான், சிற்பன், தச்சன், கொல்லன் எனுமிவர்.

6 கேழ் - கேள்வி

7 விவறு - விவரம்

8 வடுகர் - தெலுங்கர்

9 தொளுவ - துளுவ (கன்னட தேசத்துக்குத் தெற்கிலுள்ளது துளுவநாடு)

10 வெள்ளாத - வெள்ளாள

11 கொஸர் - கொல்லர் ('ல' கர இரட்டிப்பு)

சேணியர்[12]-க. சலுப்பன்[13]-க. யெடையர்-க,சாலுயக்காரன் -க [14] கொமுட்டி-க[15] உப்பிலியன்-க,[16];சாணான்-க,[17] சுண்ணாம்புக்காறன்-க.மாறாய செட்டி-க, மேளகாரன்[18]-க, வலையர்[19]-க. தெலுங்க அம்பட்டன் -க. தமுழ[20] அம்பட்டன்-க, வண்ணான்-க. வாணியன்[21]-க. ஆக சாதி 22

யெடங்கை சேர்ந்த ச(ாதி) பேலசெட்டி-[22]க, கைகாளர்[23]-க, பள்ளி[24]-க. ப(டை)யாச்சி[25]-க, மறவர்[26]-க, மோளக்காரன்-க, ஆக 6. ஆக ரெண்டு[27] கட்சியில் சேர்ந்த சாதி 28[28].

கே: இதை தவிற ஒங்கள்[29] ரெண்டு கட்சியைச் சேர்ந்த சாதிகள் யில்லையே.

மறு:[30] - இதை தவிற யெங்களை சேர்ந்த சாதிகள் வேரை[31] யில்லை.

கே: உங்கள் ரெண்டு கட்சியைச் சேர்ந்த மேல்கண்ட 28 சாதியினரும் யெந்தவித மாயி[32] பந்தல் போட்டு வாகந பிருதுகளுடன் கலியாணம் செய்து ஊர்கோலம்[33] வருகுறது.[34]

---

12 சேணியன் - ஆடை நெய்பவன்

13 சலுப்பன் - சணலிலிருந்து நார் எடுக்கும் சாதியைச் சேர்ந்தவன்

14 சாலியக்காரன் - நெசவுத் தொழிலுக்குரியவன்

15 கோமுட்டி - கோமட்டி - தெலுங்கு வைசிய சாதியினன்

16 உப்பிலியன் - உப்பு அமைக்கும் சாதியினன்

17 சாணான் - கள்ளிறக்கும் சாதியினன்

18 மேளகாரன் - நாகசுரம், ஒத்து, தவுல் ஆகியவற்றை வாசிக்கும் வாத்தியக்காரர்

19 வலையர் - மீன்,பறவை முதலியவற்றைப் பிடித்து வாழ்பவர்

20- தமுழ - தமிழ

21 வாணியன் - செக்கான்

22 பேலசெட்டி - பேரி செட்டி

23 கைகாளர் - கைக்கோளர் - நெசவுத்தொழில் செய்யும் சாதியினர்

24 பள்ளி - வன்னியர்

25 படையாச்சி - படையாட்சி (போர்வீரர்)

26 மறவர் - மலைவேடர்

27 ரெண்டு - இரண்டு

28 வலங்கை 22 + இடங்கை 6 =28 எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் அடுத்த ஆவணத்தில் (2) வலங்கை 24 + இடங்கை 9 மொத்தம் = 33 எனக் கூறப்படுகிறது.

29 ஒங்கள் - உங்கள்

30 மறு - மறுமொழி - பதில்

31 வேரை - வேறு

32 யெந்த விதமாயி - எந்தவிதமாய்

33 ஊர்கோலம் - ஊர்வலம்

34 வருகுறது - வருகிறது

மறு: சாணான், வலையர், வண்ணான், தெலுங்க அம்பட்டன், வாணியன், கோமுட்டி, பேல செட்டி இந்த யெட்டுசாதி யார்களும் அடியில் கணக்கு யெழுதி வைக்குறதும்.[35] தவிற மைத்த[36] சாதிகள் அவரவர்களுடைய சந்தோஷப் படிக்கி பந்தல் பே(ாட்டு) அவாளு(க்கு) தேவையான வாத்திய விருது (வகை)யறாவை வைத்துக்கொண்டு யெந்தவீதி மார[37] (போக) வேணுமோ அந்தவீதியின் வழியாக அவர்கள் இஷ்டப்படி திவட்டி மத்தாப்பு முதலானதுகளுடன் ஊர்கோலமும் செய்து கொள்ளலாம். அதுகளில் யெங்களுக்கு யாதொரு சம்மந்தமுமில்லை.

மேல்கண்ட யெட்டுசாதி[38]யில் கோமுட்டி கலியாணத்துக்கு பந்தலுக்கு செகப்பு வெள்ளை வஸ்திரங்க . . . . .ட்டி வாழை கூந்தல் கட்டுகுறது[39] மல்லாமல் அபேக்ஷிச்ச[40] வஸ்திறங்கள் கட்டிகொண்டு சங்கித மேளத்துடன் கலியாணம் செயிகுறது[41] மல்லாமல் ஊர்கோலத்துக்கு மாப்பிள்ளையும் பொண்ணும் பல்லாக்குல[42] உள்கார்ந்து சாதார கோவிலுக்கு யெதிற்[43] சந்தில் லெட்சுமண செட்டி புள்ளையார் கோவிலுக்கு யெதிற் பள்ளிவாசல் வழியாயி ஊர்கோலம் போயி இரண்டாம் வீதி வழியாயி போய் கா பே யி குப்பமுத்து சேர்வைகாறன் வீதியிலிருந்து வடக்கே போயி-ராணாகுண்டு புள்ளையார் கோவிலுக்கு வடக்கே வந்து தெற்குவீதி வழியாயி கெழக்கெ போயி[44] (றா)ஜவீதிவழியாயி வீட்டுக்கு திவட்டியுடன் போகுறது.

வாணியன் பந்தலுக்கு வெள்ளை செகப்பு கலந்து கட்டி கொள்ளுகுறது. தவி(ற) (வா)ழைக்கூந்தல் ஆனை அறசாணி இதுகள் ஷெ சங்கிதமேளத்தையும் மாப்புளை[45] பொண்ணுக்கு அபேகைஷயிது பெதும் பல்லக்கு குதிரை..... திந்த வாத்தியபிறுதுகளுடன் கலியாணம் செயிது திவட்டியுடன் அவாள் குடியிறுக்குற[46] தெருவை சுத்தி ஊர்கோலம் செயிகுறது.

பேல செட்டி கலியாணத்துக்கு பந்தலுக்கு வெள்ளை செகப்பு கலந்து கட்டிக் கொள்ளுகுறது. தவிற வாழைக் கூந்தல் ஆனை அறசாணி(அரசாணி) நெட்டி மாலை இதுகளும் கட்டி கொம்பு தப்பு சங்கித மேளம் மாப்பிள்ளைக்கும் பொண்ணுக்கும் அபேகஷிச்சதுகளும் இதுகளுடன் கலியாணம் செய்து ஊர்கோலத்துக்கு செகப்பு குதிரை பல்லாக்கு ரெடி இதுகளில்

35 வைக்குறது - வைக்கிறது

36 மைத்த - மற்ற

37 மார - யாக

38 சாணார், வலையர், வண்ணான், தமிழ அம்பட்டன் தெலுங்க அம்பட்டன், வாணியன், கோமுட்டி, பேலசெட்டி என எண்மர்.

39 கூந்தல் கட்டுகிறது - விசேடகாலங்களில் கட்டப்பெறும் குருத்தோலைத் தோரணம்.

40 அபேக்ஷிச்ச - விரும்பிய

41 செயிகுறது - செய்கிறது

42 பல்லக்குல - பல்லாக்கில்

43 யெதிற் - எதிர்

44 கெழக்கேபோயி - கிழக்கே போய்

45 மாப்புளை - மாப்பிள்ளை

46 குடியிறுக்குற - குடியிருக்கிற

உள்கார்ந்து செக(ப்பு) பாவாடை பிடிச்சுகொண்டு தீவட்டி மத்தாப்பு வாணவித்தையுடன்.. .. வே ரம வீதிவழியாயி ட(ா)ண. . . வழியாயி மேற்கே போயி அ(ட . . . . யே முத்து சேர்வைகாரன் வீதி (வழி)யாயி வடக்கே திரும்பி காணாநாகுண்டு புள்ளையார் கோவிலுக்கு மேலப்பாதையாயி வடக்கே வந்து தெற்கு றாஜவீதியுடனே. . . .கொ திரும்பி கடைவீதி பாறதயாயி அய்யாகண்ணு செட்டி வீட்டுக்கு முனம்பாக எ. . . கொ வடம்போக்கி வழியாய் வீட்டுக்கு ஊர்கோலம் வருகுறது.

சாணான்-க. வலையர்-க. வண்ணான்-க. தமுழ அம்பட்டன்-க. இந்த நாலு சாதியாரும் கல்யாணத்துக்கு-பந்தலுக்கு வெள்ளை செகப்பு துணி கலந்துகட்டி வாழை கூந்தல் ஆணை அறசாணி[47] வைத்துக் கொள்ளுகுறதும் தவிற பறமேளம் இதுகளுடன் (க)லியாணம் செயிது ஊர்கோலத்துக்கு மாப்புள்ளையும் பொண்ணும் வெள்ளை குதிரை மேல் உள்கார்ந்து கொண்டு தீவட்டியுடன் ஷியார்கள் குடியிறுக்குற தெருவை சுத்தி வருகுறதும் தவிற அபேகஷிச்சதுகளும் போட்டு கொள்ளுகிறது.

. . . . . . . . . .அம்பட்டன் க.
. . . . . . . . . .
. . . . . . . . . .(மூன்று வரிகள் சிதைந்துள்ளன)
மாறுசெட்டி . .ண்ணுமா ளறன ச. . . . . . . .நாலுசாதி
. . . . . . . . .
யார்களுடனே கலியாணம் . . . . .
குறுது(மல்லாமல் அரமனை. . . . . .
அதை புழ . . . . . .யிறுந்தால்
அதை அரமனை உத்திரவின் பேரில் யெல்லா சாதிகளும் படித்துக் கொள்ளலாமே தவிற அவர்கள் மனசுப்படி படிக்கப்படாது.

18. . . . . . . .ஞு
சூன் மீ 10 உ
அளகிரி செட்டி சம்மதி நாறாயண ஆசாரி:

## (2)

ராஜஸ்ரீ மகாராஜா சாயபு அவர்கள் சர்க்காரில் (புதுக்கோட்டை) றாஜதானியின் வலங்கை கவறை செட்டிக்கு பெரியதினகாரநாகிய நாராயண செட்டி மகன் அழகிரி செட்டி-க. யிடங்கை அஞ்சுசாதி பாஞ்சாளத்தின் பெரிய தினகாறனாகிய நாறாயண ஆசாரி-க. இவர்கள் இருபேர்களும் எழுதி வைத்த வாக்குமூலம்.

கே: வலங்கை யெண்டும்[48] யிடங்கை யெண்டும் நீங்கள் கட்சிக்காறங்கள்[49]

---

47 அரசாணி - அரசங்கொம்பு

48 யெண்டும் - என்றும்

49 கட்சிக்காறங்கள் - கட்சிக்காரர்கள்

சொல்லுக்குரீங்களே.[50] வலங்கை சேர்ந்த சாதி யார் யார். யிடங்கை சேர்ந்த சாதி யார் அதின் விபரம் சொல்லுங்கோள்.

மறு: வலங்கை சேர்ந்தவர்கள் கவரை செட்டிகார்-க, ரெட்டி வடுகார் -உ கமல வடுகர்-3, தொளுவர் வடுகர்-4, தொளுவர் செட்டி-5, வெள்ளாழ(செட்)டி-6, குத்திகொல்லர்-7, றங்காரி வடுகர்-8, (சே)காணி(செ)ட்டி-9,[51] (சலுப்பன்)-10, யெடயர்-11,[52] சாலியகாரன்-12, கோமுட்டி செட்டி-13, சுண்ணாம்புக்காரன்-14, மாறாய செட்டி-15, வாணியன்-16, உப்பிலியன்-17, சாணான்-18, மேளக்காரன்-19, வலையர்-20, (தெலுங்கு)அம்பட்டன்-21, தமுழ அம்பட்டன்-22, வண்ணான்-23, பறையன்-24, ஆக சாதிகள் 24.[53]

இடங்கை சேர்ந்த சாதி பாஞ்சானத்தார்-1, பேலசெட்டி-1, கைகாளர்-1, பள்ளி-1, படையாச்சி-1, மறவர்-1, மோளக்காரன்-1, பள்ளன்-1, சக்கிலியன்-1, ஆக 9[54]

கே: இப்போ மேலாக யெழுதி வைத்திறுக்கிற சாதி தவிற உங்களிருகட்சியில்ச் சேர்ந்த சாதிகள் வேறா யில்லையா?

மறு: மேலவங்கள் கணக்கு நாங்கள் யெழுதி வைத்துயிறுக்குற[55] சாதிகள் தவிற யெங்கள் கட்சியைச் சேர்ந்த வேறு சாதிகளில்லை.

கேழ்வி: உங்கள் இறண்டு கக்ஷியைச் சார்ந்ததாயி நீங்கள் யெழுதி வைத்திருக்கிறபடி 33 சாதியாரும் சுபசோபன முதலான கலியாணத்துக்கு யெவ்விதம் பந்தல் போட்டு யெந்த பிருது வாகன வாத்தியங்களுடன் கலியாணம் செய்து யென்னமாய் ஊர்கோலம் வறுகிறது. அந்த ஜாதி விபறமாயி[56] சொல்லுங்கோள்.

மறு:- இதுவரையில் யெங்கள் இரு கட்சிக்காறர்களின் மாச்சரியத்துநால்[57] விய ....... ஸத யி ஸாலே[58] னானாசினசாயிந்[59] நடந்து சறச்சற ஒசை[60] யிருந்த படியாலும் சறச்சறவுக்கு[61]

---

50 சொல்லுக்குரீங்களே - சொல்லுகிறீர்களே

51 சேணியர் ஆகலாம்

52 இடையர்

53 மேல், முதல் விசாரணையில் வலங்கை சேர்ந்த சாதிகள் 22 என்று கூறியிருக்க, இங்கு முதலிலும் இறுதியிலும் கூறப்பட்ட கவரைச் செட்டி, பறையன் ஆகிய இரண்டு சேர்த்து 24 என்றுள்ளன (பக்.411)

54 முதல் விசாரணையில் கண்ட இடங்கை ஆறொடு முதலிலும் இறுதியிலும் கூறப்பட்ட பாஞ்சாளத்தார், பள்ளன், சக்கிலியன் ஆகிய மூவரையும் சேர்த்து இடங்கை ஒன்பது ஆயிற்று (பக்.411)

55 எழுதிவைத்துயிறுக்குற - எழுதி வைத்து இருக்கிற

56 விபறமாய் - விவரமாய்

57 மாச்சிரியத்துநால் - மாற்சரியத்தினால்

58 'வியவஸ்தையில்லாமலே' என்று இருக்கலாம்

59 'நானாவிதமாக' என்று இருக்கலாம்

60 சச்சரவு என்று பொருள்படும்

61 சறச்சறவுக்கு - சச்சரவுக்கு

இடமில்லாமல் இப்போ நாங்கள் இரு கட்சிக் காறங்களும்[62] ராஜியாகி யெங்களுடைய (து)ம் யெங்கள் கட்சி(யை)ச் சேர்ந்தவர்களுடையவும் . . .... ன(சுப)சோபநங்கள்[63] முதலான காரியங்களை இதனடியில் கண்டிருக்கிறபடி நடந்து கொண்டு வருகிறத்துக்கு[64] விப(ரம்).

வலங்கை கவரைசெட்டி கே சறரா. . . யான. . . .ற-வாசலிலும் தெருவாசலும் ஒலிமுடக[65] பந்தல் போட்டு செகப்பு வெள்ளை சேலை கலந்து கட்டி கொள்ளுகுறது. தவிற ஷை பந்தலுக்கு வாழை குலை நெட்டி பாக்கு முதலாகிய சகலமும் சோடிச்சி[66] னன்[67] மேளம் பெரிய மேளம்-தப்பு கொம்பு வாங்கா[68] நகளு பறமேளம் தாரை சங்குநாதரான[69] இவ்வித(வா)த்தியங்களுடனே வந்து ஆணை அற. . . .[70] னிறைவித்துக் கொண்டும் கலியாணம் செய்குறதும(ன்னியி)ல் மாப்பிள்ளைக்கும் பொண்ணுக்கும் அவர்கள் அபக்ஷித்த பட்டு வஸ்திறங்களும் ஆபரணங்களும் தரித்துக் கொள்ளுகுறதுமல்லாமல் சதிரப்பண்ணி கேளிக்கை பண்ணுகுறது. ஊர்கோலத்துக்கு-யானை வெள்ளைக்குதிரை-காடி பல்லக்கு யிதுகளின் பேரில் மாப்பிள்ளையும் பொண்ணும் வைத்துக்கொண்டு- . . . .டை கேரிக்கையுடனே மத்த வெள்ளை பாவாடை வெள்ளை வீசிக்கொண்டும் பாண வீதியிலும் ஊர்கோலம் வறுகுறது.

வலங்கை சேர்ந்த வாணியன்,கோமுட்டி,சாணான்,வலையன்,வண்ணான், தமுழ அம்பட்டன்,தெ(லு)ங்க அம்பட்டன், இ.பறையன், இந்த எட்டு சாதியாளுக்கு அடியில் கண்டிறுக்குறபடி நடப்பிவிக்கிறதும் தவிற மைத்த சாதிகளை அவறவர் மனசின் இஷ்டப்பட்டபடி வாத்தியம் பிறுதுவாகநங்களுடன் கலியாணம் செய்து ஊர்கோலம் வறலாம். ஆசனத்தில் பெறப்பம்கட்டி-1 சுண்ணாம்புக்காறன் 1. சாளுயக்காரன் 1. உப்பிலியன் -1 இந்த நாலு சாதி கலியாணத்துக்கு ஆனைமேல் உள்கார்ந்து ஊர்கோலம் வறகூடாது. மேலும் ஷையாரனைவர்களும் ஷை சொல்லப்பட்ட பிறுது அரமனையிலுத்த வாயிறுந்தால்-ரமனு. . . . .ற. . . . .ன பேரில் வைத்து கொள்ளவேணும். அவர்களாய் மனசின்படி பிடிக்கக்கூடாது. மேலும் அவர்கள் செயிகுற கலியாணம் சோஸியகதியா சாரத்துக்கும் தேசாசாறத்துக்கும் அனுசரித்து நடக்கவில்லை. மேல்கண்டயெட்டுச் சாதியில் கண்ட கோமுட்டி கலியாணத்துக்கு பந்தலுக்கு செகப்பு வெள்ளை சேலைகளை கயிறுகட்டி வாழை குருத்தில் கட்டுகுறதும் தவிற அபேக்ஷிச்ச வஸ்தணாபறரணங்கள் தரித்துகொண்டு சங்கீதமேளத்துடன் கலியாணம் செய்யுகுறதுமல்லாமல் ஊர்கோலத்துக்கு மாப்பிள்ளை வகையறா பொண்ணும் பல்லாக்குல உளுக்கார்ந்து சாதார கோவிலுக்குயெதிற்சந்தில் லட்சுமண செட்டி புள்ளையார் கோவிலுக்கு யெதிற்பள்ளிவாசல் வழியாயி தெற்கே போய்

---

62 கட்சிக்காரர்களும்

63 சுபசோபனங்கள் - மங்கலமானவை

64 வருகிறத்துக்கு - வருகிறதற்கு

65 ஒலிமுடக - ஒலிமுகம் -முன் புற வாயில்

66 சோடிச்சி - சோடித்து - அலங்கரித்து

67 னன் - நன்

68 வாங்கா - ஊது கொம்பு

69 நாதரான - நாதவாகி - நாதக்குழல் - ஒர் ஊதுகுழல்

70 ஆணை. . அற - ஆணை அரசாணி; அரசாணி - அரசங்கொம்பு

ரெண்டாம் வீதி வழியாயி ஊர்கோலம் போயி குப்பமுத்து சேர்வைகாறன் வீதியிலிறுந்து வடக்கே போயி ராணா குண்டு புள்ளையார் கோவிலுக்கு வடக்கே வந்து தெற்குவீதி வழியாய் கெழக்கே போய் றாஜவீதி வழியாய் திவட்டியுடன் வீட்டுக்குப் போகுறது.

வாணியன் பந்தலுக்கு வெள்ளை செகப்பு கலந்து கட்டி கொள்ளறதுமல்லாமல் வாழை கூந்தலும் கட்டி ஆனை அறசாணி வைத்துகொண்டு சிவிகிதமேளம் தப்பும் பல்லக்கு குதிரை அபேக்ஷிச்சிச்சவாறு இதறவாத்தியங்களாக நகைகளுடன் கலியாணம் செயிது கொள்வதுடன் அவன் தெருவை சுத்தி ஊர்கோலம் செயிது வருகுறது.

சாணார் 1, வலையன் 1, வண்ணான் 1, தமுழஅம்பட்டன்-1, இந்த நாலு சாதியாரும் கலியாணத்துக்கு செக(ப்பு) வெள்ளை கலந்து கட்டிக்கொள்ளுகுறதுமல்லாமல் வாழைக் கூந்தல் கட்டி அடகள அநுசரித்துக்கொண்டும் பறமேளத்துடன் கலியாணம் செயிது ஊர் கோலத்துள் அ(வ)ர்கள் காசியனுபவப்படி தூயது போட்டுக்கொண்டு மாப்பிள்ளையும் பொண்ணும் குதிரைமேல் உள்கார்ந்து கொண்டு திவட்டியுடன் ஷியார்கள் குடியிருக்கும் தெருவைச் சுத்தி வறுகுறது.

தெலுங்க அம்பட்டன் கலியாணத்துக்கு மேலகண்ட விவரப்படி நடப்பிவிக்கிறதில் சங்கீதமேளம் ஒன்றுமாத்திரம் அதிகமாய் வைத்துக்கொண்டு மைத்ததுகள் மேலாகக் கூறியிருக்குறபடி நடப்பிவித்துக் கொள்ளுகுறது.

பறயன் கலியாணத்துக்கு பறத்தெருவில் பந்தல்போட்டு ஷி பந்தலுக்கு வெள்ளை செகப்புச் சேலை கலந்துகட்டி வாழைக்கூந்தல் ஆனை அரசாணிவைத்து 4 பறமேளம் தப்பு வாணம் வைக்குறது. தவிற ஷிக்கு பலவிதநாதம் இ(த்)யாதி யாவத்துடன் மைத்த செலமாகேசறுச செமபத்துடனென்று பற கூழா(ப)டிச்சியுடனே வந்து கலியாணம் செயிது குதிரைமேல் மாப்பிள்ளையும் பொண்ணும் வைத்து வெள்ளை பாவாடை பிடித்து வெள்ளை....அகுறதும் தவிற வெள்ளைக்கொடைபிடித்து திவட்டி பிடித்துக்கொண்டு முறைப்படி சகியுடனேயும் வாத்தியங்களுடனேயும் ஷியார்கள் குடியிருக்கும் தெருவை சுத்திவறுகுறது. மேலும் ஷி(யார்க)ளுக்கு ஷி வலங்கை பெரிய தினகாறன் வீட்டுக்கு போக. . .த(விறு)நால்தா. அரமனையார் யெந்த பாதையில் செல்லும்படி உத்திரவு கொடுப்பார்களோ அந்த மார்க்கமாயி வந்து ஷி பெரியத் தினக்காரறகளைக் கண்டு சந்தனம் பாக்கு வெற்றிலை வாங்கிக்கொண்டு போகுறது.

யெடநாஙுக அஞ்சுசாதி பாஞ்சானற்கா கலியாணத்துக்கு வலங்கை கவரை செட்டி ஒய்யனும் கலியாணம் செயிகுறதி. செகப்பு குதிரை செகப்பு கொடை செகப்பு பாவாடை இதுகள் மாத்திரம் வைத்துக்கொள்ளுகுறது. மைத்த வாத்திய வாகனங்கள் பொகயாவும் வீதியும் வலங்கை செட்டிகளுக்கு வறுகுறதுயாவும் வறுகுறது.

**(3)**

ஶ்ரீ மஹாறாஜாசாயபு அவர்கள் சர்க்காரில் புதுகோட்டை றாஜதானியிலிறுந்து வறுக்குற[71] வலங்கை கவரை செட்டிகளுள் பெரியதினகாறநாகிய நாறாயண செட்டி மகன் அழகிரி

71 வறுக்குற –வருகிற

செட்டி-க. யிடங்கை பாஞ்சாளம் அஞ்சுசாதி பெரிய தினகாறனாகிய நாறாயண ஆசாரி-க. நாங்கள் இரண்டு கட்சி காறங்களும் றாஜியாக யெழுதிக் கொடுத்த அஸ்தாட்சி[72] யென்னவெண்டால்.[73]

யெங்களுடையவும் யெங்களைச் சேர்ந்த கட்சிக்காரர்களுடையவும் சுப சோபன முதலான காரியங்கள் நடப்பிவிக்கிறத்தில் கட்சி காரர்களிலொருவர்கொருவர் சாச்சறவு பட்டுக்கொண்டு அந்த காரியங்கள் முடியாமலிறுக்குறபடியால் அது சங்கதியைக் குறித்து அரமனையார் விசாறணை செயித்ததில் இதுநடியில்[74] கண்டிறுக்குற விவரப்படி நாங்களுடைய[75] கட்சிக்காறர்களும் சமாதானமாகிப் போனபடியினால் இதில் கண்டிருக்கிறப்படி நாங்களும் யெங்களை சேர்ந்த கட்சிகாறர்களும் இதில் தப்பா(ம)ல் நடந்து கொண்டு வருவோம். அப்படி தப்பி நடந்தால் அரமனையார் இடுகுற கட்டளைக்கு உள்பட்டு மாயிறுக்குறோம்.

ஷெ யிடங்கை சேர்ந்த கைகாளர் பள்ளி படையாச்சி மறவர் மோளக்காரன் இந்த அஞ்சு சாதியாறும் அவரவர்மனசின் இஷ்டப்படிக்கி கலியாணம் செய்து கொள்ளுகிறது. அப்படி செயிகுறது தேசாசாறத்துக்கும் சாதியாசாரத்துக்கும் அனுசரித்து மாத்திரம் யிறுக்க வேணுமேயல்லாமல் வித்தியாசமாயி நடந்தால் அவர்களுக்கு சர்க்காறார் குடுக்குற உத்திறவுக்கு பாத்தியப்படுவார்கள்.

(பேல) செட்டி கலியாணத்துக்கு பந்தலுக்கு வெள்ளை செகப்பு கலந்து கட்டி கொள்ளுகுறதுமல்லாமல் வாழை கூந்தல் நெட்டிமாலை இதுகளும் கட்டி ஆனை அறசாணி வைத்து கொம்பு தப்பு மாபிள்ளைக்கும் பொண்ணுக்கும் அபேக்ஷிச்ச தூயது தரித்துக்கொண்டு கொம்பு தப்பு சங்கீதமேளம் யிதுகளுடன் கலியாணம் செயிது ஊர் கோலத்துக்கு செகப்பு துதி நா பல்லக்கு கட்டி இதுகளிலுள்கார்ந்து செகப்பு பாவாடை பிடிச்சுகொண்டு தீவட்டி மத்தாப்பு வாணவித்தையுடன் வீட்டிலிறுந்து . . . . வீதிவழியாக்கி டாணாசாவடிவழியாயி மேற்கே போயி அடப்பக்காற குப்பமுத்து சேர்வைகாறன் வீதி வழியாய் வடக்கே திரும்பி காறா குண்டு புள்ளையார் கோவிலுக்கு மேல்பாதையாயி வடக்கே வந்து தெற்கு றாஜவீதியுடனே கிழக்கே திரும்பி கடை வீதியான தயாயி அய்யாக்கண்ணு செட்டி வீட்டுக்கு முன்பாக தெற்கே வடம் போக்கி வழியாயி வந்து வீட்டுக்கு வருகுறுது.

ஷெ யிடங்கை பள்ளர்கள் கலியாணத்துக்கு வலங்கையாற் கலியாணத்துக்கு கண்டிறுக்குறபடி செயிகுறத்தில் செறாடி கொண்ட செகப்பு பாவாடை செகப்பு குதிரை இந்த வாகனபிறுதுகள் மாத்திரம் வெ. . . .ர வைத்துக்கொண்டு மைத்த காரியங்களை யெல்லாம் வலங்கை பறயனுக்கு கண்டிறுக்கிற ஒப்பந்தம் ஷெயானு(நடப்பி)வித்து வறுகுறது.

இந்தப்படிக்கு ஷெ றாஜதானியிலும் ஷெ ராஜதானியைச் சேர்ந்த விடங்களிலுமிறுக்குற யிடங்கை வலங்கை இந்த கட்சிக்காரர்கள் இதில் ஷெசாதிகளுக்கு வெளிபடுத்தியிறுக்குறபடி அவரவர்கள் நடப்பிவித்துக் கொண்டு வருகுறது.

---

72 அஸ்தாட்சி - அத்தாட்சி

73 யென்னவெண்டால் - யென்னவென்றால்

74 இதுநடியில் - இதனடியில்

75 நாங்களுடைய - எங்களுடைய

தவிற வலங்கையை சேர்ந்தவர்கள் கோயில் கொளம் உச்சவம் திருவிழா இப்படிப்பட்ட காரியங்களுக்கு போக வேண்டியதாயிறுந்தால் அந்தந்த சாதிக்கி சொல்லப்பட்டிறுக்குற வாகன வாத்தியங்களுடன் போயி வருகுறது.

இடங்கை பாஞ்சாளக்காரறும் அவர்கட்சி (றப்பட்ட) சேர்ந்தவர்களும் ஆவணியாவிட்டம் கோவில் கொளம் திருவிழா உச்சவம் இது முதலான காரியங்களுக்கு போக வேண்டியதாயிறுந்தால் அவரவர்களுக்கு சொல்லப்பட்டிறுக்குற பிறுது வாகன வாத்தியங்களுடனே போயி வறுகுறது.

தவிற வலங்கை சேர்ந்த தொழிலாளி வகையறா யோகவு இடங்கையாரிடத்து சேவகம் பண்ணும்படியாய் னேரிடும்போது யாதொறு தவக்கமில்லாமல் அவர்களுக்குச் சேவுகம் பண்ணி வருகுறது. யிடங்கை சேர்ந்தவர்கள்(வல)ங்கையாருக்கு சேவுகம் செய்யும்படி னேரிடும்போது யாதொறு தடையில்லாமல் செயிது வருகிறது.

## (4)

புதுகொட்டை சமுஸ்தானம் ராஜதானி வலங்கையார் யெடங்கையார்களுக்கும் சுபசோனாதியின் வகையறாவுக்கு திருப்பு[76] யென்னவென்றால் ஷெ புதுக்கோட்டையில் வலங்கையைசேற்ந்த காலறை[77] செட்டி தேசத்தாற் கல்லியாணத்துக்கு வாசலிலேயும் தெறுவாசலிலேயும் சதிர ஒலி முகபந்தல் போட்டு ஷெ பந்தலுக்கு சேலை கட்டி வாழை கூந்தல் ளெட்டி மாலை காட்டு.......பின்னம் ஷெ பந்தலுக்கு சகலமான யெப்பேற்பட்ட சோடியும் செய்து கொள்ளுகிறது. சின்னமேளம் பெறியமேளம்(தப்)பு கொம்பு வாங்கா நகரா பறமேளம் தாறை சங்கு னாதங்கள் (சக)ல வித(மா)ன வாத்தியங்களுடநெ கலியாணம் நடப்பாராகிறது. யானை ஆறசாணி னின்ற வித்துக் கொள்ளுகிறது. மாபிள்ளைக்கிம் பெண்ணுக்கும் யெந்த தெந்த[78] திறுசுவஸ்திறங்களும் யெந்த தெந்த நகை வகையறாவும் போட்டு சோடிக்கிறது. சதிர்பண்ணிகேளிக்கைகளுடன் நடையாள்கிறது.

ஊர்கோலத்துக்கு, யானை, வெள்ளைக் குதிறை, காடி பல்லக்கு, யிதுகளின் பேரில் மாபிள்ளையும் பெண்ணும் வைபித்துக்கொண்டு நடைகேளிக்கையுடனேயும் வெள்ளை கொடை வெள்ளை பாவாடை பிடித்து வெள்ளை வீசுகிறது. (ப)ாணாவிறை மத்தாப்பு திவட்டிகளுடநே ஊர்கோலம் கடைவீதி முதல் ஜலிதி னாலு வீதியும்[79] வந்து மாபிள்ளையும் பெண்ணும் கல்லியாண வீட்டுக்கு வருகிறது. யிதுதவிற ஷெ வலங்கையை செட்டியாறுக்கு சமாதையான வலங்கையை செறந்தவர்களுமி.....த்தியப்படியே நடப்பித்துக் கொள்ளுகிறது. ஷெ .....றை செட்டியாருக்குச் சமதையில்லாத ஷெ வலங்கையை சொ...த...புக... சாதிக்கி தகுந்தபடி பந்தல் முதலானதும் போட்டு அவர்களுக்குத் தகுந்த வாகனமேறி அந்த அந்த சாதிக்கித் தக்க கனவாத்தியங்களுடனே அவறவர்கள் இருக்கப்பட்ட யெடம் தெருவை சுத்தி ஊர்கோலம் வருகிறது.

---

76 திருப்பு - தீர்ப்பு

77 காலறை - கவரை

78 யெந்ததெந்த - எந்த எந்த

79 ஜலிதி - விரைவில்

யெடமங்கையை[80] சேற்ந்த பஞ்சாளக்காற கம்மாளாற்[81] கலியாணத்துக்கு வாசலிலேயும் தெறுவாசலிலேயும் சதிர் ஒலிக்கு பந்தல்போட்டு சேலை வாழை கூந்தல் எனட்டி மாலை கட்டுகிறது. பின்னம் ஷெ சதிர் பந்தறுக்கு சகலமான யெப்பேற்பட்ட சோடினையும் செயிதுக்கொள்ளுகிறது. சின்னமேளம் பெறியமேளம் தப்பு கொம்பு லங்கா நகரநாகு பறமேளம் தாறை சங்கு னாதங்கள் பலவிதமான வா(த்தி)யங்களுடனே கலியாணம் நடப்பாலாகிறது, யானை ஆறசாணிபலபார்த்துக்கொள்ளுகிறது. மாப்பிள்ளைக்கிம் பெண்ணுக்கும் யெந்த தெந்த தினசுவஸ்திறங்களும் யெந்த தெந்த தினுசு நணாகவகையறாவும் போட்டு சோடிகிறது. சதிர் பண்ணி கேளிக்கை நடப்பிவிகிறது. ஊர்கோலத்துக்கு யானை செகப்பு குதிரை காடி பால்லாக்கு யிதுகளின் பேறில் மாபிள்ளையும் பெண்ணையும் வைத்துக்கொண்டு நடகேளிக்கையுடநேயும் செகப்பு கொடை செகப்பு பாவாடை பிடித்து செ..ப்பு வி..கிறது. பாணவித்தை மத்தாப்பு தீவட்டிகளுடனே ஊர்கோலம் கடைவீதி முதல் ஜைல தி னாலுவீதியும் ஊர்கோலம் வந்து மாப்பிள்ளையும் பெண்ணும் கலியாண வீட்டுக்கு வருகுறது.

ஷெ பஞ்சானத்தாருக்கு சமதையான[82] ஷெ யெடமங்கையைச்[83] சேர்ந்தவர்கள் அவரவர்கள் சாதிக்கி தகுந்தபடிக்கி வாகனமேறி அந்த அந்த சாதிக்கி தக்க கன வாத்தியங்களுடநெ அவறவர்களிருக்கப்பட்ட யெடம் தெருவைசுத்தி ஊர்கோலம் வருகிறது. ஷெ புதுகொட்டை ராஜதானியிலிருக்கப்பட்ட ஷெ வலங்கையை சேற்ந்த ப(றிவா)றக்[84] கலியாணத்துக்கு பறதெருவில் பந்தல் போட்டு ஷெ பந்தலுக்கு வெள்ளைசேலை கட்டி வாழை குந்தல் கட்டி யானை அரசாணி வைத்து பறமேளம் தப்பு விறாறையடிகிறது.[85] சங்கு சத்தம் ஊதுகிறது செலம்பு கெச்சை செலம்புத்தட்டு நெயும் பிறகு ஐ(டி)சசபி பட்டைநே காவியாணம் செய்து கொண்டு ஊர்கோலத்துக்கு வெள்ளை குதிரைமேல் மாப்பிள்ளையும் பெண்ணும்...சகவேள்ளை கோடை[36] வெள்ளை பாவாடையும் பிடித்து வெள்ளை வீசுகிறது. பறகுத்தாடிச்சியனுடநேயும்[87] மேல்கண்ட வாத்தியங்களுடநெயும் ஊர்கோலம் பறதெறு[88] விட்டு புறப்பட்டு ராஜவீதி வடம் போக்கி வழியாயி வடக்கே வந்து அப்படியிருந்தாபோல் தெறுக்கே[89] மூணுவீதியிலும் போயி மேற்கே திரும்பி முனைசந்து சமயல்காற ஜெகனாத சிரகு விட்டு ராஜவீதியாம் மேற்கே போய் றெட்டினாயக்கன் வீட்டுக்குக் கீழ்ப்புறம் ராஜவீதி

80 யெடமங்கை - இடங்கை

81 பஞ்சாளக்காற கம்மாளர் - பஞ்சாளர் - தட்டான், கன்னான், சிற்பன், தச்சன், கொல்லன் இவ்வனைவரையும் கம்மாளர் என்பர்.

82 சமதையான -சமமான

83 யெடமங்கையை - இடங்கையை

84 பறிவாற - பறையர்

85 விறாறையடிகிறது - வகையறா அடிக்கிறது

86 வெள்ளைகோடை - வெள்ளைக்குடை

87 குத்தாடிச்சியனுடனேயும் - கூத்தாடிச்சியுடனேயும்

88 பறதெரு - பறையர் தெரு

89 தெறுக்கே - தெற்கே

வடம் போக்கி வீதியாயி வடக்கே வந்து தெறுக்கு றெண்டாம் வீதி வழியாய் போய் கொயில் திருமாலை கட்டி சேருவை காறன்[90] கன்னியன் செருவைகாறன் வீட்டு தெறுவழியாய்...வலங்கையிதெசம் நாறாயண செட்டியாற் மகன் அ கு........வீட்டின் போய் குதிரை விட்டு யெற(ங்)கி சந்தனம் பாக்கு (வெற்றிலை) கொண்டு திரும்பவும் குதிரையேறி வந்து வீதியொடு (போகிற)ததுடன் மாபிள்ளையும் பெண்ணும் பறதெருவுக்கு வருகிறது.

யிந்த பிரகாறம் ஷி புதுகெட்டை சீமை சத்தி(மங்கல)கிறாமத்தி(னரா)ன யெங்களில் இருக்கப்பட்ட வலங்கையாரும்.....யெடமங்கையாரும் சுபசோபனாதி கோவில் முதலான சகலவிதமான யெப்பேற்பட்ட சுபங்களுக்கும் மேல்கண்டவாறு சுவாத்தியங்களுடநெ நடப்பிவித்துக்கொள்ளுகிறது.

ஷி புதுகொட்டையைச் சேர்ந்த காலனாட்டு ஷி யெடமங்கையைச் சேர்ந்த காலனாட்டு ஷி யெடமங்கையைச் சேர்ந்த பள்ளங் கலியாணத்துக்கு பள்ள தெருவில் பந்தல் போட்டு சேலை வாழை குந்தல்[91] கட்டி ஷியானை அறசாணி வச்சு பறமேளம் தப்பு விறாணம் அடிக்கிறது. சங்கு சத்தம் ஊதுகிறது. செலம்பு கெச்சை[92] செலம்பத்துடனேயும் பள்ள குத்தாடிச்சி யளுடநேயும்[93] கலியாணம் செய்துக்கொண்டு ஊர்கோலத்துக்கு செகப்பு குதிரை மேல் மாபிள்ளையும் பெண்ணையும் வச்சு செகப்பு கொடையும் செகப்பு பாவாடையும் பிடித்து செகப்பு வீசுகிறது. தீவட்டி வைத்துக்கொண்டு பள்ள குத்தாடிச்சிளுடநெயும் மேல்கண்ட பிறாசுவாத்தியங்களுடநேயும்[94] பள்ளத் தெருவில் ஊர்கோலம் வந்து அந்த ஊறில் (தி)ருதாய்க்கம்மாளர் வீட்டுக்கு போயி குதிரை விடைச்சியெறங்கி[95] ஷி கம்மாளர் வீட்டில் சந்தனம் பாக்கு வெத்தலை வாங்கி கொண்டு வாத்யத்தியொடே[96] மேளதாளத்துடநெ குதிரையேறி பள்ளதெருவுக்கு வந்து விடுகிறது. யிந்த பிறகாரம் ஷி புதுகொட்டையைச் சேர்ந்த காலனாட்டு கிறாமத்திலும் பௌமகிராமத்திவிருக்கப்பட்ட பள்ளரும் மேலத்திய பிறாது வாரி யலகனுடநேயும் நடந்து கொள்ளுகிறது. ஷி காலனுடக்கு பள்ளர் செகப்பு செறாடி கொடை பிடித்துக் கொண்டு மேல்கண் படிக்கு வாத்தியங்களுடநேயும் திருகொரறஷம்[97] கொவிலை திருவாசலுக்கு போகிற மாமூல் படிக்கி நடந்து கோவிலுக்கு போயி வருகிறது............யெடமங்கையைச் சேற்ந்த பரயற்[98] திருவன்மகோணம் கோவிலுக்கு...............ஷியெபல்லாக்கு (ஏத்தி) கொண்டு ஷி கோவிலுக்கு போ..........................ன் டக்கி திய..........க்கி போயி வருகிறது.

---

90 செருவை காறன் - சேர்வைக்காரன்

91 குந்தல் - கூந்தல் - விசேஷகாலங்களில் வாசலை அலங்கரிக்கும் குருத்தோலைத் தோரணம்

92 செலம்பு - சிலம்பு - மகளிர் காலணிவரை, கெச்சை -காலில் அணிவது (ஒலி செய்வது)

93 பள்ளக்குத்தாடிச்சியன் - பள்ளர்சாதியைச் சேர்ந்த கூத்தாடி

94 பிற சுவாத்தியங்களுடனே (சுவாத்தியங்கள் - நல்ல இசைக்கருவிகள்)

95 குதிரையிலிருந்து இறங்கி

96 வாத்தியங்களோடே

97 திருக்கோகரணம்

98 சேர்ந்த பறையர்

## (5)

ராஜஶ்ரீ மஹாராஜா[99] சாயபு அவர்களுடைய சரிகேல்[100] ராஜஶ்ரீ பாபாஜி ராமாஜி பண்டிதரவர்களால்[101] புதுக்கோட்டை ராஜதானி வகையறா வலங்கை யெடங்கையெனங்கப் பட்ட[102] உபைய[103] கட்சிக்காரர்களுக்கும் சுபசோபனாதி வகையறா நடப்பவித்துக் கொண்டு வருகுறத்துக்கு[104] செய்யப்பட்ட தீர்ப்பு.

வலங்கையாருக்கும் இடங்கைய்யாருக்கும் சுபசோபனாதிகள் செய்ய வேண்டியத்தில்[105] அவரவர்கள் மனத்தில் இஷ்டப்பட்டபடி சந்தே.......ஷுக்க அனுபவிக்கக்கூடாமல் பெயிறத்த[106] மாச்சரியத்துநால்[107] செய்யக்கூடாமல் தட்டுதல் செயிது வருகுறது அவர்களுடைய...........வேகம்தாழவேண்டி சொல்ல வேணுமே தவிற மைத்தொரு காரணமுமில்லை. மேலும் அப்படி தட்டுதலை செயிது கொண்டு வருகுறது தங்கள் செயவறவித்துக்கும்[108] நியாயத்துக்கும் விறோதமிணங்குறனத்த[109] அவர்களுக்கு மெய்யரவித்து[110] அந்தப்படி அவர்கள் ஒப்புக்கொண்டு இனி யப்படிக்கில்லாமல் தங்களுக்குத் தீர்மானம் செயிது கொடுத்தபடி தாங்கள் நடந்து கொள்ளுகுறதினை...........அவர்கள் சொல்லி அந்தப்படி இதினடியில் கண்டிருக்கும் தீர்மானப்படி..........அவர்கள் தப்பாமல் நடந்து கொண்டு வரவேண்டியத்துக்கு விவறு[111]

வலங்கையைச் சேர்ந்த கவறை செட்டி தேசத்தார் யெடங்கை கம்மாளர் கலியாணத்துக்கு வாசலிலேயும் தெரு வாசலிலேயும் சாதாஓலிமுக[112] பந்தல் போட்டு, வாழை கூந்தல் நெட்டிமாலையும்(கட்)டி வெள்ளை செகப்பு கலந்து சோடித்து கொள்ளுகுறதுமல்லாமல் சின்னமேளம் பெரியமேளம் தப்பு வாங்கா நகறா பறமேள முதலான தாரை சங்கு நாதங்கள் இவ்வித வாத்தியங்களுடனே கலியாணம் நடப்பிவிக்கிறது. யானை அறசாணி வைத்துக்கொள்ளுகுறது. மாபிள்ளைக்கிம் பொண்ணுக்கும் யெந்த தினசு விதமானவைகள்

---

99 மஹாராஜா என்றது சரபோஜியின் மகன் சிவாஜியை

100 சரிகேல் - சர்க்கேல்

101 பாபாஜி ராமாஜி பண்டித-இவர் ஏறத்தாழ 1822 முதல் 1844 வரை சர்க்கேலாக இருந்தவர் (பக்.86)

102 என்ங்கப்பட்ட - என்று சொல்லப்பட்ட

103 உபைய - இரண்டு

104 வருகுறத்துக்கு - வருகிறதற்கு

105 வேண்டியத்தில் - வேண்டியதில்

106 வெயிறத்த (?)

107 மாச்சரியத்துனால் - மாச்சரியத்தினால் - பகைமையினால்

108 செயவறவித்துக்கும் - செய்கைகளுக்கும்

109 விரோதமாக இருக்கிறதால்

110 மெய்யரவித்து - மெய்யறிவித்து

111 வேண்டியத்துக்கு விவறு - வேண்டியதற்கு விவரம்

112 ஒலிமுகம் - முன் புற வாயில்

ஆபரணங்களால் அலங்காரம் செயிகுறது. சதிர் பண்ணி ஒரு கெளிக்கை செயிகுறது. ஊர்கோலத்துக்கு வலங்கையினர்..........

(முடிவுறவில்லை)

## (6)

(6) றாஜஶ்ரீ மகாராஜாசாயபு அவர்கள் சர்க்காரில் புதுக்கோட்டையில் இருந்து வந்திருக்கும் வலங்கை பெரிய தினக்காரனாகிய நாறாய(ணசெட்)டி மகன் அழகிரி செட்டி-க. யெடங்கை பெரிய தினக்காரர்களாகிய னாறாயண ஆசாரி-க. செம்புலிங்க ஆசாரி-க. சிதம்பர ஆசாரி-க. முத்துசாமி ஆசாரி-க நாங்களுடைய கட்சிகாறர்களு(க்கும் ம) னோராஜியாயி[113] யெழுதிக் கொடுத்த அஸ்தாட்சி[114] யென்னவென்றால்

யெங்களுடைய கட்சிகாறர்களுடையவும் சுபாசுப முதலான காரியங்களில் அவரவர் மனசின் இஷ்டப்படிக்கி சந்தோஷத்துடனும் இதறஜாதிகள் ஒப்பந்தம் அனுபவிக்கிறுத்துக் கில்லாமலிருக்குற இந்த நாங்கள் இப்போ யோசிக்கிம்போது விவேக தாழ்வான மாச்சரிய மிங்குறம் அதுநால்[115] யெங்கள் கெவுறவத்துக்கும் நியாயத்துக்கும் விறோதமினங் குறத்தையும்[116] நாங்களிப்போது அரிஞ்சு[117] கொண்டபடியால் இனி அந்த மாச்சரியத்தை விட்டு நாங்களுடைய வாதிகளும் இதினடியில் கண்டிருக்கிற அரமனையார் செயித திர்மானப்படி சரிதப்பாமல் நடந்து கொண்டு வருவோம். இதில் தப்பி வித்தியாசமாய் நடப்போமாகில் அறமனையார் விதிக்கும் தெண்டனைகளுக்கு உள்பட்டிறுக்கிறோம். இவயவனவ....யி விபறு (இவ்வயணங்களுக்கு விவரம்)

இடங்கை வலங்கையைச் சார்ந்த தாழ்ந்த சாதிகளாகிய அம்பட்டன்,வண்ணான்.னோ(க்த)ன் பறயன், பள்ளன், சக்கிலியன், இவர்கள் அவர் சுபாசுபங்களுக்கு சாதிக்கி , அடுத்த[118] வாத்தியத்துடன் அவர்களுக்கு அடுத்த வீதி வழியாயி சுபா சுபகாரியங்கள் நடப்பிவித்துக் கொள்ளுகுறது. மைத்த சங்கதிகள் தங்களுக்கடுத்த பிருதுகள் கட்டவும் பிடிகொண்டும் அவரவர்களுக்கு சம்மதியான படிக்கு பற(?)வீதி சந்து வழியாய் ஊர் கோலம் வறலாம்.

## 6(அ)

இஸ் ஐனேசு[119] றாஜஶ்ரீ மஹாறாஜா சாயபு அவர்களுடைய சரிகோல் றாஜஶ்ரீ பாவாஜி றாமாஜி பண்டிதரவற்களால் புதுக்கோட்டை றாஜதானி வலங்கையிடங்கையவர்களுடைய

113 மனோராஜியாய் - சம்மதித்து

114 அஸ்தாட்சி - அத்தாட்சி

115 இங்குற அதுநால் - என்கிறதனால்

116 இனங்குறத்தையும் - என்கிறதையும்

117 அரிஞ்சு - அறிந்து

118 சாதிக்கி அடுத்த - சாதிக்கு உரிய

119 இஸ் ஐனேசு - His Highness ; பிரதாபசிங்கர் காலத்திலிருந்து கும்பினியார் தஞ்சை அரசரை ஹிஸ்மெஜஸ்டி என்று அடைமொழி கொடுத்துப் பெருமைப்படுத்தினர். பின்னர் சரபோஜி காலத்தில் இருந்து 'ஹிஸ் ஹைனஸ்' என்ற அடைமொழி சரபோஜியின் விருப்பப்படி அளிக்கப்பெற்றது. இந்த அடைமொழி அவர் மகன் சிவாஜி காலத்திலும் தொடர்ந்து வரலாயிற்று (பக்.348,349)

சுப சோபனாதி வகையறா நடப்பிவிக்க வேண்டியத்துக்காக இப்போது உபய பக்ஷத்தாரவர்களுடைய சம்மதிப்படிக்கி செயித தீர்ப்பு யென்னவெண்டால் - வலங்கையைச் சேர்ந்த கவறை செட்டி தேசத்தாரும் இடங்கை பாஞ்சாலத்தாரும் கல்லியாணத்துக்கு அவரவர்கள் மனதின் இஷ்டப்படிக்கு பந்தலைபோட்டு வெள்ளை செகப்பு துணிகள் கட்டிகொள்ளுகுறதும் தவிற ஷெபந்தலுக்கு வாழை கூந்தல், நெட்டி மாலை (முத)லானதுகளால் சோடிக்குறது. சின்னமேளம், பெரியமேளம், தப்பு, கொம்பு, வாங்கா, நகாறா, பறமேளம், தாரை, சங்குநாதங்கள் இவ்வித வாத்தியங்களுடனே கலியாணம் செயிகுறுதுமன்னியில் ஆனை அறசாணி வைத்துக் கொள்ளுகுறது. மாப்பிள்ளைக்கும் பொண்ணு(க்கும்) அவரவர்கள் சந்தோஷத்துக்குத் தக்கபடி தினசு வஸ்திறங்கள் ஆபறணங்கள் போட்டு சோடிக்குறது. சதிர்ப்பண்ணி கேளிக்கை நடப்பிவிக்கிறதுமல்லாமல் ஊர்கோலத்துக்கு யானை வெள்ளைக் குதிரை காடி[120] பல்லக்குகளின் பேறில் மாப்புள்ளையும் பொண்ணும் வைத்து கொண்டு நடை கேளிக்கையுடனே வருகுறத்தில் - வலங்கை கவறை வெள்ளை கொடை, வெள்ளை பாவாடை பிடித்து வெள்ளை வீசுகிறது.

இடங்கை பாஞ்சாலக்காரர் செகப்பு கொடை, செகப்பு பா(வாடைபி)டித்து செகப்புவீசுகுறது. இந்தபடி வாண மத்தாப்பு வகையறா திவட்டியுடன் கடைவீதிமுதல் றாஜவீதி னாலு வீதியு அவரவர்கள் மனதின் இஷ்டப்படி.........ம் ஊர்கோலம் வந்து மாப்பிள்ளையும் பொண்ணும் கலியாணவிட்டுக்கு வறகுறது.

ஷெ வலங்கை சேர்ந்த பறையர்களும் யிடங்கை சேர்ந்த பள்ளர்களும் கல்யாணத்துக்கு அவரவர் வீட்டு வாசலில் பந்தல்போட்டு வெள்ளை செகப்பு சேலையுகட்டிகொண்டும் வாழை கூந்தல் கட்டியும் ஆனை அறசாணி(வைத்துக்கொள்வதும்) தவிற மேளம் தப்பு வீறாணம்[121] சங்கு நாதம் இத்தியாதி[122] வாத்தியங்களுடன் செலம்பு, கெச்சை செலம்பத்துடனேயும் பறயர் பறக்கூத்தாடிச்சியுடனேயும் பள்ளர்கள் பள்ளக்கூத்தாடிச்சியுடனேயும் கலியாணம் செய்து ஊர்கோலத்துக்கு – பறயர்களுக்கு மாப்புள்ளைக்கு பெண்ணுக்கும் வெள்ளைக் குதிரைமேல் வைத்து வெள்ளை பாவாடை வெள்ளைக்குடை பிடித்துக்கொண்டு வெள்ளை வீசுகுறதும் தவிற, மேல்கண்ட வாத்தியங்களுடனே திவட்டி போட்டுகொண்டு ஊர்விட்டு பிறப்பட்டு றாஜிநாமாவில் கண்ட வீதிமார்க்கமாயி வலங்கை செட்டி வீட்டுக்குப் போயி சந்தனம் பாக்கு வெத்திலை வாங்கிகொண்டு திரும்பி வந்த வழியுடனே மாப்பிள்ளையும் பொண்ணும் பறத்தெருவுக்குப் போகிறதுமல்லாமல், இடங்கை பள்ளர்கள் ஊர்கோலத்துக்கு–செகப்பு பாவாடை பிடித்து செகப்பு வீசுகுறதும் தவிற மாப்பிள்ளையும் பொண்ணையும் செகப்பு குதிரைமேல் வைத்து செகப்பு கொடை பிடித்து (பள்ள)கூத்தாடிச்சியுடனேயும் மேல்கண்ட வாத்தியங்களுடனேயும் திவட்டி போட்டுக்கொண்டு பள்ளதெரு ஊர்கோலம் வந்துபிறகு சொன்ன பெரிய தினகாறர்கள் வீட்டுக்கு வந்து சந்தனம் பாக்கு வெத்திலை வாங்கிக்கொண்டு மறுபடி வழியுடனே மாப்பிள்ளையும் பொண்ணும் பள்ளத்தெருவுக்கு போகுறது.

---

120 காடி - வண்டி

121 வீராணம் - பெரிய பறை

122. இத்தியாதி - இவை முதலான

வலங்கை பறையர் திருவளம் (போகும்) கோவிலுக்கு மாமூல்படிக்கி பல்லக்கு யேறி கொண்டு கோவிலுக்கு போயி தேங்காயி ஒடைக்குற திட்டப்படிக்கி நடப்பிவிக்குறது.

சாணார், வலையர், வண்ணான், அம்பட்டன் தமிழன், இந்த நாலு பேர்களுக்கும் கலியாணத்துக்கு (பந்தல்) போட்டு வெள்ளை செகப்பு வஸ்திரம் கட்டிக் கொள்ளுகுறது. தவிற பற மேளம் ஆனை அறசாணி கட்டுகுறது. திவட்டி வெள்ளைகுதிரைமேல் மாபுள்ளையும் பொண்ணும் உள்கார்ந்து அவர்கள் குடியிருக்கும் தெருவில் போய்வருகுறதும் தவிர அபேக்ஷித்த வ(ஸ்)திரம் தரித்து கொள்ளுகுறது.

தெலுங்கு அம்பட்டனுக்கு, மேல்கண்டபடி நடப்பிவிக்குறத்தில் சங்கீதமேளம் வயித்துக்கொள்ளுகுறது. வலங்கை சேர்ந்த 17 யிடங்கை சேர்ந்த சாறி 6 இந்த 23 சாதிக்காறர்களும் அவரவர்கள் இஷ்டப்படிக்கி அவரவர்கள் கல்லியாணம் செயிது கொள்ள(லா)ம். அதில் தாங்கள் பிறபேச்சு பேசுகுறதில்லை.

(7)

இஸ் ஜனேசுறாஜஸ்ரீ மஹாராஜாசாயபு அவர்களுடைய சரிகோல் றாஜஸ்ரீ பாவாஜீ றாமாஜி பண்டிதரவர்களால் புதுகோட்டை றாஜதானியின் வலங்கை இடங்கை இந்த ரெண்டு கட்சிக் காறர்களுடையவும் சுபா அசுப முதலான காரியங்கள் நடப்பிவிக்கிறதர்க்கு ஒருவர்கொருவர் மாச்சிரியப்பட்டு ஷெ காரியத்தை நடப்பிவிக்குறதர்க்கு யில்லாமல் தட்டுதல் செயிது கொண்டு யிறுக்குறத்தைக் குறித்து ஷெ சங்கதியைப் பத்தி தஞ்சாவூர் அரமனையார் விசாரித்து உத்திரவு போடுகுற தீர்மானத்துக்கு சம்மதித்து யிறுக்குறதாக ஷெ இறு கட்சிக்காறங்களுடன் ஷெ புதுகொட்டை அதிகாறஸ்தான றிசிடெண்டு சாயுபு அவர்கள் பேறால் லட்டர்[123] அனுப்பிவித்து ஷெ லட்டருடன் ஷெ வலங்கை பெரிய தினக்காறன் நாறாயண செட்டி மகன் அளகிறி செட்டியும் யெடங்கை பெரிய தினக்காற னாகிய னாறாயன ஆச்சாரி இவர்கள் ஆஜறானவர்களை விசாரணை செய்து அவர்களுடைய றாஜியின் பேரில் செயித தீர்ப்பு.

ஷெ இருகட்சிக்காறர்களுடையவும் விவகாறத்தை விசாரணை செய்வித்ததில் வலங்கை சேர்ந்த சாதியிவன வேண்டும், யிடங்கை சேர்ந்த சாதியிவன வேண்டும் இதுவரையில் கட்சிக்காரர்கள் தாங்கள் ஒருவருக்கொருவர் மாச்சறியத்துநால் சுபாசுப முதலான காரியங்கள் நடப்பிவிக்கக் கூடாமல் போச்சுதென்றும் இதுக்கு முன்னும் இது வரையில் நடந்த வழக்கத்தைத் தள்ளி இப்போ தாங்கள் உபைய கட்சிக்காரங்களும் றாஜியாய் இனி நடக்கும் காரியத்துக்கு வியவஸ்தை செய்து கொண்டிறுக்குறதாயிம் தாங்கள் செய்து கொண்டிறுக்குற வியவஸ்தைக்கு சறுக்காரில் வாக்குமூலம் யெழுதிவைத்துயிறுக்குறபடியால் அந்த வாக்குமூலத்தில் கண்டபடி நடக்குறபடிக்கி சுபங்களுக்கும் அசுபங்களுக்கும் ஷெ வாக்குமூலத்தில் கண்டிறுக்குறபடி சரியாயி நடந்து கொண்டு வறுகுறதிண்டு[124] தீர்மானம் செய்யலாச்சுது.[125]

---

123 லட்டர் - கடிதம்(letter)

124 வறுகுறதிண்டு - வருகிறதென்று

125 ஆச்சுது - ஆயிற்று

தவிற நாங்கள் யெழுதி வைத்திறுக்குறபடி வலங்கைச்சேர்ந்த சாதிகள் 22. யிடங்கை சேர்ந்த சாதி 6. ஆக 28 சாதிகளில் தாழ்ந்த சாதிகளாகிய மேல்கண்ட 5 சாதிகள் தவிற மைத்த 23 சாதியாற்கள் அவரவர்களுக்குத் தகுமான பிறுதுகளுடன் அவரவர்கள் கலியாணம் செயிது கொள்ளலாம். அதுகளில் யெங்களுக்கு சம்பந்தமில்லை.மேலும் மைத்த சாதியாருக்கும் யெங்களுக்கும் சம்மந்தமில்லை.

(8)

புதுகொட்டை றாஜதானியின் வலங்கை யெடங்கை யென்குற ரெண்டு கக்ஷிகாறர்களும்[126] தங்களுடையவும் தங்கள் கக்ஷியைச் சேர்ந்தவர்களுடையவும் சுபா சோப னாதி முதலான காரியங்கள் நடப்பிவிக்க வேண்டியதில் ஷெ இரு கட்சிக்காறங்களுக்கு முண்டாயிறுக்குற தகறாரை தஞ்சாவூர் அரமனையில் தீற்மானம் செய்துகொண்டு வறுகுறதாயி அவர்கள் ஷெதர்பாரில் சொல்லிக்கொண்டு அந்தப்படி தீர்மானம் சொய்து கொண்டு வறும்படியாயி றிசிடெண்டு சாயபு அவர்கள் முகாந்திறமாயி யெழுதிய லட்டருடன் ஷெயிறு கட்சிக்காறர்களை அனுப்பிவித்து அவர்கள் ராஜி ராசி.

## Bundle No. 5C, Sub Bundle No. 7A

(1)

1871 ஸு மாறிச்சி மீ[127] 24

பர்னர்[128] துரையவர்கள் புஸ்தகங்களைப் பார்த்து னம்பர்கள்[129] போட ஆறம்பிச்சது[130] குப்பா பட்லு (தெலுங்கில்) ஷெ ஸு மேன மீ 13 உ[131] சேகறன் வேலைபார்க்கத்துடங்கினது[132].

(2)

1871 ஸு சூலை மீ 17 உ மகாராஜ ராஜஸ்ரீ ஸறிகில் வீறாஸாமிபிள்ளை அவர்கள் நேறில் சொல்லிய உத்திறிவின்படியே மகாறாச றாசஸ்ரீ பர்னர் துரையவர்களுக்கு யினாம் கொடுத்த ஸம்ஸ்கிருதபுஸ்தகம் அச்சுப் பிரதிகளின் விபரம்.

---

126 இடங்கை என்கிற இரண்டு கட்சிக்காரர்களும்

127 மாறிச்சி - மார்ச்சு

128 பர்னர் - A.C.Burnell; 24-31871 இல் பர்னல் அவர்கள் லார்டு நேபியர் என்ற சென்னைக் கவர்னரால் அனுப்பப்பெற்று சரஸ்வதி மகால் நூல் நிலையத்திலிருந்த வடமொழி நூல்களை அட்டவணைப் படுத்தத் தொடங்கினார். (பக்.250)

129 னம்பர்கள் - எண்கள் (numbers)

130 ஆறம்பிச்சது - ஆரம்பித்தது - தொடங்கியது

131 மேன மீ - மீனமாசம் - பங்குனிமாசம்

132 துடங்கினது - தொடங்கினது

காவியம் நூல் 35,குமறஸம்ப சம்பு 1,[133] தற்க்க சாஸ்த்திரம்[134] நூல் 1க்கு தற்க்க ஸங்கிரகம் 1[135] ஷெ நம்பர் 3 க்கு தற்க்க ஸங்கி றகதீபிகை -1 ஷெநம்பர் 4க்கு காறிகாவளி 1 ஷெ நூல் 5க்கு முக்திரத்னாவளி 1 ஷெ புஸ்தகம் 5ம் குடுக்க பட்டிருக்குறது.

1872 ஞு பிப்பிறவறி மீ 2 ஷெ துரையவர்களுக்கு றகுவம்சம்[136] போக்கு[137] 1 பாகம் போக்கு 1 ஷெ புஸ்தகங்கள் ரெண்டும் குடுத்திறுக்குறது.

## (3)

ஸரஸ்வதி மகால் 1875 பிப்பறவறி மீ 27 புஸ்தகங்களைக் காயப்போட வேண்டியதற்காக விசிப்பலகை -4 புஸ்தகங்களின் பேரில் போத்த செல்லா 2 ஆள் 1, ஷெ குடுக்கும்படியாகவும் காயபோடவும் உத்திரவாகவேணும். குப்பா பட்லு (தெலுங்கில்)

## (4)

1875 ஞு மாற்ச்சி மீ 2 புஸ்தகங்கள் காயபோடவும் ஷெ வேலைக்கி வீறண்ணனை மீ 1க்கு ரூ 3 1/2 தீத்துக்குடுத்து உத்திரவானது. குப்பா பட்லு (தெலுங்கில்)

## (5)

உ

சரஸ்வதி மகால் குப்பாபட்டர் யெளிதி கொண்டது.

சூலை மீ 12 திங்கள்க்கிளமை யென்னுடைய தபுஹித்திரி[138] நாகம்மாளுக்கு விவாகமுகூற்த்தம் னடக்கபோகுறப்படியால்[139] ஷெ மாதம் 10 முதல் ஒரு வாறத்துக்கு யேகனாதய்யனை பதிலியாக வையித்துக்கொண்டு யெனக்கு கரூருக்கு போயிவற உத்திரவாக மெண்டு கேட்டுக் கொளுகிறேன்.

குப்பா பட்டர் 1875 ஜுலை மீ 5

---

133 குமறஸம்பசம்பு - குமாரசம்பவம்; இது காளிதாசர் வடமொழியில் எழுதியது. சம்பு - உரைநடையும் செய்யுளும் விரவிவருவது.

134 தருக்கசாஸ்திரம் - தருக்கத்தைப் பற்றிய நூல்

135 தருக்கசங்கிரகம் - இதுவும் வடமொழி நூல். இதனைச் சிவஞானமுனிவர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

136 றகுவமிசம் - இரகுவமிசம்; இது காளிதாசரால் வடமொழியில் இயற்றப்பட்டது. (தமிழில் அரசகேசரி என்பார் செய்யுள் நூலாக எழுதியுள்ளார்)

137 போக்கு - Book

138 தபுஹித்திரி - மகளுக்குமகள் - பெயர்த்தி (பேத்தி)

139 நடக்கப்போகிறபடியால்

(6)

ஸரஸ்வதி மகால் யிங்கிலிஷ் புஸ்தக்களை பயிண்டு[140] செயிதது 8க்கு புஸ்தக் 1க்கு அணா 10 ஆக ரூபாயி 5 ஷெ அஞ்சு ரூபாயும் பயிட்டர்[141] அய்யா ஸ்வாமிக்கு கொடுக்கும்படியுத்தரவாக வேணும்.

குப்பா பட்டர் 1875 ஜூலை 28

(7)

ஸரஸ்வதி மால்

ஷெ மகாலில் இருக்கப்பட்ட ஸம்ஸ்கிருத இராமாயணம் காகித புஸ்தகங்களில் பழுதாய் போன பத்திரங்களை[142] புதிதாய் எழுதி சேர்த்தரக்காக கிரந்த சங்கை[143]

நம்பர் 965ல் பத்திரம் 8க்கு கிரந்த சங்கை 215
நம்பர் 943ல் பத்திரம் 8க்கு கிறந்த சங்கை 210
நம்பர் 958ல் பத்திரம் 9க்கு கிறந்த சங்கை 225
நம்பர் 1002 பத்திரம் 10க்கு கிறந்த சங்கை 350
ஆக கிறந்த சங்கை 1000 ரூ 2-8-0ம் ஷெ புஸ்தகங்கள் யெழுதிய யேகனாத பட்டனுக்கு கொடுக்கும்படி உத்திரவாக வேணும். 30-12-76 (1876)

குப்பா பட்லு (தெலுங்கில்)

(8)

ஸரஸ்வதி மகால்

ஷெ மகாலில் இருக்கிற ஸம்ஸ்கிருத இராமாயண புஸ்தகங்களில் பழுதாய் போன பத்திரங்களை புதிதாய் யெழுதின கிரந்த சங்கை நம்பர் 1002ல் பத்திரம் 2க்கு கிரந்த சங்கை 50 நம்பர் 1007ல் பத்திரம்
10க்கு கிரந்த சங்கை 375 நம்பர் 949ல் பத்திரம் 10க்கு கிரந்த சங்கை 375 ஆக 800

ஷெ கிரந்த சங்கை 800க்கு 1000க்கு ரூ. 2-8-0 வீதம் கூடுதல் ரூ.2ம் ஷெ புஸ்தகங்கள் யெழுதின யேகநாத அய்யருக்கு கொடுக்கும்படி உத்திரவாகவேணும். 26-2-77

குப்பா பட்லு (தெலுங்கில்)

---

140 பயிண்டு - Bind

141 பயிட்டர் - Binder

142 பத்திரங்கள் - ஏடுகள்

143 கிரந்த சங்கை: கிரந்தமாவது ஒற்றெழுத்தும் உயிரும் உயிர் மெய்யுமாகக் கொள்ளப்படும் முப்பத்திரண்டு எழுத்துக்களின் கூட்டம். சங்கை - சங்கியை -எண்

## (9)

ஷெ மாவிலிருக்கிற இராமாயண காகித புஸ்தகங்களில் பழுதாய் போன பத்திரங்களை புதிதாய் யெழுதின கிறந்த சங்கை:

| | |
|---|---|
| நம்பர் 969 யுத்தகாண்டம் பத்திரம் 565 முதல் 599 வரை கிறந்த சங்கை | 1100 |
| நம்பர் 9(48) ~~யுத்தகாண்டம்~~ பத்திரம் 2க்கு | 90 |
| நம்பர் (9) 50 யுத்தகாண்டம் பத்திரம் 2க்கு | 100 |
| நம்பர் 969 அயோத்தியா காண்டம் பத்திரம் 1க்கு | 20 |
| நம்பர் 961 பாலகாண்டம் பத்திரம் 1க்கு | 20 |
| நம்பர் 979 யுத்தகாண்டம் பத்திரம் 6க்கு | 170 |
| ஆக கிறந்த சங்கை | 1500 |

ஷெ கிறந்த சங்கை ஆயிறத்தி அய்னூருக்கும்[144] 1000க்கு ரூ 2 ஆக 8 வீதம் கூடுதல் ரூ.3-12-0. ஆக ரூ. மூணு பன்னரண்டணாவுக்கு ஷெமால் கண்டிஜெண்டு அயிவேஜில்[145] ஷெ புஸ்தகங்கள் யெழுதிய யேகனாத அய்யனுக்கு கொடுக்கும்படி உத்திரவாக வேணும். 8-7-77

## (10)

ஷெ மகாலில் பழுதாய் போன சமஸ்கிருத புராணத்தில் அளகாபுரி மகாத்மியம்[146], யென்குற புஸ்தகம் பாளோபந்து[147] லிபியில் புதிதாய் யெழுதின கிரந்த சங்கை 450க்கு 1000க்கு அடங்கல் ரூ.2-8-0 வீதம் ரூ.1-2-0. இந்த ஒரு ரூபாய் ரெண்டணாவும் சோமநாத பட்டர் இடத்தில் குடுக்கும்படியாய் உத்தரவாகவே(ணும்) 28-9-77

## (11)

ஷெ மகாலில் யிருக்கப்பட்ட ஸமஸ்கிருத ராமாயணம் காகித புஸ்தகங்களில் பளுதாய்[148] போன பத்திரங்களை புதிதாய் யெளிதின தர்க்காக[149] கிருந்த சங்கை நம்பர் 965 பத்திரம் 8 கிருந்த சங்கை 210, நம்பர் 973 பத்திரம் 8 கிருந்த சங்கை 225, நம்பர் 1002 பத்திரம் 10க்கு

---

144 ஆயிரத்து ஐந்நூறுக்கும்

145 கன்டின்ஜென்டு (contingent) அயிவேஜி - சிற்றினச்செலவுக்குரிய தொகை

146 அளகாபுரி மகாத்மியம் - தஞ்சையைப் பற்றிய வடமொழி நூல்; அளகாபுரி - குபேரனுடைய நகரம்; குபேரன்பூசித்துச் சிலகாலம் இருந்தமையின் தஞ்சைக்கு அளகாபுரி எனப்பெயர் வரலாயிற்று.

147 பாளோபந்து - 'பாலபோத்' என்கிற தேவநாகரி எழுத்து

148 பளுதாய் - பழுதாய்

149 யெளிதினதர்க்காக - எழுதினதற்காக

கிருந்த சங்கை 350 ஆக கிருந்த சங்கை 1000. ரூ 2-8-0. ஷ புஸ்தகங்களை யெளிதிய யேகநாத பட்டருக்கு கொடுக்கும்படி உத்தரவாக வேணும்.

(12)

ஷ மகாலிலிருக்கிற ஸமஸ்கிருத இராமாயண காகித புஸ்தகங்களில் பழுதாய்ப்போன பத்திரங்களை புதிதாய் எழுதின கிரந்த சங்கை நம்பர் 1002ல் பத்திரம் 2க்கு கிரந்த சங்கை -50, நம்பர் 1007ல் பத்திரம் 10க்கு 375, 94 9ல் பத்திரம் 8க்கு 375, ஆக 800 ஷ கிரந்த சங்கை 800க்கு, 1000க்கு ரூ 2-8-0 வீதம் கூடுதல் ரூ 2ம் ஷ புஸ்தகங்கள் யெழுதின யேகனாத பட்டர்க்குக் கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.

(13)

1874(செப்ட)ம்பர் மீ 10 யேஸி பர்னர்[150] துரையவர்களுக்கு வேதம் ஜடாபடலம் புஸ்தகம் -1 சே ஸ்ரீசாரியர் அனுப்பும் ஸ்ரீமுகப்பத்திரிகை 2 ஷ 3 ஸமுகத்தில் குடுபட்டிறிக்குறது[151] ஷ மூணுமவருக்கு.

(14)

1875 பிப்பிறவரி மீ 23
உள்ளிவகாரற அண்ணாஸாமி கோபியாயிருப்பதால் நாளது தேதி முதல் தாமோதறனை ஷ வேலைக்கி நேமிக்கும்படியாக உத்திறவாகவேணும். குப்பா பட்லு (தெலுங்கில்)

(15)

ஷமாலில் ஓலை பழைமை வசுசெரித்திற சம்பு[152] காவியம் கடுதாசியில் பாளோ பந்து விபிஇல் முன்யெழுதினது. 2-3- ஆசுவாஸம்[153] போக பாக்கி ஷ மீ தில் பூர்த்தியாயெழுதி[154] ஆயிற்று. 1-4-5-6 இ ஆசுவாசம் 4 இ கிறந்த சங்கை 1000 இதற்கு சார்ஜி[155] ரூ 2 அ-8. இந்த இறண்டு ரூபா யெட்டணா ஷ மால் கண்டிஜண்டு அபிவேஜியில் யேகனாதய் யனிடத்தில் கொடுக்கும்படி கொட்டியதாருக்கு உத்திறவாக வேணும். 28-9-76

150 யேஸிபரனர - A.C.Burnell

151 குடுபட்டிறிக்கிறது - கொடுக்கப்பட்டிருக்கிறது

152 வசுசரித்திரசம்பு - மராட்டிய நூல்

153 ஆசுவாஸம் - படலம் (chapter; section)

154 பூர்த்தியாய் - முழுமையும்

155 சார்ஜி - charge; எழுதுகூலி

## (16)

ஷெமகாலில் ஓலை புஸ்தகத்தில் ஸமஸ்கிருத வஸு சரித்திர சம்பு யென்கிற 3000 கிறந்தம் கொண்ட புஸ்தகம் 1. இதை இப்பொ(ழு)து றெம்பவும் சிதிலமாயிருப்பதால் நீல்[156] காகிதத்தில் பாளேபந்து லிபியில் புதுசாய் யெழுதின து. இந்த நாமசங்கியை 1000 க்கு ரூ 2-0-0 இந்த றெண்டு ரூபாய் யெட்டணாவுட ஷெமால் கண்டிஜெண்டு அபிவேஜியில் குப்பா பட்டன் றெண்டரிக்கு குடுக்கும்படி கோட்டியத்தாருக்கு உத்திரவாக வேணும் 28-6-76.

## (17)

ஸரஸ்வதி மகால் குப்பாபட்டர் யெளிதி கொண்டது.

ஷெமகால் உள்ளிய கரபிரஅண்ணாசாமி பதிலி பாபு தன்னுடைய தங்கச்சி கலியாண முகூர்தத்துக்காக கும்பகோணத்துக்கு போயிவார 10 னாள் உத்திரவு கொடுக்க வேணுமெண்டு[157] கேட்டுக் கொள்ளுகுறான்.

குப்பாபட்டர் 1875 சூலை மீ 8

## (18)

1876 மே மீ 19 உ ஸ்ரீ சர்கில் அவர்களிடத்தில் கொடுத்த புஸ்தகங்கள் 25(?) ரெங்கனாதாசாரியர் அனுமான் கண்டம், புத்திலிங்கமத்திறம் 91முதல் 136 வரையில் பத்திறம் 46. பத்திரம் 1க்கு கிறந்த சங்கை 36 ஆக கிறந்த சங்கை 1656, சொத பத்திரம் 1க்கு கிறந்த சங்கை 36 கம்பிஜாஸ்தியால் சேர்த்து கொடுத்தது 8 ஆக 1700,பிறத்தியக்ஷகாண்டம் பத்திரம் 36 முதல் 47 வரையில் கிஷ்ணாசாரி யெழுதினது கிறந்த சங்கை 425;48முதல் 79வரையில் அறங்கநாதாசாரியயெழுதியது 1150 ஆக 1575

## (19)

1875 ஹு சூலை மீ 27 தஞ்சாவூர் அறமனை சறிகில் மஹாஸ்ரீகோவிந்தறாயர் அவர்கள் ஸமுகத்துக்கு ஷெ அறமனை ஸரஸ்வதிமகால் குப்பா பட்டர் யெளிதிக்கொண்ட றிபோர்ட்டு.[158]

ஷெ மகால் உள்ளிய காபிற அண்ணாஸாமி போலிஷ் ஜவான் வேலை பாக்குறதாக தெறிவதால் ஷெ யானுக்கு பதிலியாக பாபுவை நேமித்து குடுக்கும்படி உத்திரவாக வேணுமென்டு கேட்டுக் கொள்கிறேன். குப்பா பட்டர்.

---

156 நீல் - சுற்றப்பட்டுள்ள

157 வேணுமென்டு - வேண்டும் என்று

158 எழுதிக்கொண்ட ரிப்போர்ட்டு

## (20)

மகா ராஜஸ்ரீ தஞ்சாவூர் அரன்மனை கார்பார் . . . .மேஸ்தர் யேநால் அவர்கள் ஸமுகத்துக்கு ஸரஸ்வதிமகால் குப்பா பட்டர் யெளிதி கொண்ட ரிப்போர்ட்டு: ஷெ மகாலிலிருந்து மகாறாஜா ஸபைக்கியோர் வளிரடை நால அங்கண சவுக்கு மண்டபம் வொதுக்கு பரமாயிருக்குறத்தில்[159] அவ்விடத்திய ஜலமங்கள் ராகாலத்தில் [160] அசிங்கப் படுத்துரபடியால் மிளகுப்பில்கதவ் திசகாஸரை பாத்துக்குகாவிடுக்கும்படியா பாரித்தியாருக்கு உத்திபிறப்பிக்க வேணுமெண்டு கேட்டு கொள்ளுகுரேன்.

## (21)

தஞ்சபுரி மாஹாத்மியம் கிறந்த சங்கை 325, அளகாபுரி மஹாத்மியம் 425, சோளசரிதிறம்[161] கிரந்த சங்கை 1025, ஆக 1775,கூடுதல் ரூ. ௲ வ ந. ந. கடுதாசி ரூ 0-7-0, மசி 0-1-0, ஆக 0-8-0 ஆக ரூ 4-15-0.

## (22)

புஸ்தகங்கள் காயபோட வேண்டியதுக்கு ஜமகாரனா 2, மேலேபோத்த[162] செல்லா 2, ஆள் 1, நாலுகாயரு திரிச்சது[163] சேர் 5 ஷெ ஸுலமும் கொடுக்கும்படி யுத்திரவாக வேணும். 24-2-77

## (23)

76 ஷு னவம்பர் மீ 30 வரைக்கும் பாக்கி மா. காமாக்ஷியம்பாபாயி[164] ஸாயேபு அவர்கள் அரண்மனைக்கி யேப் மீ 5, 1 மாசக்கெடுவுக்கு கணேசபுராணம் 1, ஆகஷ்டு மீ 1 தீபாம்பா,[165] றாமகுமறாம்பா பாயி[166] ஸாயேபு அவர்கள் அரண்மனைக்கு 1 மாச கெடுவுக்கு ஸாலாகிருத புராணம் கிருஷ்ண ஜன்மகம் புஸ்தகம் -1 அக்டோபர் மீ 6 மா. ஸய்யாம்பா பாயி[167] [redacted] அவர்கள் அரண்மனைக்கி 1மீ கெடுவுக்கு துலாகோவேரி மகத்துவ புஸ்தகம் -1 ஷெ மீ 3 உ அபுருபம்பாபாயி ஸாயேபு[168] அவர்கள் அரன்மனைக்கி 1மீ கெடுவுக்கு ஸமஸ்கிருதபுராணம் சிவரகசியம்[169] அஷ்டமர்சபனஸமர்சம் புஸ்தகங்கள் 2.

---

159 ஒதுக்குப்புறமாயிருக்கிறதால்

160 ராகாலத்தில் - இரவுக்காலத்தில்

161 சரிதிறம் - சரித்திரம்

162 போத்த - போர்த்த

163 நூல்கயிறுதிரித்தது

164 காமாட்சியம்பாபாயி சாகேபு - இவர் சிவாஜியின் தமக்கைகளுள் ஒருவராகிய பாயம்மாபாயியின் மகள் ஆவர்; சிவாஜியை மணந்து கொண்டு பல ஆண்டுகள் அவர்க்குப் பிறகும் வாழ்ந்தவர் ஆவர்(பக்.31)

165 தீபாம்பா - சிவாஜி II ஒரேநாளில் மணந்து கொண்ட பதினெழுவருள் ஒருவர்(பக்.34)

166 ராமகுமாராம்பாயி ஷெ (பக்.34)

167 சையம்பா ஷெ (பக்.34)

168 அபரூபாம்பா ஷெ

னவம்பர் மீ 11 மா. ஜிஜாம்பாடாயி[170] ஸாயேபு அவர்கள் அரன்மனைக்கி 1மீ கெடுவுக்கு பிராகிருத[171] பாரதம் அநுசாஸன பருவம்[172] புஸ்தகம் -1 னவம்பர் மீ 18 மா. காமாக்ஷியம்பாபாயி ஸாயேபு அவர்கள் அரண்மனைக்கி 1மீ கெடுவுக்கு பிராகிருத ஆரியா பாரதம் வனபருவம்[173] -விராட பருவம் புஸ்தகம் 2. னவம்பர் மீ 24 கௌரம்பாபாயி ஸாயிபு அவர்கள் அரன்மனைக்கி 10 கெடுவுக்கு பிராகிருத விஷ்ணுபுராணம்[174] -4+5-6 ஆக ஆசம் 3க்கு புஸ்தகம் 3.

## (24)

விசாகபட்டணம் அய்யங்கார் அவர்கள் ஸ்ரீ பறவஸ்து ஸ்ரீனிவாஸபட்டாசாறியர் அவர்களுக்கு யெளிதி[175] கொள்ள வேண்டிய புஸ்தகங்கள் குடுக்கச் சொல்லி மார.ரா.ஸ்ரீ ஸறிகில்[176] சாமறாயர் அவர்கள் நேறில் குடுத்த உத்திறவின்படி குடுத்து வாங்கியிருக்குறது.

## (25)

"ஆரணம்"[177] என்குறது "அதமஹவந்தம்" யென்று துவகத்தில் சொல்லுகுறதுதான். அது அயித்திரிய (ஐதரேயம்)[178] ஆரணம் தான்.

"மந்த்ர ஸஹிதா" என்குறதிக்கு வேதஸ(ம்)ஹிதை[179] யிலுள்பட்டமந்திரங்கள் தான்; வேறை அல்ல.

"மந்த்ற பிறாமண" என்குறது அயிதரேயப் பிராமணத்தில்[180] உள்பட்டது தான். வேறை

---

169 சிவரகசியம் — சிவபூசை முதலியவற்றின் பெருமைகளைக் கூறும் நூல்; (இப்பெயரால் தமிழிலும் ஒப்பிலாமணிப்புலவரால் இயற்றப்பட்ட நூலுண்டு)

170 ஜிஜாம்பா—சிவாஜி II ஒரே நாளில் மணந்த பதினெழுவருள் ஒருவர்

171 பிராகிருதம் - வடமொழித் திரிபாயுள்ள மொழி

172 பாரதத்தின் 18 பருவங்களில் இறுதிப் பருவம்

173 வனபருவம் - ஆரண்யபருவம்; விராடபருவம்- இவை பாரதத்தின் 18 பருவங்களில் 3,4 பருவங்களாகும்.

174 விஷ்ணுபுராணம் - 18 புராணங்களில் ஒன்று

175 யெளிதி - எழுதி

176 ஸறிகில் - சர்க்கேல்

177 ஆரணம் - வேதத்தின் ஒருபகுதி

178 ஐதரேயம் - 108 உபநிடதங்களில் ஒன்று

179 வேதசங்கிதை - சிறுசிறு வாக்கியமாக அன்றித் தொடர்ச்சியாக ஓதப்படும் வேதப்பகுதி

180 பிராமணம் - மந்திரபாகமல்லாத வேதப்பகுதி

அல்ல; அதுக்கு கௌஷிதகி என்குற பேறில்[181] இரிக்குவேதம் ரிக்கு சாக்காவைச் (ரிக்சாகையை) சேர்ந்தது.

மண்டல பிராமணம் என்குற வேரை ஒரு பேரில் அதேரிக்குவேதம் ரிக்கு சாகாவை சேர்ந்தது தான்.

# Bundle No. 2C, Sub Bundle No. 24

## (1)

குருவப்பன் சம்மதி, குருவப்ப னாயக்கன்குமாறன், அலகு சம்மதி
சுப ஸ்ரீ மன சாலியவாகன சகாற்தம்[182] 1840[183] கலியுகம்[184] 4918 யிதுமேல் செல்லா நின்ற சறுவகிதி[185] ஸ்ரீ தையி மீ உ தஞ்சநகரத்திலிருக்கும் பன்னாரி அவா: அவல்தார்[186] ராமசாமி னாயக்கன் பெண்ஜாதி பாப்பம்மாளுக்கு ஷெ குருவிக்கார தெரு பாப்பா னாயக்கன் குமாறன் குருவப்ப னாயக்கன் பிள்ளையை மஞ்சநீர் சாசனமுறி[187] குடுத்தப்படி மஞ்சநீர் சாசன முறியாவது தங்கள் ஆஸ்த்திபாஸ்த்தி[188] வீடு வாசல் கடனுடன் யிதுகளுக்கு பிள்ளைகுட்டி யில்லாமல் தன புது சன முதயிவகதி ஆதர முன்னுக்கு அவா .....தெறுவார் முன்னுக்கு யென்னைக் கேட்டது யெனக்கு ஆனால் ஆண்பிள்ளையில்லை. யெனக் கொரு பெண் பிள்ளை யிருந்ததை தன் முத்துமாறன் ஆங்கப்பன் னாயக்கனுக்கு கலியாணம் பண்ணிக்குடுத்தேன். யெனக்கு ஆண்பிள்ளையில்லை. உம்முட பிள்ளைகள் மூணுலே யெனக்கொரு ஆண் பிள்ளையே மஞ்சநீர் குடிக்க குடுக்கச் சொல்லி அவா கேட்டதுக்கு னானு மனோறாசியாய் யென் நடுப்பிள்ளை ரெங்கப்பனாயக்கனை மடியிலே தெருவரா முன்னுக்கு போட்டுத் தங்களுக்கு மஞ்சநீர் குடுத்த பிள்ளை இம்மஞ்சநீர் சாசனம் பண்ணிக்குடுக்க முத்திரை ஓலை வாங்கி வருகுரத்துக்குள்ளே உன் புறுஷன் ராமசாமினாயக்கனும் தெய்வகதி அடைஞ்சுபோனபடியினாலே தன் புறுஷன்[189] ராமசாமினாயக்கருக்கு மஞ்சநீர் குடுத்த யென் நடுப்பிள்ளை ரெங்கப்பனாயக்கனைக் கொண்டு தன் புருஷன் ராமசாமினாயக்கருக்கு உத்திரகிரிகை[190] செய்து வந்(த)படியினாலே தங்கள் அதை நிபா வத்தி[191] வீடுவாசல்

---

181 எனகுற பேறில் - என்கிற பேரில்

182 சாலிவாகன சகாப்தம் - கி.பி.78ல் தொடங்குவதும் சாலி வாகனன் பெயரால் வழங்குவதுமான ஆண்டுமுறை

183 சகம் 1740 என்றிருத்தல் வேண்டும்

184 கலியுகம் - யுகங்களுள் 4 ஆவது யுகம்: கி.மு. 3102இல் தொடங்கியது

185 சறுவகிதி - சர்வஜித் ஆகலாம்; ஆண்டறுபதனுள் 21 ஆவது ஆண்டு

186 அவல்தார் - ஹவில்தார் - இராணுவ அதிகாரி

187 மஞ்சள் நீர்ச்சாசன முறி - ஒரு குழந்தையைச் சுவீகாரம் எடுத்துக் கொள்ளும்பொழுது அவனை மஞ்சள்நீர் குடிக்கச் செய்வர்.இந்தச் சடங்குக்கு மஞ்சள் நீர் குடிப்பித்தல் என்பது பெயர். இங்ஙனம் மஞ்சள் நீர் குடிப்பித்த பின்னர்ச் சுவீகாரம் எடுத்துக் கொண்டு எழுதிக்கொடுக்கும் சாஸனத்தை "மஞ்சள் நீர்ச் சாஸன முறி" என்பர் (பக்.346)

188 ஆஸ்த்திபாஸ்தி - சொத்து

189 புறுஷன் - புருஷன் - கணவன்

190 உத்தரகிரிகை - இறந்தவர் பொருட்டுச் செய்யப்பெறும் நீர்க்கடன்கள்

191 'நிறைவேற்றி' என்றிருக்கலாம்

கடனுடன் தங்கள் சம்பவஞ் சாரி யிதுகள் சகலத்துக்கு[192] தாங்கள் மஞ்சநீர் குடிச்ச ரெங்கப்பனாயக்கனே அதிகாரியாய் புத்திர பவுத்திர பாரம்பரையாய் ஆண்டு அனுவிக்குறதேயல்லாமல் யிதுகள் சங்கதியில் யெனக்கு யாதொரு காரியமும் அக்கரையில்லை என ஆஸ்த்தி பாஸ்த்தி யென் வீடு வாசல் யிதுகள் சகலமும் தங்களுக்கு னான் மஞ்சநீர் குடுத்த ரெங்கப்பனாயக்கனுக்கு அக்கரையில்லை. தன் புருசன் ராமசாமினாயக்கனுக்கு சம்பளந் தனக்கு மஞ்சநீர் குடுத்த பிள்ளை ரெங்கப்பனாயக்கருக்கு ஆன பிற்பாடு அரமனை செவுகம் ரெங்கப்பனாயக்கன் வாங்கி வந்து தங்களண்டெ குடுக்காது தாம் வாங்கிக்கொண்டு தாம் மஞ்சநீர் வாங்கின ரெங்கப்பனாயக்கருக்கு தாம் அன்னவத்திரம் குடுத்து நடப்பிவித்து அவனுக்குத் தாங்கள் கலியாணங்காட்சி பண்ணிவச்சுத் தங்கள் பிள்ளையாயி ரெங்கப்பனாயக்கனை ஆண்டு அனுபவிக்கிறது. தனக்கும் தன புருசன் ராமசாமி நாயக்கன் தாயாரனுகம்மாளுக்கும் ரெங்கப்ப நாயக்கன் நன்மை தின்மை செயிது போட்டு ராமசாமினாயக்கன் ஆஸ்த்திபாஸ்த்தி சகலமும் ரெங்கப்பனாயக்கன் புத்திபவுத்திர பாரம்பறையாயி ஆண்டு அனுபவிக்கிரது யிப்படி சம்மதிச்சு ராமசாமினாயக்கன் பெண்ஜாதி பாப்பம் மாளுக்கு குருவிக்காரத்தெறு குருவப்பனாயக்கன் மஞ்சநீர் சாசனமுறி குடுத்தேன். யிதுக்குசாட்சி: யிந்த கிறல் குருவப்பனாயக்கன் மச்சினன் போடினாயக்கன், யிந்த கிறல் வீரறகுனாயக்கன், யிந்தகிறல் பெருமாளுனாயக்கன் சாட்சி செகந்நாதன், யிந்த அடசற்ம செகன்னாத பிள்ளை சாட்சி, யிந்த முதல் அச்சலுக்கு[193] ச் சரியான நகலுக்கு ரெங்கப்பனாயக்கன் கயிமுறல சம்மதி. குமற பிள்ளை அரிவேன்[194] யெழுதின நன்மைக்கு சட்டையப்ப வாத்தியார் குமாரன் சுந்தரலிங்கவாத்தி[195] நெட்டெழுத்து.[196]

## (2)

ஸ்ரீ மகாசா சாயேபு அவர்கள் திவானத்துக்கு (உ)

வாதி
கோட்டைவெளி டபீற்குளம் மேலண்டை கிறைகார(த்)தெறுவிலிருக்கும் ததைய்ய னாயின் மகன் அணிசிட்டி தி பிறதம பறத்திலிருக்கும் சின்னய்யனாயக்கன்.

பிரிதிவாதி
ஷை கோட்டை வெளி முமாசலறாவுத்தன் கோவில் தெருவிலிருக்கும் அமறுசித்து பிறத்தம பரிதிக்கு றாசு னாயக்கன்

விபகாற சம்மந்தம் கெடுகடன் சீட்டு யெழுதிக்குடுத்த சங்கதியில் வறவேண்டியது ரூ.சா யீ வாங்கின துள்பட ரூ. கூ ரு

---

192 இதுகள் சகலத்துக்கு - இவை எல்லாவற்றுக்கு

193 அச்சல் - அசல் - முதற்படி

194 அரிவேன் - அறிவேன்

195 வாத்தி - வாத்தியார் - ஆசிரியர்

196 நெட்டெழுத்து - பத்திரம் எழுதியவனுடைய முழுக்கையெழுத்து

ஷெ வாதி தெண்டநிட்டு பிரதிவாதி பேறில் பண்ணப்பட்ட பிறாது யென்ன மென்றால்[197]

இப் பிரிதிவாதியானவனுக்கு னான் றெங்கனாத பிறகார இடத்தில் நெல்லு விலைக்கி வாங்கி குடுத்ததற்காக நந்தன[198] வருஷம் மாசி மீ 10 உக்கு பிரிதிவாதியான வனை யேன் பேருக்கு ௭ ரூபாயிக்கு ஒரு கெடு கடன் சீட்டு யெழுதிக் குடுத்து மாதத்துக்கு ரூ உ விதம் மீ மீ குடுத்து வருகிறதென்றும் கண்டு சிட்டெழுதிக் குடுத்தவன் அந்த கெடுப்படிக்கி குடாதத்தினாலேயும் பின்னும் பின்னும் கொண்கணக்கு கடனாயி - ரூ - க ரு க்கு நெல்லு வாங்கிக் கொண்டான் ஆக இனம் 12 க்கு வறவேண்டிய ரூ ௯ ரு - யூஇந்த பிரிதிவாதியை னான் கண்டு கேழ்க்கும் போதெல்லாம் ஆகட்டும் போகட்டும் யென்றும் சொல்லி இழுத்து விடுகிறபடியினாலே ஷெ பிரிதிவாதி யெனக்கு குடுக்க வேண்டி இறுக்குற ரூ ௯ ரு -யூஇந்த பிரிதிவாதி இடத்திலிறுந்து யெனக்கு வாங்கி குடுக்கும்படி உத்தறவாக வேணும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். வேணும்.

க அ ௲ ரு வருஷம்
யேப்பிறல் மீ க சா உ[199]

இப்படிக்கு
சின்னய்ய னாயக்கன்

ருஜூ, ரிக்கார்டு ஆபீஸில் வேலைப்பார்க்கும் லெக்ஷ்மண ஸ்ரீமதி வருஷம் 1835, ஆங்கில ஆண்டு, ஏப்ரல் 16ந் தேதி, கோட்டைக்கு வெளியே டபீர் குளத்தின்[200] ரஸ்தாவில் வசிக்கும் அனிகஸ்தர் பிரதமம் மகால் படி சின்னய்ய நாயக் தாதப்பநாயக் இவர்களுக்கு இந்தப் பத்திரம் ரூ. 1/2 க்கு கிரயம் செய்து வித்தது-1.

இதற்குக் கோட்டையின் வெளியே வசிக்கும் அபராஜித பிரதமம் மகால்படி ராசப்பநாயக்கிடம் ரூ.9 1/2 - வருவதற்கு வழக்கு - நகல் 7 ருஜூ ராமாஜி ராஜோ

(3)

ம.ரா. மகறாசா சாயேபு அவர்கள் திவானத்துக்கு

வாதி
கோட்டை வெளி கறுந்தட்டாங்குடி

செல்வியம்மன் கோவில் தெறுவிலிறுக்கும்

றாமானாயக்கன் பெண்ணுசாதி பெறமாயி

அந்தஸ்து வீட்டுக்குடித்தனம்.

ஷெ தெறுவிலிறுக்கும் பரிமணம்

அந்தஸ்து அறமனையில்
சிபாயில் சிவனம்

197 யென்னமென்றால் - என்னவென்றால்

198 நந்தன - ஆண்டறுபதனுள் 26 ஆவது

199 16-4-1835 (?)

200 டபீர்குளம் - டபீர்நாரோ பண்டிதர் பெயரால் அமைக்கப்பட்ட குளம் கீழவீதியிலுள்ளது. டபீர் நாரோ பண்டிதர் துளஜா காலத்தில் இருந்த பெரிய அலுவர்; நிலச்சீர் திருத்தம் செய்தவர் (பக்.77-78)

விவகாற சம்மந்தம் வச்சிவெக்கச் சொல்லி குடுத்த சங்கதியில் வற வேண்டியது. ரூ. ௩ யி ௬ பணம் பொறுமான நகை வகையறா உறுப்படி வாதி தெண்டறிட்டு பிரதிவாதி பேரில் பண்ணைப்பட்ட பிறாது யென்ன மெண்டால்[201]

யென்புருஷன் பேறால் கொத்தவாலில் இறுக்குற அசாமிக்காக இந்த பிறதிவாதி பதிலி சேவுகத்துக்காக என் புருஷனை வய்த்து இந்த பிறதிவாதியு சேவுகம் பண்ணிக்கொண்டு வறுகையில் யென்புறுஷன் யெறந்த போனபடியால் யென்புருஷன் அசாமி யென் பேறாலாகி அந்த அசாமிக்காக இந்த பிறதிவாதியை தானேனான் பதிலினேமித்து இந்த பிரதிவாதியு சேவுகம் பண்ணிக்கொண்டு வந்த நம்புதலையினாலும் உத்தேசம் ஏழு மாசத்துக்கு முன்னமே இந்தப் பிரதிவாதி வீட்டில் னான் குடியிறுந்த படியாலும் யெனக்கு விறத்தாப்பிய[202] காலமானத்தினால் யென் சொந்தமாகிய ரூ. 15 1/2 பொறுமான பொன்காறை[203] -1, ரூ.6 1/2 பொறுமான றுத்தறாட்சம்[204] கட்டுவடம் பொன் மணி கோத்தவை - 1, ரூ.5 1/2 பொறுமான பித்தளை சொப்புகொடம்,[205] ரூ.2 1/4 கறுப்புறசியட்டு முண்டாசி -1, பு.6 பொறுமான சொக்கா - 1, பு.4 பொறுமான மண்வெட்டி க. ஆக ரூ. 39 1/2 பொறுமான ஷெ நவுக முண்டாசி[206] உள்பட 6 உறுப்படியு ஷெ பிரதிவாதி இடத்தில் னானு குடுத்து அனா வயக்கச் சொல்லியு யெனக்கு தேவையான போது ஷெ நகை முதலான துகளை வாங்கி கொள்ளுகிறேன் யெண்டு[207] பெறதிவாதி இடத்தில் குடுத்த ஷெ நகை வகையறா சமானை குடுக்கச் சொலி ஷெ பிரதிவாதியை னான் கேட்டதற்க்கு தறுக்கிரேன்[208] யெண்டு சொன்னவன் அந்தப்படி குடாமல் காலதாமுதம் பண்ணுகுறபடியால் மேல்யெழுதிய விவரப்படி ரூ.39 1/2 பொறுமான நவுகமுண்டாசி உள்பட ஆறு உறுப்படியு ஷெ பிறதிவாதி இடத்திலிருந்து யெனக்கு வாங்கித்தர வேணுமெண்டு கேட்டுக்கொள்ளுகிரேன்.

*1835 ஜுன் மீ 30 உ* இந்தக்கிரல் பெறமாயி.

ருஜூ, ரிக்கார்டு ஆபீஸில் வேலைப்பார்க்கும் லெக்ஷ்மண ஸ்ரீபதி வருஷம் 1834 ஆங்கில ஆண்டு, ஜூன் 28ந் தேதி, கருந்தட்டான் குடியில் வசிக்கும் ராமாநாயக் மனைவி பெருமாயி ஜாதி வேளாள்-இவருக்கு இந்தப்பத்திரம் கிரயம் செய்து வித்தது ரூ. 2/- நம்பர் 4/-

இவருக்கு கோட்டைக்கு வெளியே வசிக்கும் பரிமணம்மாயிடம் 35-சக்ரே பெருமானமுள்ள நகை வகையறா வருவதற்கு வழக்கு நகல்-7 ருஜூ ராமாஜி ராஜோ

---

201 யென்னமெண்டால் - என்னவென்றால்

202 விறத்தாப்பியம் - விருத்தாப்பியம் - வயது முதிர்ச்சி

203 காறை - காறை - கழுத்தணி

204 றுதிதறாட்சம் - உருத்திராச்சம்

205 செப்புக்குடம்

206 நவுக முண்டாசு - வேலையாட்குரிய தலைப்பாகை

207 யெண்டு - என்று

208 தருக்கிரேன் - தருகிறேன்

## (4)

ரா. மகாசா சாயபு அவர்கள் திவானத்துக்கு

வாதி

கோட்டை வெளிகுண்டுகேட்டு ஓரமிருக்குற ஆலமுகான் வாறிமோட்டுத் தெருவிலிருக்கும் ரா. மகாசா சாயபு அவர்கள் திவானத்துக்கு பாலனாயக்கன் மகன் சித்துவ றபிறதம பிரிதிக்கு சபினுக்கு வீறுருனாயககன்.

பிரதிவாதி

ஷெ தெருவிலிருக்கும் யென் வீட்டுக்கு அடுத்தவீட்டுகாறனாகிய சுவேட்டு வகையறாயாக்குவானாகிய அயயனுனாயக்கன்.

விவகார சம்பந்தம் மாமூலா நடக்குற பாதையை விட்டுவிட வேண்டிய: சங்கதி.

ஷெ தெருவிலிருந்த தாநஞ் சோஞ்சிக்கறடேறாலு யென்கிறவன் இட்டத்தில்[209] னான் ஈசுபற[210] ஷு பங்குனி மீ 15 உ யில் அவருடை மனை தோட்டத்தைக்கிறையமாக வாங்கி ஷெ நிலத்தில் னான் கூறைவீடு கட்டி ஷெ சீட்டில் காணப்பட்டிருக்குற நிபந்தனைப்படி ஷெ மனை கட்டுக்கு தெருவாசல்பாதை தெற்க்கே யென்றும் யெழுதியிருக்குறபடிக்கு னானும் பாதைவிட்டும் கூட நாக கொண்டு வருகயில் இந்த பிரதிவாதியானவன் என் வீட்டுக்கு அக்கினி மூலை[211] யில் வீடுகட்டியிருக்குறவன் யென்வீட்டுக்கு மாமூலாயினான் நடந்து வந்த தெருபாதையை நடக்க கூடாதென்றும், வீணாகத்துறாகிருதமாய்[212] ஒரு வருஷகாலமாய் தடங்கல் பண்ணியிருக்குறதுமன்னியில் கொண்டி நடந்துபோன தெரு பாதையில் கிறையும் விறைச்சு[213] மா தளங்கண்ணும் வயித்திருக்கிறான்.

ஆகையால் யென்னிடத்தில் இருக்குற கிறையச் சீட்டையும் பாத்துக்கொண்டு மாமூலையையும் விசாரணை செயிதுக்கொண்டும், மூலப்படிக்கி யென்னுடைய வீட்டுக்கு னான் தெருபாதை தெற்கே நடந்து போகும்படியாயும், உத்திறவாக வேணுமென்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

1835 ஜுலை 16 உ — வீறுகுனாயக்கன் கயியெளுத்து.

ருஜூ-ரிக்கார்டு ஆபிஸில் வேலைப் பார்க்கும் லெக்ஷ்மண ஸ்ரீபதி வருஷம் 1835 ஆங்கில ஆண்டு, ஜூலை 13ந் தேதி, கோட்டையில் வெளியே ஆலம்கான் வாரியில் வசிக்கும் ஜித்வார் பிரதமம்படி வீராகு நாயக் அல்லது பால நாயக்- இவருக்கு இந்தப் பத்திரம் ரூ.2 1/2 க்கு கிரயம் செய்து வித்தது -1.

---

209 இட்டத்தில் - இடத்தில்

210 யீசுபற - ஈசுவர - ஆண்டறுபதனுள் பதினோராவது

211 அக்கினிமூலை - தென்கீழ்த்திசை

212 துராகிருதம் - உரிமையில்லாதவிடத்தும் வலிய நிகழ்த்தும் செயல்

213 கிரையும் விதைத்து

இவர்கள் மாமூல்படி நடக்கக்கூடிய வழிக்குப் பக்கத்தில் வசிக்கும் சுபேட்டு ப்ராகவான் அய்யலு நாயக் என்பவர் தடங்கல் செய்து இருக்கிறார். அந்த வழக்கிற்கு-நகல்-7.

ருஜூ ராமாஜி ராஜே.

அய்யலு நாயக் யான அட்டக் கேலா ஆயேயாலா வீயாஜாஸ தாவிக-7 (அய்யலு நாயக் என்பவனை கைது செய்திருக்கிறது. அவனுக்கு 7 மாத சிறைத் தண்டனை)

## (5)

ரா.மகா றாஜா.....................ரவர்கள் திவானத்துக்கு

கோட்டைக்குற் யெல்லம்மன்[214] கோவில் பாம்புவைத்தியன் விட்டு சந்திலிருக்கும் யெறந்துபோன ராமசாமினாயக்கனுக்கு ஸ்ரீகார[215] புத்திரனான புறஜித் பற்ந்தாம பறாதிக்கில சயினிக் ரங்கசாமி யெழுதிக் கொடுத்த யாதி யென்னமென்றால்,

முதலாவது யெனக்கு ஜனக தொகப்பன்[216] அவப்பனுடனும் யென் ஜெனக தாயாராகிய சின்னம்ம மகளும் யெ அண்ணன் தம்பிகளும் கூடி ஒறு மனதாய் எனக்காதரமானதின் படிக்கி ஷெ யெறந்துபோன ராமசாமினாயக்கன் பெண்ஜாதியாகிய பாப்பம்மாளுக்கு ஸ்ரீகார புத்திரனாக யென்னைக் குடுத்து விட்டதுந் தவிற யென் ஜெனகதாயாற் தொகப்பன் அண்ணன் தம்பிகளுடைய ஆஸ்த்திகளுக்கும் யெனக்கும் சம்பந்தமில்லையென்று கண்டு சர்வசித்து[217] வருஷம் தையி மீ 20 உ யில் நிபந்தனை படிக்கி மஞ்சநீர் இட்டு[218] யெழுதிக் குடுத்த பிறகு னானும் ஷெ ராமசாமினாயக்கன் உத்திரகிரிகை (செய்து) ஷெயான் தா(யா)றாகிய யென்பாட்டி னாகம்மாள் உத்திரகிரிகை னானே பண்ணினேன்.

உ-வது மாஜி பொவுசுதாறு[219] யிதுநவற அண்ணொறமனான செறுடியாயி யிருந்த தினாலும் அப்போது ஷெ யெறந்து போன றாமசாமினாயக்கன் பேறால் பனுரச பட்டாளத்திலிருந்த சம்பளத்தையென் பேறால் பண்ணினால் - பாயி- சம்பளம் பாதிமீ ஷெ ஷெபு. மாது............று யோசித்து பார்ற்த்து ஷெ யென் ஸ்ரீகாற தாயிற் பேறால் பூறா சம்பளம் சேவுகமும் ஷெயாள் பேறால் பண்ணி யென்னிடத்து சேவுகம் வாங்கிக்கொண்டு ஷெ சம்பளமும் யென்னிடத்தில் தான் குடுத்துக் கொண்டு வரையில் னானும் அந்த சம்பளத்தை வாங்கி யென் ஸ்ரீகார தாயாரிடத்தில் குடுத்து அவளும் யென்னை சவுரச்சணை பண்ணிக் கொண்டு வறுகையில்

---

214 எல்லையம்மன் கோயில் (பக்கம் 213இல் 12 காண்க)

215 ஸ்ரீகார - சுவீகார

216 ஜனகதொகப்பன் - பெற்ற தந்தை

217 சர்வசித்து - ஆண்டறுபதனுள் 21 ஆவது கி.பி. 1827 ஆகலாம்.

218 மஞ்ச நீர் இட்டு - மஞ்சள் நீர் குடிப்பித்து

219 பொவுசுதாறு - Foujdar, சேனைத்தலைவன். இவ்விரண்டாவது பத்தியில் கூறியது பின்வருமாறு:- இறந்துபோன ராமசாமி நாயக்கன் பேரால் பட்டாளத்தில் இருந்த சம்பளத்தை சுவீகாரபுத்திரன் ஆகிய ரங்கசாமி நாயக்கன் பேரால் செய்தால், அவன் சிறுவனாகையால் பாதிச்சம்பளம் தான் கிடைக்கும் என்று நினைத்து, அந்தச் சம்பளத்தைச் சுவீகாரத்தாயார் பேரால் அமைத்து முழுச் சம்பளமும் அலுவலும் அவன் பேரிலேயே இருக்குமாறு செய்து, சுவீகார மகனாகிய ரங்கசாமி நாயக்கன் சேவகம் செய்து கொண்டு வந்து, முழுச்சம்பளமும் பெற்று, அச் சம்பளத்தைச் சுவீகார தாயிடத்தில் ஷெ ரங்கசாமி நாயக்கன் கொடுத்து வந்தான். அவனை அவள் காப்பாற்றி வந்தாள்.

௩-வது யென் ஸ்ரீகார தாயார் யெனக்குக் கலியாணம் பண்ணிவைக்காமல் யெங்கள் வீட்டிலிருந்த ஆஸ்த்திகளை செயிது அனா தாட்சிண்ய தன பத்தி சில பேர்களிடத்தில் தெறாக்கமுதலான சில நகைகளையு யெனக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாய் குடுத்துவிட்டது மன்னியில் யெனக்கு அன்னவஸ்திரம் கூடக் குடுக்காமல் வீட்டில் கூட இருக்காமல் திரிந்த சங்கதிகளைக் குறிதது‌ப் போன ஹூ அல்பசிசி[220] ௴ மா- உ ரு தனதயில் பொவுசுதாறடுட்டி[221] பார்த்துக் கொண்டு யிருக்கிற மத்தியஸ்தறா யிருக்கறாவஸ்த் தாரிடத்தில் மேலெழுதிய சங்கதியை னான் சொல்லிக் கொண்டதின் பேரில் அவர் சுபேதரர் ஜெமேதார்[222] முதலான பேர்களைக் கொண்டு ௸னான் சொல்லிக் கொண்ட சங்கதியை விசாரணை பண்ணச்சொல்லி உத்திரவு கொடுத்து அவான் ௸ யென் ஸ்ரீகாரத்தாயாறை வரவழைத்து விசாரணை பண்ணினவிடத்தில் ௸ னான் சொல்லிக் கொண்ட சங்கதிகள் ருசுவானது மந்றியில் ௸ யாள் குடுத்த கடன்கார பேற்வழி விபர்த்துடனே யெங்களுக்கு வரவேண்டிய கடன் ரூ 220. இக்கணக்கும் யெழுதிவையிதான்;[223] அந்தக் கணக்கும் மந்திர-விசாரணை[224] யிலிருக்குது. இது சங்கதிகளை ௸யார்கள் ௸ மத்தியஸ்தாளுக்கு அறிவித்த பிறகு அவாளாக மனது வயித்து சம்பளம் போக பாக்கி ௸யான் சம்பளத்தில் யெனக்கு 23 குடுக்கச் சொல்லியும் பாக்கி ௸. பத்தையென் ஸ்ரீகார தாயாருக்குக் கொடுக்கச் சொல்லி உத்திரவு கொடுத்தார்கள்.

௪-வது ஜெனக தாயார் தொகப்பனா றாஸ்த்தி யெனக்குக் கிடைக்க மாட்டா தானதாலும், யென் ஸ்ரீகார தாயா றாஸ்த்திகளை அவள் னானாவிதமாய் குடுத்துயிருக்குரத்தினாலே னான் சுதாவாய்[225] பக்கங்களில் கடனுடன் பட்டுக் கலியாணம் பண்ணிக் கொண்டேன். அந்த கடனும் யின்னம் திரவில்லை. யிதுசங்கதி யிப்படி யிருக்கயிப்போ அறமனையாற் குடுத்த முனுமகால கயிறுதாஉத்தேசம் ௸ புலந்துயிருக்குது. அதையு ௸ கலியாணக் கடனுக்கு செல்லவுட்டாமல் யென் ஸ்ரீகாரத் தாயார் வாங்கி மத்தியபானம்[226] செய்து துர்நடத்தைகள் செய்ய யெத்தினப்பட்டுயிருக்கிறாள். ஆகையால் நீதி ஞாய நடத்தி வறுகுற ஸ்ரீமகாராஜா சாயபு அவர்கள் யேழை சயினிகாரன்[227] யென்பதில் கிறுபை செய்து யென்ஸ்ரீகார தாயாராகிய பாப்பம்மாளையு யெனக்கு உத்திரவிருக்கும் மஞ்சநீர் சீட்டையு மா இபொவுசுதார ௸யாள் துர்நடக்கைக்காக முன்னாலே வாங்கி யிருக்கிற அதை தடஇறாயயு வரவழைத்துக் கொண்டு அவள் மத்தியபானம் பண்ணி யென் னாஸ்த்திகளை அழித்த சங்கதிகளை செம்மையாய் விசாரணை செய்குறதும் தவிர ௸யாள் கடன் குடுத்து இருக்கிற ௸கணக்குப்படிக்கு ரூ.220 க்கிம் காளளவி................ பவனிடத்தில் யென் ஸ்ரீகார தாயார்

---

220 அல்பசிசி ௴ - ஐப்பசிமாசம்

221 டூட்டி -duty - அலுவல்

222 சுபேதார் ஜமேதார் - இராணுவ அதிகாரிகள்

223 யெழுதிவையிதான் - எழுதி வைத்தான்

224 மந்திரவிசாரணை - நியாய விசாரணை

225 சுதா - தன் விருப்பப்படி

226 மத்தியபானம் - மதுபானம்

227 சயினிகாரன் - காலாட்படையைச் சேர்ந்தவன்

குடுத்து யிருக்குற வெள்ளி கங்கணி சரடு[228] - க, வெள்ளி கடப்பு செரடு-க. யிதுகளுக்கு யென் பேறால் ஆதரவு பண்ணி வக்கும்படியாய் ஷெியாள் பேறால் நடக்குரசம்பளத்தை யென்பேருக்குப் பண்ணி யென ஸ்ரீகார தாயார் றநடக இரூ, 1 வீதம் ஜீவனாமுசம் யென்னிடத்தில் வாங்கிக்கொண்டு யினிமேலாவது மத்தியபானம் பண்ணி துர்புத்திபண்ணாமலிருக்கும்படிக்கு ஷெ யாளுக்குத் தாக்கிது பண்ணும் படியாகவும் உத்திரவாக வேணுமென்று தெண்டலிட்டுக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

1835
பிப்பிரவரி மீ 15 உ

காயிந் அட்சரம்[229]
ரெங்கசாமி கயி அட்சரம்

(6)

ஸ்ரீமகாறாசா சாயபு அவர்கள் பெலாகற நீதிபடுகதம்பத்தாற் அவர்கள் முன்பாக ஜயதட்ச[230] துதிய[231] பிறதிக் செயினிக்சகாஜீ சிமணாஜீ மோகிதே யென்கிற நான் சம்பிறாகறதட சதுதிய[232] பிறதிக் செயினிக றாமசந்திர றாவுகோகாருட்ட யென்பவனுக்கு கொடுத்த ஆஜீற் ஜாமீன்[233] முச்சலிகா[234] யென்னவென்றால்,

ஷெ றாமசந்திர றாவு கோகாருட்ட யென்பவனை நபற்சறாசிவுறாவுநிகமை சசேந்தவிசாறணையை பத்தி பிறதி ஆறத்தில்[235] வைத்திருந்தவனை இப்போ இந்தயென்னுடைய ஜாமீன் பேறில் விடுதலை செய்குறபடியால் ஷெ றாமசந்திர றாவு கோகாருட்டயை யெந்த வேளையில் ஆஜற் பண்ணச் சொல்லுவார்களோ அந்த வேளையில் ஆஜர் பண்ணுகுற தற்கும் அப்படி ஆஜற் செய்யாமல்ப் போனால் ஷெியான் பேறில்யிருக்கிற தெண்டனை அபறாதம் முதலானதுக்கும் நான் இதைக் கொண்டு பாத்தியப்பட்டு இதுவே யென் மனோறாஜி[236] யான பேறில் யெழுதிக் கொடுத்த ஆஜற் ஜாமீன் முச்சலிக்கா.

1835
ஜனவரி 21 உ.

---

228 கங்கணிசரடு - காப்பு நாண் (?)

229 காயின் அட்சரம் - கையெழுத்து

230 ஜயதட்ச - வெற்றி பொருந்திய(?)

231 துதிய - துவிதீய - இரண்டாவது

232 சதுதிய - சதுர்த்த - நான்காவது

233 ஆஜிறஜாமீன் - ஆசர்ஜாமீன் (பக்.343)

234 முச்சலிகா - சாமீன்பத்திரம்

235 பிறதி ஆறத்தில் - பிரதீகாரத்தில் - காவலில்

236 மனோறாஜியானபேரில் - சம்மதத்தின் பேரில்

குஜூ ரிக்கார்டு ஆபிஸில் வேலைப் பார்க்கும் லெக்ஷ்மண ஸ்ரீபதி வருஷம் 1835 ஆங்கில ஆண்டு ஜனவரி 21ந் தேதி கோட்டையில் வெங்கடேச கோவில் பின்னால் வசிக்கும் ஜயதட்ச வைதிக பிரதி சைனிக்க சிகாஜி சிம்மன்யாஜி மோஹிதே இவருக்கு இந்த பத்திரம் கிரயம் 1/2 க்கு விற்றது-1. இதற்கு தட்ச வைதிக பிரதி ராமச்சந்திரராவ் சந்தாஜி கோகாட்டைக் சர்க்காருக்கு ஆஜர் ஜாமீன் எழுதிக் கொடுப்பது.

குஜூ ராமாஜி ராஜோ.

## (7)

றா-மகாறாசா சாயபு அவர்கள் காறணி திபட்டுகக்காம பத்தாறவாகன முன்ம்பா செய் தடச பிறதி றஜிக்கு சயினிக்கு றாமசந்திற றாவு தேசிங்கு றாவு முணுமக்காற யென்பவன் எழுதிக் கொடுத்த அசிற சாமீன் முச்சலிக்கா என்ன வென்றால்

சறுக்காறில் செவுகமாயிறுக்குற சஞ்சிவு றாவுணிக்காம யென்பவன் சிலபேறை துற்போதனை செயிது குமுக்கு[237] சேர்த்துக் கொண்டு அரமனையில் தங்கா உழக்கார நாவனுக்கு மச்சினனாகிய சம்பிற அறதனை இவிதிய பிறத்திக்கியிலிருக்கும் மானாசிறாணோசி மானை யென்பவன் ஒத்தாசையாயிற் றுந்ததாகவும் அந்த சங்கதியைக் குறித்துப் பிறதி ஆறத்திவி வையித்திறுக்குற ஷெ மானாசிறாணோசி மகன் யெனப்பவனுக்குனான் யென் சாமி நின் பேரில் பிறதி ஆறத்திலிருந்து விடுதலை செய்து கொண்டு போறபடியினாலே ஷெயானே அறமனையாற் யெப்போயென்னறத்தில் ஆசிறபடுத்த சொலுவார்களோ அன்னேறத்தில் அவனை அழைத்துவந்து அசிறபடுத்துவேன். அப்படிக்கு ஷெயானே ஆசிறு செய்யாவிட்டால் ஷெயான போறில் சாட்டுதலையாயிறுக்குறத்துக்கும் அபறாதத்துக்கும் னான் பாதியபடுவேணாகவும், இந்தப்படி சமதித்து ஆசிற சாமீன் முச்சலிக்கை யெழுதிக் கொடுத்தேன்.

1835 பிப்றவறி மீ 1உ

(சகி கையெழுத்து)

யிந்த அட்சறம் றாமசந்திர றாவு தேசிங்குறாவு
முணும்கற கையெழுத்து. (மோடியில்)
யிந்த அட்சறம் சுப்பண்ணாயதவை
(மோடியில்)....................
யிந்த அட்சறம் லட்சுமி தந்துதவை
(மோடியில்)....................
யிந்த அட்சறம் விசுவனாதபண்டியர்
யிந்த சாமின் முச்சிலிக்கை உமாசங்கர திறுவாடி நெட்டெழுத்து.

ரிகார்டு ஆபிஸில் வேலை பார்க்கும் லெட்சுமண ஸ்ரீபதி வருஷம் 1835 ஆங்கில ஆண்டு பிப்ரவரி 1ந் தேதி, கருந்தட்டான் குடியில் வசிக்கும் ஜயதட்ச பிரதமம் பிரதி சைனிக்க ராமச்சந்திரராவ் தேசிங்க ராவ் அவர்களுக்கு இந்த பத்திரம் ரூபாய் 1/2 க்கு கிரயம் செய்யப்பட்டது-1

237 குமுக்கு - உதவி (கூட்டம்)

இதற்கு.....மானாஜி ராணோஜி மானே சிறையிலிருந்து விடுதலைச்செய்வதற்கு சர்க்காருக்கு ஆஜர் ஜாமீன் கொடுப்பதற்கு - ருஜூ

ருஜூ ராமாஜி ராஜோ.

# (10)

றா-மகாறாசா சாயேபு அவர்கள் பலாகாறனி திபட்டுக் கதம்பத்தாற் அவர்கள் முன்பாக

செயதட சதி விதி பிறதிக்கு சயினிக்கு பாறோசி கேசவறாவு கருட யென்பவன் யெழுதிக் கொடுத்த ஆசிற சாமின் முச்சிலிக்கை யென்னவென்றால்,

சறுக்காறில் சேவுகமாயிறுக்குற[238] சஞ்சிவிறாவு னிக்காம் யென்பவன் சில பேறை துற்போதனை செயிது குமக்கு சேற்த்துக் கொண்டு அறமனையில் தங்கா உழக்கா நாவனுக்கு தம்பியாகிய சயதாச பிறத்தம பிறதிக்குயிலறுக்கும் சதாசிவறாய வெங்கிட்ட றாவுனிகமயென்பவன் ஒத்தாசையாயிருந்ததாகவும் அந்த சங்கதியைக் குறித்து பிறெதி அறத்தில் வைத்திறுக்குற[239] ஷெ சதாசிவறாவு வெங்கட்டறாவுனிச யென்பவனுக்கு னான் யென் சாமினி(ற) பேறில் பிறதி அறத்திலிருந்து விடுதலை செயிது அழைத்துக் கொண்டு போறபடினாலே ஷெயானெ அரமனையாறு யெப்பொ யென்னேறத்தில் ஆசீற்படுத்த சொலுவாறகளோ அன்னேறத்தில் அவனை அழைத்துவந்து ஆசீற்படுத்துவேன். அப்படிக்கு ஷெயானே ஆசீற் செய்யாவிட்டால் ஷெயான் பேறில் சாட்டுதலை யாயிருக்குறகுத்தத்துக்கும் அபறாதத்துக்கும் னான் பாத்திய படுவேனாகவும் இந்தப் படி சம்மதித்து அசிற சாமீன் முச்சிலிக்கை யெழுதிக் கொடுத்தேன்.

சாட்சிகள்

1835ம் ௵ பாலநாத (மோடியில்)
பி(ப்)றவரி மீ 1 உ யிந்த அட்சறம்[240] பாறோசீ
கேசவறாவு கறுட கையெழுத்து (மோடியில்)
யிந்த அட்சற சுப்பறாய தவை
இந்த அட்சற லெட்சுமி தத்துதவை
இந்த அட்சற விசுவணாத்த பாண்டியா

யிந்த சாமீன் முச்சிலிக்கை உமாசங்கற திறுவாடி நெட்டெழுத்து.

ருஜூ, ரிக்கார்டு ஆபீஸில் வேலை பார்க்கும் லெக்ஷ்மண ஸ்ரீபதி ௵ 1835 ஆங்கில ௵, பிப்ரவரி மீ 1ந் உ கோட்டையின் வெளியே வண்டிக்காரர்கள் தெருவில் குடியிருக்கும் ஜயதட்ச வ்யதிய பிரதி சைனிக் பாலோஜி கேசவராவ் கருட............இந்த பத்திரம் ரூ 1/2க்கு கிரயம் செய்தது-1.

238 சர்க்காரில் சேவகமாயிருக்கிற - அரசுப் பணியிலுள்ள

239 பிரதிகாரத்தில் வைத்திருக்கிற

240 அட்சரம் - எழுத்து

இதற்கு ஐயதட்ச பிரதக பிரதி சதாசிவராவ் வெங்கட்டராவ் இவர்களை கைதியிலிருந்து விடுதலை செய்யும் விஷயத்தில் சர்க்காருக்கு ஆஜர் ஜாமீன் கொடுப்பதற்கு - உ 7-

ருஜூ ராமாஜி ராஜோ.

**(25)**

மகாராசா சாயேபு அவற்களுடைய பலாக்கறந்திபட்டு கதம பத்தாறவற்கள் முன்பாக ஆகவதஷ சதுவிக கதரிஷி யீரோசி நகுமாசி கறுடேயேனாதி குடுத்த ஆசிரசாமின் யென்னமென்றால்,

சறுக்காறில் சேவுகமாயிறுக்கும் சஞ்சீவிறாவு நிகமு மென்பவன் சில பேர்களுக்கு துற்ப்போதினை செய்து குமுக்குச் சேத்துக் கொண்டு அறமனையில் தங்கா உளுக்காநதவனுக்கு மறுமானாகிய செயதஷசபிறந்தம் பிறதிக்கவிவுக்கும் மகாதேவ றாவு மானுசிமானே யென்பவன் ஒத்தாசையாயிறுந்த சங்கதியைக் குறித்து பிரதிகாரத்தில் வையத்திறுக்குர ஷூ மகாதேவ்றாவு மானுசி மானே யென்பவனை யென் சாமின் பேரில் பிரதிகாரத்திலிருந்து விடுதலை செயிது நான் அளைத்துக் கொண்டு போகிறபடியினாலே ஷியானை அறமனையாறவற்கள் யெப்பொ யென்னேறத்திலே ஆசிர்படுத்தச் சொல்லுகிறார்களோ அன்னேரத்தில் அவனை அளைத்துவந்து ஆசிர்படுத்துவேன். அப்படிக்கு ஷியானை ஆசிர் படுத்தாவிட்டால் ஷியான்பேரில் சாட்டுதலையாயிறுக்குர குத்துக்கும் அபறாதத்துக்கும் நானே பாத்தியப்படுவேனாகவும் இந்தப்படி யென் மனோறாசியில் ஆசிர்சாமி(ன்)........(எ) ளுதிகுடுத்தேன்.

1835ம் ஷூ
பிப்றவரி மீ 12

(சயி - கையெழுத்து) இந்த அஷ்கரம்
யிறோசி றகுமாசி கறுடே கையெளுத்து.
சாக்ஷிகள்
(மோடியில்).............
இந்த அஷ்சரம் சுப்பறாயதேவே
(மோடியில்)............
இந்த அஷ்சரம் லெ ஷசிமி தத்துதேவ்
(மோடியில்).............
இந்த அஷ்சறம் விசுவநாத பாண்டயா

இந்த சாமின் முச்சிலிகா அருணாசலம் நெட்டெழுத்து.

ருஜூ ரிக்கார்டு ஆபிஸில் வேலை பார்க்கும் லெக்ஷமண ஸ்ரீபதி
ஷூ 1835 ஆங்கில ஆண்டு, பிப்ரவரி மாதம் 1ந உ
கோட்டையில் தாஸ்தான் மஹால்[241] சந்தில் வசிக்கும்
அஹமத்........தர்சி ஹிரோஜி ரக்மான்ஜி...........
ரூ 1/2க்கு வித்தது-1.

241 தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் (பக்.543)

இவர், ஜயதட்ச பிரதமப்படி மஹாதேவராவ் மானாஜி மானே இவரை கைதியிலிருந்து விடுதலை செய்ய சர்க்காருக்கு ஆஜ்ஞ ஜாமீன் கொடுப்பது ரூஜு.

ரூஜு ராமாஜி ராஜோ.

(36)

ரா. மகாறாசா சாயேபு அவர்களுடைய பலநீதிபட்டு கதம்பத்தார் அவர்கள் முன்பாக

| வாதி | பிரதிவாதி |
|---|---|
| கோட்டைக்கரை கிழவீதியில் தெறுக்கு வடம்போக்கு சந்திலிறுக்கும் அண்ணாஜி மகன் குப்பண்ணா அந்தஸ்த்து அரமனையில் அபறாசித்து[242] தியபறதிக்கு சயினிக்கு. | கோட்டைவெளி வாறக்காறத் தெறுவிலிறுக்கும்வீறப் படை அந்தஸ்து அறமனையில் சித்துவற் பறதம பறதிக்கு சயினீக்கு. |

விபகார சம்மந்தம் கடன் சீட்டு சங்கதியில் வறவேண்டியது
ரூ. எ-பணம் சூரு ய

வாதி தெண்டனிட்டு பிறதிவாதி பேரில் பண்ணப்பட்ட பிறாதுயென்னமெண்டால்.

இந்த பிறதிவாதியானவன் யென்னிடத்தில் கற ௵[243] தைய் மீ 28 உயில் ரூ 15 கடன்வாங்கிக் கொண்டு ஷை பணத்துக்கு வட்டி மாசம் சுக்கு ௱த்துக்கு ரூ. க ருவீதமாக வட்டி சேத்து உடயவன் வேண்டும்போது குடுக்குறதெண்டு[244] சீட்டுயெழுதிக்கொடுத்து அதற்காக இதுநடியில்க்[245] கண்டவிபறப்படி சிலபணம் வரவு போக பாக்கி வட்டி முதல் பணத்தை குடாமால் காலதாமுசம் பண்ணுகுற படியால் ஷை சீட்டில் அதிகவட்டி தண்டு இறுக்குறபோதிலும் சட்டப்படி வட்டி கண்டு பாக்கி வட்டி முதல் பணத்துக்காக பிறதிவாதி பேரில் பிறாது பண்ணலானேன்.

ஆகயால் பிறதி வாதி பேரில் வறவேண்டியதற்கு விபறம்.

ஷை சீட்டின் அசல் ரூ.15. இந்து மன்மத[246] ௵ ஆடி மீ 3 உ வறாத்தும சட்டப்படிக்கு வட்டி கூடுதல் ரூ. சா ௵ சுரீ ஆக வட்டி முதல் உள்பட ரூ. 21 ௵ சுரீக்கு ரூ. க ரு பணம் ஈவ ரூீ ஆக ரூ. ய ந பணம் சா வ லி -க்கு வறவு செய ௵ ஆனி மீ ஸ் ரூபாயில் இந்த பிறதிவாதியானவன் சுக்குறமணி ஷை இடத்தில் ஷை கடன் சீட்டில்க் கண்ட பணத்துக்காக ந ரு பணம் ந வ சாட்டிவிட்டிட்டு[247] னானும் ஒப்புக்கொண்ட படியால் ஷை பணத்துக்கு

---

242 அபராசித - வெல்லப்படாத

243 கற ௵ - கரவருஷம் - ஆண்டறுபதனுள் இருபத்தைந்தாவது (கி.பி.1831)

244 குடுக்குறதெண்டு - கொடுக்கிறதென்று

245 இதுநடியில் கண்ட - இதனடியில் கண்ட

246 மன்மத - யாண்டறுபதனுள் இருபத்தொன்பதாவது (கி.பி.1835)

247 சாட்டிவிட்டுட்டு - பிறரிடம் சார்த்துதல்

மன்மதஞூஆடிமீ 2உ வரைக்கும் யெதிறவட்டி[248] கூடுதல் பணம் ச ரு ஆக யேதிறவட்டி உள்பட வறவு ரு ரு பணம் க ள போக பாக்கி வறவேண்டிய ரு எ பணம் ச ரு -ம் ய பிறதிவாதி இடத்திலிருந்து யெனக்கு வாங்கி தற வேணுமெண்டு கேட்டு கொள்ளுகிரேன்.

1835 ம் ஞூ
சூலாயி மீ 17 உ

குப்பண்ண அப்பாஜி யஷத்து.

சேனாதிபதி பிரபர ராஜேஶ்ரீ கிருஷ்ணாஜி கேசவ் பண்டிட் - இவர்கள் மனதிற்கு கொண்டு வருவது - 1835, ஜூலை உ 18.

ருஜு சூர்மாஹல்-ரிக்கார்டு ஆபீஸில் வேலை பார்க்கும் ஶ்ரீபதி - 1835 ஆங்கில ஆண்டு, ஜூலை மாதம் தேதி 16 - கோட்டையில் வக்கீல் சங்கோஜி மொஹிதேயின் வீட்டின் அருகில் வசிக்கும் அபராஜித வ்யதிய பிரதிகவான் குப்பண்ணா அப்பாஜி இவர்களுக்கு இந்த பத்திரம் விலை ரூபாய் 1/2க்கு வித்தது - 1. இதற்கு கோட்டையின் வெளியே வசிக்கும் ஜீக்த பிரதம பிரதிகவான் வீரப்ப நாயக் மேல் 8 1/4 வருவதற்கான வழக்கிற்கு - நகல் 7

ருஜு ராமாஜி ராஜே.

## (11)

ஶ்ரீ மகாறா சாயுபு அவற்கள் திவானத்துக்கு கோட்டை இன் தெற்கு வீதியிலிருக்கும் ஆவதிஷச பிறதப்பிறதிக்கிலெ சேவுகம் செய்யுற பிக்காசி காட்டிகை யெழுதிக் குடுத்த யாதி யென்னமென்றால்,

யென் பெண்ணுசாதி சேதுபாயிக்கும் அவள் பெண்ணுக்கும் மீ 1க்கு அஞ்சுபொன்[249] சம்பளத்தில்ஷெ க பணத்துக்கு ஞாயசபையில் திர்ப்பாயி பிடித்துக்குடுத்துக் கொன்று வந்தார்கள். யிப்பொ யெனக்கு முப்பதுபணம்[250] சம்பளம் அரைமனையார் பண்ணிப் போட்டார்கள். யெனக்கு பொழுது போனால் கண் தெரியாமல் யிருப்பதால் அதினால் யெனக்கு பதில் வயது பதில்காறனுக்கு பாதி பதிநஞ்சு[251] பணம் பிடித்துக்குடுக்குறபடியால் யென் பெண்ணுசாதிக்கி ஒரு பெண்யிருந்தும் யெறந்துபோய்விட்டது. ஆகையால் என் பெண்ஞ் சாதிக்கி பதிநஞ்சி பண(ம்) பிடித்து குடுத்து வருகுறார்கள். ஆகையால் னான் றொம்ப அன்ன வஷ்த்திறத்துக்கு[252] அவதிபட்டு கொண்டு பட்டினியாயிறுக்குறேன். ஆகையால் ஶ்ரீ மகாறா சத்திரபதி யேழையின் பேரில் தயவுசெய்து அவள் ஒன்றிகாறிக்கு[253]

---

248 யெதிறவட்டி - வட்டிக்குவட்டி

249 பொன் - சக்கரம் அதாவது 10 பணம் (பக்.150) (7-848)

250 முப்பது பணம் - மூன்று பொன்; மூன்று சக்கரம்

251 பதிநஞ்சு - பதினைந்து

252 வஷ்த்திறத்துக்கு - வத்திரத்துக்கு - ஆடைக்கு

253 ஒன்றிக்காறிக்கு - ஒருத்திக்கு

விஷயம் மனு -

1 - வாதி வெங்கடாசலம் - பிரதிவாதி அப்பாவுமேல் வாக்குப்படி -

1-வாதி போக்குட்டி அரிய முத்து என்பவன் பிரதிவாதி ராமண்ணா மேல் பிர்யாதி செய்த விஷயம் மனு -

1 - வாதி மன்னாரு பிள்ளை - பிரதிவாதி கங்கை என்பவள் மேல் பிர்யாதி செய்த விஷயம் மனு -

1 - வாதி ராமசாமி - பிரதிவாதி மருதை வகையறாமேல் ஸ்தய பதம் - = 6 = 11

இதற்குவிவரம், 1 - முத்திரையுள்ள விஸ்ட்டு, 10 - முத்திரையில்லாத விஸ்ட்டு = 11, போக பீதி 4, இதற்கு விவரம் - 1 - முத்திரையுடையது, 3 - முத்திரையில்லாதது = 4

**(3)**

ஸ்மரனார்த்த - நியாயாதிஸ சபா - நியாயாதிஸ் ராஜெஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்ப நாம சம்வத்ஸரம் - 1838 ஆங்கில ஸூ - ஜூலை ௳ 8 - சபாமஜ்கூரி விவகாரம் -, 104 - நேற்று வரையில் பாக்கி - 0 - இன்று ஜமா

இதற்கு செலவு -

1 - வாதி பாவாஸாபீ - பிரதிவாதி மணியார் மதர்மஸ்தான் - இவர்களுக்கு ருணாதான பதத்தில் சேர்ந்த மதர் தொடர்பான விஷயம் பிரதிவாதியினால் புனர் நியாயத்திற்காக கொடுக்கப்பட்ட மனு முழுவதும் வந்ததை - முன்னால் விசாரணையினுடைய ஆதாரம் விசாரணை செய்த பொழுது - இரண்டு வாதியினாலும் எழுதித் தரப்பட்ட சமாதான கையெழுத்திலிருந்து - முத்ரீத சபையிலும் மேலும் தர்மசபையிலும் வாதிக்கு பிரதிவாதி ரொக்கம் 89, 1 - முத்திரையுடைய காகிதத்தின் விலை ரூபாய் 5 தரவேண்டுமென்று செய்த தீர்ப்பு ரத்து செய்து மேற்சொன்ன சமாதான கையெழுத்துப்படி மதரா பற்றியும் மேலும் மனுவினுடைய விலைப்பற்றியும் கூட ரூபாய் 75 வாதிக்கு பிரதிவாதி தரவேண்டுமென்று முடிக்கப்பட்டது.

1 - வாதி லெட்சுமண் நாயக் - பிரதிவாதி கோவிந்தப்ப நாயக் - இவர்களுக்கு பூவிவத பதத்தில்[168] சேர்ந்த விவகாரம் - புனர் நியாயம் ஆவதற்காக பிரதி வாதியினால் கொடுக்கப்பட்ட மனு முழுவதும் முன்னால் சபையிலிருந்து வந்த ஆதாரம் பார்க்குமிடத்து - பேஸஜி - இந்த பிரதிவாதி வாதியின் மேல் சுவர் விஷயமாக செய்த வழக்கிற்கு - ஷெ வாதிகொடுத்த வாக்குமூலத்தின் நகல் - இப்பொழுது உள்ள வழக்கில் பிரதிவாதி தாக்கல் செய்தார் - அதில் மேற்சொன்ன வாதியினுடைய வீட்டின் சுவருக்கு மேற்கே வாதிக்கு இடமில்லை என்று அறிவிக்கப்பட்டிருப்பதால் - மேற்சொன்ன வழக்கிற்கு முத்ரீத சபையிலுள்ளவர்கள் தரப்பில் அனாதேயம் செய்தார்கள். அதற்கு தர்மசபையிலுள்ளவர்கள் ஷெ இடம் யாருடையது என்று நிச்சயம் செய்யவில்லையாதலால் இரண்டு வாதிகளும் மேற்சொன்ன இடம் பாதிப்பாதி படி அனுபவிக்கிறது என்று செய்த தீர்ப்பு ரத்து செய்து ரொக்கம் 3, 1 1/4 பொறுமானமுள்ள காலிஇடம் வாதிக்கு பிரதிவாதி விடுவது தேவையில்லை என்றும் மேலும் சபா

---

168. பூவிவதபதம் - பூமிவாதபதம் ; பூவிவாதபதம் - நிலங்களைப் பறறிய வழக்கு (பக்.172)

மஜ்கூரியினுடைய புனர் நியாயம் மனுவினுடைய முத்திரையுடைய காகிதத்தின் விலை ரூபாய் 1/2 பிரதிவாதிக்கு வாதி தரவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

1 - வாதி சீதாராம பாகவதர் பிரதிவாதி ராம கிருஷ்ண தீக்ஷிதர் - இவருக்கு பூவிவத பதத்தில் சேர்ந்த விவகார விஷயம் - வாதிபுனர் நியாயத்திற்காக கொடுத்த மனு முழுவதும் முன்னால் சபையிலிருந்து வந்த ஆதாரம் பார்க்குமிடத்து வாதிக்கு பிரதிவாதி ரொக்கம் 14க்கு சமமான 56 கஜம் நிலம் தரவேண்டுமென்று முத்ரீத சபையில் தீர்ப்பானதற்கு தர்மசபையில் இரு வாதிகளும் எழுதிக் கொடுத்த சமாதான கையெழுத்திலிருந்து முத்ரீத சபையினுடைய தீர்ப்பு ரத்து செய்து ரொக்கம் 8 1/2 - வாதிக்கு பிரதிவாதி தரவேண்டுமென்றும் மேலும் 56 கஜம், இடம், காகிதத்தின் விலை கூட வாதிக்கு பிரதிவாதி தருவது தேவையில்லை என்றும் தர்மசபையில் தீர்மானிக்கப்பட்டது சரியானது என்றும் சபாமஜ்கூரி அப்படியே முடிக்கப்பட்டது.

1 - வாதி வேலிகட்டி ராமன் பிரதிவாதி சுப்பன் வகையறா இவர்களுக்கு ஸ்தேய பதத்தில்[169] சேர்ந்த விவகார விஷயம் - பிரதிவாதி கொடுத்த மனு முழுவதும் முன்னால் சபையினுடைய ஆதாரம் பார்க்குமிடத்து - நான் இல்லாத வேளையில் என்னுடைய வீட்டிலுள்ள எருமை, கன்றுக்குட்டி வகையறா பிரதிவாதி திருடிச்சென்றுள்ளான் - அதை வாங்கித் தரவேண்டுமென்று வாதி பிர்யாதி செய்ததற்கு - நியாய சபையில் விசாரணை செய்து - ஷை எருமையும் கன்றுக்குட்டியையும் வாதியிடத்தில் பிரதிவாதி விடவேண்டுமென்றும் மேலும் மேற்சொன்ன குற்றத்திற்கு ஷை பிரதிவாதிக்கு ரூபாய் 1 அபராதம் விதித்து தீர்க்கப்பட்டது சரியானது என்றும் மேலும் இரண்டு பங்கு தண்டனை படி ரூபாய் 2 தர்மசபையிலுள்ளவர்கள் தண்டனை விதித்தது சரியானதினால் சபா மஜ்கூரி பிரதிவாதி சேமித்து வைத்த ரூபாய் 4 பிரதிவாதிக்கு அபராதம் விதித்து - மேற்சொன்ன எருமையையும் கன்றுக்குட்டியையும் வாதியிடம் விடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

1 - வாதி ரங்க கொத்தனார் பிரதிவாதி வீரப்ப நாயக் இவர்களுக்கு ஸாஹஸ பதத்தில் சேர்ந்த விவகாரம் புனர் நியாயத்திற்காக கொடுத்த மனு முழுவதும் முன்னால் விசாரிக்கப்பட்டதின் ஆதாரம் பார்க்குமிடத்து சபா மஜ்கூரி புனர் நியாயத்திற்காக கொடுத்த மனுவுக்கு புனர் நியாயத்திற்குரிய கெடு தவறிவிட்ட படியால் மேற்சொன்ன வழக்கு விசாரணை இல்லை என்று அனாதேயம் செய்யப்பட்டது = 5

போக மீதி - 99

(4)

ஸ்மரனார்த்த - நியாயதிஸ சபா - நியாயாதிஸ ராஜேஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 விளம்பி நாம சம்வத்ஸரம் - ஆஷாட வத்யம் 2 சோமவாரம் - 1838 ஆங்கிலஹு ஜூலை உ 9க்கு சபாமஜ்கூரி விவகாரம் -

99 - நேற்று வரையில் பாக்கி - , 0 - இன்று ஜமா ,
இதற்கு செலவு -

---

169. ஸ்தேயபதம் - கெடுதரவேண்டும் என்று கேட்டுப்பெறுவது (பக்.171)

1 - வாதி காத்த பெருமா பிள்ளை பிரதிவாதி வடகநாதபிள்ளை வகையறா - இவர்களுக்கு பிரகிர்ணக பதத்தில்[170] சேர்ந்த விவகாரம் விஷயம் வாதி புனர் நியாயத்திற்காக கொடுத்த மனுமுழுவதும் வந்ததை முன்னால் விசாரணையின் ஆதாரம் பார்க்குமிடத்து - பிரதிவாதியினுடைய பெயரில் என்னுடைய வீட்டில் மேல் ஒத்திச் சீட்டு எழுதிக் கொடுத்து ரொக்கம் 38 கடன் வாங்கி வெளியே வந்த பொழுது அபசகுனம் ஆனதினால் - உடனே மேற்சொன்ன ஐவேஜ் இரண்டாவது பிரதிவாதியிடம் கொடுத்துவிட்டேன். - அதனால் மேற்சொன்ன ஒத்திச் சீட்டும் மேலும் அதன் விஷயமாக எழுதிக் கொடுத்த வாடகைச் சீட்டும் வாங்கித் தர வேண்டுமென்றும் வாதி செய்த பிர்யாதிக்கு முத்ரீத சபையில் விசாரணை செய்து - ஷெ இரண்டு சீட்டுகளும் மேலும் முத்திரையுடைய காகிதத்தின் விலை ரூபாய் 1/2 யும் தருவது தேவையில்லை என்று முடிக்கப்பட்டது சரி என்றும் தர்ம சபாவிலுள்ளவர்கள் அதன்படியே என்றும் நிர்ணயம் செய்தது சரியானது என்றும் சபா மஜ்கூரியிலும் நிர்ணயம் ஆனது -

1 - வாதி ரங்குபாயி பிரதிவாதி சுப்பநாயக் இவருக்கு ருணாதான பதத்தில் சேர்ந்த விவகார விஷயம் பிரதிவாதி புனர் நியாயத்திற்காகக் கொடுத்த மனு முழுவதும் முன்னால் சபையிலிருந்து வந்த ஆதாரம்பார்க்குமிடத்து மேற்சொன்ன பிரதிவாதி மேல் வட்டி முதல் சகிதம் புலிஹோன்ன[171] 68 3/4, ரொக்கம் 1 1/4, 2 வீசம் வரவேண்டுமென்று வாதியினால் செய்த தரப்பிற்கு தர்மசபையில் விசாரணை செய்து வாதிக்கு பிரதிவாதி ரொக்கம் 155, 1/4 மேலும் முத்திரையுடைய காகிதத்தின் விலை ரூபாய் 10-ம் தரவேண்டுமென்று முடிக்கப் பட்டது சரிதான் என்றும் சபா மஜ்கூரியும் நிர்ணயம் ஆனது.

1 - வாதி ரங்கநாத பிள்ளை பிரதிவாதி நமச்சிவாய பிள்ளை வகையறா ஆட்கள் 3. இவர்களுக்கு சாஹஸ பதத்தில் சேர்ந்த விவகாரம் - வாதி புனர் நியாயத்திற்காக கொடுத்த மனு முழுவதும் வந்ததை முன்னால் சபையினுடைய ஆதராம் பார்க்குமிடத்து மேற்படி பிரதிவாதி ஒரு பொய்யான தகவல் செய்து இருக்கிறான். அதை விசாரணை செய்ய வேண்டும் என்று பிரதிவாதி பிர்யாதி செய்ததற்கு நியாய சபையில் விசாரணை செய்து சிவாலாவில் சேர்ந்ததினால் மேற்சொன்ன பிர்யாதி அனாதேயம் செய்தது - அது சரி என்று தர்மசபையிலுள்ளவர்கள் அப்படியே முடித்தது அது சரியானது தான் என்றும் சபா மஜ்கூரியும் நிர்ணயம் செய்யப்பட்டது = 3.

போக மீதி - 96

## (5)

ஸ்மரனார்த்த - நியாயாதிஸ சபை - நியாயாதிஸ ராஜே ஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்பி நாம சம்வத்ஸரம் - ஆஷாட வத்ய 3 மங்கள் வாரம் - 1838 ஆங்கில ஆண்டு, ஜூலை தேதி 10 - சபாமஜ்கூரி விவகாரம் - 96 - நேற்று வரையில் பாக்கி, 0 - இன்று ஜமா[172] இதற்கு செலவு - வாதி ரங்கநாதபிள்ளை - பிரதிவாதி பெருமாள்பிள்ளை வகையறா ஆட்கள் 6

170. பிரகீர்ணகபதம் - பொதுச்சொத்துக்களை ஆக்கிரமித்தல் பற்றியது (பக்.170) (Encroachment)

171. புலிஹோன்னம் - இது ஒரு தங்கநாணயம். இதன் மதிப்பு 2 சக்கரம் 4 பணம் (பக்.155)

172. ஜமா - வரவு

இவர்களுக்கு ஸாஹாஸ பதத்தில் சேர்ந்த விவகார விஷயம் - வாதி புனர் நியாயத்திற்காக கொடுத்த மனு முழுவதும் முன்னால் விசாரிக்கப்பட்டதின் ஆதாரம்பார்த்து விசாரணை செய்த இடத்தில் பூக்குளத்தின் தெருவில் சேர்ந்த கோவில் சுத்தம் செய்யும் வேலைக்கு - நான் முக்கியமான பாத்யஸ்தர் ஆனதினால் பிரதிவாதி மேற்படி தெருவிலுள்ள குளத்தில் - மீன்பிடித்து ஜோராவரி செய்ததை விசாரணை செய்ய வேண்டுமென்று வாதி பிர்யாதி செய்ததற்கு மேற்சொன்ன தொடர்பு சிவாலாத்தில்[173] பிர்யாதி செய்து கொள் என்று - நியாய சபையிலுள்ளவர்கள் வாதியினுடைய பிர்யாதி அனாதேயம் செய்தது சரி என்றும் தர்மசபையிலுள்ளவர்கள் முடித்தது சரி என்றும் சபா மஜ்கூரிநிர்ணயம் ஆனது - 1, போகபீதி - 95.

## (6)

ஸ்மரனார்த்த - நியாயாதீஸ சபா - நியாயாதீஸ ராஜேஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்பி நாம சம்வத்ஸரம் - ஆஷாட வத்யம் 4, புதன்கிழமை - 1838 ஆங்கில ஆண்டு, ஜூலை 11க்கு சபாமஜ்கூரி விவகாரம், 95 - நேற்று வரையில் பாக்கி, 0 - இன்று ஜமா,

இதற்கு செலவு-வாதி நாலங்க அலி - பிரதிவாதி ரஸிப்பூ - இவர்களுக்கு பூமிவாத பதத்தில் சேர்ந்த விவகார விஷயம் பிரதிவாதி புனர்நியாயத்திற்காக கொடுத்த மனு முழுவதும் வந்ததை முன்னால் விசாரணையினுடைய ஆதாரம் பார்த்து சிந்தித்த இடத்தில் 10 சக்கரம் பொறுமானமுள்ள இடம் அதிலுள்ள மரங்கள் கொடிகள் கூட வரவேண்டுமென்று வாதியினால் செய்யப்பட்ட பிர்யாதி விசாரணை செய்து - மேற்படி இடம் முத்திரையுடைய காகிதத்தின் விலைரூபாய் 1/2 வாதிக்கு பிரதிவாதி தரவேண்டுமென்று முத்ரீத சபையிலும் மேலும் தர்ம சபையிலும் ஆன தீர்ப்பு சரிதான் என்று சபா மஜ்கூரியிலும் நிர்ணயம் ஆனது - 1, போகபீதி - 94.

## (7)

ஸ்மரனார்த்த - நியாயாதீஸ சபை - நியாயாதீஸ ராஜேஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்பி நாம சம்வத்ஸரம் - ஆஷாட வத்யம் 11 - மங்கள வாரம் - 1838 - ஆங்கில ஆண்டு ஜூலை தேதி 17 - சபா மஜ்கூரி விவகாரம் - , 94 - நேற்று வரையில் பாக்கி , 0 - இன்று ஜமா.

இதற்கு செலவு-

1 - வாதி ஞானசெட்டி - பிரதிவாதி கங்கை வகையறா - இவர்களுக்கு பிரகிர்ணக பதம் விவகாரம் விஷயம் - வாதியினால் கொடுக்கப்பட்ட புனர் நியாயம் மனு முழுவதும் வந்ததை முன்னால் விசாரணையின் ஆதாரம் பார்க்குமிடத்து - வாதி பிரதிவாதிமேல் ரொக்கம் 200 பொறுமானமுள்ள வீடுவகையறா ஆஸ்தி வரவேண்டுமென்று செய்த வழக்கிற்கு - வீட்டைத் தவிர ரொக்கம் 170 பொறுமானமுள்ள ஆஸ்தி பிரதிவாதி வாதிக்கு தரவேண்டுமென்று தர்ம சபையில் முடித்து அந்த விஷயம் பாக்கி ரொக்கம் 30 பொறுமானமுள்ள வீடு வரவேண்டுமென்று ஷிவாதியினுடைய தர்ம விண்ணப்பம்[174] பிர்யாதி செய்ததினால்

173. சிவாலாத்தில்-சிவாலயத்தில்(?)

174. தர்ம விண்ணப்பம் - முத்திரையில்லாத காகிதத்தில் கொடுத்த மனு

மேற்சொன்ன வாதிக்கு அந்தி இருப்பதாக தெரிய வருவதால் நிபந்தனைப்படி முப்பது நாட்களுக்கான கெடுவுக்குள் புனர்நியாயம் பிர்யாதி செய்தால் விசாரணையாகும் என்று வாதியினுடைய வீட்டிற்கு உத்தரவு பத்திரம் அனுப்பி மேற்சொன்ன தர்ம பெட்டிஷன் மனு அனாதேயம் செய்யப்பட்டது.

1 - வாதி குருசாமி செட்டி - பிரதிவாதி மாஹாலிங்க செட்டி - இவர்களுக்கு பூவிவத பதம் வழக்கு விஷயம் - பிரதிவாதியினால் கொடுக்கப்பட்ட முத்திரையுடைய மனுமுழுவதும் வந்ததை முன்னால் விசாரணையினுடைய ஆதாரம் பார்க்குமிடத்து வாதிக்கு பிரதிவாதியினால் சிம்ம ஒதுக்கப்பட்ட சாவடியைச் சேர்ந்த அரிசிக்காரனுடைய வீதியில் வடக்கு வரிசையில் குழந்தைசெட்டியினுடைய வீட்டிற்கு கிழக்கு தொண்ணூற்றாறு தோட்டத்திற்கு மேற்கு- மாஜி சர்கேல் ராஜே ஸ்ரீ குப்புசாமி மோஹிதே - இவருடைய தோட்டத்திற்கு தெற்கு - மேற்படி வீதிக்கு வடக்கு - இந்த நான்கெல்லையிலுள்ள கிழக்கு மேற்கு காலடி 21- தெற்கு வடக்கு காலடி 41 இதிலுள்ள 10 ரூபாய் பொறுமானமுள்ளவராண்டாவும்[175] சேர்ந்து உள்ள இடம் வாதிக்கு - பிரதிவாதி கொடுப்பது என்று தர்மசபையில் முடித்த பிறகு மேற்சொன்ன பிரதிவாதி அபரிதோஷம்[176] பார்த்து செய்த புனர் நியாயம் மனுவில் பிரதிவாதி - வாதியினால் இஷ்டப்படி செய்வதற்கு அபிப்பிராயம் தெரியவருகிறது. - அதற்கு - மேற்படி பிரதிவாதி மாதிரி இன்னும் சில பாக்யஸ்த மக்கள் இருப்பதை தெரிய வருவதால் மேற்சொன்ன பாகஸ்தர்கள் சேர்ந்து பிர்யாதி செய்து இஷ்டப்படி செய்வதற்கு அவதாரம் சம்பவித்தால் அப்பொழுது வாதிக்கு இஷ்டபடி செய் என்றுசொல்லுங்கள் - சாம்ப்ருத வாதி இஷ்டப்படி செய்வதற்கு காரணம் இல்லையாதலால் மேற்சொன்ன நான்கு எல்லையிலுள்ள 10 ரூபாய் பொறுமானமுள்ள அந்த வராண்டா சகிதம் மேற்படி இடம் - வாதிக்கு பிரதிவாதி விடுவது என்று முன்னால் சபையில் முடிக்கப்பட்டது அது சரிதான் என்று சபா மஜ்கூரி நிர்ணயம் ஆனது, = 2, போக மீதி - 92.

## (8)

ஸ்மரனார்த்த - நியாயாதிஸ சபை - நியாயாதிஸ-ராஜே ஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்ப நாம சம்வத்ஸரம் - ஆஷாட வத்ய, 12 புதன்கிழமை - 1838 ஆங்கில ஆண்டு - ஜுலை தேதி 18 சபா மஜ்கூரி விவகாரம்- 92 - நேற்று வரையில் பாக்கி
0-இன்று ஜமா,
இதற்கு செலவு
1 - வாதி ராமைய்யாவின் மனைவி பார்வதிபாயி - பிரதிவாதி சுப்ரமண்ணிநாயக் - இவர்களுக்கு பூவி வத பதத்தில் சேர்ந்த விவகார விஷயம் வாதியினால் கொடுக்கப்பட்ட மனு முழுவதும் முன்னால் சபையிலிருந்து வந்த ஆதாரம் பார்த்ததில் முத்ரீத சபையில் - வாதிக்கு பிரதிவாதி ரொக்கம் 15க்கு சமமான 210 குழி நிலம் விடவேண்டுமென்று நிர்ணயம் செய்ததற்கு - பிரதிவாதி புனர் நியாயம் பிர்யாதி செய்ததற்கு தர்மசபையில் மேற்படி பிரதிவாதி மேற்சொன்ன நிலம் தான் ஸ்வாதீனம் செய்து வாங்கவில்லை என்று எழுதிக் கொடுத்த கையெழுத்திலிருந்து - மேற்சொன்ன நிலம் வாதிக்கு பிரதிவாதி விடுவது தேவையில்லை

175. வாரண்டா-தாழ்வாரம் (Verandah)
176. அபரிதோஷம் (?)

என்றும் சென்ற ஆண்டு மே தேதி 3க்கு முடித்த பிறகு மேற்சொன்ன வாதி செய்த புனர் நியாயம் பிர்யாதிக்கு ஜூன் மாதம் தேதி 2க்கு முத்திரை யுடைய காகிதம் வாங்கியுள்ளான் - அது தினம் முப்பத்தி ஒன்றாக ஆகிறது.அதனால் நிபந்தனைப்படி முப்பது நாட்களுக்குரிய கெடு தாண்டிவிட்டபடியால் மேற்சொன்ன முத்திரையுடைய காகிதம் விற்பனை ஆகி உள்ளதால் - மேற்சொன்ன வாதியினால் கொடுக்கப்பட்ட புனர் நியாயமனு விசாரணை இல்லை என்று அனாதேயம் செய்யப்பட்டது.

1 - வாதி சதாசிவபிள்ளை - பிரதிவாதி வெங்கடசாமி நாயக் வகையறா - இவருக்கு பிரகீர்ணக பதத்தில் சேர்ந்த வழக்கிற்கு வாதி சதாசிவபிள்ளை என்பவன் பிரதம நியாயத்திற்காக கொடுத்த தர்மபெட்டிசன் ஆதார சகிதம் முத்ரீதசபாவில் பிரவேசம் ஆனது பற்றி விவகாரம்-2, போக மீதி -90

(9)

ஸ்மரனார்த்த - நியாயாதீஸ சபா - நியாயாதீஸ ராஜே ஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 - விளம்ப நாம சம்வத்ஸரம் - சிராவண சுத்த 4 [177] புதன்கிழமை - 1838 ஆங்கில ஆண்டு ஜூலை தேதி 25 - சபா மஜகூரி விவகாரம், 93 - நேற்று வரையில் பாக்கி, 5 - இன்று ஜமா, 3 - தர்மசபை பற்றி, 2- பெட்டியில் உள்ளதைப் பற்றி முத்திரையுடைய மனு. = 5, = 98

இதில் செலவு -

1 - வாதி வஸ்ராத்மாப் [178] சுந்தர்ஜி சங்காஜி சர்ஜேராவ் காட்கே - பிரதிவாதி கோவிந்தாச்சார்யரிடமிருந்து ரூபாய் 20 வாங்கித் தரவேண்டுமென்று கொடுத்த முத்திரையுடைய மனு மேற்சொன்ன வருடம் ஜூலை 22க்கு கார்பார் பிரசங்கத்திலிருந்து வந்தது - அந்த மனுவில் தெரிவிக்கப்பட்ட விஷயத்திற்கு பிர்யாதிகாரன் - தன்னுடைய வழக்கிற்கு சாதகமாக உள்ள ஆதாரம் வகையறா நிபந்தனை படி உடனே சபையில் தாக்கல் செய்து காத்திருந்து பிரதிவாதி தலைமறைவு ஆவதற்கு முன்னால் மேற்சொன்ன பிரதிவாதி தலைமறைவு ஆகிவிடுவான் போல் இருப்பதால் அவனை தடை செய்ய வேண்டுமென்று சபைக்கு சொல்லி - அவனுக்கு அது விருப்பப்பட்டதாக தெரிய வந்தால் உடனே மேற்படி பிர்யாதிகாரன் சர்க்காரில் தெரிவித்து என்னுடைய உகனுகி செய்துகொள்ள வேண்டும் - அப்படி செய்யாமல் இருந்தால் மேற்படி பிரதிவாதி தலைமறைவான பிறகு - அவன்மேல் செய்த பிர்யாதியினுடைய மனுவினுடைய விலை சபையிலிருந்து வாங்கித் தரவேண்டுமென்று கொடுத்த முத்திரையுடைய மனு தொடர்பு இல்லாமல் போனதினால் விசாரணை இல்லை என்று மேற்சொன்ன மனு அனாதேயம் செய்யப்பட்டது.

1 - ஜூலை தேதி 15க்கு பெட்டியில் வந்த முத்திரையுடைய மனுவில் வாதி இட்டப்ப நாயக் - பிரதிவாதி சுப்பநாயக் இவர்களுடைய க்ருணாதான பதத்தில் [179] வழக்கிற்கு வாதியினால் தனக்கு சாதகமான ஆதாரம் தர்மசபையிலுள்ளவர்கள் பார்த்து சபையில் தாக்கல் செய்யாமல் - பிரதிவாதியினால் நியமிக்கப்பட்டவரிடம்பொதுவாகவைத்திருப்பதால் அந்த

177. சிராவண சுத்த 4 - ஆவணி வளர்பிறைச் சதுர்த்தி

178. வஸ்ராத்மாப் - அரசகுடும்பத்தைச் சேர்ந்த பிரபு

179. க்ருணாதானபதம் - ரிணாதானபதம் - கடன் பாக்கி பற்றிய வழக்கு (பக்.170)

ஆதாரத்திலுள்ள விஷயம் தர்ம சபைக்கு விதத்தில் உள்ள (நகல்) தோம்யா தருவதற்கு முத்திரையுடைய கடிதத்தின் மேல் எழுதித் தருவதற்கு உத்தரவு ஆக வேண்டுமென்று தெரிவிக்கப்பட்டு இருப்பதால் மேற்சொன்ன ஆதாரம் சபையில் இல்லாமல் இருப்பது தெரிய வருவதால் மேற்சொன்ன ஆதாரம் பார்த்திருக்கிறார்கள் - அவர்களுக்கு பிர்யாதிகாரனுடைய பிரார்த்தனை முடிக்கும் விஷயத்தில் உத்தரவு செய்வதற்கு நியாயம் இல்லை என்று பிர்யாதி காரனுக்கு சொல்லி - மேற்சொன்ன மனு மேற்படியாரிடம் கொடுக்கப்பட்டது. 2., போக மீதி - 96.

## (10)

ஸ்மரனார்த்த - நியாயாதிஸ - நியாயாதிஸ சபை-ராஜே ஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 விளம்ப நாம சம்வத்ஸரம் - ஸ்ராவண சுத்த 5 - குருவாரம் 1838 ஆங்கில ஆண்டு - ஜுலை தேதி 26 - சபா மஜ்கூரி விவகாரம் - , 96 - நேற்று வரையில் பாக்கி, 0 - இன்று ஜமா

இதில் செலவு -

வாதி அண்ணா நாயிக்கினுடைய சகோதரன் வெங்கடாசலம் நாயக் - பிரதிவாதி அப்பாவு இவருக்கு க்ருணாதான பதத்தில் வழக்கு விஷயம் பிரதிவாதி கொடுத்த முத்திரையுடைய மனு முழுவதும் வந்ததை முன்னால் விசாரணையினுடைய ஆதாரம் பார்க்குமிடத்தில் முத்ரீத சபையில் வாதிக்கு பிரதிவாதி ரொக்கம் 7 1/2 , 3 3/4, 3 வீசம் தரவேண்டுமென்று இதன் நிமித்தம் திர்ப்பு செய்தார்கள் - அதற்கு பிரதிவாதி தர்மசபையில் புனர் நியாயம் செய்த பிறகு - விசாரணை காலத்தில் - மேற்சொன்ன அண்ணுநாயக் இறந்து விட்டபடியால் - அவனுக்கு பாத்யஸ்தர் சகோதரன் வெங்கடாசலம் நாயக் என்பவனுக்கு பிரதிவாதிக்கு அங்கிகாரம் செய்து விசாரணை செய்யவேண்டும் என்று - மேற்படி பிரதிவாதி மனு கொடுத்ததிலிருந்து மேற்சொன்ன வெங்கடாசல நாயக்கிற்கு விசாரித்ததற்கு - நான் அத்தைக்கு தத்து ஆனதால் முன்னால் சொல்லப்பட்ட அண்ணுநாயக்கிற்கு நான் பாத்யஸ்தன் இல்லை என்று சொன்னதிலிருந்து - அதன்படி மேற்சொன்ன வெங்கடாசலம் நாயக் என்பவன் விளக்குகள் செய்து கொடுத்தால் அதன் மேல் நான் கொடுத்த புனர் நியாயம் வழக்கு தேவையில்லை என்று பிரதிவாதி கையெழுத்து எழுதிக் கொடுத்ததனால் - முன்னால் சொல்லப்பட்ட வெங்கடாசலம் நாயக் விளக்கு செய்து தருகிறேன்என்று சம்மந்தம் ஆனதினால்,மேற்படி பிரதிவாதி மேற்சொன்ன விளக்குப்படி ஒப்புக் கொள்ளாமல் பிடிவாதம் பிடித்தினால் மேற்படியாரின் வீட்டிற்கு அனுப்பின உத்தரவுப் பத்திரப்படி நடக்கவில்லையாதலால் மேற்படி வெங்கடாசல நாயக்கிற்கு மேற்சொன்ன வழக்கில் சம்மந்தம் இல்லை என்று மேற்படி சபையில் உள்ளவர்கள் திர்ப்பு செய்த விஷயத்தில் - மேற்சொன்ன பிரதிவாதி சபாமஜ்கூரி புனர்நியாயம் செய்தபிறகு ஆதாரம் பார்க்கும்பொழுது முன்னால் சபையில் கொடுத்த மனுவில் மேற்சொன்ன வெங்கடசாலம் நாய்க்கினால் செய்ய வேண்டியபடி ஒத்துக் கொள்ளும் விஷயம் அங்கிகரித்து சபையினுடைய வழக்கத்திற்கு விரோதமாக விளக்கு அணைக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டு இருந்ததனால் - சபையினுடைய வழக்கத்திற்கு மாறாகச் சத்தியம் செய் என்று சொல்லக்கூடாது - என்று - மேற்படி பிரதிவாதிக்கு சொன்னதினால் வழக்கப்படி சத்தியம் செய்தால் போதும் என்று பிரதிவாதி சம்மந்தம் ஆனதினால் - மேற்சொன்ன வெங்கடாசலம் நாயக் வழக்கப்படி விளக்கு செய்து கொடுப்பதற்கு சம்மதமாகி சத்தியம் செய்து கொடுத்தான் என்று - மேற்சொன்ன பிரதி கையெழுத்து எழுதிக் கொடுத்தனால் இந்த வழக்குற்கு வெங்கடாசலம் நாயக் பாத்யஸ்தர்

இல்லை என்று முன்னால் சபையிலுள்ளவர்கள் செய்த திர்ப்பு சரிதான் என்று சபா மஜ்கூரி நிர்ணயம் செய்யப்பட்டது- 1, போக மீதி - 95

## (11)

ஸ்மரனார்த்த - நியாயாதிஸ - நியாயாதிஸ சபை - ராஜே ஸ்ரீ ஹிரோஜி காலேராவ் - சாலிவாகன சகே 1760 விளம்ப நாம சம்வத்ஸரம் - சிராவண சுத்த 6 சுக்ரவாரம் 1838 ஆங்கில ஆண்டு - ஜூலை தேதி 27 - சபா மஜ்கூரி[180] விவகாரம்-, 95 நேற்று வரையில் பாக்கி, 0-இன்று ஜமா,

இதில் செலவு -

வாதி கேசவ நாயக் - பிரதிவாதி ராமன் - இவர்களுக்கு ஸ்தேய பதம் வழக்கு விஷயம் -பிரதிவாதி கொடுத்த மனு முழுவதும்(ஸரிஸா) வந்ததை முன்னால் விசாரணையின் ஆதாரம் பார்க்குமிடத்து - நியாயசபையில் - வாதி 6 1/2, ரூபாய் பொறுமானமுள்ள கேம்ரி ரூமால் வகையறா சாமான் திருடின விஷயம் செய்த பிர்யாதிக்கு - பிரதிவாதி வாதியினுடைய அண்ணனால் எனக்கு மேற்படி பொருள் இரவல் கொடுத்திருக்கிறான் - அதை ருஜூ செய்து வைக்கிறேன், அப்படி வைக்காமல் போனால் வாதியினுடைய தரப்புபடி தருகிறேன் என்று கையெழுத்து எழுதி கொடுத்து அதன்படி மேற்படி பிரதிவாதி ருஜூ செய்து வைக்காமல் போனதினால் - மேற்சொன்ன பொருள் வாதிக்குக் கொடுத்ததுமல்லாமல் - பிரதிவாதிக்கு ஒருமாதம் காவலில் (பார்யாந்த) வைத்து 12 அடிகள் அடித்து விடுவது என்று தீர்ப்பு செய்தது சரிதான் என்று தர்ம சபையிலுள்ளவர்கள் பிரதிவாதிக்கு இரண்டு பங்கு தண்டனை வீதம் செய்த பிறகு - பிரதிவாதி சபா மஜ்கூரி புனர் நியாயத்திற்கு வந்த பொழுது மேற்படி வாதியினுடைய அண்ணனிடமிருந்து பிரதிவாதிக்கு ரூமால் தரவில்லை என்று பிரதிவாதி சொன்னால் தெய்வ சந்நிதானத்தில் சத்தியம் செய்து தருகிறேன் என்று கையெழுத்து எழுதிக் கொடுத்தபடி பிரதிவாதி சத்தியம் ஒப்புக்கொள்ளாமல் இருந்ததனால் முன்னால் - சபையில் முடித்தது அது சரிதான் என்று வாதிக்கு பிரதிவாதி 6 1/2 ரூபாய் பொறுமானமுள்ள அந்த பொருள் கொடுத்ததும் அல்லாமல் - நான்கு மாதங்கள் காவலில்வைத்து 48 அடி அடித்து விடுவது என்று நிர்ணயம் ஆகி உள்ளது. - 1

போக மீதி - 94.

---

180. சபாமஜ்கூரி - நான்கு சபைகளின் தீர்ப்பை எதிர்த்து மேல்முறையீடு செய்வதற்குரிய மன்றம் (பக்.185)

# தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதி - 3

## Bundle No. 2C,Sub-Bundle No. 1

### (1)

ஸ்மரனார்த்த[1]-முத்ரீத சபா அத்யட்சர்[2] கோவிந்தாச்சார்யர் சாலிவாகன சகே 1761 விகாரி[3] நாம சம்வத்ஸரம் பால்குண சுத்த 15[4] புதன்கிழமை ஓ சன் 1840[5] ஆங்கில ஆண்டு மார்ச் மீ 18.

142 வழக்கு-கத சம்வத்ஸரம்[6] ஆஷாட சுத்தம் 11[7] வரையில் பாக்கியில் உள்ள பாக்கி. 141 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 142, 268 - மனு, 268 - காலைவரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 490, விவரம்: 242 - வழக்குகள், 241 - முதல் வழக்கு, 1 - இரண்டாவது வழக்கு = 242, 268 - மனு = 410, இதில் செலவு போக மீதி 410. விவரம்: 142 - வழக்குகள், 141 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 142, 268 - மனு = 410.

கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 12[8] விருந்து, ஜமா, 299 - முதல் வழக்குகள், 299 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை, 88 - மனு, 88 - காலைவரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 397

விவரம்: 299 - முதல் வழக்குகள், 88 - மனு = 397. இதில் - 0 - செலவு: போக பாக்கி 397

விவரம்: 299 - முதல் வழக்குகள், 88 - மனு, பால்குண சுத்த 15க்கு ஆக மொத்தம் 2க்கு பாக்கி 797, விவரம்: 441 - வழக்குகள் 440 - முதல்வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 441, 356 - மனு = 797.

---

1 ஸ்மரனார்த்த - நினைவுக்குறிப்பு

2 முத்ரித சபா - தஞ்சையிலிருந்த நான்கு நீதி மன்றங்களுள் ஒன்று; பெரும்பாலான வழக்குகள் இதில்தான் முதன்முதலில் அனுமதிக்கப்பெறும்; இதில் சிறிய வழக்குகள் விசாரிக்கப்பெறும். (பக்கம் 168-169); அத்யக்ஷர் - தலைவர்; நியாயாதிபதி.

3 சகம் 1761 (+78) - கி.பி.1839; விகாரி - ஆண்டறுபதனுள் 33 ஆவது

4 பால்குண - பங்குனி; சுத்த - வளர்பிறை; 15 - நிறைமதி நாள்

5 சன் - வருஷம்; ஆண்டு. பங்குனிமாதம் ஆகலின் 1840 ஆயிற்று.

6 கத சம்வத்ஸரம் - கடந்த ஆண்டு

7 ஆஷாட - ஆடி; சுத்த - வளர்பிறை; 11- ஏகாதசி

8 12-துவாதசி

## (2)

ஸ்மரனார்த்த - முத்ரீத சபை அத்யட்சர் கோவிந்தாச்சார்யர் சாலிவாகன சகே 1761 விகாரி நாம சம்வத்ஸரம் பால்குணம் வத்ய 1[9] வியாழக்கிழமை ஞு 1840 ஆங்கில ஆண்டு மார்ச் மீ 19.

142 - வழக்கு கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 11ந் உ பாக்கிபோக பாக்கி, 141 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 142, 268 - மனு, 268 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 410

விவரம்: 142 - வழக்குகள், 141 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 142, 268 - மனு = 410, ஆக மனு செலவு நம்பர் 613

.....................பால கிருஷ்ண என்பவரின் மனைவி.................. உ 16 சதிக கையீர் முத்திரையுடைய மனு சபையில் விசாரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. அது கத சம்வத்ஸரம் நம்பர் 515ல் நியாயத்திற்காக தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது

போக பாக்கி, 409, விவரம்: 142 - வழக்குகள், 141 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 142, 267 - மனு = 409, கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 12 பால்குணம். 299 - முதல் நியாயங்கள் 299 - காலைவரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 88 - மனு, 88 - காலைவரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை, பால்குணம் வத்யம் 1 குருவாரம் = 387, விவரம்: 299 - முதல் வழக்குகள், 88 - மனு = 387, இதில் செலவு 0, போக மீதி387, விவரம்: 299 - முதல் வழக்குகள், 88 - மனு = 387, ஆக மொத்தம் 2க்கு பாக்கி 796, விவரம்: 441 - வழக்குகள், 440 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 441, 355 - மனு = 796

## (3)

ஸ்மரனார்த்த - முத்ரீத சபை அத்யட்சர் கோவிந்தாச்சார்யர் சாலிவாகன சகே 1761 விகாரி நாம சம்வத்ஸரம் பால்குண வத்ய 2 வெள்ளிக்கிழமை ஞு 1840 ஆங்கில ஆண்டு மார்ச் 20ந்உ

142 - வழக்கு கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 11உ, பாக்கியில் பாக்கி, 141 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 142, 267 - மனு, 267 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 409, விவரம்: 142 - வழக்குகள், 141 - முதல் வழக்குகள், 1 - மறுபடியும் வழக்கு = 142, 267 - மனு = 409, இதில் - செலவு

முதல் வழக்கு

1. நம்பர் 464-ஹேவிலம்பி[10] சம்வத்ஸரம் வாதி லெக்ஷிமிபதிநாடி நாயக் மறுபெயர் நாராயண சாமி நாயக் வகையறா இவர்களுக்காக தாக்கல் ஆன விஷயம்மேற்சொன்ன நாயக்கரின் மகன்

---

9 பால்குணவத்ய 1 - பங்குனி தேய்பிறைப் பிரதமை

10 ஹேவிளம்பி - ஆண்டறுபதில் 31 ஆவது

சுப்பையன் என்பவன் சபையில் ஆஜராகி வாதி அனாதி ஆனது என்று தெரிந்ததால் மேற்சொன்ன வழக்கு அனாதயம் செய்யப்பட்டது.

1. நம்பர் 522-கத சம்வத்ஸரம் வாதி நாடி நாயக் மறுபெயர் நாராயணநாயக், நிர்வாகஸ்தர் லெக்ஷ்மி என்பவரிடம், பிரதிவாதி வசுதானவராக இருப்பதால், வாதியினுடைய பேரன் சுப்பநாயக் என்பவன் சபையில் ஆஜர் ஆகும்படி தெரிவிக்கப்பட்டதால் வழக்கு அனாதயம் செய்யப்பட்டது = 2

பால்குண வத்ய 2 வெள்ளிக்கிழமை

3. மனு—வாதி சபைக்கு வராமல் இருந்ததால் அவருடைய வீட்டிற்கு உத்திரவு அனுப்பியும் வரவில்லையாதலால் முத்திரையின் மனு அனாதயம் செய்யப்பட்டது.

1. நம்பர் 88 - நந்தன[11] சம்வத்ஸரம் வாதி அப்பண்ணாச்சார்யர் பிரதிவாதி வெங்காஜி பாபாஜி இவருக்கு மாற்றப்பட்டது.

1. நம்பர் 314-நந்தன சம்வத்ஸரம் வாதி வெங்கடசாமிநாயக் பிரதிவாதி சுப்பராய பந்த் இவருக்கு மாற்றப்பட்டது.

1. நம்பர் 201-விஜய[12] சம்வத்ஸரம் வாதி சைது இஸ்மாயில் பிரதிவாதி ரோசன்பீ இவருக்கு வயது 39 மாற்றப்பட்டது = 3 = 5

விவரம்: 2 - முதல் வழக்கு அனாதயம்[13], 3 - மனு அனாதயம் = 5, பால்குண வத்ய 2, விவரம்: 300 - முதல் வழக்குகள், 88 - மனு = 388, ஆக மொத்தம் 2க்கு பாக்கி, 792, விவரம்: 440 - வழக்குகள், 439 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 440, 352 - மனு = 792

## (4)

ஸ்மரனார்த்த - முத்ரீத சபை அத்யட்சர் கோவிந்தாச்சார்யர் சாலிவாகன சகே 1761 விகாரி நாம சம்வத்ஸரம் பால்குண வத்ய 3 சனிக்கிழமை ஞ 1840 ஆங்கில ஆண்டு மார்ச் மீ 21ந்வ

140 - வழக்கு கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 11ந்வ, பாக்கியில் பாக்கி, 139 - முதல் வழக்குகள், 1 - மறுப்படியும் வழக்கு = 140

264 - மனு, 264 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 404, இதற்கு விவரம்: 140 - வழக்குகள், 139 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 140, 264 - மனு = 404.

இதில் முதல் வழக்கு - செலவு

---

11 நந்தன - ஆண்டறுபதில் 26ஆவது

12 விஜய - ஆண்டறுபதில் 27ஆவது

13 அனாதயம் - தள்ளுபடி

நம்பர் 916-வய[14] சம்வத்ஸரம் வாதி கோண்டனா பிரதிவாதி கோவிந்தன் இவர்களுக்கு விதிப்படி சொல்லியும் சபைக்கு வராமல் இருந்ததனால் வீட்டிற்கு நிபந்தனை போடப்பட்டும் சபைக்கு வரவில்லை. அதனால் மேற்சொன்னவருடைய வழக்கு அனாதயம் செய்யப்பட்டது.

1, போக மீதி, 403, விவரம்: 139 - வழக்கு, 138-முதல் வழக்கு 1 - மறுபடியும் வழக்கு = 139, 264 - மனு = 403, கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 12ந்வ, 300 - முதல் வழக்குகள், 300 - காலைவரையில் பாக்கி, 0 - மறுபடியும் இல்லை, 88 - மனு, 88 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 388, பால்குண வத்ய 3க்கு இதற்கு விவரம்: 300 - முதல் வழக்குகள், 88 - மனு = 388, இதில் - 0 - செலவு, போக மீதி, 388, விவரம்: 300 - முதல் வழக்கு, 88 - மனு = 388, ஆக மொத்தம் 2க்கு பாக்கி 791, விவரம்: 439 - வழக்கு, 438 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 439, 352 - மனு = 791

## (5)

ஸ்மரனார்த்த - முத்ரீத சபை அத்யட்சர் கோவிந்தாச்சார்யர் சாலிவாகன சகே 1761 விகாரி நாம சம்வத்ஸரம் பால்குண வத்ய 4 ஞாயிற்றுக்கிழமை ஷ 1840 ஆங்கில ஆண்டு மார்ச் 22ந்வ

139 - வழக்கு கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 11ந்வ, பாக்கியில் பாக்கி, 138 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 139, 264 - மனு, 264 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை = 403, விவரம்: 139 - வழக்குகள், 138 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 139, 264 - மனு = 403

இதில் மனு - செலவு

4. வாதி மனு கொடுத்த நாளிலிருந்து இதுவரையில் சபைக்கு வராததனால் அவருடைய மேற்சொன்ன முத்ரையினுடைய மனு அனாதயம் செய்யப்பட்டது.

1. நம்பர் 91-மன்மத[15] சம்வத்ஸரம் வாதி கமலாயி பிரதிகுத்தப் பெருமா இவருக்கு மாற்றப்பட்டது.

1. நம்பர் 228-மன்மத சம்வத்ஸரம் வாதி சுப்பம்மா பிரதி பட்டாபிராம செட்டி இவருக்கு மாற்றப்பட்டது.

1. நம்பர் 257-மன்மத சம்வத்ஸரம் வாதி அய்யாசாமி பிரதி விஸ்வேஸராவ் கணேசராவ் இவருக்கு மாற்றப்பட்டது.

1. நம்பர் 373-மன்மத சம்வத்ஸரம் வாதி அப்பாவு பண்டாரம் பிரதி ஆறுமுக பண்டாரம் இவருக்கு மாற்றப்பட்டது = 4

1 நம்பர் 216-மன்மத சம்வத்ஸரம்
பால்குண வத்ய 4

---

14 வய (விய) - ஆண்டறுபதினுள் 20ஆவது

15 மன்மத - ஆண்டறுபதனுள் 29 ஆவது

வாதி சுப்பம்மாள் பிரதி சாமினாதன் இவருக்கு மாற்றப்பட்ட விஷயம், தீர்ப்பான தீர்ப்பின் காபி[16] தனக்கு வேண்டுமென்று மனு கொடுக்கப்பட்டதால் ஷெ மனுவில் உள்ளபடி தீர்ப்பின் நகல் எழுதிக் கொடுக்கப்பட்டதால் இந்த மனு அனாதயம் செய்யப்பட்டது.

1. நம்பர் 27–மன்மத சம்வத்ஸரம் வாதி ராமன் செட்டி பிரதி மருதமுத்து ஹவல்தார்[17] இவருக்கு நியாய சபையில் ஆன தீர்ப்பின் காபி தனக்கு வேண்டுமென்று வாதி கொடுத்த மனுவில் உள்ளபடி ஷெ மனு அனாதயம் செய்யப்படுகிறது.

1. நம்பர் 453–கத சம்வத்ஸரம் வாதி வீரராமச்சந்திரராவ், சிவனி காட்கே பட்டுக்கோட்டை கில்லேதார்[18] பிரதி ஏகநாத அப்பாஜி 39க்கு சங்கதி விஷயம் ஆன தீர்ப்பு நகல் தனக்கு தரப்பட வேண்டும் என்று மனு கொடுக்கப்பட்டதால் இந்த மனு அனாதயம் செய்யப்பட்டது.

போக மீதி, 396, விவரம்: 139 - வழக்குகள், 138 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 139, 257 - மனு = 396, கத சம்வத்ஸரம் ஆஷாட சுத்த 12ந்வ ஜமா. 300 - முதல் வழக்கு, 138 - காலை வரையில் பாக்கி, 0 - மேற்கொண்டு இல்லை. பால்குண வத்ய 4க்கு, 89 - மனு, 88 - காலைவரையில் பாக்கி, 1 - மேற்கொண்டு 2 கோட்டைவரையிலுள்ள மேரே முத்திரை = 89 = 389, 300 - முதல் வழக்குகள், 89 - மனு = 389, இதில் 0 செலவு, விவரம்: 300 முதல் வழக்கு, 89 - மனு = 389, ஆக மொத்தம் 2க்கு பாக்கி 785, விவரம்: 439 - வழக்குகள், 438 - முதல் வழக்கு, 1 - மறுபடியும் வழக்கு = 439, 346 - மனு = 785

## (6)

சதாசிவ சால்கே என்பவர் வேலை செய்யும் போது நடுவில் ஓடி விட்டதால், அந்த விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்த மக்களை விசாரணை செய்த விஷயம்.

ராஜேஸ்ரீ மஹாராஜ சாகேப் இவர்களுடைய பாலநிதி பட்டுகதம்ப பால விசாரக ப்ரவர பாலகிருஷ்ண செட்டி வஸ்தாது[19] சாலிவாகன சகே 1756[20] ஜய[21] நாம சம்வத்ஸரம் -

சிவகோட்டை, கோட்டைசுவர் வைத்துக் கொண்டிருந்த ஆட்களில் சதாசிவ சால்கே என்பவர் - அதிலிருந்து விடுபட்டு ஓடிவிட்டார் - அதில் அஜாக்ரதையாக இருந்த ஆட்களைப் பற்றி விசாரணை செய்து தெரிவிக்க வேண்டுமென்று பாலநிதி விசாரக ப்ரவர சேனாதிபதி ப்ரவர ராஜேஸ்ரீ கிருஷ்ணாஜி கேசவ பண்டிட்[22] - இவர்கள் கடிதம் மூலம் உத்தரவு போட்டபடி - மேற்சொன்ன சுவர் எழுப்பிக் கொண்டிருந்த ஆட்களை கூப்பிட்டு விசாரணை செய்த பொழுது - அதில் வேலை செய்த பாபாநாயக், நன்னிப்ப நாயக் - இவர்கள் எழுதிக்கொடுத்த

---

16 காபி - படி (Copy)

17 ஹவில்தார் - பட்டாளத்துப் பதவிகளுள் ஒன்று

18 கில்லேதார் - கோட்டைகாவலன்

19 செட்டி - ஜெட்டி ; வஸ்தாது-மற்போர் வல்லவர்

20 சகம் 1756 (+78) = கி.பி.1834

21 ஜய - ஆண்டறுபதனுள் 28ஆவது

22 கிருஷ்ணாஜி கேசவபண்டிட் (பக்கம் 83)

வாக்குமூலத்தில், மேற்சொன்ன நபர் ஓடிப்போனபோது அவர்கள் ஆஜராகவில்லை என்றும், அது அவர்கள் மேல் குற்றம் என்றும் ஒப்புக்கொண்டார்கள். உதாஜிபோவார் - எழுதிக் கொடுத்த வாக்குமூலம் - கணபதி வைத்யர் என்பவர் மேற்சொன்ன நபரை அழைத்துக் கொண்டு செல்வதாகக் கூறினார். அதற்கு பால பிரமுகரிடம் சொல்லும்படிக் கூறினேன். பிறகு வைத்யர் சென்று விட்டார், நானும் கிளம்பி விட்டேன். அதன் பிறகு நடந்த விவரம் எனக்குத் தெரியாது. விங்காஜி துமால் - எழுதிக் கொடுத்த வாக்கு மூலம் - மேற்சொன்ன நபரை கூப்பிட்டு வரும்படி சொன்னதற்கு வைத்தியரிடம் சொல்லும்படிக் கூறினான். அந்த வைத்தியர் கிருஷ்ணாஜியப்பாவிடம் சொல்லும்படிக் கூறினான். அதன்படி அழைத்துக் கொண்டு செல்லும்போது, அவன் கத்தியை எடுத்து என்னிடம் நெருங்கினான். நான் ஒதுங்கும் சமயம் பார்த்து ஓடிவிட்டான். அந்த விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்தது என்மேல் தவறு - சஞ்சீவநாயக எழுதிக்கொடுத்த வாக்குமூலம் - நான் அடுத்த வரிசையில் இருந்ததனால், மானாஜி சால்கே என்பவரை மேற்சொன்ன நபருடன் போகும்படி நியமித்தேன். ஆனால் அவர், அவனுடைய அப்பா ஆனதால், விங்காஜி துபால் என்பவரை அழைத்தார் - நின்று கொண்டிருந்தார் - உடனே மேற்சொன்ன நபர் கீழே கிடந்த கத்தியை எடுத்துக் கொண்டு சென்றுவிட்டார். இந்த விஷயத்தில் (அ)ஜாக்ரதையாக இருந்தது - தன்மேல் தவறு என்றுகூறுகிறார்.

சைனிக்கு பிகாஜி காட்கே - 1, குப்புநாயக் வல்லப நாயக் - 1, வெங்கடாசல நாயக் பெருமாள் நாயக் - 1 பரிமண நாயக் காத்த பெருமாள் நாயக் - 1 - கோவிந்தன் பதில் வீரப்ப நாயக் - 1 - நல்லப்ப நாயக் பதில் வீராராகு நாயக் - 1 - காமாட்சி நாயக் பதில் பால நாயக் - 1 மஹாதேவ நாயக் பதில் ஹாசாஜி ஜகதாப் - 1 அப்பாசாமி பதில் அப்பாவு நாயக் 1 - ஆக 9 ஆட்கள் நாங்கள் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது, விம்பாஜி துமாலே என்பவர், எங்களை, அந்த ஆளைப் பிடிப்பதற்கு தயாராக இருக்கும்படிக் கூறினார்கள் - அப்படி நாங்கள் தயாராக இருக்கும்பொழுது மேற்சொன்ன நபர் அங்கு கிடந்த கத்தியை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான் - நாங்கள் பின்னால் ஓடிச்சென்றோம். ஆனாலும் பிடிக்க முடியவில்லை - அது எங்கள் மேல் தப்பு என்று எழுதிக் கொடுத்து இருக்கிறார்கள். மானாஜி சால்கே என்பவர், மேற்சொன்ன நபரின் தந்தை ஆனதால், அவனைப் பிடிக்க முடியவில்லை என்று எழுதிக் கொடுத்தார்.

ஆறுமுக நாயக் என்பவர், அவருடைய சக ஊழியர் உதாஜி போவார் என்பவரிடம் சதாசிவ சால்கே என்பவரை, வைத்யர் கணபதி என்பவர் கூப்பிடுகிறார்; அதற்கு பாலபிரமுகரிடம் உத்தரவு பெற்று அனுப்பும்படி கூறினேன். கணபதி வைத்யர் என்பவர் முன்னால் ஒரு தடவை வந்து சென்றார். இரண்டாவது தடவை தாங்கள் அனுப்ப வேண்டாம் என்று சொல்லியிருந்தும், நான் இந்த விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்தது என்மேல் தப்பு என்று எழுதியுள்ளார். வைத்யர் கணபதி என்பவர், மேற்சொன்ன நபர் இரண்டு நாட்களுக்கு முன்னால் என்னிடம் வயிற்றை வலிப்பதாகக் கூறினார். அதனால் நான் அவரை வெளியே அழைத்துச் சென்றேன். பெரிய அதிகாரியிடம் கூறாமல் சென்றது என் தப்பு என்று எழுதியுள்ளார். மேற்சொன்ன விவரங்களைப் படித்துப்பார்க்குமிடத்தில்- மானாஜி சால்கே என்பவர், அந்த நபரின் தந்தை ஆனதாலும், அவருடன் செல்லவில்லை ஆதலாலும் அவர் தண்டனை அடையவில்லை. உதாஜி போவார் என்பவர், அவரிடம் இருந்த வேலையை ஆறுமுகம் என்பவரிடம் ஒப்படைத்ததால் அவரும் தண்டனை அடையவில்லை. கணபதி

வைத்யர் என்பவர் அடுத்த இலாகாவில் வேலை பார்ப்பவர் ஆதலால், அவரிடமிருந்து ரூபாய் 12 அபராதம் விதிக்கும்படியும் பாவா நாயக் நஞ்சப்ப நாயக் என்பவர் எப்பொழுதும் ஆஜராய் இருக்கவேண்டியது. அப்படி அவர்கள் இல்லையாதலால் அவர்களிடமிருந்து ரூ.6/- அபராதம் விதிக்கும் படியும்- ஆறுமுகம் என்பவர், கணபதி வைத்யர் என்பவர் இரண்டாவது முறை வந்ததை, அதிகாரியிடம் சொல்லாமல் இருந்ததற்காக, அவரை நிற்க வைத்து முட்டிக்காவின் கீழ் 12 அடிகள் அடித்து, சைனியத்தில் வேலை செய்யும்படியும்- விம்பாஜி துமாலே என்பவர், ஒருதடவை வைத்தியரை உஷார்படுத்தியும், மேற்சொன்ன ஆளை அவருடன் அனுப்பியும், ஆட்கள் தயாராக வைத்துக்கொண்டு பிடிக்காமல் விட்டதற்காகவும், அவரை மூன்று கால்களை உடைய கம்பத்தை நிற்க வைத்து, அதில் அவரை கட்டிப்போட்டு, அவருடைய முதுகில் 24 அடிகள் அடித்து, சட்டையைத் திருப்பிப் போட்டு, நிபந்தனைப்படி அவரை வெளியில் அனுப்புவதுஎன்றும், சஞ்சிவி நாயக் என்பவர் - மேற்சொன்ன ஆளுடன் மானாஜி சால்கே என்பவரை அனுப்ப வேண்டாமென்றும், அவர் அவனுடைய தந்தை ஆனதாலும், இவரையே கவனிக்கும் படியும், மேலும் ஆட்களை தயாராக வைத்துக்கொண்டிருந்தும் கூட, அந்த ஆள் கத்தியை எடுத்துக் கொண்டு ஓடிய விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்ததனால், அவரை நிற்க வைத்து, முட்டிக்கு கீழ் மூங்கிலினால்[23] 12 அடிகள் அடித்து, சைனியத்தில் தாக்கல் செய்து வேலை வாங்குவது என்றும், மேற்சொன்ன ஆளைப் பிடிப்பதற்கு, அஜாக்ரதையாக இருந்த பதில் ஆட்களுக்கு, தவறுக்காக சைனியத்தில் - ஆசாமி - பிகாஜி காட்கே - 1 - குப்புநாயக் வல்லப நாயக் - 1 - வெங்கடாசல நாயக் பெருமாள் நாயக் - 1 - பரிமண நாயக் காத்த பெருமாள் நாயக் 1 - ஆக ஆசாமிகள் 4 ஆட்கள் தவிர, பதில் ஆட்கள் - ஜகதாப் - 1 ஆக 5 ஆட்களையும் ஸ்தலத்தில் நிற்க வைத்து அவர்களுடைய முட்டிக்குக் கீழ் மூங்கிலினால் 12 அடிகள் அடித்து வழக்கப்படி வேலை வாங்குவது என்றும், மேற்சொன்னவரின் பதில் ஆட்கள் வீரப்பநாயக் - 1 வீரராகு நாயக் - 1, பாலநாயக் 1, அப்பாவு நாயக் - 1 இவர்கள் நால்வரையும் ஸ்தலத்தில் நிற்கவைத்து, ஒவ்வொரு ஆட்களின் முட்டிக்குக் கீழ் மூங்கிலினால் ஆறு அடிகள் அடித்து பதிலிலிருந்து[24] விடுதலை செய்வது என்றும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

## Bundle No.2C,Sub Bundle No. 21

## (2)

தீர்த்தரூப[25] சமான ராஜமான்ய[26] ஹஜரத்[27] மசேரூல் மஜம்தார்[28] பாபாஜி ராமாஜி பண்டிட்

---

23 மூங்கிலினால் - பிரம்பால்

24 பதிலிலிருந்து - ஒருவருக்குப் பதிலாக வேலை செய்வதிலிருந்து

25 தீர்த்த ரூபன் - பரிசுத்தனாகிய கடவுள்

26 ராஜமான்ய - அரசரால் மான்யம் தரப்பெற்ற (?) அரசத்தன்மை பொருந்திய

27 ஹஜரத் - சிறந்தவர் (பிரபு)

28 மஜம்தார் - பெரிய அலுவலர்

ஸ்வாமி[29] சரணம் சேவேசி[30] பாலக நயன ஜோதி காதர்கான் மூன்று காலமும் சாம்ப்ரத[31] தண்டனிட்டு எழுதிக் கொடுத்த விண்ணப்பம் - என்னவென்றால் - நிஜ அஸ்விஜம் வத்ய[32] பஞ்சமி, சுக்ரவாரம்[33] பெரியவர்களின் ஆசீர்வாதத்தால் குழந்தைகள் எல்லோரும் நலமென இந்தக் கடிதத்தின் மூலம் தெரியப்படுத்துகிறேன்.

இதன் பிறகு பாதச்சாரி[34] மாரிமுத்து என்பவர் வாழைத் தோட்டத்தைக் குத்தகை எடுத்துக்கொண்டு சீட்டு எழுதிக் கொடுத்து சம்பளம் தருவதாகக் கூறினான். ஆனால் தரவில்லை. பொய்சொன்னதற்காக நியாயசபைக்கு[35] பிராது கொடுத்ததனால், சபையிலுள்ளவர்கள் நியாயம் விசாரணை செய்து கடிதம் பார்த்து, அதிலிருந்த சாட்சி 4 பேரில் 2 பேர்தான் ஆஜராகி இருந்தார்கள். இசுமியாதமணியின் மைத்துனன் சைத்அப்தூல் ரஹ்மான், அண்ணா ஹவல்தார் - இவர்கள் இருவரையும் கூப்பிட்டு சபையின் கட்டளைப்படி சாட்சி விசாரணை செய்து அந்தக் கடிதப்படி உண்மை என்று சொல்லப்பட்டது. அதன்பிறகு மாரிமுத்து என்பவன் என்னையும் சாட்சி சொன்னவர்களையும் கீழ்த்தனமாக பேசினான். என்னிடம் கையில் ஏதும் ஆயுதம் இல்லை. இருந்தால் உன்னைக் கொன்றிருப்பேன். நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகவேண்டும் என்று சொன்னான். ஷெ சொன்னவரின் மகன் முத்துச்சாமியும் சேர்ந்து பேசினான். நான் சர்க்காரின் குழந்தை ஆனதால், இந்த மான அவமானம் ராஜேஸ்ரீ மஹாராஜ் சத்ரபதி அவர்களுக்குத்தான். எனக்கு ஒன்றுமில்லை. தங்கள் இந்த குழந்தைமீது கருணை வைத்து இதற்கு என்ன உத்தரவு வழங்க வேண்டுமோ அதன்படிச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

## 2-21-3

பாவ விசாரக பிரவர பாலகிருஷ்ண ஜெட்டி வஸ்தாது இவர்களுக்கு விவஸ்தித பிரவிணஜன பிரம்ம, பிரம்ம சைனிக் தாகட்டே கோட் என்பவர் சர்க்காரின் ஆணைப்படி நாய்கள் அடிப்பதற்காக போன இடத்தில் தம்பு நாயக் என்பவன், ஷெ பிரம்ம சைனிக்கின் கழுத்தில் துணியைப் போட்டு, இழுத்து அடித்தான் என்று, ஷெ ஆள் சைனிக் என்னிடம் வந்து கூறினான். சர்க்கார் உத்தரவுப்படிப் போனஇடத்தில் இப்படி துஷ்டத்தனமாக அடித்ததை

---

29 பாபாஜி ராமாஜி பண்டிட் - சரபோஜி காசியாத்திரைக்குச் சென்றிருந்த பொழுது யாத்திரையில் உடன் இருந்தவர் ஆவர். பின்னர் இவர் சர்க்கேல் பதவியில் இருந்தார். இவர்தான் புதுக்கோட்டை வலங்கை இடங்கைப் பூசலைத் தீர்த்து வைத்தவர். இவர் பந்த் சுவாமி என்று குறிக்கப்படுவர் (பக்கம் 86)

30 சேவேசி - பணிவுடன்

31 சாம்ப்ரத - சம்பிரதாயப்படி; தொன்றுதொட்ட வழக்கப்படி

32 நிஜ அஸ்விஜம் - ஐப்பசி மாதம். சில சமயங்களில் சந்திர மாதத்தில் ஓராண்டுக்கு 13 மாதங்கள் கணக்கிடப்பட்டு ஏதாவது ஒரு மாதம் இரண்டு தடவை கணக்கிடப்பெறும். அவ்விருமாதங்களில் முதலில் வருவதை அதிக மாசம் என்றும் தொடர்ந்து வருவதை நிஜமாசம் என்றும் கூறுவது மரபு. வத்ய - தேய்பிறை

33 பஞ்சமி - ஐந்தாம் நாள்; சுக்ரவாரம் - வெள்ளிக்கிழமை

34 பாதச்சாரி - காலாட்படை

35 நியாயசபை - தஞ்சையிலிருந்த நீதிமன்றங்களில் ஒன்று

நன்றாக விசாரணை செய்து அதன்படி தண்டனை வழங்குமாறு சேனாமுகவர்ய ராஜேஸ்ரீ வரஹப்பையா ராமசாமிய்யா[36] தெரியப்படுத்துகிறார்.

ரம்ஜான்[37] மீ 12ந்வ

## 2-21-4

மாஹல் ஜிராத்கானா[38] சூஹர்சன் ஹெ 1223ம்[39] ஹெ ஷப்பர்[40] மீ 18ந்வ சாலிவாகன சாகே 1744[41] சித்ரபானு[42] சம்வத்ஸரம் மேற்சொன்ன மகாலில் பாவாசங்கர் மகாலில் வடக்கேயுள்ள கோட்டையில் சாமான்கள் ஆஜர் படுத்திய விவரம்.

2 - மாணிக்க மணி, 7 - வைரப்பலச்சை, 7 - பாச்சி, 1 - மணி, 6 - அயின் = 7,

14 - வைடூர்யம், 2 - பாசாணகட்டை, 47 - புஷ்பராகம், 27 - நீலம், 6 - மணி, 21 - அயின் = 27, 121 - கோமேதம், 47 - அயன், 17 - ஸ்வம்பு, 57 - மணி = 121, 9 - ராஜாவர்க்கம், 1 - சிகாசக்தி, 8 - பிரதி = 9, 50 - சிலைமான் கல்லும் மணியும் கூட
135 - ரவாயி, 230 - ஸ்படிக புஷ்பராகம் பலச்சை கமலும் கூட, 60 - யமுனை கல்லு, கலச மணி, 1 - மாணிக்க ஸ்வயம்பு கல்லு, ஹோன்ன பாரம் 83க்கு மூட்டை, 12 - மரகத கல்லு, 8 - பேரோஜ்யா கல்லு; 19 - கருட பஞ்சாமணி, 510 - துறைமல்லி தரப்பு கல்லு, பலச்சைக்கூட

1 - பவளம், 1 1/4, 1/4 2 - நீளமானது வட்டமான கூட சுமார் 200க்கு எடையுள்ளது, 1/2, 3 - மெல்லியது பொடி கூட எடை = 1 3/4, 3 1/4, 2 சாலிக்ராமம், 2 - சுதர்ஸன், 1 - முத்து பிசேலம் எடை எழுத்தில் இரண்டே முக்கால் தோலா, இரண்டுகாசு, = 1/2, 2 3/4, 2.

729 - விஜயாந்த நீலமணி, 1 - வர்த்திக்கல்லு மூட்டை, 95 - கோரிமணி சிவப்பு, 1 - பீங்கான்மணி வகைப்படி மூட்டை, 1 - ஸ்படிகம் துண்டு மூட்டை, 1 - முத்துச்சிப்பி உக்கரை வகையறா மூட்டை, 1 - 13 ரொக்கம், 1 - தகடு சூழி பணம், 13 - காசு தினுசுவாரி = 1 - 13

மேற்சொன்னபடி ஆஜர் பார்த்த ஆட்களின் பெயர்கள் - 1 - ராஜ்மகால்படி, 1. நிசிந்தை[43] ரத்னாகர மஹாதாஜி 2. ரங்கபார்கி குருமூர்த்தி நாயக் பாலன், 1. ஜாம்தார்கானா[44] கணக்குப்பிள்ளை கிருஷ்டப்பா.

---

36 வரஹப்பையா (பக்.82)

37 ரம்ஜான் - முகமதியர் மாதங்களில் 9 ஆவது

38 ஜிராத்கானா - ஆயுதசாலை (பக். 455)

39 சூஹர்சன் 1223 (+599) - கி.பி.1822(ஸல்லாஸ் இஸரீன் மயாத தன் அலப் (1223)

40 ஷப்பர் - ஸபர் - முகமதியமாதங்களில் இரண்டாவது

41 சகம் 1744 (+78) - கி.பி. 1822

42 சித்ரபானு - ஆண்டறுபதனுள் 16 ஆவது

43 நிசிந்தை - ஓர் அலுவல்

44 ஜாம்தார் கானா - அரச குடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் வைக்கப்பெற்ற இடம் (பக்.456)

## 2-21-5

மாஹல் ஜிராத்கானா சூஹர்சன் 1223 ஸபர் மீ 13ந்உ சாலிவாகன சகே 1744 சித்ரபானு சம்வத்ஸரம்..........சங்கர் மகாலில் வடக்கேயுள்ள கோட்டையில் சாமான் தேடிப் பார்த்த விவரம்.

93 - கட்டை பரண் சின்னதும், பெரியதும் கூட, 16 - பலகையின் பிடி, பட்டையின் பிடி, 6 - அயன் சாமான், 7 - செப்புக்கலசம், தங்கமுலாம் கொடுத்தது, 2 - மண்ணினுடைய, 2 - குடையினுடைய, 1 - குடையினுடையமேல்பிடி -, 1.........குடையினுடைய கலசம் பித்தளை, 1 - செம்பு முலாம் கொடுத்தது = 7, 2 - பூமியின் பாதம் செம்பு, 1 - கத்தியின் பிடி பித்தளை, 15 - அங்குசம், 5 - வெங்கலம், 4 - முத்துக்கல் வைத்தது, 1 - அயன் தங்கமுலாம் செய்தது = 5, 3 - அயன், 1 - அயன் வேலைப்பாடு செய்தது, 6- ..........முத்திரை ஜதை கூட = 15, 9 - சம்படம், 1 - லிங்க செம்பு, 1 - பிரதி ஜோடி, 2 - அடிப்பாகம், 4 - மேல் மூடி சின்னதும், பெரியதும் கூட, 1 - மூடி = 9

4 - தராஜினுடைய கரண்டி பித்தளை சின்னதும் பெரியதும் கூட, 18 - தராஜ்[45] தட்டு, சின்னது பெரியது பித்தளை, 1 - பங்க் பிடி செம்பு தங்கமுலாம் கொடுத்தது, 4 - செம்பு இலை சக்கரம் எழுதியது, 1 - பித்தளை தகடு, 22 - ........., 9 - பித்தளை, 13 - அயன் = 22, 13 - பித்தளை, 3 - செம்பு, 1 - .........., 2 - தகடு = 3, 1 - கைச்செம்பு சின்ன ஜதை, 3 - பெட்டியிலுள்ள சாமான், 1 - செம்புப்பூ தங்கமுலாம் கொடுத்தது, 1 - பித்தளை ஜதை தாழ்ப்பாள், 1 - ஒட்டியாணம் = 3, 1 - துப்பாக்கியின் பிடி பித்தளை -, 1 - பித்தளை தட்டு பெரிய ஜதை, 2202 - செம்புகாசு தினுசுவாரி -, 663 - பணம் பேட்டை தகடு...........சக்ரே

273..............., 22 - ஸ்படிக லிங்கம் சிறியதும், பெரியதும் -, 6 - ஸ்படிகம், 16 - சிலா -, 3 - பிந்து[46] இல்லாதது, 13 - பிரதி = 16 = 22, 1 - அயன் பூட்டு பெட்டியினுடையது, 1 - அயன்...........ஜதை, 50 -...........பெரியதும் சிறியதும் கூட, 5 -.............சிறியதும் பெரியதும் கூட, 1 - அயன் குறடு -, 197 - திருகு சாமாஅயன் சிறியதும் பெரியதும், 2 - கஞ்சக்க சிறியது, 1 - பித்தளை, 1 - அயன் = 2, 5 - ............அயன் பூ, 2 - காசித்தட்டு சின்னக்கல் வகையறா பார்ப்பதற்கு தட்டு, 1 - முத்து எடுப்பதற்கு - பித்தளை சிப்பி சிறியது, 8 - யானை தந்தத்தின்............, 127 - கட்டை சாமான், 43 - ..........., 71 - ............ சிறியது பெரியது, 66 - சாந்து, 5 - வெள்ளிப்பலகை = 71, 2 - ...........

1 - .........., 1 - வெள்ளிவேலை செய்தது = 2, 2 - கதை, 1 - பெரியது, 1 - சிறியது = 2, 8 - பெரிய தடி, 1 - குப்பி = 127, 10 - கொம்பு , 3 - எருதினுடையது சிறியது, 7 - காட்டு எருமையினுடையது = 10, 1 -...........மூங்கில்.

## 2-21-6

ஜாபிதா மாஹல் ஜிராத்கானா சூஹர்சன் ஷு 1223 ஷபர் 14ந் தேதி சாலிவாகன சகே 1744 சித்ரபானு நாம சம்வத்ஸரம் மேற்சொன்ன மகாலைச் சேர்ந்த பாவா சங்கர் மகாலில் வடக்கேயுள்ள கிடங்கில் சாமான்களை சரிப் பார்த்த விவரம்.

---

45 தராஜ் - தராசு

46 பிந்து - புள்ளி

101 - செம்பு தினுசுவாரி, 61 - பேட்டைப்பணம், 1939 - ஸ்படிக சாமான் தினுசுவாரி, 220 - குதிரையின் பட்டை சிறியது, பெரியது, 151 - சொக்கட்டி சிறியது, பெரிய 78 - மண்பானை சிறியது, பெரியது, 56 - கிண்ணம் - அடிமூடியுடன் கூடியது, 136 - சின்னதாயத்து, 29 - சிறியது பெரியது - தாயத்து, 860 - மணி சிறியது பெரியது கூட, 120 - குதிரையின் சோட்டை, 98 - பிரதிசாமான், 11 - மோதிரம், 36 - வில்லை சிறியது, 19 - டிக்கா வட்டமானது, 23 - டிக்கா சதுரமானது, 9 - பீண்டை = 98, 181 - கத்தியின் பிடி கருப்பு தண்டு ஜதை, 1 - பிரதி சில்லரை மணி மாணிக்கம் ஜதை வகையறா, 1 - கலசம் = 1931, 30 - யானைத் தந்தத்தின் சாமான் தினுசுவாரி, 2 - டிபரி ஜதை 1 -, 16 - குதிரையின் கழுத்தில் கட்டும் கயிறு, 12 - சீப்புஜதை = 30, 22- லிங்கம் சிறியதும் பெரியதும், 11 - ஸ்படிகம், 11 - சிலா, 6 - பிடி உடையது, 5 - பிடி இல்லாதது = 11, 1 - ஸ்படிக பிள்ளையார், 1 - நந்தி சிலாயினுடையது,

## 2 - 21 - 7

ஜாபிதா மாஹல் ஜிராத்கானா வருஷம் 1223 சபர் மாதம் 20ந்தேதி சாலிவாகன சகே 1744 சித்ரபானு சம்வத்ஸரம் மேற்சொன்ன மகாலைச் சேர்ந்த பாவாசங்கர் மகாலில் வடக்கே உள்ள கிடங்கில் சாமான்களைச் சரி பார்த்த விவரம்.

5 - விஜயா நீலம், 16 - வெறும் கருப்புக் கற்கள், 5 - மரகதம், 2 - ராஜாவர்க்கம், 1 -யமுனையின் சிவப்புக்கல்லு, 6 - பேரோஜ்யா, 1817 - ருத்ராட்சம் சிறியது பெரியது கூட, 84 - கமலாட்சம், 10 - பெரிய வட்டமான கல், 5 - மாத்திரை தேய்ப்பதற்கு, 1 - தங்கம் தேய்ப்பதற்கு, 4 - கோந்தன் அறைப்பதற்கு, 3 - பெரியது = 10

52 - வெங்கலம், பித்தளை சாமான், 3 - சஞ்சை முகம், 1 - ராவையினுடைய, 1 - ........, 2 - மண்ணினுடைய, 6 - தாயித்துனுடைய, 2 - .........., 5 - பூவினுடைய, 2 - ..........., 1 - பூவினுடைய, 1 - கழுத்துமணியினுடைய, 1 - இலையினுடைய, 27 - பிரதி தினுசுவாரி = 52, மேற்சொன்னபடி ஆஜர் பார்க்கப்பட்டது.

## 2 - 21 - 8

நம்பர் 135

ஜாபிதா - சட்வாஜி பனால்கர் - இவர்கள் - சூஹர்சன் வருஷம் 1236 [47] சாலிவாகன சகே 1757 [48] மன்மத [49] நாம சம்வத்ஸரம் எழுதிக்கொடுத்த லிஸ்ட் என்னவென்றால் -

சேவக்கின் மகன் ரானோஜி என்பவர் நான்கு ஐந்து ஆண்டுகளிலிருந்து தனியாக சர்க்காருடைய ஜவான் ரூ.11 ஆனவுடன், எனக்குத் தேவையில்லை என்று அவருடைய மனைவியையும் அழைத்துக்கொண்டு தனியாக இருந்தான். அவன் வந்து சேவகர்களின் வீட்டில், நாங்கள் யாரும் இல்லாத சமயமாக, இரவில் வந்து பூட்டை உடைத்து வீட்டிலிருந்த சாமான்களும், தங்கம், வெள்ளி சாமான்களும் எடுத்துச் சென்றதற்கு விவரம்.

---

47 சூஹர்சன் 1236 (+599) = கி.பி. 1835 (ஸீத் ஸல்லாசைன் மயாதின் அலப் (1236)

48 சகம் 1757 (+78) = கி.பி.1835

49 மன்மத - ஆண்டறுபதனுள் 29ஆவது

186 - ரக்மாஜியின் நகை, 46 - ருக்மாஜியின் நகை, 56 - ஏக்குபாய் நகை, 46 - ராமசாமியின் நகை, 262- முஸ்லிம்பாவா என்பவரின் நகை, 26- காசிபாய் நகை, 26 - ஆறுமுகம் என்பவரின் நகை, 56-முத்தாயி என்பவரின் நகை, 1/2 - வேசுபாய் நகை, 1 - படித்தவலை, 1 -வீட்டுப் பத்திரம், 1- இதைத் தவிர கடன் வாங்கின காகிதங்கள், 1 - இரண்டு வீட்டினுடைய சாசனம், இவை யெல்லாவற்றையும் இரவில் திருடிக் கொண்டு போனபிறகு, நாங்கள் வீட்டிற்கு வந்து பார்த்தோம். வீடு அலங்கோலமாக இருந்ததைப் பார்த்து, ரானோஜி மீது சந்தேகப்பட்டு விசாரித்தபொழுது, நான் எடுக்கவில்லை என்று முதலில் சொன்னான். அதன் பிறகு ...................................... நான் சேவக் ரானோஜி என்பவரை விசாரித்தேன். அவன், அதெல்லாம் எனக்குத் தேவையில்லை என்றும், உன்னுடைய ஆஸ்தி எதுவும் எனக்குத் தேவையில்லை என்று சத்தியம் செய்து எழுதிக் கொடுப்பதாகச் சொல்லி சென்றான். இப்படி இருக்கும் பொழுது, என்னுடைய நகை எப்படி எடுத்துக் கொண்டு சென்றாய் என்று கேட்டேன். மேலும் சர்க்காரில் சொல்லி உன்னிடமிருந்து வாங்கிக்கொள்கிறேன் என்று சொன்னதற்கு, எங்கு வேண்டுமானும் சொல்லிக் கொள் என்று சொல்லி, என்னையும் அடித்து, என் மனைவியையும் திட்டி, வீட்டின் கதவை உடைப்பேன் என்றும்; வீட்டையும் இடித்துத் தள்ளுவேன் என்றும் சொன்னான். எனக்கு 2 மகள்கள் இருக்கிறார்கள். மகன் இல்லை. என் மனைவியை பார்த்து, வீடு வாசல் இழந்து நீ அனாதையாக இருக்கவேண்டும் என்று சொல்கிறான்.

இதற்கு சாகேப் அவர்கள் பெரிய மனது செய்து, மேற்சொன்ன விஸ்ட்டுப்படி என்னுடைய நகைகளை மீட்டுக் கொடுப்பதற்கு உத்தரவு வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன். சவ்வல்[50] மாதம் 4ந்தேதி சேனாதிபதி பிறபஹ ராஜேஸ்ரீ கிருஷ்ணாஜி கேசவ பண்டிட்[51] இவர்களுக்கு தெரிவிக்கப்பட்டது. வருஷம் 1835ம் ஆண்டு ஜூலை 3ந்தேதி.

பாலநிதி விசாரக பிரவர சேனாதிபதி பிரம்மஸ்ரீ ராஜஸ்ரீ கிருஷ்ணாஜி கேசவ பண்டிட் -

## 2 - 21 - 9

1. சம்போ என்பவர் - வைத்தியரின் நடிவடிக்கை அறிந்தும் கூட அதிகாரியிடம் கூறாமல், அவருடன் அனுப்பியும் கத்தியை எடுத்துக்கொண்டு ஓடின விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்ததற்காகவும், அவனை லயனில் நிற்க வைத்து கம்பத்தில் கட்டி, மூங்கிலினால் 48 அடிகள் அடித்து சட்டையைத் திருப்பிப் போட்டு வழக்கப்படி விலக்கிவிடுவது.

1. சஞ்சிவ நாயக் என்பவர் - இந்த விஷயத்தில் அஜாக்ரதையாய் இருந்ததனாலும், தான் சென்று விட்டதாலும், அவரை லயனில் நிற்க வைத்து மூங்கிலினால்[52] 12 அடிகள் அடித்து, சைனியத்தில் சேர்த்து வேலை வாங்குவது.

1. இந்த விஷயத்தில் சைனிக் பதிலுக்கு லயனில் நிற்க வைத்து மூங்கிலினால் 12 அடிகள் அடிப்பதைத் தவிர பதிவிலிருந்து நீக்கி சைனியத்தில் சேர்த்து விசாரணை செய்வது.

---

50 சவ்வல் - ஷவ்வால் - முகமதியர் மாதங்களுள் பத்தாவது

51 கிருஷ்ணாஜிகேசவ் பண்டிட் (பக்.83)

52 மூங்கிலினால் - பிரம்பினால்

1. இந்த வேலையில் இருந்த பிரதிகவான்[53] உதாஜி என்பவர் - வைத்தியருடைய கறார் வேலை தெரிந்தும் கூட, அதிகாரியிடமும் மற்றவர்களிடமும் தெரிவிக்காமல் சென்றதனால், அவருக்கு மூங்கிலினால் ஆறு அடிகள் அடித்து வழக்கப்படி வேலை வாங்குவது.

1. இந்த வேலையில் இருந்த பிரதிகவான் ஆறுமுகம் என்பவர் - ஆஜராக இல்லாமலும், அங்கு நடந்த விஷயத்தில் பாராமுகமாக இருந்ததனாலும் அவரை லயனில் மூங்கிலினால் 12அடிகள் அடித்து சட்டையை எடுத்து சைனியத்தில் தாக்கல் செய்து வேலை வாங்குவது.

1. சந்தியா திப காட்டு பாலநாயக் என்பவர் ஆஜர்படுத்துவதற்கு சித்தமாக இருந்தும் கூட ஆஜர் இல்லாமல் இருந்ததனால், அவரிடமிருந்து ரூபாய் 6 அபராதம் பெற்றுக் கொள்வது.

1. பாகுல்கர் என்பவர் - வேலையில் ஆஜராகாமல் வீட்டிற்குக் கிளம்பிச் சென்றதனால், அவரிடம் இருந்து ரூபாய் ஆறு அபராதம் வாங்குவது.

## 2 - 21 - 10

ராஜெஸ்ரீ மஹாராஜ் சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு சாகேப் அபராஜித வ்யதிய பிரதிகவான் கோவிந்தராவ் போன்ஸ்லே இவர்கள் எழுதிக்கொடுத்த வாக்குமூலம் என்னவென்றால்-

கேள்வி:- நேற்றைய தேதி இரவு நாட்டியக்காரி வேஷத்துடன் நீ சென்று கொண்டிருக்கும் பொழுது, உன்னுடைய மக்களுக்கும், அஹவதட்ச பிரதக பிரதியினுடைய வேஷத்தின் மக்களுக்கும், சர்ச்சை ஏற்பட்டு, சில ஆட்கள் அடிதடியில் இறங்கினார்கள். இந்தத் தகராறு ஏற்படுவதற்கு என்ன காரணம் என்பதை விவரத்துடன் நடந்த விஷயத்தை சொல்லு -

பதில்:- நேற்றைய தேதி இரவில் எங்களுடைய மந்திரில் மாமூல்படி சர்க்காரினுடைய நாட்டியக்காரியின் வேடம் போட்டு ஜமா சேர்த்துக் கொண்டு, ராஜ கோபால் ஸ்வாமியினுடைய வீதி வழியாக சென்று கொண்டிருந்த பொழுது, அஹவதட்ச பிரதம பிரதிகயினுடைய நாட்டியக்காரியின் கூட்டம் - வடக்குத் தெருவில் மேஸ்தர் ராம் மாடி எதிரில் நின்று கொண்டிருந்த கூட்டம் முன்னாலும் எங்களுடைய கூட்டம் பின்னாலும், இப்படிச் சென்றுக் கொண்டிருக்கும் பொழுது கொடியின் மூலையில் - அஹவதட்ச பிரதம பிரதிகனுடைய வேஷம் வீதி முழுவதும் அடைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்ததால், நாங்கள் போவதற்கு இடைஞ்சல் ஏற்பட்டு கூட்டம் சிதறியதால், கூட்டத்தில் யாராவது தெரிந்தவர் இருக்கிறார்களா என்று பார்க்கும்பொழுது ப்ராக்வான்[54] மஹாதேவ் என்பவர் இருந்தார், அவரை கூப்பிட்டு, உங்களுடைய கூட்டம் வழி மறைத்து நின்று கொண்டு இருக்கிறது. அதனால் எங்களுடைய வேஷம் போவதற்கு இடைஞ்சல் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு வேடமும் சர்க்காரினுடைய தானதால் நீங்கள் பக்கமாகச் சென்றால், நாங்கள் முன்னால் செல்கிறோம் என்று சொன்னேன். அதற்கு, பக்கமாகச் செல்லமுடியாது என்று சொன்னதனால் அங்கு வந்திருந்த அஹவதட்ச வ்யதிய பிரதிக ப்ராகவான் அப்பாஜி காட்கே என்பவரைப் பார்த்து, அவர்கள் செய்த அக்கிரமங்களைத் தெரிவித்தேன் - அதற்கு

53 பிரதிக்வான் - 12 சிப்பாய்களுக்குத் தலைவன் (பக்.342)

54 பிராக்வான் - பாக்வான் - பிரதிக்வானுக்கு மேல் பதவி (பக்.342)

மேற்சொன்ன அப்பாஜி காட்கே அந்த மஹாதேவ என்பவரிடம் போய் வந்து, அவரிடம் சொன்னேன். அவர் பதில் கூறவில்லை என்று கூறினான். உடனே அங்கிருந்த பானேதார் வைபிடு ஜைத்ர ஹர்சி - பெயர் தெரியவில்லை - அடையாளம் தெரியும். அவர் ஒருவர் வந்திருந்தார் - அவரிடம் முழு விவரத்தையும் கூறினேன் - அதற்கு அவர் வீட்டிற்குச் சொல்லி அனுப்பியுள்ளேன். அங்கிருந்து ஆட்கள் வருவார்கள்; அதன் பிறகு சொல்லுகிறேன். அதுவரையில் பேசாமல் இருக்கும்படி கூறினான். பிறகு இந்த காரியங்கள் நடந்த பிறகு ப்ராகவான் சுப்பராவ் கவ்வாரே என்பவரை சொல்லி அனுப்பினேன். அவர் வந்து பார்க்குமிடத்தில் அஹவதட்ச பிரதம பிரதிக ஜமா ப்ராகவான் இல்லை - முஸ்லிம் பையன் காசி என்பவனும், ஒரு சில ஜனங்களும் சுப்பராவ் கவ்வரே என்பவரை வழி மறித்தார்கள்.

ஹர்சி அமனியா -1, முஸ்லிம் அப்பூ - 1 - நகதா வல்ல காதர்பா -1, ஹர்சி காட்டு பாவா -1 - ஜயதட்ச வ்யதிய பிரதிக சைனிக் சாக்கோரைமோரை-1 - மேற்சொன்ன காசிம்-1 - இவ்வளவு பேரும் சாராயம் குடித்திருந்தார்கள். ஆதலால் அவர்களைக் கைது செய்யுங்கள். நான் மத்தியஸ்தரிடம் தெரிவித்து விட்டு வருகிறேன் என்று கிளம்பிச் சென்றான். அதன் பிறகு வைபிடு ஜைத்ர ப்ராகவான் வெங்கட்டராவ் சில சைனிக்குகளுடன் வந்து, என்ன கூட்டம் என்று விசாரித்தார் - நான் நடந்த விவரம் அனைத்தையும் கூறினேன். அதற்கு அவர் மேற்சொன்ன அஹவதட்ச கூட்டத்தை ஒதுங்கும்படி கூறினார் - அதை அவர்கள் கேட்கவில்லையாதலால், எங்களிடம் இருந்த அந்த ஆட்களின் முகத்தின் வாசனையைப் பார்த்து, அதை ஒப்புக்கொண்டு எங்கள் கூட்டத்துடன் அவர்களுடைய சைனிக்கைக் கொடுத்து எங்களைப் போகும்படிக் கூறினார் - அதன்படி நாங்கள் கிளம்பிச் சென்றோம் - இதுதான் நடந்த விவரம்.

வருஷம் 1838 ஆங்கில ஆண்டு, மார்ச்சு 26

கோவிந்த நாயக்கன்.

## 2-21-11

ராஜேஸ்ரீ மஹாராஜ்[55] சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு சாகேப் அபராஜித[56] வ்யதிய பிரதிக ப்ராகவான் சுப்பராவ் கவ்வரே - இவர்கள் எழுதிக் கொடுத்த வாக்குமூலம் என்னவென்றால் -

கேள்வி:- அஹவதட்ச பிரதிகயின் நாட்டியக்காரி வேஷத்தின் கூட்டத்திற்கும், உங்களுடைய பிரதிகயின் வேஷத்தின் கூட்டத்திற்கும் நடந்த சர்ச்சையில் உனக்குத் தெரிந்ததைச் சொல்லு.

பதில்:- நேற்றைய தினத்தில் இரவு 6 மணி அளவில் என்னுடைய பிரதிகையின் சைனிக் பிராஜீ ஜாதவ் என்பவர் என்னிடம் வந்து கொடியின் மூலையில்[57] எங்களுடைய கூட்டத்தை அஹவதட்ச பிரதிகையினுடைய கூட்டம் வழிமறித்து இருக்கிறது என்று தெரிவித்தான். நான்

55 மஹாராஜ் என்றது சரபோஜியின் மகனாகிய சிவாஜியை

56 அபராஜித - வெல்ல முடியாதவன்

57 கொடியின் மூலை - வடக்கு வீதியும் கிழக்கு வீதியும் சேருமிடம் இந்நாளிலும் 'கொடி மரத்து மூலை' என்று பேசப்படுகிறது.

அங்கு சென்று, அஹவதட்சக் கோஷ்டியின் ப்ராகவான் யார் இருக்கிறார்கள் என்று விசாரித்தபொழுது, அப்பொழுது ப்ராகவான் இல்லை. ரைட்டர்[58] மட்டும் இருந்தார். அவரைக் கூப்பிட்டு இரண்டும் சர்க்காருடையதாக இருப்பதால், வழி மறைப்பதை விட்டு, வழியை விட்டு, எங்களுக்கு வழிவிடுங்கள் என்று கூறினேன். அதற்கு, நீங்கள் சொல்வதைக் கேட்க முடியாது; மத்தியஸ்தருக்குச் சொல்லி அனுப்பியுள்ளேன். - அவருடைய உத்தரவு வர வேண்டும் என்று கூறினார். இதற்குள் அங்கு நின்று கொண்டிருந்த அமுத சுபேதாரிடம் தெரிவித்தேன். அப்பொழுது அந்தக் கோஷ்டியில் ஒரு முஸ்லிம் பையன், மேலும் சில ஆட்களும் என்னிடம் வந்து ஏதோ புரியாமல் கூறினார்கள். அவர்களுடைய முகத்தில் சாராய வாசனை அடித்ததால் இந்த விஷயம் அமுத சுபேதாருக்கும், சுப்பராவின் மகனுக்கும் தெரிவித்து விட்டு, சாராயம் குடித்தவர்களை கைது செய்வது என்று ப்ராகவான் கோவிந்தசாமியிடம் சொல்லிவிட்டு, அவர்களுடைய மத்யஸ்தரிடம் சொல்கிறேன் என்று கிளம்பிச் சென்றேன் - இதை அவர்களுடைய மத்தியஸ்தரிடம் சொன்னேன். இதுதான் நடந்த விவரம் - வருஷம் 1834 ஆங்கில ஆண்டு மார்ச்சு 26

## 2-21-12

ராஜேஸ்ரீ மஹாராஜ் சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு சாகேப் வையிடு ஜைத்ர வ்யதிய பிரதிகயின் ப்ராக்வான் வெங்கட்டராவ் நிகமம் இவர்கள் எழுதிக் கொடுத்த வாக்குமூலம் என்னவென்றால்.-

கேள்வி:- கோட்டை, மேற்சொன்ன 25ந். தேதி ராத்திரி அபராஜித வ்யதிய ப்ரதிகவும், அஹவதட்ச பிரதம ப்ரதிகவும், சர்க்கார் நிஷபதி நாட்டியக்காரியின் வேடம் கிளம்பியது. அப்பொழுது ஒவ்வொருவருக்கு பேச்சு வார்த்தையும் மறியலும் நடந்த விவரம் உனக்குத் தெரியும். அந்த நடந்ததை விவரத்துடன் எனக்குத் தெரிவிக்கவும்.

பதில்:- மேற்சொன்ன தேதியில் இரவு நான் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது வடக்குத் தெருவில் உள்ள பிரதிதார் ஹர்சி ராமசாமி நாயக் என்பவர் வந்து கொடியின் மூலையில் நாட்டியக்காரியின் கோஷ்டி தாறுமாறாக நிற்கிறது என்று தெரிவித்தார். உடனே நான் அங்கு சென்று பார்க்குமிடத்தில் அபராஜித வ்யதிய பிரதிகையின் வேஷமும், அஹவதட்ச பிரதம பிரதிகையினுடைய நாட்டியக்காரி வேடமும் முன்னாலும், பின்னாலும் இருந்ததனால், இவ்வாறு நடந்ததற்கு என்ன காரணம் என்று விசாரித்தேன் - அபராஜித வ்யதிய பிரதிகையின் ஜமாதார் கோவிந்தசாமி என்பவன் வந்து, தன்னுடைய வேடம் செல்வதற்கு வழிவிடாமல் மறைத்து, நாட்டியக்காரியின் வேடம் உட்கார்ந்திருக்கிறது என்று சொன்னான். அதற்கு, பக்கத்தில் செல்வதற்கு இடமிருந்தும், இல்லை என்று எப்படிச் சொல்கிறீர்கள் என்று கேட்டேன். அதற்கு அந்த ஆட்கள், சாராயம் குடித்துச் சர்ச்சை செய்வார்கள் போல் இருந்ததால், அவர்களைக் கைதியில் வைத்திருக்கிறேன் என்று சொன்னான். உடனே நாட்டியக்காரி வேஷத்தில் இருந்த ஹர்சி கோவிந்தராவ் என்பவர் வந்து தன்னுடைய கூட்டத்தை, எதிரிலுள்ள கூட்டம் கைது செய்து இருக்கிறது என்பதை என்னுடைய மத்தியஸ்தருக்குச் சொல்லியனுப்பியிருக்கிறேன். பிறகு மேற்சொன்ன கோவிந்தசாமி ஜமாதாரைப் பார்த்து இரண்டு வேடமும் சர்க்காருடையது தான், இருந்தும் அவர்கள் பார்க்கவில்லை, அடிக்கவில்லை, அவர்களை ஏன் கைது செய்யவேண்டும் என்று

58 ரைட்டர் - Writer - எழுத்தர்

சொல்லி, அவர்களை விடுவித்து முன்னேறும்படி கூறினேன். அதற்கு அவர்கள் மத்யஸ்தரிடம் சொல்லியனுப்பியுள்ளோம். அவர்களிடமிருந்து உத்தரவு வரவேண்டும் என்று சொல்லி, பக்கத்தில் உள்ள வழியாக போகும்படியும் அதனுடன் வையிடு ஜைத்ர சைனிக் இருவரையும் அனுப்பி," கூட்டம் முழுவதும் கிளம்பிச் சென்றது. அதன்பிறகு அஹவதட்ச வ்யதிய பிரதிகையின் மத்யஸ்தர் கோவிந்தராவ் ஜாதவ் என்பவர் கூட்டம் கலையும்படி உத்தரவு போட்டுவிட்டு, என்னை மட்டும் வரும்படிச் சொல்லியனுப்பினார். அதன்படி அவர்களுடன் இரண்டு சைனிக்கை அனுப்பித்து வேடம் கலைந்த விவரம் சொல்லும்படி உத்தரவு கொடுத்து, மேற்சொன்ன கோவிந்தராவ் என்பவரிடம் சென்றேன் - அவர்கள் நடந்த விவரம் என்ன என்று விசாரித்தார்கள் - நடந்தபடி சொன்னேன் - அதற்கு அவர்கள், சர்க்காரில் விசாரித்தால் : சொல்லுங்கள் என்றார், நான் சரி என்று சொல்லிவிட்டுக் கிளம்பிச் சென்றேன்.

கேள்வி:- நாட்டியக்காரியின் வேஷத்தில் இருந்த சில ஆட்கள் சாராயம் குடித்து இருந்தார்களா? அவர்களுடைய முகத்தில் நீ வாசனைப் பார்த்தாயா? மேலும் அவர்களை நீ சிறையில் வைத்தாயா?

பதில்:- நாட்டியக்காரியின் வேஷத்தில் சில ஆட்கள் சாராயம் குடித்து இருக்கிறார்கள் என்று கோவிந்தசாமி ஜமேதார் தெரிவித்தார். காசிம் என்பவன் ஒருவன் மட்டும் இருந்தான். அவருடைய முகத்தில் வாசனைப் பார்த்தபொழுது சாராயத்தின் நெடி வந்ததனால், அவனை மட்டும் நான் விசாரிப்பதாகக் கூறினேன். அவனை கைது செய்து விடுதலை செய்தேன்.

இதுதான் நடந்த விவரம் எனக்குத் தெரிந்தது,வருஷம் 1834 ஆங்கில ஆண்டு, மார்ச் 27 ந் தேதி.

பாக்குவான் வெங்கடறாவு.

## 2 -21-13

ராஜேஸ்ரீ மஹாராஜ் சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு சாகேப் பாதசாரி[59] சமுகவான்[60] ராமசாமி நாயக் எழுதிக் கொடுக்கும் வாக்கு மூலம் என்னவென்றால் -

கேள்வி:- மேற்சொன்ன தேதி 25ல் ராத்திரி அபராஜித் வ்யதிய ப்ரதிகயினுடையதும், அஹவதட்ச பிரதம பிரதிகையினுடையதுமான சர்க்காரின் நிஷ்பதி[61] நாட்டியக்காரியின் வேடம் கிளம்பிச் சென்றபொழுது கொடியின் மூலையில் ஒவ்வொருத்தருக்கு பேச்சு வார்த்தையும், மறியலும் நடந்த விவரம், உனக்குத் தெரியும் என்று தெரியவருகிறது. அதனுடைய விவரம் என்ன என்பதைச் சொல்லு.

பதில்:- மேற்சொன்ன தேதியில் நான் என்னுடைய வீட்டின் அருகிலுள்ள சாவடியில் படுத்திருந்தேன். அப்பொழுது தெருவில் வேஷத்தின் மறியல் விஷயம் கேள்விப்பட்டேன்.

59 பாதசாரி - காலாட்படை

60 சமுகவான் - சமுத்வான் - 48 சிப்பாய்களுக்குத் தலைவன் (பக். 342)

61 நிஷ்பதி - உதவி

உடனே வந்து பார்த்த இடத்தில் - நாட்டியக்காரியின் வேடம் அஹவதட்ச பிரதிகையின் கூட்டம் முன்னாலும், துருபாவின் வேஷம் போட்ட அபராஜித வ்யதிக பிரகதிகையின் கூட்டம் பின்னாலும் உட்கார்ந்து கொண்டிருந்தது. நாட்டியக்காரி வேஷத்தவர்கள் துரி வேஷம் உள்ளவர்களுக்கு இடது பக்கத்தில் வழி இருந்தது. ஆனால் அவர்களுக்கு வலது பக்கம் வழிவிட வேண்டும் என்று தகராறு செய்து கொண்டிருக்கும் பொழுது, ஜமேதார் வந்து நாட்டியக்காரியில் கூட்டத்தில் பெரியவர்கள் யாரும் இல்லை. சொன்ன பேச்சை கேட்கமாட்டேன் என்கிறார்கள். சில ஆட்கள் சாராயம் குடித்திருக்கிறார்கள். அவர்களை கைது செய் என்றும், அதற்கு நீ தான் சாட்சி என்றும், மத்யஸ்தரிடம் சென்று கூறுதாகவும் சொல்லிக் கிளம்பிச் சென்றான். நான் என் இஷ்டப்படி கிளம்பிச் சென்று விட்டேன். மேற்கொண்டு நடந்த விவரம் எனக்குத் தெரியாது. மேலும் சாராயம் குடித்த ஆட்கள் சேர்ந்திருந்தார்கள் என்று எனக்குத் தெரியாது. நாட்டியக்காரியின் கூட்டத்தில் 4 சைனிக்[62] மட்டும் நியமித்து இருந்தார்கள் - அது தான் எனக்குத் தெரியும். வருஷம் 1834 ஆங்கில ஆண்டு, மார்ச்சு 27 - எல்லா கையெழுத்தும் மேற்கண்டவருடையது.

## 2 -21 - 14

ராஜேஸ்ரீ மஹாராஜ் சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு சாகேப் அஹவதட்ச பிரதம பிரதிக, ப்ராகவான் மாஹதோஜி சுபான்ஜி நலவாடை இவர்கள் எழுதிக் கொடுத்த அத்தாட்சி என்னவென்றால் -

கேள்வி:- உங்களுடைய பிரதிகையின் வேஷதாரர்களுக்கும் மேலும் அபராஜித வ்யதிய பிரதிகையின் வேஷத்தாரர்களுக்கும் விவாதம் ஏற்பட்டு, நீங்கள் அந்த கூட்டத்தை வழி மறைத்தும், மேலும் தங்கள் கூட்டத்தில் சிலபேர் சாராயம் குடித்தும், அவர்களை கைது செய்ததாகவும் தெரியவருகிறது. அந்த விவரம் என்ன என்பதைத் தெரிவிக்கவும்.

பதில்:- நேற்றைய தினம் இரவு நாங்கள் வேடமிட்டு, மந்திரி[63] விருந்து கிளம்பி வடக்குத் தெருவிலிருக்கும் மேஸ்தர் ராம் மாடியின் பக்கம் சென்று கொண்டிருக்கும் பொழுது, காசு வைத்த தெருவிலிருந்த நமக்கு முன்னால் இருந்த அவன் அபராஜித வ்யதிய பிரதிகையின் வேஷம் பின்னால் வந்து சேர்ந்தான். அவன் வேடம் பின்னாலும் எங்களுடைய வேடம் முன்னாலும் சென்று கொண்டிருக்கும் பொழுது பட்டுக்கோட்டை பாவா வீட்டின் பக்கம் அந்த வேஷம் ஹஜாரில் நுழைந்து மறுபடியும் எங்களுடைய வேஷத்தின் பின்னால் வந்து சேர்ந்தான். எங்களுடைய வேஷம் கொடியின் பக்கத்தில் வரும்பொழுது அந்த வேஷம், எங்கள் வேஷத்துடன் மோதியது. அப்பொழுது அந்த வேஷம் முன்னால் செல்வதற்கு வழியை விட்டு நாங்கள் பக்கமாக ஒதுங்கினோம். ஆனால் அந்த வேஷம் முன்னால் செல்லாமல், பின்னாலேயே இருந்து சர்ச்சைச் செய்வதற்கு ஆயத்தமானார்கள். அப்பொழுது ஹர்சியைக்[64] கூப்பிட்டு, எங்கள் மத்யஸ்தருக்கு மேற்படி நடந்த விவரம் சொல்லியனுப்பினேன். இதற்குள் சுப்பராவ் என்பவர் வஹிலிவான்[65] அந்த கூட்டத்தில் வந்து

62 சைனிக் - வீரர்கள் (பாதுகாவலுக்காக)

63 மந்திர் - ஆயுதங்கள் வைக்கப்பட்ட இடம் (பக்.341)

64 இராணுவ அதிகாரிகளில் ஒருவர்

65 வஹிலிவான் - 'பயில்வான்' ஆகலாம்

பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது அதில் இருந்த சைனிக் கோவிந்தராவ் ஜாதவ் என்பவர் தேடிக்கொண்டு வந்தார். அதனால் எங்கள் கூட்டத்தாரை எதுவும் பேச வேண்டாம் என்று சொல்லிவிட்டு, நான் மத்யஸ்தரிடம் கிளம்பிச் சென்றேன். அங்கு சென்றிருக்கும் பொழுது எங்கள் கூட்டத்தில் பாரா போடப்பட்டிருந்ததாக அறிந்தேன். இதுதான் எனக்குத் தெரியும். ப்ராகவான் கோவிந்தசாமி என்னைப் பார்த்து நீங்கள் பேகாயி[66] வேஷமும், அவர்கள் காயிதே[67] வேஷமும் போட்டுப் போங்கள் என்று கூறினார். இதுதான் நடந்த விவரம். வருஷம் 1834 ஆங்கில ஆண்டு மார்ச்சு மாதம் 26ந்தேதி.

(சயி- கையெழுத்து என்பது பொருள்)

## 2-21-15

தீர்த்தரூப ராஜமான்ய ராஜேஸ்ரீ பந்த் ஸ்வாமியின்[68] சேவைக்கு[69] பாலக[70] ஹரி சக்ரபாணி[71] தண்டனிட்டு சாஷ்டாங்க நமஸ்காரம்[72] விண்ணப்பம்-என்னவென்றால்-

நேற்று அரப்பகாரர்கள்[73] மண்தோண்டி, அதிலிருந்து தங்கம், வெள்ளி, அதனுடைய துகள்களைவித்து முதல்[74] செய்யும்படி சொல்லியிருந்தார்கள். அந்தக் கிடங்கில் இருந்த சாமான் எல்லாம் அந்த அந்த மகாவின் சாமான் அந்த அந்த மகாலுக்கு கொடுப்பது என்று ராஜேஸ்ரீ அண்ணுஸ்வாமியிடம் சொல்லி அந்த அந்த மகாலுக்கு தாக்கீது அனுப்பப்பட்டது. நாளையிலிருந்து இரண்டு நாட்களுக்குள் சாமான்களை அவரிடம் ஒப்படைத்துவிட்டு, பெற்றுக்கொண்ட சாமான்களுக்கு ஒவ்வொரு மகாலிலிருந்தும் ரசீது பெற்று உடனுக்குடன் அனுப்பி வைக்கிறேன்.

நேற்று நிறுத்தி பார்த்த மாணிக்கம், இன்று கிடங்கின் கணக்குப்படி அளந்தால் ஸ்வயம்பு மாணிக்கம் கூட கோடி 195 கூட மேலும் சில, ஒன்றிரண்டு மாணிக்கம் படி எடுத்துப் பொறுக்கிச் சேமிக்கிறேன். ஹுஜூர் ஸ்வாரி[75] இன்று கோட்டையிலிருந்து திருவையாறுக்குச் செல்லும்பொழுது, நான்கு ஐந்து மாணிக்கங்கள் மாதிரிக்குக் கொடுத்து அனுப்புவதற்கு உத்தரவாகி இருந்தது. அந்த மாணிக்கத்தில் எல்லாம் ஒன்று கூட மாதிரி

66 பேகாயி - பைத்தியம்

67 காயிதே - ஒருவகை மலைசாதி(?)

68 பந்த்ஸ்வாமி - சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர் (பக்.86)

69 சேவைக்கு - பார்வைக்கு

70 பாலக - சிறுவன்

71 ஹரிசக்ரபாணி - இவர் நியாயசபையின் நீதிபதி

72 சாஷ்டாங்க நமஸ்காரம் - இருகை, இருமுழங்கால், இருதோள், மார்பு, நெற்றி ஆகிய எட்டுறுப்புக்கள் நிலந்தீண்டச் செய்யும் வணக்கம்

73 அரப்பக்காரர்கள் - அரபிமொழி பேசுபவர் (?)

74 வித்துமுதல்-விற்றுமுதல்

75 ஹுஜூர் ஸ்வார் - அரசரது சவாரி

இல்லை மாதிரியில் ஒவ்வொன்று அனுப்புவது என்றாலும், நிறைய மாணிக்கங்கள் அனுப்புவதற்குத் தான் உள்ளது. அதற்கு நான், அந்தக் கிடங்கைச் சோதனைச் செய்து சாமான் தனித்தனியாகச் செய்வதற்கு மிகவும் சிரமப்பட்டு ஒன்றுகூட விடாமல் பொறுக்கி எடுத்தேன். அந்தச் சிரமத்திற்கு ஜவாஹிர் ஆஜர் பார்த்ததெல்லாம் ஹுஜூர் சன்னிதானத்தில் கொண்டு வந்து காண்பித்து, ராஜ்மகாலுக்குக் கொடுப்பதற்கு உத்தரவாகி பாலகாவுக்கு ஜவாஜீர்[76] எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு திருவையாறுக்கு வருவதற்கு உத்தரவு ஆனது அல்லது ஜவாஹிர் மூட்டை கட்டி சீல் வைத்து ராஜேஸ்ரீ அண்ணுசாமியிடம் கொடுத்து அனுப்புவதற்கு உத்தரவு கொடுத்தால் அனுப்பிவைக்கிறேன். அல்லது ஸ்வாரி தஞ்சாவூருக்கு வந்த பிறகு பார்ப்பதற்கு இஷ்டமிருந்தால், ராஜ்மகாலில் கொடுத்து வைக்கிறேன். இதுதான் விண்ணப்பம்-அனுப்பியது நவம்பர் 2ம் தேதி இந்தப் பத்திரம் ஸ்வாரி முகாம் ராஜமான்ய ராஜே ஸ்ரீஹாரத மஜமூய ராஜேஸ்ரீ பாபாஜி ராமாஜி பண்டிட் இவர்களுடைய பார்வைக்கு அனுப்புவது.

சீல்

ஸ்ரீராம்பிரதாப்[77]

## 2-21-16

திர்த்தரூப ராஜமான்ய ராஜேஸ்ரீ பந்தஸ்வாமியின் சேவைக்கு, பாலக ஹரி சக்ரபாணி மிகவும் பணிவுடன் சாஷ்டாங்க நமஸ்காரம்

விண்ணப்பம்என்னவென்றால்-பெரியவர்களின் ஆசிர்வாதத்தால் க்ஷேமமாக இருப்பது, பிறகு நேற்று புதுக்கிடங்கு சோதனைப்போட்டு ஒரு லிஸ்ட்டு அனுப்பபட்டுள்ளது, இருந்தாலும் உடனுக்குடன் அனுப்புவது-

நேற்று இரண்டு பத்திரம் அனுப்பியுள்ளேன். அதற்கு பதில் அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன்.

புதுக்கிடங்கில் சில ஆயுதங்கள் இருக்கின்றன. அதை எங்கே சேர்ப்பது என்றும், அதற்கு ஹுஜூரில் விசாரணை செய்து உத்திரவு அனுப்புவீர்கள் என்றும் வேண்டுகிறேன். இதுதான் விண்ணப்பம்-அனுப்பினது நவம்பர் தேதி 5- இரவுமணி2[78]

(முன்னதில் இருப்பது போல இறுதியில் முகவரியும் சீலும் உள்ளது.)

## 2-21-17

திர்த்தரூப ராஜமான்ய ராஜேஸ்ரீ பந்த ஸ்வாமியினுடைய சரணச்சேவைக்கு, பாலக ஹரி சக்ரபாணி மிகவும் பணிவுடன் சாஷ்டாங்க நமஸ்காரம்-விண்ணப்பம் என்னவென்றால்-பெரியோர்களின் ஆசீர்வாதத்தால் எல்லோரும் க்ஷேமமாக இருப்பீர்கள்.

---

76 ஜவாஜீர் - ஜவாஹிர் - இரத்தினம்

77 ஸ்ரீராம் பிரதாப் - இது முத்திரை; அரசரது கையொப்பமும் இதுவே (பக்.365)

78 இரவு மணி இரண்டு - இதனால் அரசாங்க அலுவல்கள் இரவெல்லாம் நடந்தமை பெறப்படும். (பக்.86)

பிறகு-நேற்று ஒரு கடிதம் அனுப்பியுள்ளேன். அதிலிருந்து விவரம் தெரிந்து கொண்டிருப்பீர்கள். நேற்று ஹுஜூர் ஸ்வாரி அரண்மனைக்கு வந்து சென்றது. அப்பொழுது பாலக ஆஜராய் இருந்தான். கிடங்கைச் சோதனை செய்தாயா என்று கேட்டேன். அதற்கு எல்லாவற்றையும் சரிசெய்தேன். நேற்றுப் பார்த்த கிடங்கில் சிலவற்றை கண்டு எழுதினபடி ஒரு லிஸ்ட்டு தயார் செய்து அனுப்பினேன். ராஜ்மகாலில் உள்ளவர்களையும், கோனார்களையும் அமர்த்திக்கொண்டு சில சாமான்களைப் பார்த்திருக்கிறேன். அதையும் கணக்குசெய்து எழுதி அனுப்புகிறேன். தபால் கொண்டு வந்த ஆசாமியிடம் ஒரு வெள்ளை சால்வை பாலகாவுக்குக் கொடுப்பது என்று அனுப்பினேன். அது ஹுஜூர் சன்னிதானத்தில் இன்று காலை வந்து சேர்ந்தது. அது ஹுஜூரின் ஆனைப்படி அந்த சால்வை எடுத்துப் போர்த்தினேன். இதற்காக பெரியவர்களுக்கு அநேக சாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறேன்.

யானைக்கு நாடா அனுப்பியுள்ளேன். அது பிடித்தாலும் பிடிக்காமல் இருந்தாலும் எழுதி அனுப்புவதற்கு உத்தரவு செய்யவேண்டும். இது தான் விண்ணப்பம். அனுப்பினது தேதி 30-ராத்திரி மணி-2

மேற்சொன்ன கணக்கு முழுவதும் அனுப்பியுள்ளேன்.
(முகவரியும் சீலும் முன்போல)

## 2-21-18

லிஸ்ட்-ராமச்சந்திரராவ் வெங்கட்டராவ் போன்ஸ்லே ஜயதட்ச வ்யதிய பிரதிக ராஜ்யத்தில் சேனாமுகவர்ய ராஜேஸ்ரீ வராஹப்பையா ராமஸ்வாமி அய்யா சாம்பரத் கிருஷ்ணாஜி லெக்ஷ்மண் சுஹர்சன் 1234ம் ஆண்டு, சாலிவாகன சகே 1755 விஜய நாம சம்வத்ஸரம் எழுதிக் கொடுத்த விண்ணப்பம் என்னவென்றால்-

சேவக்[79]கினுடைய பெரிய அண்ணன் ராஜண்ணா போன்ஸ்லேக்கு சர்க்காருடைய கோட்டைக் கட்டளையில் 1 1/2 க்கு ஆசாமி[80] நடந்து கொண்டிருந்தது. அவருக்குப் பிறகு மேற்சொன்ன ஆசாமி சேவக்கின் பெயரில் ஆனது-அப்பொழுது சேவக்கின் அண்ணனின் மனைவிக்குச் சந்ததி இல்லை-அதற்காக சேவக்கின் பெயரிலும், மேலும் அவருடைய மனைவியின் ஆசாமி ஆனதனாலும் மேற்சொன்ன ஆசாமி படி ஒரு மாதத்திற்கு 3 பிரமாணம்[81] ஜீவனாம்சம் கொடுப்பது என்று முன்னால் பிரதிஷ்டித சபை[82]யில் தீர்ப்பாகியிருந்தது-ஆனாலும் மேற்சொன்ன ஆசாமி ஜீவனாம்சம் 3, மாற்றியது 1,[83] ஆக 1, 3 போக[84] சேவகனுக்கு 2 சேர்ந்திருந்தது. பிறகு அதில் காலட்சேபம்[85] முடியாது என்று

79 சேவக் என்றது விண்ணப்பம் கொடுத்த ராமச்சந்திரராவ் வெங்கடராவ் போன்ஸ்லேயை

80 1 1/2 என்பது 3 1/2 என்றிருத்தல் வேண்டும்; ஆசாமி - அலுவல்

81 3 பிரமாணம் - மூன்றில் ஒரு பங்கு

82 பிரதீஷ்டித சபை - இதில் எல்லா வழக்குகளும் விசாரிக்கப்பெறும்; இது கோட்டைக்கு வெளியேயிருப்பது (பக்.168)

83. சீவனாம்சம் 3, மாற்றியது 1-மூன்றில் ஒரு பங்கு;

84 1,3 போக - மூன்றில் 1 போக

85 காலட்சேபம் - காலம் கடத்துவது

சர்க்காருக்கு மனு கொடுத்ததில், சர்க்கார் மேற்சொன்ன ஆசாமி விலக்கி வைத்து சேவகனுக்கு பழைய 3 1/2க்கு ஆசாமி செய்து கொடுத்தது. இதிலும் தனக்கு ஜீவனாம்சம் தரவேண்டும் என்று நியாயசபைக்கு சேவகனுடைய அண்ணனின் மனைவி பிராதி செய்தாள், ................அவளுக்கு ஜீவனாம்சம் தருவதற்குக் காரணம் இல்லை. ஏன் என்றால், அவனுடைய மனைவியின் ஆசாமி சேவக்கின் பெயரில் இல்லை. மேலும் அவள் தனியாக இருக்கிறாள். அவளுக்கு அம்மா சத்திரத்தில் இருந்து ஒரு உலுப்பை[86] அரை படிக்கு நடந்து கொண்டிருக்கிறது. அது மட்டும் அல்லாமல் ரவயா சேக்கடியில் ஒரு மாதத்திற்கு 2, 2 1/2 பிரமாணம் சம்பளம் நடந்து கொண்டிருக்கிறது. இதைத் தவிர 202 1/2 சக்கரயினுடைய ஹேவலை[87] விற்றுக் கொண்டிருக்கிறது. இவ்விதம் ஆஸ்தி இருப்பதனால், நாங்கள் ஜீவனாம்சம் கொடுப்பதற்கு காரணம் இல்லை என்று சொன்னதற்கு-அது ஒன்றும் தேவை இல்லை-முன்னால் திர்ப்பு ஆனபடி கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று பாப்பண்ணாவுக்கு பத்திரமும் அனுப்பப்பட்டு இருக்கிறது-ஆனாலும் அவளுக்கு மேற்சொன்னபடி ஆஸ்தி இருந்தாலும், சேவகினுடைய......... ஜீவனாம்சம் கொடுப்பது என்று பாப்பனம் செய்து இருக்கிறபடியால்- ஸ்ரீமந்த் சத்ரபதி[88] சாகேப் ஏழையின் மீது கருணை செய்து ஜீவனாம்சம் கொடுக்கவேண்டாம். இந்த விதமோ அல்லது அவனிடம் உள்ள 202 1/2க்கு பெறுமானமுள்ள நகை செலவு செய்வதற்கு அவளுக்குச் சுதந்திரம் இருக்கக்கூடாது. இந்தவிதமாகவோ-உத்திரவு செய்யவேண்டும்.

## 2-21-19

பால விசாரக பிரவர சேனாமுகவர்ய பாலகிருஷ்ணா ஜெட்டி வஸ்தாது இவருக்கு-

ஸாபான்[89] 25ந் தேதி இரவு-

1. வண்டிக்காரர்களின் தெருவில் லங்கபிகடகடி[90] இடத்திற்கு யோத்ய[91] ஆட்கள் ராமச்சந்திரபிள்ளை, கோபால பிள்ளை தாகட்டே இவர்கள் நியமித்து இருந்தாலும், சாதாரண வேளையில் அந்த ஆட்கள் இல்லாமல் மேற்சொன்ன விஸ்வரம்பிக்கு[92] பிராக்வானுக்கு அனுப்பினார்கள். அவர்கள் சென்றபொழுது திருடன் பிரதிஹாரில்[93] இருந்தான். அந்த சைனிக்கை[94] தடுத்து, விஸ்வரம்பியின் சைனிக்கை கண்டுபிடித்து, விஸ்வரம்பியில் நிறுத்தி, ஹர்சியின் ப்ரோல்[95] கொடுத்த ப்ரோல் கொண்டுபோகும்-

86 உலுப்பை - உணவுக்கு வேண்டிய அரிசி முதலியன

87 ஹேவல் - நகை (?)

88 சத்ரபதி என்றது சரபோஜியை

89 ஸாபான் - ஷ:பான் - முகம்மதிய மாதங்களில் எட்டாவது

90 லங்கபி கடகடி -(?)

91 யோத்ய - யோக்ய - தகுதியுள்ள

92 விஸ்வரம்பி- விசிரம்பி - விசிராமபி (?)- இளைப்பாறுமிடம் (?)

93 பிரதீஹார் - சீர்திருந்துமிடம்

94 சைனிக் - பட்டாளத்துப் பதவிகளில் ஒன்று

95 ப்ரோல் - (Parole); காவல் அதிகாரிகள் பயன்படுத்தும் நடைமுறை அடையாளச் சொல்

ப்ராக்வானனுக்கு நீ, என்னிடம் ஸ்திரமாக ஏன் சொல்லவில்லை என்று பிரதிஹாரில் அந்தச் சைனிக்குக்கு அடித்தான் அதற்கு பிரதிஹாரவக சைனிக்தான் என்மேல் அநியாயமாக அடித்திருக்கிறான் என்று பிராதி சொல்லியிருக்கிறான்.

1. வஸ்தாது விஸ்ரம்பி சபேதாவுக்கு[96] நியமித்த யோத்ய சேனாத்யக்ஷ[97] பேதார் சாமி சிந்தே சேனாஹிபூ அண்ணாசாமி போன்ஸ்லே-இந்த ஆட்களையும் நியமித்து இருந்தும், சாதாரண வேளையில் செல்லக்கூடிய சேனாத்யட்ச பேதார் சாமி சிந்தே இவருக்கு தற்காலம் தலைவலி வந்து போவதற்குச் சக்தி இல்லாமல் இருந்ததனால்யூத பிரமுக[98] சமூத்வான்[99] ராமஸ்வாமி நாயக் என்பவரை அனுப்பின பொழுது விஸ்வரம்பி வகையறா சுற்றிப் பார்த்து அலிதர்வாஜி[100]யினுடைய விஸ்வரம்பியிடம் வந்தபொழுது ரோந்து[101] கூட வருகிற ஏழாவது பிருந்தையின்[102] பங்கவாலா மாஹார (அரிஜன்) பாதையில் செல்வதற்கு உத்திரவு கேட்டான். சமுதவான் உத்திரவு கொடுத்து, மேற்சொன்ன விஸ்வரம்பியின் ப்ரோல் கொண்டு வரும்பொழுது, இதற்குள் மேற்சொன்ன தர்வாஜின் பக்கத்தில்........கடையில் ஒரு அரிஜனப் பெண் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் அந்த ஹரிஜன் தன்மேல் கையைப் போட்டான் என்று திட்டினாள். மேற்சொன்ன ஹரிஜனும் திட்டினான். அதற்குப் பக்கத்தில் இருந்த கடையினுடைய எண்ணெய்க்காரன் என்ன சத்தம் போட்டு ஜோராவரி[103] செய்கிறாய் என்று கேட்டு எழுந்திருந்து விசாரித்ததற்கு, அதற்கு ஹரிஜன் எண்ணெய்க்காரனைத் திட்டினான். இதற்குள் ப்ராக்ருத ஹோராவின் சமுதவான் மேற்சொன்ன விஸ்வரம்பியின்-ப்ரோல் எடுத்துக் கொண்டு வந்தான். அவன் வந்து இதன் விஷயமாக..................மேற்சொன்ன சப்தவிருந்தையின் ஹரிஜனுக்கு பிரதிஹாரில் வைத்திருக்கிறது.

மேற்சொன்ன இரண்டு விஷயங்களையும் விசாரணை செய்வதற்காக பால பிரமுக சேனாமுகவர்ய ராஜஸ்ரீ வராஹப்பையா ராமஸ்வாமியப்பா தெரியப்படுத்துகிறார்.

வருஷம் 34[104], ஸாபான் 27ந் தேதி, பல பிரமுக சேனாமுகவர்ய ராஜேஸ்ரீ வராஹப்பையா (இது தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்டுள்ளது).

---

96 சபேதா - சுபேதார் (?)

97 சேனாத்யக்ஷ - சேனைத்தலைவன்

98 யூதபிரமுக - சேனைத் தலைவர்களிற் சிறந்த

99 சமுத்வான் - பட்டாளத்துப் பதவிகளில் 48 சிப்பாய்களுக்குரிய தலைவர்கட்குத் தலைவன் (பக்கம் 342)

100 அலிதர்வாஜா - வடக்குவாயில் (போ.வ.ச.பக்.79)

101 ரோந்து - இரவில் காவல்

102 பிருந்தை - பிருந்தம் - கூட்டம்

103 ஜோராவரி - சோராவரி-பலாத்காரம்

104 வருஷம் 34 - கி.பி.1834

## 2-21-20

நம்பர் 1

ஜனவரி 10, வருஷம் 1836 ஆங்கில ஆண்டு

சேனாதிபதி பிரபஹர ராஜேஸ்ரீ கிருஷ்ணாஜி கேசவ பண்டித[105] இவருக்கு முத்ரீத சபை[106] யினுடைய அத்யட்ச[107] கோவிந்தாச்சார்யர் இவர்கள் - என்னுடைய பெயரில் அனுப்பின இரண்டாவது நம்பருடைய பத்திரத்தில் - ராமக்கா என்பவளின் ..................மகன் வீரராகு நாயக் என்பவரின் ஜீவனாம்ச விஷயம் லிஸ்ட் கொடுக்கப்பட்டுள்ளது - வெங்கட்டசாமி நாயக் என்பவன் தனக்கு சுப்ப ஹவல்தாரிடம் ரூபாய் 18 1/2க்கு பெறுமான முள்ள நகை வகையறா வரவேண்டும் என்று லிஸ்ட் கொடுத்திருக்கிறார். ஆனாலும் மேற்சொன்ன லிஸ்ட்டில் உபயவாதியும் வ்யவஸ்தித ஜனங்களுக்கும் அதனுடைய விசாரணை அங்கேயே நடக்கும் என்று தெரிய வருவதானால், முன்னால் லிஸ்ட் இரண்டும் இந்தக் கடிதத்தில் விவரமாக அனுப்பியுள்ளதை அறிந்து இருப்பதனால் -மேற்சொன்ன ராமக்காவின் லிஸ்ட் நம்பர்-1 வெங்கட்டசாமி நாயக்கின் யாதி[108] நம்பர்-2 இந்தப் பிரமாணம் நம்பர் போட்டு இந்தப் பத்திரத்தில் வைத்திருக்கிறேன் - கிடைத்த பிறகு பிரதிபத்திரம்[109] அனுப்பவேண்டும் என்று நியாயதிஸ ராஜேஸ்ரீ ஹிரோஜி காலேராவ் கேட்டுக்கொள்கிறார்.

சாலிவாகன சகே 1757[110] மன்மத சம்வத்ஸரம், புஷ்ய வத்ய 6,[111] வருஷம் 1836[112] ஆங்கில ஆண்டு, ஜனவரி மாதம் 10ந்தேதி - முகாம் கோட்டை..............

நியாயாதிஸ ராஜேஸ்ரீ ஹிரோஜி காலேராவ் -இரண்டு லிஸ்ட் அனுப்பப்பட்டுள்ளது - அதன் நம்பர் -1

## 2-21-21

நகல்

ராஜமான்ய ராஜேஸ்ரீ அப்பாசாகேப் இவர்களுடைய சேவைக்கு ராஜேஸ்ரீ ஹரி

---

105 கிருஷ்ணாஜி கேசவ் பண்டிதர் (பக்கம் 83-84)

106 முத்ரிதசபை - தஞ்சையில் சரபோஜி காலத்தில் இருந்த நான்கு நீதிமன்றங்களில் ஒன்று. இதில் சிறிய வழக்குகள் விசாரிக்கப்பெறும். பெரும்பாலான வழக்குகள் இதில்தான் முதன்முதலில் அனுமதிக்கப்பெறும் (பக்.168-169)

107 அத்யட்சர் - தலைவர் (நீதிபதி)

108 யாதி - விண்ணப்பம்

109 பிரதிபத்திரம் - பதில் கடிதம்

110 சகம் 1757 (+78) -கி.பி.1835

111 புஷ்யம் - தை மாதம்; வத்ய - தேய்பிறை; 6- சஷ்டி

112 தை மாதம் ஆகையால் ஆங்கில ஆண்டு 1836 ஆயிற்று

சக்ரபாணி[113] செய்யும் அநேக அமோக[114] ஆசீர்வாதங்கள் உபரி[115] -மாஹல் நகாரா[116] தாஸ்தான்[117] வஸேகட்டில்[118] உள்ள எல்லாவற்றையும் வசூல் செய்வது என்று ஹுஜூரின்[119] உத்தரவு ஆனது - அதற்கு இதுநாள் வரையில் வஸேகட்டில் 5.........................வசூல் ஆனது-பாக்கி கண்டிப்பாக வசூல் செய்யும் விஷயத்தில் சேவக் ஜாக்ரதை செய்கிறான். ஆனாலும் பாலேகாரர் சிதம்பரம் பிள்ளை வகையறா பெயர்ப்படி வரவேண்டிய பாக்கிற்கு அவர் அவர்களுடைய பங்கில் குறைத்து ஹுஜூரின் உத்தரவு ஆனபடி ............ பெற்றுக்கொண்ட லிஸ்ட் அனுப்பப்பட்டிருக்கிறது - ஆனால் அதில் எழுதியுள்ள விஷயம் தங்களுடைய மனதிற்கு வந்தால் ஹுஜூரில் ஆஜர் செய்து -அதன்படி வஸேகட்டு வசூல் ஆகும் விஷயம் தாக்கீது[120] செய்கிறேன் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அனுப்பினது ஸப்பர்[121] மாதம் 18ந்தேதி -இரவு மணி 2-

## 2 -21 -22

ராஜேஸ்ரீ பாபாஸ்வாமியின் சேவைக்கு - சேவக் பாபாஜி கங்காதர் செய்யும் அநேக நமஸ்காரங்கள் - வினந்தி - விண்ணப்பம் என்னவென்றால் -

மகாலின் கிடங்கில்.............வகையறா பார்ப்பதற்கு ராஜேஸ்ரீ ஹறிபந்த் என்பவர் சோதனை செய்தார் - அந்த கிடங்கில் உள்ள சாமான் எல்லா மகாலிலும் விலை செய்வது இன்னமும் பூர்த்தி அடையவில்லை. ஆதலால் - அது ஆனவுடன் வேலை நடக்கும்படிச் செய்கிறேன் - பாக்கி வேலைக்கு ஹவல்தார்[122] வந்தவுடன் அதையும் நடக்கும்படிச் செய்கிறேன் - விஷயம் என்ன எழுதுவது - இதுதான் வினந்தி - அனுப்பினது ஐப்பசி மாதம் 26ந்தேதி இரவு 2 மணி.

## 2 -21-23

ராஜேஸ்ரீ பாபா ஸ்வாமியின் சேவைக்கு,

சேவக் பாபாஜி கங்காதர் செய்யும் அநேக நமஸ்காரங்கள் - வினந்தி விண்ணப்பம் என்னவென்றால், பானுவாரம் (ஞாயிற்றுக் கிழமை, 7மணி அளவில் ஜிராத் கானாவின் மத்யஸ்தர் ராஜேஸ்ரீ ஹறிபந்த் என்பவர் ராஜேஸ்ரீ சாகேப்பிடம் வந்து ஜாம்தார் கானாவின் கிடங்கு......... செய்து முன்னால் மத்யஸ்தர் ராமஸ்வாமி வைத்துக் கொண்டிருந்தார் - அதைச்

113 ஹறிசக்ரபாணி - இவர் நியாயசபையின் நீதிபதி (பக்.175)

114 அமோக - மிகுதியான; பல

115 உபரி - மேல்

116 மாஹல் நகார் - நகார்கானா; டமாரம் போன்ற பல வகையான ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பெற்ற இடம்

117 தாஸ்தான் (மகால்) - நெற்களஞ்சியம்

118 வஸேகட்டு - வடக்கட்டு - ஒப்படைத்த பொருள்

119 ஹுஜூர் - அரசர்

120 தாக்கீது - உத்தரவு

121 ஸப்பர் - முகமதியர் மாதங்களில் இரண்டாவது

122 ஹவல்தார் - இராணுவ அதிகாரி (பக்.75)

சோதனை செய்து பார்க்கவேண்டும் என்று மேற்சொன்ன மகாலின் ஹவல்தார் அப்பாசாமிக்கு ஹுஜூரின் உத்தரவு ஆனது என்று ஹவல்தார் அவர்கள் சொன்னார்கள் - அதன்படி நடக்கட்டும் என்று சொன்னேன். உடனே வேலை வந்ததனால் த........ ..... முடிந்த பிறகு சோதனை செய்வது என்று சொன்னேன். இப்படி இருக்கும் பொழுது ராஜேஸ்ரீ ஹரிபந்த் என்பவர் அந்தக் கிடங்கில் ................ இருக்கிறது - அந்தக் கிடங்கிற்கு தன்னுடைய மகாலிலிருந்து வருவதற்கு தர்வாஜில் இருந்து மறுபடியும் நுழைந்து வளைந்து வந்துள்ளது - அந்த கிடங்கு தன்னுடைய மகாலில் சேர்ந்துள்ளது - அதில் சென்று பார்க்கும் பொழுது தன்னுடைய மகாலின் சாமான் இருக்கிறது என்று ராஜேஸ்ரீ சாகேபுக்குச் சொல்லி..........கங்காஜி பாபாவுக்குக் கூப்பிட்டுக் காண்பித்தேன் என்கிறான் - அப்பொழுது மகாலின் ஜாம்தார் ............ இருக்கும் சுப்பராவ் காங்கவே என்பவர் அந்த சாமானும் கிடங்கும் எங்களுடைய மகாலில்தான் சேர்ந்தது என்று கூறுகிறான். அதற்கு அந்த கிடங்கில் ஆள் இறங்கி கூப்பிட்டால் உங்களுடைய தர்வாஜ் பக்கத்தில் நீங்கள் இருந்தால் அந்த சத்தம் உங்களுக்குக் கேட்டால் உடனுக்குடன் சொல்லவும் - அதன்படி ஆள் உள்ளே இறங்கி கூப்பிடும் சத்தம் வெளியே கேட்டால், அதன் பிறகு கங்காஜி தாஜி சும்மா கிடக்கும் மண்ணிலிருந்து மூடி விடுவார்கள் என்று இதன்படி நடக்கும் விவரம் நேற்று மங்களவாரம்[123] 7 மணிக்கு மகாலின் கணக்குப் பிள்ளை வந்து சொன்னான். ஹரிபந்த்க்கு அந்தக் கிடங்கில் இருந்த சாமான் பார்த்து எழுதிக் கொண்டு போவான். அதற்கு தடை செய்யக் காரணம் இல்லை என்று ஸ்வாரி[124] மகாலில் இருந்து எழுதி வந்துள்ளது - நாங்கள் ஆஜராய் உள்ளோம் என்று ஹரிபந்த் சொன்னதாக வந்து சொன்னான். உடனே மகாலுக்கு வந்தேன். மகாலில் உள்ளவர்கள் எங்களுடைய கிடங்கின் சாமான் - அவர்கள் வந்து பார்ப்பதற்கே காரணம் இல்லை என்று சொன்னார்கள். அப்படி இல்லை. சர்க்காரின் உத்தரவுப்படி நடக்கவேண்டும் என்று சொல்லி - ஹரிபந்த்க்குச் சொல்லியனுப்பி - கிடங்கின் .......... எடுத்து - ஹரிபந்த் - அவருடைய ஹவல்தார் - நிசிந்தை[125] கணக்குப்பிள்ளை - அவர்களுடைய............ மகாலின் ஜாம்தார் கணக்குப்பிள்ளை வகையறா சென்று சாமான் எல்லாவற்றையும் வெளியில் கொண்டு வந்து...........பார்த்து எழுதிக் கொண்டான் - அவர்களும் எழுதிக் கொண்டார்கள். பாக்கி சாமான் முத்திரை போட்டு, மறுபடியும் அந்தக் கிடங்கில் வைத்து.......செய்து ராத்திரி 2 மணிக்கு எல்லோரும் புறப்பட்டு வீட்டிற்கு வந்தோம். உடனே புதன் கிழமை காலை ஹுஜூரின் ஸ்வாரி கோட்டைக்கு வந்தவுடன் ராஜேஸ்ரீ ஹரிபந்த் சமாசாராங்களைக் கூறி சாமான் எழுதின லிஸ்ட்டையும் காண்பித்தார். அப்பொழுது சேவக்கும் அருகிலேயே இருந்தான். சேவகனிடம் ஒன்றும் கேட்கவில்லை - வர்த்தமானம்[126] தெரியவேண்டும் என்று எழுதப்பட்டிருக்கிறது - நேற்றுப் பார்த்த இரண்டு ஆயிரம் கடி காசுகள், பேட்டை[127] சூலி

---

123 மங்களவாரம் - செவ்வாய்க்கிழமை

124 ஸ்வாரி - சவாரி

125 நிசிந்தை - கோயில் கணக்கன்

126 வர்த்தமானம் - செய்தி

127 பேட்டை - பரங்கிப்பேட்டை

பணம்[128] 6, 3-, ருத்ராட்சை[129] மாலை சிலது, [130]வெள்ளி இலைகள் - தங்க இலைகள்..........அவர்களிடம் சாமான் எழுதின ராக்கீது[131] இன்னும் சோதனை செய்து பார்த்து, விஷயம் எழுதி அனுப்புகிறேன் - சாமான் வந்து சேர்ந்த பிறகு சேவைக்கு வரவேண்டுமென்று ..........உத்தரவு போட்டு அனுப்பினால் நல்லது. விஷயம் என்ன எழுதுவது - இதுதான் விண்ணப்பம் - அனுப்பினது புதன்கிழமை பகல் மணி 3.

## 2-21-24

நிஜ ஆஸ்விஜ பகுளம்[132], பானுவாரம்[133], ராஜேஸ்ரீ சாகேப்பின் சேவைக்கு சேவக அண்ணுராவ் தளவி செய்யும் அநேக சாஷ்டாங்க தண்டனிட்டு[134] - விண்ணப்பம் - என்னவென்றால்

நிஜ ஆஸ்விஜ சுத்தம் ஏகாதசி ஸ்திரவாரம்[135] - அனுப்பின காகிதங்கள் வந்து சேர்ந்து எழுதினது மனதிற்கு தெரிந்தது.

1................. ஏரியிலிருந்து படி பத்தா[136]-வுக்கு ஐவேஜ்[137] இரண்டு கழித்து வைத்திருந்தது- அது ..............மேற்சொன்னவரிடம் கொடுப்பது என்று உத்தரவு வந்த பிறகு- அந்த ஐவேஜ் கொடுக்கப்பட்டது.

1. ஹசர்யாவுக்கு ஆடுகள் வருஷத்திற்கு வழக்கப்படி அவர் அவர்களுக்கு கொடுப்பது என்று உத்தரவு வந்தபடி கொடுக்கப்பட்டது.

1. வஹங்க மகாலுக்கு 5 கஜம் நீளமான அட்டை 8, 3 1/2 கஜம் நீளமான அட்டை 4, ஆக 12 அட்டைகள் 4 வண்டிகளில் ஏற்றி அனுப்பியிருந்தாலும், நகர பரிஷ்கார் மகாலில்[138] விலை செய்வதற்கு உத்தரவு விடவேண்டும்.

---

128.32 காசு -1 பணம்

129 ருத்ராட்சை - உருத்திராக்கம்

130 சிலது - சில

131 ராக்கீது - (?) (தாக்கீது - உத்தரவு)

132 நிஜ ஆஸ்விஜ - சில ஆண்டுகளில் ஒரோவழி பதின்மூன்று மாதங்கள் வரும்.ஒரு மாதம் இரட்டிக்குங்கால் முதற்கண் வருவதை அதிக மாசம் என்றும் அடுத்ததை "நிஜமாசம்" என்றும் கூறுவர்.ஆஸ்விஜ - ஐப்பசி; பகுளம் - தேய்பிறை

133 பானுவாரம் - ஞாயிற்றுக்கிழமை

134 சாஷ்டாங்கதண்டனிட்டு - இருகை, இரு முழங்கால், இருதோள், மார்பு, நெற்றி ஆகிய எட்டுறுப்புகள் நிலந்தீண்டுமாறு வணங்கி

135 சுத்தம் - வளர்பிறை ; ஏகாதசி - பதினொராம் நாள்; ஸ்திரவாரம் - சனிக்கிழமை

136 படிபத்தா - படிப்பணம்

137 ஐவேஜ் - பொருள்; பணம்

138 நகரபரிஷ்கார் மகால் - ஊரைத்தூய்மையாக வைத்துக் கொள்வதற்குரிய மகால் ஆதல் கூடும்

1. தீபாவளிப் பண்டிகைக்கு எண்ணெயும், சீயக்காயும் சென்ற வருட வழக்கப்படி விலை கொடுத்து வாங்குவதற்கு உத்தரவு விட வேண்டும்.

1. பெரிய கப்பலின் வேலையும், வஹங்க மகாலில் அட்டையின் வேலையும் வழக்கப்படி நடந்து கொண்டு இருக்கிறது. சேவைக்கு .................. அனுப்பியது நிஜ ஆஸ்விஜ பகுள த்ரிதியா உபரி சதுர்த்தி ஸ்திர வாரம்[139] அருணோதயம்- சாலிவாகன சகே 1744[140] சித்ரபானு நாம சம்வத்ஸரம் ஸப்பர் 17ந் தேதி-

1. கணக்குச் செய்வதற்கு வெள்ளைக் காகிதங்கள் இல்லாமல், மிகவும் தடங்கலாக இருப்பதனால், நான்கு ஐந்து மடிப்பு உள்ள காகிதங்களை கொடுத்து அனுப்புவதற்கு உத்தரவு விட வேண்டும்.

1. லெக்ஷ்மி நரசிம்மபுரம்[141] சங்கராஜி எஸ்வந்த் இவருக்கு நான்கைந்து மாதத்திற்கான சம்பளத்தின் ஐவேஜ் பாக்கி இருக்கிறது என்று தஞ்சாவூருக்கு வந்திருக்கிறார்- ஆனால் ஆஸ்ரீத வட்டத்தின்[142] மத்யஸ்தருக்கு தாக்கீது[143] செய்து சம்பள ஐவேஜ் சீக்கிரமாக கொடுத்து மேற்சொன்னவருக்கு ஐந்தாறு தினங்களில் வந்து சேருவதற்கு, அனுப்பிக் கொடுப்பதற்கு உத்தரவு செய்ய வேண்டும்.

1. கோடிக்கரை அப்பண்ணா ஹவல்தார்- இவரிடம் வஸேகட்டு[144] 50 வரையில் உள்ளது............... மண்டபத்தின் வேலைக்கு செங்கல் இல்லாமல் தடையாக உள்ளது - இருந்தாலும் ஹவல்தாருக்கு தாக்கீது செய்து கோடிக்கரைக்குச் சீக்கிரமாக வந்து சேருவதற்கு அனுப்பிக் கொடுப்பதற்கு உத்தரவு செய்ய வேண்டும்.

## 2-21-25

லிஸ்ட் சௌபாக்யவதி[145] மாதோ ஸ்ரீ அஹில்யாபாயி சாகேப்[146] பேட்டையின் வர்த்தகம்- சூகர்சன் 1223ம் வருஷம்[147] சாலிவாகன சகே 1744[148] சித்ரபானு நாம சம்வத்ஸரம் எழுதிக் கொடுத்த லிஸ்ட் என்னவென்றால்-

1. மேற்சொன்ன பிராது செய்த அந்த ............ ராமஸ்வாமியின் வீடு லயனில் கடைக்குப் பின்னால்.

---

139 த்ரிதியா - மூன்றாவது நாள்; உபரி - மேல், சதுர்த்தி- நான்காவது நாள்; ஸ்திரவாரம் - சனிக்கிழமை

140 சகம் 1744 (78) - கி.பி.1822

141 லக்ஷ்மி நரசிம்மபுரம் - பட்டுக்கோட்டை தாலுகாவில் உள்ள ஒர் ஊர்

142 ஆசிரித வட்டம் - சார்ந்திருப்பவர்கள் கூட்டம்

143 தாக்கீது - உத்தரவு

144 வஸேகட்டு - வசக்கட்டு - சொத்திருப்பு

145 சௌபாக்கியவதி - மாங்கலியம் தரித்த பெண்டிர் இவர்களின் பெயர்க்கு முன்னால் வழங்கும் மங்கலச் சொல்.

146 அஹில்யாபாயி - சரபோஜியின் மனைவி; இரண்டாம் சிவாஜியின் தாய்

147 சூஹர்சன் 1223 (+599) - கி.பி. 1822

148 சகம் 1744 (+78) - கி.பி. 1822

3. இதற்கு சாட்சிக்காரர்கள்.

1. வேலாயுதம் - இவருடைய வீடு லயனில் சுண்ணாம்புக்காரர்கள் தெருவில்

1. ஆட்டுக்காரன் - ராமஸ்வாமியின் வீடு லயனில் ரோஸிநாயக் தெருவில்
1. பாவாடை வீடு - கோட்டையில் பிச்சாண்டி முதலி சந்தில் = 3 = 4

## 2-21-26

லிஸ்ட் - சௌபாக்யவதி மாதோஸ்ரீ அஹல்யாபாயி சாகேப் பேட்டையின் வர்த்தகம் - சூஹர்சன் 1223ம் ஸெல, சாலிவாகன சகே 1744, சித்ரபானு நாம சம்வத்ஸரம் எழுதிக் கொடுத்த லிஸ்ட் என்னவென்றால் - நல்லவர்களாக உள்ளவர்களின்வீடு லயனில் -

1. அரிசிக்கடைக்காரன் ராமஸ்வாமியின் வீடு கடைத்தெருவில் லயனில் -

1. கசாப்புக்காரன் அண்ணாசாமி வீடு, பலசரக்கு அருணாசலம் மளிகைக் கடையின் பின்னால் லயனில் -

1. சர்க்காரின் கணக்குப்பிள்ளையின் வீடு கடைக்குப் பின்னால் லயனில்.

1. வேலாயுதத்தின் வீடு லயனில் கடையின் 2வது லயனில் -

1. பழனியின் வீடு கோட்டையில் ராஜெஸ்ரீ தத்தாஜியப்பா வீட்டிற்குப் பக்கத்தில்

3. சேஷாசலம், அரியபுத்ரன், கோவிந்தன் - இந்த மூவரின் வீடு கோட்டையில் ராஜெகோபாலஸ்வாமி கோவிலின்[149] சந்தில் = 8

1. பாணக்காரன் விருநாயக் - இவருடைய வீடு சந்தியாமண்டபத்தில்[150] இருக்கிறது = 9

## 2-21-27

லிஸ்ட் - கரத்தட்டாங்குடி, வடிவாசல் பேட்டைக்கு - ஸெல 16லிருந்து ஸெல 18[151] வரையில் 3 ஸெலதிற்கு சராசரிப்படி மாதோஸ்ரீ தாகட்டே ஆவுசாகேப்-சூஹர்சன் 1223ம் ஸெல, சாலிவாகன சகே 1744, சித்ரபானு நாம சம்வத்ஸரம் -

வடிவாசல்பேட்டை -

183,2 1/4,2 வீசம் - ஸெல 16 யூவ[152] நாம சம்வத்ஸரம் கடை 38
210,3 வீசம் - ஸெல 17, தாத்ரு[153] நாம சம்வத்ஸரம் கடை 38
215,1/2,4 - ஸெல 18, ஈஸ்வர்[154] நாம சம்வத்ஸரம் கடை 37 = 609,1 1/2, 1 வீசம்

---

149 ராஜகோபால சுவாமி கோயில் - தஞ்சை வடக்கு வீதியிலுள்ளது

150 சந்தியா மண்டபம் - வெண்ணாற்றங்கரையிலுள்ளது (பக். 213 இல் 41)

151 வருஷம் 16 - கி.பி.1816; வருஷம் 18 -கி.பி. 1818

152 யூவ - யுவ; ஆண்டறுபதனுள் 9ஆவது

153 தாத்ரு - தாது; ஆண்டறுபதனுள் 10ஆவது

154 ஈசுவர - ஆண்டறுபதனுள் 11 ஆவது

இதற்குச் சராசரி கடை ஒன்றுக்கு ஞூதிற்கு 5, 3 3/4, 2 வீசம், 1/2

.............., .........................மாதம் 1க்கு 4 1/4, 3வீசம், 3/4, 2 வீசம், 3 /4, 1 வீசம், 1/2

தேவஸ்தானம் மகமா பிள்ளையார், அனுமார் கூட 3 வருஷத்தில் விவரம் 114, 1 1/2, 1 வீசம்

மேற்சொன்ன கடை 1க்கு வருஷத்திற்கு 1, 1 வீசம், 1/2, 2 வீசம்.

இதற்கு மாதம் 1க்கு 723, 3, 1/8க்கு

கடை 1க்கு ஞூதிற்கு
6, 4, 2 வீசம்
இதற்கு மாதம் 1க்கு = 3/4, 1 வீசம், 1/2

கருந்தட்டான்குடி பேட்டை

96, 1 3/4, 3 வீசம் - ஞூ 16 யூவ நாம சம்வத்ஸரம் கடை 34.
100, 1 3/4, 1 வீசம் - ஞூ 17 தாத்ரு நாம சம்வத்ஸரம் கடை 35.
ஞூ 18, ஈஸ்வர் நாம சம்வத்ஸரம் கடை 41 = 110 = 324, 1/2, 2 1/4, 1/8, 1/2

மாதோஸ்ரீ தாகட்டே ஆவுசாகேப்

கரத்தட்டான்குடிபேட்டை வடிவாசல்·சூஹர்சன் ஞூ 1225

இதற்கு சராசரி கடை
ஒன்றுக்கு ஞூதிற்கு

2 1/2, 4 1/2, 1/4, 1 வீசம்.

மாதம் ஒன்றுக்கு, 2 1/4, 3 வீசம், 1/4..........., 3/4, 1 வீசம், 1/4

தேவஸ்தானம் மகமா பிள்ளையார், ஹனுமார் - 3 ஞூதில் விவரம் 109, 4.

மேற்சொன்ன கடைக்கு ஒரு ஞூதிற்கு

1/2, 4 3/4, 3 வீசம், 1/8.

மாதம் ஒன்றுக்கு ............... 1 1/4, 1/8, 1/2 க்கு

கடை ஒன்றுக்கு ...............3 1/2, 4 1/4, 3 வீசம், 3 வீசம்.

இதற்கு ...........1க்கு = 3 1/4, 1/2, 2 வீசம்.

## 2-21-28

மஸரூல்[155] ஹஜரத்[156] மஜம்தார்[157] ராஜெஸ்ரீ பந்த்ஸ்வாமி[158]யின் - சேவைக்கு.

155 மஸரூல் - மரியாதைச் சொல் - மதிப்பிற்குரிய

156 ஹஜரத் - சிறந்தவர்

157 மஜம்தார் - மஜூம்தார் - நிலவரிக் கணக்கு எழுதும் பொறுப்புடையவர்

158 பந்த்சுவாமி - சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர் (பக்.86)

சாகேப் கிருஷ்ணாஜி ராமாஜி செய்யும் அநேக நமஸ்காரங்கள் - விண்ணப்பம் என்னவென்றால் - நேற்று இரவு சாலவநாயக் பட்டிணத்திலிருந்து இரண்டு கடிதங்கள் வந்தன. அதை இந்தப்பத்திரத்தில் விவரித்து உடனுக்குடன் அனுப்பினது தங்களுக்குத் தெரியவேண்டும் என்று எழுதியுள்ளேன். சாலவ நாயக் பட்டிணம் - நாட்டியக்காரிக்கு நெல்லின் ஜாபிதா எழுதி அண்ணுசாமியிடம் கொடுக்கப்பட்டது. சேவக்கிற்கு உத்தரவு ஆனபடி புதன்கிழமை காலை கிளம்பி நாகப்பட்டினத்திற்குச் செல்கிறான். சேவைக்குத் தெரியவேண்டும் என்று எழுதியது.

- அனுப்பினது நிஜ ஆஸ்வீஜ பகுள சஷ்டி[159] சோமவாரம் (திங்கட்கிழமை) இரவு மணி 2. சகே 1744,[160] சித்ரபானு நாம சம்வத்ஸர, ஸப்பர்[161] 17ந்உ

## 2-21-29

ஆஸ்விஜ பகுள 5
பானுவாரம்[162]

ராஜேஸ்ரீ சாகேப்பின் சேவைக்கு

சேவக் மாதவ பாபாஜி செய்யும் அநேக ஆசீர்வாதங்கள் - விண்ணப்பம் என்னவென்றால் - நிஜ ஆஸ்விஜ சுத்த சஷ்டி சோமவாரம் அருணோதயம் வந்த ஒருபட்ச காகிதம், சப்தமி மங்களவாரம் அருணோதயம் வந்த பத்திரம் 1 - ஆக பத்திரம் இரண்டு பத்திரமும் வந்து எழுதினது மனதிற்குத் தெரிந்தது. கோதுமையின் பாகரி 6 ஒரு துணிப்பையில் போட்டு அனுப்பினது - அது வந்து சேர்ந்தது - மேஸ்தர் கர்னல் வில்லியம்[163] ரெசிடெண்ட் பிளாக்பரன் சாகேப் இவர்கள் பட்டினத்தில் ஆசாரி கோபாலசாரிக்கு இனாம் கொடுத்த ரூபயால் பகாசாயி வாங்கிக் கொள்கிறார்கள். இருந்தாலும் அங்குள்ள விவரம் எழுதவில்லை. இப்பொழுதும் இந்தக் கைப்பத்திரம் விவரமாகத் தெரிவதற்காக எழுதி அனுப்பவேண்டும் என்று உத்தரவு வந்ததனால் நேற்று பகல் 2 மணிக்கு அண்ணுராவ் ஹளவி தஞ்சாவூருக்குக் கிளம்பி வந்துள்ளார் - சேவைக்குத் தெரியப் படுத்துகிறேன் - அனுப்பினது நிஜ ஆஸ்விஜ சுத்த[164] விஜயதசமி[165] சுக்ரவாரம் அருணோதயம் - சாலிவாகன சகே 1744 - சித்ரபானு நாம சம்வத்ஸரம், ஸபர் மீ 9ந்உ

---

159 சஷ்டி - ஆறாவது நாள்

160 சகம் 1744 (+78) = கி.பி.1822, சித்திரபானு-ஆண்டறுபதனுள் 16 ஆவது

161 ஸப்பர் - ஸபர் - முகமதியர் மாதங்களில் இரண்டாவது

162 பானுவாரம் - ஞாயிற்றுக்கிழமை

163 கர்னல் வில்லியம் -வில்லியம் என்ற ஆங்கில சேனாதிபதி

164 சுத்தம் - வளர்பிறை

165 விஜயதசமி - ஆசுவிஜ மாத வளர்பிறைத்தசமி

## 2-21-30

தீர்த்த ஸ்வரூப ராஜமான்ய ராஜெ ஸ்ரீ பாபாஜி ராமாஜி[166] பெரியவர்களின் சரணார விந்தை[167] - பிரதிக்கு

பாலக வெங்கோபாவின் மூன்று காலமும் நமஸ்காரம் - வேண்டும் பிரார்த்தனை என்னவென்றால் - பெரியவர்கள் திருவையாறுக்குப் போகும்பொழுது, சந்திக்க முடியவில்லை- மூன்று நாட்களிலிருந்து சிகே[168] ஆகவில்லை என்று ஹுஜூரின் ஸ்வாரி ஆகும் வேளையில் ஹுஜூர் அறிந்த பிறகு சால்ஜாப்பு[169] ஆகவில்லை - இப்பொழுதும் ஸ்வாரி முகாமில் சிகே செய்வதற்கு ஒவ்வொரு மாதத்திற்கும் ரிஜிஸ்டரிலிருந்து................... விசாரித்து அறிந்து ஹுஜூரில் அறிவித்து பிறகு சிகே செய்ய வேண்டியுள்ளது - ஸ்வாரி முகாமில் இருந்து விவரத்தைக் கொண்டு வந்து - சிகே செய்யலாமென்றால் - இந்த விவரம் வந்து சேரவில்லை ஸ்வாரி கோட்டைக்கு வந்த பிறகு சிகே செய்ய வேண்டியதாய் உள்ளது - பெரியவர்களின் ஸ்வாரி முகாமில் உள்ளது - ஹுஜூரின் தரிசனம் தினமும் கிடைக்கும் - காவேரி ஸ்னானமும் ஆகும் - இங்கு வேலையும் இல்லை- பெரியவர்களின் ஸ்வாரிக்கு உத்தரவு வாங்கி பாலகாவுக்கு பெரியவர்களிடம் கூப்பிட்டுக் கொள்வதற்கு உத்தரவு வரவேணுமாய் பிராத்தனை செய்கிறேன்.

அனுப்பினது ஆஸ்விஜ சுத்த 13,[170] சோமவாரம் இரவு மணி 2.

## 2-21-31

ஸவ்வால் மீ 9 ந்உ

ஸ்மரனார்த்த - கல்யாண மாஹல்[171] - நிஷ்பதி[172] - சுஹுரசன் 1233[173] ம் ஸூ ஸவ்வால் 7 ந்உ தினம், சாலிவாகன சகே 1754[174] நந்தன நாம சம்வத்ஸரம் - சர்க்கார் நிஷ்பதி பாஜாரனுசார - கோவிந்தராவ் ராமசாமிக்குப் பதில் அப்தார் கானாவின்[175] சந்தில் வசிக்கும் இவருடைய மகனுடைய நிஷ்பதி ஷெ மகாலில் வேலை செய்யும் வீட்டில் அம்முபாய் என்பவள் ராமக்காவிடம் அடகு வைப்பதற்காககொண்டு வந்து கொடுத்த ஒரு (வைர) புல்லாக்கு[176] -

166 பாபாசி ராமாஜி - இவர் சர்க்கேல் (பக்கம் 86)

167 சரணாரவிந்தம் - திருவடித்தாமரை

168 சிகே - முத்திரை

169 சால் ஜாப்பு - கேள்விக்குப் பதிலிறுத்தல்

170 சுத்த 13 - வளர்பிறைத் திரயோதசி; சோமவாரம்- திங்கட்கிழமை

171 கல்யாண மகால் - சரபோஜியின் காமக்கிழத்தியர் இருந்த இடம் (பக்.329)

172 நிஷ்பதி - ஓர் அலுவல்

173 சுஹர்சன் 1233 (+599) = கி.பி. 1832

174 சகம் 1754 (+78) = கி.பி.1832

175 அப்தார்கானா - தண்ணீர்ப்பந்தல் (பக்கம் 455-456)

176 புல்லாக்கு - பெண்கள் மூக்கில் தொங்கவிடும் அணி

மேற்சொன்ன ராமக்கா என்பவள் - மேற்சொன்ன நகையைக் கொண்டு வந்து காண்பித்தாள் - அந்த மாலை (புல்லாக்கு) மேற்சொன்ன மகாலைச்[177] சேர்ந்ததாக இருப்பதனால் அதனை விசாரணை செய்து அனுப்புவது.

## 2-21-32

விண்ணப்பம் என்னவென்றால்

மஹாமதாயேராகாஸ சாலவநாயக் பட்டிணத்திலிருந்து கப்பலின் கலாசி[178] யாவர முபதலா வரவேண்டியுள்ளதால் அந்த ஐவேஜ் சாலவநாயக் பட்டிணத்திலிருந்து பெயர்வாரி ஜாபிதா வந்தபடி அவர் அவர்களுடைய பங்கில் கழித்துக் கொடுப்பதற்கு படிபத்தா - துபாரா[179] கழிக்கப்பட்டது - அந்த ஐவேஜ் மறுபடியும் அவர்களுக்குத் தரவேண்டும் என்று அண்ணுராவ் தளவிக்குச் சொல்ல வேண்டும் என்று உத்தரவு ஆனபடி நேருக்கு நேராகச் சொன்னேன் - அதற்கு அண்ணுராவ் தளவி என்பவர் - உத்தரவு ஆனபடி ஒரு கடிதம் எழுதி அனுப்பினால் சரி என்று சொன்னேன் - அதன்படி வரவில்லையாதலால் ........... எழுதுவது என்று சொன்னதினால் அண்ணுராவ் தளவி என்பவர் - கார்பார் பிரசங்கத்தில்[180] தெரிவித்து ஹுஜூர் பங்கிலிருந்து கோட்டை ஹிமாரதி[181]யின் கிருஷ்ணன் - இவரைக் கூப்பிட்டு - மேல எழுதினபடி ஐவேஜ் மஹாமதாயேசராங்காவுக்கு சேர்ப்பது என்று காகிதம் எழுதி சாலவநாயக் பட்டிணத்திற்கு அனுப்புவது என்று தாக்கீது செய்யப்பட்டது - அதன்படி தாங்கள் உத்தரவு போட்டதை அனுசரித்து கோட்டை ஹிமாரதிகாரர்கள் மேலே எழுதின ஐவேஜ் சேர்ப்பது என்று மஹமத யேசராங்கா இடம் காகிதம் எழுதிக் கொடுத்த வர்த்தமானம் தெரிய வேண்டும் என்று எழுதப்பட்டது.

சேட்டைக்கார் சுப்பண்ணின் சம்பளத்தில் பாதி சராங்காவுக்கு செலவுக்குக் கொடுப்பது - பாதிசம்பளம் ஹேஜிப்[182] - கங்காதர் அவர்கள் வாங்குவது என்று - இவர்கள் சம்மதித்து என்னிடத்தில் நேருக்கு நேர் சொன்னார்கள் - அணுராவ் தளவியும் சுக்கானின் ஹேஜிப்புக்கும் - சராகாவுக்கும் - இருவரின் சம்மதத்தில் நடத்துங்கள் என்று கூறினார் - இந்த வர்த்தமானம் ஸ்ருத ஹோயே[183] சாலவநாயக் பட்டிணத்திலிருந்து நான்கு பைபாகஸ[184] இங்கேயே பங்கு கொடுப்பது என்று நேருக்கு நேர் சொன்ன விவரம் தெரியும் - விசேஷம் என்ன எழுதுவது - இதுதான் விண்ணப்பம் -

அனுப்பினது ஆஸ்விஜ சுத்த 12.

---

177 மேற்சொன்ன மகால் என்றது கல்யாண மகாலை

178 கலாசி - கலாசு - மரக்கலத்தின் தொடர்பு உடைய

179 துபாரா - இருமுறை

180 கார்பார் பிரசங்கம் - சர்க்கேல் அலுவலகம் என்று தெரிகிறது. இது தரும சபையின் தீர்ப்புக்கு மேல்முறையீட்டுக்குரிய அவையாகலாம். இச்சபை வழக்குக்குரிய ஆவணங்களை வருவித்து ஆய்ந்து 'இசுபசால்' என்ற அவையில் மேல்முறையீட்டுக்கு அனுப்பும் (பக். 168)

181 ஹிமாரதி - இமாரதி - பழுதுபார்த்தலைக் கவனிக்கும் அலுவலர் (பக். 76)

182 ஹேஜிப் - கணக்குப் பிள்ளை (பக். 76)

183 ஸ்ருதஹோயே (?)

184 பைபாகஸ (?)

# 2-21-33

ஸ்மரனார்த்த - கஹம்ப மேற்சொன்ன ஜமா[185] வகையறா முத்திரையின் மனுவுக்கு - விவரம்.

1. மிருதங்கம் கட்டும் மேயனின் மனைவி ஆரோக்யம் என்பவள் தன்னுடைய வருஷத்தின் ஆசாமி தன்னுடைய மகனின் பெயரில் ஆகியுள்ளது. அதற்கு பங்காளி ஆபலாஹேர் வேலை செய்கிறான் - அவனை எடுத்து தன்னுடைய மகனிடமிருந்து வேலைவாங்கி அது ஒவ்வொரு மாதத்திற்கும் தன்னிடம் சேர வேண்டும் - இந்த விதமாக செய்யவேண்டும் என்று.

1. ஜயதட்ச வ்யதிய பிரதிக - ராமச்சந்திரராவ் வெங்கட்டராவ் போன்ஸ்லே - தன்னுடைய பெரிய அண்ணன் ராஜன்னா போன்ஸ்லே - இவருக்கு சர்க்கார் கோட்டைக் கட்டளையில் ஆசாமி இருந்தது. அவன் இறந்தபிறகு அது சாகேப்பின் பெயரில் ஆனதனால் அவனுடைய மனைவிக்கு ஜீவனாம்சம் கொடுத்து வந்த எல்லாவற்றையும் சர்க்கார் அவர்கள் அந்த ஆசாமி விலக்கிவிட்டு பிரதியகமாக நூதன ஆசாமி செய்து கொடுத்ததில் - தனக்கு ஜீவனாம்சம் தர வேண்டும் என்று - மேற்சொன்ன என் அண்ணனின் மனைவி நியாய சபையில்[186] பிராது செய்தாள் - சபையில் உள்ளவர்கள் ஜீவனாம்சம் தரவேண்டும் என்று பாபண்ண[187] செய்திருப்பதனால் - அதை தடுக்க வேண்டும் என்று.

1. பேஸவ் - வட்டாரத்தில் குடி இருக்கும் பஞ்சநதி அய்யா என்பவர் - தன்னிடம் இருந்த பிதுராஜித[188] வீடு ஏதோ கஷ்டத்தினால் ராமலிங்க அண்ணா என்பவரிடம் அடகு வைத்திருக்கிறான் - அந்த வீட்டிற்கு மேற்சொன்ன ராமலிங்க அண்ணா என்பவர் பூட்டியிருந்தும், சர்க்காரின் ஜபர் ஜஸ்தி காரர்கள்[189] வீட்டின் சுவர் வகையறா இடித்து ஜோராவரி செய்து இருக்கிறார்கள். அதற்கு சைனிதிஸ 50 வரையில் மேலும் தோட்டத்திற்கு 30 -ஆக 80 பெறுமானமுள்ள வஸேகட்டு சர்க்கார் கொடுத்து ஷெ வீட்டின் தடை உள்ளதை தனக்கு மீட்டு தரவேண்டும் என்று.

1. வ்யஷ்டநித் வ்யதிய பிரதிக சேக் இஸ்மாயில் தான் காயிலாக[190] உள்ளதனால் தன்னுடைய மச்சினியின் மகன் 9 வயதுடைய இப்ரராம் என்பவனை தான் தத்து எடுத்துக் கொள்கிறேன் என்கிறான் - இதற்கு உத்தரவு தரவேண்டுமென்று.

1. சம்ப்ரத தட்ச பிரதம பிரதிகசுப்பராவ் இவரின் மனைவி தாராபாய் என்பவள் - தன்னுடைய கணவனின் ஆசாமிக்கு தன்னுடைய ஜுன பாயிவிசி லேங்கரு கேவுன்

---

185 ஜமா - வரவு

186 நியாய சபை - தஞ்சையில் இருந்த நான்கு நீதிமன்றங்களில் ஒன்று (பக்.166)

187 பாபண்ண - தீர்ப்பு (?)

188 பிதுரார்ஜிதம் - தந்தை வழி முன்னோர் தேடிய சொத்து

189 ஜபர்ஜஸ்திகாரர் - அதிகாரமுள்ளவர்

190 காயிலாக - சுரவாய்ப்பட்டு

தாடவனேசா ஐவேஜ்[191] தன்னிடத்தில் தரவேண்டுமென்று கொடுத்த பிராதியை சேனாமுகவர்ய ராஜேஸ்ரீ வராஹப்பையா ராமசாமி நாயக்[192] இவர்கள் பத்திரத்தில் எழுதியுள்ளார்கள்.

1. பந்தநெல்லூர் கில்லேதார்[193] கோன் மிரகாகர் - இவனின் மனைவி ரோசன்பீ என்பவள் – தன்னுடைய புருஷனின் ஆசாமி, அவன் இறந்த பிறகு - அவன் அண்ணனின் மனைவியின் பெயரில் ஆகி - இரண்டு சக்ரம் மாத காலட்சேபத்திற்கு கொடுப்பது என்று - அதன்படி நடந்து கொண்டு வந்தது - இப்பொழுது அந்த 2 சக்ரம் கொடுப்பதற்கு தகராறு செய்கிறார்கள் - அந்த 2 சக்ரம் தனக்குச் சேரும்படியாக செய்யவேண்டும் என்று மேற்சொன்ன பத்திரத்தில் எழுதி வந்த பிராதி ஒன்று - இந்த விஷயத்தில் நிபந்தனைப்படி முத்திரையின் பத்திரத்தில் பிராது செய்தால் சேரும் -

1. கள்ளிக்கோட்டையில் வசிக்கும் முத்து ஹவல்தார் மகன் மருதமுத்து நாயக் என்பவன் - சிதம்பரம் ஸ்வாரியில் தன்னுடைய தந்தை இறந்தான் - அவனுடைய ஆசாமி எல்லாவற்றையும் இரண்டு சகோதரர்களின் பெயரில் செய்து கொடுப்பதற்கு உத்தரவு ஆனது - அதற்கு எதிராக அப்புநாயக் வகையறா சிபாரிசு செய்து - என்னுடைய தந்தையின் வைப்பாட்டியின் மகனின் பெயரில் ஒரு ஆசாமி செய்து தரும்படி அவனுடைய பெயரை சொல்லியிருக்கிறார்கள் - அதனால் அதை ரத்து செய்து அந்த ஆசாமி தன்னுடைய சகோதரனின் பெயரில் செய்து சர்க்கார் தன்னுடைய தந்தை குடியிருந்த அந்த கொட்டகையும்[194] தரவேணடும் என்று -

1. பனாரசி சம்ப்ரதி[195] பெயர்படி வ்யதிய பீரதிக ஹர்சி கரப்பண்ண நாயக் முத்து நாயக் - தாங்கள் பட்சவாயு[196] உபத்திரத்தில் இருப்பதனால் என்னுடைய ஆசாமி இரண்டாவது சம்மந்தத்தின்[197] மகனுக்கு செய்து தரவேண்டும்.

1. சர்க்கார் நிஷ்பதி பாஜாரனுசார - கோவிந்தராவ் ராமசாமி மனைவி இவருடைய மகனின் மூலமாக - கல்யாண மகால் நிஷ்பதி வைர (கற்கள் வைத்தது) புல்லாக்கு அங்குள்ள ராமக்கா என்பவளிடம் கொண்டுவந்து காண்பித்தாள். அது விசாரணை செய்யவேண்டுமென்று ஸ்மரனார்த்த கட்டு –

1. அப்பாஜி விஸ்நாத இவருடைய பிராதி ஒன்றும் விஷயம் பட ஆகியுள்ளது.

---

191 கணவனின் முதல் மனைவியின் குழந்தையைத் தான் எடுத்துக் கொள்வதால் அக்குழந்தையின் சாப்பாட்டிறகானவற்றை

192 வராஹப்பையா ராமசாமி அய்யா (பக். 82)

193 பந்தநெல்லூர் - பந்தணைநல்லூர்; இது திருப்பனந்தாளுக்கு அண்மையில் உள்ளது.கில்லேதார்-கோட்டைக் காவலன்

194 கொட்டகை - கொட்டாய் - ஓலைவேய்ந்த சிறுவீடு

195 சம்பிரதி - கணக்கு எழுதுபவன்

196 பட்சவாயு - கல்லீரல் நோய்

197 சம்பந்தத்தின் - மனைவியின்

*1. சம்ப்ரஹார தட்ச பிரதம பிரதிக - சைனிக் சுப்பாராவ் சவ்வான் இவரின் மாதோஸ்ரீ சோனாபாய் என்பவள்-தன்னுடைய மருமகள் ப்ரஷ்ட[198] ஆனதினால் தன்னுடைய மகனின் ஆசாமிக்கு பதில் வைத்து ஆசாமியின் ஐவேஜ் சேர்ந்து இருப்பதனால், மேற்சொன்ன என்னுடைய மருமகள் சில பெரிய மனிதர்களைச் சேர்த்துக் கொண்டு அவளுடைய மானோ வகையறாவுக்கு பதில் வைத்து ஆசாமியின் ஐவேஜ் ஆதாவுக்குச் சேராமல் செய்திருக்கிறாள். அதனால், அந்த ஆசாமியின் ஐவேஜ் தனக்குச் சேரும்படி செய்யவேண்டுமென்று = 12, 1-வாத்தியக்காரன் கிருஷ்ணனின் மனைவி கொண்டு வந்தது = 13*

## 2-21-34

*ராஜே ஸ்ரீ மஹாராஜ் சாகேப்பின் பாலநிதிபட்டு கதம்ப பால விசாரக பிரவர - பாலகிருஷ்ணஜெட்டி வஸ்தாது - சூஹுர்சன் வருஷம் 1234[199] சாலி வாகன சகே 1755[200] -விஜய சம்வத்ஸரம்-*

*சேனாமுகவர்ய ராஜே ஸ்ரீ வராஹப்பையா ராமசாமி இவர்கள் மேற்சொன்ன வருஷம், சாபான்[201] மாதம் 27ந் தேதி எழுதிய கடிதத்தின் பதில் - தன்னுடைய தான பிரமுக 25ந் தேதி இரவு கோட்டையில் ரோந்துக்காக நியமித்து இருந்த யோத்ய சுபட்டு மக்களில்[202] யூத பிரமுக சமுதவான்[203] ராமசாமி நாயக் விஸ்வரம்பி வகையறா சுற்றிவிட்டு அலிதர்வாஜின்[204] விஸ்வரம்பியிடம் வந்தபிறகு——— மேற்சொன்ன விஸ்ரம்பியின் ப்ரோல்[205] கொண்டு வருகிறான் - இதற்குள் மேற்சொன்ன அலிதர்வாஜில் காசுக்காரர்களின் கடையின் ஒரு அரிஜனப்பெண் படுத்துக்கொண்டிருந்தாள். அவள் தன்மீது சப்தமஸ்டப்யாதா சேவகன்[206] அரிஜன் கைப்போட்டான் என்று திட்டினாள் - மேற்சொன்ன அரிஜனனும் திட்டினான் - இதற்குள் ப்ராக்ருதஹேராவின் சமுதவான் - மேற்சொன்னவிஸ்வரம்பியில் ப்ரோல் கொண்டு வந்தான்-அவன் வந்து மேற்சொன்ன அரிஜன் அடித்திருக்கிறான் அதனால் அந்த சப்தமஸ்தாவின் அரிஜனை பிரதிஹாரில்[207] வைத்திருக்கிறது-அதற்கு விசாரணை செய்யவேண்டும் என்று தெரிந்து வைத்திருக்கிறது-அவனை அந்த காரியத்திற்கு சரி ஹகவலா வகையறாவை கூப்பிட்டு விசாரணை செய்யவேண்டும்.*

---

198 பிரஷ்டை - ஒழுக்கம் தவறியவள்

199 சுஹுர்சன் 1234 (+599) = கி.பி. 1833

200 சகம் 1755 (+78) = கி.பி.1833

201 சாபான் - ஷ:பான் - முகமதியர் மாதங்களில் எட்டாவது

202 யோத்ய சுபட்டு மக்கள் - படையைச் சார்ந்த சுத்தவீரர்கள்

203 யூத பிரமுக சமுத்வான் - படைஞரில் சிறந்த சமுத்வான், சமுத்வான் - 48 சிப்பாய்களுக்குத் தலைவன் (பக். 342)

204 அலிதர்வாஜா - வடக்குவாயில்

205 ப்ரோல் -Parole; காவல் அதிகாரிகள் பயன்படுத்தும் நடை முறை அடையாளச்சொல்

206 சப்தமஸ்டப்யாதா சேவகன் - ஏழாவது தொகுதியைச் சேர்ந்த படையிலுள்ளவன்

207 பிரதிஹாரில் - காவலில்

1. 25ந்தேதி தினம் யுத பிரமுக சமுதவான் ராமஸ்வாமி நாயக் என்பவன் சொன்னது ஒருவேளை அன்றையதினம் இரவு தன்னுடைய பிரதிகவான்[208] நாரணப்பநாயக் - விஸ்ரம்பி சம்மந்தமுள்ள ஆட்களுடன் ரோந்துக்குச் சென்று வடக்கேயுள்ள தர்வாஜின் அருகில் வந்தபொழுது ரோந்துக்கு கூடவந்த சிங்கவக அடைக்கல முத்துக்கருப்பன் என்பவன் லகுசேகேக்கு[209] போகவேண்டுமென்று உத்தரவு கேட்டான்-அதற்கு நான் உத்தரவு கொடுத்தேன். அவன்சென்ற பிறகு நானும் மேற்சொன்ன ஆட்களும் வடக்கே உள்ள தர்வாஜின் விஸ்வரம்பிக்கு ரோந்துக்குச் சென்று ப்ரோல் கொண்டு வருகையில் வடக்கேயுள்ள ராஜவீதியில் சாராயக்கடையில் கலபக்க[210] ஆனதால், அங்கு வந்து விசாரிக்கும்பொழுது - அந்தக் கடையில் படுத்திருந்த அரிஜனப்பெண் தன் உடம்பின் மீது மேற்சொன்ன சேவகன் கை வைத்தான் என்று கண்டபடி பேசினாள்-அவனும் அவளைப் பேசினான்-ராத்திரி வேளையில் ரோந்துக்கு வந்த மேற்சொன்னவர்கள் போனபிறகு இந்த காரியம் செய்த அவனை விஸ்ரம்பியில் வைத்து அந்த ஹரசியினுடைய பிரமுகர்[211] இவ்வாறு சேனாமுகவர்ய ராஜேஸ்ரீ வராஹப்பையா இவருக்கு உத்தரவு செய்தார் என்று எழுதிக் கொடுத்தான்.

1. மேற்சொன்ன சப்தமஸ்டஹாரயின் கேவலம் அரிஜன் அடைக்கல முத்து என்பவர் கேள்வி பதில் கேட்டவரிடத்தில் 25ந்தேதி இரவு என்னுடைய ரோந்துக்கு சமுதவான்[212] கூடச் சென்றிருந்தேன் - அப்பொழுது வடக்கேயுள்ள தர்வாஜிடம் போகும்பொழுது தனக்கு லகுசங்கேவுக்கு போகவேண்டும் என்று தன்னுடைய சமுதவான் ராமஸ்வாமி நாயக்கிடம் உத்தரவு கேட்டான் - இவர்கள் சென்றபிறகு வடக்குத் தெருவிலுள்ள சாராயக் கடையில் சாக்க சாகா வைத்து அவன் லகுசங்கேவுக்கு மஜவரதுர்பா எடுக்கும் பொழுது அந்தக் கடையில் படுத்திருந்த - அந்த 50-60வயதுடைய ஒரு அரிஜனப்பெண் படுத்திருந்தாள் - அவளுடைய காலில் பட்டது-அவள் தனக்குக் கண்டபடிப் பேசினாள் - தானும் அவளைத் திட்டி கையினால் முகத்தில் 2 அடிகள் அடித்தேன்-இதற்குள் கலப ஆகி கொத்தல்வாலாவின்[213] ஹானத்யாவின் மன்மதன் பிரமுக[214] சமுதவான் முடில ஐசாதா மேற்சொன்ன ராமசாமி நாயக் என்பவன் தாகமே செய்தார்- அவர்கள் எங்களை விஸ்ரம்பியில் வைத்தார்கள். ஆனாலும் அவன் என்னை எப்படி அடித்தான் - அது என்மேல் தப்பு என்று எழுதிக் கொடுத்தான்.

1. வ்யதிய பிரதம பிரதிக ஹர்சி ராமசாமி நாயக் அவர்கள் கேள்விபதில் கேட்டு 25ந்தேதி இரவு, தான் ரோந்து சுற்றி வடக்கேயுள்ள தர்வாஜிடம் வந்தபொழுது ராஜவீதியிலுள்ள சாராயக்கடையில் ஒரு அரிஜனப்பெண் படுத்திருந்தாள் - அவள் சிங்கவக அடைக்கல முத்து என்பவனிடம் கையைக் காண்பித்து அவள் மகடதருணஒலடுன கண்டபடிப்பேசி அடித்தான்.

208 பிரதிக்வான் - 12 சிப்பாய்களுக்குத் தலைவன் (பக். 342)

209 லகுசேகே - சிறுநீர் கழித்தல்

210 கலபக்க - கலகம்

211 ஹர்சி - தர்சியாகலாம்; தர்சி - ஆறு சிப்பாய்களுக்குத் தலைவன் (பக்.342); பிரமுகர் - சிறந்தவர்

212 சமுத்வான் - 48 சிப்பாய்களுக்குத் தலைவன் (பக். 342)

213 கொத்தல்வாலா - கொத்தவால் - காவல் அதிகாரி

214 பிரமுக - சிறந்த

சொல்கிறாள்,மேலும் அவள் இந்த விவரம் பாப பிரதம பிரமுக சமுதவானிடம் சொல்லி அந்த சிங்கவாலாவுக்கு அவனிடம் பிடித்து விடவேண்டுமென்று எழுதிக் கொடுத்தான்.

## 2-21-35

ராஜெஸ்ரீ மகாராஜ் சாகேப் இவர்களுடைய சர்க்காருக்கு கோட்டையில் செட்டித்தெருவில் வசிக்கும் காசு வியாபாரம் செய்யும் வெங்கடபதி இவருடைய விசாரணை.

கேள்வி:- இருபது, இருபத்தைந்து நாட்களுக்கு முன்னால் வராகோ ஹனுமந்தராவ், ஸரைஜி ஸர்ஜேராவ் காட்கே இவர்களுடைய பங்களாவில் ஜரிகை வேலை செய்யும் சேக் இமாம் என்பவரிடம் மேற்சொன்ன வேலை கற்றுக்கொண்டிருக்கும் லட்ச ஆன பிரதம பிரதிகையின் ஹர்சி குப்பு என்பவன் வெள்ளிக் கம்பி ஹோன்ன ஜோக் 3 3/4, 2வீசம் கொண்டு வந்து விற்று ஐவேஜ் பெற்றுக் கொண்டானா என்ன?

பதில்:- இருபது, இருபத்தைந்து தினங்களுக்கு முன்னால் வராகோ ஹனுமந்தராவ் ஸரைஜி ஸர்ஜேராவ் காட்கே இவர்களுடைய பங்களாவில் ஜரிகை வேலை செய்யும் சேக் இமாம் இவனிடத்தில் மேற்சொன்ன வேலை கற்றுக்கொண்டிருப்பவரில் லட்ச ஆன பிரதம பிரதிகையின் ஹர்சி குப்பு என்பவன் வெள்ளிக்கம்பி 3 3/4, 1வீசம் ஹோன்ன ஜோக் கொண்டு வந்து கொடுத்தான் - அதற்கு மேற்சொன்ன ஆசாமிக்கு மேற்சொன்ன கம்பி 2 1/2, 2வீசம், 1/2 என்று சொல்லி அதற்கு கிரயம் லட்ச 1/2, 1வீசம் - 5 பணம், ஒரு வீசம் கொடுத்தேன்.

கேள்வி:- உன்னுடைய கணக்குப் பார்க்கும் பொழுது வெள்ளி 4, 1 வீசம் ஹோன்ன ஜோக்குக்கு 1/2, 2, 2வீசம் என்று எழுதியிருக்கிறது-மேற்சொன்ன குப்புவிடம் 3 3/4, 1 வீசம் ஹொன்ன ஜோக்குக்கு 2 1/2, 2 வீசம், 1/2 இரண்டரை,இரண்டரை வீசம் ஹோன்ன ஜோக் என்று வாங்கியிருக்கிறாய் போக மீதி யாரிடம் வாங்கினாய்?

பதில் : .................... 4, 1வீசம் ஹோன்ன ஜோக் என்று இருக்கிறது, அதற்கு லட்ச 1/2, 2, 2வீசம் என்று இருக்கிறது - அதற்கு குப்புவிடம் வாங்கின அந்த 3 3/4, 1வீசம் ஹோன்ன ஜோக்கிற்கு 2 1/2, 2வீசம், 1/2 என்று அதற்கு ஐந்து பணம் 1 வீசம் கொடுத்தேன் - போக மீதி 1/4 வீசம் ஹோன்ன ஜோக் ராஜே ஸ்ரீ ஸ்வாமியின் வீட்டின் அருகில் இருக்கும் குப்புமுத்து என்பவனிடம் 2 வீசம் ஹோன்ன ஜோக்கிற்கு 3 3/4 காசு கொடுத்து வாங்கினேன் - அதற்கு ருஜுவாத்தி செய்தேன்,போக மீதி 3 வீசம் ஹொன்ன ஜோக் கோட்டையின் வெளியே இருக்கும் பத்தரிடம் வாங்கினேன் - அவனுடைய அடையாளம்மட்டும் தெரியும் - ஆனால் அவனுடைய இடம் வகையறா தெரியாது.

வெங்கடபுதி தளஞ்து-
சாட்சி -
1. ராமாஜி சிவாஜி ருஜு
1. சிவந்திலிங்கம் அரிவேன்.
இந்தப்படி கேள்வி பதிலுக்கும் ஹமாரகண்டோ பாபாஜி சாட்சி தன 1 அப்பு சங்கர் கங்காதர் சாட்சி 1
காசிகடை துகுலடய ஜ
அரிவேன்.

# Bundle No-3C

## (1)

லிஸ்ட் - விண்ணப்பம் தேவஸ்தானம் கோட்டை தஞ்சாவூர் திம்மதி சேனா துரந்தர் ராஜே ஸ்ரீ நீலகண்டராவ் அனந்தராவ் ஜாதவ்[215] சுஹர்சன் வருஷம் 1250[216] சாலிவாகன சகே 1771[217] சௌம்ய[218] நாம சம்வத்ஸரம் தேவஸ்தானம் மஜ்கூரில்[219] கச்சேரி நிஷ்பதி ஆலமாகாணம் - கோவில்வாரி ஆல மாகாணம் தேகில் ரிக்கார்டுக்கு தர வேண்டிய விவரம்-

1. கச்சேரி நிஷ்பதி ஆல மாகாணம்.
64. கோவில் நிஷ்பதி ஆல மாகாணம்
1. ஸ்ரீ பிரஹதீஸ்வரர்[220]
1. ஸ்ரீ அஷ்டோத்தர சிவாலயம்.[221]
1. ஸ்ரீ சங்கர நாராயண[222]
1. ஸ்ரீ காலிகாதேவி[223]
1. ஸ்ரீ விஜயமண்டப தியாகராஜர்[224]
1. ஸ்ரீ செட்டிவீதி ஹனுமார்,
1. ஸ்ரீ கர்ப்பக பிள்ளையார்,
1. ஸ்ரீ பீதாலிங்க ஸ்வாமி[225]
1. ஸ்ரீ நடுவநாத கணேசர்
1. ஸ்ரீ கொங்கணேஸ்வர ஸ்வாமி[226]

---

215 இவர் சர்க்கேல் வேலையிலிருந்தவர் (பக். 87)

216 சுஹர்சன் 1250 (+599) - கி.பி.1849

217 சகம் 1771 (+78) - கி.பி.1849

218 சௌம்ய - ஆண்டறுபதனுள் 43 ஆவது

219 தேவஸ்தானம் மஜ்கூரில் - முன் சொன்ன கோயிலில்

220 பிரஹதீஸ்வரர் - தஞ்சைப் பெரியகோயிலில் எழுந்தருளப் பெற்றுள்ள சிவலிங்கப் பெருமான்

221 அஷ்டோத்தர சிவாலயம் - தஞ்சைப் பெரிய கோயிலில் சரபோஜி II எழுந்தருளுவித்த 108 சிவலிங்கங்கள். அஷ்டோத்திரம் - 108. இந்நூற்றெட்டுச் சிவலிங்கங்கள் கி.பி.1801 இல் எழுந்தருள்விக்கப்பெற்றன. இவை பல்வேறிடங்களினின்று கொணரப்பட்டன (பக்.196)

222 இக்கோயில் சிவகங்கைக் கோட்டை வடக்குவாயிலுக்கு அணித்தாயுள்ளது (பக். 213இல் 2)

223 இது உக்கிர காளியம்மன் கோயில் ஆகலாம். இது தஞ்சைக் கீழ வாசலுக்குக் கீழ்ப்புறம் கருவக்காடு என்னும் குயத்தெருவில் அமைந்துள்ளது (பக்.213இல்29)

224 இக்கோயில் தஞ்சை மகர் நோம்புச் சாவடியிலுள்ளது (பக்.213இல் 28)

225 சிவகங்கைக் கோட்டை சிவகங்கைத்திருக்குளத்துள் தென்புறத்தில் ஒரு மேடை மீது ஒரு சிவலிங்கம் உள்ளது. பிடாலிங்க சுவாமி என்பது இதுவாகலாம்.

226 இவர் கோயில் மேலராஜ வீதியில் நடுவண் உள்ளது; கொங்கண சித்தர் என்பார் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்தது(பக்.213 இல் 3)

